பொருளடக்கம்

# வலிமார்கள் வரலாறு

(இரண்டாம் பாகம்)




## அப்துற் - றஹீம்

**யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்**

2, வடக்கு உஸ்மான் சாலை, முதல் மாடி,
(கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்),
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 2834 3385
E-mail : universal_pub2002@yahoo.co.in

# பதிப்புரை

வலிமார்கள் என்னும் இறைநேசர்கள் தம் வார்த்தையைக் கொண்டும், தம் வாழ்க்கையைக் கொண்டும் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தவர்கள். வார்த்தையைக் கொண்டு இஸ்லாமியப் பிரச்சாரம் செய்வதற்குக் கல்வி வேண்டும். வாழ்க்கையைக் கொண்டு இஸ்லாமியப் பிரச்சாரம் செய்வதற்குக் கற்றபடி நிற்க வேண்டும். ஆனால் அவர்கள் வார்த்தையை விட வாழ்க்கை யைத்தான் அதிகம் நம்பினார்கள். அதனால் அவர்கள் வாயால் கொஞ்சமாகப் பேசினார்கள். வாழ்க்கையால் அதிகமாகப் பேசினார்கள்.

இத்தகைய இறை நேசர்கள் இருபது பேர்களின் வரலாற்றை 'வலிமார்கள் வரலாறு' நூலின் முதல் தொகுதியில் கொடுத்தோம். மேலும் முப்பத்திரெண்டு பேர்களின் வரலாற்றை இந்த இரண்டாம் தொகுதியில் கொடுத்திருக்கிறோம். இன்னும் ஐம்பது பேர்களின் வரலாற்றை இனி வெளிவரும் இரு தொகுதிகளில் கொடுக்கவிருக்கிறோம்.

இவர்கள் அளவு கற்கவோ, கற்றபடி நிற்கவோ, வணங்கவோ, வாழவோ எல்லோராலும் இயலாதென்றாலும், இவர்கள் தம் வாழ்வில் பின்பற்றிய ஒழுக்கங்களையும், உயர் பண்புகளையும் எல்லோரும் பின்பற்றலாம், பின்பற்றவும் வேண்டும். இதனை வலியுறுத்துவதே நாங்கள் இந்நூல்களை வெளியிடுவதன் நோக்கமாகும்.

– யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்

# பொருளடக்கம்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# வலிமார்கள் வரலாறு

## (இரண்டாம் பாகம்)

## 1. அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்)

நள்ளிரவு. ககன வெளியில் விண்மீன்கள் கண்களைச் சிமிட்டிச் சிமிட்டி உலகைக் கேலி செய்து கொண்டிருந்தன. அப்பொழுது பல்க் நாட்டிலுள்ள ஓர் இல்லத்தில் ஒரு பெரியவர் அமைதியாக வீற்றிருந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது வீட்டின் ஒரு பகுதியில் ஏதோ கடகடவென்று சப்தம் கேட்டது. எலிதான் புகுந்து எதையும் உருட்டுகின்றதோ என்று எண்ணினார் அவர். ஆனால் சற்று நேரத்திற்குப் பின் கரிய உரு ஒன்று ஆங்கு ஒன்றும் கிடைக்காத ஏமாற்றத்தில், மெதுமெதுவாகத் திரும்பிச் செல்வதை அவரின் கண்கள் கண்டன. அவருக்கு அவன்மீது இரக்கம் சுரந்தது.

''இளைஞனே! இங்கே வா. வந்து இந்த வாளியை எடுத்துச் சென்று கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு 'உளூச்' செய்து தொழு. எனக்கு ஏதேனும் அன்பளிப்பு வரின் நான் உனக்கு அதனைத் தருகிறேன். நீ என்னுடைய இல்லத்திலிருந்து வெறுங்கையுடனும், ஏமாற்றத்துடனும் திரும்பிச் செல்ல வேண்டியதில்லை'' என்று கூறினார்.

அவரின் இந்தக் கனிவான மொழிகள் அந்த இளைஞனின் உள்ளத்தைக் கவர்ந்தன. அவரின் முன் பெட்டிப் பாம்பென அடங்கி, அவர் கூறியவண்ணமே செய்தான் அவன்.

பொழுது புலர்ந்தது. ஒருவர் அப்பெரியவரை அணுகி, அவரின் முன் தம் அன்புக் காணிக்கையான நூறு பொற்காசுகளை வைத்தார். அப்பெரியவர் அவற்றைக் கையாலும் தீண்டவில்லை. அருகில் வணக்கத்தில் ஈடுபட்டிருந்த அந்த இளைஞனை நோக்கி, ''இளைஞனே! இவற்றை எடுத்துக் கொள். நீ இன்றிரவு இறைவனை வழுத்தியதற்காக உனக்கு வழங்கப்படும் அன்பளிப்பாகும் இவை'' என்று கூறினார்.

அது கேட்டு அந்த இளைஞன் மகிழ்ச்சியுறவில்லை. அதற்கு மாறாக அவனுடைய உடலெல்லாம் அதிர்ந்தது. கண்களிலிருந்தும் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

"நான் வழி தவறிச் சென்று விட்டேன். ஓரிரவு இறைவனை வழுத்தியதற்காக எனக்கு இத்தகைய அன்பளிப்பை வழங்கினான் இறைவன். நான் எப்பொழுதுமே அவனை வழுத்தி வந்தால், அவன் எத்தகைய அன்பளிப்பை வழங்குவான்" என்று கூறிக் கதறினான். அவனுடைய வாழ்விலே ஒருவிதப் புதுத் திருப்பம் ஏற்பட்டது. அப்பொற்காசுகளை அவன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. அப்பெரியவரின் கால் மலர்களிலே தன் கண்களை ஒற்றித் தன்னை மன்னித்து ஆட்கொள்ளுமாறு வேண்டினான். அவ்விதமே அவரும் செய்தார். பலன், கொள்ளை அடிக்க வந்த அவர் விரைவில் இறைவனின் பேரருளைக் கொள்ளை கொண்ட மாபெரும் மகானாக விளங்கினார்.

இத்தகைய மாற்றத்தைத் திருட வந்த ஒருவரின் வாழ்விலே ஏற்படுத்திய அப்பெரியவர் - அஹ்மத் இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், பல்க் நாடு ஈன்றெடுத்த மாபெரும் இறைநேசச் செல்வராகத் திகழ்ந்தார்கள். ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்களின் மாணவராகவும், அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் உற்ற நண்பராகவும் விளங்கிய அவர்களுக்கு, ஆயிரம் மாணவர்கள் இருந்தார்கள் என்றும், அவர்கள் அனைவரும் நீரின் மீது நடக்கவும், விண்மீது பறக்கவும் செய்தார்கள் என்றும் கூறுவர்.

இவர்கள் ஓர் 'அவ்த்தாத்' ஆவர் என்று இறைநேசச் செல்வர் அனைவரும் ஒருமித்துக் கூறுகின்றனர். அகிலத்தின் ஆணிமுளையாக விளங்கும் குத்பென்றும் இவர்களைக் கூறப்படுகிறது. எனினும் ஒரு தடவை இவர்களிடம், 'இப்பொழுது உயிர்வாழ்ந்து கொண்டிருக்கும் 'குத்பு யார்?' என்று வினவப்பட்ட பொழுது இவர்கள் தம்மைக் கூறாது ஜுனைத் (ரஹ்) அவர்களைச் சாடையாகக் குறிப்பிட்டார்கள். இவர்கள் நாற்பது இறைநேசச் செல்வர்களுக்குப் பணிபுரிந்து அவர்களிடமிருந்து ஆன்மீகக் கல்வியைப் பயின்று 'சாஹிப் தம்கீன்' என்ற உயரிய பதவியை எய்தப் பெற்றனர்.

இவர்கள், ஆன்மீக வழியில் நடந்து செல்பவர்களுக்கு வழி காட்டியாக 'அல் ரியாயத் பி ஹுகூலல்லாஹ்' (அல்லாஹ்வுக்கு உரியவற்றைக் கடைப்பிடித்தொழுகும் முறைகள்) என்ற பெயருடன் ஒரு நூல் எழுதியுள்ளனர்.

"வழியும் தெளிவாக உள்ளது. உண்மையும் தெளிவாக உள்ளது. ஆடுமேய்ப்பவனும் கூவி அழைத்துவிட்டான். இதற்கு மேலும் ஒருவன் வழிதவறி விட்டானென்றால், அது குருட்டுத் தன்மையேயன்றி வேறில்லை" என்றும் அவர்கள் கூறினார்கள்.

''இறைவனைத் தேடுபவன் அவனை எய்தப் பெறுவான். இறைகாதலானது உலகையும், உலக ஆசாபாசங்களையும் துறப்பதோடு, இறைநினைவிலே இதயத்தையும் ஆன்மாவையும் இலயித்திருக்கச் செய்வதாகும்'' என்று அவர்கள் கூறினார்கள்.

ஒருவன் இறைவனைத் தவிர உள்ள வேறொன்றில் இன்பம் காண்பானாயின், அந்த இன்பம் அவனுக்கு இன்பத்தையல்ல, துன்பத்தையே பயக்கும். ஒருவன் இறைவனளவில் தன்னை நெருக்கமாக ஆக்கிக் கொள்ளாது வேறொன்றில் தன்னை நெருக்கமாக ஆக்கிக் கொள்வானாயின், அந்த நெருக்கம் அவனைத் தனிமையிலாக்கிவிடும். காரணம், இறைவனைத் தவிர உள்ள அனைத்தும் அழியக் கூடியவையே ஆகும்'' என்று அவர்கள் கூறினர்.

போர் வீரர்கள் அணியும் ஆடைகளை அணிந்து மாபெரும் மகானாக விளங்கிய அவர்கள்மீது, அந்நாட்டு ஆளுநரின் திருமகள் பாத்திமா காதலுற்று அவரை மண முடிக்க விரும்பி ஆள் அனுப்பினார். ஆனால், அவர்களோ அதற்கு யாதொன்றும் மறுமொழி கூறாததைக் கண்ட அவர் மீண்டும் ஒரு தூதுவரை அவர்களிடம் அனுப்பி, ''அஹ்மத்! தாங்கள் இதைவிட மனிதத்தன்மை வாய்ந்தவர் என்று நான் எண்ணினேன். தாங்கள் எனக்கு ஒரு வழி காட்டியாக ('ராஹ்பர் 'ஆக) இருங்கள். கொள்ளைக்காரராக (ராஹ்புர் ஆக,) இருக்க வேண்டாம்'' என்று சொல்லி அனுப்பினார்.

அதுகேட்ட அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், பாத்திமாவைத் தமக்கு மணமுடித்து வைக்குமாறு அவரின் தந்தைக்குச் சொல்லி அனுப்பினார்கள். அவரும் மகிழ்ச்சியுடன் அவ்விதமே செய்து வைத்தார். திருமணத்தின் மூலம் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யாவின் கரம்பிடித்த பாத்திமா, தம் தந்தையின் பெருமாளிகையை விட்டொழித்துத் தம் கணவரின் சிறு குடிலில் குடியேறி ஆங்கு இறைத் தியானத்தில் மூழ்கித் திளைத்தனர்.

ஒருநாள் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களைக் காணச் சென்ற பொழுது, அவர்களுடன் சென்ற அவர்களின் அருமை மனைவி பாத்திமா, அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களைக் கண்டதும், தங்களுடைய முகத்திரையை நீக்கி அவர்களுடன் உரையாடினார். அது கண்டு அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா(ரஹ்) அவர்களுக்கு ஆத்திரம், ஆத்திரமாக வந்தது. ''பாத்திமா! உன்னுடைய முகத்திரையை நீக்கி அவர்களுடன் உரையாடுவதற்கு உனக்கு, என்ன அத்துணை உத்தண்டம்?'' என்று அலறினார்கள் அவர்கள்.

அதற்கு பாத்திமா, ''தாங்களோ என்னுடன் தாம்பத்ய வழியில் நெருக்கமாக உள்ளீர்கள். அபூ யஸீதோ ஆன்மீக வழியில் என்னுடன் நெருக்கமாக உள்ளார்கள். தாங்களோ என்னுடைய உணர்வைக் கிளறி விடுகின்றீர்கள். ஆனால் அவர்களோ, என்னை இறைவனளவில் அழைத்துச் செல்கின்றார்கள். தங்களுக்கு என் தொடர்பு தேவையாக உள்ளது. ஆனால் அவர்களுக்கு அது தேவையில்லை'' என்று அமைதி யாக்ப் பதிலிறுத்தனர்.

ஒரு நாள் அபூ யஸீத் (ரஹ்) அவர்கள் பாத்திமாவை நோக்கி, ''பாத்திமா! என்ன உன் கையில் மருதாணி இட்டுள்ளாய் போன்று தோன்றுகின்றதே'' என்று கூறினர்.

அதற்கு பாத்திமா, ''அபூ யஸீதே! இதுவரை தாங்கள் என்னுடைய கைகளைக் கவனிக்கவும் இல்லை. அவற்றில் நான் மருதாணி இட்டி ருப்பதை நோட்டமிடவும் இல்லை. எனவே நான் தங்களுடன் எத்தகைய ஒளிவு மறைவுமின்றி உறவாடினேன். ஆனால் இப்பொழுதோ, தாங்கள் என்னுடைய கையை நோட்டமிட்டு விட்டீர்கள். எனவே தங்களுடன் நான் உறவாடுவது எனக்கு விலக்கப்பட்டதாக ஆகி விட்டது'' என்று கூறினர்.

அதுகேட்ட அபூ யஸீத் (ரஹ்) அவர்கள், ''பெண்களை எனக்குச் சுவர் போன்று காட்சியளிக்கச் செய்யுமாறு நான் இறைவனிடம் வேண்டினேன். அவனும் அவ்வாறே என் கண்களுக்குத் தென்படச் செய்துள்ளான்'' என்று பதிலிறுத்தனர்.

இதன்பின் அஹ்மத் இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களும், அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் பாத்திமா அவர்களும் நீஷாப்பூர் சென்று அங்கே குடியேறினர். அந்நகர மக்கள் அவர்களை அன்போடு வரவேற்று அரவணைத்து நின்றார்கள்.

ஒரு தடவை யஹ்யா இப்னு மஆத் (ரஹ்)அவர்கள் பல்குக்குச் செல்லும் வழியில் நீஷாப்பூர் வந்து சேர்ந்தனர். அவர்களைத் தம் இல்லம் அழைத்து வந்து உபசரிக்க விரும்பிய அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், இது பற்றித் தங்களின் மனைவியுடன் ஆலோசனை கலந்தனர். ''நல்லது; அவர்களுக்கு நல் வரவேற்பு வழங்கி, உபசரித்து விருந்து செய்வோம். இத்தனை மாடுகளும், இத்தனை ஆடுகளும், இன்ன கறிப் பொருள்களும், இத்தனை மெழுகுவர்த்திகளும், இத்தனை புட்டி அத்தர்களும் வாங்கி வாருங்கள். இவை தவிர இத்தனை கழுதைகளும் வாங்கி வாருங்கள்'' என்று அவர்கள் கூறினர்.

''அவையெல்லாம் சரி : கழுதைகள் ஏன்?'' என்று வினவினர் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள்.

''பெரியார் ஒருவரை நாம் விருந்துண்ண அழைப்பின் அவ்விருந்தில் இங்குள்ள நாய்களும் பங்கு பெற வேண்டுமல்லவா?'' என்று பதில் கூறினர் பாத்திமா.

பாத்திமா அவர்களின் விருந்தோம்பும் பண்பு இத்தகையதாக இருந்தது. இவர்களைப் பற்றி அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் கூறும்பொழுது, ''பெண்களின் உடையில் ஓர் உண்மையான மனிதன் ஒளித்திருப்பதைக் காண விரும்பின் பாத்திமாவைப் பாருங்கள்'' என்று கூறினார்கள்.

பாத்திமாவின் அருமைக் கணவர் அஹ்மத் இப்னு கஸ்ரவிய்யாவும் பண்பாட்டின் திருவுருவமாக விளங்கினர். ஒரு தடவை அவர்கள் நல்ல உடை அணிந்து ஒரு வண்டியில் ஏறிச் சென்ற பொழுது, வழியில் ஒருவர் அவர்களைச் சந்தித்து ''தாங்கள் எங்குச் செல்கின்றீர்கள்?'' என்று வினவினார். அதற்கு அவர்கள், '' நான் போகாவிடில் அவர் வந்து விடுவார்.அவர் என்னைக் காணவரின், என்னைக் காண வந்த பலன் அவருக்குக் கிடைத்து விடும். எனவே அப்பலனைப் பெறுவதற்காக நானே முந்திக் கொண்டு செல்கின்றேன்'' என்று அவர்கள் விடையிறுத்தினர்.

மற்றொரு நாள் அவர்கள் அழுக்கடைந்த கிழிந்த உடையணிந்து, சூஃபிகள் வாழ்ந்து வந்த தவச்சாலை ஒன்றிற்குச் சென்று வணக்கத்தில் ஈடுபட்டனர். இது கண்டு ஆங்கிருந்த சூஃபிகளுக்கு ஐயம் ஏற்பட்டது. ''யாரோ ஒருவர் இங்கு வந்து வணக்கத்தில் ஈடுபட்டது போன்று நடித்துக் கொண்டுள்ளார்'' என்று அவர்கள் தங்களின் ஆசிரியரிடம் போய்க் கூறினர். அவர்களின் ஆசிரியரோ அதனைக் கேட்டும் கேளாதவர் போன்று இருந்து விட்டார்.

இக்காலை அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் தண்ணீர் எடுத்து 'உளூச்' செய்வதற்காக வாளியைக் கிணற்றில் இறக்கியபொழுது, கயிறு அறுந்து வாளி கீழே வீழ்ந்து விட்டது. அதுகண்டு ஆங்கிருந்த சூஃபிகள் அவர்கள் மீது சீறிச் சினந்தனர். ஆனால் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களோ அமைதி குலையாது, அவர்களின் ஆசிரியரிடம் வந்து நடந்ததை எடுத்துரைத்து, ''பாத்திஹா சூராவை ஓதுங்கள். கிணற்றினுள்ளே விழுந்த வாளி தானாகவே மேலே வரும்'' என்று கூறினர்.

''அது எப்படித் தானாகவே மேலே வரும்?'' என்று இடக்காக வினவினார் ஆசிரியர்.

''அவ்விதமாயின் என்னையாவது அதனை ஓத அனுமதியுங்கள்'' என்றனர் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள்.

''நல்லது ; ஓதும்'' என்று கூறி அனுமதி வழங்கினார் ஆசிரியர்.

அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களும் அவ்விதமே செய்ய வாளி தானாகவே மேலே வந்தது. அதுகண்டு அவ்வாசிரியருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ''ஐய ! தாங்கள் யார்? தங்களோடு ஒப்பிட்டுப் பார்ப்பின், நாங்களெல்லாம் பதர்கள் போன்றல்லவோ உள்ளோம்'' என்று கூறினார் அவர்.

அதுகேட்ட அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், தங்களை எவரெனக் காட்டிக் கொள்ளாது, ''அங்கு வந்து தங்கும் வழிப்போக்கர்களை இழிவுக் கண்களுடன் நோக்க வேண்டாமென்று தங்களின் மாணவர்களுக்கு அறிவுரை வழங்கி வையுங்கள்'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டும் அகன்றனர்.

மாபெரும் மகானாக விளங்கிய அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், தங்களின் நஃப்ஸோடு (உணர்ச்சிகளோடு) பெரும் போராட்டம் தான் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். ஒரு தடவை மார்க்கப் போர் புரிவதற்காகச் சிலர் புறப்பட்ட பொழுது, அவர்களையும் அக் குழுவுடன் சேர்ந்து புறப்படுமாறு அவர்களின் 'நஃப்ஸ்' அவர்களுக்கு எடுத்துரைத்து, அதற்கு ஆதரவான பல நபி மொழிகளையும் கூறியது.

அதுகேட்டு அவர்கள் திடுக்குற்றார்கள். ''என் நஃப்ஸ்' எனக்கு எப்பொழுதுமே இணங்கி வராதே. பிணங்கிக் கொண்டல்லவோ இருக்கும். இப்பொழுதென்ன இஃது என்னோடு இணங்கிப் போகின்றது. ஒரு வேளை நான் இப்பொழுது நோன்பு நோற்பதைப் பிரயாணத்தில் நிறுத்தி விடுவேன் என்று எண்ணிக் கொண்டதோ, என்னவோ? அதன் காரணமாகவே தான் அது என்னை மார்க்கப் போரில் கலந்து கொள்ளு மாறு ஊக்குவிக்கின்றதோ, என்னவோ, சரி, எப்படி இருந்த போதினும் நான் பிரயாணத்தில் நோன்பு நோர்க்கவே போகின்றேன்'' என்று தமக்குள்ளே கூறிக் கொண்டனர்.

அப்பொழுது அவர்களின், 'நஃப்ஸ்' 'மிகவும் நல்லது. அவ் விதமே, செய்யுங்கள்' என்று கூறியது.

தம் நஃப்ஸின் இந்த மறுமொழி, அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களைத் தூக்கி வாரிப்போட்டது. ''நான் என்னுடைய நஃப்ஸை இரவில் நெடுநேரம் நின்று தொழுது வருத்துவதனால் தான் அதிலிருந்து தப்ப இவ்வாறு சொல்கின்றதோ, என்னவோ? பகலெல் லாம் பயணம் செய்து, இரவில் அலுத்துப் படுத்துறங்குவேன் என்று அது எண்ணிக் கொண்டது போலும். சரி; பகலெல்லாம் நான் பயணம் செய்த போதினும், இரவில் வழக்கம் போல் தொழுது வருவேன்'' என்று அவர்கள் சூளுரை பகர்ந்தார்கள்.

அதற்கும் அவர்களின் நஃப்ஸ், ''நல்லது; அவ்விதமே செய்யுங்கள்'' என்று அமைதியாகப் பதில் கூறியது.

தம் நஃப்ஸின் இப்பதில், மீண்டும் அவர்களுக்கு அளவற்ற வியப்பை வழங்கியது. ''நான் மக்களுடன் சேர்ந்து போவதால், அவர்களின் சகவாசத்தில் இன்பம் துய்க்கலாம் என்று அது எண்ணிக் கொண்டதோ, என்னவோ? சரி; எப்படி இருந்த போதினும் நான் அக்குழுவுடன் சேர்ந்து சென்ற போதினும், அவர்களுடன் யாதும் உரையாடாது ஒதுங்கியே சென்று கொண்டிருப்பேன்'' என்று அவர்கள் ஆணையிட்டுக் கூறினர்.

''மிகவும் நல்லது. அவ்விதமே செய்யுங்கள்'' என்று கூறி 'களு'க் கென்று சிரித்தது அவர்களின் நஃப்ஸ்.

அது கண்டு அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களுக்கு என் செய்வதென்றே விளங்கவில்லை. ''இறைவ எம்பெரும! எக்காலும் என்னோடு பிணங்கிக் கொண்டிருக்கும் என் நஃப்ஸானது, இன்று வழக் கத்திற்கு மாறாக என்னுடன் எல்லாவற்றிலும் இணங்கிச் செல்கின்றதே. இதிலுள்ள சூது தான் யாது? இதனை நீ எனக்கு அறிவித்தருள்வாய். அல்லது என் நப்ஸை எனக்கு இதிலுள்ள சூதை வெளிப்படுத்துமாறு செய்வாய்'' என்று கூறினர்.

அப்பொழுது அவர்களின் நஃப்ஸ் பேசியது:

''தாங்களோ என்னுடைய வேணவா எதுவாக இருந்த போதினும், அதனைச் சிறிதேனும் சிந்தித்துப் பார்க்காது, அதனை நான் கூறிவிட்டேன் என்ற ஒரே காரணத்திற்காக, அதனை எதிர்த்து என்னை நாளொன்றுக்கு நூறு தடவை கொல்லாது கொல்கின்றீர்கள். எனவே இந்த மார்க்கப் போரில் ஈடுபட்டு ஒரேயடியாகக் கொல்லப்பட்டுத் தொலைந்து போகலா மென்று எண்ணியே அவ்வாறு கூறினேன். அதில் தாங்கள் இறந்துவிடின், தங்களுக்கு நற்புகழும் சுவனப் பெருவாழ்வும் கிடைக்கும்'' என்று அது கூறியது.

அது கேட்டு அவர்கள், '' என்ன நயவஞ்சகத்தனம், என்ன நயவஞ் சகத்தனம்'' என்று அலறினார்கள். ''இறப்பை விரைவில் ஏற்றுத் தப்பித்துக் கொள்ளலாம் என்று நீ எண்ணிக் கொண்டாயோ? இனிமேல் தான் நான் உனக்குக் கடும் சோதனை வழங்கப் போகின்றேன்'' என்று கூறி, அதனை முன்னைவிட அதிகமாக வருத்தத் துவங்கினார்கள்.

ஒருநாள் அவர்கள் இறைவனளவில் 'தவக்குல்' வைத்துக் கானகம் சென்றனர். அப்பொழுது அவர்களின் காலில் முட்கள் பாய்ந்து கடும் வேதனையை வழங்கின. அவர்கள் கீழே அமர்ந்து காலில் பாய்ந்த

முட்களின் ஒன்றைப் பிடுங்கி வெளியே வீசி எறிந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு இறைவன் மீது தவக்குல் வைத்துக் கானகம் புறப்பட்டது நினைவுக்கு வந்தது. காலில் தைத்த முட்களை வெளியே எடுப்பதனால் தம்முடைய தவக்குலுக்கு மாசு ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சிய அவர்கள், மற்ற முட்களை எடுக்காது நொண்டி, நொண்டி நடந்து மக்கா சென்று, பின்னர் தாயகம் திரும்பினர். இப்பயணத்தில் அவர்கள் தம் கால் களில் தைத்த முட்களினால் பட்ட துயரம் சொல்லுந் தரத்ததாயில்லை. பின்னர் அவர்கள் அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களைச் சந்திப்பதற் காக பிஸ்தாம் சென்ற பொழுது, அவர்கள் இவர்களைப் புன்முறுவலுடன் வரவேற்று, ''தங்களின் கால்களில் முட்கள் தைத்தனவே. தாங்கள் என்ன செய்தீர்கள்?'' என்று வினவினர். ''நான் அவற்றை எடுக்காது விட்டு விட்டேன்'' என்று விடை பகர்ந்தார்கள் அவர்கள். ''தாங்கள் அவ்விதம் செய்தது தவறு. ஒருவர் தம் கால்களில் தைத்த முட்களை வெளியே எடுத்து வீசி எறிவதனால், அவர் இறைவன் மீது கொண்ட ''தவக்குல் ஒரு போதும் கெட்டு விடாது'' என்று அவர்கள் கூறினார்கள். அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா ( ரஹ்) அவர்கள் மறுவார்த்தை பேசவில்லை.

அவர்கள் எப்பொழுதும் அழுது, அழுது இறைவனைத் தியானித்து வந்தார்கள். மற்றவர்களெல்லாம் சிரித்துக் கொண்டும், விளையாடிக் கொண்டும் இருப்பதைக் கண்டு அவர்களுக்கு எரிச்சல், எரிச்சலாக வந்தது. ஒரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''நான் மனிதர்களைக் கண்டேன். அவர்கள் மாடுகளையும், கழுதைகளையும் போன்று தின்று கொண்டிருந்தார்கள்'' என்று கூறினர். ''அவ்விதமாயின் தாங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று மாணவர்கள் வினவினர். ''அவர்கள் தின்று கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தார்கள். நான் நின்று கொண்டும் அழுது கொண்டும் இறைவனைத் தியானித்துக் கொண்டும் இருந்தேன்'' என்று கூறினர்.

ஒரு நாள் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் தம் தவ மடத்தில் வீற்றிருக்குங்கால், ஒருவர் அவர்களை அணுகி, ''நானோ நோயாளனாகவும், ஏழையாகவும் உள்ளேன். துன்பத் தீயில் கிடந்து புழுவெனத் துடித்துக் கொண்டுள்ளேன். அன்பு கூர்ந்து என்மீது இரங்கி நிவாரணம் வழங்குங்கள்'' என்று கூறினார்.

''நல்லது; பல்வேறு தொழில்களின் பெயரையும் தனித் தனிச் சீட்டுகளில் எழுதி, ஒரு பெட்டியிலிட்டு என்னிடம் கொண்டு வாரும்'' என்று அவரை நோக்கிக் கூறினார்கள் அவர்கள். அவரும் அவ்வாறே செய்தார். உடனே அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா ( ரஹ்) அவர்கள் தம் கண்களை இறுக மூடிக்கொண்டு, அதிலிருந்து ஒரு சீட்டை எடுத்தனர்.

அதில் ''திருட்டுத் தொழில்'' என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவர்கள் அவரை நோக்கி, ''நீர் திருட்டுத் தொழிலில் ஈடுபடுவீர்'' என்று கூறினார்கள்.

அதுகேட்டு அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. எனினும் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் கூறிவிட்டார்கள் என்பதற்காக, அவர் திருடர் குழு ஒன்றை அணுகி, அதில் சேர்ந்து கொள்வதற்கான தம் விருப்பத்தைத் தெரிவித்தார். ''நல்லது; நாங்கள் எது கூறினும் அதனை நீர் செய்ய வேண்டும். அதற்கு இணங்கின் நாங்கள் உம்மை எங்களின் குழுவில் சேர்த்துக் கொள்கிறோம்'' என்றான் திருடர் தலைவன். ''அவ்விதமே செய்கிறேன்'' என்றார் அவர். ''அவ்விதமானால் சேர்ந்து கொள்ளும்'' என்றான் திருடர் தலைவன்.

இது நிகழ்ந்து சில நாட்களே ஆயின. பாலை நடுவே வணிகக் கூட்டம் ஒன்று சென்று கொண்டிருந்தது. அதன் மீது மறைந்திருந்து பாய்ந்து தாக்கினர் திருடர்கள். வணிகக் குழுவின் தலைவனைப் பிடித்து வந்து தம் தலைவனின் முன் நிறுத்தினார்கள் அவர்கள். அப்பொழுது திருடர் தலைவன் புதிதாகத் தம் குழுவில் சேர்ந்த இவரைச் சோதிப் பதற்காக வேண்டி, தம்முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட வணிகக் குழுத் தலைவனை ஒரே வாள் வீச்சில் வெட்டிச் சாய்க்குமாறு கூறினான். இவர் சற்றுத் தயங்கவே, ''என்ன தயங்குகின்றீர்? இங்கிருந்தால் நாங்கள் கூறும் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். இல்லையெனில் தொலைந்து போம்'' என்று அதட்டினான் அவன்.

இப்பொழுது அவரின் மூளை சக்கரவாகமாக சுழன்றது. ''நான் இக்கொள்ளைக் கூட்டத் தலைவனின் ஆணைக்குக் கீழ்ப்படிவதற்கு மாறாக இறைவனின் ஆணைக்குக் கீழ்படிந்தால் என்ன? எனவே வாளுக் கிரையாக வேண்டியவன் இவனே அன்றி இவ்வணிகக் குழுத் தலை வனல்ல'' என்று எண்ணினார். அடுத்த கணம் அவருடைய வாள் கொள்ளைக் கூட்டத் தலைவனின் உயிரைக் குடித்தது. அது கண்டு மற்றத் திருடர்களெல்லாம் வெருண்டோடினார்கள். அப்பொழுது அவரும் அந்த வணிகக் குழுவின் தலைவரும், எதிரும் புதிருமாக நின்று கொண்டிருந் தார்கள். 'ஐயா! வணிகரே! அஞ்சாதீர். நலமே உம் பொருள்களுடன் செல்லும்'' என்று கூறினார் அவர். அது கேட்டு அவ்வணிகருக்குச் சென்ற உயிர் மீண்டும் திரும்பி வந்தது போல் இருந்தது. அவரின் காலடியில் வீழ்ந்து தம்மை வாழ்வித்த அவருக்குப் பொன்னையும் மணியையும், காணிக்கையாக வழங்கினார். அதன் காரணமாக இருவர் வாழ்வும் பொலிவுற்றுத் திகழ்ந்தன.

ரமலான் மாதத்தில் ஒரு நாள் அவர்கள், ஒரு செல்வரை நோன்பு திறக்கத் தம் இல்லம் வருமாறு அழைத்தனர். அவ்வாறே அவர் வந்ததும், அவர் நோன்பு திறந்துவிட்டு உண்ண, உமி நீக்கப்படாத கோதுமை ரொட்டியைக் கொண்டு வந்து வைத்தார்கள் அவர்கள். அது அவரின் தொண்டைக்குள் செல்லவே மறுத்தது. எனினும் அவர் அதனை உண்டார். தாம், தம் இல்லத்தில் அருசுவை உண்டிகளை உண்டு கொண்டிருக்கும் பொழுது, அவர்கள் இத்துணைக் கடினமான எளிய உணவை உண்டு வருவது கண்டு அவரின் இதயம் நெக்குருகியது. இல்லம் சென்றதும், ஆயிரம் தீனார் (பொற்காசுகள்) நிரம்பிய பை ஒன்றை அவர் தம் ஊழியர் மூலமாக அவர்களுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைத்தார். ஆனால் அவர்களோ, அதனை ஏற்றுக் கொள்ளாது ''நான் என்னுடைய வறுமையை ஈருலகச் செல்வங்களுக்காகவும் பரிவர்த்தனை செய்து கொள்ள விரும்பவில்லை. என்னுடைய இரகசியத்தை உம்மைப் போன்ற ஒருவரிடம் நான் வெளிப்படுத்தியதற்காக எனக்களிக்கப்பட்ட சரியான பாடம் இது'' என்று அவர்கள் கூறி அனுப்பினார்கள்.

இதன்பின் அவர்கள் தம் மாணவர்களிடம் ''உங்களின் வறுமையின் மாண்பினைப் பிறரின் கண்களிடமிருந்து மறையுங்கள். உங்களை ஒரு தர்வேஷ் என்று பிறரிடம் எடுத்துரைக்காதீர்கள். ஏனெனில் 'தர்வேஷ் தன்மை, இறைவனால் உங்களுக்கு அளிக்கப்பெற்ற மகத்தான நற்பேறாகும்'' என்று கூறினார்.

மற்றொரு நாள் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் தம் தவச்சாலையில் வீற்றிருந்தார்கள். அப்பொழுது ஒரு பக்கீர் அவர்களைக் காண்பதற்காக வந்து சேர்ந்தார். அவருக்கு நல்விருந்து வழங்கி உபசரிப்பதற்காக அவர்கள் எழுபது மெழுகுவர்த்திகளை ஏற்றினார்கள். அதுகண்ட அவர், ''இந்த ஆடம்பரங்களெல்லாம் எனக்குப் பிடிக்காது. மேலும் இது சூஃபிகளுடைய வழக்கமல்ல'' என்று கூறினார். அதற்கு அவர்கள், ''நான் இவற்றை ஆடம்பரத்திற்காக ஏற்றவில்லை. அல்லாஹ்வுக்காக ஏற்றினேன். தாங்கள் விரும்பின் அவற்றை அணைத்து விடுங்கள்'' என்று பதிலிறுத்தனர். அவரும் அவற்றை அணைக்க முயன்றார். முடியவில்லை. மண்ணையும், தண்ணீரையும் அவற்றின்மீது கொண்டு வந்து கொட்டினார். எனினும் அவை அணையவில்லை. இது கண்டு அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

பொழுது புலர்ந்தது. அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், அவரை நோக்கி, ''தாங்கள் சென்ற இரவு கண்டதெல்லாம் வியப்பிற்குரியவையல்ல. என்னுடன் வாருங்கள். இனிமேல் தான் தாங்கள் வியத்தகு நிகழ்ச்சியைக் காணப் போகின்றீர்கள்?'' என்று கூறினர்.

இருவரும் தெருவழியே நடந்து கொண்டிருந்தார்கள். வழியில் ஒரு மாதா கோயில் தென்பட்டது. அதன் வாயிலிலே அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் போய் நின்றார்கள். அவர்களை ஆங்கு வீற்றிருந்த பாதிரியார் கண்டதும், 'வாருங்கள்! வாருங்கள்!!' என்று கூறி வரவேற்றார். அதன்பின் அவர்களுக்கு விருந்து வழங்கி உபசரிக்க முற்பட்டார்.

உணவுப் பொருள்கள் மேசை மீது பரத்தப்பட்டிருந்தன. அவற்றை, 'உண்ணீர், உண்ணீர்' என்று உபசரித்து, உண்ணுமாறு வேண்டினார் அவர். ஆனால் அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களோ, ''இறைவனின் நண்பர்கள், அவனின் விரோதிகளுடன் அமர்ந்து உண்ணமாட்டார்கள்'' என்று பதிலிறுத்தார்கள். அது கேட்ட அவர், ''அவ்விதமாயின் எங்களையும் இஸ்லாத்தில் ஏற்று இறைநேசர் குழுவில் ஆக்குங்கள்'' என்று வேண்டினார். அவர்களும் அவ்விதமே செய்தார்கள். அடுத்தகணம் ஆங்கு வீற்றிருந்த எழுபதின்மரின் வாயிலிருந்தும் இஸ்லாத்தின் திருக்கலிமா ரீங்காரத்துடன் வெளிவந்து, அவ்வாலயம் முழுவதும் எதிரொலி செய்யத் துவங்கியது.

அன்றிரவு அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள் அயர்ந்து உறங்குகால், இறைவன் அவர்களை நோக்கி, ''அஹ்மது! நீர் எனக்காக வேண்டி எழுபது மெழுகு வர்த்திகளை ஏற்றினீர். நான் உமக்காக வேண்டி எழுபதின்மரின் உள்ளத்திலும், இறை நம்பிக்கை என்ற விளக்கை ஏற்றினோம்'' என்று இயம்பினான்.

இத்தகு மாண்பாளராக இருந்த அவர்கள் நோய் வாய்ப்பட்டு மரணப்படுக்கையில் கிடந்த பொழுது, ஒருவர் அவர்களை அணுகி யாதோ ஒன்றை அவர்களிடம் வினவினார். அதற்கு அவர்கள், ''நான் தொண்ணூற்று ஐந்து ஆண்டுகளாக ஒரு வாயிலைத் தட்டிக் கொண்டுள்ளேன். அது இப்பொழுது தான் திறக்கவுள்ளது. அது நற் பாக்கியத்துடன் திறக்கப்படுமா, துர்ப்பாக்கியத்துடன் திறக்கப்படுமா என்பதை நான் அறியாது தவித்துக் கொண்டிருக்கும் பொழுது, தங்களுடன் நான் யாதும் பேச எனக்கு நேரம் எங்கே உள்ளது?'' என்று கூறினர்.

அவர்கள் இறக்கும் தறுவாயில், அவர்களுக்கு எழுபதாயிரம் தீனார் கடன் இருந்தது. ஏழைகளுக்கும், பக்கீர்களுக்கும் அறம் செய்து, அவர்களின் அல்லல் துடைத்ததற்காக அவர்கள் இப்பெரும் கடன் சுமைக்கு ஆளாகி இருந்தனர். கடன் கொடுத்தவர்களெல்லாம், அவர்களை மொய்த்து நின்று, அவர்களைக் குளவியெனக் கொட்டிய பொழுது, அவர்கள் இறப்புப் படுக்கையில் கிடந்த வண்ணம், தம் தளர்வுற்ற கைகளை ஏந்தி, ''இறைவ எம்பெருமா! நீயோ என்னை இப்பொழுது

உன்னிடம் அழைக்கின்றாய், ஆனால் நானோ கடன்காரர்களின் கொடும்பிடியில் சிக்கித் தவிக்கின்றேன். நான் கடன்காரனாக உன் திருமுன் வந்து நிற்க விருப்பமில்லை. எனவே இக்கடன் தீர ஒரு வழி செய்து, நான் உன்னை வந்தடைய வழிவகுப்பாயாக!'' என்று இறைஞ்சினர். அடுத்த கணம் அவர்களின் வீட்டுக் கதவில் டக்,டக் என்ற சப்தம் கேட்டது. கதவு திறக்கப்பட்டதும், ஒருவர் உள்ளே நுழைந்து அங்கு வீற்றிருந்த கடன்காரர்களையெல்லாம் அழைத்து, அவரவர்களுக்குரிய கடன் தொகைகளை எல்லாம் வழங்கினார். அதுகண்டு அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களின் முகத்தில் புன்முறுவல் படர்ந்தது. மறுகணம் அவர்கள் அல்லாஹ்வுக்கு ஆயிரம், ஆயிரம் நன்றி செலுத்தியவர்களாய் அவனை எய்திவிட்டார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 240 ஆம் ஆண்டிலாகும். அவர்களின் பூதவுடல் அவர்கள் குடியேறி வாழ்ந்து, இறப்பெய்திய நீஷாப்பூரிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.



## 2. அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்)

நீஷாப்பூரிலே பிறந்த அஹ்மது இப்னு ஹார்ப், பற்பல மார்க்கப் போர்களிலே கலந்து வீரப்போர் செய்தபின், பக்தாது மாநகரம் வந்து மார்க்கக்கல்வி பயின்று, பின்னர் தம் தாயகம் திரும்பி, அங்கே ஒரு தவமடம் அமைத்து ஆன்மீக போதம் செய்து வந்தார்கள். ஒருநாள் அவர்கள் தம் தவமடத்தில் அமர்ந்து தம் சீடர்களுக்கு ஆன்மீக விளக்கம் பகர்ந்து கொண்டிருந்த பொழுது, ஒருவர் அவர்களிடம் வந்து, ''கேட்டீர்களா, செய்தியை தங்களின் அண்டை வீட்டுக்காரரான பஹ்ராம் தம்முடைய வாணிபப் பொருள்களை ஏராளமாக வெளிநாடுகளுக்கு அனுப்பி வைத்திருந்தாராம். வழிநடுவில் கொள்ளைக் கூட்டத்தினர் அந்த வணிகக் குழுவைத் தாக்கி அவர்கள் கொண்டு சென்ற பொருள்கள் அனைத்தையும் கொள்ளையடித்துச் சென்று விட்டனராம். அவர்கள் உயிர் தப்பி வந்ததே பெரும் பாடாகப் போய்விட்டதாம்'' என்று மூச்சுத் திணறக் கூறினார்.

அதுகேட்ட அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்)அவர்கள் பெரிதும் திடுக்குற்றவர்களாய், ''அப்படியா! மிகவும் துயரச் செய்தியாக உள்ளதே. வாருங்கள், நாம் போய் அவரைச் சந்தித்து, அவருக்கு ஆறுதல் மொழி கூறி வருவோம்'' என்று சொன்னார்கள்.

அப்பொழுது அவர்களின் சீடர்களில் ஒருவர் இடைமறித்து, ''பெரிய துயரச் செய்திதான். அதில் ஐயமில்லை. ஆனால் அவர் ஒரு தீயை வணங்குபவராயிற்றே. நம்முடைய மார்க்கம் (தீன்) வேறு; அவருடைய மார்க்கம் வேறு. நமக்கும் அவருக்கும் இடையே என்ன தொடர்பு, என்ன உறவு இருக்கிறது, நாம் அவரிடம் சென்று ஆறுதல் கூறி வருவதற்கு?'' என்று கூறினார்.

அவருடைய இக்கூற்று, அவர்களின் சகாக்கள் சிலருக்குச் சரியாகவே தென்பட்டது. எனவே அவர்களும் 'ஆமாம்' என்று முணுமுணுத்தார்கள்.

ஆனால் அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்)அவர்களுக்கோ, தம் சீடர் கூறிய வாசகம் சரியாகத் தெரியவில்லை.

''நான் என் வாணாள் எல்லாம் அண்ணல் நபி(ஸல்) அவர்களின் பொய்யாமொழிகளைப் பொய்யை விட்டும் பிரித்து ஒருங்கு சேர்ப்பதில் பாடுபட்டவன் என்பதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். அவற்றை நான் உங்களுக்கும் போதித்து வருகிறேன். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அண்டை வீட்டினரின் உரிமைகள் பற்றிக் கூறியுள்ள அமுத மொழிகளை நீங்கள் மறந்து விட்டீர்களா, என்ன? பஹ்ராம், தீயைக் கடவுளெனக் கருதி வணங்குபவர் தாம். அதில் ஐயமில்லை. அவர் தீயை வளர்த்து வணங்கு வதை நான் கூடப் பலதடவை பார்த்துள்ளேன். எனினும் அவர் நம் அண்டை வீட்டுக்காரரல்லவா? நம்முடைய தவமடத்திற்கும், அவருடைய வீட்டுக்கும் இடையே ஒரு சுவர் தானே குறுக்கே நிற்கிறது. அப்படி இருக்கும் பொழுது அவர் நம் அண்டை வீட்டுக்காரரேயன்றி வேறென்ன? அண்டை வீட்டுக்காரர் அனந்தரத்திற்கும் பாத்திரமான வரல்லவா?'' என்றுகூறி அவரைக் கண்டு ஆறுதல் கூறிவருவதற்காக, அவரின் இல்லம் புறப்பட்டார்கள் அவர்கள்.

அவர்கள் பஹ்ராமின் இல்லம் சென்ற பொழுது பஹ்ராம் வணங்குவதற்காகத் தீயை வளர்த்துக் கொண்டிருந்தார். என்றுமில்லாப் புதுமையாக அன்று அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்கள் தம் சீடர்புடைசூழத், தம் இல்லம் எழுந்தருளியதைக் கண்டதும் அவருக்கு ஏற்பட்ட வியப்புக்கும், பரபரப்புக்கும் அளவில்லை.

''வரவேண்டும் அடிகளாரே! வரவேண்டும்''என்று கூறி அவர் களைக் கைலாகு கொடுத்து வரவேற்ற அவர், அவர்களைத் தம் இல்லத்தின் உள்ளே அழைத்துச் சென்று இருக்கையில் அமரச் செய்து, ''அடிகளார் இன்று என் இல்லம் எழுந்தருளியது என்னுடைய பாக்கியமே பாக்கியம்!'' என்று மகிழ்ச்சி மொழி பகர்ந்தார்.

அக்காலம் பஞ்ச காலமாக இருந்தது. பக்தாது மாநகரத்தில் எங்கணும் ரொட்டி கிடைப்பது அரிதாக இருந்தது. எனவே அவர்கள் பசியோடு வந்திருப்பார்கள் என்று எண்ணிக் கொண்ட அவர், அவர்கள் அனைவரும் பசியாற உணவு கொண்டு வந்து வைக்குமாறு தம் ஏவலர்களுக்கு சமிக்ஞை செய்தார்.

அதனை விளங்கிக் கொண்ட அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்கள் பஹ்ராமை நோக்கி, ''வீணே சிரமம் எடுத்துக் கொள்ளாதீர். உமக்குப் பேரிழப்பு நேர்ந்ததாகக் கேள்வியுற்றோம். அதுபற்றி விசாரித்து ஆறுதல் கூறிச் செல்வதற்காகவே வந்தோம்'' என்று கூறினார்.

''ஆம்; பேரிழப்புத் தான் ஏற்பட்டு விட்டது. ஆனால் அதற்காக நான் கவலைப்படவில்லை. மாறாக, நான் இறைவனுக்கு நன்றி செலுத்திக்

கொண்டுள்ளேன். காரணம், ஒன்று, கொள்ளைக்கூட்டத்தினர் என் பொருள்களைத் தான் கொள்ளையடித்துக் கொண்டு சென்றார்கள். மற்ற எவருடைய பொருள்களையும் கொள்ளையடித்துக் கொண்டு செல்ல வில்லை. அவர்களுடைய பொருள்களைக் கொள்ளையடித்துச் சென்றிருப்பின், அவர்களால் தலைதூக்க இயலாமலே போயிருக்கும். இரண்டாவதாக, என்னுடைய பொருள்களில் பாதியைத் தான் கொள்ளை யடித்துச் சென்றுள்ளார்கள். மற்றப் பாதி நல்ல விலைக்கு விற்கப்பட்டு, இழப்பில் ஒரு பகுதியைச் சரிக்கட்டி விட்டது. மூன்றாவதாக, என்னுடைய உலகப் பொருள்கள் தாமே களவாடப்பட்டது. அதனால் பாதகமில்லை. என்னுடைய மார்க்கத்தை அவர்களால் களவாட இயலுமா, என்ன? அது என்னுடைய உள்ளத்தில் நீங்காது நிரம்பி வழிந்து கொண்டுள்ளது. அது எனக்குப் போதும். உலகப் பொருள்கள் என்ன? வரும், போகும்'' என்று கூறினார்.

பஹ்ராமின் இம்மொழிகள் அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்) அவர்களுக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளித்தன. அவர்கள் தம் சீடர்களின் பக்கம் திரும்பி, ''அவர் கூறியதைக் குறித்துக் கொள்ளுங்கள். நான் அதில் இஸ்லாத்தின் நறுமணத்தை நுகர்கிறேன்'' என்று கூறினார்கள்.

பின்னர் அவர்கள் பஹ்ராமின் பக்கல் திரும்பி, ''பஹ்ராம்! நீர் ஏன் தீயை வணங்குகின்றீர்?'' என்று வினவினர்.

பஹ்ராம் ஒரு புன்முறுவலை உதிர்த்த வண்ணம், ''நான் அதனை வணங்குவதற்கு முதல் காரணம், அது என்னை எரிக்காமல் இருப்ப தற்காக. இரண்டாவது காரணம், நான் அதற்கு உணவாக, எரிபொருள் களை வழங்குகிறேனல்லவா? அந்த நன்றிக்குப் பிரதி நன்றியாக, அது மறுமையில் என்னை இறைவனிடம் கொண்டு போய் நலமே சேர்க்கும் என்ற நம்பிக்கையாகும்'' என்று பதிலுரைத்தார்.

இப்பொழுது அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்) அவர்கள் உள்ளுணர் வால் உந்தப்பட்டவர்கள் போன்று பேசினார்கள்.

''பஹ்ராம்! நீர் இங்கு தான் பெரிய தவறு செய்கிறீர். தீயானது பலவீனமானது, அறிவற்றது, நன்றியுணர்வு சிறிதேனும் இல்லாதது என்பதை நீர் அறியமாட்டீர். அதுபற்றி நீர் கொண்டிருக்கும் கருத்தே தவறுடைத்து என்று நான் கூறுவேன். எப்படி என்று நீர் வினவலாம். கூறுகின்றேன் கேளும்.

''ஒரு சின்னஞ்சிறு பலவீனமான குழந்தை தன் பிஞ்சுக் கைகளால் ஒரு குவளையில் தண்ணீர் எடுத்துச் சென்று நாக்கு நீட்டி எரிந்து கொண்டிருக்கும் நெருப்பின் மீது தெளித்தால், அது அணைந்து சாம்பலாகி

விடுகிறது. இத்துணை பலவீனமான அதனால் எவ்வாறு உம்மை மாபெரும் வல்லமை மிகுந்த இறைவனின் திருமுன் அழைத்துச்செல்ல இயலும்? சரி; அதன்மீது சிறிதளவு மண்ணை எடுத்துப் போட்டாலும், அது அவிந்து விடுகிறது. அதனை எதிர்த்து நிற்கக் கூட அதற்கு ஆற்றல் கிடையாது. இத்தகு வலுவற்ற ஒன்றால் எவ்வாறு அளப்பரும் வல்லமை வாய்ந்த இறைவனின் சந்நிதானத்திற்கு உம்மை அழைத்துச் செல்ல இயலும்?

''அடுத்து, நான் அது அறிவற்றது என்று கூறினேனல்லவா? எவ்வாறு என்று நீர் வினவலாம். நீர் வணங்கும் நெருப்பின் மீதோ அல்லது வேறு எந்தநெருப்பின் மீதோ கஸ்தூரியைத் தூவினாலும், அதனை அது எரித்துச் சாம்பலாக்கி விடும். இரண்டுக்கும் இடையேயுள்ள வேற்றுமை அதற்குத் தெரியாது. கஸ்தூரி உயரிய பொருள் என்றும், கூளம் இழிந்த பொருள் என்றும் அதற்குத் தெரியாது. இரண்டும் அதற்கு ஒன்றே. எனவே தான் நான் அதனை அறிவற்றது என்று கூறினேன்.

''அடுத்து, அது நன்றியுணர்வு சிறிதேனும் இல்லாதது என்று நான் கூறினேன். காரணமில்லாமல் நான் அவ்வாறு கூறவில்லை. சரி; நான் அதனை ஒரு சாதாரணப் பொருளாகவே கருதுகிறேன். நீ அதற்குத் தெய்வீகத் தன்மையைக் கற்பித்து, கர்ப்பூரத்தால் அதனை வளர்த்து வணங்கி வருகிறீர்- ஒரு நாளல்ல, எழுபது ஆண்டுகளாக. சரி, வாரும். நாம் இருவரும் சென்று அதில் நம் கையை இடுவோம். அது நம் இருவர் கைகளையும் சுட்டெரித்துவிடும். நீர் அதனை எழுபது ஆண்டுகளாக வழுத்தி, வணங்கி வருவதற்காக அது உம் மீது நன்றி விசுவாசத்துடன் சுட்டெரிக்காது சுகம் கொடுத்துக் கொண்டிருக்காது.''

அவர்களின் இச்சொற்கள் பஹ்ராமின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தன. அவருடைய மூளை வேகமாக வேலை செய்தது.

அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்)அவர்களை ஒரு முறைக்கு இருமுறை ஏறிட்டுப் பார்த்த அவர், ''அடிகளாரே! நான் தங்களிடம் நான்கு வினாக்கள் விடுக்கின்றேன். அவற்றிற்குத் தாங்கள் சரியான விடை பகர்ந்து விடின், நான் தங்களின் மார்க்கத்தை இதயபூர்வமாக ஏற்றுக் கொள்கிறேன்,'' என்று கூறினார்.

''சரி, கேளும்'' என்று பதிலுரைத்தனர் அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்கள்.

பஹ்ராம் வினவினார்: ''அடிகளாரே! இறைவன் ஏன் மனிதர்களைப் படைத்தான்?''

''அவனை வணங்குவதற்காக'' என்று சுருக்கமாகப் பதிலிறுத்தார்கள் அவர்கள்.

''அவன் மனிதர்களைப் படைத்தபின் ஏன் அவர்களுக்கு அவன் உணவளிக்கின்றான்?'' அடுத்து பஹ்ராம் இவ்வாறு வினவினான்;

''அவன் தான் அனைத்துக்கும் உணவளிக்க வல்லவன் என்பதை அவர்களுக்கு உணர்த்துவதற்காக''

''நல்லது; மனிதர்களைப் படைத்து உணவளிக்கும் அவன் அவர்களை ஏன் இறக்கச் செய்கிறான்?''

''அவனின் மாபெரும் வல்லபத்தையும், மனிதர்களுக்கு, அவர்களின் பலவீனத்தையும் உணர்த்துவதற்காக.''

''சரி; அவர்களை ஏன் மீண்டும் மறுமையில் உயிர்த்தெழச் செய்ய வேண்டும்?''

''அவனே சர்வ வல்லமையுள்ளவன்; சர்வக்ஞன் என்பதை அவர்களை உணரச் செய்வதற்காக.''

இவ்வாறு அவர்கள் பதிலுரைத்தது தான் தாமதம், ஏதோ ஒருவித இனம் தெரியாத உணர்ச்சியால் உந்தப்பட்ட பஹ்ராம் பாய்ந்து அவர்களின் கரம் பற்றி, ''திட்டமாக வணக்கத்திற்குரியோன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராவார்கள் என்று நான் சான்று பகர்கிறேன்'' எனறு கூறி இஸ்லாத்தைத் தழுவினார்.

அடுத்த கணம் ஒரு பேரொலி எழுப்பிய வண்ணம் அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்) அவர்கள் மயக்க மீக்குற்றுக் கீழே சாய்ந்தார்கள். அது கண்டு அவர்களின் சீடர்களுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கு அளவில்லை.

சற்று நேரம் கழித்து உணர்வு பெற்று எழுந்தமர்ந்தார்கள் அவர்கள். அப்பொழுது சீடர்கள் அவர்களை நோக்கி, ''தங்களுக்கு மயக்கம் ஏற்படக் காரணம் என்ன?'' என்று வினவினர்.

அதற்கு அவர்கள், ''பஹ்ராம் இஸ்லாமியத் திருக்கலிமாவை மொழியும் பொழுது, வணங்குவதற்குரியோன் அல்லாஹ் ஒருவனே என்று கூறும் பொழுது, அதற்குச் சான்று பகரும் முகத்தான் தம் கலிமா விரலை நீட்டிய காலை, என்னுடைய உள்ளின் உள்ளிலிருந்து, ''அஹ்மதே! பஹ்ராம் எழுபது ஆண்டுகள் தீ வணங்குபவராக இருந்து, உறுதியாக இஸ்லாத்தைத் தழுவினார். ஆனால் எழுபது ஆண்டு காலமாக முஸ்லிமாகவே வாழ்ந்து வரும் நீர், இறுதியாக எனக்கு என்ன காணிக்கை

வழங்க உள்ளீர்?'' என்ற குரல் கேட்டது. அது கேட்டு யாது கூறுவதென அறியாது திணறினேன். அதற்குப் பின் யாது நிகழ்ந்தது என்று எனக்குத் தெரியாது'' என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

அவர்கள் ''தலைக்கு மேல் இன்பச் சுவனம் வட்டமிடுகிறது. காலுக்குக் கீழே துன்ப நரகம் தரித்துக் கொண்டுள்ளது. இரண்டிற்கும் நடுவே சிலர் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறார்களே, அவர்களைப் பார்த்து நான் வியப்புறாமல் இருக்க இயலவில்லை'' என்று கூறி, அல்லும் பகலும் இறைகாவல் வேண்டி இறைநாமத்தை ஜெபித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒருதடவை அவர்கள் நாவிதனைத் தம் தவ மடத்திற்கு அழைத்துத் தலைமுடி இறக்கிக் கொண்டார்கள். நாவிதன் தன் சொரட்டைக் கத்தியைக் கொண்டு தலைமுடியை இறக்கும் பொழுது, இறைநாமத்தை ஜெபித்துக் கொண்டு இறைவனுடைய நினைவிலேயே மூழ்கி இருந்தார்கள் அவர்கள்.

தலைமுடியை இறக்கிவிட்டு தாடி, மீசையை ஒழுங்கு பண்ணு வதற்கு முற்பட்டான். அப்பொழுது அவர்களின் வாய் இறைவனின் திருப் பெயரை உச்சரித்துக் கொண்டிருந்தது. அவன் அவர்களின் மீசையைக் கத்தரித்து ஒழுங்கு செய்யக் கத்திரியைக் கொண்டு செல்லுந்தோ றெல்லாம், அவனின் கத்தரி, அவர்களின் உதட்டில் பல இடங்களில் உராய்ந்து பதம் பார்த்தது.

''நான் தங்களின் மீசையை வெட்டி ஒழுங்கு செய்யும் வரையிலாவது சற்று உதடுகளை உசுப்பாது இருங்கள்'' என்று நாவிதன் கூறினான்.

ஆனால் அவர்களோ கேட்கவில்லை. ''நீ உன் வேலையைச் செய்து கொண்டு செல், நான் என் வேலையைச் செய்து கொண்டிருக்கிறேன்'' என்று கூறிவிட்டார்கள்.

ஒருநாள் அவர்களுக்கு மடல் ஒன்று வந்தது. அதற்குப் பதில் எழுத வேண்டுமென்று அவர்கள் பல நாட்களாக எண்ணிக் கொண்டிருந்தார்கள் தாம். ஆனால் எழுதுவதற்குத் தான் அவர்களுக்கு நேரம் கிடைக்க வில்லை. அல்லும் பகலும் இறை நினைவிலேயே இலயித்திருப் பவர்களுக்குக் கடிதம் எழுத எங்கிருந்து நேரம் கிடைக்கப் போகிறது?

ஒருநாள் முஅஸ்ஸின் பள்ளியில் தொழுகைக்கான அழைப் பொலியை எழுப்பிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர், ''நேரம் வந்து விட்டது'' என்று பொருள்படும் 'ஹய்ய' என்ற சொல்லைக் கூறியதும், அவர்களுக்குத் தாம் நெடுநாட்களாகியும் பதில் எழுதாதது நினைவுக்கு

வந்தது. உடனே அவர்கள் தம் அருகிலிருந்த சீடர் ஒருவரின் பக்கல் திரும்பி, இன்னாருக்கு பதில் எழுது. எனக்கு பதில் எழுத நேரம் இல்லை என்றும், எனவே எனக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருக்க வேண்டாம் என்றும் எழுது. இறைத்தியானத்தில் முனைந்து ஈடுபடுமாறும் எழுது'' என்று கூறிவிட்டுத் தொழச் சென்று விட்டார்கள்.

ஒருநாள் அஹ்மது இப்னு ஹார்ப் (ரஹ்)அவர்கள், தம் இல்லத்தில் நகரப் பிரமுகர் சிலருடன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, உள்ளே நுழைந்த அவர்களின் மூத்த மகன், அவர்களையோ, அங்கு வீற்றிருந்தவர்களையோ சிறதேனும் பொருட்படுத்தாது, மது மயக்கத்தோடு புல்லாங்குழல் ஊதிக் கொண்டு சென்றான். அது கண்டு ஆங்கு வீற்றிருந்தவர்களுக்கு ஏற்பட்ட எரிச்சலுக்கு அளவில்லை.

அப்பொழுது அவர்களின் முக மாறுதலைக் கண்ட அவர்கள் ''என்ன செய்தி?'' என்று வினவினர்.

''இந்த இளவல் இத்துணை இழிவாக இங்கு நடந்து கொண்டது எங்களுக்குப் பெரிதும் மன வேதனையை அளிக்கிறது'' என்று பதிலுரைத்தார்கள் அவர்கள்.

அப்பொழுது அவர்கள் அந்தப் பிரமுகர்களை நோக்கி, ''தவறு அவனுடையதல்ல, எங்களுடையது'' என்று கூறினர்.

''எவ்வாறு?'' என்று அவர்கள் வியப்புடன் வினவினர்.

''ஓரிரவு அண்டை வீட்டிலிருந்து எங்களின் வீட்டிற்கு உணவு வந்தது. அதனை நானும் என் மனைவியும் உண்டோம். அன்றிரவே இவன் ஜனித்தான். அன்றிரவு நாங்கள் எங்களை அறியாமல் உறங்கி விட்டதால், வைகறைத் தொழுகையும் எங்களுக்குத் தவறிவிட்டது. பின்னர் நாங்கள் விசாரித்ததில், அது ஓர் அரசாங்க ஊழியரின் இல்லத்தில் நடந்த திருமண விருந்துக்குச் சமைக்கப்பட்ட உணவு என்று தெரிய வந்தது'' என்று அவர்கள் கூறினார்கள்.

இறைநேசச் செல்வர் அஹ்மது இப்னு ஹார்ப் ( ரஹ்) அவர்களுக்கு மற்றொரு சிறு மகனும் இருந்தார். இளமையிலிருந்தே அவரையாவது இறையருளில் நம்பிக்கையுள்ளவராக ஆக்க வேண்டுமென்ற எண்ணத் துடன், அவர்கள் ஒருநாள், தம் சின்னஞ்சிறு மகனை அருகழைத்து, ''மகனே! உனக்கு உண்பதற்கு ரொட்டி வேண்டுமாயின் என்னிடமோ, அம்மாவிடமோ வந்து 'பசிக்கிறது என்னவாவது தா' என்று கேட்டு அழாதே. அதற்கு மாறாக, அதோ சன்னல் இருக்கிறதே, அங்கு சென்று, ''இறைவனே! எனக்கு ரொட்டி தா' என்று கேள் கிடைக்கும்'' என்று கூறினர்.

அவ்விதமே குழந்தை ஒவ்வொரு நாளும் சன்னல் அருகே சென்று ரொட்டி கேட்டுப் பெறும் வழக்கத்தை மேற்கொண்டது. பெற்றோர்களும் மறந்து விடாது சன்னல் அருகே ரொட்டியை வைக்கும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர்.

ஒருநாள் பெற்றோர் இருவரும் அவ்விதம் செய்ய மறந்து விட்டு வெளியே சென்று விட்டனர். குழந்தை வழக்கம் போல் சன்னல் அருகே சென்று ''இறைவனே! எனக்கு ரொட்டி தா'' என்று கேட்டது. உடனே சன்னல் வழியாக ஒரு ரொட்டி விழுந்தது. அதனை எடுத்துக் கடித்துத் தின்று கொண்டிருந்தது குழந்தை.

அப்பொழுது பெற்றோர்களும் இல்லம் திரும்பி விட்டார்கள். தம் சின்னஞ்சிறு மகன் ரொட்டித் துண்டைக் கையில் வைத்துக் கொண்டு கடித்துத் தின்று கொண்டிருப்பதைக் கண்டதும், அவர்களுக்கு அவர்களுடைய கண்களையே நம்ப இயலவில்லை.

''யார் உனக்கு ரொட்டி தந்தது கண்ணே!'' என்று அவர்கள் தம் சின்னஞ் சிறு மகனைச் செல்லமாக வினவினார்கள்.

''எப்பொழுதும் தருகிறவர் தாம் இன்றும் தந்தார்'' என்று அது தன் பிஞ்சு வாய் திறந்து கூறியது.

அப்பொழுது பெற்றோர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் மகிழ்விற்கும் அளவில்லை.

இவ்வாறு இறையருளில் பரிபூரண நம்பிக்கை வைத்து, அவனுடைய ஆதரவையே தாம் மட்டும் நம்பி வாழ்ந்ததோடல்லாது, தம் சின்னஞ்சிறு மகனையும் அவ்வழியிலேயே அழைத்துச் சென்ற மாபெரும் இறைநேசச் செல்வரான அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்கள், ஹிஜ்ரி 234 ஆம் ஆண்டில் தம்முடைய 85 ஆவது வயதில், காலமெல்லாம் அவர்களின் நினைவு இவ்வுலகில் நிலைத்து நிற்கும் வண்ணம் காலமாயினர்.



# 3. யஹ்யா இப்னு மஆத் (ரஹ்)

உலகிலேயே யஹ்யா என்னும் பெயர் பெற்ற இருவர் சிறப்புற்று விளங்கினர். அவர்களில் ஒருவர் நபி. மற்றவர் வலி. முன்னவரோ இறைவன் மீதுள்ள அச்சம் (கௌஃப்) காரணமாக எப்பொழுதும் அழுத வண்ணம் இருந்தார்கள். ஆனால் பின்னவரோ, இறைவனின் பேரருளின் மீது தமக்குள்ள அசைக்க முடியாத ஆதரவின் (ரஜா) காரணமாக, ஈஸா (அலை) அவர்கள் போன்று எப்பொழுதும் புன்முறுவலுடன் காணப் பட்டார்கள்.

ஒரு நாள் ஈஸா (அலை) அவர்களும் யஹ்யா (அலை) அவர்களும், ஒருவர் மற்றொருவரைக் குறை கூறிக் கொண்டனர். தாம் செய்வதே சரியெனக் கூறினர் யஹ்யா (அலை) அவர்கள். ஆனால் ஈஸா (அலை) அவர்களோ தாம் செய்வதே சரி என இயம்பினர். அப்பொழுது இறைவன் குறுக்கிட்டு, "ஈஸாவே! நீர் தனித்திருக்கும் பொழுது, யஹ்யாவைப் போன்று இருப்பீராக! யஹ்யாவே! நீர் பிறர் முன் ஈஸா போன்று முகமலர்ச்சியுடன் காணப்படுவீராக!" என்று அறிவுரை பகர்ந்தான்.

யஹ்யா (அலை) அவர்களைப் பற்றியும், யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்களைப் பற்றியும் ஹுஸ்ரீ ( ரஹ் ) அவர்கள் கூறும் பொழுது, ' யஹ்யா இப்னு ஸகரிய்யா (அலை) அவர்களே, அச்சத்தின் பாதையில் சென்றனர். அது கண்டு ஏனையோரும் பெரிதும் அச்சமுற்று தங்களுக்கு உய்வு உண்டோ என்று கவலுற்றார்கள். ஆனால், யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்களோ, நம்பிக்கையின் பாட்டையில் அடியெடுத்து வைத்து நடந்து, ஏனையோரின் கரங்களையும் நம்பிக்கையின் பால் இறுக இணைத்து விட்டனர்" என்று எடுத்துரைத்தார்கள்.

அப்பொழுது மக்கள் ஹுஸ்ரீ (ரஹ்) அவர்களை நோக்கி "யஹ்யா இப்னு ஸகரிய்யா (அலை) அவர்களின் நிலை பற்றி நாங்கள் நன்கு அறிவோம். யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்களைப் பற்றி எங்களுக்குக் கூறுங்கள்" என்று வேண்டிய பொழுது, அவர்கள் ஒருபோதும் மௌட்டீகத்தில் (ஜாஹிலிய்யாத்) இருந்ததில்லை என்றும், எத்தகைய பெரும் பாவங்களையும் செய்ததில்லை என்றும் கேள்வியுற்றுள்ளேன்" என்று அவர்கள் இயம்பினார்கள்.

மாபெரும் இறைநேசச் செல்வரான யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள், எப்பொழுதும் முகமலர்ச்சியுடன் காணப் பெறுவதைக்கண்டு ஒருவர் அவர்களிடம், அதற்கான காரணத்தை வினவிய பொழுது, இறைவனின் பேரருளின் மீது தாம் கொண்ட ஆதரவு (ரஸா) காரணமாக அவ்விதம் இருப்பதாகக் கூறினார்கள். அது கேட்ட அவர், 'ரஸா' என்றால் என்னவென்று வினவியபொழுது, 'கௌஃபும் ரஸாவும் இறைநம்பிக் கையை வலுப்படுத்துபவையாகும். ஒருவன் அசைக்க முடியாத இறை நம்பிக்கை (ஈமான்) உள்ளவனாயிருப்பின், அவன் வணக்கத்தை விட்டொழிக்கவும் மாட்டான். வழி கேட்டில் ஆகவும் மாட்டான். பயத்தினால் இறைவனை வணங்குபவன், தான் இறைவனால் புறக் கணிக்கப்படுவோமோ என்று அஞ்சி, அஞ்சி இறைவனை வணங்கு கின்றான். ஆனால் 'ரஸா'வோடு இறைவனை வணங்குகின்றவன், இறை ஆதரவில் நம்பிக்கை வைத்து, இறைவனை வணங்குகின்றான். இறைவன் தன்னை ஒரு போதும் கைவிட மாட்டான் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையின் காரணமாக, அவன் ஒருபோதும் கவலுறு வதில்லை. இதில் என்ன தவறுள்ளது?'' என்று பதில் கூறினர்.

எனினும் அவர்கள் கௌஃபோடும் (அச்சத்தோடும்), ரஸாவோடும் (ஆதரவோடும்) தாம் வாழ்ந்து வந்தார்கள். நரகத்திற்கான விதையை விதைத்து விட்டுச் சுவன வாழ்வை எதிர்பார்ப்பதினும் மடமை வேறொன்றுமில்லை என்றும், 'ஓர் ஏழை வறுமைக்கு அஞ்சுவது போன்று, ஒருவன் நரகத்திற்கு அஞ்சி நல்வாழ்வு வாழ்வானாயின், அவன் மறுமையிலும் சுவனப் பெருவாழ்வை எய்தப் பெறுவான்' என்றும் இயம்பினர்.

ஒரு தடவை அவர்கள் இறைவனை நோக்கி, ''இறைவ எம்பெரும! நீ மூஸா (அலை) அவர்களையும், ஹாரூன் (அலை) அவர்களையும், பிர்அவ்னிடம் தூதனுப்பிய பொழுது, அவனோடு மென்மையாக உரையாடுமாறு நீ அவர்களுக்கு அறிவுரை பகர்ந்தாய். தானே இறைவன் என்று வாதாடிய அவன் மீதே நீ இவ்வாறு அருள் பாலித்தால், உனக்கு அடங்கி, ஒடுங்கி, வணக்கம் நிகழ்த்துபவன் மீது உன் அன்பு எவ்வளவு இருக்கும் என்று நான் கூறத் தேவையில்லை. 'அனரப்புல் அஃலா' (நானே மகத்தான இறைவன்) என்று கூறிய அவன் மீதே நீ பேரருள் பாலிப்பவனாய் இருக்க, ''ஸுப்ஹான ரப்பியல் அஃலா' (மகத்தான இறைவன் தூயவன்) என்று கூறும் ஒருவன் மீது நீ பேரருள் சுரக்கா திருப்பாயா, என்ன? என்னுடைய உடைமை அனைத்தும் நான் அணிந் திருக்கும் ஒரே கம்பளியுடையேயன்றி வேறில்லை. அதனையும் எவரேனும் கேட்பின் நான் அவருக்கு வழங்கப் பின்வாங்க மாட்டேன். ஆனால், அண்ட கோளங்களும், அவற்றிலுள்ள அனைத்தும்

உன்னுடைய உடைமைகளேயாகும். நீயோ யாதும் எவரிடமிருந்தும் தேவையற்றவனாயுள்ளாய். உன் நிலை அவ்வாறிருக்க, என் போன்றோர்க்கு வழங்க நீ பின் வாங்கப் போகின்றாயா, என்ன? எவன் ஒருவன் நன்மை செய்கின்றானோ அவனுக்கு அதைவிட அதிகமானதைப் பிரதிபலனாக வழங்குவதாக நீ கூறியுள்ளாய். அவ்விதமாயின் உன் அடியார்க்கு அடியானாகிய எனக்கு உன் தரிசனத்தை வழங்குவாயாக!''

''இறைவனே! நான் செய்த நற்செயல்களின் பலன்களை, நன்மைகளைத் தேடிப் பாடுபடுபவர்களுக்கு அளித்துவிடு. உலகிலுள்ள இறை மறுப்பவர்களுக்கு, எனக்கு உலகில் என்ன விதித்துள்ளாயோ அதனை நல்கி விடு. ஆனால் எனக்கோ நான் இவ்வுலகில் வாழும் காலமெல்லாம் உன் நினைவை என் மீது ஆக்கி வை. இறந்த பின் உன்னுடைய 'லிகா' என்னும் தரிசனத்தை எனக்கு வழங்கியருள்.

''இறைவனே! நான் ஒரு பாவி. ஒவ்வொரு நாளும் புதுப் புதுப் பாவங்களைச் செய்து கொண்டுள்ளேன். நீயோ மன்னிக்கும் தயாளன். நீ என்னுடைய பாவங்களை மன்னித்தருள்வாயாக! நான் என்னுடைய பாவங்களை எண்ணிப் பார்க்கும் பொழுது, எனக்குப் பயமாக உள்ளது. எனினும் உன்னுடைய இரக்க இயல்பையும், மன்னிக்கும் தன்மையையும் எண்ணி நான் சற்றுத் தைரியமாக உள்ளேன்.

''இறைவனே! நான் ஒரு பாவி. உன்னை நான் எவ்வாறு நினைவு கூர்வது? நீயோ மிகப் பெரும் மன்னிப்பாளன். உன்னை நான் நினைவு கூராது, உன் மன்னிக்கும் இயல்பில் நான் நம்பிக்கை வைக்காது, நான் என் செய்வது?

''அந்த நம்பிக்கையே எனக்கு இவ்வுலக வாழ்வில் உறுதுணையாக உள்ளது. உன்னை நினைவு கூர்வதும், உன் திருப்பெயரை ஓயாது, ஒழியாது ஜபித்துக் கொண்டிருப்பதுமே நீ எனக்களித்த அருட்பெரும் கொடையாக உள்ளது.

''இறைவனே! நான் சுவனம் புகத்தக்க வண்ணம் யாதொரு நற்செயலும் ஆற்றவில்லை. எனவே, நரக வேதனையை எண்ணி, எண்ணி நான் அஞ்சிக் கொண்டுள்ளேன். ஆதலின் நீ உன் பேரருளை என் மீது பொழிந்து, என் அச்சத்தை நீக்குவாயாக!'' என்று இறைஞ்சினார்கள்.

அவர்கள் அல்லும் பகலும் அயராது அபார வணக்கம் செய்வதைக் கண்ட ஒருவர், அவர்களை அணுகி, 'ஷைகு அவர்களே! தாங்களோ இறை ஆதரவில் நம்பிக்கை உள்ளவர்கள். ஆனால் தங்களின் செயலைப் பார்த்தாலோ இறையச்சம் மிகுந்தவர்கள் போன்று தென்படுகிறதே'' என்று கூறிய பொழுது ''மகனே! இறைவணக்கத்தை விட்டொழிப்பது

வழி தவறிச் செல்வதாகும் என்பதை நீ அறியாயோ?'' என்று அவர்கள் பதில் மொழிந்தார்கள்.

அவர்கள் கூறியது முழுக்க முழுக்க உண்மையாகும். கௌஃபும், ரஸாவும் இறை நம்பிக்கையின் இரு பெரும் தூண்களாகும். அவை இரண்டையும் பற்றிப் பிடித்துக் கொள்வோர் தவறிழைக்க ஏதுவில்லாமல் போய்விடுகிறது என்பதில் ஐயமில்லை.

சூஃபிகளில் இருவேறு கருத்துடையவர்கள் இருந்தார்கள். சிலர் வளம் தான் வறுமையை விட மேலானது என்றும், வேறு சிலர் வறுமை தான் வளத்தை விட மேலானது என்றும் கருதினார்கள். இவர்களோ வளம் தான் வறுமையை விட மாண்புடைத்தது என்று கூறினர். காரணம் வினவப்பட்ட பொழுது, வளமும் வறுமையும் மனிதனின் பண்புகளாக இருந்த போதினும், வளம் இறைவனின் பண்புகளில் ஒன்றாகும். வறுமையை இறைவனின் பண்பு என்று கூற இயலாது. ஆதலின் இறைவனுக்கும் மனிதனுக்கும் பொதுவான பண்பே, இறைவனுக்குப் பொருந்தாத பண்பை விட மேலானதாகும் என்று இவர்கள் விளக்கம் பகர்ந்தார்கள்.

ஒருவர் இவர்களிடம் வந்து, ''மனிதன் இவ்வுலகை நேசிப்பதற்குக் காரணம் என்ன?'' என்று வினவிய பொழுது, ''அவன் அவ்வுலகை நேசிப்பது அவனுக்குக் கடமையாக ஏற்பட்டு விட்டதே. அவன் இம் மண்ணிலிருந்தே படைக்கப்பட்டான். எனவே, அதுவே அவனுடைய அன்னையாக உள்ளது. இம்மண்ணிலிருந்தே அவனுக்கு உணவு கிடைக்கிறது. அவன் இறந்ததும் இம்மண்ணுக்குள் புதைக்கப்பட்டு, அதனையே மீண்டும் அவன் அடைகிறான். இம்மண்ணின் மீது வீற்றிருந்து அவன் வணக்கம் நிகழ்த்தியே சுவனப் பேற்றினை எய்தப் பெறுகிறான். இறைவனை அணுகும் பாதையும் அவனுக்கு இதுவாகவே உள்ளது. எனவே அவன் இதனை நேசிப்பதில் என்ன வியப்புள்ளது?'' என்று விடையிறுத்தார்கள்.

அவர்கள் ஒரு நண்பருக்கு எழுதிய மடலில், ''இவ்வுலகம் ஒரு கனவு போன்றது. மறுமையே நிலையானது'' என்று குறிப்பிட்டிருந்தனர். அதற்கு, அவர் தாம் ஓரிரவு அழுவது போன்று கனவு கண்டதாகவும், அதன் பொருள் யாது என்றும் வினவி இருந்தார். அதற்கு அவர்கள், ''அதன் பொருள் நீ மறுமையில் சிரித்து மகிழ்வாய் என்பதேயாகும். இம்மையில் அழுபவன் மறுமையில் மகிழ்ச்சியுறுவான்'' என்று பதில் எழுதினர்.

ஒரு நாள் அவர்கள் மக்களை நோக்கி, ''மார்க்க விற்பன்னர்கள் (உலமாக்கள்) முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்துகளின் மீது,

அவர்களின் பெற்றோரை விட அதிக அன்பும் இரக்கமும் உடையவர்கள்'' என்று கூறினர். ''எவ்வாறு?' என்று ஒருவர் இடைமறித்து வினவிய பொழுது, ''ஒருவனின் பெற்றோர்கள் அவனை இவ்வுலகில் நெருப்பை விட்டு மட்டுமே காப்பாற்றுவார்கள். ஆனால் மார்க்க விற்பன்னர்களோ அவனை மறுமையில் நரக நெருப்பை விட்டே காப்பாற்றுவார்கள்'' என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

ஓரிரவு யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள், தங்களின் இல்லத்தில் அமர்ந்து தம் மாணவர்களுக்கு அறபோதம் வழங்கிக் கொண்டிருந்த பொழுது, அவ்வில்லத்தில் மினுக், மினுக்கென எரிந்து, ஒளி சிந்திக் கொண்டிருந்த விளக்கு அணைந்துவிட்டது. அதுகண்டு அவர்கள் கண்ணீர் சிந்தினர். அது கண்ட அவர்களின் மாணவர்கள், ''இதற்காக ஏன் கண்ணீர் சிந்துகின்றீர்கள்? விளக்கு அணைந்தால் அதனை மீண்டும் ஏற்றிக் கொள்ளலாமே'' என்று கூறிய பொழுது, ''அதற்காக நான் அழவில்லை. இறை நம்பிக்கை என்ற விளக்கை மறதி என்னும் காற்று அணைத்து விடுமோ? அதனால் நான் மறுமையில் துன்புற நேருமோ? என்று நான் அஞ்சுகின்றேன். எனவே தான், என்னை அறியாமல் எனக்கு அழுகை வந்தது'' என்று இயம்பினார்.

மேலும் அவர்கள் இவ்வுலகைப் பற்றிப் பேசுங்கால்,

''உலகஆசை ஒருவனை அல்லாஹ்வை விட்டும் பராக்காக்கி விடுகிறது. அது கிடைத்து விடிலோ அது அவனை எக்கதியிலாக்கும்'' என்று அவர்கள் வருத்தத்துடன் இயம்பினர்.

''இவ்வுலகம் ஷைத்தானுடைய கடையாகும். இதனை ஷைத் தானின் மது என்று கூடக் கூறலாம். அதனை அருந்துபவனுக்கு மறுமை யில் தான் மயக்கம் தெளியும்'' என்றும் அவர்கள் எடுத்துரைத்தார்கள்.

அப்பொழுது, ஒருவர் குறுக்கிட்டு, ''உயிர் வாங்கும் வானவர் உயிரோடிருப்பதனால் தான் இவ்வுலக வாழ்வின் மதிப்பு ஒரு சிறு செப்புக் காசுக்கு நிகராக உள்ளது'' என்று கூறியபொழுது, ''உயிர் வாங்கும் வானவர் இல்லாத போதினும், அதன்மதிப்பு அவ்வளவுதான். இறப்பு என்பது இம்மையை மறுமையோடு இணைப்பதற்கான, நண்பனை நண்பனோடு சேர்ப்பதற்கான பாலம். இறை நம்பிக்கையோடிருக்கும் சிறிதளவு நேரம், பல்லாண்டு இறை மறுப்போடிருந்த பாவத்தை அழித்துவிடும் பொழுது, எழுபது ஆண்டு இறை நம்பிக்கை, எழுபது ஆண்டுப் பாவங்களை அழிக்காதா, என்ன? ஆனால் இறைவனிடம் அழுது கெஞ்சி, தான் செய்த பாவங்களை மன்னிக்குமாறு கூறிவிட்டு, மீண்டும் பாவம் செய்வது, முன் செய்த பாவத்தை விட எழுபது மடங்கு அதிகமானதாகும். எனினும் மனிதன் பாவங்களைத் திரும்பத் திரும்பச்

செய்து நரகத்தைப் பெறும் வண்ணம், இங்கு செயலாற்றி விட்டு, மறுமையில் சுவர்க்கத்தை எதிர்பார்த்துக் கொண்டுள்ளான். இஃது எத்துணை மடமை? '' என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் மக்களை நோக்கி மணிமணியான கருத்துக்களையெல்லாம் உதிர்த்தனர். அவற்றைப் பயன் கருதி நாமும் பொறுக்குவோம்.

1. கடைத்தெருவில் இறப்பு விற்கப்படுமானால், இறை காதலர்கள் அதைத் தவிர வேறொன்றையும் வாங்க மாட்டார்கள்.
2. இவ்வுலகம் வணக்கத்திற்குரிய இடமாகும்.
3. இறையடியார்களின் இதயம் நான்கு இடங்களிலே அன்றி- தனிமை, பள்ளவாயில், அடக்கவிடம், காடு ஆகியவற்றிலேயன்றி, வேறு எங்கும் அமைதியுற்றிராது.
4. மூன்று துறவு நிலைகளால் மாபெரும் ஆன்ம நலன்கள் ஏற்படுத்துகின்றன. அவையாவன:- 1. மதிப்பையும், கௌரவத்தையும் விரும்புவதைத் துறத்தல்.2. ஆசைகளைத் துறத்தல் . 3. உலகைத் துறத்தல்.
5. இறைவனைப் பொருந்திக் கொள்வீர்களாக! இறைவனும் உங்களைப் பொருந்திக் கொள்வான்.
6. மூவரின் தொடர்பை விட்டொழிப்பீர்களாக! அவர்கள் எவரெனில் 1. பொடுபோக்கான அறிஞர்கள் 2. நயவஞ்ச ஹாஃபிஸ்கள். 3. போலி ஞானிகள்.
7. ''என்னை உம்முடைய இறைஞ்சுதலில் நினைவு கொள்வீராக! என்று நீ ஒருவரிடம் கூற வேண்டி இருப்பின், அவர் நல்ல நண்பரல்ல; தீய நண்பர்'' என்று அவர்கள் கூறினர். அவர்கள் இவ்வாறு கூறியதற்குக் காரணம், ஒருவர், பிறர் ஒருவருடன் ஒரு கணம் தொடர்பு கொண்டிருந்த போதினும், அவர் அவருக்காக இறைஞ்ச வேண்டும் என்று அவர்கள் கருத்துக் கொண்டிருந்ததேயாகும்.
8. இறக்கும் தருவாயில் செல்வர்களுக்கு இரண்டு துன்பங்கள் ஏற்படுகின்றன. 1. அவன் திரட்டிய அனைத்துச் செல்வங்களும் அவனை விட்டும் பறிக்கப்படுவதனாலான துன்பம். 2. அவை பற்றி அவனிடம் கணக்குக் கேட்கப்படுவதாலான துன்பம்.

ஒருநாள் ஒருவர் அவர்களை அணுகி,

''சிலர் தங்களை எப்பொழுதும் குறை கூறிக் கொண்டுள்ளார்களே'' என்று கூறிய பொழுது, ''அதற்கு நான் என்ன செய்வது? இறைவன் என்னை மன்னித்து விட்டால், இவர்கள் என்னைக் குறை கூறுவதனால் எனக்கு யாதோர் இழப்பும் ஏற்படப் போவதில்லை. இறைவன் என்னை மன்னிக்காவிட்டால், திட்டமாக நான் குறை கூறப்படத் தகுதியானவன் தான்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''மூன்று கூட்டத்தினரை விட்டும் நீங்கள் ஒதுங்கி இருங்கள்'' என்று கூறினர். ''யார் அக்கூட்டத்தினர்?'' என்று அவர்கள் வினவிய பொழுது, ''அவர்கள், 1. நற்செயலில்லா மார்க்க·அறிஞர்கள். 2. இறைவன் மீது அன்பு செலுத்தாது திருக் குர்ஆனை ஓதுபவர். 3. கல்வியறிவில்லாத ஞானி ஆகியோராவர்'' என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

இதன்பின் அவர்கள் தூய்மையைப் பற்றி எடுத்துரைக்கும் பொழுது, ''சாணம், இரத்தம் ஆகியவற்றை விட்டுப் பால் தூய்மையாய் இருப்பது போன்று, செயல்கள் தீய எண்ணங்களை விட்டும் தூய்மையாய் இருக்க வேண்டும். இறைவன் மீது மனத்தை ஒருமுகப்படுத்தும் போது, செயல்கள் தூய்மை பெறுகின்றன'' என்று அவர்கள் கூறினார்கள்.

ஒருநாள் அவர்கள் தம் நண்பர் ஒருவருடன் ஒரு வழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, அவர்களின் கண்களுக்கு ஒரு சிற்றூர் தென் பட்டது. அதைக் கண்ட அவர்களின் நண்பர் ''எத்துணை அழகான ஊராக இது உள்ளது'' என்று வாயார்ந்து கூறினார். அப்பொழுது அவர்கள், அவரை நோக்கி, ''இறைவனைத் தவிர உள்ள வேறு எத்தகு நினைவையும் அகற்றி, இறைநேசம் ஒன்றையே தன்னுள் இருத்தி வைத்திருக்கும் இதயம் இதைவிட அழகானதாகும்'' என்று கூறினார்கள்.

ஒருதடவை அவர்கள் ஸித்தீக்குகளுடையவும், வலிமார்களுடையவும், இறை நம்பிக்கையாளருடையவும் பண்புகளைப் பற்றிக் கூறுங்கால். ''ஸித்தீக்குகளின் பண்பு மக்களின் தொடர்பை வெறுத்து ஒதுங்கி இருப்பதாகும். வலிமார்களுடைய பண்பு 1. அணுவத்தனை அலுவலுக்கும் இறைவனிடத்தே ஆதரவு வைத்தல். 2. அனைத்தையும் விட்டுத் தேவையற்றவனாயிருத்தல். 3. இறப்புக்கு எப்பொழுதும் தயாராய் இருத்தல். 4. மக்களுடன் உரையாடுவதைக் குறைத்துக் கொண்டு, இறைவனுடன் உரையாடுவதை அதிகப்படுத்திக் கொள்ளல் ஆகியவையாம்.

இறை நம்பிக்கையாளரின் பண்பு. 1. ஒருவனுக்கு ஊதியத்தை வழங்காவிட்டாலும், அவனுக்கு இழப்பு ஏற்படுத்தாதிருத்தல். 2. ஒருவனை மகிழ்ச்சியுறச் செய்யாவிட்டாலும், அவனைச் சினமுறச் செய்யாதிருத்தல். 3. ஒருவனைப் புகழாவிட்டாலும், அவனைப் பற்றிப் புறம் பேசாதிருத்தல் ஆகியவையாம்'' என்று எடுத்துரைத்தனர்.

''அறிவாளர்கள் மூன்று வகைப்படுவர். 1. உலகம் அவர்களை உதறித்தள்ளுமுன், உலகை அவர்கள் உதறித் தள்ளி விடுவர். 2. புதைகுழிக்குச் செல்லுமுன், புதைகுழி செல்லத் தயாராயிருப்பர் 3. இறைவனைச் சந்திக்குமுன் அவனுடன் திருப்தியுற்ற நிலையில் இருப்பர்'' என்றும் அவர்கள் இயம்பினர்.

வலிமார்களால் அற்புதங்கள், மெய்மறந்து இறை நினைவில் மூழ்கி, இறை போதையில் இருக்கும் பொழுது தான் நிகழ்த்தப் பெறுகின்றன. நபிமார்களால் தன் உணர்வோடு இருக்கும் பொழுது நிகழ்த்தப் பெறுகின்றன என்று அவர்கள் கருத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு ஒரு சின்னஞ்சிறு மகள் இருந்தாள். ஒரு நாள் அச்சிறுமி தன் அன்னையிடம் 'என்னவாவது தா அம்மா' என்று கேட்ட பொழுது, ''நீ அதனை இறைவனிடமே கேள்'' என்று கூறினார் அன்னை. அதற்கு அச்சிறுமி 'உலகாயுதத் தேவைகளை இறைவனிடம் கூறி முறையிட எனக்கு நாணமாக உள்ளது. நீ ஏதேனும் தந்தால் கூட, அதுவும் அவன் தந்தது தானே. அவன் எனக்கெனப் பங்கிட்டு அளித்த பங்கு தானே'' என்று பதிலிறுத்தாள் அவள்.

யஹ்யா இப்னு மஆத்(ரஹ்) அவர்களுக்கு ஓர் உடன் பிறந்தார் இருந்தார். அவர் மக்கா சென்று கஃபாவின் அண்மையில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி, ஆங்கு வாழ்ந்து வந்தார். அங்கிருந்து அவர் தம் அண்ணனுக்குப் பின்வருமாறு மடல் எழுதினார்:

அன்புள்ள அண்ணன் அவர்களுக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும்.

நான் நலமாக உள்ளேன். நான் இவ்வுலகில் மூன்று வேணவாக் களைப் பெற்றிருந்தேன். அவற்றில் இரண்டை எய்தப் பெற்றேன். இன்னும் ஒன்றே ஒன்று தான் எஞ்சியுள்ளது. அதனையும் நான் எய்தப் பெற வேண்டுமென்று தாங்கள் இறைவனிடம் இறைஞ்சுங்கள். முதலாவதாக, நான் இறைவனிடம் மண்ணகத்திலே மிகவும் புனிதமான இடத்தில் என்னுடைய இறுதி நாட்களைக் கழிக்கப் பேரருள் பாலிக்க வேண்டும் என்று இறைஞ்சினேன், அவனும் பேரருள் பாலித்தான். அதன் காரணமாக மக்கா வந்தடைந்து, இறை இல்லத்தின் அண்மையில் என்னுடைய எஞ்சிய நாட்களைக் கழிக்கும் நற்பேறு பெற்றுள்ளேன். இரண்டாவதாக, நான் இட்ட பணிகளைச் செய்யவும், எனக்கு 'உளூ'ச் செய்யத் தண்ணீர் கொண்டு வந்து வைக்கவும் எனக்கு ஓர் ஊழியனைத் தந்தருள் என்று இறைஞ்சினேன். அவ்வாறே எனக்கு இப்பொழுது ஊழியம் புரிய ஓர் அடிமைப் பெண் கிடைத்துள்ளாள். மூன்றாவதாக, நான் இறப்பதற்கு முன் தங்களைப் பார்த்துவிட்டு இறக்க வேண்டுமென்று விரும்பினேன்; விரும்புகிறேன். அவ்விருப்பத்தையும் இறைவன் என் வாணாளிற்குள் வழங்கிவிட வேண்டுமென்று அவனிடம் இறைஞ்ச வேண்டுகிறேன்.

தம்பியின் இம்மடல் கண்டதும் அவர்கள் பின்வருமாறு மறு மடல் தீட்டினர்:

''தம்பி! வ அலைக்கு முஸ்ஸலாம். உன்மடல் கிடைத்தது. நீ புனிதமான இடத்தில், உன் இறுதி நாட்களைக் கழிக்க விரும்பியதாகவும், அவ்விதமே மக்கமா நகர் சென்றடைந்து இறை இல்லத்தின் அண்மையில் வாழ்ந்து வருவதாகவும் எழுதி இருந்தாய். நீ உண்மையில் மேலான மனிதனாகி விட்டால், நீ எங்கு வேண்டுமானாலும் வாழ்ந்து வரலாம். ஓர் இடம் மாண்புறுவது, அதில் வாழ்ந்து வரும் மனிதர்களாலேயன்றி வேறில்லை.

''உனக்கு ஊழியம் புரிய ஒருவர் வேண்டுமென்று நீ நெடுநாட்களாக இறைவனை வேண்டி வந்ததாகவும், இறைவன் உனக்கு ஊழியம் புரிய ஓர் அடிமைப் பெண்ணைத் தந்தருளியதாகவும் கூறியுள்ளாய். உண்மை யில், நீ ஓர் உண்மையாளனாகவும், பரோபகாரியாயும் இருந்திருப்பின், இறைவனுடைய அடிமையை இறைவனுக்கு ஊழியம் செய்வதை விட்டும் தடுத்து உனக்கு ஊழியம் புரியுமாறு செய்திருக்க மாட்டாய். உனக்கே நீ ஊழியனாக இருப்பதற்கு மாறாக, மற்றொருவனுக்கு எசமானனாக இருக்க விரும்புகின்றாய். எசமானத்துவம் இறைவனின் தனிப்பெரும் பண்பாகும். அடிமைத் தனமே மனிதத்துவமாகும். இறைவனின் அடிமை ஒருவன், இறைவனுக்குரிய இடத்தை ஆக்கிர மித்துக் கொள்ள விரும்பின், அவன் தன்னை ஒரு ஃபிர்அவ்னாக ஆக்கிக் கொள்வானேயன்றி வேறில்லை.

இறுதியாக, நீ என்னைக் காண ஆவலாயிருப்பதாக எழுதியுள்ளாய். உண்மையில் நீ இறைவனை நன்கு அறிந்திருப்பின், நீ என்னை நினைவு கொண்டே இருந்திருக்க மாட்டாய். எனவே நீ உன்னுடைய அண்ணனின் நினைவே உனக்கு வரா வண்ணம் இறைவனுடன் தொடர்பு கொள் வாயாக! அவ்வித நிலையை ஒருவன் எய்தப் பெறின், அவன் தான் பெற்ற அருமை மகனையே இறைவனுக்குப் பலி கொடுக்க வேண்டி இருக்கும். அவ்விதமாயின் அண்ணன் எம்மாத்திரம்? நீ இறைவனைக் கண்டு கொள்வாயாயின், நான் தான் உனக்கு எம்மாத்திரம்? நீ இறைவனைக் கண்டு கொள்ளவில்லையாயின் என்னால் தான் உனக்கு என்ன பயன் ஏற்படப் போகிறது? ஒன்றுமில்லை.''

இவ்வாறு மடல் தீட்டிய யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள், அல்லும் பகலும் இறைவனையே நினைத்து, இறைவனுக்காகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டு , '' நான் தங்களை எங்கு தேடுவது?'' என்று வினவினர். அதற்கு அண்ணலார் ''அபூ ஹனீஃபாவின் ஃபிக்ஹில்'' என்று சுருக்கமாகப் பதில் கூறினர். அதிலிருந்து அபூஹனிஃபா (ரஹ்) அவர்களின் ஃபிக்ஹை மிகவும் பேணுதலாகப் பின்பற்றி வந்தார்கள் அவர்கள்.

அவர்கள் இறைவனின் நல்லடியார்களுக்கு உதவுவதையே தங்களின் நல்லியல்பாகக் கொண்டு, மார்க்கப் போர் புரிபவர்களுக்கும், ஹஜ்ஜு செய்ய விரும்புபவர்களுக்கும், ஏழைகளுக்கும், கல்வியாளர்களுக்கும், ஸூஃபிகளுக்கும் தாராளமாக வாரி வாரி வழங்கியதன் காரணமாக அவர்களுக்கு ஓரிலட்சம் திர்ஹம் வரைக் கடன் ஏற்பட்டு விட்டது. கடன் தந்தவர்களோ கடனைக் கேட்டுப் பெரிதும் நெருக்கிக் கொண்டிருந் தார்கள். அதன் காரணமாக அவர்களின் உள்ளம் துன்பத் தீயில் கிடந்து துடிதுடித்தது.

இக்காலை மற்றோரிரவு அவர்கள் அண்ணலெம்பெருமான் (ஸல்) அவர்களைக் கனவில் காணப்பெறும் நற்பேறு பெற்றனர். அப்பொழுது அண்ணலார், அவர்களை நோக்கி, ''யஹ்யா! கவலற்க. உம்முடைய கவலை எனக்குப் பெரிதும் மனவேதனையை வழங்குகிறது. நீர் குராஸான் செல்வீராக! அங்கு ஒரு மங்கை நல்லார் உம்முடைய ஓரிலட்சம் திர்ஹம் கடனைத் தீர்ப்பதற்காக மூன்று இலட்சம் திர்ஹங்களை வைத்துள்ளார்'' என்று அமுதவாய் விண்டனர்.

''நாயகமே! அவ்வூரின் பெயர் என்ன? அம்மங்கை நல்லாரின் திருப்பெயர்தான் யாது?'' என்று யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் அண்ணல் அவர்களை வினவ, 'நீர் ஒவ்வோர் ஊராகச் சென்று பிரசாரம் செய்து கொண்டு செல்வீராக! உம் பேச்சு துயருற்ற மக்களின் உள்ளங் களுக்கு அருமருந்தென உதவும். நான் உம் கனவில் திருத்தோற்றம் வழங்கியது போன்று, இதோ அம்மங்கை நல்லாரின் கனவிலும் திருத்தோற்றம் வழங்கப் போகின்றேன்'' என்று கூறி மறைந்தனர்.

பொழுது புலர்ந்ததும், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் திருக்கட்டளையைச் சிரமேற்றாங்கி நீஷாப்பூர் புறப்படடனர் யஹ்யா. நீஷாப்பூர் வந்தடைந்த அவர்கள், ஆங்கு வாழ் மக்களை ஒருங்கழைத்து, ''நீஷாப்பூர் வாழ் மக்களே! அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் ஆணைக்கிணங்கி நான் இங்கு வந்துள்ளேன். ஒருவர் உன் கடனைத் தீர்ப்பார் என்று அவர்கள் என் கனவில் கூறி மறைந்தார்கள். என் பேச்சில் ஒருவித அழகு, கவர்ச்சி இருப்பதை நான் நன்கறிவேன். ஆனால் அவை என் கடன் சுமை காரணமாகத் திரையிடப் பெற்றுள்ளன'' என்று கூறினார்கள்.

அப்பொழுது ஒருவர் எழுந்து, ''நான் தங்களுக்கு ஐம்பதாயிரம் திர்ஹம் தருகிறேன்'' என்று கூறினார்.

உடனே மற்றொருவர் எழுந்து, ''நான் நாற்பதாயிரம் திர்ஹம் வழங்குகிறேன்'' என்று மொழிந்தார்.

அது கேட்ட யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள், "தங்களின் உதவியை நான் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. காரணம், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் என் கனவில் திருத்தோற்றம் வழங்கி, என் கடனை ஒருவரே தீர்ப்பார் என்று கூறினரேயன்றி, பலர் தீர்ப்பர் என்று கூறவில்லை" என மொழிந்து விட்டுத் தம் பேச்சைத் தொடர்ந்தார்கள். முதல் நாள் அன்று அவர்களின் பேச்சைக் கேட்டு எழுவர் மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்து இறப்பெய்தினர்.

நீஷாப்பூரில் தாம் கோரி வந்த எண்ணம் நிறைவேறாததைக் கண்ட யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் பல்க் சென்றனர். அந்நகர மக்கள் ஆங்கு சில நாட்கள் தங்கித் தங்களுக்கு அறிவுரை வழங்குமாறு வேண்ட, அவர்களும் அதற்கு இணங்கி அவ்வாறே செய்தனர். அவர்கள் தம் பேச்சில் வறுமையை வெறுத்து, வளவாழ்வைப் பற்றிப் பேசியது ஆங்கு வாழ்ந்து வந்த ஒரு ஷைகிற்குப் பிடிக்கவில்லை. "இறைவன் அவருக்குப் பேரருள் பாலிக்காதிருப்பானாக!" என்று இயம்பினார்.

யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் பல்க் மக்கள் தங்களுக்கு வழங்கிய நன்கொடைகளையெல்லாம் ஏற்று ஆங்கிருந்து புறப்பட்ட பொழுது, வழியில் அவர்களைக் கொள்ளைக்காரர்கள் வழிமறித்து அவர்கள் கொண்டு சென்ற பொருள்களையெல்லாம் கொள்ளை கொண்டனர். அந்த ஷைகின் முனிவால் தான் அவர்களுக்கு இவ்வாறு நிகழ்ந்ததென மக்கள் பேசிக் கொள்ளலாயினர்.

இதன்பின் அவர்கள் மர்வ் வழியாக ஹிரத்தை அடைந்து, ஆங்கு வாழ்ந்து வந்த மக்களிடம் தாம் கண்ட கனவை விண்டனர். அது கேட்ட அந்நாட்டு அரசிளங்குமரி, "அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் கனவில் கூறிச் சென்றது போன்று, என் கனவிலும் கூறிச் சென்றார்கள். அப்பொழுது நான் அவர்களை நோக்கி, 'நாயகமே! நான் அவரிடம் செல்லவா?' என்று வினவிய பொழுது, 'வேண்டாம். அவர் உம்மிடம் வருவார்' என்று மொழிந்து விட்டு மறைந்தார்கள். எனவே தங்களின் வரவை எதிர்பார்த்து நான் காத்திருந்தேன். என் தந்தை, எனக்குச் சீதனமாகத் தந்த பொன்னாலும், வெள்ளியாலும் ஆன பொருள்கள் மூன்று இலட்சம் திர்ஹம் மதிப்புடையவை என் கைவசம் உள்ளன. அவை அனைத்தையும் நான் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்குகிறேன். அவற்றிற்குப் பகரமாகத் தாங்கள் இங்கு நான்கு நாட்கள் தங்கிச் சொற்பொழிவாற்றினால் போதும்" என்று அவர்களுக்குச் செய்தி அனுப்பினார்.

அவ்வாறே யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் ஆங்கு நான்கு நாட்கள் தங்கிச் சொற்பொழிவாற்றினர். முதல் நாள் அவர்களின்

சொற்பொழிவைக் கேட்டு மூர்ச்சையுற்றுப் பதின்மர் இறந்தனர். இரண்டாம் நாள் இருபத்தைந்து பேர் இறந்தார்கள். மூன்றாம் நாள், நாற்பது பேர் இறந்தனர். நான்காம் நாள், கூட்டத்தில் இறப்பெய்தியவர் களின் எண்ணிக்கை எழுபதை எட்டியது.

ஐந்தாம் நாள் புலர்ந்தது. யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் தம் ஊர் புறப்படத் தயாரானார்கள். அப்பொழுது அவ்இளவரசி தாம் வாக்களித்த வண்ணம் தம் சீதனப் பொருள்கள் அனைத்தையும் அவர் களின் காலடியில் கொண்டு வந்து குவித்தார். அவற்றை ஏழு ஒட்டகை களின் மீது ஏற்றிக் கொண்டு, அவர்கள் ஹீரத்தை விட்டும் புறப்பட் டார்கள்.

ஒட்டகைகள் பாலையின் நடுவே நடந்து கொண்டுள்ளது. அப் பொழுது அவர்களின் மகன் அவர்களை நோக்கி, ''அப்பா! இப்பொருள் களையெல்லாம் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று வினவினார். அடுத்த கணம் அவர்களின் திருவாயிலிருந்து, ''கடன்காரர்களிடம் கொடுத்து விட்டு, மறு வேலை பார்ப்பேன்'' என்று மறுமொழி சடாரென வெளிவந்தது. ''அவ்விதமாயின் தாங்கள் என்னை ஓட்டாண்டியாக்க எண்ணி விட்டீர்களா?'' என்று வெகுண்டுரைத்தார் அவர். யஹ்யா இப்னு மஆத் (ரஹ்) அவர்கள் யாது கூறுவதென அறியாது இறைவனின் வழிகாட்டுதலை எதிர் பார்த்த வண்ணம் தலையைக் கீழே குனிந்தனர். அப்பொழுது திடீரென ஒரு பாறை அவர்கள்மீது வந்து விழுந்தது. ''அப்பொருள்களைக் கடன்காரர்களிடம் கொடுத்துவிடு'' என்று அவர்கள் அலறினார்கள். அடுத்த கணம் அவர்களின் உயிர், அவர்களின் உடலை விட்டுப் பிரிந்தது. மக்கள் அவர்களின் வெற்றுடலை நீஷாப்பூருக்கு எடுத்துச் சென்று, ஆங்கு நல்லடக்கம் செய்தார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 258- ஆம் ஆண்டிலாகும்.

இவர்களைப் பற்றி ஆன்மீக ஞானிகள் கூறுங்கால், 'இவர்கள் தம் வாணாளில் ஒரு பெரும் பாவமும் செய்ததில்லை. பிறர் எண்ணிக் கூடப் பார்க்க இயலா வண்ணம் இவர்கள் இறை பாதையில் பெரு முயற்சி செய்தார்கள்'' என்று கூறினர். ஒரு மனிதரின் மாண்பினை எடுத்துரைக்க இதைவிட நற்சான்று வேறு என்ன வேண்டியுள்ளது?



## 4. அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்)

கொல்லர் ஒருவர் தம் கீழ்ப் பணியாற்றி வந்த ஒரு பணிப்பெண் மீது அடங்காக் காதல் கொண்டார். அக்காதல் நெருப்போ அவருடைய உள்ளத்தில் ஒரு கணமும் நீங்காது தகித்துக் கொண்டிருந்தது. அதன் கொடுமை தாங்க இயலாது அவர் தவித்துக் கொண்டிருந்தார். அவர் தம் உள்ளத்தைத் திறந்து தம் நண்பர்களிடம் காட்டினார். அதுகண்டு அவர்கள் திடுக்குற்றார்கள். ''நம்ஊரின் அண்மையிலுள்ள ஒரு சிற்றூரில் யூத மந்திரவாதி ஒருவர் உள்ளார். அவரிடம் சென்று உம் நிலையை எடுத் துரையும். அவர் ஆவன செய்வார்'' என்று அவர்கள் கூறினார்கள். அதற்கு அவர் இசைந்தார்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் அவர் அந்த யூத மந்திரவாதியிடம் சென்று, தம் நிலையை எடுத்துரைத்தார். அது கேட்ட அந்த மந்திரவாதி, ''முதலில் நாற்பது நாட்களுக்கு நாம் சொல்வது போல் செய்ய வேண்டும். அதன் பின் நாம் அதற்காவன செய்வோம்'' என்றார்.

''நல்லது; அவ்விதமே செய்கின்றேன்'' என்று கூறினார் அக்கொல்லர்.

''சரி; நீர் நாற்பது நாட்களுக்குத் தொழக் கூடாது. இறை கட்டளைக்கு எக்காரணத்தைக் கொண்டும் அடிபணியக் கூடாது. இறைவனின் திருப் பெயரைக் கூட உம் நாவால் உச்சரிக்கக் கூடாது. எந்த நல்லெண்ணத் தையும் எண்ணவும் கூடாது. அவ்விதம் செய்வீராயின் நாம் அதன்பின் மந்திரம் செய்து உம் மனநோயை மாற்றுவோம்'' என்று கூறினார்.

அவ்வாறே அக்கொல்லர் செய்தார். நாற்பது நாட்களுக்குப் பின் அவர் அந்த மந்திரவாதியை அணுகிய பொழுது அவர், இவருக்கு ஒரு தாயத்து எழுதிக் கொடுத்து அதனை அணிந்து கொள்ளுமாறு கூறினார். அவரும் அவ்விதமே அணிந்து கொண்டார். எனினும் பலன்தான் ஒன்று மில்லை. முன்பு போலவே அவருடைய உள்ளத்தில் காதல் நெருப்பு கொழுந்து விட்டு எரிந்து, அவரை நரக நெருப்பின் பால் இழுத்துக் கொண்டிருந்தது.

இதனை அவர் மந்திரவாதியிடம் கூறியபொழுது, ''நீர் ஏதோ நன்மையான செயல் ஆற்றி இருக்க வேண்டும். எனவே தான் என்னுடைய தாயத்தால் உமக்கு யாதொரு நற்பலனும் ஏற்படாது போய் விட்டது. இல்லையெனில் உமக்கு நிச்சயமாக நற்பலன் ஏற்பட்டிருக்கும்'' என்று கூறினார் அவர்.

''நான் நாற்பது நாட்களாக யாதொரு நற்செயலும் ஆற்றவில்லையே. இன்று இங்கு வந்து கொண்டிருக்கும் பொழுது, வழியில் ஒரு கல் கிடப்பதைக் கண்டேன். அதில் எவரேனும் தடுக்கி விழுந்து விடக்கூடாது என்பதற்காக அதனை அப்புறப்படுத்திவிட்டு வந்தேன், அவ்வளவு தான்'' என்று கூறினார் அக்கொல்லர்.

அதுகேட்ட அம்மந்திரவாதி, அவரை ஒரு முறைக்கு இருமுறை ஏறிட்டுப் பார்த்து விட்டு, ''இறைவனை நீர் மிகவும் சோதிக்கிறீர். நாற்பது நாட்களாக நீர் அவனுக்கு மாறு செய்த போதினும், அவன் நீர் செய்த ஒரு சிறு நன்மையைக் கூட வீணாக்க விரும்பவில்லை'' என்று கூறினார்.

அந்த யூதரின் இச்சொற்கள் அக்கொல்லரின் உள்ளத்தில் ஒரு மாபெரும் மாறுதலை உண்டுபண்ணியது. அக்கணமே அவர் ஒருபுது மனிதராக, மனிதப் புனிதராக மாறினார். காதல் நோய் இருந்த இடத்தை, இறையச்சம் கௌவிப் பிடித்து, அவரைச் சுவனப் பெருவாழ்வை நோக்கி இழுத்துச் சென்றது.

இதன்பின் தம் பட்டறை மீண்ட அபூ ஹஃப்ஸ் அம்ர் இப்னு ஸல்மா அல்ஹத்தாத் என்ற அந்தக் கொல்லர், நாள்தோறும் ஒரு தீனார் பொருளீட்டி, அதனை இரவில் ஏழைகளுக்கு அறம் செய்து வந்தார்கள். சிலபொழுது விதவைகளின் குடிசை வாசலில் எவருக்கும் தெரியாமல் சென்று அதனைப் போட்டுவிட்டு வருவார்கள். இதன்பின் 'வித்ரு' தொழுகை தொழும் நேரத்தில் மக்களிடம் சென்று பிச்சை ஏற்று, அதைக் கொண்டு தங்களின் நோன்பு திறப்பார்கள். சிலபொழுது குப்பைத் தொட்டியில் கிடக்கும் ரொட்டித் துண்டுகளைப் பொறுக்கி எடுத்து உண்டு, தங்களின் பசிதீர்த்துக் கொள்வார்கள். இவ்வாறு சில காலம் இருண்டோடியது.

ஒருநாள் அவர்கள் தம் பட்டறையில் வீற்றிருந்த பொழுது, ஒரு குருடர், ''எடுத்தெறியப்பட்ட ஷைத்தானை விட்டும் நான் காவல் தேடுகிறேன். அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் துவங்குகின்றேன். அன்றி, அவர்கள் எதிர்பார்க்காததெல்லாம் அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளியாகும்,'' (39:47) என்ற இறை வசனத்தை ஓதிச் செல்வதைக் கேட்டதும் அவர்கள் மயக்க முற்றுக் கீழே

சாய்ந்தார்கள். சற்று நேரம் கழித்து அவர்கள் மூர்ச்சை தெளிந்ததும், அவர்கள் உலையில் காய்ந்து கொண்டு இருந்த இரும்புக் கம்பியைக் கிடுக்கியைக் கொண்டு எடுக்காது, தம் கையை உள்ளே விட்டு எடுத்தார்கள். அதன்பின் அதனை வைத்துச் சம்மட்டியால் அடித்துச் செப்பனிடுமாறு தம் ஊழியர்களுக்கு ஆணையிட்டார்கள். அப்பொழுது அவர்களின் கை, பழுக்கக் காய்ந்த அந்த இரும்பைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தது. இதைக் கண்ட அவர்களின் ஊழியர்களுக்கு, அவர் களின் கண்களையே நம்ப இயலவில்லை. ஆனால் அவர்களோ, 'அடி யுங்கள்; அடியுங்கள்' என்று கத்தினார்கள். ''எசமானே! எதை அடிப்பது? எங்கே அடிப்பது? இரும்போ தங்களின் கையில் உள்ளதே. செப்பனிடப் பட்டு ஒழுங்காக உள்ளதே'' என்று கூறினார்கள். இப்பொழுது தான் அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களுக்குத் தன்னுணர்வு ஏற்பட்டது. பழுக்கக் காய்ந்த இரும்பு அவர்களின் கையில் இருப்பதைக் கண்டார்கள். அது அவர்களின் கையைச் சுட்டெரிக்காததையும் கண்டார்கள். அவர்கள் எதிர்பார்க்காதது அல்லாஹ்விடமிருந்து அவர்களுக்கு வெளியானதை யும் கண்டார்கள். உடனே அவர்களுக்கு மெய்யொளி தென்பட்டது. கையிலிருந்த இரும்பைத் தூக்கி எறிந்து கடையையும் எக்கேடு கெட்டும் போகட்டும் என்று தொலைத்துக் கட்டிவிட்டுக் கானகம் நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்.

இதைப் பற்றி அவர்கள் பிற்காலத்தில் கூறுங்கால், ''கொல்லத் தொழிலை விட்டுத் தொலைக்க நான் நெடுநாட்களாக ஆவலுற்றேன். முடியவில்லை. பின்னர் இச்சம்பவம் நிகழ்ந்து என்னை விட்டும் என் தொழிலை விட்டும் என்னைப் பியத்தெறிந்தது. நான் அத்தொழிலை விட்டுத் தொலைக்க முன்னர் முயன்ற போதினும் முடியாது போய் விட்டது. இறுதியாக, அத்தொழிலே என்னை விட்டும் தொலைந்தது'' என்று எடுத்துரைத்தார்கள்.

இதன்பின் தனித்திருந்து இறைவனை வழிபட, வழுத்தத் துவங்கிய அபூ ஹஃப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்கள், விரைவில் இறை காதலில் மூழ்கித் திளைத்த மாபெரும் இறை நேசச் செல்வராக ஆயினர்.

ஒரு நாள் அவர்கள், ஒருவழியே நடந்து சென்று கொண்டிருந் தார்கள். அப்பொழுது பைத்தியக்காரர் ஒருவர் அவர்களிடம் வந்து, தம் கழுதை காணாமல் போய்விட்டது என்றும், அதைத் தவிர தம்மிடம் யாதோர் உடைமையும் இல்லை என்றும் கூறினார். அப்பொழுது அவர்கள் தம் இருகரம் ஏந்தி ''இறைவனே! அவரின் கழுதை திரும்பி வரும்வரை நான் இவ்விடத்தை விட்டும் அகல மாட்டேன்'' என்று கூறி

இறைஞ்சினார்கள். அவர்கள் இவ்வாறு கூறி இறைஞ்சிக் கையைக் கீழே போடு முன் காணாமல் போன கழுதை அங்கு வந்து சேர்ந்து விட்டது.

இதன் பின் மக்கா சென்று ஹஜ்ஜுக் கடனை ஆற்ற விரும்பிய அவர்கள், பக்தாது மாநகர் வந்தபொழுது, ஆங்கிருந்த சூஃபிகளெல்லாம், "குராஸானின் மாபெரும் ஷைகுக்கு அரபி மொழி தெரியவில்லையே: மொழி பெயர்ப்பாளரின் உதவியினாலன்றோ அவர் எங்களுடன் உரையாட வேண்டியுள்ளது. இஃதென்ன கேவலம்! இஃதென்ன இழிவு" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

சிறிது நேரம் கழிந்தது. அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் பக்தாது வந்துள்ள செய்தி அறிந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள், அவர்களைச் சந்தித்து நல்வரவு கூறிவருமாறு, தம் மாணவர்கள் சிலரை அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அவர்களுடன் அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் தூய அரபியில் பேசியவராகக் கண்டதும், அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. என்ன! அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்களுக்கு அரபிமொழி தெரியாது என்று பேசிக்கொண்டார்களே. அவர்களே போன்று நம்மால் கூடத் தூய அரபிமொழி பேசத் தெரியாது போலிருக்கிறதே, என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளலாயினர். இஃதென்ன வேடிக்கை!

இதன்பின் அவர்களைச் சந்தித்து அளவளாவுவதற்கு பக்தாதில் வாழ்ந்து வந்த சூஃபிகள் வந்தனர். அவர்கள் அனைவரும் அவர்களைச் சூழவீற்றிருந்து, மெய்ஞ்ஞானம் பற்றிப் பல கேள்விகளைக் கேட்டனர். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள்... அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை நோக்கி, "ஒருவன் இறை காதலில் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுதல் என்றால் என்ன?" என்று வினவினர். "தங்களுக்கே அதைப் பற்றி நன்றாகத் தெரியுமே. தாங்களே அதைப் பற்றிக் கூறுங்களேன்" என்றனர் அபூ ஹஃப்ஸ். அதுகேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், "உண்மையான அர்ப்பணம் என்பது, ஒருவன் தன்னை அர்ப்பணம் செய்ததாகக் கருதாதிருப்பதும், தன்னால் தான் அச்செயல் ஆனது என்று எண்ணாமலிப்பதுமாகும்" என்று கூறினர். "நன்று உரைத்தீர்" என்று நவின்ற அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், "ஆனால் என்னுடைய கண்ணோட்டத்தில், ஒருவன் தன்னை அர்ப்பணம் செய்து கொள்வதென்றால், மற்றவர்களுடன் நீதியாய் நடந்து கொள்வதும், பிறர் தம்முடன் நீதியாய் நடந்து கொள்வதை எதிர்பாராதிருப்பதுமாகும்" என்று கூறினர். அப்பொழுது ஜுனைத் (ரஹ்)அவர்கள் தம் மாணவர்களை நோக்கி அவ்விதமே நீங்கள் செயலாற்றுங்கள்" என்று கூறினர். அதற்கு அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், "சொல்வது எளிது,' செயலற்றுவது சிரமமானது" என்று கூறினர். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம்

மாணவர்களை நோக்கி, ''எழுந்திருங்கள். நாம் செல்வோம். தம்மை இறைவனளவில் அர்ப்பணம் செய்துகொள்வதில் அபூ ஹஃப்ஸ், ஆதம்(அலை) அவர்களையும், அவர்களின் மக்கள் அனைவரையும் மிகைத்துவிட்டார்'' என்று இயம்பினர்.

அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் எப்பொழுது பார்த்தாலும் தம் மாணவர்களின் முன்னிலையில், ஓர் அரசன் தன் குடிமக்களின் முன்னிலையில் எவ்வாறு கம்பீரமாக வீற்றிருப்பானோ அவ்வாறு வீற்றிருப்பார்கள். அவர்களின் மாணவர்கள் அவர்களின் முன்னிலையில் கைகட்டி வாய்பொத்தி நின்று கொண்டிருப்பர்கள். அவர்கள் அமரச் சொன்னாலொழிய, அம்மாணவர்கள் அவர்களின் முன் அமர்வதில்லை. இதற்கான காரணத்தை ஜுனைத் (ரஹ்) அவர்கள் அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களிடம் வினவிய பொழுது, ''நான் இத்தகு மரியாதைகளை யெல்லாம் அணுவத்தனையும் விரும்புகின்றேனில்லை. எனினும், அவர்கள் மறுமையில் இறைவனின் முன் ஒழுங்காகப் பணிபுரிவதற்காக நான் இங்கு இத்தகு பயிற்சியை வழங்குகிறேன்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

அம்மாணவர்களில் ஒருவர் மிகவும் பயபக்தியுடன் அவர்களிடம் ஒழுகி வருவதைக் கண்டு வியப்புற்ற ஜுனைத் (ரஹ்) அவர்கள், அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை நோக்கி, ''எத்தனை ஆண்டுகளாக அவர் தங்களின் ஊழியத்தில் உள்ளார்?'' என்று வினவினர். ''பத்தாண்டுகளாக'' என்று பதிலுரைத்தார்கள் அவர்கள். ''அவர் மிகவும் பயபக்தியுடைய வராகவும் பண்பாடுடையவராகவும் காணப்படுகிறார். மிகவும் நல்ல இளைஞர்'' என்று பாராட்டுமொழி பகர்ந்தார்கள் ஜுனைத். அதுகேட்ட அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், ''ஆம்; இவர் சூஃபிகளுக்காகப் பதினேழாயிரம் தீனார்கள் செலவழித்துள்ளார். மற்றுமோர் பதினேழா யிரம் தீனார்களைப் பிறரிடம் கடன் வாங்கி சூஃபிகளுக்காகச் செல வழித்துள்ளார். எனினும் அவர் என்னிடம் இதுவரை ஒரு கேள்விகூடக் கேட்டது கிடையாது' என்று கூறினார்கள்.

ஒருநாள் ஒருவர் அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை அணுகித் தமக்கு அறிவுரை வழங்குமாறு வேண்டிய பொழுது, ''எவன் குர்ஆனின் படியும், ஹதீஸின் படியும் செயலாற்றவில்லையோ, எவன் தன் நஃப்ஸை இழிவாகக் கருதவில்லையோ அவனை ஒரு மனிதனாகக் கருதாதே'' என்று அவர்கள் கூறினர்.

அது கேட்ட அவர், அவர்களை நோக்கி, ''பேசுவது நல்லதா? வாய் மூடி இருப்பது நல்லதா?'' என்று வினவினார். அதற்கு அவர்கள், ''நூஹ் (அலை) அவர்களுடைய வயதைப் போன்று இரு மடங்கு வயது

ஒருவனுக்கு வழங்கப்பட்ட போதினும், அவன் வாய் மூடி இருப்பதே நல்லது'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

மீண்டும் அவர் அவர்களை நோக்கி, ''ஏன் இவ்வுலகை வெறுக்கிறீர்கள்?'' என்று வினவியபொழுது, ''அது ஒவ்வொரு நிமிடமும் மனிதனைப் பாவச் சுழியில் சிக்க வைத்துக்கொண்டுள்ளது. எனவே நான் அதனை வெறுக்கிறேன்'' என்று அவர்கள்பதில் கூறினார்கள்.

''வலி யார்?'' என்று அவர் வினவிய பொழுது, ''எந்த நேரமும் தன் ஆன்மாவை இறைத் தியானத்தில் வைத்திருப்பவன்தான்'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

''கஞ்சன் யார்?'' என்று அவர் கேட்டபொழுது, ''தன் நஃப்ஸிற்கு மிகவும் அவசியமாக உள்ள தேவைகளைக் கூடப் பண ஆசையின் காரணமாக வெறுப்பவன்'' என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

''கர்வி யார்'' என்று அவர் வினவிய பொழுது, ''எந்தச் சமயத்திலும் தன் நஃப்ஸைத் தாழ்மைப்படுத்தாதிருப்பவன்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

''இறையச்சம் என்றால் என்ன?'' என்று அவர் கேட்ட பொழுது, ''அதுவே இதயத்தின் விளக்காகும். இறைவன் தன்னை ஏற்றுக் கொள்வான் என்று எண்ணித் தவறு செய்து கொண்டே இருப்பவன் அழிந்து விடுவான்'' என்று அவர்கள் இயம்பினார்கள்.

''பக்கீர் என்றால் யார்?'' என்று அவர் வினவிய பொழுது ''வாங்குவதைவிடக் கொடுப்பதில் அதிக இன்பம் கொள்ளாதவன் பக்கீர் அல்ல. கொடுத்துவிட்டுத் திரும்பப் பெறாதவனே உண்மையான ஆண் மகன். கொடுத்ததைத் திரும்பப் பெறுபவன் பேடியேயாவான். வாங்குவதேயொழிய கொடுக்காதவன் தன் வாயில் கௌவியதை எக்காரணத்தை முன்னிட்டும் விடாத ஈக்கு நிகராவான்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதன்பின் அவர்கள் பக்தாது மாநகரம் விட்டு நீங்கி மக்கமா நகரம் நோக்கித் தம் மாணவர்களுடன் அடி எடுத்து வைத்து நடக்கலானார்கள். அப்பொழுது அவர்கள் வழியில் ஓரிடத்தில் தங்கிய காலை, ஒரு மான் வந்து அவர்களின் மடியில் தன் தலையை வைத்துப் படுத்தது. அவர்கள் அதனைத் தடவிக் கொடுத்தார்கள். அது கண்டு வியப்புற்ற அவர்களின் மாணவர்கள், ''இறைவன் தங்களுக்கு இத்தகு தகுதியைத் தந்திருக்கும் பொழுது, தாங்கள் ஏன் இறைவனிடம் அழுது பிரலாபித்து முறையிட்டுக் கொண்டுள்ளீர்கள்?'' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், ''நாம் இங்கு வந்து சேர்ந்த பொழுது, ஓர் ஆடு கிடைத்தால் நலமாயிருக்குமே, அதனை

அறுத்துச் சமைத்து நானும் என் மாணவர்களும் உண்ணலாமே என்று எண்ணினேன். ஆனால் இதைக் கண்டதும், எனக்குத் திடுக்கம் ஏற்பட்டது. பிர் அவ்னுக்கு இறைவன் மாபெரும் அதிகாரத்தைக் கொடுத்தது, அவனை அழித்தொழிப்பதற்காக இருந்தது போன்று, என்னை அழித்தொழிப்பதற்காக இறைவன் இந்த மானை என்னிடம் அனுப்பி வைத்தானோ என்று அஞ்சுகிறேன்'' என்று அவர்கள் கூறி, அந்தமானை விரட்டி விட்டார்கள்.

அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் மக்கமா நகர் வந்தடைந்த பொழுது, அங்கு ஏழைகள் குழுமி இருப்பதைக் கண்டு அவர்களின் அன்புள்ளம் நைந்துருகியது. எனினும் என் செய்வது? அவர்களின் கையிலோ, அந்த ஏழைகளுக்கு வழங்குவதற்கு யாதொன்றும் இல்லை. அப்பொழுது அவர்களுக்குத் தங்கள் மீதும், தங்களைப் படைத்த இறைவன் மீதும் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. உடனே ஆங்குக்கிடந்த ஒரு கல்லை எடுத்து, ''இறைவனே! உன்னுடைய மகத்துவத்தின் மீது ஆணையாகக் கூறுகின்றேன். நான் அவர்களுக்கு வழங்க நீ எனக்கு ஏதேனும் வழங்காவிடின், உன் இல்லத்திலுள்ள விளக்குகளை எல்லாம் இக்கல்லால் அடித்து நொறுக்கித் துவம்சம் பண்ணி விடுவேன்'' என்று சூளுரை பகர்ந்தார்கள். இவ்வாறு சூளுரை பகர்ந்து விட்டு, கஃபா சென்று, அதனை இடம் சுற்றி வந்தார்கள். என்ன வியப்பு! ஒரு மனிதன் அவர்களிடம் வந்து பொற்காசுகள் நிறைந்த ஒரு பையைக் கொடுத்து விட்டுச் சென்றான். உடனே அவர்கள், அப்பொற்காசுகளை ஆங்குக் குழுமியிருந்த ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

அவர்கள் மக்காவில் தங்கி இருந்தபொழுது, மார்க்க அறிஞர்களின் பேச்சைக் கேட்பதற்காக மக்கள் சாரி சாரியாகச் சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது சிலர், இவர்களையும் ஆங்கு வருமாறு அழைத்தபொழுது, ''நான் ஒரு நபிமொழியைக் கேட்டு, அதன்படி ஒழுக இயலாது முப்பதாண்டுகளாகத் தவித்துக் கொண்டுள்ளேன். அவ்விதமிருக்க மற்றொரு நபிமொழியை நான் என்ன கேட்க வேண்டியுள்ளது?'' என்று அவர்கள் கூறினர். ''அது என்ன நபிமொழி'' என்று அவர்கள் வினவிய பொழுது, ''எது உனக்கு நன்மை பயக்கவில்லையோ அதனை விட்டொழிப்பாயாக என்பதே அந்தநபி மொழி'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

'ஹஜ்' ஜுக் கடமையை ஆற்றிவிட்டுத் தாயகம் திரும்பும் வழியில், அவர்கள் மீண்டும் பக்தாது மாநகரம் வந்த பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்களின் தோழர்கள், அவர்களை வரவேற்று நகருக்குள் அழைத்து வந்தனர். பின்னர் ஜுனைத் (ரஹ்) அவர்களும்,அபூ ஹஃப்ஸ் (ரஹ்)

அவர்களும் சந்தித்துக்கொண்ட பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்கள் அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை நோக்கி, ''தாங்கள் எங்களுக்கு மக்கமா நகரிலிருந்து என்ன அன்பளிப்புக் கொணர்ந்தீர்கள்?'' என்று வினவினார். அதற்கு அவர்கள், பின்வரும் மணிமொழிகளை அன்பளிப்பாக வழங்கினர்.

''தாங்கள், தங்களின் சகோதரர் ஒருவரிடம் ஒரு குறையைக் காணின், அதனை மன்னிப்பதற்காகத் தங்களிடம் ஒரு குறையைக் கண்டு பிடியுங்கள். கண்டுபிடித்து அவருடைய குறையை மன்னித்து விடுங்கள். அவ்விதம் செய்தும் தங்களின் மனம் நிறைவுறவில்லையாயின், அவரிடம் ஒரு நிறையைக் கண்டுபிடித்து அதற்காக அவரை மன்னியுங்கள். அவ்விதம் செய்தும் தங்களின் உள்ளம் அவரை மன்னிக்கவில்லையாயின், நாற்பது தடவை இவ்வாறே செய்து கொண்டே செல்லுங்கள். அவ்விதம் செய்தும், உங்களின் உள்ளம்அவரை மன்னிக்கவில்லையாயின், உங் களையே நீங்கள் பார்த்து 'நீ ஒரு மனிதனா? கல்நெஞ்சக் காதகன். அவரிடம் நாற்பது நிறைகளைக் கண்ட பின்பும், அவரின் ஒரு குறையைப் பெரிது படுத்தி, அவரைத் தண்டிக்க எண்ணுகின்றாயே. சீ! என்னை விட்டுத் தொலைந்து போ' என்று மொழிந்தனர்.

அதுகேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''இத்தகைய ஆன்ம பலம் ஒருவனுக்கு எப்பொழுது தான் வரப்போகிறது?'' என்று தமக்குள்ளே கூறிக் கொண்டார்கள்.

அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் பக்தாதில் தங்கியிருந்த நான்கு மாத காலமும், அவர்கள் ஷிப்லி (ரஹ்) அவர்களின் விருந்தினராகவே இருந்தனர். அக்காலை ஷிப்லி(ரஹ்) அவர்கள் அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களுக்கு ஆற்றிய உபசரிப்பும், விருந்தோம்பலும் சொல்லுந்தரத்த தாயில்லை. ஒவ்வொரு நாளும் புதுப் புது விதமான உணவுகளும், தின் பண்டங்களும் தயாரித்து அவர்களின் முன்வைத்து, ''உண்ணீர், உண்ணீர் என்று உபசரித்து நின்றனர்.

நான்கு மாதங்கள் கழித்து அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் நீஷாப்பூர் புறப்பட்டபொழுது, அவர்கள் ஷிப்லி (ரஹ்) அவர்களை நோக்கி, ''ஷிப்லி அவர்களே! தாங்கள் நீஷாப்பூர் வந்து என் இல்லத்தில் விருந் தினராகத் தங்கி இருக்க வேண்டும். அப்பொழுது நான் உங்களுக்கு உண்மையான விருந்தோம்பல் என்றால் என்ன என்பதைக் காட்டுவேன்'' என்று கூறினர்.

அதுகேட்டு ஷிப்லி (ரஹ்) அவர்கள் சற்றுப் பதற்றத்துடன், ''என்ன செய்தி? ஏதேனும் குறை நிகழ்ந்து விட்டதோ?'' என்று வினவினர்.

"தாங்கள் என்னை உபசரிப்பதற்காக எடுத்துக் கொண்ட சிரமம் இருக்கின்றதே, அதுவே எனக்குப் பெரும் மன வருத்தத்தை வழங்கியது. அதில் தாங்கள் பெரிதும் கடப்புச் செய்துவிட்டீர்கள். ஒருவர் தம்முடைய விருந்தினரைத் தம்மைப் போன்றே கருத வேண்டும். அவரின் வரவைத் தமக்கு ஒரு சுமையாகவும், அவரின் பிரிவைத் தமக்கு ஒரு மகிழ்ச்சி யாகவும் ஆக்கிக் கொள்ளக்கூடாது" என்று கூறினர் அபூ ஹஃப்ஸ்.

இதன்பின் ஷிப்லி (ரஹ்) அவர்கள் தம்முடைய முப்பத்தொன்பது மாணவர்களுடன் நீஷாப்பூர் வந்தபொழுது, அவர்களை அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் அன்போடு உபசரித்து வரவேற்றார்கள். அன்றிரவு அவர்கள் நாற்பத்தொரு விளக்குகளை ஏற்றி அலங்காரம் செய்ததைக் கண்ட ஷிப்லி(ரஹ்) அவர்கள், "எதிலும் கடப்புச் செய்வது கூடாது என்று தாங்கள் கூறவில்லையா? நம் அனைவருக்கும் ஒரு விளக்குப் போதுமான தாயிருக்க, தாங்கள் ஏன் நாற்பத்தொரு விளக்குகளை ஏற்றியுள்ளீர்கள்?" என்று அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை வினவினர். அப்பொழுது அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், "அவ்விதமாயின் அவற்றை அணைத்து விடுங்கள்" என்று அமைதியாகப் பதிலிறுத்தார்கள்.

உடனே ஷிப்லி (ரஹ்) அவர்கள் எழுந்து அவற்றை அணைக்க முற்பட்ட பொழுது, அவற்றில் ஒரு விளக்குத் தவிர மற்றவை அணைத்தும் மங்காது எரிந்து கொண்டிருந்தன. அவர்கள் எவ்வளவோ முயன்றும் அவற்றை அவர்களால் அணைக்க இயலவில்லை.

"ஷைகு அவர்களே! இஃதென்ன வியப்பாக உள்ளது?" என்று அவர்கள் அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்களை வினவினர்.

"இதில் என்ன வியப்பு உள்ளது? விருந்தினர்கள் அல்லாஹ்வின் தூதர்களாவர். அல்லாஹ்வின் தூதர்களாக நாற்பதின்மர் வந்தீர்கள். உங்களில் ஒவ்வொருவருக்காகவும் அல்லாஹ்வுக்காக வேண்டி நாற்பது விளக்குகளையும், எனக்காக வேண்டி ஒரு விளக்கயையும் ஏற்றினேன். எனக்காக நான் ஏற்றிய விளக்கைத் தாங்கள் அணைத்து விட்டீர்கள். அல்லாஹ்வுக்காக நான் ஏற்றிய விளக்குகளைத் தங்களால் அணைக்க இயலவில்லை. நான் பக்தாது வந்திருந்த பொழுது, எனக்காகத் தாங்கள் அனைத்தையும் செய்தீர்கள். ஆனால் நான் இப்பொழுது செய்தது அல்லாஹ்வுக்காகவேயன்றி தங்களுக்காகவல்ல. எனவே தாங்கள் செய்தது கடப்பு, நான் செய்தது அவ்வாறல்ல" என்று அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இவ்வாறு கூறிய அபூ ஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் எதைச் செய்தாலும் இறைவனுக்காகவே அன்றி மற்ற எதற்காகவும் செய்யாத இனிய

இயல்புள்ளவாகளாய் இருந்தனர். அவர்களின் ஒரே குறிக்கோள் இறைவன் தமக்கு அவனை அடைவதற்கான வழியைக் காட்ட வேண்டும்; அது ஒரு நிமிடமாக இருந்தாலும் சரியே என்பதாகவே இருந்தது.

இத்தகு மாபெரும் குறிக்கோளுடன் வாழ்ந்து அக்குறிக்கோளைத் தம் வாணாளிலேயே எய்தப் பெற்ற அப்பெரியார் ஹிஜ்ரி 265- ஆம் ஆண்டில் நீஷாப்பூரில் இறப்பெய்தி அங்கேயே நல்லடக்கம் செய்யப் பட்டார்கள்.



## 5. ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்)

அவரோ அரச குலத்தில் பிறந்தவர். கிர்மான் நகர ஆளுநராக இருந்த அவர் ஒருநாள் வேட்டையாட அடவி சென்ற பொழுது, அங்கே அழகிய இளவல் ஒருவர் வனவிலங்கு ஒன்றின் மீது இவர்ந்து வரவும், அவரைச் சூழ பல வனவிலங்குகள் வந்துகொண்டிருக்கவும் கண்டு பெரிதும் வியப்புற்று, வைத்த கண் வாங்காது அக்காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்றார். அப்பொழுது வனவிலங்கு ஒன்று அவரின் மீது பாய முற்பட்ட பொழுது அவ்விதம் செய்யாவண்ணம் அந்த இளவல் அதனைத் தடுத்துவிட்டார்.

இதன்பின் ஆளுநர் அந்த இளவலை அணுகி, அவருக்கு ஸலாம் உரைத்த பொழுது, அதற்குப் பதில் கூறிய அவ்விளவல் அவரை நோக்கி, "மன்னவ! தாங்கள் ஏன் இத்துணை மறதியாளராக இருக்கிறீர்கள்? மறுமையை மறந்துவிட்டு இம்மை இன்பங்களில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அற்ப இம்மை இன்பங்களை நுகர்வதற்காகத் தங்களின் எசமானனின் திருப்பணியை முதுகுக்குப் பின் தூக்கி எறிந்து விட்டீர்களே. தங்களுக்கு இறைவன் இவ்வுலக வாழ்வைத் தந்தது, அவனுக்குப் பணி செய்து கிடப்பதற்காகவே. ஆனால் தாங்களோ, அதனைத் தங்களின் இச்சையைத் தீர்த்துக் கொள்ளும் சாதனமாக ஆக்கிக் கொண்டீர்களே, இஃதது நேர்மையா? நியாயமா?" என்று வினவினார்.

அப்பொழுது அங்கு, திடீரென ஒரு கிழவி வந்தாள் அவளுடைய கையில் ஒரு கிண்ணம் இருந்தது. அதனை அவள் அந்த இளவலிடம் கொடுத்தாள். அதிலிருந்த பானத்தைச் சிறிதளவு குடித்துவிட்டு, அதனை ஆளுநரிடம் கொடுத்தார் அந்த இளவல். அந்தப் பானத்தை ஆளுநர் அருந்தினார். அருந்திய பின் இத்துணை இனிய பானத்தை நான் இதற்குமுன் அருந்தவில்லை" என்று வாயார்ந்து கூறினார் அவர் அந்த இளவலை நோக்கி. இதன்பின் அந்தக் கிழவி சென்று விட்டாள்.

அப்பொழுது அந்த இளவல், ஆளுநரை நோக்கி, "மன்னவ! இப்பொழுது வந்து சென்ற கிழவி எவரென்று தங்களுக்குத் தெரியுமா?" என்று வினவினார்.

''தெரியாதே'' என்றார் ஆளுநர்.

அவள் உலகமாவாள். அவளை எனக்குப் பணிவிடை செய்வதற்காக இறைவன் அனுப்பி வைத்தான். 'எவர் எனக்குப் பணிவிடை செய்கிறார் களோ அவர்களுக்கு நீ பணிவிடை செய்ய வேண்டும்' என்று அவன் அவளுக்கு ஆணையிட்டுள்ளான்'' என்று கூறினார்.

அதுகேட்டதும் ஆளுநரின் தலை சுழன்றது. அக்கணமே இறைவனிடம் கண்ணீர் விட்டுக் கதறிப் பாவமன்னிப்புக் கோரினார். அரண்மனை மீண்ட அவர் பதவி துறந்து, பட்டாடைகளை உதறித் தள்ளி, ஃபக்கீர் போன்று எளிய உடையணிந்து சூஃபிகளின் அணியில் சேர்ந்து, வணக்கத்திலும், தியானத்திலும் ஈடுபட்டு, அதில் மேலான படித்தரத்தை எய்தப் பெற்றார். அவரே மாபெரும் இறைநேசச் செல்வர் ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்) அவர்கள் ஆவர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய முன் மாதிரியைப் பின்பற்றி இல்லறச் சோலையில் புகுந்த அவர்களுக்கு, ஒரு மகனும், மகளும் பிறந்தனர். மகன் பிறந்ததும் தம் மகன் அல்லாஹ்வின் நல்லடி யார்களில் ஒருவராக விளங்க வேண்டுமென்று விரும்பிய அவர்கள், அவனுடைய நெஞ்சில் பச்சைமையினால் அல்லாஹ் என்று எழுதி னார்கள்.

ஆனால் அவன் வளர்ந்து பெரியவனான பொழுது அவன் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாகப் பொடுபோக்காக வாழ்வதைக் கண்டு அவர் களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கும், வருத்தத்திற்கும் அளவில்லை.

அப்படி அவன் என்ன பொடுபோக்காக வாழ்ந்தான்?

அவனுக்கோ எழிலாரும் இனிய சரீரத்துடன், சாரீரமும் இயற்கை யாகவே அமைந்திருந்தது. இந்நிலையில், எவனோ ஒருவன் அவனுக்குப் புல்லாங்குழல் ஊதவும் கற்றுக் கொடுத்து விட்டான். அதில் அவன் இனிமையுடன் ஊதும் பொழுது, மக்களின் உள்ளங்களை அது ஈர்த்து நின்று கண்ணீர் மழையை அவர்களின் கண்களிலிருந்து பொழியச் செய்தது. எப்பொழுதும் புல்லாங்குழலும் கையுமாய் தெருவெங்கணும் சுற்றி அலைந்து கொண்டு திரிந்தான் அவன். அவனைப் பின் தொடர்ந்து தெருப் பையன்களின் கூட்டமே திரண்டு சென்று கொண்டிருந்தது.

சாமான்யத் தந்தை ஒருவர் இதைக் கண்டு மகிழ்ச்சி மீக்குறலாம். ஆனால், இறைநேசச் செல்வரான ஷா இப்னு ஷுஜா இதைப் பார்த்துப் புளகாங்கித முறுவார்களா, என்ன? அவர்களின் இதயம் செந்நீரைச் சிந்தியது.

''இறைவ எம் பெரும! நான் உன்னிடம் பிள்ளை வேண்டித்தவம் கிடந்தேன். ஆணுக்கு ஓர் ஆணும், பெண்ணுக்கு ஒரு பெண்ணுமாக இரண்டு மக்களை எனக்குத் தந்தாய். அவர்கள் உனக்குவந்த, உன் திருத் தூதருக்கு உவந்த நல்வாழ்வு வாழ்வார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் நானோ, இலவு காத்த கிளி போல் ஆனேன். தஸ்பீஹ் மாலையும் கையுமாக இப்பள்ளியில் வீற்றிருந்து உன்னைத் தியானித்துக் கொண்டிருக்க வேண்டிய எம்மகன், ஷைத்தானின் கருவியாகிய புல்லாங்குழலும் வாயுமாகத் தெரு வெங்கணும் அலைந்து திரிந்து கொண்டுள்ளான். ஆ! இஃதென்ன சோதனை! உற்றாரும் மற்றோரும் என்ன கூறுவார்கள்? நான் வளர்க்கத் தெரியாது வளர்த்து அவனைக் கெடுத்து விட்டதாக வல்லவோ கூறுவார்கள். பழி ஒரு பக்கம், பாவம் ஒரு பக்கமா? இறைவனே! நீ தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். என் மகனைக் காப்பாற்ற வேண்டும். என் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும். நீகாவாவிடின், எவர் தாம் எங்களைக் காப்பார்? எவரால் தான் எங்களைக் காப்பாற்ற இயலும்?'' என்று கண்ணீரும் கம்பலையுமாக அழுது கெஞ்சி இறைஞ்சினார்கள்.

அவர்கள் இவ்வாறு இறைஞ்சும் பொழுது, நள்ளிரவாக இருந்தது. அப்பொழுது அவர்களின் மகன் எங்கே?

தம் நண்பர்களுடன் குடித்துவிட்டுக் கும்மாளம் அடித்த வண்ணம் தெருவிலே புல்லாங்குழல் ஊதிக் கொண்டு சென்று கொண்டிருந்தான். நள்ளிரவாகியும் அவனுடைய களியாட்டங்களும், புல்லாங்குழல் இசையும் ஓயவில்லை.

அன்றிரவு தான் ஒருவர், தாம் அண்மையில் மணமுடித்த பெண்ணைத் தம் இல்லம் அழைத்து வந்திருந்தார். மணமக்கள் இருவரும் பஞ்சணையில் படுத்துறங்கும் பொழுது, தெருவில் புல்லாங்குழல் இசை கேட்டுத் துயிலெழுந்த மணப்பெண் படுக்கையில் இருந்து எழுந்து சென்று, சாளரத்தின் வழியாகத் தெருவில் நடப்பதை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சற்று நேரத்தில் தூக்கம் கலைந்து கண் விழித்துப் பார்த்த மணமகன், தம் அருகே படுத்திருந்த தம் அருமை மனைவியைக் காணாது திடுக்குற்று அங்கு மிங்கும் பார்த்தார். சாளரத்தின் அருகில் நின்று கொண்டு, தெருவில் நடக்கும் கும்மாளக் களியாட்டங்களை உற்று நோக்கிக் கொண்டு அவள் நிற்பதைக் கண்டதும், அவருக்கு ஏற்பட்ட எரிச்சலுக்கு அளவில்லை. தம் மனைவி மீதா? புல்லாங்குழல் ஊதிய வண்ணம் தெருவில் கூத்தாடிக் கொண்டு வந்து கொண்டிருந்தவன் மீதா? இருவர் மீதும்தான்.

சாளரத்தை நோக்கி ஓடோடிச் சென்ற அவர், நடுத்தெருவில் நள்ளிரவில் நின்று வேடிக்கை செய்து மக்கள் அமைதியாகப் படுத்துறங்

குவதைக் கெடுத்துக் கொண்டிருந்த அந்த இளவலை நோக்கி, 'ஏ பையா! செய்த பாவச் செயல்களுக்கு வருந்தி இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி மீட்சி பெறும் நேரம் உனக்கு இன்னும் வரவில்லையா? இன்னுமா பாவச் செயலைச் செய்து தட்டழிந்து தறுதலையாய்க் கெட்டலைந்து திரிகிறாய்?' என்று வெஞ்சினத்துடன் வினவினார்.

அவரின் இச்சின மொழிகள் அவ்விளவலின் இதயத்தில் ஈட்டி யெனப் பாய்ந்தது. அவனுடைய தலை சுழன்றது. உடல் நடுங்கியது. ''அந்நேரம் வந்து விட்டது; அந்நேரம் வந்து விட்டது'' என்று தன்னை அறியாமல் கத்தினான் அவன். அடுத்த கணம் தாம் அணிந்திருந்த கூத்தாடி உடைகளைக்கிழித்து வீசி எறிந்தான். கையிலிருந்த புல்லாங்குழலை சுக்கு நூறாக உடைத்துக் காற்றிலே பறக்கவிட்டான். அதன்பின் சூழ நின்று கொண்டிருந்த தம் நண்பர்களை நோக்கி, ''நண்பர்களே! இக்கணத்தி லிருந்து நானும் நீங்களும் பிரிகிறோம். இனி நமக்கிடையே எவ்வித உறவுமில்லை''' என்று கூறிவிட்டு விறுவிறுவெனத்தன் இல்லம் நோக்கி நடந்தான் அவன். இல்லம் வந்ததும், தன் அறைக் கதவுகளைத் தாளிட்டுக் கொண்டு, நாற்பது நாட்கள் அன்ன ஆகாரமின்றி இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோரி அழுது இறைஞ்சினான். நாற்பத்தொன்றாவது நாள் அவன் அறையிலிருந்து வெளி வந்த பொழுது, ஒரு புது மனிதனாக, இறை பக்தனாக வெளியே வந்தான். தம் தனயனின் வாழ்வில் ஏற்பட்ட மாபெரும் மாறுதலைக் கண்டு தந்தையின் மகிழ்ச்சிக்கு அளவில்லை. இறைவனுக்கு ஆயிரம், ஆயிரம் முறை நன்றி செலுத்தினார்கள் அவர்கள். 'நான் நாற்பது ஆண்டுகளாக வணங்கிப் பெற்ற பேற்றினை, என் மகன் நாற்பது நாட்களில் பெற்று விட்டான். எல்லாப் புகழும் இறைவனுக்கே' என்று நன்றியில் தோய்ந்த களி மொழி அவர்களின் நெஞ்சத்தில் ஊறி, வாய் வழியாகப் பெருக்கெடுத் தோடியது.

ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்) அவர்களுக்கு அழகே உரு வெடுத்தாற் போன்ற திருமகள் ஒருவரும் இருந்தார். அவரின் அழகுக்கு அழகு செய்வது போன்று, அவரின் நற்பண்புகள் பளிச்சிட்டு மின்னிக் கொண்டிருந்தன.

ஒரு நாள் அரண்மனையிலிருந்து அவர்களுக்கு அழைப்பு வந்தது. அழைப்பை ஏற்று அரண்மனை சென்ற அவர்களை, சுல்தான் அருமை பெருமையுடன் வரவேற்று அமரச் செய்து, நலன் விசாரித்தபின் மண உறவு பற்றிய தம் உளக்கருத்தை அவர்களிடம் மெதுவாக எடுத்துரைத் தார். அதைக் கேட்டதும் அவர்கள் சற்றுநேரம் ஆழ்ந்த சிந்தனையில் ஆயினர். அதன் பின் அவர் சுல்தானை நோக்கி, ''தமக்கு மூன்று நாள் அவகாசம் வேண்டு''மென்று கூறினார்கள். சுல்தானும் அதற்கு ஒப்பினார். அத்துடன் பேட்டி முடிந்தது.

இல்லம் வந்த ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்) அவர்களின் மூளை சக்கரவகமாகச் சுழன்றது. "நாமோ ஏழை. ஏழைகள் ஏழைகளுடன் தான் மண உறவு கொள்ள வேண்டும். இனம் இனத்தோடு தான் சேர வேண்டும். நம்முடைய தகுதிக்கு, அப்பாற்பட்டவர்களுடன் மண உறவு கொண்டால், பின்னர் தவியாய்த் தவிக்க வேண்டி ஏற்பட்டு விடும்" என்று தமக்கே தாம் அறிவுரை கூறிக் கொண்டார்கள்.

அதன்பின் என்ன? அவர்கள் ஒவ்வொரு பள்ளிவாயிலாக ஏறி இறங்கிக் கொண்டிருந்தார்கள். ஏன்? தம் அருமை மகளுக்கு ஒரு மணமகன் தேடி.

இறுதியாக அவர்கள் ஒரு பள்ளிவாயிலில் தர்வேஷ் உடையணிந்த ஓர் இளவல் நின்று தொழுது கொண்டிருப்பதைக் கண்டதும், அவர் தம் மகளுக்கேற்ற கணவராக இருப்பார் என்ற உள்ளுணர்வால் உந்தப்பட்டு அவரின் அருகே போய் அமர்ந்தார்கள்.

அவர் தொழுது முடிக்கும் வரை அமைதியாக அங்கு வீற்றிருந்த அவர்கள், அவர் தொழுது முடித்து 'ஸலாம்' கொடுத்ததும், அவருக்கு 'ஸலாம்' உரைத்து, "தர்வேஷே! நீர் மணமுடித்துள்ளீரா" என்று வின வினார்கள்.

திடுதிடுப்பென ஒருவர் தம்மிடம் வந்து இவ்வாறு வினவியதும் அவருக்கு என்னவோ மாதிரியாக இருந்தது. எனினும் சமாளித்துக் கொண்டு, சற்று நாணத்துடன் 'இல்லை' என்று மறுமொழி பகர்ந்தார் அந்த இளவல்.

"குர்ஆன் ஓதத் தெரிந்த ஒரு பெண்ணைத் திருமணத்தின் மூலம் ஏற்றுக் கொள்ள நீர் தயாராக இருக்கிறீரா?" இது ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்) அவர்களின் அடுத்த கேள்வி.

அதுகேட்ட அவ்விளவல் அவர்களை நோக்கி, "நானோ ஒரு பக்கீர். என்னிடம் உள்ளவையெல்லாம் மூன்றே மூன்று திர்ஹங்கள் தாம். எனக்கு எவர் பெண் தரப் போகின்றார்கள்?" என்று வியப்புடனும் விரக்தி யுடனும் பதில் கூறினார்கள்.

"அதைப் பற்றியெல்லாம் உமக்குக் கவலை வேண்டாம். நான் என்னுடைய மகளை உமக்கு மணமுடித்துத் தருகிறேன். உம்மிடமுள்ள மூன்று திர்ஹங்களில் ஒரு திர்ஹத்தைக் கொண்டு ரொட்டி வாங்கிக் கொள்ளும். மற்றொரு திர்ஹத்தைக் கொண்டு வாசனைப் பொருள் வாங்கிக் கொள்ளும். மீதியுள்ள ஒரு திர்ஹத்தை 'மஹர்' ஆகச் செலுத்தி விடும்" என்று கூறினார்கள்.

அதற்கு அவரும் இணங்கினார். சற்று நேரத்தில் திருமணமும் நிகழ்ந்தது. அன்றிரவே தம் அருமை மகளை அந்த தர்வேஷின் சிறு குடிலுக்கு மகிழ்ச்சியுடன் அனுப்பி வைத்தார்கள் தந்தை.

கொழுநரின் சிறு குடிலை அடைந்த ஷா இப்னு ஷுஜா கர்மானி (ரஹ்) அவர்களின் குலக்கொழுந்து, அங்கு ஒரு கோப்பையில் தண்ணீர் மூடப்பட்டிருப்பதையும், அதன் அருகில் ரொட்டித் துண்டு வைக்கப் பட்டிருப்பதையும் கண்டு "என்ன இவை?" என்று வினவினார் தம் துணவரை நோக்கி.

"நேற்று எஞ்சிய ரொட்டி அது, இன்றிரவு உண்பதற்காக வைத் திருந்தேன்" என்று பதில் கூறினார் கணவர்.

அவ்வளவு தான். மணமகளுக்கு ஏற்பட்ட கோபத்திற்கு அளவில்லை. "நான் இனிமேல் இங்கு ஒரு கணமும் தங்க இயலாது. நான் என் தந்தையின் இல்லத்திற்குத் திரும்ப வேண்டும்" என்று அலறினார் அவர்.

அதுகேட்ட அவரின் கணவர், "எனக்கு இவ்வாறெல்லாம் நடக்கு மென்று முன்பே தெரியும். ஷா இப்னு ஷுஜா அவர்களின் மகளாகிய அரச குலத்து ஆரணங்கு, ஒரு ஃபக்கீராகிய என்னுடன் வந்து வறுமையில் வாழ்வாரா என்று நான் ஐயுற்றது சரியாகப் போய்விட்டது" என்று கூறினார்.

அது மணமகளின் செவிப்பட்டதும், அவர் தம் கணவராகிய தர்வேஷை நோக்கி, "ஐய! நான் தாங்கள் எண்ணுவது போன்று தங்களின் வறுமையைக் கருதி இக்குடிலைவிட்டு அகல விரும்பவில்லை. அதற்கு மாறாக இறைவனின் பேரருளில் தங்களுக்கு நம்பிக்கையில்லாத் தன்மையைக் கண்டு தான் நான் இக்குடிலை விட்டுச் செல்ல விரும்பு கிறேனேயன்றி வேறில்லை. தங்களுக்கு இறைவனின் பேரருளில் நம்பிக்கை மட்டும் இருந்திருக்குமானால், தாங்கள் அடுத்த நாளுக்கென இந்த ரொட்டித் துண்டைச் சேமித்து வைத்திருப்பீர்களா என்ன? ஒரு போதும் மாட்டீர்கள்.

"அடுத்து, நான் என் தந்தை மீதும் குறைபட வேண்டியிருக்கிறது. இருபது ஆண்டுகளாக அவர்கள் என்னிடம், 'மகளே! ஒன்றிற்கும் கவலற்க! நான் உன்னை ஓர் இறையச்சம் உள்ள மனிதருக்கு மணமுடித்து வைக்கிறேன்' என்று கூறிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்பொழுது, பார்த்தாலோ தம் அடுத்த நாள் உணவுக்கு உலகை எல்லாம் படைத்துப் பரிபாலித்து, போஷித்து வரும் அல்லாஹ்வின் பேரருளின் மீது ஆதரவு வைக்காத ஒரு மனிதருக்கு என்னை மணமுடித்து வைத்திருப்பதாகத் தெரிய வருகிறது" என்று கூறினார்.

இப்பொழுது அவரின் கணவர் தாம் செய்த தவற்றினை உணர்ந்தார்.

''அம்மணீ! நான் செய்த இப்பாவச் செயலுக்கு ஏதேனும் பிராயச்சித்தம் உண்டா?'' என்று அழாக் குறையாக வினவினார் தம் மனைவியை நோக்கி.

''உண்டு'' என்று கூறிய அம்மங்கை நல்லார், தம் கணவரை நோக்கி, ''அதற்கான பிராயச்சித்தம் ஒன்று, நான் இந்தக் குடிலில் இருக்க வேண்டும், அல்லது அந்த ரொட்டித் துண்டு இந்தக் குடிலில் இருக்க வேண்டும்'' என்று மொழிந்தார்.

அச்சொற்கள் தம் மனைவியின் வாயிலிருந்து வெளிவந்ததுதான் தாமதம், அந்த தர்வேஷ் இளவல் சரேலெனப் பாய்ந்து அந்த ரொட்டித் துண்டை எடுத்து வெளியே வீசி எறிந்தார். அப்பொழுது மணமகளின் வதனம், அப்பொழுதலர்ந்த செந்தாமரையென ஒளிர்ந்தது.

ஷா இப்னு ஹுஜா (ரஹ்) அவர்கள் சூரா பாத்திஹாவை ஓதும் பொழுது, 'மாலிகி யவ்மித்தீன்' என்றே ஓதும் வழக்கமுடையவர்களாக இருந்தனர். ஒரு நாள் அவர்கள் இவ்வாறு ஓதியதைச் செவிமடுத்த பெரியார் ஒருவர், மாலிகி என்று ஓதுவதற்குப் பதிலாக மலிகி என்று ஓதினால் மாண்புடையதாகவும் ஆழ்ந்த பொருள் பொதிந்ததாகவும் இருக்குமென்று கூறினார். அது முதற்கொண்டு அவர்கள் அவ்வாறே ஓதி வந்தனர்.

ஓரிரவு அவர்கள் கனவொன்று கண்டார்கள். அதில் அவர்கள் முன்பின் பார்த்தறியாத பெரியார் ஒருவர் தோன்றி, 'நீர் உமக்குரிய நன்மைகளில் பத்து நன்மைகளை இழந்து விட்டீரே, திருக்குர் ஆனை ஒருவன் ஓதின், அவனுக்கு அவன் ஓதும் ஒவ்வோர் எழுத்துக்கும் பத்து நன்மைகள் எழுதப்பட்டு பத்து தீமைகள் அழிக்கப்படுகின்றன என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவுளமாயிருப்பதை நீர் அறியீரோ?' என்று கூறி மறைந்தனர்.

இக்கனவிற்குப் பின்னும் அவர்கள் முன்பு போன்றே மலிகி என்று ஓதி வந்தார்கள். இதன் பின் மீண்டும் அவர்கள் ஒரு கனவு கண்டார்கள். அதில் முன் கனவில் தோன்றிய அப்பெரியாரே மீண்டும் தோன்றி, ''நீர் ஏன் முன்பு போன்றே ஓதிக் கொண்டுள்ளீர்; திருக் குர்ஆனை கண்ணியமாக ஓதுங்கள் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்துள்ளதை நீர் கேள்விப்படவில்லையா?'' என்று கூறிவிட்டு மறைந்தனர்.

விழித்தெழுந்த அவர்கள் இக்கனவை இமாம் குத்ரப் அவர்களிடம் கூறி, அவர்களின் கருத்தை வினவிய பொழுது, ''பொருளால் மலிகி என்பதே சிறந்ததாயினும், நன்மையால் மாலிகி என்று ஓதுவதே

மாண்புடைத்தாகும்'' என்று கூறினர். அதிலிருந்து ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்கள் மாலிகி என்று ஓதுவதைத் தம்முடைய நீங்காத வழக்கமாகக் கொள்ளலாயினர்.

மகனும் நேர்வழி பெற்றபின், மகளும் மணமுடித்துக் கொடுக்கப் பட்டபின், ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்கள் மன அமைதியுடன் இறைவனை வழுத்திக் கொண்டிருந்தார்கள். ஒரு நாளல்ல; இரண்டு நாட்களல்ல, நாற்பது ஆண்டுகள். இந்த நாற்பது ஆண்டுகளில் அவர்கள் சிறிதேனும் உறங்கவில்லை; உறக்கம் மிகைக்கும் போல் தோன்றின், உடனே தம்மிடம் வைத்திருந்த உப்புத்தூளை எடுத்துத் தம் கண்களில் போட்டுக் கொண்டு, அவர்கள் இறைத் தியானத்தில் ஈடுபடுவார்கள்.

ஓரிரவு அவர்கள் இறைத் தியானத்தில் ஈடுபட்டிருக்கும் பொழுது, அவர்களை உறக்கம் ஆட்கொண்டு விட்டது. அப்பொழுது அவர்களின் கனவில் இறைவன் திருக்காட்சி வழங்கினான். அப்பொழுது அவர்கள் இறைவனை நோக்கி, ''இறைவ எம் பெரும! நான் உறங்காது விழித் திருந்து உன்னைக் காண விழைந்தேன். ஆனால் நீயோ நான் உறங்கிய பின் தான் திருக்காட்சி நல்கியுள்ளாய்'' என்று கண்ணீரும் கம்பலை யுமாகக் கூறினார்கள். அதற்கு இறைவன் ''நீர் நாற்பதாண்டுகளாகத் தூங்காது விழித்திருந்து என்னை வணங்கினீரல்லவா? அதற்கான பலன்தான் இது'' என்று பதில் கூறினான்.

இதன் பின் அவர்கள் உறக்கத்தை வா, வா என்று அழைத்த போதினும், உறக்கம் தான் வரவில்லை. ''உறக்கம் வராதா? அதில் இறை தரிசனம் எனக்குக் கிடைக்காதா?'' என்று ஏங்கித்தவித்து, அவர்கள் இறைவனை வணங்கி இறைஞ்சிய போதினும், அவர்களுக்கு இறை தரிசனம் கிடைக்கவில்லை. பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்திய அவர்கள் ''அகில உலகமும் என்னுடையதாக இருப்பினும், அத்தகு காட்சியை மீண்டும் எனக்கு அளிக்கவல்ல உறக்கத்திற்கு நான் விலையாகக் கொடுப்பேனே. விலையாகக் கொடுப்பேனே. அதற்கு உறக்கம் எனக்கு வரமாட்டேன் என்கிறதே'' என்று கூறி வெய்துயிர்த் தார்கள் அம்மேதை. எனினும் அவர்களுக்கு உறக்கம் வரவில்லை.

இறுதியாக இறைவனும் அவர்கள் மீது இரங்கினான். தன் தரிசனத்தை இவ்வுலகில் அல்ல, மறுமையில் அளிக்க விரும்பி ஹிஜ்ரி 270-ஆம் ஆண்டுக்குப் பின் ஒரு நாள் அவன் அவர்களைத் தன்பால் அழைத்துக் கொண்டான். அவர்களும் கண்களை இறுகமூடி மீளாத் துயிலில் மூழ்கினார்கள். அடுத்த கணம் இறைவனின் 'லிகா' (தரிசனம்) அவர்களின் கண் முன் காட்சி வழங்கியது.

# 6. அபூ ஸயீத் அல் ஹர்ராஸ் (ரஹ்)

“நான் ஓரிரவு அயர்ந்து உறங்குங்கால் விண்ணிலிருந்து இரண்டு வானவர்கள் இறங்குவதைக் கண்டேன். அவர்கள் மண்ணகத்தில் தங்களின் திருப்பாதங்களை வைத்ததும், என்னை நோக்கி அடியெடுத்து வைத்து நடந்து வந்து, ''உண்மை என்றால் என்ன?'' என்று வினவினார்கள். அதற்கு நான், ''உடன்பாடுகளை நிறைவேற்றுவது'' என்று பதிலிறுத்தேன். அது கேட்ட அவர்கள், ''நீர் உண்மை உரைத்தீர்' என்று கூறிவிட்டு மீண்டும் விண்ணகம் உயர்ந்து விட்டார்கள்.

பின்னர் நான் ஓரிரவு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கனவில் தரிசிக்கும் பேறு பெற்றேன். அவர்கள் என்னை நோக்கி, ''நீர் என்னை நேசிக்கின்றீரா?'' என்று வினவினர். அதற்கு நான், ''நாயகமே! அன்பு கூர்ந்து என்னை மன்னியுங்கள். நான் இறைக்காதலில் மூழ்கி இருப்பதால், தங்களை நேசிக்க இயலாதுள்ளது'' என்று பதிலிறுத்தேன். அது கேட்ட அண்ணலார், ''எவன் இறைவனை நேசிக்கின்றானோ அவன் என்னையே நேசிக்கின்றான்'' என்று திருவாய் மலர்ந்துவிட்டு மறைந்தனர்.

நான் மற்றோர் இரவு இப்லீஸைக் கனவில் கண்டு, அவனை அடிப்பதற்காக ஒரு கழியை எடுத்துக் கொண்டு ஓடினேன். அப்பொழுது அசரீரி ஒன்று, ''அவன் உம்முடைய கையிலுள்ள கழியைக் கண்டு அஞ்ச மாட்டான். அவன் உம்முடைய இதயத்திலுள்ள ஒளியைக் கண்டு தான் அஞ்சுவான்'' என்று முழங்கியது. அது கேட்ட நான், இப்லீஸை நோக்கி, '' இங்கே வா. உனக்கு என்ன வேண்டும்?' என்று வினவினேன். அதற்கு அவன், ''நீர் தான் நான் மனிதர்களை கெடுக்கும் ஒன்றைத் தூக்கி எறிந்து விட்டீரே. அவ்விதம் செய்து விட்டு, என்னிடம் என்ன வேண்டும் என்றா கேட்கின்றீர்?'' என்று கூறினான். நான் அவன் எதைக் குறிப்பிடுகிறான் என்பதை விளங்காதவனாய், ''நான் எதை அவ்வாறு தூக்கி எறிந்து விட்டேன்'' என்று வினவினேன். அதற்கு அவன், ''உம் ஆசாபாசங் களை'' என்று மறுமொழி பகர்ந்தான்.

பின்னர் நான் திமிஷ்க் மாநகரம் வந்துற்ற போழ்து அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களை மீண்டுமொரு முறை கனவில் தரிசிக்கும் பேறு பெற்றேன். அப்பொழுது அவர்கள், தங்களின் இருகைகளையும் அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியவர்களின் தோள்களில் போட்டவர் களாய் என்னை நோக்கி நடந்து வந்தார்கள். அப்பொழுது நான் பாட்டுப் பாடிக் கொண்டும், என் நெஞ்சின் மீது அதற்கேற்ற வண்ணம் தாளம் போட்டுக் கொண்டும் இருந்தேன். அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் என்னை நோக்கி, ''அதனால் ஏற்படும் தீமைகள், அதனால் ஏற்படும் நன்மைகளை விட அதிகமானவை'' என்று கூறி மறைந்தார்கள்.

''நீண்ட காலமாக நான் மூன்று நாட்களுக்கு ஒரு தடவை, உணவருந்தும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தேன். ஒரு தடவை நான் பாலையில் பயணம் செய்து கொண்டிருந்தேன். மூன்றாம் நாள் பசியின் காரணமாக களைத்தும் இளைத்தும் போனேன். அப்பொழுது அசரீரி ஒன்று முழங்கியது. ''நீர் உம்முடைய இழிந்த ஆசையை நிறைவு செய்ய வல்ல உணவை விரும்புகிறீரா? அல்லது உணவின்றியே உம்முடைய பலவீனத்தை வென்று நிற்கும் ஆற்றலை விரும்புகிறீரா?'' என்று அந்த அசரீரி மிடுக்காக வினவியது. அப்பொழுது நான் ''இறைவனே! என்னுடைய பலவீனத்தை வென்று நிற்கும் ஆற்றலை எனக்குத் தா!'' என்று பதிலுரைத்தேன். அதன்பின் நான் எழுந்து பன்னிரண்டு மன்ஸில் தொலை நடந்து சென்றேன். எனக்குக் களைப்போ, இளைப்போ ஏற்படவில்லை''

ஒரு தடவை நான் கானகத்தினூடே பசியோடு நடந்து கொண்டி ருந்தேன். அப்பொழுது தொலைவில் ஒரு சிற்றூர் தென்பட்டது. அதைக் கண்டதும் மகிழ்ச்சி மீக்குற்று, என் நடையைத் துரிதப்படுத்தினேன். அப்பொழுது என் உள் மனம் ''என்ன! நீ இவர்களையா நம்பியுள்ளாய்?'' என்று என்னை இடித்துரைத்தது. அடுத்த கணம் நான் அந்த ஊருக்குள் பிறர் வந்து என்னை அழைத்துச் சென்றாலொழிய நானாக நுழைவதில்லை என்று சூளுரை பகர்ந்துவிட்டு, என் நெஞ்சுவரை ஆழமாகக் குழிதோண்டி, அதில் இறங்கி மண்ணால் குழியை மூடிக் கொண்டு, அதில் நின்று கொண்டிருந்தேன். நள்ளிரவில் ஓர் அசரீரி.. ''ஊரையுடை யவர்களே! அல்லாஹ்வுடைய வலி ஒருவர் வந்து இன்ன இடத்தில் நின்று கொண்டுள்ளார். அவரைப் போய் விசாரியுங்கள்'' என்று முழங்கியது. அது கேட்ட மக்கள் என்னை நோக்கி ஓடிவந்து, என்னைக் குழியிலிருந்து அப்புறப்படுத்தித் தங்களின் ஊருக்கு என்னைச் சுமந்து சென்றார்கள்.

ஒரு தடவை நான் மக்காவில் பனீ ஷைபா வாயில் வழியாக நடந்து சென்றேன். அப்பொழுது அங்கே ஓர் அழகிய வதனத்து இளவல் ஒருவர் இறந்து கிடப்பதைக் கண்டு, அவருடைய முகத்தை உற்று நோக்கினேன். அவர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்த வண்ணம் "அபூ ஸயிதே! அல்லாஹ்வின் நல்லடியார்கள் இறந்த போதினும், அவர்கள் உயிரோடுள் ளார்கள் என்பதை நீர் அறியீரோ? அவர்கள் ஒரு வீட்டிலிருந்து மறு வீட்டிற்கு மாறுகிறார்களேயன்றி வேறில்லை" என்று கூறிவிட்டு வாயையும் கண்களையும் இறுக மூடிக் கொண்டார்.

இவ்வாறு தம் அனுபவங்களைக் கூறிச் செல்கின்றார்கள் அபூ ஸயீத் அல் ஹர்ராஸ் ( ரஹ்) அவர்கள்.

பக்தாது நகரில் பிறந்து அங்கேயே செருப்புத் தைக்கும் தொழிலை மேற்கொண்டிருந்த அவர்கள், துன்னூன் மிஸ்ரி. பிஷ்ர் ஹாபீ, ஸரீ அஸ்ஸகதீ ஆகிய மகான்களுடன் தொடர்பு கொண்டதன் காரணமாக, மாபெரும் மகான் தன்மையை எய்தப் பெற்று விளங்கினர். 'சூபி தத்துவத்தின் நாவு' என்று அழைக்கப்பட்ட அவர்கள், சூபி தத்துவத்தைப் பற்றி நானூறு நூல்கள் வரை எழுதியுள்ளார்கள். அவற்றில் அவர்கள் கூறிய சில கருத்துக்கள், அவர்களுக்கு எதிராக ஒரு குழுவையே ஏற் படுத்திய தோடல்லாது, அவர்களுக்குக் 'காஃபிர்' பட்டத்தையும் ஈட்டித் தந்தது.

அவர்கள் தாம் எழுதிய, 'இரகசிய நூல்' என்ற புத்தகத்தில் "இறை வனை நெருங்கி, அவனளவில் தன்னை அழித்துக் கொண்ட ஒருவன், தன்னையும் மறந்து விடுகிறான்; இறைவனைத் தவிர உள்ள ஏனைய அனைத்தையும் மறந்து விடுகிறான். அப்பொழுது நாம் அவனை நோக்கி, "எங்கிருந்து வருகிறீர்? எதைத் தேடுகிறீர்? என்று வினவின் அவன், "அல்லாஹ் அல்லாஹ்" என்று மறுமொழி பகர்கின்றானே யொழிய மறுவார்த்தை பேசுவதில்லை" என்று எழுதி இருந்தனர்.

அவர்கள் மற்றோரிடத்தில், "நாம் அவனிடம் சென்று உமக்கு என்ன வேண்டும்?" என்று வினவின், 'அல்லாஹ்' என்று மறுமொழி பகர் கின்றான். அவன் மட்டுமல்லாது அவனுடைய ஒவ்வோர் அணுவும் அவ் வாறே மொழிகிறது. அவன் இறைவனை நெருங்கி விடுவதால், அவன் முன்னிலையில் வைத்து "அல்லாஹ்" என்று தனித்து, பிரித்துக் கூறுவதற் கில்லை. இக்கட்டத்தில் வைத்துத்தான் அறிவாளிகளின் அறிவெல்லாம் என்ன இஃது என அறிய இயலா வண்ணம் மயக்கமுறுகின்றன" என்று குறிப்பிட்டிருந்தனர்.இவற்றைக் கண்டுதான் மார்க்க அறிஞர்கள், அவர்கள் மீது சீறிச் சினந்தார்கள். கண்டனக் கணைகளைப் பொழிந்ததோடல்லாது "காஃபிர், காஃபிர்" என்றும் இழித்துரைத்தார்கள்.

ஒரு தடவை அவர்கள், தங்களைப் பற்றிக் கூறும் பொழுது, ''எவ்வாறு லுக்மான் (அலை) அவர்களிடம் உமக்கு நபித்துவம் வேண்டுமா? அறிவு வேண்டுமா?'' என்று வினவப்பட்ட பொழுது, ''அறிவுதான் எனக்கு வேண்டும். ஏனெனில் நபித்துவத்தின் சுமையை என்னால் தாங்க இயலாது'' என்று கூறினார்களோ, அதே போன்று என்னிடம் இறையண்மை வேண்டுமா, இறைவனிடமிருந்து சற்றுத் தொலைவிலிருப்பது வேண்டுமா? என்று கேட்கப்பட்ட பொழுது பின்னையதையே தேர்ந்தெடுத்தேன். ஏனெனில் இறையண்மையை என்னால் தாங்க இயலாது'' என்று அவர்கள் இயம்பினார்கள்.

மற்றொரு தடவை அவர்களிடம், ''தாங்கள் இறைவனை எதனால் அறிந்தீர்கள்?'' என்று வினவப்பட்ட பொழுது, ''ஒன்றிற்கொன்று மாற்ற மான பண்புகள் அவனிடம் அமைந்திருப்பதைக் கொண்டு, நான் அவனை அறிந்தேன்'' என்று கூறித் தம் கூற்றுக்கு ஆதரவாக ''ஆதியும் அவனே, அந்தமும் அவனே. மறைவானவனும் அவனே. பகிரங்கமானவனும் அவனே'' என்ற இறைத் திருவசனத்தை ஓதிக் காட்டினர்.

ஒரு நாள் மக்கள் அவர்களிடம் 'தஸவ்வுஃப்' பற்றிப் பல்வேறு கேள்விகளைக் கேட்டனர். அப்பொழுது ஒருவர் 'மெய்ஞ்ஞானிக்கு (ஆரிஃபுக்கு) அழுகை வருமா?' என்று வினவினார். அதற்கு அவர்கள், ''மெய்ஞ்ஞானிக்கு அழுகை வருவதும் ஓர் எல்லைக்குட்பட்டதாகவே உள்ளது. இறைவனை அடையும் பாதையில் இருக்கும் வரையில்தான் அவருக்கு அழுகை வரும். அவர் இறைவனை அடைந்துவிடின் அவருக்கு அழுகை வராது'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

'வலிமார்களில் இருவகையினரான அப்தால், அவ்தாது ஆகியவர் களில் எவர் மாண்புடையவர்? '' என்று அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, 'அவ்தாதுகள் தாம் என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். ''ஏன் அவ்வாறு?'' என்று வினவப்பட்ட பொழுது, ''அப்தால்கள் என்போர் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறிக் கொண்டிருப்பவர் களாவர். ஆனால் அவ்தாதுகளோ, அவ்வாறில்லை. அவர்களின் நிலையே உறுதியானது. அவர்கள் முடிவான நிலையை எய்தியவர்கள். அவர்களே படைப்புகளுக்கு ஆதாரமானவர்கள்'' என்று கூறினர்.

அவர்கள் இறைவனின் நல்லடியார்களைப் பற்றிக் கூறும் பொழுது, ''இறைவனின் நல்லடியார்கள்; இறைவன் பால் திரும்பும் பொழுது, அவனுக்கும் அவர்களுக்கும் இடையே ஒரு தொடர்பு, ஓர் இணைப்பு ஏற்படுகிறது. அவர்கள் தாங்கள் உட்பட இறைவனல்லாத அனைத்தையும் மறந்து விடுகிறார்கள். அவர்களிடம் எவரேனும் சென்று ''தங்களின் விருப்பம்யாது என்று வினவின், ''இறைவனையே நாங்கள் தேடு

கின்றோம். எங்களின் ஒவ்வோர் உறுப்பிற்கும், பேச நாவிருக்குமாயின், அவை அனைத்தும் இறைவனின் திருப்பெயரையே ஜபிக்கும். காரணம், அவை இறை ஒளியால் நிரம்பப் பெற்று இறை காதலில் மூழ்கியிருப்பதே யாகும். அவர்களின் முன் எவரேனும் சென்று இறைவனின் திருப்பெயரை உச்சரிப்பின் இறைவனே தம்முன் வந்து, தன் பெயரைக் கூறுவதாக அவர்கள் எண்ணிக் கொள்வார்கள்'' என்று எடுத்துரைத்தனர்.

ஒரு தடவை இவர்கள் ஒரூருக்குச் சென்றிருந்த பொழுது மக்கள் இவர்களின் மாண்பினை உணர்ந்து, இவர்களின் கையிலிருந்து விழுந்த மூலாம் பழத்தின் தோலை நூறு தீனார் விலை கொடுத்து வாங்கினர். இது கண்டு வேதனையுற்ற அவர்கள், இது தமக்குத் தகுதியான இடமல்ல என்று கருதி வேற்றூர் ஒன்றிற்கு வெருண்டோடினர். அங்கு மக்கள் இவர்களை ஸிந்தீக் (நிரீஸ்வரத் தன்மையைச் சார்ந்து நிற்பவர்) என்று அழைத்ததோடு, இவர்கள் மீது கல்லெறியுமாறு இரு சிறுவர்களை அனுப்பி வைத்தனர். இது கண்டு மகிழ்வுற்று அவர்கள் இதுதான் தமக்குத் தகுதியான இடம் எனக் கருதி அங்கேயே தங்கிவிட்டார்கள்.

அபூ ஸயீத் அல் ஹர்ராஸ் (ரஹ்) அவர்களுக்கு இரண்டு ஆண் மக்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் இறந்து விட்டார். அவரை அவர்கள் ஓரிரவு கனவில் கண்ட பொழுது, ''மகனே! உன்னை இறைவன் எவ்வாறு நடத்தினான்?'' என்று வினவினர். அதற்கு அவர், ''இறைவன் என்னைத் தன் அண்மையில் அழைத்து அன்புடன் நடத்தினான்'' என்று கூறினார். ''நல்லது; மகனே! எனக்கு அறிவுரை வழங்கு'' என்று வேண்டினார்கள் அவர்கள். அதற்கு அவர்களின் மகன், ''அப்பா! இறைனைப் பற்றி அனுவத்தனையும் தவறான எண்ணம் கொள்ள வேண்டாம்'' என்றார். 'நல்லது, மகனே! இன்னும் எனக்கு அறிவுரை வழங்கு'' என்று வேண்டினார்கள். அதற்கு அவர்களின் மகன், ''நான் இன்னும் பல அறிவுரைகளை வழங்கின், அவற்றைத் தங்களால் தாங்கிக் கொள்ள இயலாதே'' என்று கூறினார். ''அவ்விதம் நினையாதே, மகனே! அவற்றைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலை நான் இறைவனிடம் வேண்டிப் பெறுவேன்'' என்று கூறினர் அவர்கள். அது கேட்ட அவர்களின் மகன், ''அப்பா! தங்களுக்கும் இறைவனுக்கும் இடையே ஒரு சட்டை கூடக் குறுக்கிடத் தாங்கள் அனுமதிக்க வேண்டாம்'' என்று கூறினார். அத்துடன் திடுக்கிட்டு விழித்தெழுந்த அவர்கள் அதன்பின் இவ்வுலகில் வாழ்ந்த முப்பதாண்டுகளில் ஒரு தடவையேனும் சட்டை அணியவே இல்லை.

இறைவனின் அளப்பரும் பேரருளின் மீது அவர்களுக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது. இறைவன் நம் உணவிற்கு வழி வகுத்திருக்கும் பொழுது, அவனிடம் மேற்கொண்டு எவ்வாறு கேட்பது?'' என்று அவர்கள் கூறினர்.

ஒரு நாள் அவர்கள் தவம் செய்வதற்காகக் கானகம் சென்றபொழுது, அவர்களுக்கு அகோரமான பசி ஏற்பட்டது. அப்பொழுது அவர்கள் தமக்கு உண்ண உணவளிக்குமாறு இறைவனிடம் கேட்க விரும்பினர். அப்பொழுது அவர்களின் உள்மனம், ''இறைவனின் பேரருளில் அளவற்ற நம்பிக்கை வைத்திருப்பவன் அவனிடம் யாதொன்றையும் கேட்பது சரியல்ல'' என்று இடித்துரைத்தது. ''அவ்விதமாயின் பொறுமையைத் தருமாறாவது இறைவனிடம் கேளேன்'' என்று அவர்களின் வெளிமனம் எரிச்சலோடு கூறியது. ''பொறுமையாளர்களுடன் தான் இருப்பதாக இறைவனே கூறும் பொழுது, பொறுமையைத் தருமாறு எவ்வாறு அவனிடம் கேட்பது?'' என்று அவர்களின் உள்மனம் கூறியது. அப்பொழுது, எவன் நம் பக்கல் வந்தானோ, அவனை நாம் வெறுப்பதில்லை. அவனருகே தான் நாம் உள்ளோம்'' என்று அசரீரி முழங்குவதை அவர்கள் செவியுற்றார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, '' நான் மாலை நேரத்தில் கூட உணவைச் சேமித்து வைத்துக் கொள்வதையோ, ஒரு துணிக்கு மேல் அதிகமான துணியை வைத்துக் கொள்வதையோ பற்றி நாணமுறுகிறேன். எவரை அல்லாஹ் உவந்து கொண்டானோ, அவருடைய தேவைகளை, அவர் கேட்காமலேயே அல்லாஹ் நிறைவேற்றி வைக்கிறான். தான் உவந்தவரின் பால் அவனை அல்லும் பகலும் அயராது நினைத்துக் கொண்டிருப்பதான வாயிலைத் திறந்து வைக்கிறான். ஒரு சம்பூரணமான மகான் இறைவனுக்காகவல்லாத எந்த அலுவலிலும் ஒரு போதும் ஈடுபட மாட்டார். அவர் முயற்சியாற்றுவதனாலோ, அன்றி, முயற்சியாற்றாதிருப்பதனாலோ, இறை தரிசனத்தை எய்தப் பெற மாட்டார். அவனுடைய பேரருளின் காரணமாகவே அதனை எய்தப் பெறுவார். அவருடைய தகுதிக்குத் தக்க வண்ணம், தாங்கும் தன்மைக்குத் தக்கவண்ணம், அவன் அவருக்குத் தன்னை வெளிப்படுத்துகிறான்'' என்று அருண்மொழி பகர்ந்தார்கள்.

பிறிதொரு நாள் இவர்கள் எதனையும் இறைவனுக்காகச் செய்கிறோம் என்ற உளத்தூய்மையுடன் (இக்லாஹ்ஸுடன்) செயலாற்ற வேண்டியதன் அவசியத்தைப் பற்றித் தம் மாணவர்களிடம் எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்கள். இதனை இவர்களிடம் பணிபுரிந்து வந்த ஃபக்கீர் ஒருவர் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்; இதன் பின் அவர், தம்முடைய ஒவ்வொரு செயலிலும் 'இக்லாஸை நோட்டமிடலானார். அதன் காரணமாக அவர் தம் தேவைகளைக் கூட, தம் கடமைகளைக் கூடச் சரிவர இயற்ற இயலாது போய்விட்டது. சின்னாட்களில் அவர் சொல்லாமல் கொள்ளாமல் தாமாகவே வேலையை விட்டு நீங்கி விட்டார்.

இதன்பின் ஒரு நாள், அவர் இவர்களைக் காண இவர்களின் தவமடம் வந்தார். அப்பொழுது இவர்கள் அவரை நோக்கி ' ஏன் நீர் வேலையை விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் நீங்கி விட்டீர்?'' என்று வினவினர்.

அதற்கு அவர், ''தாங்கள் கூறியவண்ணம் நான், என்னுடைய ஒவ்வொரு செயலிலும் இக்லாஸ் இருக்கின்றதா என்று தேடினேன். இக்லாஸ் குறைவாகவே இருந்தது. எனவே வேலையை விட்டு விட்டேன்'' என்று விடையிறுத்தார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி ''நீர் அவ்வாறு இனிமேல் செய்யாதீர். இக்லாஸானது செயலாற்றுவதை ஒரு போதும் தடை செய்யாது. உம்முடைய அலுவல்களைக் கிரமமாகச் செய்துவாரும். நான் கூறியதெல்லாம், எதனையும் இக்லாஸோடு செய்யுங்கள் என்பதேயாகும். இக்லாஸோடு செய்வதென்றால், வேலையை விட்டு விடுவது என்று ஒரு போதும் பொருள் படாது'' என்று கூறினார்கள்.

ஒரு தடவை பிச்சைக்காரி ஒருத்தி கந்தலுடை அணிந்து கஃபாவின் முற்றத்தில் வருவோர் போவோரிடம் பிச்சை கேட்டுக் கொண்டிருப் பதைக் கண்ட இவர்கள், ''இவளால் மக்களுக்குச் சொல்ல முடியாத துன்பங்கள் ஏற்படுகின்றன'' என்று தம் மனத்திற்குள் எண்ணினர். அப்பொழுது அவள் அவர்களை நோக்கி, ''உங்களின் மனத்திலுள்ளதை இறைவன் அறிகிறான். எனவே தீய எண்ணங்களை எண்ணுவதை விட்டு அஞ்சிக் கொள்ளுங்கள்'' என்ற கருத்தமைந்த இறைவசனத்தை ஓதினாள். அது கேட்டுத் திடுக்குற்ற அவர்கள், தம் மனத்திற்குள்ளேயே இறை வனிடம் பாவமன்னிப்புக் கோரினார்கள்.

அப்பொழுது அவள் சிரித்துக் கொண்டு, ''இறைவன் தன் அடிமைகளின் பாவ மன்னிப்பை ஏற்றுக் கொண்டு, அவர்களின் பாவத்தை அழித்து விடுகிறான்'' என்று பொருள் பொதிந்த இறை திருவசனத்தை ஓதினாள். அது கேட்டுப் பெரிதும் வியப்புற்ற அவர்கள், இனி எக்காலத்திலும், எவரைப் பற்றியும் தீய எண்ணம் கொள்வதில்லை என்று அவ்விடத்திலேயே வைத்துச் சூளுரைத்தார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் மக்கமா நகரில் 'தக்வா' (இறையச்சத்தை) பற்றிச் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த பொழுது, அவ்வழியே சென்ற பெரியார் ஒருவர், ''ஒரு வீட்டின் தாழ்வாரத்தில் அமர்ந்து ஜுபைதா கால்வாயின் தண்ணீரை அருந்திக் கொண்டு 'தக்வா' வைப் பற்றிப் பேச உமக்கு நாணமில்லையா?'' என்று கூறினார். அப்பொழுது அபூ ஸயீத் (ரஹ்) அவர்கள் நாணித் தலைகுனிந்தவர்களாய், ''தாங்கள் கூறியது சரி; இறைவன், ஒருவனைத் தன் நண்பனாக ஆக்க விரும்பினால்,

அவனிடம் இவ்விதம் அறிவுரை வழங்குபவனை அனுப்பி வைக்கிறான். பிறகு அவனைத் தன்னுடைய மாண்பினை உணருமாறு செய்து, அவனுடைய உள்ளத்தில் தாழ்மையை உண்டு பண்ணுகிறான். அவன் இறைவனுடைய மாண்பினையும், தன்னுடைய தாழ்மையையும் உணர்ந்து அழுது சலித்து, தன்னுடைய 'தான்' என்ற அகங்காரத்தை அழித்து, அதன்பின் 'பகா' நிலையை எய்தப் பெறுகிறான்'' என்று கூறினார்கள்.

இவர்களே, ஒருவன் தன்னை அல்லாஹ் அளவில் அழித்துக் கொள்ளும்படியான ஃபனா நிலையையும், பின்னர் அல்லாஹ் அளவில் தரிபடுவதான 'பகா' நிலையையும் மக்களுக்கு முதன் முதலாக எடுத்துரைத்து விளக்கம் பகர்ந்தார்கள்.

இவர்கள் தம்மையே இறைவனளவில் அழித்துக் கொண்ட அப்தால்களில் ஒருவராக விளங்கினர் என்றும், இவர்கள் பஸராவிலுள்ள பள்ளி ஒன்றில் இமாமாகப் பணியாற்றிக் கொண்டிருக்கும் பொழுது, அரபாத்திலும் காணப்பட்டார்கள் என்றும், இதைப்பற்றி இவர்களை அரபாத்தில் கண்ட ஒருவர் வினவிய பொழுது, ''எவரிடமும் இதைப் பற்றிக் கூறாதீர்'' என்று தம் வாயில் கை வைத்துச் சாடை செய்தார்கள்'' என்றும் கூறப்படுகிறது. இவர்கள் ஹிஜ்ரி 279-ஆம் ஆண்டிலிருந்து 289- ஆம் ஆண்டிற்குள் இறப்பெய்தியதாகக் கருதப்படுகிறது.



# 7. ஸஹ்ல் இப்னு அப்துல்லாஹ் அல்துஸ்தரீ (ரஹ்)

"ஆன்ம உலகில் இறைவன் ஆன்மாக்களை நோக்கி, 'நான் உங்களின் இறைவனல்லவா!' என்று வினவிய பொழுது, 'ஆம்; நீ தான் எங்களின் இறைவன்' என்று ஆன்மாக்கள் அனைத்தும் பதில் கூறியது எனக்கு நன்கு நினைவில் உள்ளது.

"நான் என் அன்னையின் வயிற்றில் கருவுற்றுப் பத்து மாதங்கள் இருந்ததும், எனக்கு நன்கு நினைவில் உள்ளது". என்று கூறினார் ஆன்றோர் ஒருவர்.

அவர் மூன்று வயதுக் குழந்தையாக இருக்கும் பொழுதே இரவு முழுவதும் விழித்திருந்து தொழத் துவங்கி விட்டார். இது கண்டு அவருடைய மாமா முஹம்மது இப்னு ஸவ்வாருக்கு அழுகை, அழுகை யாக வந்தது, இந்தச் சின்னஞ்சிறு வயதில், இவர் தம்மை இவ்வளவு துன்பத்திற்காளாக்கிக் கொள்கின்றாரே என்று. எனவே அவர்தம் மருமகனை நோக்கி, 'ஸஹ்ல்! படுத்துறங்கு. நீ விழித்திருந்து தொழுது கொண்டிருப்பது எனக்கு வருத்தத்தை நல்குகின்றது' என்று கூறினார்.

ஒரு நாள், அவர் தம் மாமாவை அணுகி, "மாமா! இறைவனின் திருச்சந்நிதானத்தில் நான் என் தலையைக் காணிக்கையாக வைத்து வணங்கிக் கொண்டிருப்பதைக் காண்கிறேன்" என்று கூறினார்.

அது கேட்டு வியப்பில் ஆழ்ந்த அவரின் மாமா, தம் மருமகன் சாதாரணச் சிறுவனல்ல, இறையருள் பெற்ற பெருமகன் என்பதை நன்கு உணர்ந்தவராய், "மருமகனே! இதனை எவரிடமும் கூறவேண்டாம்" என்று அறிவுரை பகர்ந்தார். அதன்பின் அவர் தம் மருமகனை நோக்கி, "நீர் இரவில் படுக்கையில் படுத்துப் புரளுங்கால், 'இறைவன் என்னோடு உள்ளான்; என்னைப் பார்த்துக் கொண்டுள்ளான்' என்று கூறிக் கொண்டிரும்" என்று அறிவுரை பகர்ந்தனர்.

அவ்வாறே கூறி வந்த அவர், ஒருநாள் தம் மாமாவை நோக்கி, ''மாமா! தாங்கள் கூறிய வண்ணம் செய்து வருகிறேன்'' என்று கூறினார்.

அப்பொழுது அவரின் மாமா பெரிதும் மகிழ்ந்தவராய், 'நல்லது; ஒவ்வோர் இரவும், அவ்வாறு ஏழு முறை கூறி வாரும்'' என்று அருள் மொழி பகர்ந்தார்.

அவ்வாறே செய்து வந்த அவர், அதனை ஒருநாள் தம் மாமாவிடம் கூற, அதுகேட்டு முன்னைவிடப் பன்மடங்கு மகிழ்ந்த அவரின் மாமா, அவரை நோக்கி, அதனை ஒவ்வோர் இரவும் பதினைந்து விடுத்தம் ஓதி வருமாறு பணித்தார்.

அவ்வாறே அவரும் செய்து வந்தார். ஓராண்டு கழிந்தது. அவரின் மாமா அவரை நோக்கி, ''நீர் இறக்கும் வரை அதனை ஓதி வருவதை விட்டு விடாதீர். அதனால் உமக்கு இம்மையிலும், மறுமையிலும் நற்பேறு கிடைக்கும்'' என்று கூறினார்.

அவரும் அவ்வாறே செய்ய, அதன் இனிமை அவரின் உடலிலும் உள்ளத்திலும் ஊடுருவிப் பாய்ந்ததை அவர் உணர்ந்தார். அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு மட்டில்லை.

ஒரு நாள் அவரின் மாமா அவரை நோக்கி, ''மருமகனே! ஒருவன் இறைவனுடன் இருக்கும் பொழுது, அவன் இடைவிடாது அவனைப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, எவ்வாறு அவன் இறைவனுக்கு மாறு செய்யத் துணிவான்? அவன் தனக்கு அடிபணிந்து ஒழுகும் வண்ணம் இறைவன் அவனைக் கண்காணித்து வருவானல்லவா?'' என்று கூறினர்.

இதன்பின் இறைவனைத் தியானித்துக் கொண்டிருப்பதில் அவருக்கு ஒரு தனி இன்பம் ஏற்பட, அவர் தனித்திருந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவரின் பெற்றோர்கள் அவரைப் பள்ளிக்கு அனுப்பி வைக்க எண்ணினர். அதனை அறிந்த அவர்தம் பெற்றோர்களை நோக்கி, ''அதனால் என் தியானத்திற்குப் பாதகம் ஏற்படுமோ என்று நான் அஞ்சுகின்றேன். எனினும் ஒன்று கூறுகிறேன். நீங்கள் ஆசிரியரிடம் பேசி எனக்கு ஒரு நாளைக்கு ஒரு மணி நேரமே பாடம் போதிக்க வேண்டும் என்றும், அதன்பின் என்னை என் போக்கில் விட்டு விட வேண்டும் என்றும் கூறுங்கள்'' என்று இயம்பினார். அவ்விதமே ஏற்பாடு செய்யப்பட்டது.

இவ்வளவுக்கும் அவருடைய வயது ஏழுதான். ஏழாவது வயதில் பள்ளிக்கு அனுப்பி வைக்கப்பட்ட அவர், அங்கு குர்ஆனை ஓதினார்.

அவ்விளம் வயதிலேயே அவர் தொடர்ந்து நோன்பு நோற்கத் துவங்கினார். அப்பொழுது அவர் உண்டு வந்த உணவு கோதுமை ரொட்டிதான்.

அவருக்குப் பன்னிரெண்டு வயதான பொழுது, மார்க்கம் பற்றி ஓர் ஐயம் ஏற்பட்டது. அதற்கு விளக்கம் வேண்டி அவர் பலரை அணுகிய போதினும், விளக்கம் கிடைக்கவில்லை. அதன்பின் பஸரா வந்து ஆங்குள்ள அறிஞர்களை அணுகி அதற்கு விளக்கம் வேண்ட, அவர்களும் தங்களுக்குத் தெரியாது என்று கூறிக் கையை விரித்து விட்டார்கள். இதன் பின் அப்பாதான் வந்து ஆங்கு வாழ்ந்தபேரறிஞர் ஹபீப் இப்னு ஹம்ஸா அவர்களை அணுகி, அதற்கு விளக்கம் வேண்ட, அவர்கள் அதற்குச் சரியான விளக்கம் பகர்ந்தனர். அது கண்டு அகமகிழ்ந்த அவர், அவர்களின் தாளில் அமர்ந்து சிலகாலம் கல்வி பயின்றார்.

இதன்பின் அவர் துஸ்தர் சென்றார். பகலெல்லாம் நோன்பும், இரவெல்லாம் தொழுகையுமாக அவர்தம் காலத்தைக் கழித்து வந்தார். அவர் ஒவ்வொரு நாளும் நோன்பைத் திறப்பது வைகறைக்கு முன்னுள்ள 'ஸஹ்ர்' நேரத்தில்தான். அப்பொழுது உப்பில்லா ரொட்டியை உண்டு, மீண்டும் நோன்பு நோற்று விடுவார். அவர் துஸ்தருக்கு வந்த புதிதில், ஒரு திர்ஹத்துக்குக் கோதுமை வாங்கி, மாவாக அரைத்து வைத்திருந்தது அவருக்கு ஓராண்டிற்குப் போதுமானதாக இருந்தது.

இதன் பின் மூன்று நாட்களுக்கு ஒரு தடவையும், பின்னர் ஐந்து நாட்களுக்கு ஒரு தடவையும், அதன் பின் வாரத்திற்கு ஒரு தடவையுமாக நோன்பு திறந்து வந்த அவர், பின்னர் இருபது நாட்களுக்கு ஒரு தடவையும், நாற்பது நாட்களுக்கு ஒரு தடவையும், எழுபது நாட்களுக்கு ஒரு தடவையுமாக நோன்பு திறக்கலானார். சிலபொழுது அவர், நாற்பது நாட்களுக்குப் பின் நோன்பு திறக்குங்கால், அவர் ஒரே ஒரு பாதாம் பருப்பை மட்டும் அருந்துவார். அதன் பின் வேறொன்றையும் அருந்தாது, மீண்டும் நோன்பு நோற்கத் துவங்கி விடுவார். மீண்டும் நாற்பது நாட்களுக்கு நோன்பு. இவ்வாறு அவர் இருபதாண்டுகள் தொடர்ந்து நோன்பு நோற்றுவந்தார்.

துவக்கத்தில் வயிறு ஒட்டினால், பலவீனமும் வயிறு நிரம்பினால் பலமும் ஏற்பட்டு வந்தது. ஆனால் பின்னரோ அது தலைகீழாக மாறி விட்டது. வயிறு ஒட்டினால் வலுவும் வயிறு நிரம்பினால் வலுவற்ற தன்மையும் ஏற்படலாயின. அது கண்ட அவர், தம் இருகை ஏந்தி, ''இறைவனே! எனக்கு இந்த இரு வேறு நிலைகள் ஏற்படுவதற்கு நீயே மூல காரணமாவாய். இந்த இருவேறு நிலைகளையும், வெவ்வேறு காரணங்களால் ஏற்படச் செய்தவனும் நீயேயாவாய். இந்த இருவேறு நிலைகளுமே இனிமேல் இந்த ஸஹ்லுக்கு ஏற்படாமல் நீ அருள்

பாலிப்பாயாக!' என்று இறைஞ்சினார். இவ்வாறு இறைஞ்சிய அந்த ஸஹல் என்பவர் யார்?

இவர்கள் துஸ்தர் என்ற ஊரில் பிறந்த பெரியார் ஆவர். இவர்களின் முழுப்பெயர் அபூ முகம்மது ஸஹ்ல் இப்னு அல்துஸ்தரீ என்பதாகும். ஹிஜ்ரி 200 ஆம் ஆண்டில் பிறந்த இவர்கள், வயதேறப் பெற்றதும் ஸுஃப்யான் அத்தௌரீ (ரஹ்) அவர்களை அணுகி, அவர்களிடம் ஆன்மீகக் கல்வி பயின்றனர். மக்காவில் வைத்து, துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்களைச் சந்தித்த இவர்கள், அவர்களிடமும் இரண்டாண்டுகள் கல்வி பயின்றார்கள்.

இவர்கள், தம் ஆசிரியர் துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்கள் மீது கொண்டிருந்த பக்தியோ அளவிடற் பாலதாகவும், வியப்பிற்குரிய தாகவும் அமைந்திருந்தது. ஒருதடவை இவர்கள் நான்கு மாதங்களாகத் தம் கால் விரல்களைத் துணியால்கட்டி வைத்திருந்ததை கண்ட துறவி ஒருவர், அதற்கான காரணத்தை வினவ, "ஒன்றுமில்லை" என்று பதில் கூறி விட்டார்கள். பின்னர் அத்துறவி எகிப்து நாடு சென்ற பொழுது அங்கு துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்களைச் சந்தித்த காலை, அவர்கள் தம் கால் விரல்களைத் துணியால் கட்டி வைத்திருப்பதைக் கண்டு யாது காரணம் என்று வினவ, 'காலில் வேதனையாக உள்ளது. அதனால் கட்டி வைத்துள்ளேன்' என்று மறுமொழி பகர்ந்தனர். "எத்தனை நாட்களாக வேதனை உள்ளது?" என்று அவர் மீண்டும் வினவ, "நான்கு மாதங் களாக" என்று அவர்கள் பதிலிறுத்தனர். அது கேட்டுப் பெரிதும் வியப் புற்ற அத்துறவி, சின்னாட்களுக்கு முன் துஸ்தரில் ஸஹ்ல் (ரஹ்) அவர் களைச் சந்தித்து வந்ததாகவும், அவர்களும் சென்ற நான்கு மாதங்களாகக் காலில் துணியைக் கட்டி வைத்திருப்பதாகவும் எடுத்துரைத்தனர். அது கேட்ட துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூத்தவர்களாய், 'ஸஹ்ல் போன்று என் மீது அன்பு செலுத்துபவர் எவர்?' என்று மகிழ்ச்சி மொழி பகர்ந்தனர்.

ஸஹ்ல் (ரஹ்) அவர்கள் என்றுமே திண்டு வைத்துச் சாய்ந்திருந்த தில்லை. ஒரு நாள் அவர்கள் வழக்கத்திற்கு மாறாகத் திண்டு வைத்துச் சாய்ந்திருப்பதைக் கண்ட ஒருவர் வியப்பு மேலிட்டவராய், அதற்கான காரணத்தை வினவிய பொழுது, "இதுகாறும் என் ஆசிரியர் துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்கள் உயிரோடிருந்ததால், நான் திண்டு வைத்து அமர்ந்த தில்லை. சில கணங்களுக்கு முன்தான், அவர்கள் இறப்பெய்தினார்கள். எனவே தான் நான் இவ்வாறு அமர்ந்தேன்" என்று கூறினர். பின்பு விசாரித்ததில் அதே நாள், அதே நேரத்தில் துன்னூன் மிஸ்ரீ (ரஹ்) அவர்கள் இறந்ததாகத் தெரியவந்தது.

சிறந்த சூபியாக விளங்கிய ஸஹ்ல் (ரஹ்) அவர்கள், திருக்குர் ஆனுக்கு ஒரு சிறு விளக்கவுரை எழுதியுள்ளார்கள். இவர்களைப் பலர் அணுகி ஆன்மீகக் கல்வி பயின்றனர். அவர்களில் ஒருவரான இப்னு ஸாலிம் என்பவர் தாம் பின்னர் ஸாலிமிய்யா தரீக்காவை ஏற்படுத்திய வராவார்.

துவக்கத்தில் இவர்கள் ஒரு வெள்ளியன்று ஜும்ஆதொழப் பள்ளி சென்ற பொழுது, மக்கள் பள்ளியில் குழுமி விட்டார்கள். எனவே இவர்கள் மக்களைத் தாண்டிக் கொண்டு முன் வரிசையில் போய் அமர்ந் தார்கள். அப்பொழுது இவர்களின் வலப்புறத்தில் கம்பளி உடை அணிந்து வீற்றிருந்த ஓர் அழகிய இளவல் இவர்களைப் புன்முறுவலுடன் நோக்கி ''ஸஹ்லே! நலமா?'' என்று வினவினார். ''ஆம்'' என்று பதில் கூறிவிட்டு, ''என்னை முன்பின் அறியாத இவருக்கு எவ்வாறு என் பெயர் தெரிய வந்தது?'' என்று வியப்புடன் வீற்றிருந்தனர்.

இப்பொழுது கத்தீபும் மேடை மீது ஏறித் தம் சொற்பொழிவை நிகழ்த்தத் துவங்கி விட்டார். இவர்களுக்கோ சிறுநீர் கழிக்க வேண்டிய தவிர்க்க முடியா நிலை ஏற்பட்டது. மீண்டும் மக்களைத் தாண்டிக் கொண்டு வெளியே செல்வது பண்பாகாது என்ற எண்ணத்துடன் யாது செய்வதென அறியாது அங்கு இவர்கள் வீற்றிருந்தனர். அப்பொழுது அந்த அழகிய இளவல் மீண்டும் இவர்களை நோக்கி, ''ஸஹ்லே! நீர் சிறுநீர் கழிக்க விரும்புகின்றீரோ?'' என்று வினவினார். 'ஆம்' என்று இவர்கள் பதில் கூறியதும், அவர்கள் இவர்களைத் தம் துணியால் மூடி, ''உம் தேவையை நிறைவு செய்து கொண்டு விரைவில் திரும்பித் தொழுகையில் கலந்து கொள்ளும். கண்களை மூடிக் கொள்ளும்'' என்று கூறினார் அவர்.

அவ்வாறே இவர்கள் கண்களை மூடித் திறந்த பொழுது ஒரு தலை வாயிலின் முன் இவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது, ''தலைவாயிலின் உள்ளே அடியெடுத்து வைத்து நடந்து செல்லும், அல்லாஹ் உமக்குப் பேரருள் பாலிப்பானாக!'' என்று அசரீரி முழங்கியது. அவ்விதமே இவர்கள் உள்ளே நடந்து சென்ற பொழுது, அங்கு ஒரு மாளிகையைக் கண்டனர். அதன் அருகில் நின்று கொண்டிருந்த பேரீச்ச மரத்தின் அண்மையில் கழிப்பிடம் ஒன்றும் காணப்பட்டது. அங்கு சென்று மலஜலம் கழித்து, அங்கிருந்த மதுரமான தண்ணீரால் தூய்மை செய்து கொண்டதோடு, அதனை அள்ளித் தங்களின் உடலில் ஊற்றிக் குளிக்கவும் செய்தனர்.

குளித்து முடித்ததும், மீண்டும், ''உம் தேவை நிறைவு பெற்றுவிடின், நிறைவு பெற்றுவிட்டது என்று கூறும்'' என்று அசரீரி முழங்கியது.

'நிறைவு பெற்றுவிட்டது' என்று இவர்கள் கூறியதும், இவர்களின் அருகிலிருந்த இளவல் தாம் இவர்கள் மீது போர்த்திய துணியை நீக்கினார். இவர்கள் பள்ளியில் தாம் வீற்றிருந்த இடத்திலேயே அமர்ந்திருக்கக் கண்டார்கள். அப்பொழுது இவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், திகிலுக்கும் அளவில்லை.

இதன்பின் தொழுகை நடந்தது. தொழுது முடிந்ததும் அந்த இளவல் எழுந்து சென்றார். இவர்களும் அவரைப்பின் தொடர்ந்து சென்றார்கள். அவர் ஒரு சந்துக்குள் நுழைந்தார். இவர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அதைக் கண்ட அவர். ''ஸஹ்லே! நீர் பார்த்ததை நம்ப வில்லையா?'' என்று வினவினார். ''அப்படியெல்லாம் இல்லை. மீண்டும் அதனைக் காண விழைகிறேன்'' என்று கூறினர். மீண்டும் அவர் இவர் களைத் தம் போர்வையால் போர்த்தினார். அடுத்தகணம் இவர்கள் அந்த மாளிகையின் அண்மையிலுள்ள பேரீச்ச மரத்தின் அருகாமையில் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது இவர்களின் வாயிலிருந்து 'ஆமன்து பில்லாஹி' (நான் அல்லாஹ்வை விசுவாசித்தேன்) என்ற சொற்கள் வெளிவந்தன. அதுகேட்ட அவர் ''ஸஹ்லே! எவர் அல்லாஹ்வுக்கு வழிப் படுகிறாரோ, அவருக்கு அனைத்தும் வழிப்படும். நீர் அதனைத் தேடும். கண்டு கொள்வீர்'' என்று கூறினார். அவரின் இச்சொற்கள் இவர்களின் கண்களைக் கசியச் செய்தன. கண்களைத் துடைத்து, மீண்டும் கண்களைத் திறந்து பார்த்த பொழுது, அந்த இளவலையும் காணோம். அந்த மாளி கையும் காணோம். முன்னர் இவர்கள் நின்று கொண்டிருந்த சந்தில் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது இவர்களுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. என்று காண்போம் அந்த இளவலை என இவர்கள் ஏங்கினார்கள். ஆனால், அவரை இவர்கள் அதன்பின் என்றும் காண வில்லை. இந்நிகழ்ச்சிக்குப் பின் இவர்களின் வாழ்வில் பெரும் திருப்பம் ஏற்பட்டது. இறை வணக்கத்தில் இவர்கள் அல்லும் பகலும் ஈடுபட லாயினர். அதன் காரணமாக இவர்களின் தகுதி நாளுக்கு நாள் உயர்ந்து வந்தது.

ஓரிரவு இவர்கள் அயர்ந்து உறங்குகால். இப்லீஸைக் கனவில் கண்டு ''எது உனக்குக் கடினமாக உள்ளது?'' என்று வினவினர். அதற்கு அவன் ''நல்லடியார்கள் அல்லாஹ்வுக்காக அர்ப்பணிக்கக் கூடிய இதயம் தான் எனக்குக் கடினமாக உள்ளது'' என்று கூறினான். அவர்கள் அவனை வலுவாகப் பிடித்துக்கொண்டு, ''நீ ஏகத்துவம் பற்றி யாதும் கூறாதவரை நான் உன்னை விட மாட்டேன்'' என்று இயம்பினர், அப்பொழுது அவன் அதுபற்றி விவரமாக எடுத்துரைத்தான். அதன்பின் அவர்கள், அவனை விட்டுவிட்டனர்.

''பசியாலும், நோயாலும், பாவம் செய்யாமலிருப்பதாலும், அனைத்தும் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கின்றன என்று கருதிப் பொறுமையை மேற்கொள்வதாலுமே மனிதன் இறைவனின் அன்புக்குப் பாத்திரமாகின்றான்'' என்று கூறிய அவர்கள், பெரும்பாலும் பட்டினி யாகவே தம் காலத்தைக் கழித்து வந்தனர். ஷஃபானில் அதிகமாக நோன்பு நோற்று வந்த அவர்கள், ரமலானில் ஒருவேளையைச் சிறிதளவு உண்டு நோன்பு நோற்று வந்தார்கள். நாளொன்றுக்கு ஒரு தடவை உண்பது தான் ஸித்தீக்குகளின் பண்பாடு'' என்று அவர்கள் கூறினர். ''பசித்திருப் பதைவிட, அதிக நன்மை செய்யக் கூடிய ஒன்றை, வயிறு நிறைய உண்பதைவிட மறுமையில் அதிகத் தீமை பயக்கும் ஒன்றைத் தாம் கண்டதில்லை'' என்று மேலும் அவர்கள் கூறுங்கால் இயம்பினர்.

''ஒருவனின் செயலும் வணக்கமும், பசியோடிருப்பதால் தான் தூய்மையுறுகின்றன. பசியோடிருப்பவனிடமிருந்து ஷைத்தான் ஓடிவிடு கிறான். எல்லாவிதத் தீமைகளும் வயிறு புடைக்க உண்பதால் தான் ஏற்படுகின்றன. எனவே பசியோடிருக்க அருள் கூறுமாறு இறைவனிடம் இறைஞ்சுங்கள்'' என்று அவர்கள் எடுத்துரைத்தார்கள். ''பசித்தும், தனித்தும், விழித்தும், வாய்பொத்தியும் இருப்பவரே அப்தால்கள் என்னும் இறைநேசச் செல்வராக இயலும்'' என்றும் கூறினார்கள்.

அவர்கள் நாளொன்றுக்குச் சிறிதளவே உணவுண்ட போதினும், ஹலாலான (ஆகுமான) உணவையே உண்டு வந்தனர். அணுவத்தனை ஹராமான (ஆகாத) உணவு தம் வயிற்றுக்குள் புக அவர்கள் அனுமதித் ததே இல்லை. ''ஹராமான உணவை உண்பதால், ஏழு உறுப்புகள் அதாவது கண், காது, கை, கால்கள், வயிறு, நாவு இன உறுப்பு ஆகியவை குற்றவாளியாகின்றன. அவற்றின் மூலம் அவன் அறிந்தோ அறியாமலோ குற்றமிழைத்து விடுகின்றான். ஆனால் அதற்கு மாறாக, ஹலாலான உணவருந்துவதனால், அந்த ஏழு உறுப்புகளும் நற்பேறு பெறுகின்றன. அவற்றின் ஒவ்வோர் அசைவும் வணக்கத்தின்பாற் பட்டனவாக ஆகி விடுகின்றன'' என்று அவர்கள் கூறினர்.

கௌவரத்தைத் தேடி அலைவதோ, ஏழ்மையைக் கண்டு அஞ்சுவதோ, ஆன்மீக வாழ்விற்கு மரண அடி கொடுப்பதாகும்'' என்றும் அவர்கள் கூறினார்கள்.

''ஒவ்வொரு நாளும் இறைவன் நமக்குப் பின் வரும் செய்தியை அனுப்பி வைக்கிறான். ''என்னுடைய அடியானே! நான் ஒவ்வொரு நாளும் உன்னைச் சந்திக்க எத்துணை ஆவலுள்ளவனாக இருக்கின்றேன். ஆனால் நீயோ, என்னை நினைவு கூர்கின்றாயில்லையே. நான் உன்னை என்பால் அழைக்கின்றேன். ஆனால் நீயோ முகத்தைத் திருப்பிக் கொண்டு

வேறு பக்கம் செல்கின்றாய். உன்னுடைய வழியில் தென்படும் துன்பங்களையும், தடைகளையும் நான் நீக்குகின்றேன். ஆனால் நீயோ, ஒவ்வொரு நாளும் புதுப்புதுப் பாவங்களைச் செய்வதில் முனைந்து நிற்கின்றாய். நீ எத்துணை அநியாயக்காரனாய் இருக்கிறாய் பார். நியாயத் தீர்ப்பு நாளின் போது நீ என்னிடம் என்ன மறுமொழி கூறுவாய்?'' இதுவும் அவர்களின் திருவாய் உதிர்த்த பொன் மொழியாகும். இவ்வாறு கூறிய அவர்கள், இறைவனின் அன்பையும், அருளையும் பெறுவதற்காக, அல்லும் பகலும் அவனின் நினைவிலேயே மூழ்கித் திளைத்து வந்தார்கள். இறையாண்மையை எய்தப் பெறுவதற்காக நள்ளிரவில் விழித் தெழுந்து, இறைவனை வணங்கி வந்த அவர்கள்''இறைவனின் உண்மையான அடியார்கள் உறக்க மீக்குற்று இரவில் அயர்ந்து உறங்கிவிடின், அவர்களைத் தொழுவதற்கு எழுப்புவதற்காக இறைவன் ஒரு வானவரை அனுப்பி வைக்கிறான்'' என்றும் எடுத்தியம்பினார்கள்.

இறைவனையே தம்முடைய உயரிய நண்பனாகக் கருதி வாழ்ந்த அவர்கள், தம் மாணவர்களை நோக்கி, ''இறைவனை மறந்திருக்கும் சர்வாதிகாரி, மோசம் செய்யும் அறிஞன், இறைவனைப் பற்றிச் சரியாகத் தெரியாத போலிஞானி ஆகிய மூவருடனும் நட்புக் கொள்ளாதீர்கள்'' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

மேலும் அவர்கள் தங்களைப் பற்றிக் கூறுங்கால் ''என்னுடைய வாழ்க்கையின் குறிக்கோள், குர்ஆனையும், நபிவழியையும் பிசகாது பின்பற்றுவதும், ஹலாலான உணவு உண்பதும், பிறர் எனக்கு எத்துன்பம் இழைப்பினும், அவற்றைப் பொருட்படுத்தாது அவர்களுக்கு அணுவத்தனைத் துன்பமும் இழைக்காதிருப்பதும், பிறருடைய உரிமைகளை மதித்து நிறைவேற்றுவதுமாகும்'' என்று இயம்பினார்கள்.

மாணவர் குழாம் புடை சூழ ஆன்மீக அவனியில் அரசோச்சி வந்த அவர்கள், துவக்கத்தில் பல்வேறு எதிர்ப்புகளுக்கும் ஆளாயினர். ஒரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''ஒருவன் இறைநேசச் செல்வனாக இருந்த போதினும், சாதாரண மனிதனாக இருந்த போதினும், இறைவனுக்கு அடிபணிந்த நல்லடியானாக இருந்த போதினும் இல்லாத போதினும், இறைவனிடம் ஒவ்வொரு கணமும் பாவ மன்னிப்புக் கோரிக் கொண்டிருப்பது அவன் மீது கடமையாக உள்ளது'' என்று கூறினர்.

அக்காலை துஸ்தரில் ஒரு துறவி வாழ்ந்து வந்தார். அவர் தம்மைப் பெரிய அறிஞரென்றும், ஞானியென்றும் கருதிக் கொண்டிருந்தார். இச்செய்தி அவரின் செவிப்பட்டதும், அவர் சீறிச் சினந்தார். ''ஸஹ்ல் எவ்வாறு இவ்வாறு கூறலாம். நல்லோர்கள், தாங்கள் இறைவனுக்கு

அடிபணிந்து ஒழுகுவதற்காகவும், தீயோர்கள் தாங்கள் இறைவனுக்கு அடிபணிந்து ஒழுகாததற்கும் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோர வேண்டுமென்று அவர் கூறுகின்றாரா. என்ன?'' என்று அவர் வினவினார். இவ்வாறு கூறி, பாமரமக்களின் வெஞ்சினத்தை ஸஹ்ல் (ரஹ்) அவர்களின் மீது திருப்பிவிட்டார் அவர்.

அவ்வளவுதான், மக்களின் வெறுப்பு ஸஹ்ல் (ரஹ்) அவர்களின் மீது வடவாக்கினி போன்று கனன்றெழுந்தது. 'காஃபிர், காஃபிர்' என்று எங்கணும் கூக்குரல்கள் கிளம்பின. அது கேட்ட ஸஹ்ல்( ரஹ்) அவர்கள், சிறிதேனும் சினமுறவில்லை. தாங்கள் கூறியது சரியென மக்களுடன் வாதாடவும் விரும்பவில்லை. அவ்விதம் செய்வது எரியும் நெருப்பில் எண்ணெயை வார்ப்பது போன்றிருக்கும் என்பதை அவர்கள் நன்கு உணர்ந்தார்கள்.

அவ்விதமாயின் அவர்கள் என்ன செய்தார்கள்? ஒரு காகிதத்தை எடுத்தார்கள். அதனைப் பலதுண்டுகளாகப் பிய்த்து, அவை ஒவ்வொன்றிலும், தங்களின் உடைமைகளை, அதாவது தங்களுக்குரிய நிலம், வீடு, தளவாடங்கள், தங்கம், வெள்ளி ஆகியவற்றை ஒவ்வொன்றாக எழுதினார்கள். அதன்பின் மக்களை ஒருங்கழைத்து அமரச் செய்து, அவர்களின் தலை மீது அக்காகிதத் துண்டுகளைத் தூவினார்கள். எவர் கையில் எப்பொருள் பொறிக்கப்பட்ட காகிதத் துண்டு கிடைத்ததோ, அப்பொருளை அவருக்குத் தம் அன்பளிப்பாக - தம்மை இவ்வுலக பாசங்களிலிருந்து விடுவித்ததற்கான நன்றியின் அறிகுறியாக நல்கினார்கள். இவ்வாறு தம் உடைமைகள் அனைத்தையும் அன்பளிப்பாகப் பிறருக்கு வாரி வழங்கி விட்டு, அவர்கள் மக்கமா நகர் நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்.

இப்பொழுது அவர்களின் கையில் ஒரு சிறு செப்புக்காசேனும் இல்லை. இந்நிலையில் அவர்கள் கால் நோவ மக்கமாநகரை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் தம் மனத்தை நோக்கி, ''மனமே! நானோ இப்பொழுது கையில் ஒரு சிறு செப்புக் காசேனும் இல்லாத வறிய நிலையை எய்தி விட்டேன் என்பதை நீ நன்கு அறிவாய். எனவே நீ என்னிடம் எதனையும் வாங்கித் தருமாறு கேட்காதே. கேட்பின் அது உனக்குக் கிடைக்காது'' என்று கூறினர்.

''நல்லது'' என்று கூறியது அவர்களின் மனம். அவர்கள் கூஃபா வந்தடைந்ததும், அவர்களின் மனம் அவர்களை நோக்கி,''தாங்கள் இதுவரை இவ்வளவு தொலை நடந்து வந்து விட்டீர்கள். நான் தங்களிடம் யாதொன்றும் கேட்கவில்லை. எனக்கு இப்பொழுது ரொட்டியும் மீனும்

தின்ன வேண்டுமென்று ஆசையாக உள்ளது. என்னுடைய இந்த ஆசையை நிறைவேற்றி வைப்பின், தாங்கள் மக்கா போய்ச் சேரும் வரை தங்களிடம் நான் யாதொன்றும் கேட்க மாட்டேன்'' என்று கூறியது.

அதுகேட்டு ஸஹ்ல் (ரஹ்) அவர்களுக்கு யாது செய்வதென்று விளங்கவில்லை. தம்முடைய அவல நிலையை ஒளிவு மறைவின்றித் தம் மனத்திற்குத் தாம் எடுத்துரைத்திருந்த போதினும், அது இவ்வாறு கேட்கின்றதே. என்ன திமிர்! என்ன திமிர்!! என்று அவர்கள் முனகினார்கள். துரோகத்திற்குப் பேர் போன அந்நகரில் அடியெடுத்து வைத்ததும், தம் மனமும் தமக்குத் துரோகம் செய்யத் துவங்கிவிட்டதே என்று அவர்கள் உருகினார்கள். அதன்பின் அதற்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டுமென்று அவர்கள் திடமாக எண்ணினார்கள்.

அவர்கள் கூஃபாவின் தெருக்களிலே சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களின் கண்முன் ஒருவன் ஒட்டகத்தைச் செக்கில் இணைத்துச் செக்காட்டிக் கொண்டிருந்தது தென்பட்டது. அவர்கள் அவனை அணுகி, ''இவ்வொட்டகத்திற்குக் கூலியாக அதன் எசமானனிடம் நாளொன்றுக்கு எவ்வளவு கொடுக்கின்றாய்?'' என்று வினவினார்கள். ''இரண்டு திர்ஹங்கள்'' என்று பதில் கூறினான் அவன். ''அவ்வொட்டகத்தைப் பிடித்துக் கட்டிவிட்டு, அதன்வேலையை என்னிடம் கொடு. அதற்குக் கூலியாக எனக்கு ஒருதிர்ஹம் தந்தால் போதும்'' என்று கூறினார்கள். அதற்கு அவனும் இணங்கினான். ஒரு நாள் முழுவதும் அவர்கள் பட்டப் பகலில், பதை பதைக்கும் வெயிலில் ஒட்டிய வயிற்றுடன் ஒரு திர்ஹம் கூலிக்குச் செக்கிழுத்தார்கள். அவர்கள் படும் அவதியைக் காணச் சகியாது கதிரவன் குட திசையில் போய்த் தன் முகத்தை மறைத்துக் கொள்ளும் வரையிலும் செக்கிழுத்தார்கள்.

அதன்பின் அவன் தந்த ஒரு திர்ஹத்தைப் பெற்று ரொட்டியும் மீனும் வாங்கித் தம் முன் வைத்துக் கொண்டு, ''மனமே! நீ விரும்பியவற்றை வாங்கித் தந்துவிட்டேன். உண்பாயாக! இனிமேல் உனக்கு இவை வேண்டுமென்றால் கூறு. ஆனால் ஒரு வார்த்தை. நீ இவற்றை விரும்பும் பொழுதெல்லாம், நீ ஒரு நாள் முழுவதும் செக்கிழுக்கத் தயாராய் இருக்க வேண்டும், தெரிகின்றதா?'' என்று கூறினார்கள்.

இதன்பின் அவர்கள் மக்கமா நகர் நோக்கி நடந்து செல்லுங்கால் கானகத்தின் நடுவே கூனிக்குறுகி ஒரு கிழவி தள்ளாடித் தள்ளாடி நடந்து வருவதைக் கண்டு, அவள்மீது இரக்கமுற்று, அவளுக்கு ஏதாவது உதவ எண்ணித் தம் சட்டைப் பையிலே கையை விட்டார்கள். அப்பொழுது அவள் விண்ணை நோக்கித் தம் கையை உயர்த்திப் பொற்காசுகளை எடுத்து ''ஸஹ்லே! நீர் உம் சட்டைப் பையிலிருந்து பணம் எடுக்கின்றீர்.

ஆனால் நானோ வெறும் சூன்யத்திலிருந்து பொற்காசுகளை எடுத்து விட்டேன்.'' என்று கூறி மறைந்துவிட்டாள்.

பின்னர் அவர்கள் மக்கா சென்று கஃபாவை இடம் சுற்றி வருங்கால், அவளைக் கண்டார்கள். அவள் கஃபாவைச் சுற்றி வருவதற்குப் பதிலாக, கஃபா அவளைச் சுற்றி வந்தது. அப்பொழுது அவள், அவரை நோக்கி, ''கஃபாவை இடம் சுற்றி வருவதற்காக இங்கு வருபவர்கள் கஃபாவின் எழிலையே இங்கு காண்பர். அவர்கள் தாம் கஃபாவைச் சுற்றி வர வேண்டும். ஆனால் அல்லாஹ்வுக்காக இங்கு வருபவர்கள், அல்லாஹ் வின் ஜமாலை (பேரழகை) இங்கு தரிசிப்பர். தம்மையும் உலகையும் மறந்து வரும் அவர்களைக் கஃபா தான் சுற்றி வரும். பின்னவர் போன்று தான் நீர் இருக்க வேண்டும்'' என்று அவள் கூறினாள்.

மக்காவில் பல்வேறு மெய்ஞ்ஞானிகளைச் சந்தித்து அளவளாவி மகிழ்ந்த அவர்கள், சிலகாலம் சென்ற பின், தம் தாயகம் மீண்டனர். அப் பொழுது மக்கள் அவர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களுக்குப் பெரிதும் மரியாதை செய்யலாயினர். அவர்கள் அல்லாஹ்வின் பேரரு ளுக்கு உரியவர் என்றும், அவர்களின் இறைஞ்சுதல் இறைவனால் ஏற்றுக் கொள்ளப் பெறும் தகுதி பெற்றதென்றும் பேசிக் கொண்டார்கள். அவர்களை 'ஸையிதுஸ் ஸூஃபிய்யா' என்றும் அழைத்தார்கள்.

இக்காலை அப்பகுதியை ஆண்டு வந்த அம்ரு இப்னு லைத் என்ற மன்னர் கடுமையான நோய்க்கு ஆளானார். மருத்துவர்கள் எவ்வளவோ முயன்றும் அவர் நலம் பெறவில்லை. மருந்து பயனளிக்காததைக் கண்ட அவர், இனிமேல் அல்லாஹ்விடம் இறைஞ்சுவதன் மூலமே நலன் பெற வேண்டுமென்று முடிவுக்கு வந்தார். எவருடைய இறைஞ்சுதல், இறை வனால் ஏற்றுக் கொள்ளப் பெறும் தகுதி வாய்ந்ததோ, அத்தகு நல்லார் எவரேனும் உள்ளனரா என்று விசாரித்துக் கொண்டிருந்த அவரிடம், ஸஹ்ல் (ரஹ்) அவர்களின் பெயர் கூறப்பட்டது. உடனே அவர்களை அழைத்து வருமாறு ஆள் அனுப்பினார் அவர்.

''அதிகாரத்திலுள்ளவர்களுக்கு அடிபணிந்தொழுகுங்கள்'' என்ற அல்லாஹ்வின் திருக்கட்டளையை நினைவு கூர்ந்து, அரண்மனைக்கு எழுந்தருளினர் ஆண்டகையார். ஆங்கு சென்ற அவர்கள் ஆசனத்தில் அமர்வதற்கு முன் அரசரை நோக்கி, ''நீர் நிரபராதிகளான பலரைச் சிறை செய்துள்ளீர். எனவே முதலில் நீர் செய்த தவறுகளுக்கு இறைவனிடம் மன்னிப்புக் கோரி, அவர்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்யும். ஏனெனில், தாம் செய்த பாவங்களுக்குப் பச்சாத்தாபப்பட்டு மனம் வருந்தி யவர்களுக்காக இறைவனிடம் இறைஞ்சுதலே இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்'' என்று கூறினர்.

அடுத்த கணமே அவர்கள் அனைவரையும் விடுதலை செய்யுமாறு ஆணையிட்ட அரசர், தாம் செய்த தவறுகளுக்கு இறைவனிடம் அழுது கெஞ்சி மன்னிப்புக் கோரினார்.

இதன்பின் ஸஹ்ல் (ரஹ்) அவர்களின் திருக்கரங்கள் விண்ணை நோக்கி உயர்த்தப்பட்டன. ''இறைவ எம்பெரும! அவர் உனக்கு முரண் பட்டு நடந்ததற்காக, அவரைத் துன்பத்தில் ஆழ்த்தியது போன்று, நான் உனக்கு வழிப்பட்டு நடந்ததற்காக, அவருக்கு நலன் நல்குவாயாக! அவரு டைய உள்ளத்தை பச்சாதாபத்தால் நிரப்பியது போன்று, அவருடைய உடலை நற்சுகத்தால் நிரப்புவாயாக!'' என்று அவர்கள் இறைஞ்சினார்கள்.

அவர்கள் இவ்வாறு இறைஞ்சிக் கையைக் கீழே போடு முன், படுத்த படுக்கையாய்க் கிடந்த அம்ரு இப்னு லைத் உடல் நலன் பெற்று எழுந்தார். அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட மகிழ்வுக்கும், நன்றி உணர்வுக்கும் அளவில்லை.

''அடிகளாரே!என் பொருட்டு, என் இல்லம் வந்து இறைவனிடம் இறைஞ்சி, எனக்கு நலன் பெற்றுத் தந்த தங்களின் பொற்றாமரைச் சேவடிகளை என்சிரம் மீது வைத்துப் போற்றுகின்றேன். தாங்கள் செய்த பேருதவிக்கு எளியேனாகிய நான் என்ன கைம்மாறு செய்யவல்லேன்? எனினும் என் அன்புக் காணிக்கையான இதனை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று கூறி ஒரு பொற்கிழியை அவர்களிடம் நல்கினார்.

''வேண்டேன்; வேண்டேன். இறையருளே எனக்கும் போது மானது'' என்று கூறி அவ்விடம் விட்டு அகன்றனர் ஆண்டகையார். மாணவர் குழாம் அவர்களைப் பின் தொடர்ந்து சென்று கொண்டி ருந்தது.

அப்பொழுது மாணவர்களில் ஒருவர் அவர்களை நோக்கி, ''ஷைகு அவர்களே! அப்பொற்கிழியைப் பெறாது மறுத்து விட்டீர்களே! அதனைப் பெற்று வந்திருப்பின், நாம் கடன்களைத் தீர்த்து அமைதி பெற்றிருக்கலாமே'' என்று கூறினார்.

''அப்படியா? நான் தவறு செய்து விட்டேனோ? நல்லது; அதனால் பாதகமில்லை. உமக்குப் பொன்தானே வேண்டும்? அதோ ஏறிட்டுப் பாரும்'' என்று கூறினார்கள் அவர்கள்.

அவ்வாறே மாணவரும் ஏறிட்டுப் பார்த்தார். அவர்கள் நடந்து சென்று கொண்டிருந்த வெளிமுழுவதும், பொன்னாலும் மணியாலும் நிரம்பிக் கிடப்பதைக் கண்டு, அவரால் அவருடைய கண்களையே நம்ப இயலவில்லை.

அப்பொழுது ஸஹ்ல் (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''அளவற்ற அருளாளனாகிய அல்லாஹ், இத்துணைப் பெரும்பேற்றினை எனக்கு நல்கி இருக்கும் பொழுது, எனக்கு அவருடைய பொற்காசின் தேவை எதற்கு?'' என்று கூறிப் பேச்சை முடித்தார்கள்.

அம்ர் இப்னு லைதுக்கு மட்டுமல்லாது, தம்மிடம் உதவி வேண்டி வரும் அத்தனை நோயாளர்களுக்கும் அவர்கள் தம் இறைஞ்சுதல் மூலம், நிவாரணம் அளித்தனர். ஆனால் நீண்ட நாளாக அவர்களுக்கு ஒரு வியாதி இருந்தது. அதற்கு அவர்கள் யாதொரு பரிகாரமும் செய்து கொள்ள வில்லை. இது பற்றி அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, அவர்கள் அளித்த இரத்தினச் சுருக்கமான பதில், ''நண்பனின் அடி வேதனை தராது''.

இவ்வாறு அவர்கள் கூறியதன் மூலம், இறைவன் என் நண்பன், அவனை நான் பெரிதும் நேசிக்கிறேன். என் ஆகமெங்கும் அவனுடைய அன்பு நிரம்பி வழிகிறது. எனவே அவன் எனக்கு நல்கிய நோய், எனக்குத் துன்பம் தரவில்லை. மாறாக, எனக்கு இன்பமே நல்குகிறது. அவ்வித மிருக்க நான் ஏன் அதற்குப் பரிகாரம் செய்து கொள்ள வேண்டும்'' என்பதைக் கூறாமல் கூறினார்கள் என்றே கொள்ள வேண்டும்.

அவர்கள் துன்பத்தில் உழலும் தம் நண்பர்களை நோக்கி 'அஹ்' என்று அல்லாஹ்வை அழையுங்கள். அது இறைவனின் திருப்பெயர்களில் ஒன்றாகும். அதன் காரணமாக நீங்கள் நிவாரணம் பெறுவீர்கள்'' என்று கூறினார்கள்.

இவ்வாறு அவர்கள் கூறிய போதினும், தாம் நோயுற்ற பொழுது, அதற்கு நிவாரணம் அளிக்கும் பொறுப்பை, இறைவனிடம் ஒப்படைத்து விட்டு, அவர்கள் வெறுமனே இருந்த போதினும், பிறர் நோயுற்ற பொழுது மருந்துண்ணுமாறே அறிவுரை பகர்ந்து வந்தார்கள்.

''நோயுற்ற பொழுது அதனைப் பொறுமையுடன் ஏற்று உட்கார்ந்து தொழுவதானது, நோயற்ற நிலையில் எழுந்து நின்று தொழுவதை விட மேலானதாகும்'' என்றும் அவர்கள் கூறினர்.

ஒருதடவை அவர்கள் பஸராவில் இருக்கும் பொழுது, சூடா னியர்கள் பஸராவில் புகுந்து, அதனைக் கொள்ளையிட்டார்கள். அங்கு அவர்கள் செய்த அட்டகாசமோ சொல்லுந் தரத்ததாயில்லை. அப் பொழுது மக்கள் ஸஹ்ல் (ரஹ்) அவர்களை அணுகி, ''இத்தனை கொடுமைகளையும் பார்த்துக் கொண்டு வெறுமனே வீற்றிருக்கின்றீர்களே. இறைவனிடம் எங்களுக்காக இறைஞ்சக் கூடாதா? அவன் தங்களின் இறைஞ்சுதலை ஏற்றுக் கொள்ளக் கூடுமே'' என்று கூறி முறையிட்டார்கள்.

சற்றுநேரம் யாதும் கூறாது வீற்றிருந்த அவர்கள், பின்னர் அவர்களை நோக்கி ''என்னை மதித்து வந்த நீங்கள் கேட்கின்றீர்கள். இந்த ஊரில் இறைவனின் அன்புக்குரியவர்கள் எவருமில்லை என்று எண்ணி விட்டீர்களா? அவனின் அன்பிற்குரிய நல்லடியார்கள் எங்கும் இருக்கிறார்கள். அவர்கள் விண்ணை நோக்கிக் கரம் ஏந்தி விட்டால், ஒரே நாளில் அநியாயக்காரர்கள் அனைவரும் அழிந்தொழிந்து விடுவார்கள். ஆனால் அவர்கள் அவ்விதம் செய்ய மாட்டார்கள்'' என்று கூறினர். ''ஏன்?'' என்று வினவினர் மக்கள்.

''அதற்குக் காரணம் அவர்கள் இறைவன் விரும்பாததை, விரும்பாதது தான். அநியாயக்காரர்களை இறைவன் உடனடியாகத் தண்டிக்க விரும்புவதில்லை. இறைவனின் அன்பிற்குரிய நல்லடியார்களைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்றே எண்ணுகிறேன். அவர்களுக்கு அபாரமான ஆற்றல் உண்டு. தம் தவ வலிமையால் அவர்கள் எதையும் ஆற்றக் கூடும். அவர்களின் இறைஞ்சுதல் உடனுக்குடன் ஏற்றுக் கொள்ளப்படும். எனினும் அவர்கள் அவசரப்பட்டு யாது ஒன்றும் செய்வதில்லை'' என்று விளக்கம் பகர்ந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் ஹஜ்ஜுச் செய்ய மக்கா சென்றிருந்த பொழுது, இருவர் கைகோத்த வண்ணம் கஃபாவைச் சுற்றி வந்து கொண்டிருப்பதைக் கண்டனர். அவர்களில் ஒருவர் மற்றவரைப் பார்த்து, 'யாஹையு, யாநூர், ரூஹ், ஸமீஅ அஸான் கல்பீ' என்று ஓதிக் கொண்டு வருமாறு கூறினார்.

அப்பொழுது அவர்கள் அவ்விருவரையும் அணுகி, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து ''ஐயன்மீர்! தாங்கள் கூறியதை நான் செவியுற்று மனனம் செய்து கொண்டேன். தாங்கள் யார் என்பதைத் தயை கூர்ந்து எனக்குத் தெரிவிக்கிறீர்களா? தங்களுக்கு இறையருள் பொழியுமாக!'' என்று வினயமாகக் கூறினர்.

அப்பொழுது அவர்களில் ஒருவர் அவர்களை நோக்கி, ''நான் கிள்ரு. அவர் என் சகோதரர் இல்யாஸ். நாங்கள் மொழிந்த அந்தக் கலிமாவை நீர் மனனம் செய்து கொண்டது அறிந்து பெரிதும் மகிழ்ச்சி. நீர் அதனை ஓதி வரின், உலகில் உமக்கு எவ்வித இழப்பு ஏற்படினும், உமக்கு அதனால் எவ்விதத் துன்பமும் ஏற்படாது. ஆனால் ஓர் எச்சரிக்கை! உலகாயுத நன்மைகளை நாடி நீர் அதனை ஓதக் கூடாது'' என்று பதிலுரைத்தார்.

மற்றொரு தடவை அவர்கள் 'ஹஜ்'ஜுச் செய்ய மக்கா சென்றிருந்த பொழுது, சந்தித்த மற்றொருவரைப் பற்றி அவர்கள் இதோ கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''நான் ஒரு 'வலீ'யைப் பார்த்தேன். அவரின் பெயர் அப்துல்லாஹ் இப்னு சாலிஹ் என்பதாகும். அவர், ஓரிடத்திலும் நிலையாகத் தங்கி வாழாது ஊர் ஊராகச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார். இறுதியாக அவர் மக்கா வந்து அங்கு நீண்ட நாட்கள் தங்கியிருந்தார். அப்பொழுது நான் அவரை அணுகி, ''தாங்கள் இங்கு அதிக நாட்கள் தங்கியிருக்கிறீர்களே'' என்று வியப்புடன் கூறினேன். அதற்கு அவர், 'நான் ஏன் இங்குத் தங்கி யிருக்க மாட்டேன்?நான் பார்த்த ஊர்களில் இதைப் போன்று இறை அருளும் நற்பேறும் (ரஹ்மத்தும் பரக்கத்தும்) பெற்ற ஊர் வேறொன்று மில்லை. வானவர்கள் இங்கு, இரவும் பகலும் வந்து போய்க் கொண்டி ருக்கிறார்கள். இங்குப் பற்பல விநோதக் காட்சிகளையெல்லாம் காண் கிறேன். இங்கு வானவர்கள் பற்பல மனித உருவங்களில் தோன்றிக் கஃபாவைச் சுற்றி வருவதைக் காண்கின்றேன். நான் காண்பவற்றை யெல்லாம் கூறின், ஈமான் (இறை நம்பிக்கை) வலுவாக அமையப் பெற்றிராதவர்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள்'' என்று பதிலிறுத்தார்.

நான் அவரிடம், ''தாங்கள் கண்ட புதுமைகள் சிலவற்றை அல்லாஹ் வுக்காக என்னிடம் கூறுங்கள்'' என்று வினயமாக வேண்டினேன்.

அவர் கூறினார்: ''எந்தக் காமிலான வலீயும், ஜும்ஆ இரவில் இங்கு வராமல் இருப்பதில்லை. நான் இங்குத் தங்கியிருப்பது, அவர்களின் ஆச்சரியமான பேச்சுக்களையும், நிலைகளையும் பார்ப்பதற்காகவே யாம். நான் இங்கு ஓர் இறைநேசச் செல்வரைச் சந்தித்தேன். அவரின் பெயர் மாலிக் இப்னு காசிம் என்பதாகும். அவரின் கையில் உணவுண்டதன் அடையாளம் இருந்தது. அதைக் கண்ட நான், ''இப்பொழுது தான் தாங்கள் உணவுண்டு விட்டு வருகிறீர்களா?'' என்று வினவினேன். அதற்கு அவர் 'அஸ்தஃபிருல்லாஹ்! நான் என் கைகளால் உணவெடுத்து உண்டு, சில வாரங்களாகின்றன. நான் இன்று இங்கு வைகறைத் தொழுகையில் கலந்து கொள்வதற்காக என் அன்னை அவசரம் அவசரமாகத் தம் கரங்களால் எனக்கு உணவெடுத்து ஊட்டினார். அதில் சிறிது என் கையில் பட்டுவிட்டது'' என்று கூறி விட்டு, ''நான் இருக்கும் இடத்திற்கும் மக்கா வுக்கும் இடையே தொள்ளாயிரம் ஃபர்ஸங் தொலை உள்ளது என்பதை நீர் அறிவீரா?'' என்று வினவினார். நான் ''ஆம்'' என்றேன். அதுகேட்டு அவர் 'அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறிவிட்டு, ''இன்று எனக்கு இறைவன் ஒரு முஃமினை (இறை நம்பிக்கையாளரை) காட்டித் தந்தான்'' என்று கூறினார்.

மேலும் அவர் ''இப்ராஹீம் (அலை) அவர்களும், அவர்களின் கூட்டத்தாரும், மகாமெ இப்ராஹீமில் வந்து குழுமுகிறார்கள். மூஸா (அலை) அவர்களும் ஏனைய நபிமார்களும், ருக்னெ யமனி, ருக்னெ

ஷாமி ஆகியவற்றின் பக்கல் வந்து அமர்ந்திருக்கிறார்கள். ஈஸா (அலை) அவர்களும், அவர்களைப் பின்பற்றிய கூட்டத்தினரும், ஹஜ்ருல் அஸ்வதின் பக்கல் வந்து வீற்றிருக்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் புடைசூழ ருக்னெ யமனியின் பக்கல் வந்து அமர்ந்திருக்கிறார்கள்'' என்று எடுத்துரைத்தார்.

இறையண்மையை எய்தப் பெற்ற இந்நல்லடியார், அவ்வப்பொழுது சில அற்புதங்களை நிகழ்த்தியுள்ளனர். எனினும் அவை அனைவருக்கும் தெரிய வந்து பகிரங்கமாவதை அவர்கள் விரும்பவில்லை.

ஒருநாள் ஒருவர் அவர்களை அணுகி ''ஷைகு அவர்களே! தாங்கள் நீரின் மேல் நடப்பதாகக் கேள்வியுற்றேனே. அது உண்மையா?'' என்று வினவிய பொழுது, அது கேட்டு முறுவலித்த அவர்கள், ''பள்ளிவாயலி லுள்ள மோதினாரைக் கேளும். அவர் உண்மையாளர்'' என்று கூறி னார்கள். அவ்வாறே அவர் மோதினாரை, அது பற்றி வினவிய பொழுது, ''நான் அதனைக் கண்டதில்லை. ஆனால் அவர்கள் ஒரு தடவை குளிப்பதற்காகக் குளத்தில் இறங்கிய பொழுது, கால் தடுமாறிக் கீழே வீழ்ந்து விட்டார்கள். அப்பொழுது நான் அவர்களைக் கைதூக்கிக் காப்பாற்றி இராவிடின் அவர்கள் நீரில் மூழ்கி இறந்திருப்பார்கள்'' என்று கூறினர்.

ஆனால் உண்மையில் அவர்கள் சிலபொழுது நீரின் மேல் நடந்து செல்வதைச் சிலர் பார்த்துள்ளார்கள்.

ஒருநாள் அவர்கள் பள்ளிவாயலில் வீற்றிருந்த பொழுது, ஒரு புறா அவர்களின் முன்னிலையில் செத்து வீழ்ந்தது. அது கண்ட அவர்கள் ''இன்று ஷாஹ் கர்மானி காலமாகி விட்டார்'' என்று கூறினர். பின்னர் விசாரித்துப் பார்க்கும் பொழுது அவர்கள் கூறியது முற்றிலும் உண்மை யாக இருந்ததைக் கண்டு மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

புலி, சிங்கம் முதலான கொடிய வனவிலங்குகள் அவர்களைக் காண வந்து கொண்டிருந்தன. அவற்றை அவர்கள் அன்போடு தடவிக் கொடுத்து உணவளித்து வந்தார்கள். அதன் காரணமாக அவர்களின் இல்லம் 'பைத்துஸ் ஸிபா' (வனவிலங்குகளின் இல்லம்) என்று அழைக்கப்பட்டு வந்தது.

வானவர்களும், ஜின்களும், ஷைத்தான்களும் தம்மை வந்து சந்தித்துத் தம்முடன் உரையாடி விட்டுச் செல்கின்றனர் என்று அவர்கள் கூறினர். அவர்களின் இக்கூற்றை மக்கள் நம்ப மறுத்து, அவர்களை ஊரை விட்டு விரட்டினர். அவர்கள் பஸரா நோக்கி வெருண்டோடினர்.

பின்னர் அவர்கள் மக்களை விட்டும் அகன்று, அபதானுக்கும், பஸராவுக்கும் இடையேயுள்ள ஒரு தீபகற்பத்தில் வாழ்ந்து வந்தார்கள். காரணம், ஒருவர் ஹஜ்ஜு செய்ய மக்கா சென்றார். ஹஜ்ஜு செய்துவிட்டுத் திரும்பிய அவர் நம் உடன் பிறந்தாரிடம், ''நான் ஸஹ்லை அரஃபாத் வெளியில் பார்த்தேன்'' என்று கூறினார். அது கேட்ட அவர் வியப்பு மீக்குற்றவராய், ''என்ன இவ்வாறு கூறுகிறீர்கள்? நான் இவ்வாண்டு துல்ஹஜ் பிறை ஒன்பதில் அவர்களுடன், அவர்களின் தவச்சாலையில் வீற்றிருந்து உரையாடிக் கொண்டிருந்தேனே'' என்று கூறினார். ''அப் படியா! வாருங்கள். நாம் அவர்களிடம் சென்று இதுபற்றி விசாரிப்போம்'' என்றார் அவரின் உடன்பிறந்தார். இருவரும் அவர்களிடம் வந்து இதுபற்றி விசாரித்த பொழுது, ''இதனை எவரிடமும் கூறாதீர்'' என்று சொன்னார்கள் அவர்கள். பின்னர் தாம் அங்கிருந்தால் தமக்குப் பேரும் புகழும் ஏற்பட்டு விடுமென்று அஞ்சிய அவர்கள், அவ்விடத்தை விட்டும் வெருண்டோடி, அந்தத் தீபகற்பத்தில் தனித்து வாழ்ந்து வந்தனர்.

ஒருநாள் ஒருவர் அவர்களிடம் வந்து தமக்கு அறிவுரை நல்குமாறு வேண்டினார். அதற்கு அவர்கள், அவர் மறுமைப் பேற்றைப் பெற விரும்பினால் 1. அதிகமாகத் தூங்காமை 2. அதிகமாக உண்ணாமை 3.அதிகமாகப் பேசாமை 4 தனிமை ஆகியவற்றை மேற்கொள்ளுமாறு கூறினர்.

அப்பொழுது அவர் அவர்களை நோக்கி ''நான் தங்களுடன் தங்கி இருக்க அனுமதி வழங்க வேண்டும்'' என்று வேண்டினார். அதற்கு அவர்கள் ''நம்மில் ஒருவர் இறந்து விடின் நீர் எவருடன் இருப்பீர்?'' என்று வினவினர். ''அல்லாஹ்வுடன்'' என்று மறுமொழி பகர்ந்தார் அவர். ''அவ்விதமாயின் இப்பொழுதே அவனுடன் தொடர்பு கொண்டிரும்,'' என்று கூறிய அவர்கள் பின்னர் அவரை நோக்கி, ''நல்லது உமக்கு வனவிலங்குகள் மீது அச்சம் இருக்குமாயின் என்னுடன் இருக்க வேண்டாம்'' என்று கூறினர். அப்பொழுது ''அவர்கள் தங்களைச் சந்திக்க சிங்கம், புலி ஆகியவை வருகின்றன என்று பேசிக் கொள்ளப்படுகிறதே. அது உண்மை தானா?'' என்று வினவினர். அதற்கு அவர்கள் ''நாயிடத் தில் நாய்கள் வருகின்றன'' என் தாழ்மையுடன் கூறினர்.

மற்றொரு நாள் அவர்களின் மாணவர்கள் அவர்களை நோக்கி ''பக்கீர் எப்பொழுது மன அமைதி பெறுகின்றான்?'' என்று வினவினர். அதற்கு அவர்கள் ''வாய் பேசாதிருக்கும் பொழுது'' என்று விடை யிறுத்தார்கள்.

''மக்களில் எவர்களுடன் நாங்கள் தொடர்பு கொள்ள வேண்டும்?'' என்று அவர்கள் வினவிய பொழுது ''மெய்ஞ்ஞானிகளுடன், ஏனெனில்

அவர்கள் இவ்வுலகையும், இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு பொருளையும், பொய்மை என்று கருதுகின்றார்கள்'' என்று பதிலிறுத்தார்கள்.

மேலும் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி ''அமல் (நற்செயல்) இல்லாமல் ஒருவனின் ஈமான் (இறை நம்பிக்கை) நிறைவு பெறாது.''

''எவன் அல்லாஹ்வுக்குத் தானாகவே வணக்கம் நிகழ்த்த வில்லையோ, அவனை, சூழ்நிலை மனிதனுக்கு வணக்கம் நிகழ்த்துமாறு செய்து விடுகிறது.''

''எவனுடைய மனம் இறை அச்சத்துடன் உள்ளதோ, அவனை சைத்தான் அணுகுவது கூட இல்லை.''

''மனிதர்களை இழிவுக் கண்களுடன் நோக்க வேண்டாம். ஏனெனில், அவர்கள் நபிமார்களின் பிரதிநிதிகளாவர்'' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

மேலும் அவர்கள் பேசுங்கால், ''நான்கு நற்பண்புகளைப் பெறும் வரையில் ஒருவன் முழுமையான நம்பிக்கையைப் பெற முடியாது. 1. கடமையை நிறைவேற்றுவது 2. நல்ல உணவை உண்பது 3. தீயவற்றைத் தவிர்ந்து கொள்வது 4. ஏற்படும் சூழலைப் பொறுமையோடு ஏற்றுக் கொள்வது ஆகும்'' என்று அவர்கள் எடுத்தியம்பினார்கள்.

மேலொரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''அறியாமையே எல்லாக் குற்றங்களிலும் கொடியது'' என்று கூறினர். ''அதை விடக் கொடியது எது?'' என மாணவர்கள் வினவிய பொழுது, ''ஒருவன் தன் அறியாமையை உணராதிருப்பது'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

[illegible]

[illegible]

மற்றொருவர் அவர்களை அணுகி ''நம் அடிப்படை யாது?'' என்று வினவிய பொழுது, ''உண்மை, தாராளத் தன்மை, துணிவு ஆகியவை யாகும்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

அதுபோல் அவர் மேற்கொண்டும் தமக்கு அறிவுரை வழங்குமாறு வேண்டிய பொழுது ''இறையச்சம், வெட்க உணர்வு, 'ஹலால்' ஆன உணவு ஆகியவற்றைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள் அவர்கள்.

'மார்க்கக் கல்வியைத் தவிர உள்ள அனைத்துக் கல்வியும், உலகாயுதக் கல்வியேயாகும். மார்க்கக் கல்வியைச் செயல்படுத்தும் பொழுது, அது மறுமைக்கானதாக ஆகிவிடுகிறது. 'இக்லாஸ்' இல்லாது செய்யப்படும் அனைத்துச் செயல்களும் பயனற்றவையேயாகும். கற்றோரைத் தவிர உள்ள அனைவரும் இறந்தவர்களேயாவர். கற்றதைச் செயலாற்றாதவர்கள் அனைவரும் மயக்க நிலையில் உள்ளவர்களே யாவர். இக்லாஸோடு செயலாற்றாத கற்றவர்கள் அனைவரும், தவறிழைப்பவர்களேயாவர். இக்லாஸோடு செயலாற்றக் கூடிய கற்றவர்கள், தங்களின் முடிவு நன்மையாக முடியும் வரை பயத்தோடு தான் வாழ்கிறார்கள்'' என்று அவர்கள் எடுத்துரைத்தார்கள்.

ஒருவன் நான்கு செயல்களை ஆற்றும் வரை அவனுடைய இறை நம்பிக்கை முழுமை பெறாது. அவையாவன 1. ஃபர்ளையும் சுன்னத்தையும் ஒழுங்காக நிறைவேற்றுதல் 2. உண்பதில் எச்சரிக்கையை மேற்கொள்ளுதல் 3. மார்க்கத்தில் விலக்கப்பட்டவற்றை, வெளியிலும் மறைவிலும் விட்டொழித்தல் 4. இச்சட்டங்களை இறக்கும் வரை தவறாது பின்பற்றி ஒழுகுதல்.

'[illegible] ([illegible]) [illegible] உண்மையில் மனிதர்களில் உயர்ந்தவர், அல்லாஹ்வுக்கு [illegible] ([illegible]) [illegible] உண்மையில் மனிதர்களில் உயர்ந்தவர், அவனுக்கு [illegible] [illegible] அவனுக்கு [illegible]'' என்று அவர்கள் கூறினார்கள்.

'ஒருவன் இவ்வுலகில் அதிகமாக இறை வணக்கத்தில் ஈடுபட்டான் [illegible] இல்லை [illegible] இல்லை'' என்று கூறிக் [illegible]. 'எவர்கள் [illegible] ([illegible]) [illegible], அவர்களை, [illegible] ([illegible]) [illegible] [illegible] இருக்கிறான்'' [illegible] அவர்கள் [illegible].

ஆனால், ஏனையோர் அவர்களுக்கு மாறான கருத்தைப் பெற்றுள்ளனர். இத்திருவசனத்திற்கு அவர்கள் 'நாம் எவருக்கு வழிகாட்டுகின்றோமோ, அவர்கள் நமக்காகப் பெரிதும் முயற்சி யாற்றுகின்றார்கள்'' என்று விளக்கம் பகர்ந்து, ''எவரும் இறையருள் இல்லையெனில், தம் வணக்கத்தால் மட்டும் உய்வெய்த இயலாது'' என்று கூறுகின்றார்கள். தம் கூற்றுக்கு ஆதரவாக ''அல்லாஹ்வின் அருள் இல்லையெனில், நான் கூடச் சுவனம் புக இயலாது'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறிய மணிவாசகத்தை அவர்கள் எடுத்தியம்புகின்றனர்.

பாவமன்னிப்பு என்றால், ஒருவன் தான் முன்னர் செய்த பாவச் செயல்களை மறந்து விட்டிருப்பதல்ல. அவற்றை எப்பொழுதும் நினைந்து வருந்திக் கொண்டிருப்பதாகும். அவ்விதம் செய்தால் தான் அவன், தான் செய்த பற்பல நற்செயல்களைப் பற்றிப் பெருமையுறாதிருப்பான்'' என்று அவர்கள் கருத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் ஜுனைது (ரஹ்) அவர்களும் ஏனையோரும், இதற்கு மாற்றமான கருத்தைப் பெற்றிருந்தனர். பாவமன்னிப்பு என்றால், ஒருவன் தான் முன்னர் செய்த பாவச் செயல்களை மறந்து விடுவதும் ஆகும். ஏனெனில், எப்பொழுது ஒருவன் தாம் செய்த பாவச் செயல்களுக்காக மனம் வருந்தி பாவமன்னிப்புக் கோருகின்றானோ, அப்பொழுதே அவன் இறை நேசனாகி விடுகிறான். இறைநேசன் எப்பொழுதும் இறை நினைவிலே திளைக்க வேண்டும். அவ்விதம் அவன் இறைநினைவில் திளைக்கும் பொழுது, அவன் தாம் முன்னர் செய்த பாவச் செயல்களை நினைந்து வருந்துவது தவறாகும். அவ்விதம் அவன் வருந்துவது, இறைவனுக்கும் அவனுக்கும் இடையில் ஒரு திரை போன்று அமைந்து விடுகிறது'' என்று அவர்கள் கருதினார்கள்.

ஸஹ்ல் (ரஹ்) அவர்கள், அளவற்ற பொறுமையாளராக இருந்தனர். துன்பத்திலும் அவர்கள் பொறுமையோடு இறைவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டிருந்தனர். ஒரு நாள் ஒருவர் அவர்களை அணுகி, ''என் வீட்டில் கள்வன் புகுந்து, ஆங்கிருந்த அனைத்துப் பொருள்களையும் களவாடிச் சென்று விட்டான்'' என்று கூறிய பொழுது ''ஷைத்தான் உம் உள்ளத்தில் புகுந்து உம் ஈமானை (இறை நம்பிக்கையை) களவாடிச் சென்று விட்டால் என் செய்வீர்?'' என்று அவரை மடக்கினார்கள்.

ஒருதடவை அவர்கள் தம் மாணவர் ஒருவரை நோக்கி ''அல்லாஹ்'' என்று கூறிக் கொண்டிரு. நாளைக்கும் கூறு. அதற்கு அடுத்த நாளும் கூறு,'' என்று அறிவுரை பகர்ந்தார்கள். அவ்வாறே அவர் கூறிக் கொண்டிருந்து விட்டு, நான்காவது நாள் அவர்களிடம் வந்த பொழுது, ''அதனை இரவிலும் கூறு, உறக்கத்திலும் அதனை நீ கூறும் வண்ணம்

பழக்கப்படுத்திக் கொள்'' என்று அவர்கள் இயம்பினர். அவ்வாறே அவர் செய்ய, அவர் உறக்கத்தில் வாய்புலம்பினால் கூட ''அல்லாஹ், அல்லாஹ்'' என்றே வாய் புலம்பத் துவங்கி விட்டார். அதன்பின் அவர்கள் அவரை நோக்கி, ''இனி மேல் நீ அதனை வாயால் உச்சரித்துக் கொண்டிருக்க வேண்டாம். உன் அனைத்து இயல்புகளும் அவனுடைய நினைவிலே மூழ்கித் திளைக்குமாக!'' என்று கூறினர். அவ்விதமே அவர் அனைத்தையும் மறந்து, அல்லாஹ்வின் நினைவிலே அல்லும் பகலும் மூழ்கித் திளைத்தார். ஒரு நாள் அவர் தம் இல்லத்தில் வீற்றிருக்கும் பொழுது, ஒரு மரக்கட்டை அவருடைய தலையில் விழுந்து இரத்தம் சொட்டியது. அப்பொழுது கீழே விழுந்த ஒவ்வொரு சொட்டு இரத்தமும், 'அல்லாஹ்' என்று ஒலி எழுப்பியது.

ஸஹ்ல் (ரஹ்) அவர்கள் சிறந்த மெய்ஞ்ஞான மேதையாக விளங்கினர். அவர்கள் சில பொழுது தொடர்ச்சியாக இருபத்தைந்து நாட்கள் வரையில் தன்னுணர்வற்று, மெய்ஞ்ஞான போதையில் மூழ்கி விடுவர். அப்பொழுது அவர்கள் உண்ணவோ, உறங்கவோ செய்யார்கள். கடுங் குளிரில் அவர்களுக்கு இந்நிலை ஏற்படினும், அவர்களின் உடலெல்லாம் வியர்த்து, அவர்களின் சட்டையெல்லாம் வியர்வை நீரால் தொப்பலாகி விடும்.

அவர்கள் மெய்ஞ்ஞான போதையில் மூழ்கி இருக்கும் இக்காலை, மார்க்க அறிஞர்கள் எவரும் அவர்களை அணுகி மார்க்க விஷயங்கள் பற்றி ஐயத் தெளிவு வேண்டின், ''இந்நிலையில் என்னிடம் அவைபற்றி யெல்லாம் யாதொன்றும் வினவாதீர்கள். நான் இப்பொழுது கூறும் சொற்களால் நீங்கள் யாதொரு நற்பலனும் பெறமாட்டீர்கள்'' என்று இயம்புவார்கள்.

ஒரு நாள் அவர்களைக் காணச் சென்ற சிலர், அவர்கள் மிகவும் இளைத்திருப்பதைக் கண்டு, ''தாங்கள் என்ன உண்ணுகின்றீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''ஹையுல் கையூம் என்ற திக்ரே (துதியே) என்னுடைய உணவு'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். அது கேட்ட அவர்கள், ''அதைப் பற்றி நாங்கள் வினவவில்லை. தாங்கள் உண்ணும் உணவைப் பற்றி வினவுகிறோம்'' என்று கூறிய பொழுது, ''இறை துதியே (திக்ரே) என்னுடைய உணவு'' என்று மறுமொழி பகர்ந்தார்கள். ''அதைப் பற்றி நாங்கள் வினவவில்லை. தாங்கள் தங்களின் வயிற்றிற்கு என்ன உணவு நல்குகின்றீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''வயிற்றைப் படைத்தவன் வயிற்றிற்கு உணவு நல்குவான். அப்பொறுப்பை அவனிடமே ஒப்படைத்து விட்டேன்'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

அவர்கள் நபி மொழி திரட்டிய நல்லோர்களில் ஒருவரான இமாம் அபூதாவூத் (ரஹ்) அவர்கள் மீது கொண்டிருந்த அன்போ, அளப்பரியதாக இருந்தது. ஒரு நாள் அவர்கள், இமாம் அவர்களை அணுகி, ''ஓர் அலுவலின் காரணமாக வந்தேன்'' என்று கூறினர். ''என்ன அலுவல்?'' என்று புன் முறுவலுடன் வினவினர் இமாம். ''தாங்கள் சம்மதிக்காத வரையில் நான் அதைக் கூறமாட்டேன்'' என்றார்கள் அவர்கள். ''நல்லது நான் சம்மதிக்கிறேன். கூற வந்ததைக் கூறுங்கள்,'' என்றார்கள் இமாம். உடனே அவர்கள், ''அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஹதீதுகளைச் சொன்ன தங்களின் நாவை நீட்டுங்கள். அதனை நான் உறிஞ்சிக் கொள் கிறேன்'' என்றார்கள். இமாம் அவர்கள் மறு வார்த்தையின்றி தம் நாவை நீட்ட அவர்கள் அதனை உறிஞ்சினார்கள்.

அவர்கள் இவ்வுலகில் மற்றவர்கள் போன்று வாழ்ந்து வந்த போதினும், அவர்களுடைய எண்ணம் முழுவதும் அல்லாஹ்வைப் பற்றியும், மறுமையைப் பற்றியுமாகவே இருந்தது. ''நான் எவருடனாவது நட்புக் கொள்ளின் அபூபக்ருடைய நட்பையே விரும்புவேன். ஆனால் இறைவன் மீது நான் கொண்டுள்ள நட்பு, வேறு எந்த நட்புக்கும் இடம் தரவில்லை'' என்று அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் கூறியது போன்று, இவர்களும் ''நான் முப்பதாண்டுகளாக இறைவனுடன் வசனித்துக் கொண்டுள்ளேன். ஆனால் மனிதர்களோ, நான் அவர் களுடன் உரையாடிக் கொண்டிருப்பதாகவே எண்ணிக் கொண்டுள் ளார்கள்'' என்று இயம்பினர்.

''இக்லாஸ் என்பதன் அடையாளம் என்னவெனில், தொழுகை நேரம் வந்ததும், ஒருவனுடன் உள்ள வானவர் அவனைத் தொழுமாறு உணர்த்துவார். அவன் உறங்கிக் கொண்டிருப்பின், அவனை விழித்தெழுமாறு செய்வார்'' என்று அவர்கள் கூறினர். இந்த இக்லாஸே அவர்கள் முதுமையில் நடக்க முடியாது படுத்தபடுக்கையாகக் கிடக்கும் பொழுது கூடத்தொழுகை நேரம் வந்ததும், அவர்களை எழுந்துசென்று தண்ணீர் எடுத்து 'உளுச்' செய்து தொழுமாறும், தொழுது முடிந்ததும் முன்னர் போன்று கை, கால் முடங்கிப் படுத்தப்படுகையாய்க் கிடக்கு மாறும் செய்தது.

அவர்கள் தம் இறுதி நாட்களில் வயிற்றுப் போக்கால் பெரிதும் அவதிக்காளாயினர். தொழுகை நேரம் வந்ததும், அது நின்று விடுவதும், தொழுது முடிந்ததும், அது அவர்களைத் தொடர்ந்து கொள்வதும் விந்தையினும் விந்தையாக இருந்தது.

ஆனால் இதனினும் விந்தை, அவர்கள் இத்தகு நிலையிலும் நோன்பு நோற்றவர்களாக இருந்ததேயாகும். இதைப் பற்றி அபூதல்ஹா அல்

மாலிகி (ரஹ்) அவர்கள் கூறும் பொழுது, 'அவர்கள் பிறந்த அன்றும் இறந்த அன்றும் நோன்பு நோற்றவர்களாக இருந்தனர். நண்பகலில் பிறந்த அவர்கள், பொழுதடையும் வரையில் தாய்ப்பால் அருந்தவில்லை. இறந்த நாளும் அவர்கள் உணவருந்தவில்லை. நோன்புடனே அவர்கள் உயிர் நீத்தார்கள்'' என்று இயம்புகின்றனர்.

அவர்களை இறப்பு அண்மியபொழுது, அவர்களைச் சூழ நானூறு மாணவர்கள் வீற்றிருந்தனர். அப்பொழுது அவர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து ''தங்களுக்குப் பின் தங்களின் ஆசனத்தில் அமர்ந்து எங்களுக்கு வழிகாட்டிச் செல்பவர் யார்?'' என்று வினவிய பொழுது, அவர்கள் அக் காலை நெருப்பு வணங்குபவராக இருந்த ஷாத்தில் என்பவரின் பெயரைக் குறிப்பிட்டனர். இதைக் கேட்டதும், அவர்களின் மாணவர்களுக்கு ஏற்பட்ட வியப்புக்கும், வெறுப்புக்கும் அளவில்லை. ''ஷைகு அவர் களுக்கு மூளை தடுமாறிவிட்டது. எனவே தான் அவர்கள் இவ்வாறு உளறுகின்றார்கள்'' என்று அவர்களில் சிலர் தங்களுக்குள் முணுமுணுத் தார்கள். மற்றும் சிலரோ ''அவர்களுக்கு அறிவும் ஆற்றலும் வாய்ந்த நானூறு மாணவர்கள் இருக்க, அவர்களுக்குப் பின் அவர்களின் ஆசனத்தில் அமர இந்த நெருப்பு வணங்குபவனான ஷாத்தில் தானா கிடைத்தான். இஃதென்ன விபரீதமாக உள்ளது'' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

இதனை விளங்கிக் கொண்ட ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்கள், ''என்ன, கூட்டம் கூட்டமாக அங்குமிங்கும் கூடி நின்று பேசிக் கொள் கின்றீர்கள்? நீங்கள் நினைப்பது, பேசிக் கொள்வது ஆகிய அனைத்தையும் நான் நன்கறிவேன். பேசாது அவரை அழைத்து வாருங்கள்'' என்று தன் மாணவர்களை நோக்கிப் பணித்தனர். அவ்வாறே அவர்கள் சென்று அவரை அழைத்து வந்தார்கள்.

ஷாத்தில் வந்ததும், ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்கள் அவரைத் தம் அருளொழுகும் கண்களால் ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார்கள். அதன்பின் அவர்கள் அவரை நோக்கி ''ஷாத்தில்! என் முடிவு நெருங்கி விட்டது. நான் இன்னும் சிலகணங்களில் இறந்துவிடப் போகிறேன். நான் இறந்த மூன்றாம் நாள் பிற்பகல், நீர் என் ஆசனத்தில் அமர்ந்து மக்களுக்கு அறிவுரை பகர்ந்துவாரும்'' என்று கூறினார்கள். இதுவே அவர்களுடைய இறுதி வாக்கியங்களாக இருந்தன. அடுத்தகணம் அவர்களின் உயிர், அவர்களின் உடலை விட்டும் பிரிந்தது.

இதன்பின் ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்களின் புனித உடல் நல்லடக்கம் செய்யப்படுவதற்காக துஸ்தர் நகரின் தெருக்கள் வழியாக எடுத்துச் செல்லப்பட்டது. அப்பொழுது தெருக்கள் முழுவதும் மக்கள்

வெள்ளம் வழிந்தோடியது. அத்துடன் போட்டியிட்டுக் கொண்டு, அவர்கள் சிந்திய கண்ணீர் வெள்ளமும் கரைபுரண்டோடியது.

அக்காலை துஸ்தர் நகரிலே எழுபது வயது நிரம்பப் பெற்ற ஒரு யூதக் கிழவர் வாழ்ந்து வந்தார். தெருவிலே ஒப்பாரியும், ஓலமுமாக இருப் பதைக் கண்டு, என்ன செய்தி என்பதைப் பார்த்தறிய வெளியே வந்தார் அவர். அப்பொழுது அவர்களின் வெற்றுடலைத் தூக்கிக் கொண்டு மக்கள், அவரின் இல்லத்தை நெருங்கி விட்டார்கள். அவர் வெளியே வரவும், அவர்கள் அவர்களின் பொன்னுடலைத் தாங்கி அவர் வீட்டின் முன்வரவும் சரியாக இருந்தது. அப்பொழுது அவர் கண்ட காட்சி அவரை மெய்சிலிர்க்கச் செய்தது. ''மனிதர்களே! நான் பார்ப்பதை நீங்களும் பார்க்கின்றீர்களா, என்ன? விண்ணகத்திலிருந்து வானவர்கள் இறங்கி, தங்களின் இறக்கைகளால் அவர்களின் பொன்னுடலின் மீது விசிறிக் கொண்டல்லவோ வருகின்றனர்'' என்று அலறினார் அவர். அடுத்த கணம் அவரின் வாயிலிருந்து இஸ்லாத்தின் திருக்கலிமா வெளி வந்தது. அவர் இஸ்லாத்தைத் தழுவி விட்டார்.

ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்கள் இறந்து இரண்டு நாட்கள் உருண்டோடி, மூன்றாவது நாளும் புலர்ந்தது. அன்று துஸ்தர் நகரமே அமளி துமளிப்பட்டது, ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்களின் இறுதி ஆணைப்படி நெருப்பு வணங்கும் ஒருவர் முஸ்லிம்களுக்குத் தலைமை தாங்கிக் குரு ஆசனம் வகிக்கப் போகின்றார் என்ற செய்தி, நாட்டின் நானாபக்கங்களிலும் காட்டுத் தீ போல் பரவி விட்டது. என்ன நடக் கின்றது என்று வேடிக்கை பார்க்க மக்கள் சாரிசாரியாக வந்து அந்நகரில் குழுமி இருந்தார்கள்.

பிற்பகல் ஆனது. ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்களின் மாணவர்கள் நானூறு பேர்களும், அணியணியாக வந்து அமர்ந்திருந்தார்கள். அவர்களின் உள்ளமெல்லாம் ஒரே குழப்பமயமாக இருந்தது. அவர்களின் எண்சாண் உடலெல்லாம் நாணத்தால் ஒரு சாணாகக் குறுகிப் போய்க் குந்திக் கொண்டு இருந்தது.

அப்பொழுது ஷாத்தில், நெருப்பு வணங்குபவர் அணியும் பூணூலும், தொப்பியும் அணிந்து, ஆங்கு வந்து அமர்ந்தார். அப்பொழுது அவை முழுவதும் சாவின் அமைதி நிலவியது.

அப்பொழுது அவர் ஆங்கு வீற்றிருந்த மக்களை நோக்கி, ''உங்களின் தலைவர் என்னைத் தம்முடைய பிரதிநிதியாக நியமித்து, என்னை உங்களுக்குத் தலைமை தாங்குமாறு பணித்து விட்டுச் சென்றுள்ளார்கள். அவர்கள் என்னை நோக்கி ''ஷாத்தில்! நீர் உம் பூணூலை அறுத்தெறியும்

காலம் வரவில்லையா?'' என்று கூறுவார்கள். ''இதோ அக்காலம் இப்பொழுது வந்து விட்டது'' என்று கூறி, ஒரு கத்தியை எடுத்துத் தாம் அணிந்திருந்த பூணூலை அறுத்தெறிந்தார்.

அதன்பின் அவர் மக்களை நோக்கி, ''உங்களுடைய தலைவர் என்னை நோக்கி ''ஷாத்தில்! நீர் உம்முடைய தொப்பியைக் கழற்றி எறியும் காலம் இன்னும் வரவில்லையா?'' என்று கூறுவார்கள். இதோ அக்காலமும் இப்பொழுது வந்துவிட்டது'' என்று கூறித் தாம் அணிந்திருந்த தொப்பியைக் கழற்றி வீசி எறிந்தார். இவ்வாறு செய்த அவர், அடுத்த கணம் ''நிச்சயமாக இறைவன் ஒருவன் என்றும், அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் என்றும் நான் சான்று பகர்கின்றேன்'' என்று கூறி இஸ்லாத்தைத் தழுவினார்.

பின்னர் அவர் மக்களை நோக்கி, ''உங்களின் தலைவர், உங்களுக்கு நல்ல அறிவுரை நல்கியுள்ளனர். அதன்படி ஒழுக வேண்டியது உங்கள் மீது கடமையாகும். ஷாத்திலாகிய நான், என்னுடைய வெளித் தடங்கல்களையெல்லாம் அறுத்தெறிந்து விட்டேன். அதே போன்று நீங்கள் ஒவ்வொருவரும் உங்களின் உள்ளின் உள்ளே, மறைத்து வைத்திருக்கும் தடங்கல்களையெல்லாம் வெட்டி வீசி எறியுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் மறுமையிலும் என்னைச் சந்திப்பீர்கள்'' என்று கூறினார். அவரின் இப்பேச்சு அவர்களின் உள்ளத்தை உருகச் செய்தது. அவர்கள் அனைவரும் கண்ணீர் விட்டு அழுதார்கள். அப்பொழுது அவர்களின் ஆன்மா வெளிச்சம் பெற்றது. தங்களுக்குச் சரியான தலைவரைத் தேர்ந்தெடுத்துத் தந்ததற்காக அவர்கள், ஸஹ்ல் துஸ்தரீ ( ரஹ்) அவர்கள் மீது புகழ்மாலை தொடுக்கத் துவங்கி விட்டார்கள்.

ஸஹ்ல் துஸ்தரீ (ரஹ்) அவர்கள் உயிரோடிருக்குங்கால், ஓரிடத்தில் தம் மாணவர் சிலருடன் அமர்ந்திருக்கும் பொழுது, அவ்வழியே சென்ற ஒரு மனிதரைச் சுட்டிக்காட்டி, ''அவர் ஓர் இரகசியத்தை வைத்துள்ளார்'' என்று கூறினர். அவர்கள் அவரை அணுகி அதுபற்றி விசாரிக்குமுன், அவர் கூட்டத்தில் கலந்து சென்று விட்டார். அவர்கள் இறந்த பின்னர் ஒருநாள் அவர்களின் மாணவர் ஒருவர் அவர்களின் அடக்க இடத்தின் அருகில் அமர்ந்திருந்த பொழுது, தம் ஆசான் சுட்டிக்காட்டிக் கூறிய அம்மனிதர், அவ்வழியே வருவதை இலக்குக் கண்டு கொண்டு, ''நீர் ஓர் இரகசியத்தை வைத்திருப்பதாக என்னுடைய ஷைகு கூறியுள்ளார்கள். இறைவன் மீது ஆணையாக, நீர் அதனை என்னிடம் சொல்லி விட்டுத்தான் போக வேண்டும்'' என்று கூறினார்.

அது கேட்ட அந்த வழிப்போக்கர், ஸஹ்ல் (ரஹ்) அவர்களின் அடக்க இடத்தை அணுகி ''ஸஹ்லே! பேசும்'' என்று கூறினார்.

அப்பொழுது அடக்க இடத்திலிருந்து ''வணங்குதற்குரியோன் இறைவன் ஒருவனேயன்றி வேறில்லை. அவன் இணை துணையற்றவன்'' என்ற சொற்கள் வெளிவந்தன.

அப்பொழுது அம்மனிதர் மீண்டும், அடக்க இடத்தை நோக்கி, ''வணங்குதற்குரியோன் இறைவன் ஒருவனேயன்றி வேறில்லை என்று கூறுவோரின் அடக்க இடம், ஒளியால் நிரம்பப் பெற்றிருக்கும் என்று கூறப்படுகிறதே. அது உண்மையா?'' என்று வினவினார்.

''ஆம்'' என்ற மறுமொழி அடக்க இடத்திலிருந்து கணீரென வெளிவந்தது.

அப்பொழுது தம் ஆசானின் மாண்பினை நன்கு உணர்ந்த அவர்களின் மாணவன் ஆனந்தப் பரவசமானார். 'ஸஹ்ல்' என் தலைவ! ஸஹ்ல் என் தலைவ!! உம்மைத் தலைவனாகப் பெற்ற என் பேறே பேறு'' என்று ஆயிரம், ஆயிரம் முறை கூறி மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்தார். அப்பொழுது சூழவிருந்த குன்றும், மலையும், கொடியும், செடியும்'' ஸஹ்ல் என் தலைவ! ஸஹ்ல் என் தலைவ! உம்மைத் தலைவனாகப் பெற்ற என் பேறே பேறு'' என்று எதிரொலி செய்தது.



# 8. அல் திர்மிதீ (ரஹ்)

இளம் நண்பர்கள் மூவர் கல்வி பயில்வதற்காக வேற்றூர் செல்ல முடிவு செய்தார்கள். அம்மூவரும் தம்மை ஈன்றெடுத்த பெற்றோர்களிடம் விடை பெறச் சென்றார்கள். அவர்களில், இருவருக்கு அவர்களின் பெற்றோர்கள், ''நலமே சென்று வா, மகனே!'' என்று வாழ்த்துரை கூறி வழியனுப்பி வைத்தனர். ஆனால், மூன்றாமவரையோ அவருடைய அன்னை ''கோ''வென அலறிக் கட்டித் தழுவி, ''மகனே! என்னை இத் தள்ளாத வயதிலா விட்டுச் செல்ல விரும்புகின்றாய்? எவரிடம் என்னை விட்டுச் செல்ல விரும்புகின்றாய்? எவர் எனக்கு உதவி செய்வார்கள்?'' என்று கண்ணீரும் கம்பலையுடன் கூறினார். அது கேட்டு அவரின் இளம் மகனின் உள்ளம் உருகியது. ''நல்லது, அம்மா! நான் உன்னுடனேயே இருக்கின்றேன். ஒன்றுக்கும் கவலைப்படாதே. அல்லாஹ் போது மானவன்'' என்று ஆறுதல் மொழி கூறினார் தனயன்.

எனினும் அவரின் தனயனுக்கோ, தம் இரு நண்பர்களும் கல்வி பயின்று அறிஞர்களாகத் திரும்பும் பொழுது, தாம் மட்டும் கல்வியறி வில்லாதவனாக இருக்கும் நிலை ஏற்பட்டு விடுமோ என்று ஆற் றொணாத் துயரமாக இருந்தது. தம் துயரத்தை இறைவனிடம் கூறித் தம் உள்ளத்தின் உள்ளே வெந்து உருகிக் கொண்டிருந்தார் அவர். ஒருநாள் அவர் ஒரு புதைகுழியின் அருகே அமர்ந்து அழுது கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கும் பொழுது, ஒரு நடுத்தர வயதினர் அவரை அணுகி, ''மகனே! ஏன் அழுது கொண்டுள்ளாய்?'' என்று வினவினார். அப் பொழுது அவ் இளவல் தம் அவல நிலையை அவரிடம் எடுத்துரைத்தார். அதுகேட்ட அந்த நடுத்தர வயதினர் புன்முறுவலுடன் அவரை நோக்கி, ''கவலைப்படாதே, மகனே! நான் ஒவ்வொரு நாளும் வந்து உனக்குக் கல்வி கற்றுத் தருகிறேன். நீ விரைவில் அவர்களை மிகைத்து விடலாம்'' என்று கூறினார். ''நல்லது'' என்று மறுமொழி பகர்ந்தார் அவ் இளவல்.

அடுத்த நாளிலிருந்து பள்ளி துவங்கியது. அந்த ஓராசிரியர், ஒரு மாணவர், பள்ளியின் இருப்பிடம் அந்தப் புதைகுழியின் அண்மையாகவே

இருந்தது. ஆங்கு வைத்தே அவ் ஆசிரியர் தம் மாணவருக்கு உலகாயதக் கல்வி, ஆன்மீகக் கல்வி ஆகிய அனைத்தையும் போதித்தார். ஒரு நாளல்ல, ஒரு மாதமல்ல, ஓராண்டல்ல, மூன்று ஆண்டுகள். அதன்பின் தான் அம்மாணவருக்கு, தம் ஆசான் சாதாரண மனிதரல்ல, ஆன்மீகப் பேரரசர் கிள்ரு (அலை) ஆவர் என்ற உண்மை விளங்கலாயிற்று. அப் பொழுது அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை.

இதன்பின் கிள்ரு (அலை) அவர்கள் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் வந்து திர்மிதீ (ரஹ்) அவர்களுடன் பல்வேறு செய்திகளையும் பேசிச் செல்வது வழக்கமாக இருந்து வந்தது. அதன் காரணமாக, திர்மிதீ (ரஹ்) அவர்கள், பெரிய ஞானாசிரியராக மாறினார்கள். வேற்றூர் சென்று கல்வி பயிலச் சென்ற இவர்களின் தோழர்கள் எல்லாம், அவர்களின் காலடியில் அமர்ந்து ஆன்மீகக் கல்வி பெறத்தக்க அத்தகைய மகோன்னத நிலையை அவர்கள் அடையப் பெற்றார்கள்.

ஒரு நாள் அவர்கள் தம் மாணவர் அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்களை நோக்கி, ''இன்று நான் உம்மை ஓரிடத்திற்கு அழைத்துச் செல்லப் போகிறேன்'' என்று கூறினார்கள்.

''நன்றாக, எங்கு வேண்டுமாயினும் அழைத்துச் செல்லுங்கள். தங்களின் விருப்பமே என்னுடைய விருப்பமுமமாகும்''என்று கூறினார் அவர்.

இருவரும் ஊரை விட்டுப் புறப்பட்டார்கள். அவர்கள் சிறிது தொலைதான் நடந்து சென்றிருப்பர். விரைவில் அவர்கள் பாலையின் நடுவேயுள்ள ஒரு பசும் புற்றரையை வந்தடைந்தார்கள். ஆங்கு ஒரு மர நிழலில், பொன்னாலான அரியணை ஒன்று போடப்பட்டிருந்தது. அதன் அருகில் நீரோடை ஒன்று ஒலித்தோடிக் கொண்டிருந்தது. அவ் அரியணை மீது அழகிய உடையணிந்த ஒருவர் வீற்றிருந்தார். திர்மிதீ ( ரஹ்) அவர்கள் அவரை நோக்கிச் சென்றார்கள். அவர்களைக் கண்டதும் அவர் தம் ஆசனத்தை விட்டெழுந்து, அவர்களை அவ்வாசனத்தில் அமர்த்தினர். சற்று நேரத்தில் மக்கள் பல திக்குகளிலிருந்தும் அங்கு வந்து சேர்ந்தார்கள். விரைவில் நாற்பது பேர் அங்குக் குழுமிவிட்டார்கள். அதன் பின் அவர்கள் விண்ணை நோக்கிச் சமிக்ஞை செய்தார்கள். விண்ணிலிருந்து உணவுத் தட்டு இறங்கியது. அதிலிருந்த உணவை அவர்கள் அனைவரும் உண்டனர். அதன் பின் திர்மிதீ (ரஹ்) அவர்கள் முன்னர் அரியணை மீது வீற்றிருந்த அவரை நோக்கிச் சில கேள்விகள் கேட்டார்கள். அவர் மறு மொழி பகர்ந்தார். ஆனால், அவர்கள் பேசிக் கொண்ட மொழி அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்களுக்கு விளங்கவே இல்லை.

அதன்பின் திர்மிதீ (ரஹ்) அவர்கள் ஆங்கிருந்த அனைவரிடமும் விடைபெற்றார்கள். திரும்பும் வழியில் அவர்கள் தம் மாணவரை நோக்கி, ''நீர் நற்பேறு பெற்று விட்டீர்!'' என்று கூறினார்கள்.

நொடியில் அவர்கள் இருவரும் திர்மிதீ வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்கள் திர்மிதீ (ரஹ்) அவர்களை நோக்கி ''ஷைகு அவர்களே! என்ன இது? எல்லாம் எனக்குப் புதுமையாக உள்ளதே. நாம் எங்கு சென்றோம்? தாங்கள் எவரோ ஒருவருடன் உரையாடினீர்களே. அவர் யார்'' என்று வினவினர்.

அதற்கு அவர்கள் ''நாம் இஸ்ரவேலர்களின் சீனாய்ப் பாலைவனத் திற்குச் சென்றோம். அங்கு என்னுடன் உரையாடியவர் ஒரு குத்பு ஆவார்'' என்று பதிலிறுத்தார்கள்.

''அப்படியா! ஒரு நொடியில் நாம் அங்கு எவ்வாறு போய்வர இயன்றது?'' என்று வியப்புடன் வினவினர் அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்கள்.

அதற்குத் திர்மிதீ (ரஹ்) அவர்கள், ''இறைவன், ஒருவனை ஓரிடத்திற்குக் கொண்டு செல்ல விரும்பின், அதனை ஒரு நொடியில் செய்து விடுகின்றான். அதனை ஏன் செய்தான்? எப்படிச் செய்தான்? என்றெல்லாம் நாம் கேட்கக் கூடாது. நம் பணி அவனுடைய ஆணைக்கு அடிபணிந்து ஒழுகுவது தான்'' என்று பதிலிறுத்தார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர் அபூபக்ர் வரக் (ரஹ்) அவர் களிடம், தாம் இதுகாறும் எழுதி வைத்திருந்த நூல்களையெல்லாம் அள்ளிக் கொடுத்து, அவற்றை ஆற்றிலே எறிந்து விட்டு வருமாறு கூறினர். அவை அனைத்தும் ஆன்மீக அறிவுச் செல்வங்கள் என்பதை நன்கு உணர்ந்த அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்கள், அவற்றை ஆற்றிலே தூக்கி எறியாது, தம் வீட்டிலே பூட்டி வைத்துவிட்டு, தம் ஆசானிடம் வந்து தாம் அவற்றை ஆற்றிலே எறிந்து விட்டதாகக் கூறினர். அது கேட்ட திர்மிதீ (ரஹ்) அவர்கள் ''அப்படியா! மிகவும் நல்லதாகப் போய்விட்டது. நீர் அவற்றை ஆற்றிலே எறியும் பொழுது என்ன பார்த்தீர்?'' என்று வினவினர்.

''ஒன்றும் பார்க்கவில்லையே'' என்று பதில் கூறினார் மாணவர்.

''அவ்விதமாயின் நீர் அவற்றை ஆற்றிலே எறியவில்லை. போய், அவற்றை ஆற்றிலே எறிந்து விட்டு வாரும்'' என்று கூறினார்கள் அவர்கள்.

இப்பொழுது அபூபக்ர் வரக் (ரஹ்) அவர்களுக்கு என்ன கூறுவ தென்றே விளங்கவில்லை. தம் ஆசான் ஏன் அவற்றை ஆற்றிலே எறியச்

சொல்கிறார்கள் என்பதும் அவர்களுக்கு விளங்கவில்லை. அவற்றை ஆற்றிலே எறிந்தால் என்ன அறிகுறி தென்படும் என்பதும் அவர்களுக்கு விளங்கவில்லை.

எண்ணக் குழப்பத்துடன் வெளியே சென்ற அவர்கள், நேரடியாகத் தம் இல்லம் சென்று, அந்நூல்களையெல்லாம் அள்ளிக் கொண்டு போய் ஆற்றிலே வீசி எறிந்தார்கள்.

அப்பொழுது ஆறு பிளந்ததையும் அதில் ஒரு திறந்த பேழை வெளிப் பட்டதையும், அந்நூல்களெல்லாம் அப்பேழையில் போய் விழுந் ததையும், பின்னர் அப்பேழை மூடிக் கொண்டதையும் அவர்கள் வியப்புக் கண்களுடன் பார்த்தனர்.

இதன்பின் அவர்கள் தம் ஆசானிடம் திரும்பி வந்த பொழுது, ஆசான் அவர்களை நோக்கி, ''இத்தடவையாவது அவற்றை ஆற்றிலே வீசி எறிந்தீரல்லவா?'' என்று வினவினர்.

''ஆம்'' என்று கூறிய அவர்கள் ''ஷைகு அவர்களே! இதிலுள்ள இரகசியம் என்னவென்பதைத் தாங்கள் அன்பு கூர்ந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்று வேண்டினார்கள்.

உடனே திர்மிதீ (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூத்தவர்களாய் ''நான் ஆன்மீகம் பற்றிய ஆழிய கருத்துக்களை எழுதி வைத்திருந்தேன். அவற்றை கிள்ரு (அலை) அவர்கள் தமக்கு வேண்டுமென்று கூறினார்கள். அவர்களின் ஏற்பாட்டின்படியே தான், ஒரு மீன் அப்பேழையைச் சுமந்து வந்தது. அல்லாஹ்வின் ஆணையின் மீது கடல் அப்பேழையை அவர்கள் பால் கொண்டு போய்ச் சேர்த்தது'' என்று கூறினர்.

சில காலமாக திர்மிதீ (ரஹ்) அவர்கள் கிள்ரு (அலை) அவர்களைக் காணாது பெரிதும் வருந்திக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் அவர்களின் வீட்டு வேலைக்காரி, குழந்தை மலம் கழித்த துணியை ஒரு தண்ணீர்ப் பாத்திரத்திலிட்டு அலம்பிக் கொண்டிருந்தாள். அப்பொழுது திர்மிதீ (ரஹ்) அவர்கள், தூய வெண்ணாடை புனைந்து பள்ளிவாசலுக்குப் புறப் படத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் அவளிடம் யாதோ கூற, அது கேட்டு வெகுண்ட அவள் அந்தப் பாத்திரத்திலிருந்த அசுத்த நீர் அனைத்தையும் அவர்கள் மீது வாரி இரைத்தாள். திர்மிதீ (ரஹ்) அவர்கள் யாதொன்றும் கூறவில்லை. அமைதியின் திருவுருவாக, பொறுமையின் புகலிடமாக அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அடுத்தகணம் கிள்ரு (அலை) அவர்கள் திடீரென அவர்களின் முன் திருத் தோற்றம் வழங்கினர். அவர்களைக் கண்டதும் திர்மிதீ (ரஹ்) அவர்களின்

அகத்தைக் கௌவிப் பிடித்திருந்த துன்ப மேகங்கள் வெருண்டோடின. கதிரவனைக் கண்ட செங்கமலம் போல் அவர்களின் முகம் மலர்ந்தது.

அவர்கள் எவர் மீதும் ஒரு போதும் சினமுறாததைக் கண்ட ஒருவர், அவர்களின் குடும்பத்தினரை அணுகி, ''திர்மிதீ (ரஹ்) அவர்கள் எப் பொழுதாவது தங்களின் மீது சினமுற்றிருக்கிறார்களா?'' என்று வினவினார்.

''ஆம்; சிலபொழுது அவர்கள் சினமுறுவார்கள் தாம்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

''அப்பொழுது அவர்கள் என்ன செய்வார்கள்?'' என்று மீண்டும் வினவினார் அவர்.

அப்பொழுது அவர்கள் எங்களைத் திட்டவோ, ஏசவோ செய்ய மாட்டார்கள். அன்று தான் அவர்கள் எங்கள் மீது அதிக அன்பு செலுத்து வார்கள். எனினும் அவர்கள் அன்று உண்ணவோ அருந்தவோ செய்ய மாட்டார்கள். இறைவனைத் தொழுது, ''இறைவ எம்பெரும! அவர் களை எனக்கு மாறாகச் செயலாற்றுமாறு நீ தூண்டும் வண்ணம் நான் உனக்கு என்ன குறை செய்தேன்? நான் உனக்கு, அறிந்தோ, அறியாமலோ குறை செய்திருப்பின், அதனைப் பொறுத்தருள்வாயாக! அவர்களை எனக்கு இணக்கமாக நடக்கச் செய்வாயாக!'' என்று அழுது, அழுது கெஞ்சி இறைஞ்சுவார்கள். அதிலிருந்து நாங்கள் செய்தது அவர்களுக்குப் பிடித்தமாக இல்லை. அதன் காரணமாக அவர்கள் வருத்தத்தோடு இருக் கிறார்கள் என்பதை நாங்கள் விளங்கிக் கொள்வோம்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

அவர்களின் காலத்தில் துறவி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் எப்பொழுது பார்த்தாலும், அவர்களைக் குறை கூறிக் கொண்டே இருந் தார். அது அவர்களின் செவியிலும் விழுந்தது. எனினும் பொறுமையின் இருப்பிடமாகிய அவர்கள் அதனைப் பொருட்படுத்தவில்லை.

அவர்களுக்கு உரியதாக ஒரே ஒரு சிறு குடில்தான் உலகில் இருந்தது. ஒரு தடவை அவர்கள் மக்கா சென்று ஹஜ்ஜு செய்து விட்டுத் தம் குடிலுக்குத் திரும்பிய பொழுது, ஒரு நாய் அதில் குட்டிகளை ஈன்று சுகமாக படுத்துறங்குவதைக் கண்டனர். அதன் அமைதியைக் குலைக்க விரும்பாத அவர்கள், தம் குடிலுக்குள் நுழையாது திரும்பிவிட்டார்கள். மீண்டும் வந்து பார்த்த பொழுது, நாய் தன் குட்டிகளுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டனர். அதன் மகிழ்ச்சியைக் குலைக்க விரும்பாத அவர்கள் மீண்டும் திரும்பிவிட்டார்கள். இவ்வாறு ஒரு தடவையல்ல, இரண்டு தடவை அல்ல, எண்பது தடவை செய்தார்கள். எண்பதாவது

தடவை அவர்கள் தம் குடில் வந்து விட்டுத் திரும்பும் பொழுது "நாய் தன் குட்டிகளை அழைத்துக் கொண்டு தானாகவே செல்லட்டும். அதன்பின் நாம் உள்ளே செல்வோம். வீணே அதற்கு ஏன் தொந்தரவு கொடுக்க வேண்டும்" என்று எண்ணித் திரும்பி விட்டார்கள்.

அன்றிரவு அவர்களைக் குறை கூறிக் கொண்டு வந்த அந்தத் துறவியின் கனவில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருத்தோற்றம் வழங்கி "நீர் ஒரு நாய் மீதும், அதன் குட்டிகள் மீதும் எண்பது தடவை இரக்கம் காட்டிய ஒருவர் மீது பகைமை பாராட்டுகின்றீரே, நிரந்தரமான இன்பத்தை நீர் பெற விரும்பின், அவரிடம் சென்று அவருக்கு ஊழியம் புரிவீராக!" என்று அருள் வாய் மலர்ந்து விட்டு மறைந்தனர்.

திடுக்குற்று விழித்தெழுந்த துறவி, தம் தவற்றை உணர்ந்து பெரிதும் வருந்தினார். தம் காழ்ப்புணர்வு, தம்மை மீளா நரகத்தில் தள்ளவிருந்ததை யும், அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் தக்க தருணத்தில் வந்து தம்மைக் கை கொடுத்துக் காத்து சுவனப் பாதையைக் காட்டிச் சென்ற தையும் எண்ணிய பொழுது, அவருக்கு அழுகை, அழுகையாக வந்தது.

விடிந்ததும் திர்மிதீ (ரஹ்) அவர்கள் இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடித்து அவர்களை அணுகினார் அவர்.

நாளெல்லாம் தம்மைக் குறை கூறுவதையே, தம்முடைய நீங்காத வழக்கமாகக் கொண்டிருந்த அவர் தம்மை நோக்கி வருவதைக் கண்டதும், திர்மிதீ (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. அவருக்குத் தாமே முதலில் சலாம் உரைத்து, அவரை வரவேற்றார்கள் அப்பெருந்தகை.

அவர்கள் கூறிய ஸலாத்திற்கு பதில் கூறக்கூட முடியா வண்ணம் அவரை நாணம் பிடுங்கித் தின்றது. அதன்பின் தாம் கண்ட கனவை விண்டு தம் பிழை பொறுத்தருளுமாறு வேண்டி, அவர்களின் தாளடியில் அமர்ந்து அவர்களுக்குக் குற்றூழியம் செய்துவந்தார் அத்துறவி.

திர்மிதீ (ரஹ்) அவர்கள் இளமையில் அழகு மிக்கவர்களாய் விளங்கினர். அவர்களின் அழகால் ஈர்க்கப்பட்ட ஆரணங்கு ஒருத்தி அவர் களின் உடல்தழுவி இன்பம் நுகர எவ்வளவோ விரும்பியும், அவர்கள் அதற்கு இணங்கினார்களில்லை. ஒரு நாள் அவர்கள் தம் தோட்டத்தில் இருக்கின்றார்கள் என்பதைக் கேள்வியுற்ற அவள், அவர்களை வற்புறுத்தி இணங்கச் செய்வதற்காக அங்குச் சென்ற பொழுது, அவர்கள் அவ் விடத்தை விட்டும் அவளின் கொடும்பிடியை விட்டும் தப்பித்து வெருண் டோடினார்கள். எனினும் அவள் அவர்களை விட்டாளில்லை. தன்னை அவர்கள் கொல்ல வந்தார்களென்று அவர்கள் மீது வீண் அபவாதம்

சுமத்தி அலறிக் கொண்டு அவர்களைத் துரத்திக் கொண்டு ஓடினாள். ஆனால் அவர்களோ ஒரு சுவர் மீது ஏறிக் குதித்துத் தப்பித்துக் கொண் டார்கள்.

இது நிகழ்ந்து பல்லாண்டுகள் உருண்டோடிவிட்டன. திர்மிதீ (ரஹ்) அவர்கள் மூப்பெய்தி நரையும் திரையுமாக விளங்கினார்கள். ஒரு நாள் அவர்கள் இதனை நினைவு கூர்ந்தார்கள். 'அன்று அவளின் விருப்பத்தை நிறைவேற்றி இருந்தால் தான் என்ன? அப்பொழுது நான் இளைஞனாகத் தானே இருந்தேன். பின்னர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி இருக்கலாமே'' என்று ஒரு கணம் அவர்கள் எண்ணினார்கள். அடுத்த கணம் அவர்களின் உள்ளத்தை மாபெரும் துயரம் ஆட்கொண்டது. அடங்கா சினத்துடன் வெகுண்டெழுந்தார்கள். ''அடே அயோக்கியனே! நாற்பதாண்டுகளுக்கு முன் நீ இளைஞனாக இருக்கும் பொழுது இந்த எண்ணம் உனக்குத் தோன்றவில்லை. இப்பொழுது மீசை நரைத்த பின் உனக்கு ஆசை நரைக்கவில்லையா, என்ன?' என்று அலறினார்கள்.

இதன்பின் அவர்களின் உள்ளத்தை மாபெரும் துயரம் ஆட் கொண்டது. ஒரே அழுகையாக அழுது கொண்டிருந்தார்கள். ''நான் ஒரு பாவி; ஒரு பாவி;'' என்று கூறிக் கொண்டு அழுது கொண்டிருந்தார்கள். இவ்வாறு அவர்கள் மூன்று நாட்கள் வரை ஓயாது, ஒழியாது கூறி அழுது கொண்டிருந்தார்கள்.

நான்காவது நாள் இரவு அவர்கள் அழுது புலம்பி அரற்றிய பின், அயர்ந்து உறங்கும் பொழுது நானிலம் புரக்க வந்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்களைக் கனவில் தரிசித்தனர். அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் திர்மிதீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''திர்மிதீ! வருந்தற்க! அத்தீய எண்ணம் உம் உள்ளத்தில் நுழைந்தது உம் தவறா லன்று. நாம் மண்ணுலகு நீத்து நாற்பதாண்டுகளுக்கு மேற்பட்டு விட் டதன் காரணமாக ஏற்பட்ட தீயபலனே அது'' என்று திருவாய் மலர்ந்து விட்டு மறைந்தனர்.

இதன் பின் திடுக்கிட்டு விழித்தெழுந்த திர்மிதீ (ரஹ்) அவர்களின் அகமும் முகமும் ஒருங்கு சேர்ந்து மலர்ந்தன. அண்ணலெம் பெருமான் தமக்குத் திருக்காட்சி நல்கி ஆறுதல் மொழி பகர்ந்தது கண்டு, அவர்களின் உள்ளம் உவகை பூத்தது.

இதன் பின் அவர்கள் எவ்வளவு தான் தங்களின் தீய இச்சைகளை முறியடிக்க முனைந்து நின்ற போதினும் அவை சிலபொழுது தம் கோர முகங்களைக் காட்டி அவர்களை நையாண்டி செய்தன. அது கண்டு அவர் களுக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. ''என்னை, என்

உடலை, என் ஆன்மாவை வெந்நரகிற்கு இரையாகவே அன்றி வேறெதற்காகவும் படைக்கவில்லை, அவ்வித மிருக்க நான் ஏன் அதனை ஊட்டி வளர்க்க வேண்டும்?'' என்று அவர்கள் எண்ணினார்கள். இவ்வெண்ணம் அவர்களின் உள்ளத்தில் மிகைக்கவே, அவர்கள் ஆற்றை நோக்கி அடி யெடுத்து வைத்து நடந்தார்கள். அதன் ஓரத்தில் ஒருவன் வீற்றிருப் பதைக் கண்டதும், தம் கால்களையும், கைகளையும் இறுகப் பிணைத்து ஆற்றோரத்திலே உருட்டி விடுமாறு அவனை வேண்டிக் கொண்டார்கள். அவனும் அவர்களைச் சற்று நேரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு ''யாதோ பித்துக்குளி போன்று தோன்றுகிறது. அது கூறுகின்றபடி செய்து என்ன நடக்கிறது என்று பார்ப்போம்'' என்று எண்ணி, அவ்வாறே செய்தான். ஆற்றின் மேடான கரையிலிருந்து அவன் அவர்களை உருட்டிவிடவே, அவர்கள் உருண்டோடி ஆற்றை அடைந்தார்கள். ஆனால் என்ன வியப்பு! ஆற்றுப் பிரவாகத்தின் வேகம், அவர்களின் கைளிலும் கால்களிலும் இருந்த பிணைப்புக்களை எல்லாம் அறுத்தெறிந்தது. திடீரெனப் பேரலை ஒன்று வந்து அவர்களை ஆற்றோரத்திலே ஒதுக்கியது. அதுகண்டு திர்மிதீ (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கு அளவில்லை. ''இறைவனே! புகழுக்குரிய பெரியோனே!! ஏனோ படைத்தாய் இந்த இழிந்தோனை. இவன் சுவனத்திற்கும் தகுதியுள்ளவனாக இல்லை. நரகத்திற்கும் தகுதியுள்ளவனாக இல்லையே'' என்று கூறி அழுதார்கள். அப் பொழுது அவர்களின் ஆன்மீகக் கண் திறந்தது. அவர்கள் தன்னிலை மறந்தார்கள். பேரின்ப இரகசியங்களெல்லாம் அவர்களின் மனக்கண்முன் பளிச்சிட்டன.

இதன்பின் அவர்கள் நாளுக்கு நாள் ஆன்மீக உச்சத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். ''நான் இறைவனை ஆயிரம் தடவைகள் கனவில் 'கண்டேன், ஒருதடவை நான் அவனை நோக்கி, ''இறைவ எம் பெரும! இறை நம்பிக்கை (ஈமான்) என் உள்ளத்திலிருந்து நீங்கி விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். அது நீங்கா வண்ணம் என் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்திருக்க ஓர் உபாயம் கூறுவாயாக!'' என்று இறைஞ்சினேன். அதற்கு அவன், ஒவ்வொரு நாளும் வைகறைத் தொழுகையின் சுன்னத்துக்கும் ஃபர்ளுக்கும் இடையில், ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். அல்லாஹு ம்ம பிஹ ருமத்தில் ஹஸனி வஅகீஹி வஜத்திஹி வஅபீஹி வஉம்மிஹி வபனீஹி நஜ்ஜினீமினல் கொமமில்லதீ அன்பீஹி யாஹையு யாகையூம்யாஃதல்ஜலாலிவல் இக்ராம் அஸ் அலுக அன்துகு இய கல்பீ பி நூரி மஅரிஃபத்திக யா அல்லாஹு யா அல்லாஹு யா அல்லாஹு யா அர்ஹமர் ராஹிமீன்'' என்று ஓதி வருவீராக!'' என்று கூறினான் என இயம்பினார்கள்.

மனித இனத்தின் மூலவரான ஆதம் (அலை) அவர்கள் பற்றியும், ஹவ்வா அவர்கள் பற்றியும் திர்மிதீ (ரஹ்) அவர்கள் நூதனச் செய்தி-

ஒன்றைக் கூறுகின்றார்கள். ஆதம் (அலை) அவர்களுடையவும், ஹவ்வா அவர்களுடையவும் பாவமன்னிப்பை ஏற்று, இறைவன் அவர்களை ஆட்கொண்டபின், ஆதம் (அலை) அவர்கள் ஏதோ ஓர் அலுவலாக வெளியே சென்றனர். அப்பொழுது ஹவ்வா அவர்கள் மட்டும் தனியே வீற்றிருந்தார்கள். அக்காலை இப்லீஸ் அவர்களை அணுகி, ''இதோ என் சின்னஞ்சிறு மகன் ஹன்னாஸ் உள்ளான். நான் வெளியே செல்கிறேன். நான் திரும்பி வரும் வரை இவனை வைத்துக் கொள்ளுங்கள் '' என்று கூறிச் சென்றான்.

சற்று நேரம் கழித்து ஆதம் (அலை) அவர்கள் இல்லம் திரும்பினர். தம் அருமைத் துணைவியாருடன் ஒரு சிறுவன் வீற்றிருப்பதைக் கண்டு ''யார் இவன்?'' என்று வினவினர். நடந்ததை நவின்றனர் அம்மையார். அது கேட்டு வெகுண்டெழுந்த ஆதம் (அலை) அவர்கள் அச்சிறுவன் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனைக் கொன்று அவனை நார், நாராகக் கிழித்து நாலா பக்கங்களிலும் தொங்க விட்டுச் சென்று விட்டார்கள்.

இதன்பின் சற்று நேரம் கழித்து இப்லீஸ் அங்கு வந்து சேர்ந்தான். ''எங்கே என் மகன்?'' என்று வினவினான். அவனிடம் நடந்த வரலாற்றை எடுத்துரைத்தார்கள் அம்மையார். உடனே இப்லீஸ் ''ஹன்னாஸ்'' என்று அழைத்தான். நார் நாராகப் பிய்த்தெறியப்பட்ட அவனின் மகன் ஒன்று சேர்ந்து முழு உருக் கொண்டு ''ஏன் அப்பா, அழைத்தீர்கள்?'' என்று கூறிக் கொண்டு வந்து நின்றான்.

உடனே இப்லீஸ் ஹவ்வா அவர்களை நோக்கி தான் மற்றோர் அலுவலாக வெளியே செல்லப் போவதாகவும், எனவே, தான் திரும்பிவரும் வரைத் தன் மகனை வைத்திருக்குமாறும் வேண்டினான். ஹவ்வா அவர்கள் எவ்வளவோ மறுத்துரைத்தும் அவன் கேட்டா னில்லை. எவ்வாறோ தன் மாய்மாலப் பேச்சுகளால் அவர்களை மயங்க வைத்துத் தன் மகனை அவர்களிடம் ஒப்படைத்து விட்டுச் சென்று விட்டான் அவன்.

இதன் பின் இல்லம் திரும்பிய ஆதம் (அலை) அவர்கள் தன் மனைவி யுடன் இப்லீஸின் இளம் மகன் வீற்றிருப்பதைக் கண்டதும் சினத்தால் பொங்கி எழுந்தார்கள். ''நான் சொல்வதைக் கேளாது அல்லாஹ்வின் விரோதியின் சொல்லைக் கேட்கின்றாயா என்ன? அவன் பேச்சு என் னுடைய பேச்சை விட உனக்குப் பெரிதாகப் போய்விட்டதா, என்ன?'' என்று கூறி ஹவ்வா (அலை) அவர்களை நையப்புடைத்தார்கள். அதன் பின் அச்சிறுவனைக் கொன்று, அவன் உடலை எரித்துச் சாம்பலாக்கி, அதில் ஒரு பாதியைக் கடலில் கரைத்து, மற்றொரு பாதியைக் காற்றிலே

தூவி விட்டார்கள். பின்னர் அலுவல் நிமித்தம் வெளியே சென்று விட்டார்கள்.

சற்று நேரம் கழித்து ஆங்குவந்த இப்லீஸ் நடந்த விவரங்களை ஹவ்வா அவர்களின் வாயிலாகக் கேட்டறிந்தான். அடுத்த கணம் அவனுடைய வாயிலிருந்து 'ஹன்னாஸ்' என்ற சொல் வெளிவந்தது, உடனே 'ஹன்னாஸ்' அவன் முன் உருப்பெற்று வந்து நின்றான்.

இதன்பின் எத்தனையோ பொய்ச்சத்தியங்களெல்லாம் பண்ணித் தன் மகனை ஹவ்வா (அலை) அவர்களிடம் ஒப்படைத்து விட்டுச் சென்று விட்டான் இப்லீஸ். அவன் விரித்த மாய வலையில் மீண்டும் ஹவ்வா அவர்கள் வீழ்ந்து விட்டார்கள்.

இல்லம் மீண்ட ஆதம் (அலை) அவர்கள் மீண்டும் தம் மனைவியுடன் இப்லீஸின் நச்சுமகன் இருப்பதைக் கண்டதும், அவனைக் கண்ட துண்டமாக வெட்டினார்கள். இனிமேல் அவனின் சிறு அணுவும் உலகில் இருக்க அனுமதிப்பின், மீண்டும் அவன் உயிர் பெற்றெழுந்து வந்து விடுவான் என்று கருதி அவனைக் கறி சமைத்து, தாம் ஒரு பாதியையும் மற்றொரு பாதியைத் தம் மனைவியுமாக உண்டனர்.*

இதன் பின் ஆதம் (அலை) அவர்கள் வெளியே செல்ல, அடுத்த கணம் உள்ளே நுழைந்தான் இப்லீஸ். நடந்த விவரத்தைக் கேட்டறிந்து பூரித்துப் புளகாங்கிதமுற்றான் அவன், ''நான் விரும்பியது நிகழ்ந்து விட்டது. இனிமேல் ஆதத்தின் இதயத்தில் நான் இருப்பிடம் பெற்று விட்டேன்'' என்று அவன் மகிழ்ச்சி மொழி பகர்ந்தான்.

இவ்வாறு ஆதம் (அலை) அவர்களைப் பற்றி ஒரு புதுவித வரலாற்றைக் கூறிய அவர்கள், சிறந்த இறைநேசச் செல்வராகவும், உயரிய மார்க்க மேதையாகவும் விளங்கினர். அவர்கள் ஹதீதுக்கலை வல்லுனராகவும் திகழ்ந்தார்கள். மார்க்கத்தின் பல்வேறு பிரச்சினைகள் பற்றி அவர்கள் யஹ்யா இப்னு முஆதுடன் வாதம் புரிந்துள்ளனர். எந்த மத்ஹபையும் குறிப்பாகப் பின்பற்றாது, எல்லா மத்ஹபுகளையும் பின்பற்றினார்கள்.

ஒருவர் அவர்களை அணுகி, ''அசுத்தம் வெளிவரக் கூடிய மூக்கு, வாய் ஆகியவற்றைக் கழுவுவது வாஜிபாக்கப்பட்டிருந்ததன் காரணம் என்ன?'' என்று வினவிய பொழுது, ''ஆதம் (அலை) அவர்கள் விலக்கப்

---

* இறுதி முறையில் இப்லீஸ் தம் மகனை ஒரு செம்மறியாட்டின் உருவில் கொண்டு வந்தான். எனவே தான் அதனை அறுத்து ஆதம் (அலை) அவர்களும், ஹவ்வா அவர்களும் கறி சமைத்து உண்டனர் என்றும் கூறுவர்.

பட்ட கனியை உண்பதற்கு முகத்தால் முன்னோக்கி, காலால் நடந்து, கையால் பறித்துத் தின்றதன் காரணமாக, அவர்களின் உடலை மறைத் திருந்த உடைகள் தாமாகவே கழன்று கீழே விழுந்தன. அப்பொழுது அவர்கள் பெரிதும் துயருற்றுத் தம் கைகளைத் தலையிலே வைத்த வண்ணம் அழுதனர். எனவே, அக்குற்றத்தைவிட்டும் நீக்க அவற்றைத் தண்ணீரால் கழுவுமாறு பணிக்கப்பட்டனர். அதன் காரணமாகவே, அவர்களின் வழித்தோன்றல்கள் 'உளூ'ச் செய்யும் பொழுது, அவற்றைக் கழுவுவது கடமையாக ஆக்கப்பட்டது''என்று கூறினர்.

அப்பொழுது அவர் ''விலக்கப்பட்ட கனியை வாயல்லவோ தின்றது. அதனைக் கழுவுவது ஏன் வாஜிபாக்கப்படவில்லை?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள் ''முகம், கால், கை ஆகியவை, அச்செயலைச் செய்திராவிடின் வாயால் அதனைத் தின்றிருக்க இயலாதல்லவா? அதனால் அதனைக் கழுவுவது வாஜிபாக்கப்படவில்லை. எனினும் வாய் அதனைத் தின்றதாலும், மூக்கு அதனை மோந்ததாலும் அவற்றைக் கழுவுவது சுன்னத்தாக ஆக்கப்பட்டது'' என்று பதிலிறுத்தார்கள்.

மீண்டும் அவர், ''உளூவில் தலையைக் கழுவாது மஸஹ் செய்ய (தண்ணீரைத் தொட்டுத்தடவ)க் கூறப்பட்டிருப்பதன் காரணம் என்ன?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''தலை தானாகப் பாவம் செய்யவில்லையே, பாவம் செய்த கைகள் தாமே அதன்மீது பட்டன. எனவே அதனை மஸஹ் செய்தால் போதும் என விதிக்கப்பட்டது'' என்று விடையிறுத்தார்கள்.

அவர்கள் இறைவனின் பேரருளின் மீது அளவற்ற நம்பிக்கை வைத்திருந்தனர். ''அடியார்களுக்கு இரணம் அளிக்க இறைவன் உத்தரவாதமளித்துள்ளான். எனவே அவன் அளிக்கும் இரணத்தின் மீது 'தவக்குல்' வைக்க வேண்டும்'' என்று கூறினர்.

மேலும் எக்காலமும் இறைவனை நினைவு கூர்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று கூறிய அவர்கள், ''இறைவனை நினைவு கூர்வ தென்பது, அவனை எப்பொழுதும் துதித்துக் கொண்டிருப்பதேயாகும்'' என்று இயம்பினர்.

அடிமைத்தனத்தை (உபூதிய்யத்தை) எவ்வாறு சரியாக நிறை வேற்றுவது என்பதை அறியாதவன், ருபூபிய்யத்' தாகிய இறை ஆட்சியின் தன்மையை நன்கு அறியாதவனே ஆவான். ஏனெனில் தன்னை

அறியாதவன், தன் நாயனை அறிய மாட்டான். மனித இயல்புகளைச் சரியாக அறியாத ஒருவனால், இறைவனின் பண்புகளைச் சரிவர அறிய இயலாது'' என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் கதமுல் விலாயத், கிதாபுல் நஹ்ஜ், நவாதிருள் உஸூல், கிதாபுத் தௌஹீத், கிதாப் அதாபுல் கப்ர், ஆதாபுல் முரீதீன் ஆகிய நூல்களை எழுதியுள்ளனர். அவர்கள் தம் சுய வரலாற்றையும் எழுதி யுள்ளனர். திருக் குர்ஆனுக்கு விளக்கவுரை எழுதத்துவங்கிய அவர்கள் அதனை நிறைவு செய்யவில்லை.

அவர்களின் எழுத்துக்கள் பிற்காலத்தில் ஆன்மீகக் கல்வி பெறப் பெரிதும் முயன்று கொண்டிருந்த இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர் களுக்குப் பெரிதும் உறுதுணையாக அமைந்திருந்தன. அவர்களின் எழுத்துக்களால் பெரிதும் கவரப்பட்டவர்களில் ஒருவர் ஷைகுல் அக்பர் இப்னு அரபி (ரஹ்) ஆவர். அவர்களின் சூஃபி தத்துவத்தின் காரணமாக, பிறந்த ஊராகிய திர்மிதியிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட அவர்கள், நீஷாப்பூர் வந்து, அங்கேயே தங்கி தத்துவப்பிரச்சாரம் செய்து வாழ்ந்து, ஹிஜ்ரி 285 ஆம் ஆண்டில் இறப்பெய்தினர். அவர்களின் இயற்பெயர் அபூ அப்துல்லா முஹம்மது இப்னு அலீ இப்னு அல்ஹுஸைன் அல் ஹகீமுல் திர்மிதீ என்பதாகும். ஆனால், அவர்களின் புகழ்ப் பெயர்களோ ஹகீமே ஔலியா, ஆலிமெரப்பானி என்பவையாகும்.

''முஹம்மது இப்னு அலீ திர்மிதீ ஓர் ஆணிமுத்தாவார். அவரைப் போன்ற ஒருவரை நாம் அகில உலகமும் தேடினும் காண இயலாது'' என்று தம்முடைய ஷைகு கூறியதாக ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் எடுத் துரைக்கிறார்கள்.



# 9. இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்)

**கொ**திக்கும் பாலையின் நடுவே ஒரு பெரியார் தன்னந்தனியாக நடந்து சென்று கொண்டிருக்கிறார். அவருடைய கையில் யாதோர் உணவுப் பொருளும் இல்லை. இறைவன் மீது 'தவக்குல்' வைத்து அவர் நடந்து கொண்டிருக்கிறார். இவ்வாறு அவர் பாலையின் நடுவே வெகு தொலைவு நடந்து வந்துவிட்டார். அப்பொழுது அவரின் முன் ஓர் இளவல் தோன்றி அவருக்கு 'ஸலாம்' கூறுகின்றார். அவரின் ஸலாத்திற்கு மறுமொழி கூறிய அவர், அவரைக் கூர்ந்து கவனிக்கின்றார். அப்பொழுது அவர் ஒரு கிறிஸ்தவர் என்பது அவருக்கு நன்கு தெரிய வருகிறது. அந்தக் கிறிஸ்தவ இளவல் அவரை நோக்கி, ''அடிகளாரே! நானும் தங்களுடன் சேர்ந்து வரட்டுமா?'' என்று வினவுகின்றார். அதுகேட்ட அவர், ''நான் எங்குச் செல்கின்றேனோ, அங்கு உம்மால் வர இயலாதே. ஆதலின் நீர் என்னோடு வந்து என்ன பயன்?'' என்று கூறுகிறார். அதற்கு அவ் இளவல் ''அதனால் பாதகமில்லை. என்னவோ தங்களுடன் நானும் சேர்ந்து நடந்து வருகிறேன். அந்த நற்பேறாயினும் எனக்குக் கிடைக்கட்டும்'' என்று கூறு கின்றார். அதற்கு அவரும் இணங்கினாற் போன்று தலையை அசைக்கிறார். இருவரும் ஒத்து நடைபோட்டுப் பாலையின் நடுவே நடந்து சென்று கொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு ஏழு நாட்கள் கழிந்தன. எட்டாவது நாள் அந்த இளவல் அவரை நோக்கி, ''அடிகளாரே! எனக்கோ பசி அகோரமாக உள்ளது. தாங்கள், தங்களின் இறைவனிடம் இறைஞ்சி, ஏதாவது உண்ணக் கேளுங்கள்'' என்று கூறினார்.

அப்பொழுது அப்பெரியார் விண்ணை நோக்கி இருகரம் ஏந்திய வராய், ''இறைவனே! என்னை இந்த அந்நிய மதத்தினரின் முன் அவமானப்படுத்திவிடாதே. அண்ணலெம் பெருமான் முஹம்மது (ஸல்) அவர்களின் பொருட்டால் எங்களுக்கு ஏதாவது உணவுப் பொருள் நல்கு வாயாக!'' என்று இறைஞ்சினார். இறைஞ்சியகையைக் கீழே போடு முன், அவரின் முன் ஒரு தட்டு வந்து இறங்கியது. அதிலே ரொட்டியும்

பொரித்த மீனும், பேரீத்தம் பழங்களும், ஒரு கலயத்தில் தண்ணீரும் இருந்தன. அவற்றை அவ்விருவரும் உண்டு, பசி தீர்ந்து மீண்டும் தம் பயணத்தைத் துவக்கினர்.

பயணத்தில் ஒரு வாரம் ஓடி மறைந்து, மறுவாரம் துவங்கியது. அப்பொழுது அந்த முஸ்லிம் பெரியார் அந்தக் கிறிஸ்தவ இளவலை நோக்கி, ''துறவியே! எனக்கு இப்பொழுது கடுமையான பசியாக உள்ளது. நீரும் உம் ஆற்றலைப் பயன்படுத்தி ஏதாவது உணவுப் பொருள் கொணரும். நாம் உண்டு பசி தீர்வோம்'' என்று கூறினர். அதுகேட்ட அக் கிறிஸ்தவத் துறவி யாதோ தம் வாய்க்குள் முணுமுணுத்தார். என்ன வியப்பு! அடுத்த கணம் அவரின் முன் இரண்டு தட்டுகள் வீற்றிருந்தன. அவற்றில் ஹல்வாவும், மீனும், பேரீத்தம் பழங்களும், இரண்டு கலயம் நிறையத் தண்ணீரும் இருந்தன. அப்பொழுது அந்தக் கிறிஸ்தவ இளைஞர் அந்த முஸ்லிம் பெரியவரை நோக்கி, 'அடிகளாரே! உண்ணுங்கள்' என்று கூறினர். அவரின் இச்செயல் வெந்த புண்ணில் வேல் நுழைந்தது போன்று அப்பெரியவருக்கு இருந்தது. நாணத்தால் அவரின் முகம் வெளுத்தது. எனவே யாதும் உண்ணாது அவர் வெறுமனே வீற்றிருந்தார்.

அப்பொழுது அந்தக் கிறிஸ்தவ இளவல் அவ்வரை நோக்கி, ''அடிகளாரே! உண்ணுங்கள். உண்டபின் நான் தங்களுக்கு இரண்டு நற்செய்திகளைக் கூறுகின்றேன்'' என்று மொழிந்தார்.

''என்ன அந்த நற்செய்திகள்? முதலில் அவற்றைக் கூறும். அதன்பின் நான் இதனை உண்ணுகிறேன்'' என்று கூறினர் அப்பெரியார்.

''அப்படியா! கூறுகின்றேன்'', என்று சொல்லிக் கொண்டே, அந்த இளவல் தம் கழுத்தில் அணிந்திருந்த சிலுவைக் கயிற்றை அறுத்தெறிந்தார். அதன்பின், அவரின் நா ''வணங்குதற்குரியோன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அவனின் திருத்தூதராவார்'' என்ற இஸ்லாமிய மூல மந்திரத்தை இயம்பியது.

அதன்பின் அவ் இளவல் அப்பெரியவரை நோக்கி, ''தாங்கள் என்னிடம் என் ஆற்றலைப் பயன்படுத்தி ஏதேனும் உணவு வரவழைக்குமாறு கூறிய பொழுது, ஒரு கணம் நான் யாது செய்வதென அறியாது கலங்கினேன். அடுத்த கணம் திடீரென ஓர் எண்ணம் என் உள்ளத்தில் பளிச்சிட்டது. ''இறைவனே! முஹம்மது (ஸல்) அவர்களின் மார்க்கம் உண்மையானதாய் இருப்பின், ஒரு தட்டில் உணவும், ஒரு கலயத்தில் தண்ணீரும் தா. இவர் உன்னுடைய உண்மையான நேசராய் இருப்பின் மற்றொரு தட்டில் உணவும் மற்றொரு கலயத்தில் தண்ணீரும் தந்தருள்! இவரின் முன் என்னை இழிவுபடுத்தி விடாதே'' என்று இறைஞ்சினேன். அதன் காரணமாக உணவுத் தட்டுக்கள் இரண்டும் தண்ணீர்க் கலயங்கள்

இரண்டும் வந்து இறங்கின. இஃது தங்களால் ஏற்பட்ட நற்பேறேயன்றி வேறில்லை'' என்று கூறினார்.

அது கேட்டு மகிழ்ந்த அப்பெரியவர் இப்ராஹீம் அல்கவ்வாஸ், அந்த இளவலுடன் சேர்ந்து அவ்வுணவை உண்டு, மீண்டும் தம் பயணத்தைத் துவக்கி, இறுதியாக மக்கமா நகர் வந்து சேர்ந்தனர். இறைவனின் திரு நகராகிய அத்தொல் பதியிலேயே அவ் இளவல் தம் வாணாளைக் கழித்து வானுலகம் சென்றார்.

இறைவனின் அன்புக்குப் பாத்திரமாகிய அப்பெரியார் அபூ இஸ்ஹாக் இப்ராஹீம் இப்னு அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள், சமர்ராவைச் சேர்ந்தவர்களாவர். முஹம்மது இப்னு இஸ்மாயீல் மஃரிபி (ரஹ்) அவர்களிடம் கல்வி பயின்ற அவர்கள், ஜுனைத் (ரஹ்), நூரி (ரஹ்) ஆகியோரின் சமகாலத்தவராக விளங்கினர். அவர்கள் இறையருளின் மீது கொண்டிருந்த நம்பிக்கையோ முழுமையுடையதாக இருந்தது. எனவே அவர்கள் எவ்வித உணவுப் பொருளுமின்றி, ஒரு பழத்தின் வாசனையை நுகர்ந்து கொண்டே, நாட்கணக்காகவல்ல, வாரக் கணக்காகவல்ல, மாதக் கணக்காகப் பாலைவனத்தைக் கடந்து செல்லும் வழக்கமுடையவர் களாக இருந்தனர். எனினும் அவர்களிடத்தில், ஓர் ஊசியும் நூலும், ஒரு தண்ணீர்ப் பையும், ஒரு கத்திரிக்கோலும், எப்பொழுதும் இருந்து கொண்டே இருந்தன. ''ஏன் அவற்றை மட்டும் எப்பொழுதும் தங்களின் கைவசம் வைத்துக் கொண்டுள்ளீர்கள்?'' என்று அவர்களிடம் வினவப் பட்ட பொழுது, ''அவற்றை நான் வைத்துக் கொண்டிருப்பதால் இறை யருளின் மீது நான் கொண்ட பரிபூரண நம்பிக்கை மாசுறும் என்று நீங்கள் எண்ண வேண்டாம். நமக்கு இறைவன் சில கடமைகளை விதித்துள்ளான். அவற்றை நாம் ஒழுங்காக நிறைவேற்றியாக வேண்டும். உடுத்தியிருக்கும் ஒரே ஓர் ஆடையை அன்றி வேறொன்றைப் பெற்றிராத ஒரு தர்வேஷ், தாம் உடுத்தியிருக்கும் ஆடை கிழிந்துவிடின், அதனைத் தைக்காது தொழுதால் தொழுகை வீணாகிவிடும். அவரிடம், தண்ணீர்ப்பை ஒன்று இல்லையாயின், அவரால் 'உளூ'ச் செய்யவோ, ஏனைய உடல் தூய்மை களைச் செய்யவோ இயலாது போய்விடும். ஆதலின் ஒரு தர்வேஷிடம், ஓர் ஊசியும் நூலும், கத்திரிக்கோலும் தண்ணீர்ப் பையும் இல்லாதிருப்பின் அவரின் தொழுகை பற்றி நீங்கள் ஐயுறவேண்டியது தான்'' என்று அவர் கள் பதிலிறுத்தார்கள்.

அவர்களின் உடைகளோ எளிமையுடையதாக இருந்தன. கீழே ஒரு துண்டும், மேலே ஒரு சட்டையும் அவர்கள் அணிந்திருந்தார்கள். சில பொழுது, அவர்கள் தம் சட்டையை உயர்த்தித் தம் தலை மீதும் போட்டுக் கொள்வார்கள்.

ஒரு தடவை அவர்கள் பாலை நடுவே நடந்து சென்று கொண்டிருக்கும் பொழுது, கிள்ரு(அலை) அவர்கள் பறவை உருத்தாங்கிப் பறந்து கொண்டிருப்பதைக் கண்டதும், இறைவன் மீது தாம் கொண்ட 'தவக்குல்' சீர்குலைந்து விடக் கூடாது என்று அஞ்சிய அவர்கள், உடனே பார்வையைக் கீழே தாழ்த்திக் கொண்டார்கள். அப்பொழுது கிள்ரு (அலை) அவர்கள் கீழே இறங்கி, "நீர் என்னை ஏறிட்டுப் பார்த்திருப்பீராயின், நான் கீழே இறங்கி வந்திருக்க வேண்டிய தேவை ஏற்பட்டிராது" என்று கூறி, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்தார்கள். எனினும், இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களோ, அவர்களின் ஸலாத்திற்குப் பதில் உரைப்பின் தாம் இறையருளின் மீது கொண்ட நம்பிக்கை மாசற்றுவிடும் என்று அஞ்சியவர்களாய், அவர்களின் ஸலாத்திற்குக் கூடப் பதிலுரைக்காது வெறுமனே இருந்து விட்டார்கள்.

வேறொரு தடவை அவர்கள் பாலைவனத்தின் நடுவே நடந்து சென்று கொண்டிருந்த பொழுது, தாகவிடாய் மீக்குற்றுக் கீழே மயங்கி விழுந்தார்கள். அப்பொழுது எவரோ அவர்களின் முகத்தில் தண்ணீர் தெளித்தனர். அதன் காரணமாக, அவர்கள் மூர்ச்சை தெளிந்து, கண்களைத் திறந்து பார்த்த பொழுது, குதிரை மீது ஒருவர் வீற்றிருப்பதைக் கண்டனர். அவர் தம் வாகனத்தின் மீது இருந்தபடியே அவர்களுக்குத் தண்ணீர் அருந்தக் கொடுத்தார். அதனை வாங்கி அவர்கள் அருந்தியதும், அவர்களின் தாகவிடாய் தீர்ந்தது. அப்பொழுது அந்த வாகனத்திலிருந்தவர் அவர்களை நோக்கி, "என் பின்னே வாகனத்தில் ஏறிக் கொள்ளும்" என்றார். அவ்வாறே அவர்கள் செய்தார்கள். சற்றுத் தொலைவு சென்றதும் அவர், இவர்களை நோக்கி "நீர் இப்பொழுது எதனைக் காண்கிறீர்?" என்று வினவினார். "அண்ணல் நபி (ஸல்)அவர்களின் அழகுத் திருநகர் மதீனாவை நான் காண்கிறேன்" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். 'நல்லது. நீர் இங்கேயே இறங்கி, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் 'ரௌலா' விற்குச் சென்று, அவர்களுக்கு 'ஸலாம்' உரையும்' என்று கூறினார் அவர். அவர்கள் இறங்கியதும், அவர் அவர்களை நோக்கி, "என்னுடைய ஸலாத்தையும் அவர்களுக்குத் தெரிவிப்பீராக!" என்று கூறினார். "தாங்கள் யார்? தங்களின் பெயர் என்ன?" என்று அவர்கள் வினவிய பொழுது, 'கிள்ரு' என்று கூறிவிட்டு, மறைந்து விட்டார். அவர்களுக்கோ என்ன செய்வதென்றே விளங்கவில்லை. கிள்ரு(அலை) அவர்களுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளக்கூடாது என்று தாம் எண்ணிக் கொண்டிருக்க, இவ்வாறு நிகழ்ந்ததும் இறைவனின் திரு விளையாடலே என்று எண்ணிக் கொண்டு அவர்கள் மதீனாவிற்குள் நுழைந்தார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் தீஹ் என்னும் வனாந்தரத்தில் தன்னந்தனியே சென்று கொண்டிருந்த பொழுது, தமக்கு முன்னால்

ஒருவர் வேகமாக நடந்து கொண்டிருப்பதைக் கண்டதும், ''அல்லாஹ்வின் மீது ஆணையாக நீர் யார் என்பதை எனக்கு அறிவிக்க வேண்டும்'' என்று கூறினர், அதற்கு அவர் ''நான் உம் சகோதரர் கிள்ரு'' என்று பதிலுரைத்தார்.

அப்பொழுது அவர்கள், 'நான் தங்களிடம் சிலரைப் பற்றி விசாரித்தறிய விரும்புகிறேன்' என்று கூறினர்.

''விரும்பியதைக் கேளும்'' என்று கூறினர் கிள்ரு (அலை)

''இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்களைப் பற்றித் தங்களின் கருத்து யாது?'' என்று வினவினார்கள் அவர்கள்.

''அவர் திக்குபரிபாலர்களாகிய நான்கு ஒளதாதுகளில் ஒருவர்'' என்று பதிலுரைத்தனர் கிள்ரு(அலை).

''இமாம் அஹ்மது இப்னு ஹன்பலைப் பற்றித் தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?''

'அவர் ஒரு ஸித்தீக்'' என்று பதிலுரைத்தார்கள் கிள்ரு (அலை).

''பிஷ்ர் இப்னு ஹாரிதைப் பற்றி யாது கூறுகிறீர்கள்?'' இது அவர்களின் அடுத்த கேள்வி.

''அவர் தமக்குப் பின், தம்போன்று ஒருவரை விட்டுச் செல்லாதவர். (அதாவது அவருக்குப்பின், அவர் போன்று ஒருவருமில்லை) என்றனர் கிள்ரு(அலை).

''நல்லது; நான் தங்களை எதன் காரணமாகக் காணும் பேறு பெற்றேன்''

''நீர் உம் அன்னைக்குச் செய்த நன்றிக்குப் பதிலாக'' என்று விடையிறுத்துவிட்டு, அவ்விடத்தை விட்டு மறைந்தார்கள் கிள்ரு (அலை).

ஒருநாள் அவர்கள் பஸராவின் கடை வீதியில் சென்று கொண்டிருந்த பொழுது ஒருவன் தன் அருகே நின்று கொண்டிருந்த ஓர் அடிமையைச் சுட்டிக்காட்டி ''இவனை விலைக்கு வாங்குவார் எவரேனும் உண்டா? இவனுக்கு மூன்று குறைபாடுகள் உள்ளன. 1. இவன் இரவில் உறங்க மாட்டான், 2. பகலில் உண்ணமாட்டான், 3. தேவையின்றி உரையாட மாட்டான்'' என்று கூறினார்.

அப்பொழுது அவர்கள் அந்த அடிமையை நெருங்கி, ''நான் உம்மை அல்லாஹ்வை அறிந்த ஆரிஃப் என்று எண்ணுகிறேன்'' என்று கூறினர்.

அதற்கு அந்த அடிமை, ''நான் அவனை அறிந்த ஆரிஃபாய் இருப்பின், வேறொன்றின் மீதும் பராக்காக இருக்க மாட்டேனே'' என்று பதிலிறுத்தார்.

அவருடைய எசமான், அவரைப் பற்றிய குறைபாடுகளும், அவர் தமக்கு அளித்த பதிலும், அவர் ஓர் ஆரிஃப் தான் என்ற எண்ணத்தை இப்ராஹீம் அல்கவ்வாஸ் (ரஹ்) அவர்களின் உள்ளத்தில் உறுதிப் படுத்தின.

எனவே அவர்கள் அவரின் எசமானனை நோக்கி ''அவரின் விலை என்ன?'' என்று வினவினர்.

''அவனோர் பைத்தியக்காரன். எனவே நீர் விரும்பியதைக் கொடும். நான் அதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்'' என்றான் அவன்.

தம் பையிலிருந்த சிறிதளவு பணத்தை எடுத்து அவனிடம் அவர்கள் கொடுக்க, அதனைப் பெற்றுக் கொண்டு அவரை அவர்களிடம் ஒப்படைத் தான் அவன்.

அப்பொழுது அவர்கள், தம் மனத்திற்குள்ளே ''இறைவனே! நான் இவரை உனக்காக அடிமைத் தளையிலிந்து விடுதலை செய்தேன்'' என்று எண்ணினர்.

அடுத்த கணம் அவர், அவர்களை நோக்கி 'இப்ராஹீமே!'' என்று பெயர் சொல்லி அழைத்து, ''நீர் என்னை இவ்வுலகின் அடிமைத்தளை யிலிருந்து விடுதலை செய்தது போன்று, பேரருளாளனாகிய அல்லாஹ் உம்மை நரகத்தின் நெருப்பை விட்டும் விடுதலைசெய்வான்'' என்று கூறிவிட்டு மறைந்து விட்டார்.

வேறொருநாள் அவர்கள் ஒரு பள்ளிவாயிலில் வீற்றிருந்தார்கள். அங்கு ஒரு பக்கீர் மூன்று நாட்களாக ஒரிடத்தில் ஆடாது அசையாது வீற்றிருந்தார். அவர் யாதொன்றையும் உண்ணவுமில்லை. எவருடனும் உரையாடவுமில்லை. அவர் என்ன செய்கிறார் என்பதைப் பார்ப்போம் என்று மூன்று நாட்களாக அவர்கள், அவரையே பார்த்துக் கொண்டிருந் தார்கள். இறுதியாக அவர்களின் பொறுமைக்கும் ஒரு முடிவேற்பட்டு விட்டது. எனவே அவர்கள் அவரை அணுகி, ''உமக்கு ஏதேனும் தேவைப்படின் கூறும். வாங்கிக் கொண்டு வந்து தருகிறேன்'' என்று கூறினர். அது கேட்ட அவர் கண்களைத் திறந்து, அவர்களை ஒரு முறைக்கு இருமுறை ஏறிட்டுப்பார்த்துவிட்டு, எனக்கு ரொட்டியும் இறைச்சியும் தின்ன வேண்டுமென்று ஆசையாக உள்ளது. அவற்றை வாங்கிக் கொண்டு வாரும்'' என்று கூறினார்.

அவற்றை வாங்குவதற்காக அவர்கள் கடைத்தெரு முழுவதும் சுற்றி அலைந்தார்கள். கிடைக்கவில்லை.

பெரிதும் ஏமாற்றத்துடன் பள்ளிவாசல் திரும்பிய அவர்கள் அந்த பக்கீருடைய கண்களில் விழிக்க நாணி, அங்கு தாம் தங்கியிருந்த அறைக்குள் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டு வீற்றிருந்தார்கள்.

சற்றுநேரத்தில் கதவில் 'டக்,டக்' என்ற சத்தம் கேட்டது. கதவைத் திறந்து பார்த்தார்கள். என்ன வியப்பு! ஒரு மனிதர் கையில் ரொட்டியும் இறைச்சியும் வைத்துக் கொண்டு "இவற்றைப் பெற்றுக் கொள்க!" என்று கூறினார்.

"என்ன செய்தி?" என்று வினவினார்கள் அவர்கள்.

"இவற்றை எவர் உண்பது என்பது பற்றி, எங்களுக்கும், எங்களின் மக்களுக்கும் இடையே சச்சரவு ஏற்பட்டது. அதன் காரணமாக இவற்றைப் பள்ளிவாயிலில் இருக்கிறவர்களைத் தவிர வேறு எவரும் உண்ணக் கூடாது என்று சத்தியம் பண்ணிக் கொண்டோம். எனவே அவற்றை இங்கு கொண்டு வந்தேன்" என்றார் அவர்.

அதன்பின் அவற்றைப் பெற்றுக் கொண்ட அவர்கள் "இறைவனே! அந்த பக்கீருக்கு நீ இவற்றைக் கொடுக்க நாடி இருந்தால், என்னை ஏன் பகலெல்லாம் இவற்றிற்காக வீணே அலைந்து திரிந்து காலும், மனமும் நோகவைத்தாய்? உன்னுடைய இரகசியம் தான் என்ன!" என்று கூறினார்கள்.

ஒருதடவை அவர்கள் கானகத்தின் நடுவே நடந்து சென்றார்கள். அப்பொழுது அவர்கள் பட்ட துன்பம் சிறிதல்ல. எனினும் அவற்றைப் பொறுமையோடு பொருந்திக் கொண்டு, இறுதியாக மக்கமா நகர் வந்து சேர்ந்தார்கள். காட்டில் பெரிதும் நொம்பலப்பட்டுக் கொண்டிருந்த அவர்களின் மனம் மக்கா வந்ததும் சற்றுத் திமிரலாயிற்று.

அவர்கள் கஃபாவை அடைந்த பொழுது, அதனைச் சுற்றி வந்து கொண்டிருந்த ஒரு கிழவி அவர்களை ஏறிட்டுப் பார்த்து, "இப்ராஹீமே! நான் உம்முடன் காட்டில் இருந்தேன். எனினும் நீர் என்னைப் பார்க்க வில்லை. உம்மை என்மீது பராக்காக்கக் கூடாது என்று எண்ணி நானும் உம்மை அணுகி, உம்முடன் யாதொரு வார்த்தையும் பேசவில்லை. இப் பொழுது உம்முடைய உள்ளத்தில் சற்றுப் பெருமை எண்ணம் ஏற்பட்டி ருப்பதை உணர்கிறேன். அது நல்லதல்ல. அதனை உம்முடைய உள்ளத்தி லிருந்து கிள்ளி எறிந்து விடும்" என்று கூறினார்.

அது கேட்ட அவர்கள், ஒரு கிழவி மூலம் தமக்கு நல்லுணர்வு ஊட்டிய இறைவனுக்கு நன்றி செலுத்தியவர்களாய் தாழ்மையுடன் தலை கவிழ்ந்தவர்களாகக் கஃபாவை தவாப் செய்யலாயினர்.

மற்றொரு தடவை அவர்கள் கானகத்தில் அழகே உருவெடுத்தாற் போன்ற இளவல் ஒருவரைக் கண்டு, 'இளைஞரே! நீர் இங்குற்ற காரணம் யாது?'' என்று வினவினர். அதற்கு அவர் 'நான் ஹஜ்ஜு செய்ய மக்கா சென்று கொண்டுள்ளேன்' என்று பதிலுரைத்தார். அப்பொழுது அவரிடம் யாதொரு உணவுப் பொருளும், வாகனமும் இல்லாதிருப்பதைக் கண்ட அவர்கள், பெரிதும் வியப்புற்றவர்களாய் ''என்ன! யாதொரு உணவுப் பொருளும் வாகனமும் இல்லாத நிலையிலா நீர் ஹஜ்ஜு செய்ய மக்கா புறப்பட்டீர்'' என்று வினவினர். அது கேட்ட அந்த இளவல், எள்ளி நகையாடி, ''இறை நம்பிக்கை குறைந்தவரே! எவன் விண்ணையும் மண்ணையும் படைத்துப் பரிபாலித்து வருகின்றானோ, அவன் என்னை மக்கா கொண்டுபோய்ச் சேர்க்கப் போதுமானவன்'' என்று கூறினார்.

இதன்பின் அவர்கள் மக்கா சென்ற பொழுது, அங்கு அந்த இளவல் கஃபாவைச் சுற்றி வந்து கொண்டிருப்பதைக் கண்டனர். அப்பொழுது அவரின் வாயிலிருந்து,

*யா நபுஸீ ஸீஹீ அபதா,*
*வலாத் துஹிப்பீ அஹதா,*
*இல்லல் ஜலீலஸ் ஸமதா,*
*யா நபுஸீ மூத்திக் கமிதா,*

('என் ஆன்மாவே! நீ மண்ணில் எப்பொழுதும் நடந்து திரிவாயாக! நீ இறைவனைத் தவிர்த்துள்ள வேறொன்றின் மீது அன்பு செலுத்தாதே. நிறம் மாறி இறப்பெய்துவாயாக) என்ற கவிதை வெளி வந்து கொண்டிருந்தது.

அப்பொழுது அவர், அவர்களைக் கண்டதும் ''ஷைகு அவர்களே! இன்னும் தாங்கள் இறை நம்பிக்கையில் குறைந்தவர்களாகத் தான் உள்ளீர்களோ?'' என்று வினவினார். அது கேட்டு அவர்களுக்கு ஏற்பட்ட நாணத்திற்கு அளவில்லை.

மற்றொரு தடவை அவர்கள் பாலை நடுவே நடந்து செல்லும் பொழுது வழிதவறி, தம் மூக்குச் சென்ற வழியே நடந்து கொண்டிருந் தார்கள். அப்பொழுது ஒரு திசையிலிருந்து காக்கை கரையும் சப்தம் வரவே, அந்தச் சப்தம் வரும் திசை நோக்கி அவர்கள் அடியெடுத்து வைத்து நடந்து சென்றார்கள். அப்பொழுது ஒருவன் அவர்களை நோக்கி விரைந்தோடி வந்து, அவர்களின் கழுத்தில் ஓங்கிக்குத்தினான்.

அப்பொழுது அவர்கள், ''இறைவனே! இவ்வாறு தானா நீ உன்மீது பரிபூரண நம்பிக்கை வைத்த ஒருவனுடன் நடந்து கொள்வது?'' என்று அலறினார்கள். அப்பொழுது அசரீரி ஒன்று ''நீர் என்மீது நம்பிக்கை வைத்துள்ளவரை நீர் என்னுடைய கண்களில் மதிப்பு மிகுந்தவராகக் காணப்பட்டீர். இப்பொழுது நீர் காக்கையின் சப்தத்தில் நம்பிக்கை வைத்ததன் காரணமாக அடிபட்டீர்' என்று முழங்கியதைச் செவியுற்றனர்.

அவன் குத்திய குத்தின் வேதனையைப் பொறுத்துக் கொண்டு அவர்கள் அடியெடுத்து வைத்து நடந்து சென்ற பொழுது மீண்டும் அசரீரி ஒன்று, ''கவ்வாஸ்! அவன் குத்திய குத்து உமக்கு இன்னும் வேதனையை நல்கிக் கொண்டுள்ளது, எனினும் அதோ பாரும்'' என்று முழங்கியதைக் கேட்டு, அவர்கள் ஏறிட்டுப் பார்த்தார்கள். என்ன வியப்பு! அவர்களைக் குத்தியவனின் தலை மணலிலே புரண்டு கிடந்தது.

இதே போன்ற அனுபவம் அவர்களுக்கு மற்றொரு முறை ஏற்பட்டது. அதனை அவர்கள் இதோ கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''நான் ஹலால் ஆன உணவைத் தேடுவதில் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டேன். கடலிலுள்ள மீன்களைப் பிடித்து உண்பது ஹலாலான உணவு எனக் கருதி, ஒரு தூண்டில் வாங்கி, அதன் நுனியில் இரையைக் கோத்துக் கடலோரம் சென்று தூண்டிலிட்டேன். விரைவில் ஒரு மீன் பட்டது. அம்மீனை எடுத்து மணலில் போட்டு விட்டு மீண்டும் தூண்டிலிட்டேன். மீண்டும் ஒரு மீன்பட்டது. அதனையும் எடுத்து மணலில் போட்டு விட்டு, மூன்றாவது முறை தூண்டி விட்டேன். அப்பொழுது என் முதுகில் ஓர் அடி விழுந்தது. திரும்பிப் பார்த்தேன். ஒருவருமில்லை. அப்பொழுது அசரீரி ஒன்று, ''அல்லாஹ்வைத் துதி செய்து கொண்டிருக்கும் படைப்பினங்களைப் பிடித்து உண்பதைத் தவிர்த்து, உமக்கு வேறு உணவு கிடைக்கவில்லையா?'' என்று முழங்கியது. அக்கணமே நான் தூண்டில் கம்பை ஒடித்து வீசி எறிந்து விட்டு என் வழியே நடந்து சென்றேன்.''

அவர்கள் புகழையோ பிரபல்யத்தையோ பெரிதும் வெறுத்தனர். எனவே அவர்கள், அவற்றிற்கு அஞ்சி, எந்த ஊரிலும் நீண்ட நாட்கள் தங்குவதில்லை. ஒரு தடவை அவர்கள் ஓர் ஊரில் சில நாட்களே தங்கினர். அதற்குள் அவர்களுக்கு அங்கு பேரும் புகழும் ஏற்பட்டு விட்டது. அதற்கு மாற்றுச் செய்ய விரும்பிய அவர்கள், ஒரு குளியலறைக்குச் சென்றார்கள். அங்கு அரசர் வந்து குளித்துக் கொண்டிருந்தார். குளியலறைக் காவலன் கவனக் குறைவாக இருக்கும் பொழுது, அவர்கள் தம் உடைகளைக் கழற்றி அங்கு வைத்து விட்டு அரசரின் உடைகளை அணிந்து கொண்டு, அங்கிருந்து சந்தடி செய்யாமல் வெளியேறி

விட்டார்கள். அவர்கள் இவ்வாறு செய்ததற்குக் காரணம், தமக்கேற்பட்ட புகழும் பிரபல்யமும் தொலைந்து இழிவும் அவமரியாதையும் ஏற்பட வேண்டுமென்பதேயன்றி வேறில்லை.

அவர்கள் எண்ணிய வண்ணமே நிகழ்ந்தது. நொடியில், அரசு ஊழியர்கள் அவர்களைச் சுற்றி வளைத்து அவர்களை நையப்புடைத்தனர். 'குளியலறைக் கள்வன்' எனப் பெயர் சூட்டி அவர்களின் பொன்மேனி மீது அவ்வழியே போவோர் வருவோர் அனைவரும் 'தர்மஅடி' கொடுத்துவிட்டுச் சென்றார்கள்.

அது கண்டு அவர்களின் உள்ளம் மகிழ்ந்தது, ''நீ இங்கு தான் இருக்க வேண்டும். இது தான் உனக்கு ஏற்ற இடம்'' என்று அவர்கள் தமக்கே தாம் கூறிக் கொண்டார்கள்.*

சின்னாட்கள் அங்கிருந்தபின், அவர்கள் கானகம் சென்று அங்கு வசிக்கலாயினர். ஒரு தடவை அவர்கள் கானகத்தின் நடுவே வீற்றிருந்த பொழுது, காட்டரபி ஒருவர் அவர்களிடம் வந்து ''இப்ராஹீமே! 'தவக்குல்' எங்களிடமே உள்ளது. நீர் உம்முடைய 'தவக்குல்' சரியாக இருக்க விரும்பின் நீர் எம்முடன் காட்டிலேயே தங்கி விட வேண்டும். உணவுப் பொருளுக்காக நீர் நகரங்களுக்குச் செல்வது, உம் தவக்குலை மாசுறச் செய்கிறது'' என்று கூறினார்.

அவ்விதமே கானகத்தின் நடுவே பல காலம் தங்கி இருந்த அவர்கள், ஹஜ்ஜு செய்வதற்காக மக்கமா நகர் நோக்கிச் செல்லுங்கால், இருட்டி விடவே, அவ் இரவை ஆங்கிருந்த ஒரு பாழ்மண்டபத்தில் கழித்து விட்டுச் செல்ல எண்ணினர்.

அவர்கள் அப்பாழ் மண்டபத்தில் நுழைந்ததும், ஆங்கு ஒரு கொடிய வனவிலங்கு படுத்திருப்பதைக் கண்டு அவர்கள் வெளியே வெருண்டோடி வந்தனர். அப்பொழுது, ''இப்ராஹீமே! அஞ்சாதீர். உம்மை எழுபத்திரண்டாயிரம் வானவர்கள் காவல் புரிகின்றனர்'' என்று அசரீரி முழங்கியதைச் செவியுற்றார்கள். காலையிலும் மாலையிலும் ''அவூது பில்லா ஹிஸ் ஸமீஇல் அளீம் மினஷ்ஷைத்தானிர் ரஜீம்'' என்று மூன்று தடவை ஓதி, சூரா ஹஷ்ரிலுள்ள இறுதி மூன்று வசனங்களையும் வழக்கமாக ஓதி வந்ததனால் அவர்களுக்கு அப்பேறு கிடைத்தது என்பதை அவர்கள் விளங்கிக் கொண்டார்கள்.

---

* அவர்கள் இவ்விதம் செய்தது பற்றி இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. சிலர் அவர்கள் செய்தது தவறு என்று கூறுகிறார்கள். வேறு சிலரோ அவர்கள் தம்மிடமிருந்த பெருமையை நீக்க இவ்வாறு தம்மைத் தாழ்த்திக் கொண்டார்கள். அது ஒரு வகையில் பார்த்தால் சரியேயாகும் என்று எடுத்துரைக்கிறார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் பாலை வழியே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு பெண் பேரின்பப் போதையில் மூழ்கியவளாய்த் தலைவிரி கோலமாகத் தம் முன் வந்து கொண்டிருப்பதைக் கண்டனர். அப்பெண் அவர்களை நெருங்கியதும், ''பெண்ணே! உன் தலையை மூடு'' என்று அவர்கள் கூறினார்கள். அதுகேட்ட அந்நங்கை ''கவ்வாஸே! நீர் உம்முடைய கண்களை மூடிக் கொள்ளும்'' என்று பதிலிறுத்தார். தம் பெயர் அவருக்கு எவ்வாறு தெரிய வந்தது என்று வியப்புற்ற அவர்கள், ''நான் இறை காதலில் மூழ்கியுள்ளேன். காதல் வயப்பட்டவர்கள் தம் கண்களை மூடாது தம் காதலனையே வைத்த விழி வாங்காது பார்த்துக் கொண்டிருப்பர் என்று உமக்குத் தெரியாதா என்ன? என்னவோ என் பார்வை உம் மீது பட்டு விட்டது. அதனால் தான் கூறினேன்'' என்று சொன்னார்கள். அதற்கு அப்பெண்மணி, ''நானும் காதல் போதையில் மூழ்கியுள்ளேன். போதையில் மூழ்கியவர்கள் தலையை மூட வேண்டுமென்ற உணர்வையும் இழந்து விடுவார்கள் என்ற உண்மையை நீர் அறியமாட்டீரா, என்ன?'' என்று இடக்காகக் கூறினார். அப்பொழுது இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் அப்பெண் மணியை நோக்கி, ''நீர் எந்த விடுதியில் மதுவருந்தி போதையுற்றீர்?'' என்று வினவினர். அதற்கு அந்நங்கை நல்லார், ''கவ்வாஸே! எச்சரிக்கையுடன் பேசும். நீர் என்னுடைய போக்கைத் தடை செய்யவல்லவோ செய்கின்றீர். அல்லாஹ்வுடைய விடுதியைத் தவிர்த்து வேறொரு விடுதியும் உண்டா?' என்று வினவினார். தம்மை அப்பெண்மணி பேச்சில் மடக்கி விட்டதைக் கண்ட இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள், ''அம்மணீ! தாங்கள் என்னுடன் சேர்ந்து வருகிறீர்களா?' என்று வினவினர். அதற்கு அம்மாதரசி, ''கவ்வாஸே! நீர் என்ன உலகம் தெரியாதவராயுள்ளீர். நான் ஆண்களை விரும்பும் பெண் என்று எண்ணிக் கொண்டீரா, என்ன? என் காதலன் அல்லாஹ்வேயன்றி வேறில்லை'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றார்.

துருக்கி நாட்டிலுள்ள மடம் ஒன்றில் எழுபது ஆண்டுகளாக ஒருவர் திருமணம் முடிக்காது துறவு பூண்டு வாழ்ந்து வருகிறார் என்பதைக் கேள்வியுற்ற இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள், ''துறவறத்திற்கான எல்லை நாற்பதாண்டுகள் தாமே. இவர் என்ன எழுபதாண்டுகளாகத் துறவறம் மேற்கொண்டுள்ளார்'' என வியப்பு மொழி பகர்ந்தனர். எனவே அவரைப் பார்த்து வரும் நோக்கத்துடன், துருக்கி நாடு நோக்கி நடந்து சென்றார்கள். தம்மை நோக்கி இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வருவதைக் கண்ட அத்துறவி, அவர்களை நோக்கி, ''இப்ராஹீமே! நீர் ஏன் இங்கு வந்தீர்? நான் இங்கு துறவியாக வீற்றிருக்கவில்லை. என்னிடம் ஒரு நாய் உள்ளது. அது மக்களைக் கண்டதும், அவர்கள் மீது

பாய்ந்து விழுகின்றது. எனவே, அது அவ்விதம் செய்யா வண்ணம் கண்காணித்துக் கொண்டுள்ளேன். அதைத் தவிர நீர் எண்ணிய வண்ணம் நான் ஒன்றும் ஆற்றவில்லை'' என்று கூறினார்.

அதுகேட்ட இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வியப்பு மேலிட்டவர்களாய், ''இறைவனே! உன்னுடைய அடியார்கள் தவறான வழியில் செல்லும் பொழுதும், நீ அவர்களுக்கு நேர்வழி காட்ட வல்லமை பெற்றுள்ளாய்!'' என்று வியப்பு மொழி பகர்ந்தார்கள். இது அத்துறவியின் செவிப்பட்டதும் ''இப்ராஹீமே! நீர் எத்தனை காலம் மனிதர்களைத் தேடிக் கொண்டு அலைவீர். நீர் உம்மைத் தேடிக் கண்டுபிடித்த பின், உம்மை நன்முறையில் கண்காணித்து வருவீராக! ஏனெனில், ஒவ்வொரு நாளும் மனிதனின் ஆசையானது, முந்நூற்று அறுபது போலி தெய்வீகக் கோலங்களைப் புனைந்து, மனிதனை வழி கெடுக்க முனைந்த நிற்கிறது'' என்று கூறினார். அது கேட்ட இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வாயடைந்து நின்று கொண்டிருந்தார்கள்.

அவர்கள் மிகவும் மன அடக்கம் வாய்ந்தவர்களாக விளங்கினர். அவர்களின் மனம் பன்னிரண்டு ஆண்டுகளாகப் பாலும் ரொட்டியும் சேர்த்து உண்ணவேண்டுமென்று விரும்பிய போதினும், அவர்கள் தம் இச்சைக்கு இடம் கொடுக்கவில்லை. ஒரு தடவை அவர்கள் இறப்புப் படுக்கையில் கிடந்த ஒருவரைக் காணச் சென்ற பொழுது, ''தங்களுடைய மனம் எதையேனும் உண்ண வேண்டுமென்று விரும்புகின்றதா? கூறுங்கள். வாங்கித் தருகிறேன்'' என்று சொன்ன பொழுது ''பன்னிரண்டு ஆண்டுகளாகத் தங்களின் விருப்பத்தை நிறைவேற்றாத தாங்கள், எவ்வாறு என்னுடைய விருப்பத்தை நிறைவேற்றப் போகின்றீர்கள்?'' என்று வினவினார். அதுகேட்டு கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வியப்பு மிக்கவர்களாய், ''ஆம்; அல்லாஹ்வின் நல்லடியார்கள், அல்லாஹ்வை யன்றி வேறு எதனையும் விரும்ப மாட்டார்கள்'' என்று பதிலிறுத்தார்கள்.

ஒரு நாள் இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களும், ஹாமிதுல் அஸ்வத் (ரஹ்) அவர்களும் ஒரு வழியே சென்று கொண்டிருந்த பொழுது, பாம்புகள் நிறைந்த 'வாதியுல் ஹயாத்' என்ற பகுதி எதிர்ப் பட்டது. அப்பொழுது ஹாமிதுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள், இப்ராஹீம் அல்கவ்வாஸ் (ரஹ்) அவர்களை நோக்கி, ''நாம் இன்றிரவை இங்கு கழிக்காது விரைந்து சென்று விடுவோம்'' என்று கூறிய போது, ''இல்லை இவ்விரவை இங்கு தான் கழிக்க வேண்டும்'' என்று கூறி, அவ்விடத்தி லேயே தங்கி விட்டார்கள் அவர்கள். பொழுதுபட்டதும் பாம்புகள் அணி அணியாக வந்து, அங்குமிங்கும் நெளிவதைக் கண்ட ஹாமிதுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள் பயந்து அலறிய பொழுது, ''பயப்படாது அல்லாஹ்வைத்

துதித்துக் கொண்டிரும்'' என்று கூறினர் அல்கவ்வாஸ். இவ்வாறு ஹாமிதுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள் பல தடவை அலறிய பொழு தெல்லாம், இப்ராஹீம் அல்கவ்வாஸ்(ரஹ்) அவர்கள் கூறிய ஒரே ஆறுதல் மொழி ''பயப்படாது அல்லாஹ்வைத் துதித்துக் கொண்டிரும்'' என்பதாகவே இருந்தது. இரவு முழுவதும் இவ்வாறு கழிய, வைகறையும் வந்து சேர்ந்தது. வைகறைத் தொழுகை முடிந்ததும், ஹாமிதுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள், தம் ஆசானின் விரிப்பை எடுத்து உதறி மடிக்க முற்பட்ட பொழுது அவர்கள் இருந்த இடத்தில் ஒரு கருநாகம் சுருண்டு கொண்டு கிடப்பதைக் கண்டதும், அஞ்சி நடுங்கியவர்களாய்த் தம் ஆசானை நோக்கி, 'பாம்பு, பாம்பு' என்று அலறியக்கால் 'சிறுபிள்ளைத்தனமாக அலறாதீர், அல்லாஹ்வின் பேரருளால் இன்றிரவு போன்று ஓர் இன்பகரமான இரவை நான் என்றுமே கழித்ததில்லை'' என்று கூறினர் அவர்கள்.

ஒருதடவை அவர்களின் போர்வையில் ஒரு தேளைப் பார்த்த மக்கள், அதனை அடிக்க முற்பட்ட பொழுது, அதனை அடிக்க வேண்டாமென்று தடுத்த அவர்கள், ''ஒவ்வொரு பொருளுக்கும் என்னிடம் ஒரு தேவை யுள்ளது. எனக்குத் தான் அல்லாஹ்வைத் தவிர வேறு எப்பொருள் மீதும் யாதொரு தேவையுமில்லை'' என்று கூறினர்.

ஒரு தடவை அவர்கள் தம் சீடர் ஒருவருடன் கானகத்தின் நடுவே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஓரிடத்தில் தங்கி இறை தியானத்தில் மூழ்கி இருந்த பொழுது, ஒரு சிங்கம் அவர்களை நோக்கி வந்தது. சீடரோ தம் உயிரைக் காப்பதற்காக மரத்தின் மீது ஏறிக் கொண்டார். அவர்களைச் சிங்கம் சுற்றிச் சுற்றி வந்து முகர்ந்து விட்டுச் சென்றுவிட்டது. அவர்கள் அதுகண்டு அணுவத்தனையும் பதறவோ, திகிலுறவோ செய்யவில்லை.

அடுத்த நாள் மீண்டும் அவர்களின் பயணம் துவங்கியது. ஓரிடத்தில் அவர்கள் வீற்றிருந்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, ஒரு கொசு அவர்களைக் கடித்து விட்டது. வேதனை தாங்க இயலாது அவர்கள் அலறி விட்டார்கள். அது கண்ட அவர்களின் சீடர், ''என்ன!நேற்று சிங்கம் ஒன்று தங்களை நோக்கி வந்தபொழுது, அமைதி குலையாது வீற்றிருந்தீர்கள். இன்றோ ஒரு கொசுவின் கடியைத் தாங்க இயலாது அலறுகின்றீர்களே'' என்று கூறினார். அது கேட்ட அவர்கள் ''நேற்று இறைவன் தன்னுடைய பேரருளால் என்னை, என் உடலை மறந்து நிற்கும் நிலையை எனக்கு நல்கியிருந்தான். ஆனால் இன்றோ நான் என்னுடைய சுய உணர்வில் உள்ளேன்'' என்று பதிலிறுத்தார்கள்.

நாளுக்குநாள் அவர்களின் மாண்பு உயர்ந்து கொண்டே வந்தது. வன விலங்குகளும் அவர்களின் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து நடக்கும்

படித்தரத்தை அவர்கள் எய்தப் பெற்றார்கள். அவர்களைப் பற்றிக் கேள்வியுற்று, அவர்களைக் காண வந்த மார்க்க விற்பன்னர் ஒருவர், அவர்களின் பின்னே நின்று மஃரிப் தொழுகை தொழுதார். அப்பொழுது அவர், ''இவரைப் பெரிய மெய்ஞ்ஞானி என்று எண்ணிக் கொண்டல்லவோ நாம் இவரைப் பார்க்க வந்தோம். இவருக்கோ திருக் குர்ஆனின் வசனங்களைச் சரியாக உச்சரிக்கக் கூடத் தெரியவில்லையே'' என்று எண்ணினார். எனவே தொழுது முடிந்ததும், அவர்களிடம் சொல்லாமல் கொள்ளாமல் வந்த வழியே திரும்பினார் அவர்.

சற்று நேரத்தில் மூச்சுத் திணற அவர் ஓடி வந்தார். ''என்ன செய்தி?'' என்று வினவினர் ஆண்டகையார். 'புலி ஒன்று என்னைத் துரத்திக் கொண்டு வருகிறது' என்றார் அவர் நடுங்கும் குரலில், அவர் இவ்வாறு கூறி வாய் மூடுமுன் புலியும் அங்கு வந்து விட்டது. அப்பொழுது அவர்கள் அப்புலியை நோக்கிச் சற்றுக் கடுமையான குரலில் ''விலங்கினமே! நம் விருந்தினருக்கு நீங்கள் யாதொரு இன்னலும் இழைக்கக் கூடாது என்று நாம் கட்டளையிடவில்லையா?'' என்று வினவினர். அது கேட்ட புலி வந்த வழியே திரும்பி விட்டது.

அதன்பின் ஆண்டகை அவர்கள், அந்த மார்க்க விற்பன்னரை நோக்கி, ''நீங்களோ நாவைமட்டும் தூய்மைப்படுத்துகிறீர்கள். நாங்களோ உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, அதனை இறையச்சத்தில் நிரப்ப வைத்துள்ளோம். எனவே, ஏகனாகிய இறைவன் ஒருவனுக்கு மட்டும் பயந்த நாங்கள், வேறு எவருக்குமே பயப்படத் தேவையில்லாமல் போய் விடுகிறது'' என்று கூறினர். அப்பொழுது அந்த மார்க்க விற்பன்னருக்கு ஏற்பட்ட நாணத்திற்கு அளவில்லை.

அவர்களுக்கு இருபது ஆண்டுகளாக இனிப்பு மாதுளம் பழம் தின்ன வேண்டுமென்று ஆசையாக இருந்தது. எனினும், அந்த ஆசையை அவர்கள் ஒரு நாளேனும் நிறைவேற்றி வைக்கவில்லை. ஒருநாள் அவர்களின் நஃப்ஸ் (மனஇச்சை) அவர்களை நோக்கி, ''நீர் இருபதாண்டுகளாக என்னை ஏமாற்றி வருகின்றீர். இனியும் ஏமாற்றிக் கொண்டிருப்பீராயின், நான் இடக்குப் பண்ணுவேன். உம்முடைய வணக்கத்தில் உமக்கு அலுப்பேற்படுமாறு செய்வேன்'' என்று கூறியது.

அப்பொழுது அவர்கள் தம் நஃப்ஸை நோக்கி, ''சற்றுப் பொறு. நாம்பழமரங்கள் நிறைந்த காட்டிற்குச் செல்லும் பொழுது, உன் இச்சையை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்று ஆறுதல் நிறைந்த உறுதிமொழி பகர்ந்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் கானகத்தினூடே சென்று கொண்டிருக்கும் பொழுது அங்கு ஒரு மாதுளம் மரம் பழுத்துக் குலுங்குவதைக் கண்டு,

அதிலிருந்து ஒரு பழத்தைப் பறித்து உண்டார்கள். அதுவோ ஒரே புளிப்பு மயமாக இருந்தது. அதனைத் தூக்கி எறித்துவிட்டு, மற்றொரு பழத்தை பறித்து உண்ட பொழுது, அதுவும் அவ்வாறே இருந்தது. இவ்வாறு அவர்கள் பறித்து உண்ட நாலைந்து பழங்களும் புளிப்பு மயமாகவே இருந்தன.

அப்பொழுது அவர்களின் நஃப்ஸ் அவர்களை நோக்கி, ''நான் இனிப்பு மாதுளம்பழத்தை விரும்புகின்றேன். எனக்குப் புளித்த மாதுளம் பழம் வேண்டாம்'' என்று கூறியது.

அவ்விடத்தை விட்டும் அவர்கள் சற்றுத் தொலைவு சென்றார்கள். அங்கு ஒரு தோட்டம் இருந்தது. ஆங்கு ஒரு மனிதன் வீற்றிருந்தான். அவனை அவர்கள் அணுகித் தமக்கு ஒரு மாதுளம் பழம் தருமாறு கேட்டார்கள். அவன் மறுவார்த்தையின்றி ஒரு மாதுளம் பழத்தை பறித்துக் கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்தான். அதனை உடைத்து அவர்கள் உண்டார்கள். அதுவும் புளிப்பாகவே இருந்தது.

அவர்கள் அந்த மனிதனிடம் தாம் வரும் வழியில் மாதுளம் பழங்களைப் பறித்து உண்டதையும், இப்பொழுது உண்டதையும் கூறி, அனைத்துப் பழங்களும் புளிப்பாக இருக்கும் அதிசயத்தை எடுத் துரைத்தார்கள்.

அதற்கு அவன் ''நீர் உம்முடைய நஃப்ஸிற்கு வழிப்படுகிறீர். நான் இத்தோட்டத்தில் நாற்பது ஆண்டுகளாகக் காவற்காரனாக உள்ளேன். அல்லாஹ்வின் மீது ஆணையாகக் கூறுகிறேன். இங்குள்ள மரங்களில் எது இனிப்பு மாதுளை, எது புளிப்பு மாதுளை என்பதை அறியேன்'' என்று கூறினான்.

அது கேட்டு வியப்பு மிக்கவர்களாய் அவ்விடத்தைவிட்டும் நீங்கிய அவர்களுக்கு மற்றொரு வியப்புக் காத்திருந்தது.

திடீரென ஒரு பள்ளத்தாக்கில் நுழைந்த அவர்கள், ஆங்கு ஒரு மனிதர் தரையிலே களைத்து வீழ்ந்து கிடப்பதையும், அவருடைய உடலில் புழுக்கள் நெளிவதையும், குளவிகள் மொய்த்துக் கொண்டிருப்பதையும், கண்டு, அவர் மீது இரக்கமுற்று ''தங்களுக்கு இத்துன்பங்களிலிருந்து நிவா ரணம் நல்குமாறு இறைவனிடம் இறைஞ்சவா?'' என்று வினவினர். ''வேண்டாம்'' என்று அவர் பதில் கூறினார். ''ஏன் அவ்விதம் கூறு கிறீர்கள்?'' என்று அவர்கள் வினவ, ''ஏன் என்றா வினவுகின்றீர்? கூறு கிறேன் கேளும். நிவாரணம் என்பது நான் விரும்புவது. துன்புறுத்துவது என்பது அவன் விரும்பியது. எனவே, அவனுடைய விருப்பத்திற்கு மேலாக என்னுடைய விருப்பம் இருப்பதை நான் விரும்பவில்லை''

என்று அவர் பதில் கூறினார். ''நல்லது; அந்தக் குளவிகளையாவது விரட்ட எனக்கு அனுமதி நல்குங்கள்'' என்று அவர்கள் வேண்டிய பொழுது ''கவ்வாஸே! உம்முடைய உள்ளத்திலிருந்து இனிப்பு மாதுளம் பழம் தின்ன வேண்டுமென்ற ஆசையை விரட்டியடியும். என்னை ஏன் வீணே தொந்தரவு படுத்துகிறீர்? உம் மனப்புண்ணை ஆற்றநீர் இறைஞ்சிக் கொள்வீராக! நீர் ஏன் என் உடற்புண்ணை ஆற்றுமாறு இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்?'' என்று கூறினர். அது கேட்டு வியப்புற்ற கவ்வாஸ் (ரஹ்) அவர்கள், ''என் பெயர் தங்களுக்கு எவ்வாறு தெரியும்?'' என்று வினவிய பொழுது, ''இறைவனை அறிந்தவனுக்கு யாதும் மறை பொருளாக இருக்காது'' என்று அவர் மறுமொழி பகர்ந்தார். ''நல்லது; குளவிகள், கொத்துவதை எவ்வாறு பொறுத்துக் கொண்டுள்ளீர்கள்? அது தங்களுக்கு வேதனை தரவில்லையா?'' என்று கவ்வாஸ் (ரஹ்) அவர்கள் வினவிய பொழுது, ''குளவிகள் என் உடலில் கொத்தும் பொழுதும், புழுக்கள் என் உடலை உண்ணும் பொழுதும், நான் மகிழ்ச்சியுறுகிறேன். காரணம், எல்லாம் இறைவன் செயல்' என்று அவர் மறுமொழி பகர்ந்தார். அது கேட்டு இப்ராஹீம் அல்கவ்வாஸ் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கு அளவில்லை.

ஒரு தடவை அவர்கள் ஓர் அரபிக் கிளையினரின் தலைவரின் கூடாரத்திற்குச் சென்ற பொழுது, கூடார வாசலில் சுடுமணலில் ஒரு நீக்ரோ விலங்கிடப்பட்டுக் கிடப்பதைக் கண்டார்கள். அவர்களின் உள்ளத்தில் இரக்க நீர் சுரந்தது. அவனுக்காக அவரின் எசமானரிடம் பரிந்துரைக்க அவர்களின் மனம் துடித்தது. அதற்கான வாய்ப்பை எதிர்பார்த்து, அவர்கள் காத்திருந்தனர். வந்த விருந்தினரை உபசரித்து உணவளிக்கும் அரபிகளின் பாரம்பரியப் பண்பிற்கேற்ப, அவர்களின் முன் உணவு கொண்டு வந்து வைக்கப்பட்டது. அவர்கள் அதனை உண்ண மறுத்தார்கள்.

அது கண்டு பெரிதும் வருந்திய எசமானர் அவர்களை அணுகி அதற்கான காரணத்தை வினவினார்.

''தங்களிடம் ஒரு வரம் வேண்டுகிறேன். அவ்வரத்தைத் தாங்கள் வழங்கின் நான் உண்ணுகிறேன்'' என்று அவர்கள் கூறினர்.

''அதற்கென்ன? தாங்கள் முதலில் உண்ணுங்கள். என் சொத்து முழுவதையும் கேட்பினும் தருகிறேன். அவை அனைத்தும் தங்களுடையனவேயாம்'' என்று பண்போடு பதிலுரைத்தார் அவர்.

''தங்களின் சொத்தும் வேண்டாம். செல்வமும் வேண்டாம். எனக்கு வேண்டியதெல்லாம் தாங்கள் என் பொருட்டு இந்த அடிமையை மன்னிக்க வேண்டுமென்பதேயாகும்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

அதற்கு அந்த எசமானர், ''முதலில் அவன் செய்த குற்றத்தைக் கேளுங்கள். அதன்பின் அவனைப் பிணைத்திருக்கும் தளையைக் களைந் தெறியுங்கள்'' என்று கூறிவிட்டுப் பேசத் துவங்கினார்:

''இவன் என்னுடைய ஒட்டகம் ஓட்டும் அடிமையாவான். இவனுக்கு இனிய குரல் அமைந்துள்ளது. ஒருநாள் இவனிடம் சில ஒட்டகங்களை ஒப்படைத்து அவற்றை அழைத்துக் கொண்டு நிலத்திற்குச் சென்று அங்கு வைக்கப்பட்டிருக்கும் தானியப் பொதிகளை அவற்றின் மீது ஏற்றிக் கொண்டு வருமாறு பணித்தேன். அவன் அந்த ஒட்டகங்கள், ஒவ்வொன்றின் மீதும் இரு மடங்கு பொதிகளை ஏற்றி இனிய குர லெடுத்துப் பாடியுள்ளான். அது கேட்டு மகிழ்ந்த அந்த வாயில்லாப் பிராணிகள் வேகமாக ஓட, ஓட இவனும் மகிழ்ச்சி மீக்குற்று உரத்துப் பல்வேறு இராகங்களில் பாடிக் கொண்டு, அவற்றின் பின்னே ஓடி வந்துள்ளான். வந்து அவற்றின் மீதிருந்த பொதிகளை இறக்கியது தான் தாமதம், அவை ஒன்றின் பின் ஒன்றாகக் களைப்புற்றுக் கீழே விழுந்து செத்தன. அதற்குத் தண்டனையாக நான் இவனைத் தளையிட்டுச் சுடு மணலில் படுக்க வைத்துள்ளேன்.''

அவரின் இக்கூற்று, அவர்களுக்குப் பெரும் வியப்பை அளித்தது. அவர்கள் அவரை நோக்கி, ''தங்களைப் போன்ற ஒரு கூட்டத்தின் தலைவர் பொய்யுரைப்பார் என்று நான் எண்ணவில்லை. எனினும் தாங்கள் கூறுவதை ஆதாரமின்றி நம்ப என்னால் இயலாதிருக்கிறது'' என்று வினயமாகக் கூறினார்.

அப்பொழுது அங்குள்ள கிணற்றில் நீர் அருந்தச் சில ஒட்டகங்கள் கொணரப்பட்டதைக் கண்ட அவர் ஒட்டகம் ஓட்டுபவர்களை நோக்கி, ''அந்த ஒட்டகங்கள் நீர் அருந்தி எத்தனை நாட்களாகின்றன?'' என்று வினவினார்.

''மூன்று நாட்களாகின்றன'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந் தார்கள்.

உடனே அவர் கட்டுண்டு கிடந்த அடிமையை நோக்கி, ''எழுந்து பாடு'' என்று ஆணையிட்டார்.

அவனும் இனிய குரலெடுத்து உரத்துப் பாடினான். அவன் பாடிய பாடல் அந்த ஒட்டகங்களைச் சொக்கி மயங்க வைத்துவிட்டன. ஆடாது அசையாது அதனைக் கேட்டுக் கொண்டிருந்த அவைகள், தம்முன் வைக்கப்பட்டிருந்த தண்ணீரைக் கூட அருந்தாது அவ்விடத்தை விட்டும் திடீரென ஒன்றன்பின் ஒன்றாகப் பாலையை நோக்கி ஓடலாயின.

அதுகண்ட அவர்கள் அந்தத் தலைவரை நோக்கி, ''தாங்கள் கூறியது முழுக்கமுழுக்க உண்மை என்று எனக்கு உறுதியாகி விட்டது. எனினும், அந்த நீக்ரோ அடிமையின் பிழை பொறுத்து, அவனை என் பொருட்டு விடுதலை செய்வீர்களாக'' என்று வேண்டினர். அவரும் அவ்வாறே செய்தார்.

அவர்கள் தம் பயணத்தின் போது கண்ட வேறு சில புதுமைகளை அவர்களே கூறுகிறார்கள். நாமும் கேட்போம்.

''நான் சிற்றூர் ஒன்றிற்குச் சென்றேன். அங்கு பெரியார் ஒருவர் வாழ்ந்து கொண்டிருந்தார். அவரைத் தரிசிப்பதற்காக அவரின் இல்லம் சென்றேன். அதுவே ஒரு மகானின் வணக்க இடம் போன்று தூய்மை யுடன் பொலிவுற்றுத் திகழ்ந்தது. அதன் இரு மருங்கிலும் இரண்டு மிஹ்ராப்கள் (தொழுமிடங்கள்) இருந்தன. அவற்றில் ஒன்றில் ஒரு கிழவரும், மற்றொன்றில் ஒரு கிழவியும் வீற்றிருந்து, இறைவனைத் துதித்துக் கொண்டிருந்தார்கள். அபார வணக்கத்தின் காரணமாக அவர்கள் இருவரும் பலவீனமாகக் காணப்பட்டனர். நான் அவர்களைத் தேடி, அவர்களின் இல்லம் வந்தது அறிந்து அவர்கள் பெரிதும் மகிழ்வுற்றார்கள். நான் அவர்களுடன் மூன்று நாட்கள் தங்கியிருந்தேன். நான்காம் நாள் அவர்களிடமிருந்து விடை பெறும் பொழுது, நான் அந்த முதியவரை நோக்கி, ''தங்களுக்கும் அப்பெண்மணிக்கும் உறவின் முறை யாது?'' என்று வினவினேன். அதற்கு அவர் ''அவள் சிறிய தந்தையின் மகள், என் மனைவி'' என்று பதில் கூறினார். அப்பொழுது நான் வியப்பு மீக் குற்றவனாய், ''நான் தங்களுடன் தங்கியிருந்த இந்த மூன்று நாட்களாகத் தாங்கள் ஒருவரோடொருவர், கணவன் மனைவியர் போன்று நடந்து கொள்ளவில்லையே. எவரோ அந்நியர் போன்றல்லவோ நடந்து கொண்டீர்கள்'' என்று கூறினேன். அதற்கு அவர், ''ஆம்; இவ்வாறு தான் நாங்கள் அறுபத்தைந்து ஆண்டுகளாக நடந்து வருகிறோம்'' என்று விடையிறுத்தார். அதற்கான காரணம் யாது?'' என்று நான் வினவினேன்.

''அவர்கூறலானார். ''நாங்கள் இருவரும் இளமையில் காதல் வயப்பட்டோம். எனினும், திருமணத்திற்கு அவளின் தந்தை இடையூறாக நின்றார். இது எனக்குப் பெரிதும் மனவருத்தத்தை நல்கியது. நெடு நாட்களாக நான் அத்துன்பத்தைப் பொறுமையுடன் நுகர்ந்து கொண்டி ருந்தேன். அவளின் தந்தை காலமான பின் அவரின் உடன் பிறந்தாரான என்னுடைய தந்தை அவளை எனக்கு மணமுடித்து வைத்தார்.

''முதல் இரவு அவள் என்னை நோக்கி, ''நம் இருவரையும் ஒன்றிணைத்த அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் முறையில் நாம் இன்றிரவை இறை வணக்கத்தில் கழிப்போம்'' என்று கூறினாள்.

''நல்லது'' என்று கூறி அவ்விதமே அவ்விரவைக் கழித்தோம்.

அடுத்த இரவும் அவள் அவ்வாறே கூறினாள். அவ்விதமே செய்தோம்.

மூன்றாம் இரவு அவள் என்னை நோக்கி, ''கடந்த இரண்டு இரவுகளை நாம் இருவரும் நமக்காக வேண்டி இறை வணக்கத்தில் கழித்தோம். இன்றிரவை நாம் இருவரும் தனக்காக வேண்டி இறை வணக்கத்தில் கழிப்போம்'' என்று கூறினாள்.

அவ்விதமே அன்றிரவைக் கழித்தோம், அடுத்த நாள் இரவும் அதற்கு அடுத்த நாள் இரவும் இவ்விதமே கழிந்தன. அறுபத்தைந்து ஆண்டு காலமாக நாங்கள் இவ்வாறே வாழ்ந்து வருகிறோம். இந்த அறுபத்தைந்து ஆண்டு காலத்தில், நாங்கள் ஒருவர் மற்றொருவரைத் தொட்டதும் இல்லை; தீண்டியதும் இல்லை'' என்று கூறினார்.''

''பின்னர் நான் ஒரு கூட்டத்தினருடன் சேர்ந்து 'ஹஜ்'ஜு செய்ய மக்கா புறப்பட்டேன். வழியில் தனித்துச் சென்றால் நல்லது என்ற உணர்வு என்னிடம் மிகைத்தது. எனவே 'ஹஜ்'ஜுக் குழுவினரை விட்டுப் பிரிந்து தனிவழியே நடந்து சென்றேன். மூன்று இரவும் பகலும் இவ்வாறு தனித்து நடந்தேன். உண்ணவோ, பருகவோ எனக்கு நாட்டம் வரவில்லை. இறுதியாக ஒரு கானகத்தை வந்தடைந்தேன். அங்கு அழகிய பூங்கா ஒன்று இருந்தது. அதில் பூச்செடிகள் பூத்து நறுமணத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. மரங்கள் காய்த்துப் பழுத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன. எங்கணும் குளிர் தருக்கள் நிறைந்து நிழல் நல்கிக் கொண்டிருந்தன. அவற்றினூடே மென் காற்று சிறு ஒலி எழுப்பி ஓடி விளையாடிக் கொண்டிருந்தது. அங்கு ஒரு சிறு குளமும் இருந்தது. இத்தகு மனோரம்மியமான சூழலைக் கண்டதும், இதுதான் சுவனப் பூங்காவாக இருக்குமோ என்ற எண்ணம் என் இதயத்தில் கோடிழுத்தது.

நான் அங்கு அமர்ந்து, அங்கு வீசிய மென்காற்றையும், அது சுமந்து வந்த நறுமணத்தையும் நுகர்ந்து இன்பப் போதையில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கும் பொழுது, அழகிய உருவினர் சிலர், என்னை நோக்கி வந்து, எனக்கு ஸலாம் உரைத்தார்கள். நான் பதில் கூறினேன். அப்பொழுது அவர்கள் ஜின் இனத்தவராயிருப்பரோ என்ற ஐயம் எனக்கு ஏற்பட்டது.

அக்காலை அவர்களின் தலைவர் என் முன் வந்தமர்ந்து, ''நாங்கள் ஜின் இனத்தவராவோம். திருமறையை அண்ணல் நபி (ஸல்) அவர்களின் திருவாயால் ஓதக் கேட்டு நாங்கள் இஸ்லாத்தைத் தழுவினோம். அதன் பின் இறைவன் எங்களுக்கு இவ்விடத்தைத் தந்தான்'' என்று கூறினார்.

அப்பொழுது நான் அவரை நோக்கி, ''என்னுடன் வந்தவர்கள் இருக்கும் இடத்திற்கும் இதற்கும் எவ்வளவு தொலைவு இருக்கும்?'' என்று வினவினேன்.

அதுகேட்ட அவர் புன்முறுவலுடன் ''அபூ இஸ்ஹாக்கே! இது இறைவனின் அற்புதங்களில் ஒன்றாகும். தாங்கள் இருக்கும் இந்த இடத்திற்கு இதுவரை ஒரே ஒரு மனிதரைத் தவிர வேறு எவரும் வரவில்லை. அவருடைய அடக்க இடமும் இதோ இருக்கிறது'' என்று கூறி ஆங்கிருந்த ஓர் அடக்கவிடத்தைச் சுட்டிக்காட்டினார்.

பின்னர் அவர் என்னை நோக்கி, ''தாங்கள் இருக்கும் இந்த இடத்திற்கும், தங்களின் கூட்டாளிகள் இருக்கும் இடத்திற்கும் உள்ள தொலைவு மாதத் தொலையோ ஆண்டுத் தொலையோ ஆண்டவனே அறிவான்'' என்று கூறினார்.

''நல்லது; அதில் அடங்கப்பட்டிருப்பவர் பற்றிய விவரங்களைக் கூறுங்கள். அவர் பற்றி நான் அறிய ஆவலாயுள்ளேன்'' என்று கூறினேன்.

அப்பொழுது அவர் கூறினார்:

''அபூ இஸ்ஹாக்கே! ஒரு நாள் நாங்கள் இந்தக் குளக்கரையில் அமர்ந்து, இறைக்காதல் பற்றி உரையாடிக் கொண்டிருந்தோம். அப்பொழுது திடீரென ஒருமனிதர் வந்து எங்களுக்கு 'ஸலாம்' உரைத்தார். நாங்கள் பதில் கூறினோம். அதன்பின் நாங்கள் அவரை நோக்கி, ''தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று வினவினோம். நீஷாப்பூரிலிருந்து வருவதாகக் கூறினார். ''எப்பொழுது புறப்பட்டீர்கள்?'' என்று கேட்டோம். ''புறப்பட்டு ஏழு நாட்களாகி விட்டன'' என்று பதிலுரைத்தார். தாங்கள் இத்துணைப் பெருந்தொலைவுப் பயணத்தை மேற்கொள்ளக் காரணம் என்ன?'' என்று வினவினோம். அதற்கு அவர் ''அல்லாஹ்வின் பக்கல் உளப்பூர்வமாகத் திரும்புங்கள். உங்களுக்கு வேதனை வருமுன் அவனுக்கு வழிப்படுங்கள். அவனுடைய வேதனை வந்துவிடின் உங்களுக்கு உதவி செய்வார் ஒருவருமில்லை'' என்று பொருள் பொதிந்த 'அனீபு இலா ரப்பிக்கும்' என்ற திருவசனமே அதற்குக் காரணம் என்று கூறினார்.

அப்பொழுது நாங்கள் 'இனாபத்' என்றால் என்ன? 'அதாப்' என்றால் என்ன?'' என்று வினவினோம்.

அதற்கு 'இனாபத்' என்றால் முற்றிலும் இறைவன் பக்கல் திரும்பி விடுதல்' என்று கூறிய அவர், அடுத்து 'அதாப்' என்ற சொல்லைக் கூறியதும் அதிர்ச்சியுற்றவராய்ப் பெரும் சப்தமிட்டுக் கீழே சாய்ந்தார். அத்துடன் அவரின் உயிர் பிரிந்தது''.

இவ்வாறு அவர் கூறி முடித்ததும் வியப்பு மீக்குற்றவனாய் அவரின் அடக்கவிடத்தைப் பார்க்க அதன் அண்மையில் சென்றேன். அதன் மீது ''இது ஓர் இறைநேசரின் அடக்க விடமாகும். இறையச்சமே அவரை இறக்கச் செய்துவிட்டது'' என்ற வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது.

பின்னர் ஒரு நாள் அவர்கள் பஸ்ராவின் கடைத்தெரு வழியே நடந்து சென்று கொண்டிருக்கும் பொழுது திடீரெனக் கடைத்தெரு முழுவதும் நெருப்புப்பற்றி எரிந்தது. எனினும் அவர்கள் அத்தீயின் மீது மிதித்துக் கொண்டு நடந்து சென்றார்கள். இதைக் கண்ட அந்நகர ஆளுநர், அவர் களை நோக்கி, ''நெருப்பு தங்களின் கால்களைச் சுடாமல் ஒதுங்கி நடந்து செல்லுங்கள்'' என்று கூறினார். அதற்கு அவர்கள் ''நெருப்பு என் கால் களைச் சுடாது'' என்று பதில் கூறினர். ''ஏன்?'' என்று வியப்போடு வின வினார் அவர். அதற்கு அவர்கள் ''நெருப்பு என்னைத் தீண்டக் கூடாது என நான் இறைவனிடம் சத்தியப் பிரமாணம் வாங்கியுள்ளேன்'' என்று பதிலிறுத்தார்கள். ''அவ்விதமாயின் அதற்கு ஆணையிடுங்கள், அணைந்து விடுமாறு'' என்று வேண்டினார் ஆளுநர். அவ்விதமே அவர்கள் செய்ய, நெருப்பு அடுத்த கணம் அணைந்தது.

அதற்கு இறைவனின் நல்லடியார்களில் ஒருவர் பின்வருமாறு கூறுகின்றார்:

''நாங்கள் மதீனாவில் ஓரிடத்தில் அமர்ந்து வலிமார்கள் ஆற்றும் அற்புதங்களைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தோம். அப்பொழுது ஆங்கிருந்த குருடர் ஒருவர் ''நான் வலிமார்களின் அற்புதங்களில் ஒன்றைக் கூறவா?'' என்று கேட்டார். ''கூறும்'' என்று நாங்கள் விடையிறுத்தோம்.

அவர் கூறினார்: என்னுடைய குடும்பமோ பெரியது. நானோ பிள்ளை குட்டிக்காரன். வீட்டில் அடுப்பெரிக்க விறகு இல்லாதிருந்தது. எனவே சுள்ளிகளைப் பொறுக்கி வருவதற்காக 'ஃபகீஹ்' என்ற இடத் திற்குச் சென்றேன். அங்கே ஓர் இளைஞரைக் கண்டேன். அவரின் உடலில் கித்தான் சட்டை ஒன்றிருந்தது. கையில் காலணிகளை வைத்திருந்தார். ''எவரோ வழிப் போக்கர் இவர், வழி தவறி இங்கு வந்துவிட்டார் போல் தோன்றுகிறது'' என்று எண்ணிய நான், அவருடைய சட்டையைக் கைப்பற்ற விழைந்தேன். எனவே விறுவிறுவென அவரை நோக்கிச் சென்று ''இளைஞரே! நீர் அணிந்திருக்கும் சட்டையைக்கழற்றி மரியாதையாகத் தந்து விடும். இல்லையேல் நான் வன்முறையால் அதனைக் கழற்றிக் கொள்வேன்'' என்று கூறினேன்.

அதற்கு அவர் ''அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளும்'' என்று அமைதியாகப் பதிலிறுத்தார். எனினும் நான், அவர் கூறியதைச்

சிறிதேனும் பொருட்படுத்தாது மீண்டும் மீண்டும் அவரை முன்புபோன்று மிரட்டினேன். அப்பொழுது அவர் புன்முறுவலுடன் ''அப்படித் தான் நான் செய்ய வேண்டுமோ?'' என்று வினவினார். 'ஆம், அப்படித்தான் நீர் செய்ய வேண்டும்' என்று நான் அதிகாரத்துடன் கூறினேன். அவர் தம் இரண்டு விரல்களையும் என் இருகண்களையும் நோக்கி நீட்டினார். அடுத்தகணம் என் கண்கள் இரண்டும் பார்வை இழந்தன. அப்பொழுது நான், ''அல்லாஹ்வின் மீது ஆணையாக நீர் யார் என்று கூறும்'' என்று சொன்னேன். அவர் 'இப்ராஹீம் அல் கவ்வாஸ்' என்று கூறிவிட்டுச் சென்றார். இறைநேசரை எதிர்த்ததன் காரணமாக நான் இந்த நிலைக்கு ஆளானேன்.'' என்றார்.

அவர்கள் பேரின்ப இசையில் திளைத்து ஆடவும், மயக்க முற்றுக் கீழே விழவும், செய்து வந்தார்கள். இதுபற்றி ஒருவர் கூறுகிறார். நாமும் கேட்போம்.

''ஒருதடவை நான் இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களுடன் ஒரு மலைச்சாரலின் வழியே நடந்து சென்று கொண்டிருந்தேன். திடீரென நான் உணர்ச்சி மீக்குற்று.

**''நான் காதல் வயப்பட்டுள்ளேன் என்பதை எல்லோரும் அறிவார்கள்.**
**ஆனால் எவர்மீது என்பதை எவரும் அறியார்கள்.**
**ஓர் அழகிய குரலால் மிகைக்கப்படாத எந்த அழகும்**
**மனிதனிலே இல்லை; இல்லை''**

என்று பண்ணிசைத்தேன்.

அதுகேட்டுச் சொக்கி மகிழ்ந்த அவர்கள், மீண்டும் அதனைப் பாடுமாறு கூறினார்கள். பாடினேன். அவர்கள் ஆடினார்கள். அவர்களின் பாதங்கள் கல்லின் மீது அப்படியே பதிந்து விட்டன. பின்னர் தன்னுணர்வற்றுக் கீழே சாய்ந்தனர்.

உணர்வு பெற்றதும், அவர்கள் என்னை நோக்கி, ''இவ்வளவு நேர மாக நான் சுவனத்தில் இருந்தேன்; அதனை நீர் அறியமாட்டீர்?'' என்று கூறினார்கள்.

''இறைவனின் பேரருளில் பரிபூரண நம்பிக்கை வைப்பவர்களின் தலைவர்'' என்று பொருள்படும் 'ரயீஸுத்தவக்கிலீன்' என்று புகழ்ப் பெயர் பெற்றிருந்த அவர்களிடம், ''தங்களுக்கு எங்கிருந்து உணவு கிடைக்கின்றது?'' என்று வினவப்பட்ட பொழுது, ''தாயின் வயிற்றி லுள்ள குழந்தைக்கு எங்கிருந்து உணவு கிடைக்கின்றதோ, காட்டில் திரியும் மிருகங்களுக்கு எங்கிருந்து உணவுகிடைக்கின்றதோ, அவ்வாறே

எனக்கும் உணவு கிடைக்கின்றது; நான் உண்கின்றேன்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

ஒரு நாள் இப்ராஹீம் அல் கவ்வாஸ்(ரஹ்) அவர்கள், தங்களின் தவ மடத்தில் மாணவர் புடைசூழ வீற்றிருந்த பொழுது, ஓர் இளவல் அவர்களை நோக்கி வந்தான். அவனைக் கண்டதும் அவர்கள் தம் அருகே வீற்றிருந்த மாணவர் ஒருவரிடம், யாதோ இரகசியம் பேசினர். அதனை அவ்விளவலும் கவனித்தான். பின்னர் அவர்கள் ஏதோ அலுவல் நிமித்தம் வெளியே சென்ற பொழுது, அவர்களுடன் சேர்ந்து வெளியே வந்த இளவல், திரும்ப உள்ளே சென்று, அவர்கள் தம்மைப் பற்றி யாதோ இரகசியம் பேசிய மாணவரை அணுகி, ''தங்களின் ஆசான் என்னைப் பார்த்ததும், ஏதோ தங்களின் காதோடு காதாகக் கூறினார்களே. அது என்ன?'' என்று வினவினான். அவர் முதலில் யாதும் கூற மறுத்தார். பின்னர் வற்புறுத்தி வேண்டிக் கொண்டதன் பேரில், ''நீ ஓர் யூதன் என்றும், முஸ்லிம் உடையில் தம்மைச் சோதிப்பதற்காக வந்திருப்பதாகவும் கூறினர்'' என்று இயம்பினர். அதுகேட்ட அந்த யூதஇளவலுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கும், ஆச்சரியத்திற்கும் அளவில்லை. உடனே ஓடோடிச் சென்று இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களின் காலடியில் வீழ்ந்து இஸ்லாத்தைத் தழுவினான்.

ஒரு தடவை மக்கள் அவர்களிடம் இறை நம்பிக்கை (ஈமான்) பற்றி வினவிய பொழுது, ''இது பற்றி என்னிடம் யாதொரு பதிலும் கிடையாது. வணக்கம் (இபாதத்) தான் நான் சொல்லும் பதிலாகும். செயல்மூலம் அதற்குப் பதில் கூறப்பட வேண்டுமேயன்றி, சொல்லால் அல்ல'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

மற்றொரு நாள் ஒருவர் அவர்களை அணுகி, ஈமானின் உறுதிப்பற்றி வினவிய பொழுது, 'நான் அதைப்பற்றி உம்மிடம் சொல்லித் தெரிவிக்க விரும்பவில்லை. அதனைச் செயல் மூலம் காட்ட விரும்புகிறேன். நான் இப்பொழுது மக்கா புறப்பட்டுக் கொண்டுள்ளேன். என்னுடன் வாரும், காட்டுகிறேன்'' என்று கூறினர். அதற்கிசைந்து அவரும் அவர்களுடன் சேர்ந்து மக்கா புறப்பட்டார். வழியில் அவர்களுக்கு ஒவ்வொரு நாளும் இரண்டு ரொட்டித்துண்டுகளும், இரண்டு கிண்ணங்களில் தண்ணீரும் வந்தன. அவற்றில் ஒன்றை அவர்கள் எடுத்துக் கொண்டு, மற்றொன்றை அவருக்குக் கொடுத்தார்கள்.

ஒரு நாள் ஒருவர் குதிரை மீது இவர்ந்து வந்து, அவர்களைக் கண்டதும் இறங்கி, அவர்களுடன் சற்றுநேரம் உரையாடிவிட்டு, மீண்டும் குதிரை மீது ஏறிச் சென்று விட்டார்.

அப்பொழுது அவர், இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களை நோக்கி, ''சற்றுமுன் தங்களுடன் உரையாடிச் சென்றவர் யார்?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''இதுதான் உம்முடைய கேள்விக்கான பதில்!' என்று கூறினர்.

'' எவ்வாறு?'' என்று வினவினார் அவர்.

அவர்கள் கூறினார்கள் : ''வந்து சென்றவர் 'கிள்ர் (அலை) ஆவார். என்னுடன் வரத் தம்மையும் அனுமதிக்க வேண்டுமென்று வேண்டினார். நான் முடியாது என்று கூறிவிட்டேன். காரணம் நான் இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கை (தவக்குல்), அதனால் மாசுபட்டுவிடுமென்று அஞ்சினேன்''.

''ஒருவன் ஆன்மீக உச்சத்தை எவ்வாறு எய்தப் பெறுவது?'' இது அவர்களிடம் வினவப்பட்ட மற்றொரு கேள்வியாகும். இதற்கு அவர்கள் பின்வருமாறு பதில் கூறினார்கள்.

''ஆன்மீக உச்சத்தை எய்த விரும்புவோர் ஐந்து விதமான செயல்களை வழக்கமாகச் செய்து வரவேண்டும். 1.திருக்குர் ஆனை ஓதி வருவதோடு, அதன் வசனங்களை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். 2. வயிறு நிரம்ப ஒரு போதும் உண்ணக் கூடாது.3. இரவில் விழித்திருந்து இறை வணக்கத்தில் ஈடுபட வேண்டும். 4. நள்ளிரவில் விழித்தெழுந்து தஹஜ்ஜுத் தொழுகை தொழுது இறைவனிடம் கண்ணீர் விட்டு அழுது இறைஞ்ச வேண்டும். 5. பக்திமான்களுடனும், மகான்களுடனும் உறவாடி வரவேண்டும். இவற்றில் மிகவும் சக்திவாய்ந்தது நள்ளிரவில் தஹஜ்ஜுத் தொழுது இறைவனிடம் அழுது மன்றாடுவது தான்.''

பிரிதொரு நாள் ஒருவர்அவர்களை அணுகி ''குர்ஆன் அல்லாத ஏனைய பாடங்களைக் கேட்கும் பொழுது, தன்னுணர்வற்றவனாக ஆகிவிடும் மனிதன், குர்ஆன் ஓதப்படுவதைக் கேட்கும் பொழுது, அத்தகு நிலையை எய்தப் பெறாததற்குக் காரணம் என்ன?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''திருக் குர்ஆன் திடுக்கமும் துக்கமும் நிறைந்த இறைவசனமாகும். அதனைச் செவியுறுவோனுக்கு அச்சத்தைத் தவிர்த்து வேறொன்றும் ஏற்பட வழியில்லை. ஆனால், ஏனைய பாடல்களிலோ, அச்சம் என்பதில்லை. இன்பமும் மகிழ்ச்சியுமே நிறைந்து வழிகிறது. எனவே அவன், அந்த இசையில் மூழ்கித் திளைத்துத் தன்னையே மறந்த நிலையில் ஆகிவிடுகிறான்'' என்று விளக்கம் பகர்ந்தார்கள்

"எல்லா அறிவுகளும் இரண்டே இரண்டு வாக்கியங்களில் அடங்கி விடுகின்றன. அந்த இரண்டு வாக்கியங்கள் என்ன வென்றால், உனக்கு நிகழ்ந்ததைப் பற்றி உன் மனத்தைத் துன்புறுத்திக் கொள்ளாதே. நீ செய்யக் கடமைப்பட்டதைச் செய்யத் தவறிவிடாதே என்பதேயாகும்" என்று அவர்கள் கூறினார்கள். இதற்கான விளக்கம், இறைவன் உனக்குவிட்ட விதியைப் பற்றி மனத்தை அலட்டிக் கொள்ளாது அதனை ஏற்றுக் கொள்வாயாக! ஏனெனில் அவன் விதித்ததை நீ உன் முயற்சியால் மாற்றியமைக்க ஒருக்காலும் இயலாது. அவன் உனக்கு விதித்துள்ள கட்டளைகளை உளப்பூர்வமாக ஏற்றுச் செயலாற்றுவாயாக! அவ்விதம் செய்யத் தவறின் நீ இறை தண்டனைக்கு ஆளாவாய்" என்பதேயன்றி வேறில்லை.

"இறைவன் எனக்கு இறவாப் பெரும்வரத்தை நல்க வேண்டு மென்று விரும்புகிறேன். இவ்வாறு நான் விரும்புவதற்குக் காரணம், மனிதர்கள் அனைவரும் உலக இன்பங்களில் மூழ்கி, இறைவனை மறந்திருக்கும் பொழுது, நான் மட்டும் உலகத் துன்பங்களால் சூழ்ப்பட்ட நிலையிலும், மார்க்கத்தைப் பேணி ஒழுகி இறை நினைவில் திளைத்துக் கொண்டிருக்க விழைவதேயாகும்" என்று அவர்கள் ஒரு தடவை கூறினார்கள்.

அவர்கள் மீண்டும் ஹஜ்ஜுப் பிரயாணத்தை மேற்கொள்ள நாடிய பொழுது, ஒரு தர்வேஷும் அவர்களுடன் வருவதாகக் கூறினார். அதற்கு அவர்கள் ஒப்புதல் தெரிவித்தார்கள். அப்பொழுது அவர், அவர்களை நோக்கி, "இந்தப் பிரயாணத்தில் ஒருவர் தலைவராகவும், மற்றொருவர் ஊழியராகவும் இருந்து கொள்வோம்" என்று கூறினார். "நல்லது; நான் ஊழியனாக இருந்து கொள்கிறேன். தாங்கள் தலைவராக இருந்து கொள்ளுங்கள்" என்று கூறினர் அவர்கள். அதுகேட்டு அந்த தர்வேஷுக்கு யாது கூறுவதென்றே விளங்கவில்லை. தாம் ஒன்று நினைக்க, நடந்தது வேறொன்றாக ஆகிவிட்டதை அறிந்து அவருக்கு ஒரு பக்கல் துக்க மாகவும், மற்றொரு பக்கல் வெட்கமாகவும் இருந்தது.

வழிநெடுக அவர்கள் அந்த தர்வேஷுக்குச் செய்த ஊழியங்களோ அளவிடற்பாலனவாயிருந்தன. காட்டில் சுள்ளி பொறுக்கி வந்து நெருப்பு மூட்டி, வெந்நீர் சுட வைத்து, அவருக்குக் கொடுப்பது முதற் கொண்டு சின்னஞ்சிறு ஊழியங்களெல்லாம் அவர்கள் அவருக்குச் செய்தார்கள். ஓரிரவு கடுமையான மழை பெய்த பொழுது, தம்முடைய கம்பளிப் போர்வையை அவரின் தலைக்குமேல் குடைபோல் பிடித்துக் கொண்டு நின்றார்கள்.

பொழுது புலர்ந்தது. தர்வேஷ், அவர்களை நோக்கி, ''போதும்; போதும். தாங்கள் ஊழியராக இருந்தது. இனிமேல் நான் ஊழியனாக இருக்கிறேன். தாங்கள் தலைவராக இருந்து கொள்ளுங்கள்'' என்று கூறினார். 'நல்லது; அவ்விதமே செய்வோம்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். எனினும், முன்பு போன்றே அவர்கள் தமக்குக் குற்றூழியம் செய்வதைக் கண்ட அவர், ''அவற்றைத் தாங்கள் செய்யக் கூடாது'' என்று கூறிய பொழுது, ''தலைவருக்கு ஊழியர் கட்டளையிடு வதா, என்ன? இஃதென்ன விநோதமாக இருக்கிறது. யாதும் கூறாது வெறுமனே இரும். தலைவரின் கட்டளைக்கு மாறுசெய்வது கீழ்ப்படி யாமையாகும்'' என்று பதிலிறுத்தார்கள்.

இவ்வாறு கூறிய அவர்கள் அவருக்கு வழிநெடுக ஊழியம் செய்து வந்ததோடு, மக்கா வந்த பின்பும் அவருக்கு அவ்விதமே ஊழியம் செய்யலானார்கள். அது கண்டு அவருக்கு யாது செய்வதென்றே விளங்க வில்லை. சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விட்டார் அவர். பின்னர் அவர்கள் அவரை மினாவில் சந்தித்தனர். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''மகனே! நான் உம்மை எவ்வாறு நேசித்தேனோ, அவ்வாறே நீர் நண்பர்களை நேசிக்க வேண்டும். நான் எவ்வாறு நடந்து கொண்டேனோ அவ்வாறே நீர் தர்வேஷ்களிடம் நடந்து கொள்ள வேண்டும்'' என்று அருள்மொழி மலர்ந்தனர்.

இவ்வாறு அன்புருவாய் வாழ்ந்து வந்த அடிகளார், தாம் இதுகாறும் நேசித்து வந்த நண்பனை அணுகப் பெரிதும் அவாக் கொண்டார்கள். ஒருநாள் - அது ஹிஜ்ரி 291-ஆம் ஆண்டில் ஒரு நாளாக இருந்தது. அவர்கள் ரை நகரப்பள்ளி வாயிலில் தங்கி இருந்த பொழுது, அவர்களுக்கு ஒருதடவை வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. ஒவ்வொரு தடவை வயிற்றுப் போக்கு ஏற்பட்டதும், அவர்கள் குளித்துவிட்டு இரண்டு ரகஅத் தொழுதார்கள். அப்பொழுது மக்கள் அவர்களை நோக்கி, ''தங்களுக்கு யாது நிகழ்ந்துள்ளது?'' என்று வினவிய பொழுது, ''என் இருதயத்தில் ஒரு பகுதி கெட்டுவிட்டது'' என்று அவர்கள் பதில் கூறினார்கள். பின்னர் எட்டாவது தடவையாக (மற்றொரு வரலாற்றின் படி அறுபதாவது தடவையாக) அவர்களுக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டு, அவர்கள் குளித்துக் கொண்டிருக்குங்கால் அவர்களின் உயிர், அவர்களின் உடலை விட்டும் பிரிந்தது.



## 10. ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்)

பஸரா நகரில் திஜ்லா நதிமீது கட்டப்பட்ட பாலத்தின் கிழக்குப் பக்கத்து 'அல்தாக்' என்ற வாசல் வழியாக மக்கள் சாரி சாரியாகச் சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஓர் இளவல், ஒரு முதியவரின் மேலங்கியைப் பிடித்துக் கொண்டு, ''நீர் என்னுடைய அன்னையை மண விடுதலை செய்யும். என் அன்னை ஒரு மதத்தினராயும், நீர் வேறொரு மதத்தினராயும் இருக்கிறீர். இவ்வாறு நீங்கள் இருவரும் இருக்கும் பொழுது, எவ்வாறு நீங்கள் கணவன் -மனைவியாக இல்வாழ்க்கை நடத்த இயலும்?'' என்று தர்க்க ரீதியாக வாதிட்டுக் கொண்டிருந்தார். இதனை அவ்வழியே சென்ற அனைவரும் பார்த்து ரசித்துக் கொண்டு சென்று கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவரேனும் தலையிட்டு யாதுசெய்தி என்று அவர்களை வினவவில்லை.

இதன்பின் சில காலம் கழித்து, அந்த முதியவர் இறந்து விட்டார். அப்பொழுது அவரின் மகனான அந்த இளவலுக்கு முப்பதாயிரம் தீனார்கள் வாரிசுரிமையாகக் கிடைத்தன. அக்காலை அந்த இளவல் சொல்லொணா வறுமை வாய்ப்பட்டிருந்த போதினும், அவற்றைத் துரும்பெனக் கருதித் தூக்கி எறிந்தார். ''அந்தப் பணம் எனக்கு வேண்டாம். எடுத்துச் சென்று அரசாங்கக் கருவூலத்தில் சேர்த்து விடுங்கள்'' என்று கூறினார் அவர்.

''ஏன் இவ்வாறு கூறுகின்றீர்? நீரோ வறுமையில் உழன்று கொண்டிருக்கிறீர். இந்நிலையில் அவை உமக்குக் கிடைத்தது, இறைவன் உமக்கு அளித்த வரப்பிரசாதமாக வல்லவோ கருத வேண்டும்'' என்று ஒருவர் அவரிடம் வினவினார்.

அதற்கு அவர்''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கத்ரீய்யாக்கள் இந்த சமுதாயத்தின் மஜூஸிகள் ஆவர் என்று கூறியுள்ளார்கள். மேலும் ஒரு முஸ்லிம், ஒரு மஜூஸியின் சொத்துக்களுக்கு வாரிசுரிமை பெற மாட்டான் என்றும் மொழிந்துள்ளார்கள். ஒரு கத்ரீயாகிய என் தந்தை, அண்ணல் நபி (ஸல்) அவர்களின், அந்த ஆதாரப்பூர்வமான ஹதீஸ்படி ஒரு

மஜூஸியாகிறார். அவர் அவ்விதமிருக்கும் பொழுது ஒரு முஸ்லிமாகிய நான் எவ்வாறு அவரின் சொத்துக்களை வாரிசுரிமையாகப் பெறத் துணிவேன்? பட்டினி கிடந்து இறந்தாலும், இறப்பேனே அன்றி அவரின் சொத்திலிருந்து ஒரு பருக்கையேனும் நான் உண்ணேன்'' என்று பதில் கூறினார் அவர். இவ்வாறு கூறிய அந்த இளவல் யார்?

பஸராவில் 'அஸத்' என்ற பெயருடன் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் அரபிக் கிளைகளில் ஒன்றான, 'அனஸிக்' கிளையில் தோன்றியதனால், அஸத் அனஸீ என்று அழைக்கப்பட்டார். அவர் எத்தகைய கொள்கையுடையவராக இருந்தார் என்று திட்டவட்டமாகத் தெரியவில்லை. அவர் ஒரு வாக்கிஃபியாக இருந்தார் என்று சிலரும், ராஃபிலீயாக இருந்தார் என்று வேறு ஒரு சிலரும், ஒரு கத்ரிய்யாக இருந்தார் என்று மற்றும் சிலரும், மஜூஸியாக இருந்தார் என்று மற்றும் சிலரும் கூறுகின்றார்கள். அவருக்கு ஹிஜ்ரி 165- ஆம் ஆண்டில் (கி.பி. 781) ஓர் ஆண்மகவு பிறந்ததும், அவருக்கு ஹாரிது என்னும் அழகுசால் திருப் பெயரிட்டு, அருமை பெருமையுடன் வளர்த்து வந்தார்.

முள்செடியில் ரோஜா மலர் பூப்பது போன்று, அஸதின் மகவாகப் பிறந்த அச்சிறுவர் வயதேறப் பெற்றதும், தம் தந்தையின் தவறான போக்கைக் கண்டு பெரிதும் வருந்தினார். அவரைத் திருத்தத் தம்மால் இயன்ற வரை எவ்வளவோ முயன்றார் தனயர். எனினும் பயனில்லை. எனவே தான், அவர் தம் தந்தையுடன், தம்முடையவும், தம்முடைய அன்னையுடையவும் தொடர்பை அறவே முறித்துக் கொள்ளும் நோக்குடன், பாலத்தின் மீது நின்று கொண்டு, தம் தந்தையின் மேலங்கியைப் பிடித்துக் கொண்டு, தம் அன்னையை மண விடுதலை செய்யுமாறு வற்புறுத்தினாரே அன்றி வேறில்லை.

அவருடைய வற்புறுத்தலுங்கிணங்கி அவருடைய தந்தை அவரின் அன்னையை மண விடுதலை செய்தாரா, அல்லவா என்பதை நாம் அறியோம். ஆனால், தனயரோ அதன்பின் பஸராவில் இருக்க மன மில்லாது பக்தாது மாநகர் வந்து, அங்கு பல்வேறு ஆசிரியர்களின் தாள் அமர்ந்து, மார்க்க, ஆன்மீகக் கல்விகளைப் பயின்றார். அவ்விதம் அவர் பயின்ற ஆசிரியர்களில் தலையாயவர் இமாம் ஷாஃபீ (ரஹ்) அவர் களாவர்.

இதன்பின் ஆன்மீக விசாரணையில் இறங்கிய அவர், தம் ஆன்மீக அனுபவங்களை இதோ கூறுகின்றார். நாமும் கேட்போம்.

''நீண்ட நாட்களாக நான் இஸ்லாத்திலுள்ள பல்வேறு பிரிவுகளைப் பற்றியும் ஆராய்ந்து, நேரிய வழியைக் கண்டறிய முயன்றேன். இறை திருமறையை மிகவும் ஆழ்ந்து ஆய்ந்தேன். அதற்கு விளக்கங்களாக உள்ள

தஃப்ஸீர்களையும் நான் படித்தேன். இஸ்லாத்திலுள்ள பல்வேறு பிரிவினர்கள் கூறுவதையும் நன்கு சிந்தித்துப் பார்த்தேன். அவர்களின் கருத்து வேறுபாடுகளோ, ஆழம் தெரிய முடியாக் கடல் போன்றிருந்தன. ஒவ்வொருவரும் தங்களைப் பின்பற்றுவோர் தாம் இன்பச் சுவனத்தை எய்தப் பெறுவர் என்றும், ஏனையோர் மீளா நரகில் வீழ்வர் என்றும் கூறினார்கள். அவர்களில் ஒருவரேனும் உண்மையான ஆன்மீக அறிவைப் பெற்றிருப்பதை நான் காணவில்லை.

''அவர்களைப் பின்பற்றியவர்களில் சிலர், அறிவற்ற முட்டாள்களாக இருந்தனர். அவர்களை விட்டும் ஒதுங்கி இருப்பதே அறிவுடைமையாகக் கண்டேன். வேறு சிலர், மார்க்க விற்பன்னர்கள் போன்று நடிப்பவர்களாக இருந்தனர். அவர்கள் உலகாயதவாதிகள் என்பதை அறிந்து கொண்டேன். மற்றும் சிலர் மார்க்கப் பிடிப்பு இல்லாது, மார்க்கப் படிப்பு மட்டும் அதிகம் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்கள் தங்களை மக்கள் தங்களின் மார்க்க அறிவிற்காகப் பெரிதும் மதிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். பிறிதும் சிலர் கல்வியறிவைப் பெற்றிருந்தார்கள். எனினும், தாம் பெற்ற அறிவைப் பிறருக்கு எடுத்துரைக்கும் ஆற்றலற்றவர்களாக இருந்தனர். மேலும் சிலர் உலக அறிவு மிகுந்தவர்களாகவும் பகுத்தறிவு வாதம் பேசுபவர்களாகவும் இருந்தார்கள். எனினும் அவர்களுக்கு பக்தியும் இறையச்சமும் இல்லை. மற்றும் சிலர் இச்சை வாய்ப்பட்டவர்களாக இருந்தனர். அவர்கள் விரும்பியதெல்லாம் இவ்வுலக வாழ்வேயாகும். பிறிதும் சிலர் ஷைத்தான்களாகவே இருந்தார்கள். அவர்கள் மறுமையைப் பற்றி சிந்திப்பதே கிடையாது. அது பற்றி அவர்கள் இறந்தவர்கள் என்றே குறிப்பிட வேண்டும். அவர்கள் சுவனத்தைப் பற்றி யாதொன்றும் அறியமாட்டார்கள். ஆனால் நரகத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தர்கள்.

''இந்தப் பல்வேறு பிரிவினர்களில் நான் எப்பிரிவில் இருக்கிறேன் என்று தூண்டித் துருவித் தேடிப்பார்த்தேன். என்னால், என்னை எந்தப் பிரிவிலும் காண இயலவில்லை. எனவே நேர் வழியிலுள்ள நல்லோர்களை அணுகினேன். நூல்களைப் படித்தேன். தியானத்தில் ஆழ்ந்தேன். அதன் காரணமாக இச்சை வசப்பட்டுச் செல்வது, ஒருவனைத் தவறுப்படு குழியில் தள்ளி விடும் என்பதை உணரலானேன். எனவே, இச்சைகளை என் இதயத்திலிருந்து கிள்ளி எறிந்தேன். இதன்பின் ஆன்ம விமோசனத்திற்கான வழியைச் சிந்தித்த எனக்கு, இறையச்சமும், இறைவனின் ஏவல்களை எடுத்து நடந்து, விலக்கல்களைத் தவிர்த்து கொள்வதும் உளத்தூய்மையுடன் (இக்லாஸுடன்) இறை பணியை மேற்கொள்ளுவதும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய முன்மாதிரியைப் பின்பற்றுவதுமே அதற்கான வழி என்று தெரிய வந்தது.

''இறைவனின் திருக்கட்டளைகளையும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வழி முறைகளையும், ஒருங்கே பின்பற்றும் நல்லோர்களைத் தேடி அலைந்தேன். அந்த நல்லோர்களின் வழி முறைகளும், அறிவுரை களும், இமாம்களின் அறிவுரைகளுக்கு இணக்கமானவையாக இருப்பதைக் கண்டேன். அவர்கள் அனைவரும் ஒருமித்து மக்களுக்கு நல்ல அறிவுரைகளை நல்கி வந்தார்கள். பாவம் செய்வதை விட்டும் மக்களைத் தடுத்து வந்ததோடு, இறையருளில் அவநம்பிக்கை கொள்ளா திருக்குமாறும், துன்பத்தில் பொறுமையை மேற்கொள்ளுமாறும், இறைவன் விட்ட விதியை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளுமாறும், அவன் அளித்த அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துமாறும், அவர்கள் மக்களுக்கு அறபோதம் வழங்கி வந்தார்கள். அவர்கள் இறைவனின் மாண்பினை நன்கு உணர்ந்திருந்தார்கள். அருட்கொடைகளை வழங்கு வதில் அவனுடைய தாராளத் தன்மை பற்றியும், தண்டிப்பதில் அவனு டைய கடுமையைப் பற்றியும் அவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். இறை தூதர்கள் சென்ற வழியில் அடியெடுத்து வைத்து நடந்த அவர்கள், பிறருக்கு வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழ்ந்தார்கள்.

''அவர்களின் வாழ்க்கை முறைகளைப் பின்பற்ற நான் பெரிதும் அவாவுற்றேன். இறை சட்டத்திற்குக் கீழ்ப் படிந்து நடக்கும் அவர்களின் மாண்பு, என் மனத்தினைப் பெரிதும் ஈர்த்து நின்றது. அவர்களின் வாழ்க்கை முறையையே என்னுடைய வாழ்வின் அடிக்காலாகக் கொண்டு, இறைவன் எனக்கு அருளிய அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்தியவனாகவும் அவனுடைய சட்டதிட்டங்களைப் பிசகின்றி பின்பற்ற ஆற்றல் வழங்குமாறு இறைஞ்சியவனாகவும், அவ்வழியே அடியெடுத்து வைத்து நடந்தேன். முப்பதாண்டுகளாக என் செவி, என் மனச்சான்று கூறியதைத் தவிர வேறொன்றையும் கேட்கவில்லை. முப்பதாண்டுகளாக என் மனச் சான்று இறைவன் கூறியதைத் தவிர வேறொன்றையும் கேட்கவில்லை.''

இவ்வாறு அவர்கள் தம் மனச்சான்றின் சொற்படி அடியெடுத்து வைத்து நடந்த போதிலும், தம்மை, தாம் செய்யும் செயல்களை, அடிக்கடி சோதித்துப் பார்க்கும் இயல்பினராக இருந்தனர். அதன், காரணமாக 'சோதித்துப் பார்ப்பவர்' என்று பொருள்படும் முஹாஸிபி என்ற பட்டப் பெயரும் அவர்களின் பெயரோடு இணைக்கப்பட்டு, அவர்கள் 'ஹாரித் முஹாஸிபி' என்று அழைக்கப்பட்டார்கள் என்று சிலர் கூறுகின்றார்கள். ஆனால் வேறு சிலரோ, அவர்கள் சிந்திக்காது யாதொரு சிறு சொல்லும் கூறாததன் காரணமாக, அப்பெயருக்கு உரியவர்களாக ஆயினர் என்று எடுத்தியம்புகின்றார்கள்.

அக்காலத்தில் பக்தாதில் வாழ்ந்து வந்த ஸூஃபிகளின் தலைவராக அவர்கள் இருந்தார்கள் என்றும், அவர்களின் அறிவுரை மனிதர்களின் இதயங்களுக்குப் புத்துயிரளித்தது என்றும், அவர்களின் வரலாற்றை எழுதிய ஆசிரியர் கூறுகின்றார்.

ஃபரீதுத்தீன் அத்தார் தம்முடைய 'தத்கிரத்துல் அவ்லியா'வில் அவர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, ''அவர்கள் மகான்களின் மன்னராகவும், பக்திமான்களின் தூணாகவும், மதிப்பிற்குரிய மாபெரும் தலைவராகவும், மாண்புசால் நற்பண்புகள் வாயக்கப் பெற்றவராகவும், இலௌகீக, ஆன்மீகக் கல்விகளில் சிறந்த புலமை வாய்ந்தவராகவும் விளங்கினர். எல்லா அறிவுத் துறைகளிலும் அவர்கள் கூறுவதே முடிவாகக் கருதப்பட்டு வந்தது'' என்று அவர்கள் மீது புகழாரம் தொடுக்கிறார்.

இறைச் சிந்தனையிலும், இறை தியானத்திலும் எப்பொழுதும் இருந்து வந்த அவர்கள், பிறருக்கு உதவ எப்பொழுதும் தயாராக இருந்து வந்தார்கள்.ஆன்மீகத்தின் உயரிய படித்தரத்தை எய்திய ஏனையோர் போன்று அவர்களும் அற்புதங்களை ஆற்றவல்லவர்களாக இருந்தனர். ஏதேனும் தவறான உணவு அவர்கள் முன் கொண்டு வந்து வைக்கப்படின், அவர்களின் வலது கை விரல் மீதுள்ள நரம்பு துடிக்கத் துவங்கிவிடும். அதன் காரணமாக அவர்கள் தம் விரலை நீட்டி அவ்வுணவை எடுக்க இயலாது போய்விடும். அதிலிருந்து அவ்வுணவு தவறுடைத்து; தாம் உண்ணத் தகுதியற்றது என்பதை அவர்கள் உணர்ந்து, அதனை உண்பதைத் தவிர்த்து கொள்வார்கள்.

இது பற்றிய நிகழ்ச்சி ஒன்றை ஜுனைத் (ரஹ்) அவர்கள் இதோ கூறுகின்றார்கள்.

''ஒரு நாள் நான் என் இல்லத்தின் முகப்பில் அமர்ந்திருந்தேன். அப்பொழுது ஹாரித் (ரஹ்) அவர்கள் அவ்வழியே வந்தனர். மிகவும் பலவீனமாகக் காணப்பட்டனர். பட்டினியின் காரணமாக அவர்களின் முகம் வாடிச் சுருங்கி இருந்தது. அதனை விளங்கிக் கொண்ட நான், ''சாச்சா! நம் வீட்டிற்கு வாருங்கள். உணவருந்திச் செல்லலாம்' என்று கூறினேன். ''நீர் அதனை விரும்புகிறீரா?'' என்று அவர்கள் வினவினார்கள். ''ஆம்; தாங்கள் என் வீட்டிற்கு வந்து உணவருந்திச் சென்றால், நான் பெரிதும் மகிழ்வுறுவேன். அதனை நற்பேறாகவும் கருதுவேன்'' என்று கூறினேன். ''நல்லது; அவ்விதமே செய்வோம்'' என்று கூறி அவர்கள் என் வீட்டிற்குள் நுழைந்தனர். நான் உள்ளே ஓடிச் சென்று உரியில் ஏதேனும் உணவிருக்கிறதா என்று பார்த்தேன். திருமண வீட்டிலிருந்து வந்த உணவுப் பொருள்களில் நாங்கள் உண்டது போக எஞ்சியது

அதில் இருந்தது. அதனை எடுத்து ஒரு தட்டில் வைத்து, அவர்களின் முன் கொண்டு வந்து வைத்தேன். அவர்கள் தம் கையை நீட்டி அதில் ஒருபிடி எடுத்து வாயில் வைத்து மென்று விழுங்க முயன்றார்கள். எனினும் அவர்களால் அதனை விழுங்க இயலவில்லை. எனவே அதனை வெளியில் துப்பிவிட்டு, என்னோடு யாதும் பேசாது சென்று விட்டார்கள்.

''அடுத்த நாள் காலையில் நான் அவர்களைச் சந்தித்து ''சாச்சா! முதலில் எனக்கு மகிழ்ச்சியைத் தந்து, பின்னர் என்னைத் துன்பத்திற்காளாக்கிச் சென்று விட்டீர்களே'' என்று கூறினேன்.

அதற்கு அவர்கள் ''மகனே! எனக்கும் கடுமையான பசியாகத் தான் இருந்தது. நீ தந்த உணவை உண்டு, உம்மைத் திருப்திப்படுத்தவே நானும் எண்ணினேன். இறைவன் எனக்கு ஓர் அடையாளத்தைத் தந்துள்ளான். நான் உண்ண விரும்பும் உணவு அவனுக்குப் பொருத்தமில்லாததாக இருப்பின், அதிலிருந்து துர்நாற்றம் கிளம்பி என் நாசியை அடைக்கிறது. அதன் காரணமாக நான் அதனை விழுங்க இயலாது போய்விடுகிறது. நான் எவ்வளவுதான் முயன்ற போதினும், அது கீழே இறங்க மறுக்கிறது. நேற்றும் எனக்கு அதே நிலையே ஏற்பட்டது'' என்று பதிலிறுத்தனர்.

அதன் பின் அவர்கள் என்னை நோக்கி, ''அவ் உணவு எங்கிருந்து வந்தது?'' என்று வினவினர்.

''திருமணம் நிகழ்ந்த ஓர் உறவினர் வீட்டிலிருந்து வந்தது'' என்று நான் விடையிறுத்தேன்.

பின்னர் நான் அவர்களை நோக்கி, ''தாங்கள் இன்று என் இல்லம் வருகின்றீர்களா?'' என்று வினவினேன்.

''வருகிறேன்'' என்று அவர்கள் பதில் மொழிந்தார்கள்.

அவர்களை நான் என் இல்லம் அழைத்துச் சென்று, ஒரு காய்ந்த ரொட்டியை அவர்களின் முன் வைத்தேன். அவர்கள் அதனை உண்டார்கள். உண்ட பின் அவர்கள் ''தர்வேஷ்களுக்கு ஏதேனும் உணவளிப்பின் இத்தகு உணவையே அளிக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர்களுடன் ஜுனைத் (ரஹ்) அவர்களின் இல்லம் வந்து, 'மகனே! பாலைவனம் செல்கிறோம். நீயும் எங்களுடன் சேர்ந்து வா'' என்று கூறினர்.

அதற்கு ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''ஏன் சாச்சா என்னையும் தங்களுடன் சேர்த்து அழைக்கிறீர்கள்? நானோ ஒதுங்கி வாழ்ந்து வருகிறேன். அதுவே எனக்கு இன்பம் நல்குகிறது. இதை விட்டு விட்டு நான் ஏன்

வெளியே வந்து வீண் தொல்லைகளுக்கும் மனோ இச்சைகளுக்கும் ஆளாக வேண்டும்?'' என்று கூறினேன்.

அதுகேட்ட அவர்கள் ''பேசாமல் எங்களுடன் வா. நீ பயப்பட வேண்டிய தேவையே இல்லை'' என்று கூறினர்.

எனவே வேறு வழியின்றி அவர்களுடன் சேர்ந்து பாலைவனம் புறப் பட்டார்கள் ஜுனைத் (ரஹ்) அவர்கள். பாலையில் ஹாரித் (ரஹ்) அவர்கள் வழக்கமாக அமர்ந்து தம் நண்பர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும் இடத்தை அடைந்ததும் அங்கு அமர்ந்து, ஜுனைத் (ரஹ்) அவர்களையும் அமரச் செய்தார்கள். அதன் பின் அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை நோக்கி, ஏதேனும் கேட்க வேண்டியிருப்பின் கேள். நான் கூறுகிறேன்'' என்று சொன்னார்கள்.

''ஒன்றும் கேட்க வேண்டியதில்லையே, சாச்சா'' என்று ஜுனைத் (ரஹ்) அவர்கள் பதில் மொழிந்தார்கள்.

''அப்படியா! நல்லது, உன் மனத்தில் தோன்றும் எதைப் பற்றியாவது கேள், நான் கூறுகிறேன்'' என்று அவர்கள் கூறினர்.

இவ்வாறு அவர்கள் கூறி வாய் மூடியதுதான் தாமதம், ஜுனைத் (ரஹ்) அவர்களின் மனத்திரையில் பல்வேறு விதமான கேள்விக்குறிக ளெல்லாம் காட்சி வழங்க, 'என்னை பற்றி முதலில் கேள்' என அவர் களைப் பிடர் பிடித்து உந்தின.

அவர்களும் தம் மனத்தில் தோன்றிய ஐயங்களையெல்லாம் ஒன்று விடாது ஒன்றின்பின் ஒன்றாகக் கேட்டார்கள். அவற்றிற்கெல்லாம் உடனுக்குடன் சரியான விளக்கம் பகர்ந்தார்கள் ஹாரித் அல் முஹாஸிபி.

இவ்வாறு ஒரு தடவையல்ல, பல தடவை அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை, அவர்களின் இல்லத்தை விட்டும் வெளியே இழுத் தார்கள். ஒரு நாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்களை நோக்கி 'சாச்சா' தனிமைதான் என்னுடைய உற்ற நண்பனாக உள்ளது. எனவே நான் ஒதுங்கி வாழ்ந்து வருகிறேன். ஆனால் தாங்களோ என்னை அடிக்கடி பாலைவனத்திற்கு பொதுச் சாலை வழியாக இழுத்துச் சென்று மக்களின் பார்வையில் படுமாறு செய்கிறீர்கள்'' என்று கூறினர்.

அதற்கு அவர்கள், ''மகனே! உன்னுடைய தனிமையைப் பற்றியும், உன்னுடைய உற்ற நண்பனாக அது இருப்பதைப் பற்றியும், நீ எத்தனை தடவைதான் என்னிடம் கூறுவாயோ தெரியவில்லையே. மனித இனத்தில் பாதிப்பேர் என்னோடு வீற்றிருந்த போதிலும், அவர்களின்

நட்பை நான்உணரவும் மாட்டேன். மற்றொரு பாதிப்பேர் என்னை விட்டு நீங்கித் தொலைவில் இருந்த போதிலும், நான் தனியாக விடப்பட்ட தாகவும் உணர மாட்டேன். உலகிலுள்ள மக்கள் அனைவரும் இறந்து விட்ட போதிலும், நான் தனியாக இருப்பதாக எண்ண மாட்டேன்'' என்று கூறினர்.

இவ்வாறு கூறி இறை நினைவில் எப்பொழுதும் இலயித்திருக்கும் தமக்கு இறைவனே எல்லாமுமாக இருக்கும் பொழுது, தனிமையும் இல்லை, நட்பும் இல்லை என்று கூறாமல் கூறினர்.

ஒரு நாள் தர்வேஷ் ஒருவர் அவர்களிடம் வந்து அறிவுரை வேண்டிய பொழுது ''குன் லில்லாஹ் வ இல்லா லாத் தக்குன்'' (நீ அல்லாஹ்வுடைய வனாக இரு; இல்லையேல் ஒன்றுமில்லாமல் போ) என்று கூறினார்கள்.

அல்லும் பகலும் இறைத் தியானத்தில் மூழ்கி இருந்த அவர்கள், நாற்பதாண்டுகள் சுவரில் சாய்ந்து கொண்டு, நிற்கவோ, அமரவோ செய்ய வில்லை. கீழே அமர்ந்திருக்கும் பொழுது கால் மடிந்து அமர்வரே ஒழிய, சம்மணம் போட்டு அமர்வதில்லை. இவற்றிற்கான காரணத்தை அவர் களிடம் வினவப்பட்ட பொழுது ''மாபெரும் அரசனின் திருமுன் ஓர் அடிமை போன்று தானே நான் நடந்து கொள்ள வேண்டும்'' என்று அவர்கள் பணிவோடு பதிலிறுத்தார்கள்.

இவ்வுலகமானது தற்காலிகமானது என்றும், மறுமைக்கான தயாரிப்புகளைச் செய்யும் இடம் என்றும், அவர்கள் கருதினார்கள். உலக மாயையில் மூழ்கி மறுமையை மறந்திடாதிருப்பவர்களே, மனிதர்களில் மாண்பாளர்கள் என்றும் அவர்கள் கருத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் ஒருவர் அவர்களின் முன் வந்து,

''ஏனோ நானும் என் இல்லம்,
எந்தம் நேசனின் திரு இல்லம்
நீங்கி இங்கு வந்தேனோ?
பிறநாடு போந்த ஒருவனின்
கண்கள் போன்று என் கண்கள்
கண்ணீர் தன்னைச் சொரிந்தனவே
இந்த இல்லம் விட்டு நீங்குங்கால்
எந்தம் உள்ளம் துன்புற மாட்டாதே''

என்ற கருத்தமைந்த கவிதையினைப் பாடிய பொழுது உணர்ச்சி மீக்குற்ற அவர்கள் எழுந்து நின்று தேம்பித் தேம்பி அழத்துவங்கி விட்டார்கள்.

அதன்பின் அவர்கள் ''இறைவனின் திருமுன் செல்லப் பாவிகள் தாம் பயந்து நடுங்க வேண்டும், ஆனால், இறைவனின் நல்லடியார்கள் அவனின் சந்திப்பை ஆவலோடு எதிர்பார்த்த வண்ணமிருப்பார்கள்'' என்ற கருத்தமைந்த கவிதை ஒன்றைப் பாடினார்கள்.

அவர்கள் மஃரிஃபா (ஆன்மீக ஞானம்) பற்றி ஒரு நூல் எழுதி னார்கள். அதுபற்றி அவர்கள் பெருமிதமும் கொண்டார்கள். ஒரு நாள் அவர்கள் தம் இல்லத்தின் கதவு தட்டப்படும் சப்தம் கேட்டுக் கதவைத் திறந்தார்கள். ஓர் இளம் தர்வேஷ் அவர்களுக்கு 'ஸலாம்' கூறிக்கொண்டு உள்ளே நுழைந்தார். நுழைந்த அவர் அவர்களை நோக்கி, ''மஃரிஃபா என்பது இறைவன் மனிதனுக்கு அளிக்கக் கூடியதா? அல்லது மனிதன் முயன்று பெறக்கூடியதா?'' என்று வினவினார். 'இறைவன் மனிதனுக்கு அளிக்கக் கூடியது'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள். ''அவ்விதமாயின் சிலருக்கு மட்டும் அதனை அளித்து, வேறு சிலருக்கு அளிக்காதிருப்பது அநீதியல்லவா? அவ்விதமாயின் அவன் ஓர் அநீதிவானா?'' என்றார் அவர்.

அது கேட்டு யாது கூறுவதென அறியாது திகைத்த அவர்கள் அடுத்த கணம் ''அது மனிதனால் முயன்று பெறக் கூடியது'' என்று பதிலுரைத் தனர்.

''அவ்விதமானால் ஏனையோருக்கு அவ்வித ஆற்றலை அவன் நல்காதது அநீதமல்லவா? அவன் எவருக்கும் அநீதி செய்யா நெறி நீதி மன்னனாயிற்றே'' என்று கூறிவிட்டு, வேறு யாதொன்றும் பேசாது வந்த வழியே திரும்பிவிட்டார்.

இந்நிகழ்ச்சி ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்களுக்குப் பெரும் அதிர்ச்சியை அளித்தது. தம் குறையை உணர்ந்த அவர்கள், மஃரிஃபா பற்றிப் பேசவோ, எழுதவோ தமக்குத் தகுதியில்லை என்று கருதி, தாம் மஃரிஃபா பற்றி எழுதி வைத்திருந்த நூலை அக்கணத்திலேயே எரித்துச் சாம்பலாக்கி விட்டார்கள்.

இதன்பின் அவர்கள் வயதேறப் பெற்றுப் போதிய அறிவு முதிர்ச்சி எய்தியபின், 'ஷரஹுல் மஃரிஃபா வ பதல் நஸீஹா' என்று ஒரு நூல் எழுதினார்கள். அதில் அவர்கள் அறிவை, இறைவனைப் பற்றிய அறிவு, இறைவனின் பகைவனாகிய இப்லீஸைப் பற்றிய அறிவு, தன் நஃப்ஸைப் பற்றிய அறிவு, இறைவனின் செயல்களைப் பற்றிய அறிவு, என்று நான்கு வகையாகப் பிரித்தார்கள்.

அதில் இறைவனைப் பற்றிய அறிவு பற்றி அவர்கள் கூறும் பொழுது, அந்த அறிவு இறைவனைத் தியானிப்பதாலும், அவன் தன்

அண்மையில் இருப்பதை நினைவு கூர்வதாலும், அவன் தன்னை இடைவிடாது கவனித்துக் கொண்டிருக்கிறான் என்று நம்புவதாலும் எய்தப் பெறுவதாகும்.

இறைவனின் பகைவனாகிய இப்லீஸைப் பற்றிய அறிவு என்னவென்றால், அவன் தான் மற்ற எவரையும் விட மிகவும் சக்தி வாய்ந்த கொடிய விரோதி என உணர்வதும், அவனை எதிர்த்துச் சிறிதேனும் தளராது போராடுவதும், அவனுக்குச் சிறிதேனும் விட்டுக் கொடுப்பது தனக்கே தான் இழிவையும், அழிவையும் தேடிக் கொள்வதாகும் என்று உணர்வதுமாகும்.

தன் நஃப்ஸைப் பற்றி அறிவது என்றால் நஃப்ஸானது தீமை செய்வதில் முனைந்து நிற்பது என்பதை உணர்ந்து, அதனை இமை கொட்டாது கண்காணித்து வருவதும், தன்னையே தான் அடிக்கடி பரிசோதனை செய்து கொள்வதுமாகும்.

இறைவனின் செயலைப் பற்றிய அறிவானது இறைவனின் நாட்டப்படி செயலாற்றுவதும், அவனுடைய ஏவல்களை எடுத்து நடப்பதும், விலக்கல்களைத் தவிர்ந்து கொள்வதும், தனக்கு மறுமைப் பேற்றினை அளிக்கும் வழியில் அடியெடுத்து வைத்து நடப்பதுமாகும்.

இவ்வாறு கூறிய அவர்கள், இந்தநூலை மனிதர்கள் தம் பார்வையில் படும்படியாகத் தம்முன் கண்ணாடி போல் வைத்துக் கொள்ளுமாறும், இது இறையருளையும், இறை உதவியையும் பெற அவர்களுக்கு உதவும் எனக் கூறி நூலை முடிக்கிறார்கள்.

ஓரிரவு அவர்கள் தம் மஹ்ராபில் அமர்ந்து இறை தியானத்தில் ஈடுபட்டிருந்த பொழுது ஓர் அழகிய இளவல் அவர்களின் முன்தோன்றி அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து அவர்களின் முன் அமர்ந்தார். அவரின் உடலிலிருந்து நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "தாங்கள் யார்?" என்று வினவினர்.

"நான் மிஹ்ராபில் அமர்ந்து இறை தியானத்தில் ஈடுபட்டிருக்கும் பக்தர்களைத் தேடி அலையும் யாத்திரீகன்" என்று மறுமொழி பகர்ந்தார் அவர்.

இவ்வாறு கூறி அவர், "என்னுடைய துன்பம், துயரம் ஆகியவற்றை வெளியே காட்டாது, மறைப்பதும் இறைவனிடமிருந்து கிடைத்த நன்மைகளைப் பகிரங்கப்படுத்துவதுமே என்னுடைய நற்செயல்களாகும்" என்று கூறினர்.

அது கேட்டு அவர் பெரும் சப்தமிட்டு அலறி, "இத்தகு மனிதரையே நான் எழுவானிலிருந்து படுவான்வரைத் தேடி அலைந்து திரிகின்றேன். காணவில்லையே" என்று கூறினார்.

அப்பொழுது அவர்கள் ''எவருக்கு ஆன்மீக நிலைகள் வழங்கப் பட்டுள்ளனவோ, அவர் பெரும் பாரங்களைச் சுமக்கிறார். ஆன்மீக இரக சியங்களை யெல்லாம் மறைத்துக் கொள்கிறார்'' என்று கூறினர்.

அது கேட்டு, மீண்டும் பேரொலி எழுப்பிய அவர், தன்னுணர் வற்றுக் கீழே சாய்ந்து விட்டார். சற்று நேரம் கழித்து மூர்ச்சை தெளிந்ததும் வெளியே சென்று விட்டார்.

அடுத்த நாள் அவர் கலீபாவின் திருமுன் சென்று நின்றார். அவரைக் கண்டதும், ''நீர் யார்?'' என்று வினவினார் கலீபா.

அதற்கு அவர் ''நான் ஒரு யாத்திரீகன். இறைவன் மீது ஆணையாக, நீர் அநீதியாளரே யன்றி வேறில்லை. உம்மை அநீதியாளன் என்று நான் கூறாவிடின், நான் அநீதியாளனாகி விடுவேன்'' என்று கூறினார்.

அவரின் இவ்விடிமொழி கலீபாவுக்குக் கடும் சினத்தை உண்டு பண்ணியது. அவரைச் சிரச்சேதம் செய்யுமாறு பணித்தார். அடுத்த கணம் அது நிறைவேறப்பட்டது.

அன்றிரவு ஹாரித் அல்முஹாஸிபி (ரஹ்) அவர்கள் அவ்விளவலைக் கனவில் கண்டனர். அப்பொழுது அவ்விளவல் அவர்களை நோக்கி, ''ஹாரித்! இதோ நான் தமக்கு அளிக்கப்பட்ட ஆன்மீக நிலைகளை மறைத்துக் கொள்பவர்களையும் தம் உள்ளத்தில் உள்ளவற்றை மறைத்துக் கொள்பவர்களையும் அழைத்து வந்துள்ளேன்'' என்று கூறினார்.

''எங்கே அவர்கள்?'' என்று வினவினார்கள் ஹாரித் முஹாஸிபி.

''இதோ அவர்கள் உம்மைச் சந்திப்பதற்காக வந்து கொண்டுள் ளார்கள்'' என்று அவர் கூறி வாய் மூடுமுன் சிலர் குதிரை மீது இவர்ந்த வண்ணம் வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களை நோக்கி, ''ஹாரித்! அந்த யாத்திரிகர் இருக்கிறாரே, அவர் இறைவனுக்காக அறப் போர் செய்து தம் உயிரையே இறைவனுக்காக அர்ப்பணம் செய்து விட்டார். இறைவன் அவரை ஏற்றுக் கொண்டு விட்டான். ஆனால் அவரைக் கொன்றொழித்தாரே, அவர் மீது அவன் கடும் சினம் கொண்டுள்ளான்'' என்று கூறிவிட்டு மறைந்தனர்.

பேரறிவாளரான ஹாரித் அல்முஹாஸிபி(ரஹ்) அவர்கள் தம் வாணாளில் இருநூறு நூல்கள் வரை எழுதியதாக ஸூஃபிகள் கூறுகின் றார்கள். அவற்றில் தலை சிறந்து விளங்குவது 'கிதாபுர் ரியா லி ஹுகூக் குல்லாஹ் வல் கியாம் பிஹா' என்பதாகும். இதில் அவர்கள், எவ்வாறு

மனிதன் தூய உள்ளத்துடன் இறைவனை, இறைவனுக்காக வேண்டியே வணங்க வேண்டுமென்பது பற்றியும் அவ்வாறு வணங்கும் பொழுது கூட அவனுடைய நஃப்ஸ், அவனுடைய தூய முயற்சியை முறியடிக்க முனையுங்கால் எவ்வாறு அவன் அதனை எதிர்த்து நின்று போராடி வெற்றி கொள்வது என்பது பற்றியும், தன் உள்ளத்தில் பெருமை உணர்வு ஏற்பட விடாவண்ணம் எவ்வாறு தாழ்மை உணர்வை மேற்கொள்வது என்பது பற்றியும், எவ்வாறு புகழ் ஆசையை விரட்டியடித்து வாகை சூடுவது என்பது பற்றியும், எவ்வாறு பிறர் தன்னை இழிவாகக் கருதிய போதிலும், அதனை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பது என்பது பற்றியும் விரிவாக எடுத்துரைக்கிறார்கள்.

அவர்கள் தம்முடைய ஏனைய நூல்களில், பல்வேறு கருத்துக்களை விரித்தோதுகின்றனர். அளவுக்கு மீறிய மதபக்தி, மதவெறியாக மாறி விடுவதை அவர்கள் கண்டிக்கிறார்கள். அதன் காரணமாகச் சிலர் பட்டினி கிடந்து, தங்களின் உயிரை வீணே மாய்த்துக் கொள்வதையும் அவர்கள் பெரிதும் கடிகிறார்கள். நடுவழி, நல்வழி, இறைவன் விலக்கியதை விட்டொழித்து, அவன் விதித்ததை ஏற்று நடப்பதேயாகும் என்றும், அவன் தன் படைப்புகளுக்கு உணவளிக்கப் போதுமானவன் என்றும், அதற்காக மனிதன் தவறான வழியில் பொருளீட்ட முனையத் தேவையில்லை என்றும் கூறுகின்றார்கள்.

மௌனம் நல்லதா, பேசுவது நல்லதா என்பதைப் பற்றி அவர்கள் கூறும் பொழுது, மௌனம் காப்பதே நல்லது; எனினும் ஒருவனின் பேச்சு, இறைவனின் துதி பாடுவதாகவும், இறைவனுடைய பெருமையை எடுத்துரைப்பதாகவும் இருப்பின், மௌனத்தை விடப் பேசுவதே மேலானதாகும் என்று அவர்கள் குறிப்பிடுகின்றனர்.

அவர்கள் தம்முடைய 'கிதாபுல் முஸ்தர்ஷித்' (நேரிய வழி செல்லும் பயணியின் நூல்) என்பதில், பாவம் செய்வது ஒருவனைப் பொடு போக்குள்ளவனாக ஆக்குகிறது. பொடு போக்கானது இதயத்தை இறுகலாக்கி விடுகிறது. இதயம் இறுகலாகி விடுவது ஒருவனை இறைவனிடமிருந்து அப்பாற்படுத்தி விடுகிறது. இறைனை விட்டும் அப்பாற்பட்டவன் எரிநரகிற்கு விறகாகி விடுகிறான் என்று எச்சரிக்கை செய்கிறார்கள்.

அவர்கள் தம்முடைய 'கிதாபுல் இல்ம்' (அறிவு நூல்) என்பதில், உலக ஆசையும், இறை ஆசையும் ஒருவனின் உள்ளத்தில் ஒன்று சேர்ந்து இருக்க இயலாது, ஒருவன் இரண்டு எசமானர்களுக்கு ஊழியனாக இருக்க இயலாது. ஆதலின், அவன் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும், அவனுக்கு இறைவன் வேண்டுமா? ஷைத்தான் வேண்டுமா? என்பதுதான், அவன் தீர்மானிக்க வேண்டிய விஷயமாகும்'' என்று கூறுகிறார்கள்.

தொழுகையைப் பற்றி அவர்கள் கூறும்பொழுது, "தொழுகையே இஸ்லாத்தின் கடைக்காலாகும்' என்ற அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மணி மொழியை எடுத்துரைத்து, தொழுகைக்கு 'ஸலாத்' என்ற சொல் பயன்படுத்தப்படுவதற்குக் காரணம், "அது இறைவனுக்கும், மனித னுக்கும் இடையே ஒரு சிலா (சங்கிலித்தொடர்பு) ஆக இருப்பதே யாகும்" என்று ஒரு மகான் கூறியதையும் அறிவிக்கின்றார்கள்.

ஓர் எசமானனின் முன் எவ்வாறு அவனின் அடிமை, அச்சத்தோடும், அடக்கத்தோடும் நிற்பானோ, அதே போன்று ஏன் - அதைவிட மேலாக இறைவனின் திருமுன் பயத்தோடும், பக்தியோடும் நில்லுங்கள். படைப் புகளை விட, படைத்தவன் மேலானவன் என்பதை நீங்கள் அறிய மாட்டீர்களா, என்ன? இறைவனின் படைப்பினங்களுக்கு நீங்கள் காட்டும் மரியாதையைவிடப் படைத்தவன் அதிக மரியாதைக்கு உரிய வனல்லவா?

உலகத்து அரசர்களின் முன் நீங்கள் எளிதில் செல்ல இயலுமா? அவர்கள் உங்களுக்கு எளிதில் பேட்டியளித்து, உங்களைத் தம் முன் உரையாட அனுமதிப்பார்களா, என்ன? ஆனால், உலகத்து அரசர்களுக் கெல்லாம் அரசனான இறைவன், உங்களைத் தன் முன் வர அனுமதி யளித்து, அவனுடன் இரகசியமாக உரையாட 'உரிமையளித்திருக்கும் பொழுது, அதனை உதாசீனம் செய்து விட்டு வாளாவிருப்பது எத்துணை மடத்தனம்?

'முனாஜாத்' என்றாலே காதோடு காதாக இரகசியம் பேசுவது என்பது பொருளாகும். நெருங்கி இல்லாது காதோடு காதாக எவ்வாறு இரகசியம் பேசுவது? நீங்கள் தொழுகையில் அல்லாஹ்வை நெருங்கும் பொழுது, அல்லாஹ்வும் உங்களை நெருங்கி விடுகிறான். அப்பொழுது நீங்கள் அவனின் காதோடு காதாக இரகசியம் பேசுகிறீர்கள். அக்காலை உங்களின் நாவிலிருந்து வரும் சொல், நாவுக்கு நெருக்கமாக இருப்பதை விட, அதிக நெருக்கமாக நீங்கள் இறைவனுக்கு ஆகிவிடுகிறீர்கள். அப்பொழுது நீங்கள் இறை நினைவிலேயே முற்றிலும் மூழ்கி விட வேண்டும். உங்களைப் பற்றி அணுவத்தனை எண்ணமும் உங்களுடைய உள்ளத்தில் இடம் பெற்றிருக்கக் கூடாது. அப்பொழுது தான் உங்களுக்கு உள்ளொளி ஏற்படும்; இறையொளி தென்படும்" என்று அவர்கள் கூறுகிறார்கள்.

இறைவனளிக்கும் துன்பங்களைப் பற்றி அவர்கள் குறிப்பிடும் பொழுது, "அவற்றை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று, அது இறை வனை மறந்து உலக வாழ்வில் மூழ்கித் திளைப்பவர்களுக்கு இறைவன் அளிக்கும் தண்டனையாகும். அவர்கள் அதனைத் தாங்கிக் கொள்ள இயலாது, இறைவனைக் குறை கூறுவர். இரண்டாவது, அது இறை

வழியில் அடியெடுத்து வைத்து நடப்பவர்களுக்கு, அவர்களின் பாவங்களைப் போக்குவதற்காக இறைவன் அளிக்கும் வேதனையாகும். அதனைப் பொறுமையுடன் சகித்துக் கொள்வதன் காரணமாக, அவர்கள் இறுதியாகத் துன்பம், துயரம் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெறுகிறார்கள். மூன்றாவது, அது இறைவன் தன் நேசர்களுக்கு அளிக்கும் சோதனையாகும். அதுகண்டு அவர்கள் முனகவோ, குறை கூறவோ செய்யாது மகிழ்ச்சியடைகிறார்கள். தங்களை இறைவன் தன்னுடைய நேசனாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டதனாலேயே, இத்தகு சோதனைகளுக்கு இறைவன் தங்களை ஆட்படுத்தியுள்ளான் என்பதையும், தங்களுடைய உடலுக்குத் தங்களின் ஆன்மா நெருக்கமாக இருப்பதைவிட, அதிக நெருக்கமாகத் தாங்கள் அக்காலை இறைவனுக்கு நெருக்கமாக ஆகிவிட்டதாகவும் அவர்கள் உணர்கிறார்கள். இறைவனும் அவர்களை அரவணைத்துத் தன் பாதுகாப்பு என்னும் போர்வைக்குள் நுழைய வைக்கிறான்' என்று கூறுகிறார்கள்.

இறைவன் தன்னுடைய நேசனாக எவரை ஆக்கிக் கொண்டானோ, அவருக்கு அவன் தன்னுடைய தரிசனத்தை வழங்குகின்றான். ஏனெனில், 'என்னுடைய மாண்பின் மீது ஆணையாக, நான் அவருக்கு என்முக அழகைக் காட்டுவேன், என்னுடைய தரிசனத்தின் மூலம் அவரின் ஆன்ம நோயை நலப்படுத்துவேன்' என்று அவன் ஆணையிட்டுக் கூறியுள்ளான் என்றும் அவர்கள் மொழிகின்றார்கள்.

இத்தகு ஆழிய கருத்துக்களை அவர்கள் தம் நூல்கள் அனைத்திலும் கூறிச் சென்ற போதினும், அவர்களின் ஆன்மீகக் கருத்துக்கள் சிலவற்றை தர்க்கரீதியாக அவர்கள் விளக்கும் முறையை இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்)அவர்கள் பெரிதும் வெறுத்தனர். ஒரு தடவை அவர்கள் இருவரும் எதிர் பாராவண்ணம் சந்தித்துக் கொண்ட பொழுது, முஃதஸிலாக்களைத் தாக்கி தர்க்கரீதியாக ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் எழுதியிருப்பதை, இமாம் அவர்கள் கண்டித்தனர். ''இறை மறுப்பைக் கண்டித்து எழுத வேண்டியது ஓர் இறை நம்பிக்கையாளரின் கடமையல்லவா?'' என்று ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் கூறிய பொழுது, ''ஆம்; ஆனால் நீர் அவர்களின் போதனைகளில் எவை எவை 'குஃப்ரிய்யத்' ஆக உள்ளது என்று கூறிவிட்டல்லவோ, நீர் அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து, எதிர்த்து, வாதாடியுள்ளீர். அதனால் இரண்டில் ஒன்று நடக்கும். நீர் அவர்களின் 'குஃப்ரிய்யத்' பற்றி கூறும் செய்திகள், மக்களின் மனத்தில் பதிந்து விடும். அவற்றை எதிர்த்து நீர் கூறும் வாதங்களை மக்கள் புறக்கணிக்கவோ, புரிந்து கொள்ளவோ இயலாமல் ஆகிவிடும்' என்று வெறுப்போடு மொழிந்தார்கள் இமாம்.

ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களுக்கு இஸ்மாயீல் இப்னு ஸர்ராஜ் என்ற ஒரு சீடர் இருந்தார். ஒரு நாள் இமாம் ஹன்பல் (ரஹ்) அவர்கள் அவரைச் சந்தித்த பொழுது, ''ஹாரித் உம்முடைய இல்லத் திற்குத் தம் சீடர் புடைசூழ வந்து, அங்கு அவர்களுக்கு அறிவுரை பகர்வதாகக் கேள்வியுற்றேன். அவர் என்ன கூறுகின்றார்? அவரின் அடிப்படைக் கொள்கை தான் யாது? என்பதை நான் மறைந்திருந்து கேட்க விரும்பு கிறேன். அதற்கு ஆவன செய்வீரா?'' என்று வினவினர்.

அது கேட்டு இப்னு ஸர்ராஜுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அள வில்லை. ''இன்றே செய்கிறேன். நன்றே செய்கிறேன்'' என்று கூறி மகிழ்ச்சிக் கூத்தாடினார் அவர்.

இதன் பின் அவர் ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களிடம் சென்று, அன்றிரவு அவர்கள் தம் இல்லத்திற்குத் தம் சீடர்களுடன் வர வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். அதற்கு இணங்கிய அவர்கள், ''வருகிற அனைவருக்கும் உணவளிக்க உம்மால் இயலாது. ஆதலின் உலர்ந்த பேரீச்சம் பழங்களும், சிறிதளவு எண்ணெய்யும் வாங்கி வையும் அவை போதும்'' என்று கூறினர்.

இச்செய்தியை அவர் ஓடோடிச் சென்று இமாம் ஹன்பல் (ரஹ்) அவர்களிடம் கூறி, ''பொழுது பட்டதுமே தாங்கள் எங்களின் இல்லம் வந்து விடுங்கள். தங்களை எவருக்கும் தெரியாமல், எங்களின் இல்லத்தின் மேல் மாடியில் தனியாக வைத்து விடுகிறேன்'' என்று கூறினர்.

அவ்வாறே பொழுது பட்டதும், இமாம் ஹன்பல் (ரஹ்) அவர்கள் இப்னு ஸர்ராஜின் இல்லம் வந்தனர். அவர்களை அன்புடன் வரவேற்றுத் தம் இல்லத்தின் மேல் மாடிக்கு அழைத்துச் சென்று அமரச் செய்தார் அவர். அவர்கள் அங்கு தனிமையில் அமர்ந்து தாம் வழக்கமாக ஓதிவரும் வஜீஃபாக்களை மெதுவாக ஓதிக் கொண்டிருந்தனர்.

பின்னர் ஹாரித் அல்மு ஹாஸிபி (ரஹ்) அவர்கள் தம் சீடர்களுடன் அங்கு வந்தனர். தம் முன் வைக்கப்பட்ட பேரீத்தம்பழங்களையும், எண்ணெய்யையும் உண்டுவிட்டு, இரவு (இஷா) தொழுகையைத் தொழுது முடித்தார்கள். பின்னர் அவர்களின் சீடர்கள் அவர்களைக் சூழ வந்து அமர்ந்தார்கள். எவரும், எவருடனும் யாதொன்றும் பேசவில்லை. அனைவரும் தலைகவிழ்ந்த வண்ணம் வீற்றிருந்தார்கள்.

நள்ளிரவானது. அப்பொழுது அவர்களின் சீடர்களில் ஒருவர் தம் ஆசானை நோக்கி, ஒரு கேள்வியைக் கேட்டார். அதற்குப் பதில் கூறும் முறையில் ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் பேச்சைத் தொடுத் தார்கள். மளமளவென்று மணிக்கணக்காகப் பேசினார்கள். துவக்கத்தில் அவர்கள் பேசுவதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த அவர்களின்

சீடர்கள், பின்னர் விக்கி, விக்கி அழுது கொண்டே, அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அதன்பின் கண்ணீர் சிந்திக் கதறி அழுது கொண்டே அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். எனினும் ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் பேச்சை நிறுத்தவில்லை.

இப்பொழுது இமாம் ஹன்பல் (ரஹ்) அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய இப்னு ஸர்ராஜ் மேல் மாடிக்கு ஓடினார். அவர்களோ அழுது கண்ணீர் வடித்துத் தன்னுணர்வற்ற நிலையில் மயங்கிக் கிடந்தார்கள்.

பின்னர் கீழே வந்தார் இப்னு ஸர்ராஜ். ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களோ பேசிக் கொண்டு தான் இருந்தார்கள். அவர்களின் சீடர்களோ கண்ணீரை ஆறாகப் பெருக்கி அதிலே மிதந்து கொண்டிருந்தார்கள்.

வைகறை ஆகி மெய் வெள்ளை தெரிந்த பொழுதுதான் ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் தம் பேச்சை ஒருவாறு முடித்தார்கள். அதன் பின்னரே அவர்களின் சீடர்கள் ஒருவர் பின் ஒருவராக எழுந்து, தம் இல்லம் சென்றார்கள். ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களும், இப்னு ஸர்ராஜிடம் விடை பெற்றுத் தம் இல்லம் புறப்பட்டார்கள்.

அவர்களை வழியனுப்பி விட்டு மேல்மாடி சென்றார் இப்னு ஸர்ராஜ். அப்பொழுது இமாம் அவர்கள் மயக்கம் தெளிந்து தன்னுணர் வோடு காட்சி வழங்கினார்கள். அவர்களை அவர் அணுகி, "இந்த மனிதர் களைப் பற்றித் தாங்கள் இப்பொழுது என்ன எண்ணுகிறீர்கள்?" என்று வினயமாக வினவினார்.

அதற்கு இமாம் அவர்கள், "நான் இத்தகையோரை இதுவரையில் பார்த்ததில்லை. இல்முல் ஹகாயிக் (ஆன்மீக ஞானம்) பற்றி அவர் கூறியன போன்றவற்றை நான் இதுவரைக் கேட்டதுமில்லை. வேறு விதமாக உள்ளதைத் தான் கேட்டுள்ளேன். அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோருகிறேன். இத்தகையோருடன் தொடர்பு கொள்வதில் எச்சரிக்கையாய் இரும்" என்று கூறிவிட்டு விடை பெற்றுப் பிரிந்தார்கள்.

இதன்பின் இமாம் அவர்களின் எதிர்ப்பும், பகைமையும் அதிக மாகவே, ஹாரிது அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் பக்தாது விட்டு நீங்கிக் கூஃபா சென்று, அங்கு சில காலம் வாழ்ந்து வந்தார்கள்.

அதன்பின் பக்தாது மீண்ட அவர்களை ஹன்பலி மத்ஹபினர் அமைதியாக இருக்க விடவில்லை. எனவே, அவர்கள் வெளியே செல்லாது தங்களின் இல்லத்திலேயே துன்பத்திலும், துயரத்திலும், வறுமையிலும் தங்களின் வாணாளைக் கழித்து வந்தார்கள்.

இறுதியாக அவர்களை இறப்பும் வந்தணுகியது. அப்பொழுது அவர்கள் தம் மாணவர் ஜஃபரை நோக்கி, "நான் விரும்புவதைக் காணின்

என் முகத்தில் புன்முறுவலைக் காண்பீர். இல்லையெனில் இல்லை'' என்று கூறினர்.

அவ்வாறே ஒருமணி நேரம் கழிந்த பின் ஜுஃபர், ஹாரித் முஹாஸிபி (ரஹ்) அவர்களின் முகத்தை ஏறிட்டுப் பார்த்த பொழுது, அவர்களின் முகம் புன்முறுவல் பூத்த வண்ணம் காட்சி வழங்கியது. அவர்கள் தம் ஆயுளெல்லாம் காதலித்து வந்த, தம் அருள் நேசனை அடைந்து விட்டார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 243-ஆம் ஆண்டிலாகும்- அதாவது இமாம் ஹன்பல் (ரஹ்) அவர்கள் இறந்து ஓராண்டுக்குப் பின்னாலாகும்.

ஹன்பலி மத்ஹபினர் காட்டிய கடுமையான எதிர்ப்பின் காரண மாகப் பொதுமக்கள் ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களின் இறுதிச் சடங்கில் கலந்து கொள்ளப் பெரிதும் அஞ்சினர். எனவே, நான்கே நான்கு பேர் தாம் அவர்களுக்கான இறுதிக்கிரியைகளைச் செய்து தொழுவித்து அவர்களை நல்லடக்கம் செய்தார்கள்.

அவர்கள் வாழ்ந்த காலத்தில் மட்டுமல்லாது, பிற்காலத்திலும் அவர் களை எதிர்ப்பவர்கள் இல்லாமல் இல்லை. வளத்தை விட, வறுமையை உயர்வாக அவர்கள் ஒரு நூலில் எழுதியிருப்பதைப் பிற்காலத்தில் இப்னு ஜௌஸி பெரிதும் கண்டித்தார்.

எனினும் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களோ, ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களின் கருத்துக்களைப் பெரிதும் ஆதரித் துள்ளனர். அல் ஹாரித் முஹாஸிபி (ரஹ்) அவர்கள், தம்முடைய 'ஹில்யா' என்ற நூல் கூறிய கருத்துக்கள், உவமானங்கள், ஆதாரங்கள் ஆகியவற்றைச் சிறிதேனும் மாற்றமில்லாது அவர்கள் 'இஹ்யா'வில் பயன்படுத்தி யுள்ளார்கள்.

ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களின் நூல்கள் வட ஆப்பிரிக் காவிலும், அங்கிருந்து ஸ்பெய்னிலும் பரவின. இப்னு துஃபைல் (ரஹ்), இப்னு அரபி (ரஹ்) ஆகியவர்கள், அவர்களின் கருத்துக்களால் பெரிதும் கவரப்பட்டனர். கிறிஸ்தவ, யூதத் துறவிகளும், அவர்களின் கருத்துக் களைத் தங்களுடையவையாக ஏற்றுக் கொண்டு, தங்களின் நூல்களில் பயன்படுத்தினர். செண்ட் தாமஸ் அகினாஸின் எழுத்துக்களில், ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களின் கருத்துக்கள் வேற்றுருக் கொண்டு மிளிர்கின்றன. யூதர்களின் ஞான நூலான 'ஸொஹ்ர்' என்பதில், ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்கள் இதயம் பற்றியும், உடலின் ஏனைய உறுப்புகள் பற்றியும், ஆன்மா பற்றியும், வணக்கம்பற்றியும் கூறிய கருத்துக்கள் ஆங்காங்கே மிளிர்கின்றன. சுருங்கக்கூறின் இறைவனை எய்தப் பெறுவதற்கான ஆன்மீகப் பாதையை முதன்முதலாகத் தெளிவாக விளக்கியவர்கள் ஹாரித் அல் முஹாஸிபி (ரஹ்) அவர்களாகவே வரலாற்றில் இடம் பெறுகிறார்கள்.

# 11. ஜுனைதுல் பக்தாதி (ரஹ்)

அன்று மாலை மற்போர் மன்றம் மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. அம்மன்றத்தின் நடுவே அலங்காரமாகச் சோடிக்கப்பட்டிருந்த ஒரு மேடையின் மீது, அரசர் தம் அமைச்சர் பிரதானிகள் புடை சூழ ஒய்யாரமாக வீற்றிருந்தார். சற்று நேரத்தில் மற்போர் துவங்கியது. ஆஜானுபாகுவான அரசாங்க மாமல்லர், மற்போர் மன்றத்தில் குதித்ததும், அவரை எதிர்க்க ஒல்லிய உருவினர் ஒருவர் எதிர்ப்பட்டார். அது கண்டு மக்களின் புருவங்கள் மேலேறின.

அப்பொழுது ஆங்கு வீற்றிருந்த ஒருவர், தம் அருகிலிருந்த மற்றொருவரை நோக்கி, ''இஃதென்ன வேடிக்கையோ, விபரீதமோ தெரியவில்லையே. அரிமாவனைய அந்த அரசாங்க மாமல்லர் முன் நெத்திலி மீன் அனைய இப்பயில்வான் எம்மாத்திரம்? இறப்புத் தான் அவரை எங்கிருந்தோ, இந்த மற்போர்க் களத்திற்கு இழுத்து வந்ததோ என்னவோ தெரியவில்லையே. அரசர் அவருக்கு எவ்வளவோ அறிவுரை கூறித் தம் அரசாங்க மாமல்லரை, மற்போருக்கு அறைகூவி அழைக்க வேண்டாமென்று எடுத்துரைத்தும், அவர் கேட்கவில்லையாமே. என்னையும் அவரையும் களத்திலே மோதவிடுங்கள். அவரைக் கணத்திலே மன்னைக் கௌவச் செய்கிறேன்'' என்று அரசவையிலே வைத்துச் சூளுரைத் தாராமே அவர்!'' என்று கூறினார் அவர்.

''தன் வலியும், மாற்றான் வலியும் தெரியாது தறுதலைகள் தருக்கும். தருக்கி நின்று தோல்வியைத் தழுவும்'' என்று கூறினார் மற்றொருவர்.

அப்பொழுது அருகே இருந்த வேறொருவர் ''அப்படி ஒன்றும் அவசரப்பட்டுக் கூறி விடாதீர்கள். பென்னம்பெரிய யானையைச் சின்னஞ் சிறிய சிற்றெறும்பு வீழ்த்திவிடுவதை நீங்கள் அறியமாட்டீர்களா, என்ன? யார் கண்டது, யார் வெற்றியுறுவார், யார் தோல்வியுறுவார் என்பதை?'' என்று இடைமறித்துக் கூறினார்.

''பொறுத்திருந்து பார்ப்போம், சற்று அமைதியாக இருங்கள்'' என்று பிறிதொருவர் கூறிவாய் மூடு முன், அரசாங்க மாமல்லர் தம் எதிரியை

ஒரே பிடியாகப் பிடித்துஉயரத் தூக்கி நிலத்திலே அறையப் போனார். அது கண்டு அந்நகர மக்கள் அனைவருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அள வில்லை. ஆனால் என்ன வியப்பு! அடுத்தகணம் நிலத்திலே தம் முதுகில் மண்பட அரசாங்க மாமல்லர் மல்லார்ந்து கிடக்கவும், அவரின் மீது அந்த ஒல்லிய உருவினர் வீற்றிருக்கவும் கண்டு, ஆங்குக் குழுமி இருந்த மக்களுக்குத் தங்களுடைய கண்களையே தங்களால் நம்ப இயலவில்லை.

''இதில் என்னவோ சூது உள்ளது. நாங்கள் இத் தோல்வியை ஒரு போதும் ஏற்றுக் கொள்ள மாட்டோம்'' என்று கூட்டத்திலிருந்து பலர் கூக்குரலிட்டனர்.

''தோல்வி, தோல்வி தான், தோல்வியை ஏற்றுக் கொள்வதற்குத் தயக்கம் ஏன்?'' என்று மற்றொரு கும்பல் முழங்கியது.

அரசருக்கோ முகத்தில் ஈயாடவில்லை. தம் மாபெரும் அரசாங்கத் திற்கே மாசு ஏற்பட்டுவிட்டதாக அவர் கருதினார். எனவே மீண்டும் ஒரு முறை மற்போர் நடத்தி, எதிர்பாராது ஏற்பட்ட இந்த இழிவைத் துடைத்துவிட எண்ணினார். எனவே ''மீண்டும் ஒருமுறை'' என்ற சொற்கள் அவருடைய வாயிலிருந்து கணீரென்று வெளிவந்தன.

மீண்டும் மற்போர் துவங்கியது. அப்பொழுது மற்போர் அரங்கத்தைச் சூழ வீற்றிருந்த மக்களின் இதயங்கள் படபட வென்று அடித்துக் கொண்டன. மற்போர் அரங்கத்தில் மல்லர்கள் அறுவரும் இறங்கிச் சிறிது நேரம் தான் ஆகி இருக்கும். அதற்குள் அரசாங்க மாமல்லர் மீண்டும் ஒருமுறை மண்ணைக் கௌவி விட்டார். ''மீண்டும் ஒரு முறை'' என்று மன்னர் கூறியது, மீண்டும் ஒருமுறை அவருக்கும் அவரின் அரசாங்கத்திற்கும் அவமானத்தையே நல்கி விட்டது. எனினும் வெற்றி பெற்ற வேற்றூர் மல்லருக்கு விருதுகள் பல வழங்கிப் பரிசில்கள் பல நல்கிப் பாங்குடன் அனுப்பி வைத்தார் மன்னர்.

அன்றிரவு அரசாங்க மாமல்லர் தம் இல்லத்தில் என்றுமில்லா மன அமைதியுடன் உறங்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய கனவில் முஹம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் திருக்காட்சி வழங்கி, ''எம் வழி வந்த ஒருவர், உம்முடன் மற்போர் புரியுங்கால் நீர் அவரை நிலத்தில் அறைய உயரத் தூக்கிய பொழுது, அவர் உம்காதோடு காதாகத் தாம் ஒரு ஸையித் என்று கூறியதும், அவரை என் பொருட்டு நீர் வெற்றியடையச் செய்து, தோல்வியை நீர் தழுவிக் கொண்டீர். இரண்டாவது முறையும் அவ்விதமே செய்து என் கௌரவத்தைக் காத்தீர். அதன் காரணமாக நாம் உம்முடைய கௌரவத்தை இம்மையிலும், மறுமையிலும் காப்போம், இது உறுதி. இன்று முதல் நீர் ஸையிதுத்

தாயிஃபா (ஆன்மீகக் குழுவினரின் தலைவர்) ஆக நியமிக்கப்பட்டுள்ளீர்'' என்று அருண்மொழி பகர்ந்து மறைந்தனர்.

திடுக்கிட்டு விழித்தெழுந்த அரசாங்க மாமல்லருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. எப்பொழுது புலரும் என்று ஏங்கிக் கொண்டிருந்த அவர், தாம் அரசரிடமிருந்து இதற்கு முன் பெற்றிருந்த விருதுகள்,பரிசில்கள் ஆகியவற்றை எல்லாம் திருப்பி அனுப்பினார்.

அவற்றைப் பெற்றதும் அரசர் அவரைத் தம் அரண்மனைக்கு அழைத்து வரச் செய்து, அவரின் வாழ்விலே ஏற்பட்ட திடீர் மாற்றத்திற்குக் காரணம் என்னவென்று வினவினார்.அப்பொழுது அவர் உள்ளதை உள்ளவாறு எடுத்துரைத்து, ''எம்பெருமானார் (ஸல்) அவர்கள் இப்பொழுது எனக்கு அளித்துள்ள மேலாம் பதவிக்கு முன் அரசாங்க மாமல்லர் பதவி எம்மாத்திரம்? எனவே தான் அதற்கான விருதுகள், பரிசில்கள் ஆகிய அனைத்தையும் திருப்பி அனுப்பி விட்டேன். சென்று வருகிறேன்'' என்று கூறி விடை பெற்றார். அக்கணத்திலிருந்து அரசாங்க மாமல்லர் ஜுனைத் இறைநேசச் செல்வர் ஜுனைதுல் பக்தாதியாக மாறி விட்டார்.

பிற்காலத்தில் 'தாவூஸுல் உலமா' (மார்க்க அறிஞர்களின் மயில்) என்றும் 'மஷாயிஹெ பாத்தின்' (அகமியக் கல்வியின் தலைவர்) என்றும், சிறப்புப் பெயர் பெற்று, ஆலிம்களின் அரசராகவும், வலிமார்களின் மன்னராகவும் விளங்கிய ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்கள் நூஹ் (அலை) அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட 'நுஹாவந்த்' என்ற ஊரிலிருந்து பிழைப்பின் நிமித்தம் பக்தாது வந்து குடியேறிய முஹம்மது இப்னு காஜா ஜுனைதின் மகனாவார். அவர்களின் தந்தை ஒரு சாமான்யர். அவர் பக்தாதில் ஒருசிறு கண்ணாடிக் கடை வைத்து வாணிபம் செய்து வந்தார்.

பக்தாதில் பிறந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள் இளம் வயதில் தம் தந்தையின் வணிக நிலையத்தில் அமர்ந்து, அவருக்கு உறுதுணையாக இருந்துவந்தார்கள். ஓய்வு நேரங்களில் தம் அன்னையின் உடன் பிறந்தாராகிய ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களிடம் சென்று மார்க்கக் கல்வி பயின்று வந்தனர்.

ஒரு நாள் அவர்கள் தம் இல்லம் திரும்பிய பொழுது தம் தந்தை அழுது கொண்டிருப்பதைக் கண்டு, அதற்கான காரணத்தை வினவினர். அதற்கு அவரின் தந்தையார், ''நான் காலமெல்லாம் பாடுபட்டுச் சேமித்து வைத்திருந்த ஐந்து திர்ஹங்களை இறைவனின் நல்லடியார் ஒருவருக்கு அறம் செய்ய வேண்டுமென்று விரும்பி, உன்னுடைய மாமாவிடம் கொடுத்தேன். ஆனால் அவரோ அதனை ஏற்றுக் கொள்ள மறுத்து

விட்டார். இந்நிலையில் நான் என் செய்வது? அவரை விட மேலான இறைவனின் நல்லடியார் ஒருவரை நான் இனி எங்குத் தேடிப்போய்க் கண்டுபிடித்துக் கொடுப்பது?'' என்று கூறினார்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்)அவர்கள், ''தந்தையே! கவலற்க. அப்பணத்தை என்னிடம் தாருங்கள். நான் அதனை ஏற்றுக் கொள்ளுமாறு அவர்களைச் செய்கிறேன்'' என்று கூறிப் பணத்தைப் பெற்றுக் கொண்டு, தம் மாதுலரின் இல்லம் சென்று கதவைத் தட்டினர். கதவைத் திறக்கா மலேயே, வந்த செய்தியைக் கேட்டறிந்த ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ள மறுக்கவே,'' மாமா! தங்கள் மீது கழி விரக்கத்தோடும், என் தந்தை மீது நியாயத்தோடும் நடந்து கொண்ட இறைவன் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன் இதனை ஏற்றுக் கொள்ளுங் கள்'' என்று இயம்பினர் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

'' என்ன கூறினீர்? எவ்வாறு இறைவன் என்மீது கழிவிரக்கத்தோடும், உம் தந்தை மீது நியாயத்தோடும் நடந்து கொண்டான்?'' என்று வியப் புடன் வினவினர் ஸரீ அஸ் ஸகதி.

''தங்களுக்கு வறுமையை நல்கியது இறைவன் தங்கள் மீது கழிவிரக்கப்பட்டதன் அறிகுறியாகும். என் தந்தைக்கு ஒரு வாணி பத்தைத் தந்தது, அவர் மீது அவன் நியாயத்தோடு நடந்து கொண்டதற்கான நற்சான்றாகும். அவர் அன்பளிப்பாக அனுப்பி வைத்ததை ஏற்றுக் கொள்வதும், ஏற்றுக் கொள்ளாதிருப்பதும் தங்களின் விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால், அவரோ, தாம் விரும்பினாலும் சரி, விரும்பா விட்டாலும் சரி, அதனை அதற்குத் தகுதியான ஒருவருக்கு வழங்குவது அவர் மீது கடமையாக உள்ளது'' என்று கூறினர்.

மருகரின் இம்மறுமொழி ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களுக்குப் பெரிதும் மனமகிழ்ச்சியை அளித்தது. கதவைத் திறந்த அவர்கள் ''என்னருமை மருகரே! உம் தந்தை அனுப்பிய அன்பளிப்பை ஏற்றுக் கொள்ளுமுன் உம்மை நான் ஏற்றுக் கொள்கிறேன்'' என்று மகிழ்ச்சி மொழி பகர்ந்து, அவர்களை ஆரத் தழுவினார்கள். இதிலிருநுது தம் மருகர் மீது ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களுக்கு ஒரு தனி அன்பு ஏற்படலாயிற்று.

தம் மகருக்கு ஏழு வயது நிரம்பப் பெற்ற பொழுது, 'ஹஜ்' ஜுக் கடமையை நிறைவேற்ற மக்காபுறப்பட்ட ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், தம்முடன் தம் மருகரையும் அழைத்துச் சென்றார்கள். மக்காவில் வைத்து நானூறு அறிஞர்களுக்கு மேற்பட்ட கூட்டம் ஒன்றில், இறைவனுக்கு நன்றி செலுத்துவது என்றால், என்ன வென்பது பற்றிய

பிரச்சினை எழுந்த காலை, அதற்கு ஆங்குக் குழுமியிருந்த அறிஞர்கள் பலர், பல்வேறு விளக்கங்களைக் கூறினர். ஆனால் அவர்களில் ஒருவர் கூறிய விளக்கமேனும் ஆங்குக் குழுமியிருந்த அனைவருடைய ஒப்புதலையும் பெறவில்லை.

அப்பொழுது ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், ஆங்கு விளையாடித் திரிந்த தம் சின்னஞ்சிறு மருகரை அருகழைத்து அதுபற்றி வினவ, ''இறைவனின் அருட்கொடைகளை நுகர்ந்து விட்டு, அவனுக்கு மாறு செய்யாதிருப்பதும், ஒரு வேளை செய்யின், அவ்வாறு மாறு செய்வதற்கு அவனளித்த அருட் கொடைகளை மூல காரணமாகக் கொள்ளாதிருப்பது மாகும்'' என்று மறுமொழி பகர்ந்தனர்.

அதுகேட்டு ஆங்கு வீற்றிருந்த அனைவருடைய புருவங்களும் மேலேறின. ''ஆகா! என்ன அருமையான விளக்கம்!'' என்று அவர்கள் அனைவருடைய நாவுகளும் ஒருமித்து முழங்கின. ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களும் தம் சின்னஞ்சிறு மருகரை வாரி அணைத்து முத்துமிட்டு, ''இறைவன் உமக்குப் பேரருள் பாலிப்பானாக! உம் நாவன்மையே இறைவன் உமக்களித்த நற்பேறாகும்'' என்று வாயார்ந்து கூறினர். அப்பொழுது மருகரின் கண்கள் பனித்தன.

அதுகண்ட மாதுலர் தம் மருகரை நோக்கி, ''ஜுனைத்! நீர் இதனை எவரிடமிருந்து கற்றுக் கொண்டீர்?'' என்று வியப்புடன் வினவினர். அதற்கு மருகர், ''தங்களின் தாளடியில் அமர்ந்து தான்'' என்று அடக்கத்துடன் மறு மொழி பகர்ந்தார்கள்.

ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கு, இளமையிலிருந்தே ஷாஃபி மத்ஹபின் மீது ஒரு தனிப்பட்ட பற்று இருந்து வந்தது. எனவே அக்காலை பக்தாதில் வாழ்ந்து வந்த இமாம் ஷாஃபியி (ரஹ்) அவர்களின் மாணவரான அபூஸர் இப்ராஹீம் இப்னுல் காலிதுல் கல்பீ (ரஹ்) அவர்களிடம் சென்று, ஷாஃபி மத்ஹபின் பிக்ஹுகளைப் பயின்றனர். அவர்கள் இருபது வயதை எய்தப் பெற்ற பொழுது, தம் ஆசானின் அனுமதியின் மீது மார்க்கத் தீர்ப்பு வழங்கவும் செய்து வந்தனர்.

அபூஸர் (ரஹ்) அவர்கள் இறந்தபின் ஒரு நாள், ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், தம் மருகரைநோக்கி, ''இனிமேல் நீர் எவருடைய திருச் சபைக்குச் சென்று வருவீர்?'' என்று வினவினர். ''ஹாரித் அல் முஹாஸிபியின் திருச்சபைக்குச் சென்று வருவேன்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள். அப்பொழுது ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், ''நல்லது. சென்று வாரும். ஆனால் அவருடைய இல்மையும் (தத்துவங்களையும்) அதபையும் (ஆன்மீகப் பயிற்சிகளையும்) பற்றிக் கொள்ளும்.

ஆனால், அவரின் தஷ்கீக் லில் கலாமையும் முஃதஸிலாகக் கொள்கைகளையும் நீர் நெருங்க வேண்டாம்'' என்று கூறினர்.

தம் மாதுலரிடமிருந்து விடை பெற்று, அவர்கள் திரும்பும் பொழுது, ''இறைவன் உம்மை முஹத்திஸாக உள்ள (ஹதீதுக்கலையை உணர்ந்த) சூஃபியாகச் செய்வானாக! சூஃபியாக உள்ள முஹத்திஸாக ஆக்காதிருப்பானாக! ஏனெனில், ஹதீதுத் கலையையும், நபியின் வழிமுறையாகிய சுன்னத்தையும் முதலில் அறிந்த பின் ஆன்மீகத் துறையாகிய தஸவ்வுஃ பில் இறங்குவதே அறிவுடைமையாகும். அதற்கு மாற்றமாகச் செய்வது, அதாவது மார்க்க சட்டதிட்டங்களைச் சரியாகப் பயிலாது, தஸவ்வுஃபில் இறங்குவது அபாயத்தில் கொண்டு போய் விட்டுவிடும்'' என்று கூறியது ஜுனைத் (ரஹ்) அவர்களின் செவியில் விழுந்தது.

இதன்பின் ஹாரித் அல் முஹாஸிபியின் திருமுன் சென்று ஆன்மீகக்கலை பயின்ற அவர்கள், அவர் ஹிஜ்ரி 243-ஆம் ஆண்டில் இறப்பெய்தியதும், தம் மாதுலரையே அணுகி, அவர்களிடம் ஆன்மீகக் கல்வி பயிலலாயினர். இக்காலை ஒருநாள் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள் தம்மருகரிடம் ஒரு தாளைக் கொடுத்து, இதில் எழுதப்பட்டிருப்பது எழுநூறு நூல்களை விடச் சிறப்புடையதாகும்'' என்று கூறினர். அதனை ஜுனைத் (ரஹ்) அவர்கள் படித்துப் பார்த்தப் பொழுது,

**'பெரிதும் காதலுற்றேன் யான் இறைபால் என்றே உரைப்பீரேல்
பெரிதாம் உம் உடல் யான் கண்டு பெரிய பொய்யன் நீர் என்பேன்
முதுகுடன் வயிறே ஒட்டும் வரைக் காதல் தானும் முகிழ்க்காதே
முதுகுடன் வயிறே ஒட்டிவிடின் மொழிய நாவும் உசும்பும் கொலோ?
பேசக்கண்கள் இரண்டொழிய பிறிதொன்றென்னிடம் இல்லையெனப்
பேசும் வண்ணம் உன் உடலே பெரிதும் இளைத்தல் வேண்டும் காண்'**

என்ற கண்ணிகள் அவர்களின் கண்முன் பளிச்சிட்டு, அவர்களை எள்ளி நகைத்தன. தம் ஆசான் அந்தக் காதிதத்தைத் தம்மிடம் தந்ததன் மூலம், தம்மிடம் ஆன்மீகப் பயிற்சியையும், பரிபக்குவத்தையும் விரும்பிகின்றனர் என்பதை விளங்கிக் கொண்ட அவர்கள், அது முதல் ஊண், உறக்கம் ஆகியவற்றையெல்லாம் குறைத்து, இறை சிந்தனையிலும், இறைக் காதலிலும் மூழ்கித் திளைத்தனர்.

மற்றொரு நாள் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், தம் மருகரை நோக்கி ''நீர் இறை சிந்தனையில் மூழ்கி இறைக்காதலில் திளைக்குங்கால், உம் முன் வாளை வீசிய போதினும், அது உமக்குத் தெரியக் கூடாது'' என்று கூறினர். அதுகேட்டு ஜுனைத் (ரஹ்) அவர்களுக்குப் பெரும்

வியப்பாக இருந்தது. ''அவ்வித நிலையை எவ்வாறு எய்த இயலும்?'' என்று அவர்கள் ஐயுற்றனர்.

அவர்களின் ஐயத்திற்கு விளக்கம் அளிக்கும் முறையில், இக்காலை ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒரு நாள் அவர்கள் தெரு வழியே சென்று கொண்டிருந்த பொழுது, ஓர் இல்லத்திலிருந்து இனிய கீதம் ஒன்று காற்றிலே மிதந்து வந்து அவர்களின் காதுகளை வந்தடைந்தது.

**பிரிவு எனக்குத் துன்பத்தைப் பரிசாய்த் தந்தது எனக் கூறின்**
**பிரிவே நட்பில் இன்பமதைப் பெரிதும் இணைக்கும் என்றதுவே.**
**ஆசை என்னும் தியாலே அடியேன் உள்ளம் கரிந்ததெனில்**
**ஆசை என்னும் தியால் தான் அகமே ஒளிரும் என்றதுவே.**
**என்னபவமே யான் இழைத்தேன் என்றே யானும் கூறிடிலோ**
**உன்றன் வாழ்வே பவமேயாம் அதன் நேர் பவமிலை என்ற துவே.**

என்ற பாடலை அவர்கள் கேட்டதும், உணர்ச்சி மீக்குற்று, அவ் வில்லத்தின் வாயிலை அடைந்து, ஆடத் துவங்கினர். அப்பொழுது ஆங்கு ஒரு பெரும் கூட்டமே திரண்டு விட்டது. அந்த வீட்டுக்காரரும் வெளியே வந்து, அவர்கள் ஆடிக் கொண்டிருப்பதைக் கண்டு 'என்ன செய்தி? என்ன செய்தி?' என்று பல தடவை வினவிய போதினும், அவர்கள் மெய் மறந்து யாதும் பதில் கூறாது ஆடிக்கொண்டே இருந்தார்கள்.

பின்னர் அவர்கள் ஒருவாறு தன்னுணர்வு பெற்ற பொழுது, அவரின் வீட்டிலிருந்து வந்த இன்பகானமே தம்மை அந்நிலையில் ஆக்கிவிட்டது என்று கூறி, அதில் பொதிந்து கிடந்த ஆழிய கருத்துக்களை ஆங்குக் குழுமியிருந்தோருக்கு விளக்கம் செய்தார்கள். ''அப்பாடலிலுள்ள ஈற்றடிகளுக்கு நிகரான கண்ணிகளை நான் கேட்டும் அறியேன்; படித்தும் அறியேன்'' என்று அவர்கள் வாயார்ந்து கூறினார்கள்.

அது கேட்ட அந்த வீட்டின் சொந்தக்காரர் அந்த இன்னிசையை மிழற்றியது தம் அடிமைப் பெண் என்று கூறி ''அவளின் தீங்குரல் தங்களின் உள்ளத்தை ஈர்த்து விட்டதால் அவளைத் தங்களுக்கே உரிமையாக்குகிறேன்'' என்று கூறி, உள்ளே சென்று அவளை அழைத்து வந்து அவர்களிடம் ஒப்படைத்தார். அவளைத் தம் இல்லம் அழைத்துச் சென்று, அவர்கள் அடுத்த கணமே அவளுக்கு விடுதலை நல்கிப் பின்னர் தமக்குத் தெரிந்த நல்லார் ஒருவருக்கு அவளை மணமுடித்து வைத்து மகிழ்ந்தனர். அவளின் மணி வயிறு உதித்த மாமகன் பிற்காலத்தில் முப்பது தடவை காலால் நடந்து சென்று ஹஜ்ஜுச் செய்யும் பேற்றினைப் பெற்று மாபெரும் மகானாக விளங்கினார்.

ஒரு நாள் ஜுனைத் (ரஹ்) அவர்களின் உள்ளத்தில் தம்மிடமுள்ள நான்கு தீனார்களை எடுத்துச் சென்று தம் மாதுலரின் தாளடியில் காணிக்கை வைத்தால் நலமாக இருக்குமென்ற எண்ணம் உதித்தது. அவ்விதமே அவர்கள் செய்தார்கள். அது கண்டு பெரிதும் மகிழ்ச்சியுற்று ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள் ''நீர் மறுமைப் பேற்றினை எய்தப் பெறுவீர்'' என்று அவர்களை வாழ்த்தினர்.

பின்னர் அவர்கள் தம் மருகரை நோக்கி, ''எனக்கு இன்று நான்கு தீனார்கள் தேவைப்பட்டன. எனவே நான் இறைவனிடம் 'இறைவனே! உன் அருளுக்குப் பாத்திரமான ஒருவர் மூலம், எனக்கு அவற்றைத் தந்தருள்வாயாக!' என்று இறைஞ்சினேன். உம் மூலம் அவற்றை இறைவன் அனுப்பி வைத்தான்'' என்று கூறினர்.

நாளாக, ஆக ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஆன்மீக உச்சத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு இறைவன் பல ஆன்மீக இரகசியங்களை அறிவித்துக் கொடுத்து வந்தான். ஒரு நாள் அவர்கள் தம் மாதுலரைக் காண அவர்களின் இல்லம் சென்றபொழுது, அவர்கள் துயரம் தோய்ந்த முகத்துடன் வீற்றிருப்பதைக் கண்டு, அதற்கான காரணத்தை வினவினர். அதற்கு அவர்கள் தம்மிடம் ஓர் இளவல் வந்து தௌபா என்றால் என்னவென்று வினவியதாகவும், ஒருவன் தான் செய்த பாவங்களை நினைத்து வருந்துவதே தௌபா என்று தாம் கூறியதாகவும், அதற்கு அவன், 'அவ்வாறன்று; ஒருவன் தான் செய்த பாவங்களை மறப்பதே தௌபா' என்று கூறிச் சென்றதாகவும், அது கேட்டுத் தாம் துயருற்றுக் கொண்டிருப்பதாகவும் கூறினர்.

''அவன் கூறியது சரிதானே. அதற்காகத் தாங்கள் ஏன் துயருற வேண்டும்?'' என்று கூறினர் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

''எவ்வாறு? '' என்று வியப்புடன் வினவினர் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்)

ஒருவன் இறைத் தியானத்திலே தன் மனத்தை முற்றிலும் ஈடுபடுத்தி, தான் முன்னர் செய்த பாவங்கள் அனைத்தையும் மறந்தொழிப்பதும், தௌபாவின் பாற்பட்டதேயாகும். மேலும் ஒருவன் தான் நேர்வழி பெற்ற பின், தான் முன்னர் செய்த பாவங்களை நினைப்பதும் வருத்தத்தை நல்கு மாதலால் அவற்றை மறந்தொழித்தலே மாண்புடையதாகும்'' என்று கூறினர் ஜுனைத்.

மருகரின் இந்த ஆழிய விளக்கம், ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களுக்கு அளவற்ற வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது. ''ஆம், ஆம். நீர் கூறுவது முற்றிலும் உண்மை'' என்று கூறி மகிழ்ச்சிக் கண்ணீர் உகுத்தார்கள் அவர்கள்.

அவர்களுக்கு விரைவில் மற்றொரு வியப்பும் காத்திருந்தது. மற்றொரு நாள் அவர்கள் தங்களின் ஆசானைக் காணச் சென்றபொழுது, ஆங்கு ஒருவர் மூர்ச்சையுற்றுக் கிடப்பதையும், தம் ஆசான் யாது செய்வ தென அறியாது திகைத்துக் கொண்டிருப்பதையும் கண்டனர். அதற்கான காரணத்தை அவர்கள் வினவிய பொழுது "நான் திருமறையில் சில வசனங்களை ஓதினேன். அவற்றைச் செவியுற்றதும், அவர் அலறித் துடித்து மயங்கிக் கீழே வீழ்ந்து விட்டார். எனக்கு யாது செய்வதெனத் தெரிய வில்லை" என்றனர் ஸரி அஸ் ஸகதீ.

"நல்லது, அதே வசனங்களை மீண்டும் ஓதுங்கள். அவர் உணர்வு பெற்றெழுவார்" என்றனர் ஜுனைத் (ரஹ்). அவ்விதமே அவர்கள் செய்ய, அவர் உணர்வு பெற்றெழுந்தார்.

அதுகண்டு பெரிதும் வியப்புற்ற ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், தம் மருகரை நோக்கி, "இஃது உமக்கு எவ்வாறு தெரியும்?" என்று வினவினர்.

"யூசுஃப் (அலை) அவர்களின் சட்டையினால் யஃகூப் (அலை) அவர்களின் கண்கள் முதலில் ஒளி இழந்தன. பின்னர் அவர்களின் சட்டையினால் அவை ஒளி பெற்றன அல்லவா? அதிலிருந்து நான் இந்த உபாயத்தை அறியலானேன். யஃகூப் (அலை) பிறவிக் குருடரல்லர். இடையிலே ஏற்பட்ட சில காரணங்களால் கண் ஒளி மங்கப் பெற்றார்கள். அக்காரணங்கள் நீங்கப் பெற்றதும், கண்ணொளி மீளப் பெற்றார்கள். அதே போன்று தான் மயக்கமுற்ற இவரும் மயக்கம் நீங்கப் பெற்றார்" என்று அவர்கள் விடையிறுத்தனர்.

மருகரின் இந்த அறிவார்ந்த மறுமொழி மாதுலருக்கு அவர்மீது இருந்த மதிப்பைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்தது. எனவே ஒரு தடவை ஒருவர் அவர்களிடம், "ஆசானைவிட மாணவர் சிறந்து விளங்கு வதும் உண்டோ?" என்று வினவிய பொழுது, "ஆம்; அதில் என்ன ஐயம் உள்ளது? என்னைவிட என் மருகர் சிறந்து விளங்குவதே இதற்குப் போதிய சான்றாகுமே" என்று பதிலிறுத்தனர் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்).

தம் மருகரின் ஆழிய அறிவையும், ஆன்மீகப் பரிபக்குவத்தையும் நன்கு விளங்கிக் கொண்ட ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், அவர்களை நோக்கி, மக்களுக்கு அறிவுரை நல்குமாறு எவ்வளவோ கூறினர். "ஆசான் இருக்குங்கால் மாணவன் அறிவுரை பகர்வது அழகன்று" என்று அடக்கத்துடன் மறுத்து விட்டனர் ஜுனைத் (ரஹ்).

இக்காலை அவர்கள் ஒரு வெள்ளி இரவு அயர்ந்து உறங்குங்கால், அண்ணலெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள், அவர்களின்

கனவில் திருத்தோற்றம் வழங்கி, மக்களுக்கு அறிவுரை பகருமாறு அருள்வாய் மொழிந்து விட்டு மறைந்தனர். அக்கணமே விழித்தெழுந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களே தம் கனவில் திருத்தோற்றம் வழங்கித் தம்மை மக்களுக்கு அறபோதம் செய்யுமாறு கூறிச் சென்றதால், தம் தகுதி தம் மாதுலரின் தகுதியை விட உயர்ந்து விட்டதாக எண்ணினர்.

இந்த எண்ணத்துடனே அவர்கள் தம் மாதுலரின் இல்லம் சென்ற பொழுது, அவர்களை எதிர்பார்த்த வண்ணமே வாயிலில் நின்று கொண்டிருந்த ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள் தம் மருகரை நோக்கி, ''இது காறும் நீர் மற்றவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தீர். இப்பொழுது நீரே பேச வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. உம் பேச்சால் உலகம் உய்ய உள்ளது. உம்முடைய மாணவர்கள் உம்மைப் பேசுமாறு கூறியபொழுதும் நீர் பேசவில்லை. பக்தாதிலுள்ள ஷைகு மார்கள் கூறியபோதும், நீர் பேசவில்லை. நான் கூறிய போதும், நீர் பேச வில்லை. எம்பெருமானார் (ஸல்) அவர்கள் உம் கனவில் திருத் தோற்றம் வழங்கிப் பணித்து விட்டுச் சென்ற பின் தான், நீர் பேசப் போகிறீர்? என்று கூறினர்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்களுக்குச் சற்றுமுன் ஏற் பட்டிருந்த சிறிதளவு கர்வம் தலைக்குப்புறக் கவிழ்ந்தது. தம்முடைய மாதுலர் தம்முடைய பகிரங்க, அந்தரங்கச் செய்திகளை அறிந்தவர்களாக இருப்பதையும், ஆனால், தாமோ அவர்களுடைய நிலையை ஒரு சிறிதும் அறியாதிருப்பதையும் கண்டு, அவர்கள் தம்மைவிட எவ்வளவோ உயரிய தரத்தில் உள்ளவர்கள் என்பதை உணர்ந்தார்கள். தம்மை மன்னித்து ஆட்கொள்ளுமாறு அவர்களை வேண்டிக் கொண்டார்கள்.

பின்னர் அவர்கள் ஆசானை நோக்கி, ''நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டது தங்களுக்கு எவ்வாறு தெரியும்?'' என்று வினவினர்.

''இறைவன் என் கனவில் திருத்தோற்றம் வழங்கி, மேடை மீதேறி மக்களுக்கு அறிவுரை பகருமாறு ஜுனைதுக்கு ஆணையிட்டு வருமாறு என் தூதரை அனுப்பி வைத்துள்ளேன்'' என்று இயம்பினான் எனக் கூறினர்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள், தம் மாதுலரை நோக்கி, ''நான் இனிமேல மேடை மீதேறிப் பேசப் போகின்றேன். ஆனால் நாற்பது பேர்களுக்கு மேற்பட்ட கூட்டத்தினருக்குப் பேசப் போவதில்லை'' என்று கூறினார்கள்.

அவ்வாறே அவர்கள் ஒரு நாள், நாற்பதின்மர் அடங்கிய ஒரு கூட்டத்தின் முன் நின்று தம்பேச்சைத் துவங்கினர். அவர்களின் பேச்சைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்ட 18 பேர் அவ்விடத்திலேயே மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்து மாண்டனர். பாக்கி இருபத்திரண்டு பேர் மயக்கமுற்ற நிலையில் இல்லம் கொண்டு சேர்க்கப்பட்டார்கள். இதுகண்டு ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இதன் பின் சிறிது காலத்திற்குள் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள், இறப்பெய்தவே, அவர்கள் அபூஹஃப்ஸ் உமர் ஹத்தாத் (ரஹ்) அவர் களிடமும், பின்னர் யஃகூப் ஜையாத் (ரஹ்) அவர்களிடமும் சென்று, ஆன்மீகக் கல்வி பயின்றார்கள். இவர்களிடம் மட்டுமல்லாது இருநூறுச்கு மேற்பட்ட ஆசிரியர்களிடமும் கல்வி பயின்றனர்.

அவர்கள் யஃகூப் ஜையாத் (ரஹ்) அவர்களை அணுகி கல்வி பயிலத் துவங்கியதோ, விநோதமானதாகும். யஃகூப் ஜையாத் (ரஹ்) அவர்களின் இல்லத்திற்கு முன், அவர்களிடம் பாடம் கேட்பதற்காக மக்கள் கூடி நின்றபொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்களும் அக்கூட்டத்தில் நின்றார்கள், அப்பொழுது வீட்டின் உள்ளே இருந்து "ஏன் வெளியே வீணே குழுமிக் கொண்டிருக்கிறீர்கள்? போய், வணக்க வழிபாடுகளில் ஈடுபடுங்கள்" என்று ஒரு குரல் வெளிவந்தது. யாது பதில் கூறுவதென அறியாது அனைவரும் வாய் மூடி நின்ற பொழுது, ஆங்கு நின்று கொண்டிருந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள் மட்டும் "இதனையும் நாங்கள் ஒரு வணக்கமாகவே கருதுகின்றோம்" என்று பதிலிறுத்தார்கள்.

அவர்களின் இந்த ஆழிய பதில், யஃகூப் ஜையாத் (ரஹ்) அவர்களைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வருமாறு செய்தது. பின்னர் அவர்கள் ஆங்குக் குழுமியிருந்த அனைவருக்கும் அறிவுரை பகர்ந்து முடிந்ததும், ஜுனைத் (ரஹ்) அவர்கள் அப்பெரியாரைத் தனிப்பட்ட முறையில் அணுகி, அவர்களின் தாளடியில் தாள்மடித்து அமர்ந்து "தவக்குல் என்றால் யாது?" என்று வினயமாக வினவினர்.

அதுகேட்ட யஃகூப் ஜையாத் (ரஹ்) அவர்கள், யாதொரு மறு மொழியும் கூறாது தம் பையைத் துழாவி, அதில் கிடந்த ஒரு திர்ஹத்தை எடுத்து அவர்களிடம் கொடுத்து, "முதலில் இதனை ஏழைகளுக்கு அறம் செய்துவிட்டு வாரும்" என்று கூறினர்.

அவ்வாறே செய்து, ஜுனைத் (ரஹ்) அவர்கள் அந்த ஆன்றோரின் திருமுன் வந்தமர்ந்ததும், "தவக்குல் பற்றிப் பேசும் பொழுது என்னிடம் ஒரு திர்ஹத்தை வைத்துக் கொண்டு பேசுவதற்கு நான் நாணமுற்றேன். எனவே தான், அதனை முதலில் அறம் செய்து விட்டுவருமாறு

கூறினேன்'' என்றார்கள் அவர்கள். உடனே ஜுனைத் (ரஹ்) அவர்கள், அவர்களே தமக்கேற்ற ஆசான் என்பதை உணர்ந்து, அவர்களிடம் பல காலம் கல்வி பயிலலாயினர்.

இவ்வாறு பெரும் பண்பும், பேராற்றலும் எய்தப் பெற்ற பெரியார்களிடம் கல்வி கற்ற ஜுனைத் (ரஹ்) அவர்கள், விரைவில் இலௌகீக, பரமார்த்தீக கல்விகளில் சிறந்து விளங்கிப் பல திறப்பட்ட மாணவர்களுக்கு மார்க்கக் கல்வியும், ஆன்மீகக் கல்வியும் போதிக்கும் பேராசிரியராக விளங்கினர். உலகிலே வாழ்ந்தும் உலகிலே வாழாதது போன்று வாழ்ந்து வந்த அவர்கள், சூஃபிகள் போன்று கிர்கா அணியாது ஆலிம்கள் போன்று சாதாரண மேலங்கியையே அணிந்து வந்தனர். அவர்களுடைய கையில் எப்பொழுதும் தஸ்பீஹ்மாலை தவழ்ந்து கொண்டிருந்தது. இதைப்பற்றி ஒருவர் அவர்களிடம் ஒரு தடவை வினவிய பொழுது, ''இறையண்மையை எய்துவதற்கு எனக்கு உறுதுணையாக இருக்கும் இதனை எவ்வாறு அணுவத்தனை நேரமேனும் என்னால் புறக்கணித்திருக்க இயலும்?'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

ஒரு தடவை மக்கள் அவர்களை நோக்கி, ''தாங்கள் ஆன்மீகத் துறையில் இத்துணை உச்சத்தை எய்தியதற்குக் காரணம் என்ன?'' என்று வினவிய பொழுது, அவர்கள் தங்களின் இல்லத்திலுள்ள வணக்க இடத்தைச் சுட்டிக் காட்டி, ''இதில் நான் நாற்பதாண்டுகளாக வீற்றிருந்து வணக்கம் நிகழ்த்தியதன் காரணமாக எய்தப் பெற்றேன்'' என்று கூறினர்.

மேலும் அவர்கள் கூறும் பொழுது ''நான் பெற்றிராத எந்த ஞானமும் வானத்தின் கீழ் இருப்பினும், அதனை எய்தப் பெறுவதில் நான் பெரு முயற்சி செய்வேன். அதில் அலுப்போ சலிப்போ நான் கொள்வதில்லை. பசித்திருந்ததனாலும், உலக ஆசாபாசங்களை விட்டொழித்ததனாலும், ஏவல்களை எடுத்து நடந்து, விலக்கல்களை விட்டொழித்ததனாலும் ஃபர்ளு, சுன்னத்து ஆகியவற்றைப் பேணி ஒழுகியதனாலும், அந்த ஞானத்தை, ஆன்மீகப் படித்தரத்தை எய்தப் பெற்றேனேயொழிய வெறும் பேச்சால் எய்தப் பெறவில்லை'' என்று எடுத்துரைத்தனர்.

வேறொரு நாள் பிறிதொருவர் அவர்களை அணுகி, இதே கேள்வியை அவர்களிடம் கேட்ட பொழுது ''உலகைத் துறத்தல், நோன்பு நோற்றல், இரவு முழுவதும் விழித்து வணக்கத்தில் ஈடுபட்டிருத்தல் ஆகியவற்றால் எய்தப் பெற்றேன்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

ஆம்; அவர்கள் நாற்பதாண்டுகளாக, ஒவ்வோர் இரவும் இஷாத் தொழுகை தொழத் துவங்கின், வைகறைத் தொழுகை தொழுது விட்டே ஓய்வு கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். இரவுத் தொழு

கைக்குச் செய்த 'உளு' வுடனேயே அவர்கள், வைகறைத் தொழுகை யையும் தொழுவார்கள். ''அவர்கள் தங்களின் வணக்க அறையில் நுழைந்தால், நானூறு 'ரக்அத்' கள் தொழாமல் வெளியே வருவதில்லை'' என்று அவர்களின் நண்பர் ஒருவர் நற்சான்று பகர்கின்றார். அவர்கள் தொழுவதற்காகத் தொழுகை விரிப்பை விரிக்கும் பொழுதே, இறைவனையன்றி, வேறு எந்நினைவும் தம் உள்ளத்தில் நுழையாது பெரிதும் எச்சரிக்கையுடன் இருந்தார்கள்.

தொழுவது தான் இப்படி என்றால், நோன்பு நோற்பதும் அப்படித் தான். நோன்பு நோற்பதற்குத் தடை செய்யப் பட்ட நாட்களைத் தவிர்த்து, அவர்கள் மற்ற நாட்களில் ஆண்டு முழுவதும் நோன்பு நோற்பார்கள். தம்முடைய இல்லத்திற்கு எவரேனும் விருந்தினர் வந்து விடின், நஃபி லான நோன்பாயின் அதனை நோற்காமலும், நோற்றிருப்பின் அதனை முறித்து விடவும் செய்வார்கள். அவர்களின் வரவால், தாம் நஃபில் நோன்பு நோற்பதைவிட அதிகம் மகிழ்வதாகக் கூறுவார்கள்.

சதையை மட்டுமல்ல, எலும்பையும் உருக்க வல்ல இத்துணை அபார வணக்கத்தில் அவர்கள் ஆண்டாண்டு காலமாக ஈடுபட்டிருந்த போதினும், அவர்கள் நல்ல திடகாத்திரத்துடன் இருந்தது பலருக்குப் புரியாத புதிராக இருந்தது. அதுகண்டு சிலர் அவர்களின் மகாத்மியத்தை உணர்ந்தார்கள். வேறு சிலர் அதுபற்றி ஐயுற்றார்கள்.

அவர்கள் ஹஜ்ஜுக் கடமையை ஒரு தடவை செய்ததுடன் திருப்தி யுறவில்லை. தனியாக நடந்து சென்று முப்பத்து மூன்று தடவை ஹஜ்ஜு செய்தார்கள். ஹஜ்ஜின் ஒவ்வொரு அம்சத்தையும் ஓர்ந்து உணர்ந்து முறைப்படி செய்தார்கள்.

ஒருநாள் அவர்கள் தம் தவமடத்தில் வீற்றிருக்கும் பொழுது, அவர் களைக் காண்பதற்காக ஒருவர் வந்தார். ''எங்கிருந்து வருகிறீர்?'' என்று அவர்கள் அவரை வினவினார்கள். புனித மக்கா சென்று 'ஹஜ்' ஜு செய்து விட்டு வருகிறேன்'' என்று அவர் மறுமொழி பகர்ந்தார். அப் பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''நல்லது; நீர் மக்காவுக்கு ஹஜ்ஜு செய்யப் புனித யாத்திரை மேற்கொண்ட பொழுது, உம்முடைய அனைத்துப் பாவங்களையும் பயணம் அனுப்பிவிட்டுப் புறப்பட்டீரா?'' என்று வினவினர். ''இல்லையே'' என்றார் அவர். ''அவ்விதமாயின் நீர் புனித யாத்திரையே மேற்கொள்ளவில்லை'' என்றார்கள் அவர்கள்.

''சரி; நீர் ஒவ்வொரு தங்குமிடமாகத் தங்கிச் சென்ற பொழுது அல்லாஹ்வின் பாதையில் அடியெடுத்து வைப்பதாக எண்ணி அடியெடுத்து வைத்தீரா?'' என்று அவர்கள் வினவினர்.

''இல்லையே'' என்று அவர் பதில் கூறினார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''அவ்விதமாயின் நீர் எவ்வொரு தங்குமிடத்திலும் தங்கிப் படிப்படியாக முன்னேறிச் செல்லவில்லை'' என்று கூறினர்.

''நல்லது; நீர் மீகாத் எல்லையை அடைந்த காலை, நீர் அணிந்திருந்த உடைகளைக் களைந்துவிட்டு, இஹ்ராம் அணிந்த பொழுது நீர் மனித இயல்புகளையெல்லாம் களைந்தெறிந்தீரா?'' என்று வினவினர்.

''இல்லையே'' என்று அவர் மறுமொழி பகர்ந்தார். அவ்விதமாயின் நீர் இஹ்ராம் அணியவே இல்லை'' என்றார்கள் அவர்கள்.

மீண்டும் அவர்கள் அவரை நோக்கி, ''சரி; நீர் அரஃபாத் வெளியில் நின்றக்கால் ஒரு கணமேனும் இறை நினைவில் இலயித்து நின்றீரா?'' என்று வினவினார்கள்.

''இல்லையே'' என்று அவர் பதில் மொழிந்தார். அப்பொழுது அவர்கள் ''அவ்விதமாயின் நீர் அரஃபாத் வெளியில் நிற்கவே இல்லை'' என்றார்கள் அவர்கள்,

அதன்பின் அவர்கள் அவரை நோக்கி ''நீர் முஸ்தலிஃபா சென்ற பொழுது உம்முடைய வேணவாவை எய்தப் பெற்ற அந்த வேளையில் நீர் உம்முடைய தீய இச்சைகளையெல்லாம் துறந்தீரா?'' என்று கேட்டார்கள்.

''இல்லையே'' என்று அவர் கூறிக் கையை விரித்தார். அப்பொழுது அவர்கள், ''அவ்விதமாயின் நீர் முஸ்தலிஃபாவே செல்லவில்லை'' என்று கூறினார்கள்.

''நல்லது, நீர் கஃபாவைச் சுற்றி வந்தபொழுது, இறைவனின் பேரெழிலைக் கண்டீரோ?'' என்று வினவினர்.

அவர் மீண்டும் ''இல்லையே'' என்று இயம்பினார். அப்பொழுது அவர்கள் ''அவ்விதமாயின் நீர் கஃபாவைச் சுற்றி வரவே இல்லை'' என்று நவின்றார்கள்.

''சரி, நீர் ஸஃபா மர்வாவுக்கு இடையில் தொங்கோட்டம் ஓடியபொழுது ஸஃபா (தூய்மை) முருவ்வத் (நற்பண்பு) ஆகியவற்றைப் பெற்றது போன்ற உணர்வை பெற்றீரா?'' என்று வினவினர்.

''இல்லையே'' என்று சொல்லிப் பல்லை இளித்தார் அவர். அப்பொழுது அவர்கள், ''அவ்விதமாயின் நீர் ஸஃபா மர்வாவுக் கிடையில் தொங்கோட்டம் ஓடவே இல்லை', என்று பகர்ந்தார்கள்.

"நல்லது நீர் மினா சென்று ஆட்டையோ மாட்டையோ, ஒட்டகத்தையோ பலியிட்ட பொழுது, நீர் உம்முடைய தீய உணர்வுகளைக் குர்பானி கொடுத்தீரா?" என்று வினவினர்.

"இல்லையே" என்று அவர் பதிலிறுத்தார். "அவ்விதமாயின் நீர் யாதொரு பலி மிருகங்களையும் குர்பானி கொடுக்கவில்லை" என்று மொழிந்தார்கள் அவர்கள்.

"அங்கு நீர் கல்லெறிந்த பொழுது, உம்மிடம் எஞ்சி ஒட்டிக் கொண்டிருந்த தீய உணர்வுகளைத் தூக்கி எறிந்தீரா?" என்று அவர்கள் இறுதியாகக் கேட்டார்கள்.

மீண்டும் அவர் "இல்லையே" என்ற பதிலையே மொழித்தார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "நீர் ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றவே இல்லை. ஆதலின் அடுத்த ஆண்டு 'ஹஜ்ஜுப் பயணத்தை மேற்கொண்டு, நான் கூறிய வண்ணம் செய்து மகாமெ இப்ராஹீமை அடைவீராக!' என்று அருண்மொழி பகர்ந்தார்கள்.

போலி ஞானிகள் போன்று அவர்கள், எம்பெருமானார் (ஸல்) அவர்களின் வழிமுறைகளைத் தங்களின் முதுகுப்புறம் தூக்கி எறிந்துவிட்டுச் செயலாற்றவில்லை. தங்களின் அனுவத்தனை செயலிலும், அவர்கள் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் வழி முறைகளையே பின்பற்றினர். "ஒருவர் எத்துணை ஆன்மீக உச்சத்தை எய்தி நின்ற போதினும், அவர் குர் ஆன், ஹதீஸ் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டுச் செல்ல இயலாது. மனித இனத்திற்கு எல்லாப் பாதைகளும் மூடப்பட்டுள்ளன. ஆனால், எம் பெருமானார் (ஸல்) அவர்கள் அடியெடுத்து வைத்து நடந்த அழகுத் திருப்பாதை மட்டும் எப்பொழுதும் திறந்தே உள்ளது. அதுவே அவர் களுக்கு ஈடேற்றத்தை தரவல்லது" என்று அவர்கள் கூறினார்கள்.

எனவே அவர்கள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, இல்லறம் புகுந்து நன்மக்களை ஈன்றெடுத்தனர். இதைப்பற்றி அவர்கள் ஒரு தடவை கூறும் பொழுது, "உணவு எனக்கு எவ்வளவு தேவையோ, அதே போன்று இல்வாழ்க்கையும் எனக்குத் தேவை" என்று எடுத்துரைத்தார்கள்.

அவர்களின் ஆன்மீக முன்னேற்றத்தையும், பக்தியையும் பற்றிக் கேள்வியுற்ற ஒருவர், அவர்களின் தவமடம் வந்து ஆங்குச் சில நாட்கள் அவர்களோடு தங்கியிருந்தார். அதன் பின், தாம் அவர்களிடம் எவ்வித ஆன்மீக முன்னேற்றத்தையும், பக்தியையும் காணவில்லை என்று கூறி, அவர் அவர்களிடமிருந்து விடைபெறும் பொழுது "நீர் என்னிடம் திருக்குர் ஆனுக்கோ, நபி வழிக்கோ மாற்றமாக ஏதேனும் கண்டீரா?"

என்று வினவினர் அவர்கள். 'இல்லை' என்று பதில் கூறினார் அவர். அது கேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''இவைதாம் என்னிடம் உள்ளவை'' என்று அடக்கமாக இயம்பினார்கள்.

ஒருநாள் அவர்களைக் காண்பதற்காக தர்வேஷ்கள் சிலர், அவர்களின் தவமடத்திற்கு வந்தனர். அவர்கள் அங்கு ஆடம்பரமான சூழலில் வீற்றிருப்பதைக் கண்டதும், அந்த தர்வேஷ்களுக்கு ஏற்பட்ட எரிச்சலுக்கு அளவில்லை. சற்று நேரம் அவர்களுடன் உரையாடிவிட்டு, அவர்கள் அவ்விடத்தை விட்டும் கிளம்பினர்.

பின்னர் அவர்கள் மற்றோர் இறை நேசச் செல்வரைப்பற்றிக் கேள்வியுற்று, அவரைக் காண்பதற்காக அவரின் இல்லம் சென்றனர். அவரோ மிகவும் எளிய, வறிய நிலையில் வாழ்ந்து கொண்டிருந்தார். அங்கு ஒரு பாயும் ஒரு தண்ணீர்ப் பானையும் தவிர வேறொன்றுமில்லை.

அதைக் கண்டு மகிழ்வுற்ற அவர்கள், அந்த இறைநேசச் செல்வரை நோக்கி, ''தங்களின் எளிய வாழ்வு எங்களைப் பெரிதும் பரவசப்படுத்து கிறது. அதற்கு மாறாக ஜுனைத் (ரஹ்) அவர்களின் ஆடம்பர வாழ்வு எங்களுக்கும் பெரிதும் எரிச்சலை உண்டு பண்ணியது'' என்று கூறினார்கள்.

அப்பொழுது அந்த இறைநேசச் செல்வர் ஒரு பெருமூச்சு விட்டார். அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது.

''என் இனிய நண்பர்களே! மேலெழுந்த வாரியாக எதனையும் பார்த்து முடிவு கட்டிவிடாதீர்கள். அந்த மாபெரும் இறைநேசச் செல்வர் ஜுனைத் (ரஹ்) அவர்கள், ஆடம்பரச் சூழலில் வாழ்ந்த போதினும், அவர்கள் அந்த ஆடம்பரச் சூழலை உணர்வதே இல்லை. நான் வறிய நிலையில் வாழ்ந்த போதினும், இந்த வறிய நிலையை உணர்வதே இல்லை.'' என்று விளக்கம் பகர்ந்தனர். அவர்கள் கூறிய அந்த விளக்கம் தர்வேஷ்களின் அறிவுக் கண்களுக்கு வெளிச்சமாக அமைந்தது.

ஜுனைத் (ரஹ்) அவர்களின் இச்சை அடக்கமோ, அபாரமாக இருந்தது. ஒரு தடவை அவர்கள் ஒருவரிடம் ஒரு திர்ஹத்தைக் கொடுத்து, அத்திப்பழம் வாங்கி வருமாறு கூறினார்கள். அவ்விதமே அவர் வாங்கி வந்து கொடுத்ததும், அதனைத் தின்ன வாயில் எடுத்து வைத்தவர்கள், பின்னர் அதனை வெளியே துப்பி விட்டு, எஞ்சி இருந்தவற்றையும் எடுத்துச் செல்லுமாறு கூறினர். அப்பொழுது அதனை வாங்கி வந்த வருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. ''ஏன் அதனைத் தாங்கள் உண்ணவில்லை? பழம் கெட்டுள்ளதா என்ன?'' என்று பதறித் துடித்து வினவினார் அவர். ''இல்லை; அது நல்ல பழம் தான். எனினும் அதனை உண்ண நான் வாயில் எடுத்து வைத்ததும், ''இத்தனை நாட்களாய் உன்

இச்சையை அடக்கி ஆண்டாயே, இப்பொழுது அதன் அடிமையாகி விட்டாயோ?'' என்று என் உள் மனம், என்னை இடித்துரைத்தது. அதன் காரணமாக அதனை உண்ணாது வெளியே துப்பிவிட்டேன்'' என்று மறுமொழி பகர்ந்தார்கள் அவர்கள்.

''ஒருவன் தனக்கும் இறைவனுக்கும் இடையே சோற்றுப் பையை வைத்துக் கொண்டு, இறை வணக்கத்தில் இன்பம் காணவேண்டுமென்று விரும்புவானாகில், அது ஒரு போது சாலாது'' என்று அவர்கள் மற்றொரு தடவை கூறினர்.

நாற்பதாண்டுகளாக அவர்கள் இரவெல்லாம் விழித்திருந்து அபார வணக்கம் செய்ததும், பகலெல்லாம் நோன்பு நோற்றதும் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட பொருள்களையே ஒதுக்கித் தள்ளி தம் மனோ இச்சையை வென்று நின்றதும், அவர்களுக்குச் சிறிது தருக்கை உண்டு பண்ணியது. அப்பொழுது ''அபுல்காசிம்! உம்மைக் 'காஃபிர்' என்று பிரகடனப்படுத்த வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது'' என்று அசரீரி ஒன்று முழங்கியது. அதுகேட்ட அவர்கள் அடைந்த திடுக்கத்திற்கு அளவில்லை. 'இறைவ எம்பெருமா! அவ்வாறு பிரகடனப்படுத்தப் பட நான் என்ன தவறிழைத்தேன்?' என்று அவர்கள் அலறித் துடித்துக் கேட்டார்கள். அதற்கு அசரீரி ''இன்னும் உம்முடைய 'நான்' என்ற கர்வம் சாகவில்லையே. அது உம்மில் இருப்பதைவிட மாபெரும் குற்றம் வேறொன்று உளதோ?'' என்று வினவியது. அப்பொழுது அவர்கள் தலை குனிந்து ''ஒருவன் இறைவனுடன் ஒன்றிணையாத வரை, அவனுடைய நற்பண்புகள் கூடப்பாவச் செயல்களேயாகும்'' என்று நவின்றார்கள்.

இதன்பின் அவர்களை மற்றோர் சோதனையும் எதிர்நோக்கி நின்றது. அவர்களின் புகழ் நாளுக்கு நாள் பெருகி வருவது கலீபா முதற்கொண்டு, சிலருக்குப் பொச்சரிப்பையும், பொறாமையையும் உண்டுபண்ணியது. ஒரு நாள் சிலர் கலீபாவிடம் சென்று, அவர்களைப் பற்றியும், அவர்களின் ஆன்மீகப் பயிற்சிகளைப் பற்றியும், இல்லாததையும் பொல்லாததையும் கூற, ''அவர் மீது உருவான ஒரு குற்றச்சாட்டைக் கொண்டு வாருங்கள். அவரை விசாரித்து, அதற்கான தண்டனையை அளிப்போம்'' என்று கூறினார் கலீபா.

இவ்விதம் கூறியதோடு நில்லாது, அவர் அவர்களுடன் சேர்ந்து கொண்டு, அவர்களை எவ்வாறேனும் ஒழித்துக்கட்ட சதியாலோசனை செய்தார். தாம் மூவாயிரம் பொற் காசுகள் கொடுத்து விலைக்கு வாங்கிய அழகிய அடிமைப் பெண்ணை அவர்களிடம் சோடித்து அனுப்பிவைத்து, அவர்களை அவளின் மாய வலையில் சிக்க வைத்து மானபங்கப்படுத்தச் சூது சூழ்ந்தார் அவர்.

கலீபாவின் ஏற்பாட்டில் அவள் மணிமேகலாபரணங்களெல்லாம் அணிந்து, மணம் பூசி, அவர்களின் தவமடத்திற்குச் சென்ற பொழுது, அவர்கள் தம் வணக்க அறையில் அமர்ந்து இறைவனை வழுத்திக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவள் அவர்களின் திருமுன் வந்து நின்று, ''ஆன்றவிந்த சான்றோய்! தாங்கள் என்னைத் தங்களின் ஊழியத்தில் ஏற்றுக் கொள்ள வேண்டும். தங்களைப் போன்ற நல்லார்களுக்கு ஊழியம் புரிவதை நான் என் வாழ்வின் மகத்தான பேறாகக் கருதுகின்றேன். அதற்கு நான் எத்தகைய ஊதியமும் தங்களிடமிருந்து வேண்டேன். அவ்வப் பொழுது தாங்கள் எனக்கு அறிவுரை பகர்ந்துவரின், அதுவே தாங்கள் எனக்களிக்கும் அளப்பரும் ஊதியமாகும்'' என்று வினயமாக விளம்பினாள்.

தியானத்தில் ஈடுபட்டிருந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவள் தம்மை வழி கெடுத்து நரகப்படுகுழியில் வீழ்த்த வந்திருக்கும் மாயக்காரி என்று நன்கு விளங்கிக் கொண்டார்கள். அவர்களின் உள்ளம் என்றுமில்லா வண்ணம் கொதித்தது. இறைவனின் பேரருள் மட்டும் தம்மைச் சார்ந்திரா விடின் அவள் தம்முடைய இம்மை, மறுமைப் பெரு வாழ்வினை அழித்து விடுவாளே என்று அவர்கள் எண்ணியபொழுது, அவர்களின் உள்ளத்தில் கனன்றெழுந்த நெருப்பு, வடவாக்கினியான நாக்கு நீட்டி எரிந்தது. அவர்கள் அவளை ஏறிட்டுப்பார்த்தார்கள். அடுத்த கணம் அவள் பிணமாகக் கீழே சாய்ந்தாள்.

இச்செய்தி, நொடி நேரத்தில் பக்தாது முழுவதும் பரவிக் கலீபாவின் செவியிலும் பட்டது. அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட திகிலுக்கும், திடுக்கத்திற்கும் அளவில்லை. ''பிறருக்குச் செய்யக் கூடாததைச் செய்கின் றவன் தான் பார்க்கக்கூடாததைப் பார்க்க வேண்டி நேரிடும்'' என்று கூறித் தம்மையே தாம் நொந்து கொண்டார். அதன்பின் ஜுனைத் (ரஹ்) அவர் களின் தவமடம் சென்ற அவர், அவர்களை நோக்கி, ''தாங்கள் அவள் மீது சிறிதேனும் இரங்காது, உலகப் பேரழகியாகிய அவளை ஒரு நொடி யில் கொன்றொழித்து விட்டீர்களே'' என்று குறைபட்டுக் கொண்டார்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் சினமீக்குற்றவர்களாய், ''இவ்விதம் தானா ஒரு கலீபா தம் மக்களுடன் நடந்து கொள்வது? என்னுடைய நாற்பதாண்டு வணக்கத்தை ஒரு நொடியில் அழித் தொழிக்கச் சதி செய்தீரே. இது உமக்கு நேர்மையா? நானா அவளைக் கொன்றொழித்தேன். இறைவனல்லவோ அச்சதிகாரியைக் கொன் றொழித்தான்'' என்று எச்சரித்தார்கள். அதற்கு மேல் கலீபா அங்கு நிற்க வில்லை. அச்சம் அவரை ஆட்கொள்ள, சொல்லாமல் கொள்ளாமல் அவர் அவ்விடத்தை விட்டும் அகன்றார்.

அவர்களின் அபார தவ வலிமையின் முன் கலீபாவின் வலிமை மட்டுமல்ல, இப்லீசின் வலிமைகளெல்லாம் கூடத் தவிடு பொடியா யின. ஒரு நாள் அவர்கள் இப்லீஸைக் கனவில் கண்டபொழுது, இப்லீஸ் அவர்களின் முன் வந்து, ''ஷைகே! நான் தங்களின் முன் ஒட்டகை போல் வந்து ஊர்க்குருவி போல் தேய்ந்து விட்டேன்'' என்று கூறினான். ''ஏன் அவ்வாறனாய்?'' என்று அவர்கள் வினவினார்கள். ''தாங்கள், தங்களின், தியானத்தின் மூலம், என்னை இவ்வாறு இளைக்கச் செய்து விட்டீர்கள்'' என்றான் அவன்.

மற்றொரு தடவை அவர்கள் இப்லீஸ் நிர்வாணமாகக் கடைத் தெருவில் அலைந்து கொண்டிருப்பதைக் கனவில் கண்டு ''அடே நாச மாய்ப் போனவனே! இவ்வளவு மனிதர்கள் நடமாடக் கூடிய இடத்தில், நீ நிர்வாணமாகத் திரிய உனக்கு வெட்கமில்லையா?'' என்று வினவிய பொழுது, ''இங்கு மனிதர்கள் எவர் இருக்கின்றார்கள்? மனிதர்கள் தாம் புதைகுழிக்குள் மறைந்து விட்டார்களே. இங்கு நடமாடிக் கொண்டு திரிகின்றவர்களெல்லாம் மனிதர்களா, என்ன? அவர்களை நான் மனிதர்களாகவே கருதுவதில்லை. அவர்களைத் தாங்கள் மனிதர்களாகக் கருதுவது தான் எனக்குப் பெருவியப்பாக இருக்கிறது. இன்று மூன்றே மூன்றுபேர்கள் தாம் எனக்கு மனிதர்களாகத் தென்படுகிறார்கள். அவர்கள் மூவரும் ஷூனிஸியாப் பள்ளியில் அமர்ந்து வணக்கம் நிகழ்த்திக் கொண்டுள்ளார்கள். அவர்களைக் கலைக்க நான் ஆயிரம், ஆயிரம் முறைகளில் முயன்றேன். ஆனால் அவர்களோ, என் எலும்புகளை முறித்த தோடல்லாது, என்னையும் எரித்துச் சாம்பலாக்கி விட்டார்கள்'' என்று கூறினான்.

அதுகேட்டு திடுக்குற்று விழித்தெழுந்த அவர்கள், அந்த நள்ளிரவி லேயே அம்மூவரையும் காண்பதற்காக அப்பள்ளி வாயிலுக்குச் சென்ற பொழுது, அம்மூவரும் தலை குனிந்த வண்ணம் இறைத் தியானத்தில் ஈடுபட்டிருந்தனர். அவர்களில் ஒருவர் இவர்களின் வரவை உணர்ந்ததும் தலையைச் சற்று உயர்த்தி, ''ஜுனைதே! அந்தத் தீயோன் சொன்ன அனைத்தையும் உண்மையென நம்பிவிட வேண்டாம். நீர் எங்களினும் சிறந்தவர்'' என்று கூறினார்.

வேறொரு தடவை அவர்கள் பள்ளியின் வாசலில் நின்று கொண்டி ருந்த பொழுது, ஒரு கிழவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து கொண்டிருப்பதைக் கண்டனர். அவன் அவர்களை நெருங்க, நெருங்க அவர்களை ஓர் இனம் தெரியாத அச்சம் ஆட் கொண்டது. அவன் அவர் களை நெருங்கியதும் 'நீ யார்?' என்று அவர்கள் வினவினர். ''உன் ஆசையே நான்'' என்று அவன் பதிலளித்தான்.

அவன் யார் என்பதை விளங்கிக் கொண்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், அவனை நோக்கி, ''சபிக்கப்பட்டவனே! இறைவன் உன்னை நோக்கி ஆதத்திற்குச் சிர வணக்கம் செய்யுமாறு கூறிய பொழுது, நீ ஏன் மறுத்தாய்?'' என்று வினவினர்.

அதற்கு அவன், ''என்ன ஜுனைத், இவ்வாறு கேட்கிறீர்? இந்தச் சாதாரண விஷயம் கூட உமக்குத் தெரியாதா? நான் இறைவனைத் தவிர வேறொருவனுக்குச் சிரவணக்கம் செய்வேன் என்று கருதிக் கொண்டீரா, என்ன? அத்தகு கயவனா நான்?'' என்று அவர்களை மடக்கினான்.

அவனுக்கு யாது பதிலுரைப்பதென அறியாது அவர்கள் விழித்த பொழுது, அவர்களின் உள்ளிலிருந்து ஒரு குரல் பேசியது, ''கூறும் நீ ஒரு பொய்யன். நீ இறைவனின் உண்மையான அடியானாய் இருந்திருப்பின், நீ அவனுடைய ஆணைக்கு மாறு செய்யாது கீழ்ப்படிந்திருப்பாய்'' என்று. அதனை இப்லீஸ் செவியுற்றதும், ''அல்லாஹ்வின் மீது ஆணையாக, ஜுனைதே! நீர் என்னை எரித்து விட்டீர்'' என்று அலறிய வண்ணம் அவ்விடத்தை விட்டும் மறைந்து விட்டான்.

இவ்வாறு தம் மனோ இச்சைகளையெல்லாம் அவித்தொழித்து, ஆன்றோராகவும், சான்றோராகவும் விளங்கிய அவர்கள், எச்செயலை ஆற்றிய போதினும், அதனைத் தூய உள்ளத்துடன் செய்தார்கள். தாம் இதனை ஒரு நாவிதன் மூலம் கற்றுக் கொண்டதாக அவர்கள் கூறினர். ஒரு தடவை அவர்கள் மக்காவுக்கு 'ஹஜ்'ஜு செய்யச் சென்ற பொழுது, ஒரு நாவிதனிடம் சென்று தமக்கு அல்லாஹ்வுக்காக வேண்டித் தலைச்சவரம் செய்து விடுமாறு வேண்டிக் கொண்டனர். 'அல்லாஹ் வுக்காக வேண்டி' என்ற சொல் அவனின் செவிப்பட்டதும், அவனுடைய கண்கள் பனிந்தன. செல்வர் ஒருவருக்குச் சவரம் செய்து கொண்டிருந்த அவன், அவ் அலுவலை உடனே நிறுத்தி, ''அல்லாஹ்வுக்காக ஒரு செயலை ஆற்றுமாறு கூறப்பட்டபின், மற்றச் செயல்கள் அனைத்தும் நிறுத்தப்பட வேண்டியவையேயாகும்'' என்று கூறினவனாய், தன் முன் இருந்தவரைச் சற்று விலகி இருக்குமாறு கூறி, அவர்களைத் தன்முன் வந்து அமருமாறு வேண்டினான்.

அவர்களும் அவ்வாறே செய்ய, அவன் அவர்களின் தலையை முத்தமிட்டபின் அதனைச் சவரம் செய்ததோடல்லாது, அவர்களிடம் தம்மிடமிருந்த பணத்தைக் கொண்டு வந்து கொடுத்து அதனைத் தம்முடைய காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டி நின்றான். அவ்வாறே அவர்கள், அதனை ஏற்றுக் கொண்டார்கள். எனினும், இதன்பின் தம் கையில் முதன் முதலாக வரும் பணம் அனைத்தையும் அவனுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட வேண்டும் என்ற உறுதியுடன் அவர்கள் அவ்விடத்தை விட்டும் அகன்றார்கள்.

ஒருநாள் அவர்கள் திடீரென அந்த நாவிதனின் கடைக்குள் நுழைந்து பொற்காசுகள் நிரம்பிய பை ஒன்றை அவனின் முன் வைத்து, அதனை ஏற்றுக் கொள்ளுமாறு கூறினர். "என்ன இது?" என்று அவன் வியப்புடன் வினவினான். அப்பொழுது அவர்கள் தாம் அன்று செய்து கொண்ட பிரதிக்ஞையையும், அதன்பின் இன்று முதன் முதலாகத் தமக்கு பஸாரவிலிருந்து அன்பளிப்பாக இப்பொற்காசுகள் வந்ததையும் எடுத்துரைத்து, அதனை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினர்.

அதற்கு அவன், "பெரியீர்! தங்களுக்கு இவ்வாறு கூற வெட்கமில்லையா, என்ன? அன்று தாங்கள் என்னிடம் அல்லாஹ்வுக்காக வேண்டித் தலைச் சவரம் செய்துவிடுமாறு தானே கூறினீர்கள். அவ்விதமிருக்க, அதற்குக் கூலிதர வந்துவிட்டீர்களே. எவ்விதப் பிரதிபலனையும் எதிர்பாராது, அல்லாஹ்வின் திருவுளப் பொருத்தத்தையே விரும்பி, உளத்தூய்மையுடன் செயலாற்றியவர்கள், தாங்கள் செய்த செயலுக்குக் கூலி பெறும் விந்தையைத் தாங்கள் எங்கேனும் கண்டுள்ளீர்களா?" என்று கூறி, அதனை ஏற்றுக் கொள்ள அடியோடு மறுத்து விட்டான். இஃது அவர்களுக்குச் சிறந்த அறிவுரையாக விளங்கியது.

இவ்வாறு அவர்களுக்கு இறைவன் பிறர் மூலமாகவும், கனவின் மூலமாகவும் அசரீரி மூலமாகவும், அறிவுரை வழங்கியது ஒன்றிரண்டு தடவையல்ல; பல தடவைகள்.

ஒருநாள் அவர்கள் மக்காவில் ஹரம் ஷரீஃபில் அமர்ந்திருக்கும் பொழுது, ஓர் இளவல் கந்தலுடை அணிந்தவராக அங்கு வந்தார். அவரின் முகத்தில் பசிக்களை தென்பட்டது. அவர்மீது இரங்கிய அவர்கள், அவரிடம் நூறு பொற்காசுகள் நிரம்பிய பையை நீட்டி, "இதனை நீர் பயன்படுத்திக் கொள்வீராக!" என்று கூறினர். அவர்கள் கூறியதைச் சற்றேனும் பொருட்படுத்தாது அவர் நின்று கொண்டிருப்பதைக் கண்ட அவர்கள், மீண்டும் அதனை ஏற்றுக் கொள்ளுமாறு அவரை வற்புறுத்த, அவர் அவர்களை ஏறிட்டுப் பார்த்து, "ஐயா! என்னுடைய அவல நிலையைக் கண்டு இரங்கி எனக்கு அப்பொற்கிழியைத் தருகிறீர். அந்தப் பொற்கிழியை என்ன, சுவனத்தைத் தரினும் அதற்குப் பகரமாக நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். வறுமை என் மாண்பின் உறைவிடமாகும்; இறையருட் சுரங்கமாகும். அதனை நான் அற்பப் பணத்திற்குப் பகரமாக விற்றுவிடுவேன் என்று நீர் எதிர்பார்க்கின்றீரா, என்ன?" என்று அதட்டிக் கூறிவிட்டு, விறு விறு என்று அவ்விடத்தை விட்டும் அகன்றார்.

மற்றொரு நாள் நள்ளிரவில் அவர்கள் கஃபாவைச் சுற்றி வருவதற்காக ஹரம் ஷரீஃப் சென்றனர். அப்பொழுது ஒரு பெண்மணி பின்வரும் பாடலைப் பாடிக் கொண்டு கஃபாவைச் சுற்றி வந்தாள். "நான்

என் காதலைப் பெரிதும் மறைக்க முயன்றேன். ஆனால் அது என்னால் இயலாது போய்விட்டது. என் ஆசை நாயகன் எனக்குத் திரையிட்டான். அவன் மீது என் காதல் அதிகமாகும் பொழுது, என் இதயம் அவனுடைய நினைவால் தகிக்கிறது. நான் என்னுடைய காதலின் அணைப்பை நாடினால், அவன் அதனை எனக்குத் தர மறுப்பதில்லை. நான் நெருங்க, நெருங்க, அவனும் என்னை நெருங்கி வருகிறான். அவன் எனக்குக் காட்சி வழங்கும் பொழுது, நான் அழுதே விடுகிறேன். அவன் தன் கரத்தை என்னை நோக்கி நீட்டும் பொழுது, நான் புத்துணர்வு பெறுகிறேன். புளகாங்கித முறுகிறேன். அவனே எனக்கு உதவி புரிபவன். அவனுடைய அருட்கொடைகளால் நான் இன்பத்தில் திளைத்து மகிழ்கிறேன்.''

அப்பொழுது அவர்கள் அவளை நோக்கி ''பெண்ணே!உனக்கு அல்லாஹ்வின் பயமில்லையா? அல்லாஹ்வின் இல்லத்தில் அமர்ந்து கொண்டு இத்தகு காதல் பாட்டுப் பாடலாமா?'' என்று வினவினர்.

அதற்கு அவள் ''ஜுனைதே! இறைவனுடைய பயம் இல்லாவிடின் நான் ஏன் உறக்கத்தை விட்டொழிந்து இங்கு வந்து கஃபாவைத் 'தவாப்' செய்கிறேன்? இறை பயமே, என்னை நாட்டைவிட்டே விரட்டியடித்து, நாடற்ற, நாதியற்ற நாடோடியாக ஆக்கிவிட்டது. அவனுடைய 'இஷ்க்' என்ற காதலால் தான் நான் நாடு, நகரங்கள், காடு, கழனிகளில் சுற்றி அலைந்து கொண்டு திரிகிறேன். அவனுடைய நேசம் என்னை நிலைகுலையச் செய்து விட்டது'' என்று கூறினாள்.

இவ்வாறு கூறிவிட்டு அவள், இன்னும் சில பாடல்களை உணர்ச்சியுடன் பாடி, ''ஜுனைதே! நீர் அல்லாஹ்வை தவாப் (சுற்றி வருதல்) செய்ய வந்தீரா? அல்லது அல்லாஹ்வின் இல்லமாகிய இக்கட்டடத்தைத் தவாப் செய்ய வந்தீரா?'' என்று வினவினாள்.

''அல்லாஹ்வின் இல்லமாகிய இக்கட்டடத்தையே தவாப் செய்ய வந்தேன்'' என்று மறுமொழி பகர்ந்தனர் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

அதுகேட்டு உணர்ச்சி மீக்குற்ற அவள், விண்ணை நோக்கிய வண்ணம், ''இறைவனே! உன் பெருமைதான் என்னே! இவர்கள் ஊனாலும் உதிரத்தாலும் ஆன மனிதர்களா? அல்லது கற்களாலான உருவங்களா என்று எனக்கு விளங்கவில்லையே. கற்களைப் போன்ற படைப்புகளான இவர்கள், கற்களைப் போன்ற தன்மைகளைப் பெற்று, கற்களையே 'தவாப்' செய்கின்றனரேயன்றி உன்னை 'தவாப்' செய்ய வில்லை. இஃதென்ன விபரீதமாக உள்ளது'' என்று அலறினாள். அவளின் அலறல் ஜுனைத் (ரஹ்) அவர்களை மூர்ச்சையுற்றுக் கீழே விழுமாறு செய்து விட்டது. பின்னர் அவர்கள் கண்களைத் திறந்து பார்க்கும் பொழுது அங்கு அப்பெண்மணியைக் காணவில்லை.

மற்றொரு தடவை அவர்கள் 'ஹஜ்'ஜுச் செய்ய மக்கா சென்ற பொழுது, ஒரு மரத்தின் கீழ் ஒரு தர்வேஷ் துன்ப நிலையில் அமர்ந்திருப் பதைக் கண்டு, ''நீர் இங்கே ஏன் வீற்றிருக்கின்றீர்?'' என்று வினவினர். அதற்கு அவர், ''எனக்கு ஒரு நேரம் இருந்தது. அதனை நான் இழந்துவிட்டேன். எனவே இங்கு வீற்றிருந்து அழுது கொண்டிருக் கிறேன்'' என்று விடையிறுத்தார்.

''அப்படியா? எவ்வளவு காலமாக நீர் இங்கு வீற்றிருக்கிறீர்?'' என்று அவர்கள் வினவினார்கள்.

''பன்னிரண்டாண்டு காலமாக நான் இங்கே தான் வீற்றிருக்கிறேன். தாங்கள் எனக்காக இறைவனிடம் இறைஞ்சி நான் அவனுடன் இருந்த அந்த நேரத்தை மீண்டும் எய்தப் பெற உதவி செய்ய வேண்டும்'' என்று அவர்களை வேண்டினார்.

மக்கா சென்ற அவர்கள் 'ஹஜ்'ஜுக் கடமைகளையெல்லாம் முடித்து விட்டு அவர் வேண்டிக் கொண்ட வண்ணம், அவருக்காக இறைவனிடம் இறைஞ்சினார்கள். இறைவனும் அவர்களுடைய இறைஞ்சுதலை ஏற்றுக் கொண்டான்.

'ஹஜ்'ஜு செய்து விட்டு அவர்கள் பக்தாது திரும்பும் வழியில், மீண்டும் அவ்விடத்தை அடைந்தபொழுது, அவர் அதே இடத்தில் வீற்றிருப்பதைக் கண்டதும் ''உம்முடைய விருப்பம் தான் நிறைவேறி விட்டதே. நீர் இங்கிருந்து கிளம்பவில்லையா?'' என்று வினவினர்.

அதற்கு அவர், ''ஷைகு அவர்களே! நான் இவ்விடத்திலேயே என் முதலை இழந்து கவலையோடு வீற்றிருந்தேன். பின்னர் நான் இவ்விடத் திலேயே என் முதலை மீண்டும் பெற்று இறைவனுடன் உறவாடும் நற் பேற்றினைப் பெற்றேன். அவ்விதமிருக்கும் பொழுது, நான் இவ்விடத்தை விட்டு நீங்குவது சரியா, கூறுங்கள். நான் என்னுடைய இன்ப பூமியாகிய இந்த மண்ணோடு மண்ணாக மக்கி, மறைந்து, மறுமையில் இந்த மண்ணிலிருந்தே உயிர்த்தெழ விரும்புகின்றேன்'' என்று பதில் கூறினார்.

ஒரு நாள் அவர்கள் ஷூனிஸியா பள்ளியில் ஒரு ஜனாஸாவை (பிரேதத்தை) எதிர்பார்த்துக் காத்திருந்த பொழுது, ஓர் ஏழை அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் சென்று பிச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர்கள் ''இவர் இவ்வாறு பலரிடமும் சென்று இரந் துண்பதைவிட, ஏதேனும் தொழில் செய்து பிழைக்கலாமே'' என்று எண்ணினர். இதன் பின் ஜனாஸாவும் வந்துவிடவே. அவர்கள் ஜனாஸாத் தொழுகையில் கலந்து, அவரை நல்லடக்கம் செய்துவிட்டு இல்லம் திரும்பினர்.

அன்றிரவு அவர்கள் கனவொன்று கண்டார்கள். அக்கனவில் ஜனாஸா ஒன்று அவர்களின் முன் கொண்டு வந்து வைக்கப்பட்டது. அப்பொழுது அவர்களை நோக்கி ''இதனை உண்ணும்'' என்று எவரோ கூறுவது போல் இருந்தது.

''நான் மனிதர்களின் இறைச்சியை உண்பவனல்லவே'' என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

''நேற்றுத் தான் இவருடைய இறைச்சியைத் தின்றீரே'' என்று மீண்டும் ஒலி முழங்கியது.

யார் இவர் என்பதை அறிய அவர்கள் அந்தப் பிரேதத்தை நெருங்கிப் பார்த்தபொழுது, முந்திய நாள் பள்ளிவாயிலில் பிச்சை கேட்ட அந்த ஏழையின் பிரேதமாக அது தென்பட்டது.

அப்பொழுதும் அவர்களின் வாய் ''நான் அவரைப்பற்றி யாதொன்றும் புறம் பேசவில்லையே'' என்று முணுமுணுக்க, ''உம் போன்றோர் மனத்தால் பிறரைப் பற்றித் தவறாக எண்ணுவது பாமரர்கள் நாவால் பிறரைப் பற்றிப் புறம் பேசுவதற்கு நிகராகும். இருவருக்கும் தண்டனை ஒன்று தான்'' என்று மீண்டும் அவ்வொலி முழங்கியது.

உடனே திகிலுற்று விழித்தெழுந்த அவர்கள், இரண்டு 'ரகஅத்' தொழுது இறைவனிடம் தம் பாவம் பொறுத்தருளுமாறு இறைஞ்சிவிட்டு இறைவனை வழுத்திக் கொண்டிருந்தனர். பொழுது புலர்ந்ததும் அவ்வேழையைத் தேடிப் புறப்பட்ட அவர்கள் அவரை ஆற்றோரத்தில் கீரைகளைப் பறித்துக் கொண்டிருப்பதைக் கண்டனர்.

அவர் அவர்களைக் கண்ணுற்றதும், ''ஜுனைத்! நீர் செய்த பாவத்திற்கு இறைவனிடம் மன்னிப்பு இறைஞ்சி விட்டீரல்லவா?'' என்று வினவினார். ''ஆம்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்ததும், ''இறைவன் தன் அடியார்களின் பாவ மன்னிப்பை ஏற்றுக் கொள்கிறான்'' என்று இறை திருவசனத்தை ஓதி, போம். இனிமேல் உம் உள்ளத்தைத் தீய எண்ணங்களை விட்டும் பாதுகாத்துக் கொள்ளும்'' என்று கூறினார் அவர்.

ஓரிரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களின் கனவில் தோன்றி, ''இன்று ஒரு பெண் இறந்து விட்டார். அவரின் ஜனாஸாத் தொழுகைக்கு நீர் தலைமை தாங்கி நடத்துவீராக!'' என்று கூறிவிட்டு மறைந்தனர். விடிந்தெழுந்ததும் அதுபற்றி அவர்கள் விசாரித்த பொழுது, சித்தப் பிரமை பிடித்த ஒரு பெண் இறந்துவிட்டதாக அவர்களுக்குத் தெரியவந்தது. அது கேட்டு அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட பெண் அவளாகத் தான் இருக்குமோ அல்லது வேறொருவராக இருக்குமோ என்று ஐயுற்ற அவர்கள், வேறு எவரேனும் பெண் ஒருத்தி அன்றிரவு இறந்திருக்கிறாளா என்று பலரிடமும் விசாரித்தார்கள். இல்லை, இல்லை என்றே பதில் வந்தது.

இறுதியாக, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட அப்பெண் மணி, சித்தப் பிரமை பிடித்தவள் என்று கருதப்பட்ட அவளாகத் தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்த அவர்கள், அவளைப் பற்றிக் கூறியவர்களிடம் "அவள் ஏதேனும் நற்செயல் ஆற்றியிருக்கிறாளா?" என்று வினவினர். அதற்கு அவர்கள் "நாங்கள் அவளிடம் ஒரே ஒரு நற்செயலைத் தான் கண்டோம். அவளுக்குக் குர்ஆனை ஓதத்தெரியாத போதினும், ஒவ்வொரு நாளும் குர்ஆனைத் திறந்து வைத்துக் கொண்டு, ஒவ்வொரு வரியிலும் தன் விரலை வைத்து 'இதனை அல்லாஹ் கூறியிருக்கிறான். இது உண்மை' என்று ஒவ்வொரு வரியையும் தொட்டுக் கூறி, குர்ஆனைப் பக்கம் பக்கமாகத் திருப்பி இவ்வாறு கூறி முடிப்பாள். இவ்வாறு கூறி முடித்த பின், மறுபடியும் குர்ஆனைத் திருப்பிப் புரட்டுவாள்" என்று சொன்னார்கள். இதன் காரணமாகவே அவளின் ஜனாஸாத் தொழுகையைத் தம்மைத் தலைமை தாங்கி நடத்துமாறு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறிச் சென்றார்கள் என்பதை விளங்கிக் கொண்ட அவர்கள் அவ்விதமே செய்தார்கள்.

ஒருநாள் அவர்கள் பள்ளிவாயலில் அமர்ந்திருக்கும் பொழுது, அங்கு ஒருவர் வந்து, 'உளூச்' செய்து இரண்டு 'ரகஅத்' தொழுதார். பின்னர் பள்ளியின் ஒரு பக்கத்தில் போய் அமர்ந்த அவர், ஆங்கிருந்த அவர்களைச் சாடையால் அழைத்து "அபுல் காசிமே! அல்லாஹ்வும் அவருடைய நேசரும் சந்திக்கும் நேரம் வந்துவிட்டது. என்னுடைய இறுதி வந்துற்ற பின் ஓர் இளம் இசைவாணர் தங்களிடம் வருவார். அவரிடம் இவற்றை ஒப்படைத்து விடுங்கள்" என்று கூறி ஒரு போர்வை, ஒரு பிரம்பு, ஒரு குவளை ஆகியவற்றை அவர்களிடம் ஒப்படைத்தார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "இவற்றால் இசை வாணருக்கு யாது பலன்?" என்று வினவினர். அதற்கு அவர் "அந்தப் பாடகர் என்னுடைய இடத்தில் இருக்கும் தகுதியைப் பெற்று விட்டார்" என்று பதில் மொழிந்தார். இவ்வாறு பதில் மொழிந்த சிறிது நேரத்தில், அவர் இறப்பெய்தவே, அவரைக் குளிப்பாட்டிக் கஃபனிட்டு நல்லடக்கம் செய்தார்கள் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

அப்பொழுது ஓர் இளவல் வந்து ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து "அபுல் காசிமே! என்னுடைய அமானிதம் எங்கே?" என்று வினவினார்.

"என்ன அமானிதம்? விவரமாகக் கூறுங்கள்" என்றார்கள் அவர்கள்.

அப்பொழுது அவர், "அபுல் காசிமே! நான் ஒரு கூட்டத்தில் இருந்தேன். அக்காலை அசரீரி ஒன்று, "ஜுனைதிடம் ஒரு போர்வை, ஒரு பிரம்பு, ஒரு குவளை ஆகியவை இருக்கின்றன. அவற்றைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளும். நீர் அப்தால்களின் பதவியில் நியமிக்கப்பட்டுள்ளீர் என்று முழங்கியது" என்று கூறினார்.

உடனே அவர்கள் தம்மிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த அமானிதப் பொருள்களை, அவரிடம் எடுத்துக் கொடுத்தார்கள். அவர் குளித்துத் தூய்மை பெற்று, அந்தப் போர்வையை அணிந்து கொண்டு சிரியா புறப் பட்டுவிட்டார்.

ஒரு தடவை அவர்கள் மார்க்கப் போர் செய்யச் சென்ற பொழுது, அவர்கள் சேர்ந்திருந்த படையணிக்கு அமீராக இருந்த ஹபீஷ் என்பவர், அவர்களின் மாண்பினையறியாது அவர்களின் செலவுக்குப் பணம் அனுப்பி வைத்தார். பெரும் மனப்போராட்டத்திற்குப் பின் அதனை ஏற்றுக் கொண்ட அவர்கள், அதில் தமக்காக ஒரு சிறிதும் பயன்படுத்தாது, தேவையுள்ளவர்களுக்கு அதனைப் பங்கிட்டளித்தனர். இந்நிகழ்ச்சியை அவர்கள் சின்னாட்களுக்குப் பின் நினைவு கூர்ந்து, தாம் செய்தது சரியா, தவறா என்று ஆய்ந்து கொண்டிருக்கும் பொழுது, அவர்களை உறக்கம் ஆட்கொண்டது. அதில் அவர்கள் கனவொன்று கண்டார்கள். அதில் வளமான சூழலில் அழகழகான மாளிகைகளைக் கண்டு வியப்புற்று, "இவை யாருக்காக நிர்மாணிக்கப்பட்டுள்ளன?" என்று ஆங்கிருந்தோரை வினவினர். "நீர் அன்று ஏழைகளுக்குப் பங்கிட்டீரே. அந்தப் பணத்தை எவர் உமக்கு அனுப்பி வைத்தாரோ, அவருக்கும் அவரைப் போன்றோருக்கும்' என்று பதில் வந்தது 'அவ்விதமாயின் எனக்கு ஒன்றுமில்லையா?" என்று அவர்கள் வினவினர். அப்பொழுது அவர்கள் அவற்றைவிட அழகிய, பெரிய மாளிகை ஒன்றை அவர்களிடம் சுட்டிக் காட்டி "இஃது உமக்கு" என்று கூறினர்.

அது கேட்டு அவர்கள் பெரிதும் வியப்புற்று "எனக்காக இத்துணைப் பெரிய அழகான மாளிகை நிர்மாணிக்கப்பட்டுள்ளதே. நான் அவர்களை விட எந்தவகையில் சிறந்தவன்?" என்று வினவினர். அதற்கு அவர்கள் "ஏனையோர் பலனை எதிர்பார்த்துப் பணத்தை அறவழியில் செலவு செய்தார்கள். நீரோ பயபக்தியுடனும் அது ஹலாலா, ஹராமா என்ற உள்ளச்சத்துடனும், அப்பணத்தைப் பெற்றுப் பங்கிட்டீர். அதற்காக அல்லாஹ் உமக்கான நற்பலனை, அவர்களுக்கான நற்பலனை விட இரட்டிப்பாக்கினான். ஒரு நற்பலன் உம்முடைய தக்வாவிற்காக (இறையச்சத்திற்காக), மற்றொரு நற்பலன் நீர் செய்த அறத்திற்காக" என்று பதில் கூறினார்கள்.

மற்றொரு தடவை ரோமப் பேரரசை எதிர்த்து நடத்தப்பட்ட மார்க்கப் போரில் அவர்கள் தம் தோழர்கள் எண்மருடன் சேர்ந்து வீரப் போர் செய்தனர். அப்பொழுது எதிரி அணியிலிருந்து மாமல்லர் ஒருவர் முன்வந்து, அவர்களின் தோழர்கள் எண்மரையும், ஒருவர் பின் ஒருவராக வெட்டி வீழ்த்தினார். அப்பொழுது அவர்கள் விண்ணை அண்ணாந்து பார்த்த பொழுது, அதில் ஒன்பது விண்ணூர்திகள் நிற்பதையும், அவற்றில் ஒவ்வொருவராகத் தம் தோழர்கள் ஏறிக் கொண்டதையும் கண்ணுற்றனர்.

பாக்கியாக நின்று கொண்டிருக்கும் விண்ணூர்தி, தமக்காகவே இருக்கும் என்ற எண்ணத்துடன் அவர்கள் அம்மாமல்லரை வீரத்துடன் எதிர்த்து நின்ற பொழுது, அவர், அவர்களை நோக்கி, '' அது உமக்காகக் காத்துக் கொண்டு நிற்க வில்லை. எமக்காகக் காத்துக் கொண்டு நிற்கிறது. நீர் முதலில் எனக்குக் கலிமாச் சொல்லிக் கொடும். அதன்பின் பக்தாது மீண்டு மக்களுக்கு அறிவுரை பகர்ந்து கொண்டிரும்'' என்று கூறினர்.

அது கேட்டுப் பெரிதும் வியப்புற்ற அவர்கள், அவர் வேண்டிக் கொண்ட வண்ணம் அவருக்குக் கலிமாச் சொல்லிக் கொடுக்கவே, அவர் அடுத்த கணம் சரேலெனப் போரணியிலே பாய்ந்து, தம் நாட்டினரான ரோமானியர்கள் பலரைத் தம் வாளுக்கு இரையாக்கித் தாமும் வீர மரணம் எய்தினார். அடுத்த கணம் அவருடைய ஆன்மா, அவருக்காக விண்ணிலே காத்து நின்ற வானவூர்தியிலே ஏறி, மற்றவற்றுடன் சேர்ந்து விண்ணைக் கிழித்துக் கொண்டு பறந்து சென்றதைக் கண்ட பொழுது, அவர்களுக்கு அவர்களின் கண்களையே நம்ப இயலவில்லை.

ஓரிரவு அவர்கள் படுத்துறங்கும் பொழுது, தீக்கனவு ஒன்று கண்டனர். எழுந்து 'உளூ'ச் செய்து தாம் வழக்கமாக ஓதிவரும் வஜீஃபாக்களை ஓதினர். அதிலும் அவர்கள் இன்பம் காணவில்லை. பின்னர் படுத்து உறங்க எண்ணினர். ஆனால், உறக்கமோ அவர்களின் கண்களிலிருந்து விடைபெற்றுச் சென்று விட்டது. பின்னர் எழுந்து உட்காரலாயினர். அதிலும் அவர்கள் அமைதி பெற்றார்களில்லை. எனவே வெளியே சென்று சற்று உலவி விட்டு வரலாமென்று புறப்பட்டார்கள்.

அப்பொழுது வழியில் போர்த்திக் கொண்டு படுத்திருந்த ஒருவர், அவர்களின் காலடிச் சப்தத்தைக் கேட்டதும் தலையை உயர்த்தி, ''அபுல்காசிமே! சற்று இங்கு வாரும்'' என்று கூறினார்.

அவ்வாறே அவர்கள் அவரிடம் சென்ற பொழுது,''அபுல்காசிமே! இதயங்களை மாற்றக் கூடிய அல்லாஹ்விடம், உம்முடைய கவனத்தை என்பால் திருப்புமாறு இறைஞ்சினேன். அவன் என்னுடைய இறைஞ்சு தலை ஏற்றுக் கொண்டான்'' என்று கூறினார்.

“தங்களுக்கு என்னால் என்ன ஆக வேண்டும்?” என்று வினயமாக வினவினார்கள் அவர்கள்.

அதற்கு அவர் ‘நஃப்ஸின் நோய்கள் எப்பொழுது நீங்கும்?” என்று வினவினார்.

“எப்பொழுது ஒருவனின் ஆத்மா, அவனுடைய தீய இச்சைகளுக்கு மாற்றம் செய்யுமோ, அப்பொழுது” என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

அப்பொழுது அவர் தம்மை நோக்கி, “கேட்டாயா அபுல் காசிம் கூறுவதை. நான் உனக்கு இதே பதிலை ஒரு முறையல்ல, இரு முறையல்ல, ஏழு முறை கூறினேன். எனினும், நீ ஏற்றுக் கொள்ள வில்லை. இதே கேள்வியை அபுல் காசிமிடமும் கேட்க வேண்டும் என்று கூறினாய். அவரிடமும் கேட்டு விட்டேன். அவரும் அதே பதிலையே கூறிவிட்டாரல்லவா?” என்று சொல்லி அவர் எழுந்து சென்று விட்டார். அவர் எவர் என்பதை அவர்கள் அறியவில்லை. அதன் பின்னரே அவர் களுக்கு மனஅமைதி ஏற்பட்டது. தம்முடைய அமைதியற்ற நிலைக்கு அவரே காரணம் என்பதை அவர்கள் விளங்கிக் கொண்டார்கள்.

உலக இச்சையை ஒருவன் எவ்வளவுதான் தன் உள்ளத்திலிருந்து விரட்டியடித்த போதினும், அது மீண்டும் மீண்டும் வந்து தன் கோர முகங்களை அவன்முன் காட்டும் என்பதை அவர்கள் நன்கறிந்திருந் தார்கள். எனவே, அவர்களின் மாணவர்களில் ஒருவர், தம்முடைய உடைமைகள் அனைத்தையும் அறவழியில் செலவழித்து விட அவர் களிடம் அனுமதி வேண்டியபொழுது, “அவ்விதம் செய்ய வேண்டாம். சிறிதளவை உமக்காக ஒதுக்கிவையும். ஏனெனில் பின்னர் ஒரு காலத்தில் உலக இச்சை உம்மிடம் தலை தூக்காதிருக்கும் என்று கூறுவதற்கு என்ன உறுதியுள்ளது?” என்று புகன்றார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் ‘ஹஜ்’ஜு செய்ய மக்கா சென்றிருந்த பொழுது, ஒருவர் அவர்களின் முன் ஐந்நூறு தீனார் அடங்கிய பணப்பையைக் கொண்டு வந்து வைத்து, அதனை ஏழைகளுக்கு அறம் செய்து வருமாறு கூறியபொழுது “உம்மிடம் மேற்கொண்டும் பணம் உள்ளதா?” என்று வினவினர் அவர்கள். அதற்கு அவர், “ஆம்; ஏராளமாக உள்ளது” என்று மறுமொழி பகரவே, “இன்னும் பொருளீட்ட வேண்டு மென்ற ஆசை உமக்கு உள்ளதா?” என்று அவர்கள் வினவிய பொழுது, “இல்லாமல் இருக்குமா?” என்று அவர் பதிலுரைத்தார். அப்பொழுது அவர்கள், “அவ்விதமாயின் இதற்கு நீரே எவரையும் விட அதிகம் உரிமையுள்ளவர்’ என்று கூறி அப்பணத்தை அவரிடமே திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

ஒரு நாள் அவர்கள் தம் மாணவர்கள் சூழ தியானத்தில் ஈடுபட்டிருக்கும் பொழுது தர்வேஷ் ஒருவர் அங்கு வந்து சேர்ந்தார். பயணக் களைப்புடன் அங்கு வந்து சேர்ந்த அவருக்கு, அவர்களின் மாணவர்கள் தம்மிடமிருந்த உணவைக் கொண்டு வந்து அவரின் முன் வைத்து, ''உண்ணுக! உண்ணுக!!'' என்று வேண்டி நின்றனர். ஆனால் அவரோ, ''நான் உண்ண இது மட்டும் போதாது. இன்ன, இன்ன பொருள்களெல்லாம் வேண்டும்'' என்று கூறினார். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''நீர் கடைத்தெருவுக்குத் தான் செல்ல வேண்டும், அங்குதான் அவை கிடைக்கும். நீர் கடைத் தெருவைச் சேர்ந்தவரேயன்றி, பள்ளிவாயிலையோ, தவமடத்தையோ சேர்ந்தவரல்ல'' என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் அபூஹம்ஸா (ரஹ்) அவர்கள், மக்காவிலிருந்து திரும்பி வந்த பொழுது, அவர்கள் பெரிதும் மெலிவுற்றிருப்பதைக் கண்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''தாங்கள் என்ன உண்ண விரும்புகிறீர்கள்?'' என்று வினவினர். அதற்கு அவர்கள், ''இறைச்சியைப் பொறித்துத் தாரும்; இனிய பண்ணியங்களும் தாரும்'' என்று கூறினர்.

உடனே ஜுனைத் (ரஹ்) அவர்கள், பத்து இராத்தல் இறைச்சியை வாங்கிப் பொறித்து, அத்துடன் ஏராளமான பண்ணியங்களையும் தயார் செய்து அவர்களின் முன் வைத்து, ''உண்ணுக! '' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றனர்.

பின்னர் வந்து பார்த்த பொழுது அபூஹம்ஸா (ரஹ்) அவர்கள், தம் முன் வைக்கப்பட்ட அவ்வளவு உணவையும் உண்டு முடித்திருப்பதைக் கண்டு, ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. இதனை அவர்களின் முகக் குறியால் விளங்கிக் கொண்ட அபூஹம்ஸா (ரஹ்) அவர்கள் ''அபுல்காஸிமே! வியப்புறாதீர். நான் மக்காவிலிருந்து புறப்பட்ட பின் இதுதான் நான் மூன்றாவது தடவை ஆணவருந்துவதாகும்'' என்று கூறினர்.

தீய இச்சைகளை எதிர்த்து நிற்பதோடல்லாது, இறைவன் விட்ட விதியைப் பொறுமையோடு ஏற்றுக் கொள்வதும் சிறந்த பண்பு என்று அவர்கள் கருதினார்கள். ஒரு நாள் தர்வேஷ் ஒருவருக்கு உணவு கிடைக்க வில்லை. பட்டினியால் துன்புற்ற அவர், அவர்களிடம் வந்து தம் வறிய நிலையை எண்ணிப் புலம்பினார். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''வறுமை என்பது இறைவன் தன்னுடைய மெய்யடியார்களான மகான்களுக்கு அருளும் அருட்பெரும் கொடையாகும். அதைப்பற்றி நீர் குறை கூறிப் புலம்பிக் கொண்டுள்ளீர். ஆனால் அல்லாஹ்வின் மெய்யடியார்களான அந்த மகான்களோ, வறுமை

ஏற்படும் பொழுது ஒரு சிறு முணுமுணுப்புக் கூடச் செய்ய மாட்டார்கள். ஆதலின் நீர் இங்கு நிற்க வேண்டாம். சென்று விடும். அல்லாஹ் உம்மை நிரந்தர மாக உணவு, உடையின்றித் தவிக்க விட மாட்டான் என்பதை மறந்து விடாதீர்'' என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் நோயுற்ற தர்வேஷ் ஒருவரைக் காணச் சென்றனர். அப்பொழுது அவர் அழுது கொண்டிருந்தார். அது கண்ட அவர்கள் அவரை நோக்கி, ''உமக்கு இந்த நோயைத் தந்தவன் யார்? நீர் எவரிடம் முறையிட்டுக் கொண்டுள்ளீர்?'' என்று வினவினர். அவர் யாதும் கூறாது மௌனம் சாதித்தைக் கண்ட அவர்கள், ''உம்முடைய பொறுமையின்மை எதைக் காட்டுகின்றது?' என்று வினவினர். தர்வேஷ் நீண்ட பெருமூச்சு விட்டு, ''என்னால் அழுது கண்ணீர் வடிக்கவும் இயலவில்லை. துன்பத்தைத்தாங்கிக் கொள்ளவும் இயலவில்லையே. என் செய்வேன்?'' என்று கூறித் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தினார்.

இதன் பின் ஒருதடவை அவர்களுக்குக் கடுமையான நோய் ஏற்பட்ட பொழுது, வேதனை தாங்க இயலாது. ''இறைவனே! எனக்கு நலன் நல்குவாயாக!'' என்று தம்மை அறியாமல் அலறி விட்டார்கள். அப் பொழுது இறைவன் அவர்களை நோக்கி, ''அபுல் காசிமே! நாம் உமக் களித்த துன்பத்தை நீர் பொறுமையுடன் தாங்கிக் கொள்ளவில்லையாயின், நீர் நம்மைச் சேர்ந்தவரல்லர்'' என்று அருள் எச்சரிக்கை செய்ததும், அவர்கள் தாம் செய்த தவறுக்கு இறைவனிடம் மன்னிப்புக் கோரினார்கள்.

பிறிதொரு நாள் ஜஃபர் இப்னு நுஸைர் (ரஹ்) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களைக் காணச் சென்ற பொழுது, அவர்கள் கடுமையான காய்ச்சலால் துன்புற்றுக் கொண்டிருப்பதைக் கண்டு ''ஷைகு அவர்களே! தங்களுக்கு நலன் நல்குமாறு இறைவனிடம் இறைஞ்சக் கூடாதா?'' என்று வினவினர்.

அதற்கு அவர்கள், ''சென்ற இரவு இறைவனிடம் இறைஞ்சத்தான் எண்ணினேன். ஆனால் அசரீரி ஒன்று, ''உம்முடைய உடல் எனக்குச் சொந்தமானதாகும். அதனை நாம் விரும்பிய வண்ணம் நலமாகவோ, நோயுற்ற நிலையிலோ வைத்திருப்போம். எமக்கு உரிமையான ஒரு பொருள் பற்றித் தலையிட நீர் யார்?' என்று வினவியது. நான் அயர்ந்து விட்டேன்'' என்று பதிலிறுத்தார்கள்.

ஒருநாள் அவர்கள் தவம் செய்வதற்காகக் கானகம் சென்றார்கள். அப்பொழுது அவர்களின் மாணவர் ஒருவரும் அவர்களுடன் சென்றார். கடுமையான வெயில் காய்ந்ததன் காரணமாக, அவரின் மூக்கிலிருந்து இரத்தம் வெளிவந்தது. அப்பொழுது அவர் ''என்ன சூடு! என்ன சூடு!!''

என்று அலறினார். அது கேட்ட அவர்கள் ''நீர் இறை செயலைக் குறித்தா குறை கூறுகின்றீர்? என்னை விட்டுப் போய்விடும்'' என்று சினமொழி பகர்ந்தார்கள்.

அவர்களின் ஆன்மீக முன்னேற்றமும், அவர்கள் இறைவன்பால் கொண்டிருந்த அளப்பரும் நம்பிக்கையும், பிறரை அவர்கள் பாலும், பிற மதத்தினரை இஸ்லாத்தின் பாலும் இழுத்து நின்றன. அவர்களுக்கு ஒரு தடவை கண் நோய் ஏற்பட்ட பொழுது, அதனை அவர்கள் ஒரு கிறிஸ் துவ மருத்துவரிடம் காட்டினார்கள். அவரோ கண்ணில் தண்ணீர்படக் கூடாதென்றும், பட்டால் நோய் அதிகரித்து விடும் என்றும் கூறினார்.

ஆனால் அவர்களோ, அவர் கூறியதைச் சற்றேனும் பொருட்படுத் தாது 'உளூச்' செய்து வழக்கம் போல் தொழுதார்கள். அதன்பின் சற்று நேரம் படுத்துறங்கினர். அவர்கள் விழித்தெழுந்தபொழுது, அவர்களின் கண்கள் முற்றிலும் நலன் பெற்றிருந்தன.

அதுகண்ட அம்மருத்துவர் பெரிதும் வியப்புற்று, ''இது எவ்வாறு நிகழ்ந்தது?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''இறைவன் என்னை நோக்கி 'அபுல் காசிமே! நீ என் பொருத்தத்தைப் பெரிது கண்டு, மருத்துவரின் சொல்லைப் புறக்கணித்தாய். அதன் காரணமாக உன் கண் நோயை நீக்கி விட்டேன்'' என்று கூறினான்'' என எடுத்துரைத்தார்கள்.

அப்பொழுது அந்த மருத்துவர், ''நோய் என்னுடைய இதயத்தில் தான் இருந்தது. தங்களின் கண்களில் இல்லை. நானோ பலவீனமான மனிதன்; மருத்துவனல்ல. மாபெரும் மருத்துவனாகிய இறைவனே தங்களுக்குச் சிகிச்சையளித்தான். தாங்கள் இறையருள் பெற்ற நல்லடி யாரே யன்றி வேறில்லை. தங்களின் மார்க்கமே மேலான மார்க்கம்'' என்று கூறி இஸ்லாத்தைத் தழுவினார்.

ஒரு தடவை அவர்கள் பக்தாதின் கிழக்குப் பகுதியிலுள்ள 'பாபு தர்க்' வாசலில் அழகே உருவெடுத்தாற் போன்ற ஓர் அழகிய கிறிஸ்தவ இளவலைக் கண்டதும் வியப்புற்று, ''இறைவனே! எனக்காக வேண்டி இவனை நீ மன்னிப்பாயாக! நீ இவனை மிகவும் அழகாகப் படைத் துள்ளாய்'' என்று இறைஞ்சினர். சற்று நேரம் கழித்து, அவ்விளவல் அவர்களிடம் வந்து, இஸ்லாத்தைத் தழுவி இறைநேசச் செல்வர்களில் ஒருவராக ஆகிவிட்டார்.

மற்றொரு நாள் அஹ்மது இப்னு யஹ்யா அல் ஜல்லா (ரஹ்) அவர்கள் ஒரு வழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, ஓர் அழகிய

கிறிஸ்துவ இளவலைக் கண்டு மெய்மறந்து, அவனையே பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தனர். அப்பொழுது அவ்வழியே ஜுனைத் (ரஹ்) அவர்கள் செல்வதைக் கண்டதும், ''ஷைகு அவர்களே! இத்தகு அழகு முகத்தை இறைவன் தீயில் எரியச் செய்வானா?'' என்று வினவினார்கள்.

அதற்கு ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''மகனே! இது தோலின் ஏமாற்று வித்தையாகும். நீர் ஆராய்ச்சி மனோ நிலையுடன் ஓர் அணுவை நோக்கிய போதினும், அதிலும் நீர் அற்புதத்தைக் காண்பீர். அவ்விதம் நீர் செய்யாததன் காரணமாக, நீர் இறை தண்டனைக்கு ஆளாவீர்'' என்று கூறினார்கள்.

இவ்வாறு அவர்கள் கூறிவிட்டுச் சென்றதுதான் தாமதம், அஹ்மது இப்னு யஹ்யா அல்ஜல்லா (ரஹ்) அவர்களுக்குக் குர்ஆனே மறந்து விட்டது. தாம் செய்த பாவச் செயல்களுக்காக இறைவனிடம் இறைஞ்சிப் பாவ மன்னிப்புக் கோரிய பொழுதுதான், அது பல்லாண்டுகளுக்குப் பின் அவர்களுக்கு மீண்டும் நினைவுக்கு வந்தது. இதன்பின் அவர்கள் படைக்கப்பட்ட பொருள்களைப் பற்றி அக்கறை செலுத்தவோ, அவற்றை பார்த்துக் கொண்டிருப்பதில் தம் நேரத்தை வீணாக்கவோ செய்யத் துணியவில்லை.

வேறொரு நாள் ஒருவர் அவர்களை அணுகி ''நான் என்னுடைய மனத்திற்குக் கிறிஸ்தவர்களின் தவறான கோட்பாடுகளை நேரில் உணர்த்துவதற்காகவும், நம்முடைய மார்க்கத்தின் மாண்பினை உணர்ந்து, இறைவனுக்கு நன்றி செலுத்துவதற்காகவும் மாதா கோவிலுக்குச் சென்று வரலாமா?'' என்று வினவிய பொழுது, ''நீர் மாதா கோவிலுக்குச் சென்று, அங்குள்ள கிறிஸ்தவர்களில் சிலரை இஸ்லாத்தின் பால் இழுத்துவர உம்மால் இயலுமாயின், அங்கு செல்லும். இல்லையெனில் வேண்டாம்'' என்று அவர்கள் கூறினர்.

ஒரு தடவை அவர்கள் 'தூர்' மலைச்சாரலில் சில பக்கீர்களுடன் பயணம் செய்தபொழுது, அவர்கள் ஓரிடத்தில் சில நாட்கள் தங்கி இருந்தனர். அவர்களில் ஓர் இசைவாணரும் இருந்தார். அவர் சில பொழுது பேரின்பப் பாடல்களைப் பாடுவார். அது கேட்டு அனைவரும் தன்னுணர்வற்று ஆடுவார்கள். ஒருநாள் இதனை அண்மையிலிருந்த மடத்திலிருந்த துறவி ஒருவர் இமை கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

''அல்லாஹ்வின் மீது ஆணையாக, உண்மையான மார்க்கத்தினரே! இங்கு வாருங்கள்'' என்று அவர்களை அழைத்தார்.

ஆனால் அவர்கள் அனைவரும் தன்னுணர்வற்று மயங்கிக் கிடந்ததனால், அவர் அழைத்தது ஒன்றும், அவர்களின் செவியேறவில்லை. சற்று நேரம் கழித்து அவர்கள் தன்னுணர்வு பெற்று எழுந்து அமர்ந்த பொழுது, அந்தத் துறவி அவர்களிடம் வந்து, ''உங்களின் தலைவர் யார்?'' என்று வினவினர். அனைவரும் ஜுனைத் (ரஹ்) அவர்களைக் காட்டினர்.

அப்பொழுது அவர், அவர்களை நோக்கி, ''ஷைகு அவர்களே! சற்றுமுன் தாங்கள் பாடவும் ஆடவும் செய்தீர்களே, அது தங்களுக்கு மட்டும் சொந்தமானதா? எல்லாருக்கும் பொதுவானதா?'' என்று வினவினார்.

''முஸ்லிம்களாகிய எங்களுக்கு மட்டும் சொந்தமானது'' என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

''அதனை எவ்வாறு எய்தப் பெறுவது?'' என்று வினவினார் அவர்.

''பற்றற்ற தன்மையாலும், பேணுதலாலும் அதனை எய்தப் பெற வேண்டும்'' என்று மறுமொழி பகர்ந்தார்கள் அவர்கள்.

அது கேட்ட அவர், ஜுனைத் (ரஹ்) அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவி, ''நான் இதனை இஞ்சீலில் பார்த்தேன்.அதில் இறுதித் திரு நபியைப் பின்பற்றுபவர்கள் பேணுதலுடன் இருப்பார்கள். உலக இன்பங்களை அளவோடு நுகர்வார்கள். அவர்கள் பேரின்ப இசை நிகழ்ச்சியில் சொக்கி மயங்கித் தன்னுணர்வற்று ஆடுவார்கள்'' என்று அதில் பொறிக்கப்பட்டுள்ளது'' என்று கூறினார்.

மாபெரும் இறைநேசச் செல்வராகிய அவர்கள், மக்களின் உள்ளங்களை இறைவனின் பேரொளியின் மூலம் ஊடுருவிப் பார்த்தறியும் ஃபிராஸா என்ற அபூர்வ ஆற்றல் பெற்றவர்களாகவும் விளங்கினர். இதனையே இறைவனும் தன் திருமறையில் ''நாம் விரும்பினால் நீர் அவர்களை (நயவஞ்சகர்களை) பார்க்குமாறு செய்வோம். அவர்களின் முகக்குறியைக் கொண்டே நீரும் அறிந்து கொள்வீர்'' (47: 30) என்று கூறுகின்றான்.

ஒருநாள் அவர்களின் முன் வந்தமர்ந்த அழகிய இளவல் ஒருவர் அவர்களை நோக்கி, ''ஷைகு அவர்களே! ஒருவரின் இறைநம்பிக்கை அதிகப்பட அதிகப்பட, அவரின் ஃபிராஸாவும் அதிகப்படுகிறது என்று கூறப்படுகிறதே. அதன் பொருள் யாது?'' என்று வினவினார்.

அதுகேட்டுச் சற்றுச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவர்கள் தம் தலையை நிமிர்த்தி, ''கிறிஸ்தவரே! நீர் இஸ்லாத்தைத் தழுவும். அதற்கான நேரம் வந்துவிட்டது'' என்று கூறினர்.

உடனே அவர் தம் உள்ளத்தில் மறைத்து வைத்திருந்த கிறிஸ்தவ மதத்தை, அவர்கள் அல்லாஹ்வின் ஒளிபெற்ற கண்களால் ஊடுருவிப் பார்த்து விளங்கிக் கொண்டதைக் கண்டு, வியப்புற்றுத் தாம் கேட்ட விளக்கம், அவர்கள் கூறாமலேயே தமக்குக் கிடைத்துவிட்டதையும் கண்டு புளாங்கிதமுற்று அக்கணமே இஸ்லாத்தைத் தழுவினர்.

மற்றொரு நாள் ஓர் இளவல் அவர்களிடம் வந்து, ''என்னுடன் ஒரு நிமிடம் இருங்கள். நான் தங்களுடன் சிறிது பேச விரும்புகிறேன்'' என்று கூறினார். அதற்கு அவர்கள் ''இளைஞரே! நான் பல்லாண்டுகளாக என்னுடன் ஒரு நிமிடம் இருக்க முயன்றும், என்னால் இயலவில்லையே, எவ்வாறு நான் உம்முடன் ஒரு நிமிடம் இருப்பேன்'' என்று பதிலிறுத்தார்கள்.

மற்றொருவர் அவர்களை அணுகி ''என் மீது அருட்கண் பார்வை படுமாறு என்னைச் சற்றுப் பாருங்கள்'' என்று வேண்டினார். அதற்கு அவர்கள், ''கடந்த இருபது ஆண்டுகாலமாக நான் இறைவனைக் கண்ணால் காண்பதற்காக மனப்பூர்வமாக விரும்பி முயன்று கொண்டுள்ளேன். எனினும் வெற்றி பெறவில்லை. அவ்விதமிருக்க நான் உம்மை எவ்வாறு பார்ப்பது?'' என்று பதில் மொழிந்தார்கள்.

இவ்வாறு ஒரு காலத்தில் கூறிய அவர்களின் மனோநிலை, பிற்காலத்தில் பெரிதும் மாறுதலடைந்தது. ஒருவர் அவர்களிடம் வந்து ''தாங்கள் இறைவனைப் பார்க்க விரும்புகின்றீர்களா?'' என்று வினவிய பொழுது, அடுத்த கணமே அவர்கள் 'இல்லை' என்று மறுமொழி பகர்ந்தனர். அதுகேட்டு வியப்புற்ற அவர்'' என்ன இவ்வாறு கூறுகின்றீர்கள்? முன்பெல்லாம் இறைவனைப் பார்க்க முயன்று கொண்டிருப்பதாகக் கூறிக் கொண்டிருந்தீர்களே'' என்று வினவினார். அதற்கு அவர்கள், ''மூஸா (அலை) அவர்கள் இறைவனைப் பார்க்க விரும்பிய பொழுது, அவர்களால் அவனைப் பார்க்க இயலவில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அவனைப் பார்க்க விரும்பாத பொழுது, அவர்கள் அவனைப் பார்த்தார்களல்லவா?'' என்று பதில் மொழிந்தார்கள்.

தம் பேச்சுவன்மையால் மக்களுக்கு அறிவொளியை, ஆன்மீக ஒளியை அளித்து வந்த அவர்கள் நாளடைவில் தமக்கு எதிர்ப்பு மிகவே, சொற்பொழிவாற்றுவதையே அடியோடு விட்டொழித்தார்கள். அவர்களின் மாணவர்கள் அவர்களை மேடை மீதேறிச் சொற்பொழிவாற்றுமாறு எவ்வளவோ வேண்டியும், ''மாட்டேன் மாட்டேன், என்னுடைய அழிவுக்கு நானே வித்திட மாட்டேன்'' என்று பதில் கூறி விட்டார்கள்.

பின்னர் ஒரு நாள் அவர்களாகவே மேடை மீதேறிச் சொற்பொழி வாற்றத் துவங்கியதைக் கண்ட மக்கள் பெரிதும் வியப்புற்று, அதற்கான காரணத்தை வினவிய பொழுது, ''இன்று நான் ஒரு நபிமொழியைப் படித்தேன். அதில் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் 'உலக முடிவு நாள் அண்மிய பொழுது, மக்களின் தலைவர்களாக, அவர்களில் இழிந்தவர் களே ஆவார்கள். அவர்களே அவர்களுக்கு அறிவுரை பகர்வார்கள்' என்று கூறியுள்ளார்கள். நான் மக்களின் இழிந்தவன் என்பதை நன்கறிவேன். எனவே அந்நபிமொழிக்கு மாறு செய்யக் கூடாது என்பதற்காக இன்று மேடை மீதேறிச் சொற்பொழிவாற்றலானேன்'' என்று பதிலிறுத்தார்கள்.

ஒருநாள் அவர்கள் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கும் பொழுது, எழுபது வயது நிரம்பப் பெற்ற ஒருவர் அவர்களை நோக்கி, ''தங் களுடைய பேச்சை என்னால் புரிந்து கொள்ள இயலவில்லை'' என்று கூறினார். உடனே அவர்கள் ''நீர் உம்முடைய எழுபதாண்டு வணக்கத்தை உம்காலின் கீழ் வைத்து நசுக்கி, தாழ்மையுடன் தலைகுனிந்து அமர்ந்து கேட்பின், உமக்கு நான் பேசுவது நன்கு புரியும். அதுவரை உமக்குப் புரியாது தான்'' என்று பதிலிறுத்தார்கள்.

பயபக்தியுடன் தம் பேச்சைக் கேட்க எவரும் வரின், அவர் தம் பேச்சை விளங்கினாலும் சரி, விளங்காவிட்டாலும் சரி, அவரின் பய பக்திக்கான பலன் நிச்சயம் கிடைக்கும் என்று அவர்கள் கருதினார்கள். எனவே ஒரு தடவை அவர்கள் மக்களை நோக்கி, ''நீங்கள் இங்கு வந்து நான் கூறும் அறிவுரைகளைச் செவிமடுக்கிறீர்கள். எனினும் அவற்றை உங்களால் புரிந்து கொள்ள இயலவில்லை. எனினும், புரிந்து கொண்டது போன்று தலையை அசைக்கிறீர்கள். நியாயத் தீர்ப்பு நாளின் போது இறைவன் உங்களை நோக்கி, ''நீங்கள் யார்?'' என்று வினவ, நீங்கள் அதற்கு, ''நாங்கள் ஜுனைத் சொற்பொழிவாற்றும் பொழுது தலையை அசைத்துக் கொண்டிருந்தவர்கள் என்று கூறின், இறைவன் உங்களின் பவம் பொறுத்தருள்வான்'' என்று கூறினார்கள்.

ஒருநாள் அவர்களின் பேச்சைக் கேட்டு கொண்டிருந்த ஓர் இளவல், அதனால் பெரிதும் ஈர்க்கப்பட்டு, தம் அனைத்துச் செல்வங்களையும் ஏழை, எளியவர்களுக்கு வாரி வழங்கிவிட்டு, அவற்றில் எஞ்சியிருந்த ஆயிரம் பொற்காசுகளை அவர்களுக்குக் காணிக்கை நல்குவதற்காகக் கொண்டு வந்து கொண்டிருந்தார். அப்பொழுது மக்கள் அவரை நோக்கி, மாபெரும் மகானாகிய அவர்கள் உலக மாயையில் மூழ்கி அவற்றை ஏற்றுக் கொள்வார்கள் என்று எண்ணி அவர்களிடம் அவற்றைக் கொண்டு செல்கின்றீரோ?'' என்று வினவினர். அதுகேட்ட அவர், அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து ஆற்றில் வீசி எறிந்துவிட்டு, அவர்களிடம்

வந்தார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''நீர் நம்முடன் இருக்கத் தகுதியற்றவராகி விட்டீர். ஒரேயடியாக அவற்றை தூக்கி எறிந்துவிட்டு வராது ஒவ்வொன்றாக எடுத்து எறிந்துவிட்டு வருகிறீரே, இது என்ன துறவு?'' என்று வினவினார்கள்.

அவர்கள் உயரிய பண்பாளராகவும் விளங்கினர். அபூ முஹம்மது ஹுரைரி என்ற பெரியார் 'ஹஜ்'ஜு செய்து விட்டு பக்தாது மீண்டதும், ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம்மைச் சந்திக்க வருவதற்கு முன், தாம் முதலில சென்று அவர்களைச் சந்தித்துவிட வேண்டுமென்று எண்ணி, அவர்களை அவர்களின் இல்லம் சென்று சந்தித்து மகிழ்ந்தனர். ஆனால் அடுத்த நாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள் அபூ முஹம்மது ஹுரைரி அவர்களின் இல்லத்திற்கு வந்தபொழுது, ''ஷைகு அவர்களே! ஏன் வீண் சிரமத்தை மேற்கொண்டீர்கள்? தங்களுக்கு சிரமம் தரக்கூடாதென்று எண்ணித்தானே நான் முந்திக்கொண்டு தங்களைக் காண வந்தேன்'' என்று கூறினர். அதற்கு ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''அது தங்களின் பெருந்தன் மையைக் காட்டுகின்றது. தங்களின் பெருந்தன்மை என்மீது விதித்துள்ள கடமையை நான் ஆற்றவேண்டாமா?'' என்று மறுமொழி பகர்ந்தனர்.

ஒருநாள் அவர்கள் ஒரு வழியே சென்று கொண்டிருந்த பொழுது , திருட்டுக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவன் தூக்கிலிடப்பட்டிருப்பதைக் கண்டதும், உடனே அவனை அணுகி, அவனுடைய பாதங்களை முத்த மிட்டனர். அதுகண்டு ஆங்குக் குழுமியிருந்த அனைவருக்கும் ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. அதற்கான காரணத்தை அவர்கள் வினவிய பொழுது ''நான் அவன் மீது இரங்குகிறேன். அவன் தன் தொழிலில், தன் முழுக்கவனத்தையும் செலுத்தினான். தன் தொழிலைத் திறம்படச் செய்தான். அதற்காகத் தன் இன்னுயிரையும் தியாகம் செய்தான். எனவேதான் நான் அவனின் பாதங்களை முத்தமிட்டேன்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

ஓரிரவு அவர்களின் இல்லத்திற்கு ஒரு கள்வன் வந்து, அங்கு ஒரு சட்டையைத் தவிர்த்து வேறொன்றையும் காணாது, அதனைத் திருடிச் சென்றான். அடுத்த நாள் மாலை ஜுனைத் (ரஹ்) அவர்கள் கடைத் தெருவில் சென்று கொண்டிருந்தார்கள். அக்கள்வன் அதனை ஒரு கடைக்காரனிடம் விலை பேசிக்கொண்டிருக்கவும் ''அது உன் சட்டை தான் என்று சான்று பகர ஒருவரை நீ அழைத்துவரின் நான் அதனை வாங்கிக் கொள்கிறேன்'' என்று கடைக்காரன் கூறவும் கேட்டு, உடனே உள்ளே நுழைந்து ''நான் அச்சட்டை அவருடையது தான் என்று சான்று பகர்கிறேன்'' என்று கூறினார்கள். அதுகேட்டு விலையைக் கொடுத்து அச்சட்டையை வாங்கிக்கொண்டான்.

மற்றோர் இரவில் ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் வணக்க அறையில் அமர்ந்து வணக்கம் நிகழ்த்திக்கொண்டிருந்தார்கள். தன் இளம் வயது முதற்கொண்டே கொள்ளையையும் கொலையையுமே தொழிலாகக் கொண்ட இப்னு ஸாபாத் என்பவன் சிறையிலிருந்து தப்பி, அவர்களின் இல்லத்தில் களவு செய்தவற்காக வந்து சேர்ந்தான். அங்கு எங்கு தேடினும், கம்பளிப் போர்வைகளைத் தவிர்த்து, வேறொன்றையும் காணாது எரிச்சலுற்ற அவன், அவற்றையாவது ஒன்று சேர்த்து மூட்டை கட்டிச் செல்லலாமென்று எண்ணினான். ஆனால், அவன் முன்னர் களவு செய்ததற்காக, அவனுடைய கையொன்று வெட்டப்பட்டிருந்ததன் காரணமாக அவன் எவ்வளவுதான் முயன்றபோதினும், அவனால் அவற்றை ஒன்று சேர்த்து மூட்டை கட்டி முடிச்சுப் போட இயலாது போய் விட்டது.

என் செய்வது என அறியாது அவன் தயங்கி நின்ற பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்கள், கையில் விளக்குடன் அவன்முன் வந்து, ''அன்புள்ள நண்பரே! கவலைப்படவேண்டாம். நான் அவற்றை மூட்டை கட்டித் தருகிறேன். தாங்களோ பெரிதும் அயர்ந்து விட்டீர்கள். சற்றுத் தலையணையில் சாய்ந்து கொண்டிருங்கள். தங்களுக்குக் களைப்பின் காரணமாகப் பசியாக இருக்கலாம். சிறிது பால் கொண்டு வருகிறேன். அருந்திக்களைப்புத் தீருங்கள்'' என்றுக் கூறிச் சிறிது பால் கொண்டு வந்து கொடுத்தார்கள். அதனை அவன் அருந்திக் கொண்டிருந்த பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவற்றை இரு மூட்டைகளாக, ஒன்றைப் பெரிதாகவும், மற்றொன்றைச் சிறிதாகவும் கட்டினார்கள்.

அப்பொழுது இப்னு ஸாபாத், ஜுனைத்(ரஹ்) அவர்களை, அவ் வீட்டில் களவெடுக்க வந்த மற்றொரு திருடன் என எண்ணிக்கொண்டு, ''நானே இவ்வீட்டிற்கு முதலில் வந்தவனாதலால் எனக்கே இப்பொருள் அனைத்தும் சொந்தம். எனினும் உமக்கு இதில் ஒரு சிறு பங்கு தருகிறேன். இதற்கு நீர் இணங்கின் நாம் இருவரும் நண்பர்களாக எப்பொழுதும் வாழ்ந்து வரலாம்'' என்று கூறினான்.

அதுகேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''அன்புள்ள நண்பரே! ஏன் இதுபற்றி மனத்தை வீணே அலட்டிக் கொள்கிறீர். பங்குபற்றி நான் இப்பொழுது யாதும் கூற விரும்பவில்லை. நாம் இருவரும் இப்பொழுது போன்று எப்பொழுதும் நண்பர்களாயிருப்போம். பெரிய மூட்டையைத் தங்களால் தூக்க இயலாது. அதனை நான் தூக்கி வருகிறேன். தாங்கள் சிறிய மூட்டையைத் தூக்கிக்கொள்ளுங்கள்'' என்று கூறினர்.

அவ்வாறே இருவரும் தூக்கிக்கொண்டு நடக்குங்கால், பளுதாங்க இயலாது, பல தடவை ஜுனைத் (ரஹ்) அவர்கள் தடுமாறினர். அதன்

காரணமாக மெதுவாக அடியெடுத்து வைத்து நடந்து வந்தார்கள். அது கண்டு அவன் ''விரைவில் வாரும், விரைவில் வாரும்'' என்று கூறினான். அவர்கள் தடுக்கிக் கீழே வீழ்ந்தபொழுது, அவர்கள்மீது வசைமாரி பொழிந்தான்.

இறுதியாக இப்னு ஸாபாத் வாழ்ந்து வந்த பொதும்பை இருவரும் அடைந்து விட்டார்கள். ஜுனைத் (ரஹ்) அவர்கள், தம் முதுகின் மீது சுமந்து வந்த கம்பளி மூட்டையை இறக்கி வைத்து ''அன்புள்ள நண்பரே! என் கடமை முடிந்துவிட்டது. நான் சென்று வருகிறேன். நாம் இருவரும் இனி என்றென்றும் நண்பர்களாக இருப்போம். என் உதவி தேவைப்படின் என் வீட்டிற்கு வாருங்கள். என் வீடு இருக்கும் இடம் தான் இப்பொழுது தங்களுக்கு நன்றாகத் தெரியுமே'' என்று கூறி, ''இறைவன் தங்கள்மீது அருள்பாலிப்பானாக' என்று வாழ்த்திவிட்டு அவ்விடத்தை விட்டும் அகன்றனர்.

அவர்களின் இச்சொல் இப்னு ஸாபாத்தின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியது. அவனுடைய மூளை குழம்பியது. 'என்ன இது? கனவா அல்லது நனவா' என்று அலறினான். அவனால் தான் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழ இயலவில்லை. கற்சிலைபோல் அவன் அவ்விடத்தி லேயே காலை வரையிலுமல்ல, நண்பகல் வரை வீற்றிருந்தான்.

பின்னர் அவனுடைய கால்கள் அவன் இரவு களவுசெய்த இல்லத்தை நோக்கி, அவனை இழுத்துச் சென்றன. அவ்வில்லத்தின் அண்மையில் இருந்த ஒரு விறகு வெட்டியின் சிறுகுடிலை அடைந்து, 'அடுத்த வீட்டில் வாழும் வணிகர் யார்?' என்று வினவினான். ''வணிகரா அவர்கள்? இறைநேசச் செல்வர் ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர் களல்லவோ அவர்கள்'' என்று வியப்புடன் பதில் கூறினான் அவ்விறகு வெட்டி.

அவ்வளவுதான். இப்னு ஸாபாதின் தலை சுழன்றது, கீழே விழும் நிலையில் ஆனான் அவன். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் தொழுவதற்காகப் பள்ளி செல்வதற்கு வெளியே வந்தனர். அவர்களைக் கண்டதும், அவனால் அவர்களை ஏறிட்டுப் பார்க்க இயலவில்லை. அவர்களின் கால்களில் வீழ்ந்து அவற்றைத் தம் கண்ணீரால் கழுவினான்.

ஜுனைத்(ரஹ்) அவர்கள் அவனைத்தூக்கி மார்போடணைத்து அவனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று தொழச் செய்து, அவனுக்காக இறைவனிடம் இறைஞ்சினர். மாபெரும் கள்வர் தலைவன். நாற்ப தாண்டுகளாகச் சிறைத் தண்டனையை நுகர்ந்த இப்னு ஸாபாத், ஒரு நொடியில் அல்லாஹ்வின் நல்லடியார் ஷைகு அஹ்மது இப்னு ஸாபாத்

(ரஹ்) ஆக மாறி விட்டார். அவரைப் பற்றி ஜுனைத் (ரஹ்) அவர்கள் கூறும் பொழுது, "பல்லாண்டுகள் பெருமுயற்சி செய்தும் பெற இயலாத மகத்தான பேற்றினை இப்னு ஸாபாத் ஒரு கணத்தில் பெற்று விட்டார்" என்று கூறினர்.

ஒருநாள் ஒருகிழவி ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் வந்து, தன் மகன் காணாமல் போய்விட்டான் என்றும், அவன் இல்லம் திரும்பி வருமாறு இறைவனிடம் இறைஞ்சுமாறும் வேண்டினாள். பொறுமையை மேற் கொள்ளுமாறு அவர்கள் ஆலோசனை கூறினார்கள். பல நாட்கள் கழித்து அவள் மீண்டும் அவர்களிடம் வந்து தன் மகன் இன்னும் இல்லம் திரும்ப வில்லை என்று கூறி முறையிட்டாள். மீண்டும் பொறுமையை மேற் கொள்ளுமாறு அவர்கள் ஆலோசனை பகர்ந்தார்கள். இவ்வாறு பல தடவை நிகழ்ந்தது. இறுதியாக அவள் ஒரு நாள் அவர்களிடம் வந்து, "அடிகளாரே! பொறுத்திருந்து பொறுத்திருந்து என் பொறுமைக்கும் முடிவேற்பட்டு விட்டது. இனிமேல் என்னால் பொறுத்திருக்க இயலாது. எனவே எனக்காக இறைவனிடம் இறைஞ்சுங்கள்" என்று கண்ணீரும் கம்பலையுடன் கூறினாள். 'நீ கூறுவது உண்மையானால் உன் மகன் திரும்பி வந்து விட்டான். நீ உடனே இல்லம் திரும்பு" என்று அவர்கள் கூறினர். என்ன வியப்பு! அவள் இல்லம் திரும்பிய பொழுது, அவளின் மகன் தன் இல்லத்தில் வீற்றிருப்பதைக் கண்டு, அவள் புளகாங்கித முற்றாள். இதன் பின் அவள் ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் வந்து தம் மகன் வந்த மகிழ்வுச் செய்தியை எடுத்துரைத்துத் தன்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள்.

அப்பொழுது ஆங்கிருந்த ஒருவர் ஜுனைத் (ரஹ்) அவர்களை நோக்கி, "தங்களுக்கு எவ்வாறு அவளின் மகன் இல்லம் திரும்பியது தெரிய வந்தது?" என்று வினவினார்.

அதற்கு அவர்கள் புன்முறுவல் பூத்த வண்ணம், "அவளின் பொறுமை ஒரு முடிவுக்கு வந்து விட்டதையும், அவள் உள்ளம் கலங்கித் தத்தளித்து உணர்வு மயங்கி அலறியதையும் கண்டேன். அச்சமயத்தில் அவள் இறைவனிடம் இறைஞ்சியது இறைவனின் அர்ஷை எட்டி விட்டது என்பதையும் உணர்ந்தேன். எனவே இறைவன் அவளின் இறைஞ்சுதலை ஏற்று அருள்பாலிப்பான் என்ற முடிவுக்கு வந்தேன். எனவே தான் அவளை நோக்கி, "நீ கூறுவது உண்மையானால், உன் மகன் இல்லம் திரும்பி வந்து விட்டான். நீ உடனே இல்லம் திரும்பு" என்று கூறினேன். அவ்வாறே நிகழ்ந்து விட்டது." என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

ஜுனைத் (ரஹ்) அவர்களுடன் பலர் தொடர்பு கொண்டிருந்தது போன்று, ஜுனைத் (ரஹ்) அவர்களும் பல இறை நேசச் செல்வர்

களுடனும் தொடர்பு கொண்டிருந்தார்கள். ஒரு திருமணம் நிகழ்ந்தது. மணமக்கள் இருவரும் 'அப்தால்'களாக (இறைநேசச் செல்வர்களாக) இருந்தனர். அத்திருமணத்தில் கலந்து கொள்வதற்காகப் பல்வேறு திசைகளிலிருந்தும் இறைநேசச் செல்வர்கள் வந்திருந்தார்கள். ஒவ்வொரு வரும் முத்துக்களையும் பவளங்களையும் பரிசுப் பொருள்களாகக் கொண்டு வந்திருந்தார்கள். ஜுனைத் (ரஹ்) அவர்களோ மணமக்களுக்குக் குங்குமத்தைத் தம்முடைய அன்பளிப்பாக வழங்கினர். அப்பொழுது ஆங்கிருந்த கிள்று (அலை) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை நோக்கி, ''தாங்கள் மணமக்களுக்குப் பொருத்தமான பரிசளித்தீர்கள். வேறு எவரும் இத்துணைப் பொருத்தமான பரிசளிக்கவில்லை'' என்று கூறினார்கள்.

அவர்கள் தொடர்பு கொண்டிருந்த இறை நேசச் செல்வர்களில் இப்னு குர்ஸீ (ரஹ்) அவர்களும் ஒருவர். கடுமையான குளிரான இரவொன்றில் அவர்களுக்குக் குளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்ட பொழுது குளிரின் கொடுமையை நினைத்து அவர்களின் உள்ளம் குளிக்கத் தயங்கியது. அப்பொழுது அவர்கள்,

'மனமே! தயங்குகின்றாயா? குளி. இல்லையேல் குளித்து விட்டு, குளித்த ஈரத்துணியையே அணிந்து கொள்வேன். ஆதலின் குளித்துவிடு'' என்று தம் மனத்திற்கே அவர்கள் கூறிக் கொண்டார்கள். அதன்பின்னரே அவர்களின் மனம் இணங்கியது. குளித்தார்கள். இதனை அவர்களே தம்மிடம் கூறியதாக ஜுனைத் (ரஹ்) அவர்கள் எடுத்துரைக்கிறார்கள்.

ஜுனைத் (ரஹ்) அவர்கள் உயிரோடிருக்குங்கால், பக்தாது நகருக்கு வரும் எந்த நல்லோரும் அவர்களைச் சந்திப்பதைத் தங்களின் தலையாய கடனாகக் கொண்டிருந்தனர். அவ்விதம் சந்திக்காது தருக்கி இருப்பின் தங்களுக்கு எதிர்பாரா வண்ணம் பல இழிவுகள் ஏற்படும் என்றும் அவர்கள் அஞ்சினர்.

தங்களைச் சந்திக்க வருபவர்களுக்கு ஜுனைத் (ரஹ்) அவர்கள் பல அறிவார்ந்த நல்லுரைகளை வழங்குவர். ஒரு தடவை 'ஹஜ்'ஜு செய்வதற்காக ஜீலானிலிருந்து புறப்பட்டு வந்த ஸையித் நஸரீ என்பவர், பக்தாது மாநகர் வந்தார். ஜுனைத் (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக அவர்களின் தவச்சாலையை அவர் வந்தடைந்த பொழுது, அவர் அலீ (ரலி) அவர்களின் வழி வழி வந்தவர் என்பதை அவர் வாயிலாகக் கேட்டறிந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள், அவருக்குப் பெரிதும் மரியாதை செலுத்தினர். பின்னர் அவர்கள் அவரை நோக்கி ''தங்களின் பாட்டனார் அலீ (ரலி) அவர்களிடம் இரண்டு வாட்கள் இருந்தன. அவற்றில் ஒன்றைக் கொண்டு, அவர்கள் நிராகரிப்போர்களுடன் போர் செய்தார்கள்.

மற்றொன்றைக் கொண்டு தம் நஃப்ஸ் (மன இச்சை) உடன் போர் செய்தார்கள். தாங்கள் அவ்வாள்களில் எவ்வாளைப் பயன்படுத்து கிறீர்கள்?'' என்று வினவினர்.

அதுகேட்டு உணர்ச்சி மீக்குற்று விம்மி, விம்மி அழுத அவர், ''ஷைகு அவர்களே! என்னுடைய புனித யாத்திரை இங்கேயேயன்றி வேறெங்கும் இல்லை. எனக்கு இறைவனை அடைவதற்கான வழியைக் காட்டியருள்வீர்களாக!'' என்று கூறினார். அதற்கு அவர்கள், ''தங்களின் இதயம் இறைவனின் திரு இல்லமாகும். அதில் தூய்மையற்ற எந்நினைவையும் அனுமதியாதீர்கள்'' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

ஜுனைத் (ரஹ்) அவர்களின் மாணவர் குழாத்தில், எத்தனை எத்தனையோ இறைநேசச் செல்வர்களெல்லாம் அடங்கி இருந்தனர். அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்), ஹல்லாஜ் (ரஹ்) ஆகியோர் அவர்களின் மாணவர்களேயாவர்.

அவர்கள் தம் மாணவர் குழுவில் தனிச் சிறப்பு வாய்ந்தவர்களிடம், தனி அன்பு செலுத்தி வந்தார்கள். இவ்வாறு அவர்கள் ஒரு மாணவரிடம் தனி அன்பு செலுத்தி வருவதைக் கண்டு, மற்றவர்கள் பொறாமை யுற்றதை அறிந்த அவர்கள், அனைவரையும் ஒருங்கழைத்து, அவர்கள் ஒவ்வொரு வரிடமும் ஒரு கோழியைக் கொடுத்து, அதனை எவரும் காணா இடத்திற்கு எடுத்துச் சென்று, அறுத்து வருமாறு கூறினர். அவ்விதமே அவர்கள் செய்து வந்தார்கள்.

ஆனால், அவர்களின் தனி அன்பிற்குப் பாத்திரமான மாணவரோ, அதனை எங்கும் எடுத்துச் செல்லாது அவ்விடத்திலேயே அமர்ந்திருந்தார். அவர்கள் அனைவரும் அறுத்த கோழியுடன் அங்கு வந்த பொழுது, அவர் மட்டும் கோழியை உயிரோடு வைத்திருப்பதைக் கண்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''அதனை நீர் அறுக்கவில்லையா?'' என்று வினவிய பொழுது, ''தாங்கள் ஆணையிட்ட வண்ணம் செயலாற்ற இயலாததற்காக வருந்துகிறேன். அண்ட கோளம் அனைத்திலும் இறைவன் காணாத இடம் எங்கு உள்ளது. அவன் தான் எங்கும் நிறைந்துள்ளானே'' என்று பதில் கூறினார் அவர்.

இதைக் கேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், மற்றவர்களை நோக்கி, ''பார்த்தீர்களா? இதன் காரணமாகவே நான் அவர் மீது தனி அன்பு செலுத்தி வருகின்றேன். இதனை அறியாது தாங்கள் என் மீது வீணே வருத்தமும், அவர்மீது வீணே பொறாமையும் கொண்டீர்கள்'' என்று கூறினார்கள்.

பொதுவாக அவர்கள் தம் மாணவர்களின் நலனைக் கண்களை இமை காப்பது போல் காத்து வந்தார்கள். ஒரு தடவை, அவர்களின்

மாணவர் ஒருவர் தவறொன்றைச் செய்துவிட்ட பொழுது, அவர்கள் அவரைக் கண்டித்தனர். அதுகண்டு நாணமுற்ற அவர், அவர்களின் தவச்சாலையை விட்டே வெருண்டோடி விட்டார். சின்னாட்களுக்குப் பின் ஜுனைத் (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களுடன் கடை வீதி வழியாகச் சென்று கொண்டிருந்த பொழுது, அவரைக் கண்டார்கள். அவர், அவர்களைப் பார்த்தாரோ இல்லையோ, அவ்விடத்தை விட்டும் விரைந்தோடினார். எனினும் ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவரை விட்டார் களில்லை. அவரைப் பின் தொடர்ந்து வேகமாக நடந்து சென்றார்கள்.

தம் ஆசான் தம் பின்னே வருவதைக் கண்ட அவர், முன்னை விட வேகமாக ஓடினார். ஜுனைத் (ரஹ்) அவர்களும் அவருக்கு இளைக்கா வண்ணம் வேகமாக நடை போட்டார்கள். இறுதியாக அவர் ஒரு பாதை முடுக்கில் போய் மாட்டிக் கொண்டார். அவரின் முன்னால் சுவர் ஒன்று நின்று அவரைத் தடுத்து நிறுத்தியது. இப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்களும் அவரை நெருங்கி விட்டார்கள். அவர் யாது செய்வதென அறியாது விழித்தார். "ஷைகு அவர்களே! எங்கே இவ்வளவு தூரம் வந்து விட்டீர்கள்?" என்று யாதும் அறியாதவர் போல் வினவினார்.

அதற்கு ஜுனைத் (ரஹ்) அவர்கள், "ஒரு மாணவர் சுவரில் போய் முட்டிக் கொள்ளும் பொழுது, அவருக்கு உதவி செய்வது ஓர் ஆசானின் கடமையல்லவா?" என்று கூறி அவரைத் தம் தவச்சாலைக்கு அழைத்து வந்தனர். அவர், அவர்களின் தாளில் வீழ்ந்து கண்ணீர் வடித்துத் தாம் செய்த தவறுக்கு இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரினார்.

மற்றொரு தடவை பஸராவில் வாழ்ந்து வந்த அவர்களின் மாணவர் களில் ஒருவருக்குப் பாவச் செயலில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணம் மிகைத்தது. அதன்பின் அவர் கண்ணாடியில் தம் முகத்தைப் பார்த்ததும், அது கருமையாகி விட்டதைக் கண்டார். அது கண்டு அவருக்கு நாணமும் வருத்தமும் ஏற்பட்டன. அதன் காரணமாக அவர், மூன்று நாட்களாக வெளியே செல்லாது, தம் இல்லத்திலேயே தங்கி விட்டார். அம்மூன்று நாட்களில் அவருடைய முகத்தில் படர்ந்த கருமை நிறம் சிறிது சிறிதாகக் குறைந்து அவருடைய முகம் முந்தையப் பொலிவை அடைந்தது. அப்பொழுது அவருக்கு ஜுனைத் (ரஹ்) அவர்களிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் "இனிமேல் நீர் உன் உள்ளத்தைத் தீய எண்ணங்களை விட்டும் பாதுகாத்துக் கொள்ளும். நான் மூன்று நாட்களாக உமக்காக வேண்டி வண்ணான் தொழில் செய்ய வேண்டியதாயிற்று" என்று எழுதப்பட்டிருந்தது.

வேறொரு நாள் அவர்களின் மாணவர்களில் ஒருவர், தவறு செய்துவிட்டார். தண்டனைக்குப் பயந்து அவர் தவமடத்திலிருந்து பள்ளி

வாயிலுக்கு வெருண்டோடினார். அவர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அதுகண்ட அவர் நடுக்குற்றுக் கீழே விழுந்து மண்டையை உடைத்துக் கொண்டார். அவருடைய தலையிலிருந்து இரத்தம் வழிந்து, பூமியில் சொட்டுச் சொட்டாக விழுந்தது. ஒவ்வொரு சொட்டு இரத்தமும், பூமியில் விழுந்ததும், அல்லாஹ் என்று எழுதப்பட்டது போல் அமைந்தது.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள், தம் மாணவரை நோக்கி, ''நீர் உம்முடைய ஆன்மீகத் தன்மையை இவ்வாறு பகிரங்கப்படுத்துவது நல்லதல்ல. சிறு குழந்தைகளால் கூட இவ்வாறு செய்ய இயலும்? அல்லாஹ்வின் திருப்பெயரைத் திரும்பத் திரும்பக் கூறி 'திக்ர்' செய்வது மட்டும் பற்றாது. அல்லாஹ்வை நாம் அடையப் பெற வேண்டும். அவ்விதம் பெறுபவன் தான் ஆன்மீகத்தில் முதிர்ச்சி பெற்றவனாவான். இல்லையெனில் அவன் ஆன்மீகத் துறையில் ஒரு குழந்தையேயன்றி வேறில்லை' என்று கூறினர். அது கேட்ட அவர் மூர்ச்சித்துக் கீழே விழுந்தார். அத்துடன் அவருடைய உயிரும் பிரிந்தது.

பிறிதொரு நாள் அவர்களின் மாணவர்களில் ஒருவர், அவர்கள் மீது வருத்தமுற்று, அவர்களை விட்டும் நீங்கிவிட்டார். பின்னர் அவர்களைச் சோதித்தறியும் நோக்குடன், அவர்களிடம் திரும்பி வந்தார். இதனை உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அவர்கள், அவர் கேட்ட ஒரு கேள்விக்கு பதில் கூறும் முகத்தான் அவரை நோக்கி, ''நீர் சாதாரணப் பதிலை விரும்புகின்றீரா? ஆன்மீகப் பதிலை விரும்புகின்றீரா?'' என்று வினவினர். ''இரண்டு விதமான பதிலையும் தான்'' என்று அவர் துடுக்காகப் பதிலுரைத்தார்.

அது கேட்ட அவர்கள், ''உம்முடைய கேள்விக்குச் சாதாரணப் பதில் என்னவெனில், நீர் உம்மையே சோதித்துப் பார்த்திருப்பின், என்னைச் சோதித்துப் பார்க்க உமக்குத் தேவை ஏற்பட்டிராது. ஆன்மீகப் பதில் என்னவெனில், நாம் உம்முடைய 'விலாயத்'தைப் பிடுங்கிவிட்டோம் என்பதாகும்'' என்று கூறினர்.

இவ்வாறு அவர்கள் கூறி வாய் மூடுமுன், அவருடைய முகம் கறுத்துவிட்டது. ''யகீன் என்னுடைய உள்ளத்திலிருந்து போய் விட்டதே'' என்று அவர் அலறித்துடித்து தம்மை மன்னித்தருளுமாறு அழுது கெஞ்சினார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''அல்லாஹ்வின் அருள் நேசர்கள் சிலர் அபூர்வ ஆற்றல்களைப் பெற்றிருக்கிறார்கள். அவர்களின் அடியை உம்மால் தாங்க முடியாது என்பதை நீர் அறிய மாட்டீரா?'' என்று

கூறி அவர்மீது ஓதி ஊதினார்கள். அவர் தம்முடைய இழந்த நிலையை மீண்டும் எய்தப் பெற்றார்.

அவர்களின் மாணவர் ஒருவரின் உள்ளத்தில் தாம் ஆன்மீக உச்சத்தை எய்தி விட்டதாகவும், எனவே தாம் இனிமேல் இறைநேசச் செல்வர்களுடன் தொடர்பு கொண்டு வாழ வேண்டிய அவசியமில்லை என்றும் தவறான எண்ணம் ஏற்பட்டது. அதன் காரணமாக அவர் தருக்குற்று, தனிமையில் ஒதுங்கி வாழ்ந்தார். ஒவ்வொரு நாளும் வானவர்கள் ஓர் அலங்கரிக்கப்பட்ட ஒட்டகை மீது இவர்ந்து வந்து தம்மை விண்ணகம் கொண்டு செல்வதாக அவர் பகிரங்கமாகத் தம் தோழர்களிடம் எடுத்துரைத்தார். இது ஜுனைத் (ரஹ்) அவர்களின் செவிக்கும் எட்டியது. ஷைத்தான் அவருடன் விளையாடுவதை அவர்கள் விளங்கிக் கொண்டார்கள்.

ஓரிரவு அவருடன் தங்கியிருந்த அவர்கள், அவரை நோக்கி, ''நீர் வானவர்கள் வந்ததும், ''ஷைத்தானின் தூதுவர்களே! நீங்கள் நாசமாகப் போகக்கடவது'' என்று கூறும். அதன்பின் என்ன நிகழ்கின்றது என்பதைப் பாரும்'' என்று கூறினர்.

அவரும் அவ்வாறே செய்தார். என்ன வியப்பு! அடுத்த கணம் அவர் கூறிய வானவர்களும், அவர்கள் இவர்ந்து வந்த ஒட்டகமும் மாயமாய் மறைந்துவிட்டன. குப்பை மேடு ஒன்றில், இறந்த மிருகங்களின் எலும்புக் கூடுகள் ஆங்காங்கு சிதறிக்கிடக்கும் சூழலில் தாம் அமர்ந்திருப்பதைக் கண்டு அவருக்கு ஏற்பட்ட திகிலுக்கு அளவில்லை. தம் பாவம் பொறுத்துத் தம்மை ஆட்கொள்ளுமாறு அவர்களிடம் அழுது, கெஞ்சி வேண்டினார். அது கண்டு அவர் மீது இரங்கிய அவர்கள் ''புதிதாக ஆன்மீகத் துறையில் தனிமையை நாடுவது அபாயகரமானதாகும். ஆன்மீக அறிவொளி பெற்ற ஒரு முதியவரின் வழிகாட்டுதல் அவருக்கு இன்றியமையாததாகும்'' என்று அவருக்கு அறிவுரை பகர்ந்தார்கள்.

மற்றொரு நாள் அவர்கள், புதிதாக ஆன்மீகத் துறையில் புகுந்த தம் மாணவர் ஒருவரை நோக்கி, ''நீர் உம்முடைய மார்க்கத்தைப் பேணுதலாகப் பாதுகாக்க விரும்பின், உம்முடைய இளமைப் பருவத்தில் சூஃபிகளுடைய பேரின்ப நிகழ்ச்சியில் ('ஸம்அ'வில்) கலந்து கொள்ளாதீர். முதுமைப் பருவத்தில் மற்றவர்கள் தவறு செய்வதற்கு நீர் காரணமாக இராதீர்'' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

ஒரு நாள் பக்கீர் ஒருவர் கறுப்பு ஆடை அணிந்தவராக ஜுனைத் (ரஹ்) அவர்களின் தவமடத்திற்கு வந்தார். ''துக்கத்தை உணர்த்தும் கறுப்பு ஆடை அணிந்து வரக் காரணம் யாது?'' என்று ஜுனைத் (ரஹ்) அவர்கள்

அவரிடம் வினவிய பொழுது, ''என்னுடைய இறைவன் இறந்து விட்டான்' என்று மறுமொழி பகர்ந்தார் அவர். உடனே அவர்கள் அவரைத் தம்முடைய தவமடத்திலிருந்து விரட்டி விட்டார்கள். மீண்டும் அவர் அங்கு வந்தார். மீண்டும் அவரை அங்கிருந்தும் விரட்டி விட்டார்கள் அவர்கள். மூன்றாவது தடவையும் அவர் விரட்டப்பட்டு, நான்காவது தடவை அவர் அங்கு மீண்டும் வந்த காலை, ''நீர் கூறியதன் பொருள் யாது?'' என்று அவரிடம் வினவப்பட்ட காலை, ''என்னுடைய நஃப்ஸானது இறைவனின் பிரதிபலிப்பு என்பதை அறியாது, நான் அதனைக் கொன்று விட்டேன். எனவே நான் அதற்காக வருந்தி அழுது கொண்டிருக்கிறேன்'' என்று பதில் மொழிந்தார் அவர்.

ஒருவர் அவர்களின் முன் வந்து ''விசுவாசிகளே! நீங்கள் செய்யாத காரியங்களை(ச் செய்வேன் என்றோ அல்லது செய்ததாகவோ) ஏன் கூறுகிறீர்கள்?'' (61:2) என்ற திருவசனத்தை ஓதியதும், அவர்கள் அலறித் துடித்து, ''இறைவனே! நாங்கள் எதையேனும் பேசினால், உன்னால்தான் பேசுகிறோம். நாங்கள் எதையேனும் செய்தால் உன் பேரருளால் தான் செய்கிறோம். அவ்விதமிருக்க, நாங்கள் பேசுவதாகவோ, நாங்கள் செய்ததாகவோ கூறுவதற்கு எங்கு இடமுள்ளது?'' என்று கூறினார்கள். சில பொழுது அவர்கள் சில திருக்குர்ஆன் வசனங்களைச் செவியுற்றதும், மயங்கிக் கீழே சாய்ந்து விடுவர். சற்று நேரம் கழித்த பின்னரே அவர்கள் தன்னுணர்வு பெறுவார்கள்.

இளமையில் அவர்கள் ஹஜ்ஜு செய்ய மக்கா சென்றிருந்த பொழுது, ''இறை காதல் என்றால் என்ன?'' என்று சிலர் வந்து அவர்களிடம் வினவிய பொழுது, ''எவன் தன் இச்சையை அடக்கி, இறைத் தியானத்தில் தன்னை மூழ்கடித்துக் கொள்கின்றானோ, அவனுக்கு இறைவன் திருக்காட்சி வழங்குகின்றான். அப்பொழுது அவன் மகோன்னத நிலையை எய்தி விடுகிறான். அப்பொழுது அவன் அல்லாஹ்விலேயே உள்ளான். அல்லாஹ்வுக்காகவே உள்ளான். அல்லாஹ்வுடனேயே உள்ளான். அப்பொழுது அவன் பார்க்கும் ஒவ்வொரு பார்வையையும், அல்லாஹ்வுடைய கண்களினாலேயே பார்க்கிறான். அப்பொழுது அவன் பேசும் ஒவ்வொரு சொல்லையும் அல்லாஹ்வுடைய நாவினாலேயே பேசுகிறான்'' என்று கூறினர். அது கேட்டு அவர்கள் அனைவரும் உணர்ச்சி மீக்குற்றனர்.

மற்றொரு நாள் ஒருவர் அவர்களை அணுகி, ''இறைவனுடன் இணைதல் என்றால் என்ன?'' என்று வினவிய பொழுது, ''தீய இச்சைகளை விட்டொழிப்பது'' என்று அவர்கள் பதில் கூறினர். இதற்கு ஹுஜ்விரீ (ரஹ்) அவர்கள் விளக்கம் கூறுங்கால், ''அல்லாஹ்வின்

பேரருளைப் பெறுவதற்கான மேலான வழி, தீய இச்சைகளை எதிர்த்து நிற்பதுதான். மலையைக் கூட நகத்தால் கிள்ளி எறிந்துவிடலாம். ஆனால், தீய இச்சைகளை எதிர்த்து நிற்பது, அதைவிடக் கடினமான தாகும்'' என்று இயம்பியுள்ளனர்.

ஆன்மீகம் பற்றி அலீ (ரலி) அவர்களுக்கு இருந்த ஞானம் பற்றி, அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, ''அலீ (ரலி) அவர்கள் மட்டும் போர்களில் குறைவாக ஈடுபட்டிருப்பின், ஆன்மீகம் பற்றி எத்தனையோ ஆழிய இரகசியங்களையெல்லாம் அவர்கள் மக்களுக்கு எடுத்துரைத் திருப்பார்கள். அவற்றை நம் இதயத்தால் தாங்கிக் கொள்ளக் கூட இயலாது போயிருக்கும். அவர்கள் 'இல்முல் லதுன்னி' (தெய்வீக அறிவு) வாய்க்கப் பெற்றவர்களாயிற்றே'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

வலிமார்களைப் பற்றி அவர்கள் எடுத்துரைக்கும் பொழுது, ''அவர்கள் இறைவனின் படைப்புகளில் புனிதமானவர்கள். அவனின் அடியார்களில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்களுக்கு 'விலாயத்' என்னும் தனிப்பெரும் தகுதியை இறைவன் அளித்துக் கௌரவித்தான். தன்னுடன் இருப்பதற்காக, இறைவன் அவர்களைத் தனக்காகப் படைத்தான்'' என்று கூறினார்கள்.

அவர்களின் நண்பர்களாக இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்), அபூ உதுமான் ஹீரி, அபூ ஸயீத் கஸ்ஸாஸ் ஆகியோர் இருந்தார்கள். பிக்ஹு பற்றி எந்தக் கேள்வியையும் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களிடம் கேட்பின், அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை நோக்கி, 'ஸூஃபி அவர்களே! தாங்கள் அது பற்றி என்ன கூறுகின்றீர்கள்?' என்று தான் வினவுவர். அபூ உதுமான் ஹரி அவர்களோ, ''இன்று உலகத்தில் மூவரே மாண்பு பெற்று விளங்குகின்றனர். நீஷாப்பூரில் நான். பக்தாதில் ஜுனைத், சிரியாவில் அபூ அப்துல்லாஹ் இப்னு ஜல்லா ஆகியோர் ஆவர்'' என்று கூறினர். அறிவே உருவெடுத்தது போன்ற ஆன்றோர் ஒருவர், உலகில் இருக்கின்றாரென்றால், அவர் ஜுனைத் (ரஹ்) அவர்களேயாவர்' என்று அபூ ஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்கள், இவர் களைப் பற்றிப் புகழ்மாரி சொரிகின்றார்கள்.

துவக்கத்தில் ஜுனைத் (ரஹ்) அவர்கள் 'ஸம் அ' என்ற பேரின்ப நிகழ்ச்சியைப் பெரிதும் விரும்பவில்லை. ஓரிரவு அவர்கள் இப்லீஸைக் கனவில் கண்டு''நீ இறைநேசர்கள் மீது எப்பொழுதேனும் ஆதிக்கம் செலுத்தியது உண்டா?'' என்று வினவினர். ''ஆம்'' என்றான் அவன். ''எப்பொழுது?'' என்று அவர்கள் வினவினார்கள். அதற்கு அவன் ''அவர்கள் இசையை நுகரும் பொழுதும், மார்க்கம் பற்றிய வாக்கு வாதங்களில் ஈடுபடும் பொழுதும்'' என்று பதிலிறுத்தான்.

விடிந்தெழுந்ததும் தாம் கண்ட இக்கனவை அவர்கள் பிறரிடம் எடுத்துரைத்த பொழுது, ''நான் இப்லீஸைக் கண்டிருந்தால், இசையை நுகரும் பொழுது, நான் இறைவனிடமிருந்தே அதனை நுகர்கிறேன் என்றும் மார்க்கம் பற்றிய வாக்கு வாதங்களில் ஈடுபடும் பொழுது இறைவனைப் பற்றிய நினைவிலேயே திளைக்கிறேன் என்றும் எண்ணும் ஒருவனிடம் நீ எவ்வாறு ஆதிக்கம் செலுத்துவாய்?'' என்று அவனைக் கடாவி இருப்பேன்'' என்று ஒருவர் கூறினார். அது கேட்ட அவர்கள் 'உண்மை உரைத்தீர்; உண்மை உரைத்தீர்' என்று கூறினார்கள்.

இதன்பின் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒருதடவை அவர்கள் நான்கு பக்கீர்களுடன் ஒரு பயணத்தில் ஈடுபட்டிருந்தனர். அப்பொழுது அவர் களில் ஓர் இசைவல்லாரும் இருந்தார். அவரை மற்றொரு பக்கீர் ஏதாவது ஒரு பேரின்பப் பாடலைப் பாடுமாறு கூறிக் கொண்டே இருப்பார். அவ்வாறே அவர் பாடியதும், அவரைப் பாடச் சொன்னவர் அந்தப் பாடலில் சொக்கி மயங்கித் தன்னுணர்வற்றவராக ஆகிவிடுவார்.

ஒருநாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள், அந்த பக்கீர்களை நோக்கி, ''இஃதென்ன வழக்கம்? எப்பொழுது பார்த்தாலும் பாடுவதும் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்டுக் கொண்டிருப்பதையும் தவிர்த்து, வேறு வேலையில்லையா?'' என்று அதட்டினார்கள். அவர்கள் மறுவார்த்தை பேசவில்லை.

சற்று நேரம் கழிந்தது. மீண்டும் அந்த பக்கீர் பாடலானார். அவரைப் பாடச் சொன்னவர், அந்தப் பாடலில் சொக்கி மயங்கி விண்ணிலே நடமாடிக் கொண்டிருந்தார்.

அப்பொழுதுதான் அவரின் மாண்பு, அவர்களுக்குத் தெரியவந்தது. அவரிடம் மன்னிப்புக் கேட்பதற்காக, அவர்கள் அவரிடம் ஓடோடிச் சென்ற பொழுது, அவரோ விண்ணிலே மாயமாய் மறைந்து விட்டார். இதன்பின் அவர்கள் எவ்வளவோ முயன்றும் அவர்களால் அவரைச் சந்திக்கவே இயலவில்லை. இதுபற்றிய கைசேதம் அவர்களின் நெஞ்சத்தை விட்டும் அகலவே இல்லை.

பின்னர் அவர்களுக்கு 'ஸம் அ' என்ற பேரின்ப நிகழ்ச்சியைப் பற்றியும், அதில் மக்கள் உணர்ச்சி மீக்குற்று அழவும் ஆடவும் செய்வது பற்றியும் இருந்தமனோ நிலை மாறுதலடைந்தது. அவர்கள் பேரின்ப இசை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவும் செய்தனர். இக்காலை ஒருவர் அவர்களை அணுகி, ''பொதுவாக அமைதியாக இருக்கும் மனிதன், 'ஸம் அ' என்ற பேரின்ப இசை நிகழ்ச்சியில் தன்னிலையை மறக்கக் காரணம் என்ன?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள், ''ஆன்ம உலகில் இறைவன் அனைத்து ஆன்மாக்களையும் நோக்கி, நான் உங்களின் இறைவனில்லையா?'' என்று வினவிய பொழுது, அவை அனைத்தும் 'ஆம்' என்று ஒருமித்து முழக்க மிட்டன. இவ்வாறு அவை பதிலுரைத்த சுவை அவற்றின் உள்ளத்தில் உரைந்துவிட்டது. பேரின்பப் பாடல்களைச் செவியுற்றதும் அச்சுவை அவர்களின் நினைவுக்கு வந்து விடுகிறது. அதன் காரணமாக அவர்கள் தன்னுணர்வற்று விடுகின்றனர்'' என்று பதிலுரைத்தார்கள்.

இப்பொழுது மற்றொருவர் அவர்களை அணுகி, ''அவ்விதமாயின் தாங்கள் ஏன் பேரின்ப இசை நிகழ்ச்சியில் மற்றவர்கள் போன்று ஆடுவ தில்லை?'' என்று வினவிய பொழுது, ''நீர் காணும் மலைகளை, அவை மிகவும் உறுதியாக இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர். அவை மேகத்தைப் போல் பறந்தோடுகின்றன'' (28:88) என்ற திருவசனத்தை ஓதிக் காட்டி, தாம் வெளியில் ஆடாவிட்டாலும், உள்ளின் உள்ளே ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருப்பதாகக் கூறாமல், கூறினார்கள்.

ஜுனைத் (ரஹ்) அவர்கள் தங்களின் வாழ்வின் துவக்க காலத்தில், அறிவார்ந்த செய்திகளையோ, பேரின்பப் பாடல்களையோ கேட்கும் பொழுது உணர்ச்சி மீக்குற்று அழும் வழக்கத்தைப் பெற்றிருந்தனர். ஒருநாள் ஒரு பெண் அவர்களிடம் வந்து, தன் கணவர் வேறொருத்தியை மணக்க விரும்புவதாகவும், அதனைத் தடுத்து நிறுத்துமாறும் வேண்டிக் கொண்டாள். அதுகேட்ட அவர்கள், ''அவர் இதுவரை நான்கு மனைவி யரை மணமுடிக்காதிருப்பின், அவர் ஒரு பெண்ணை மணமுடிப்பது மார்க்கப்படி அநுமதிக்கப்பட்டது தானே'' என்று கூறினர். அதற்கு அப் பெண்மணி, ''நான் பிற ஆடவரின் முன் என் முகத்தைத் திறந்து காட்டுவது ஆகுமொன்றிருந்தால், நான் என் முகத்தை தங்களிடம் திறந்து காட்டி இருப்பேன். அப்பொழுது தாங்கள் என் அழகைப் பார்த்து, ''இத்தகு அழகியை மணமுடித்த ஒருவன், வேறொருத்தியை ஏறிட்டுப் பார்ப்பானா என்று எண்ணுவீர்கள்'' என்று கூறினாள்.

அதுகேட்டு ஜுனைத் (ரஹ்) அவர்கள் பெரும் சப்தமிட்டு அழத் தொடுத்தனர். அப்பொழுது அது பற்றி அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, ''இறைவன் தன்னுடைய திரையை நீக்கித் தன் அழகை ஒருவனுக்குக் காட்டின், அவன் தன்னைத் தவிர வேறொன்றைத் தெய்வமென ஏற்றுக் கொள்வானா?'' என்று கூறியுள்ளான். அதனை அவளுடைய இச்சொல் எனக்கு நினைவுறுத்தியது. எனவே நான் என்னை அறியாமல் அலறி விட்டேன்'' என்று கூறினர்.

ஆனால் நாளாக, ஆக அவர்கள் தங்களின் உணர்ச்சியை அடக்கும் ஆற்றல் பெற்றனர். 'ஸம்அ' என்ற பேரின்ப இசை அரங்கில் அவர்கள்,

வீற்றிருக்கும் பொழுதும், அவர்கள் உணர்ச்சி வசப்படாது அமைதியாக இருப்பர். அவ்விதமே தங்களின் மாணவர்கள் இருக்க வேண்டுமென்றும் அவர்கள் விரும்பினார்கள். அவர்களின் மாணவர்களில் ஒருவர் பேரின்ப இசை நிகழ்ச்சியில் கலந்துகொண்ட பொழுது, உணர்ச்சி மீக்குற்று அலறியக்கால், இனிமேல் அவ்விதம் செய்ய வேண்டாமென்றும், இயலாவிடின் தம் தொடர்பை விட்டும் அகன்று விடுமாறும் கூறினார்கள்.

அவரா இந்த நல்லார் தொடர்பை விட்டும் நீங்குபவர்? தாம் இனிமேல் எக்காரணத்தை முன்னிட்டும் பேரின்ப இசை நிகழ்ச்சியில் கலந்து கொள்ளும் பொழுது, உணர்ச்சி மீக்குறுவதில்லை என்று உறுதிபூண்டார். அவ்விதமே உறுதி பூண்டு, ஓர் இசை அரங்க நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பொழுது, அவர் பீரிட்டு வந்த தம் உணர்ச்சியை அடக்கினார், அடக்கினார். அவரால் அடக்கவே இயலவில்லை. எனவே வீரிட்டு அலறினார். அடுத்த கணம் அவருடைய உயிர், அவரின் உடலை விட்டும் பிரிந்தது.

''பேரின்ப இசையைக் கேட்பதற்கும் காலம், இடம், சூழல் ஆகிய மூன்று அம்சங்கள் தேவைபடுகின்றன. அவை மூன்றும் ஒருங்கே அமைய வில்லையாயின், அந்த இசையை, அது எவ்வளவு தான் மேலானதாக இருந்த போதினும் கேட்காதீர்கள்'' என்று அவர்கள் கூறினார்கள்.

ஒருதடவை அவர்கள் தம் மாணவர் ஒருவரின் இல்லத்தில் நடக்கவிருந்த 'ஸம்அ' நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக அங்கு சென்றனர். அங்கு தமக்கு முன்பின் அறிமுகமில்லாத ஒருவர் வீற்றிருப் பதைக் கண்டதும், அவர்கள் தம் போர்வையை அவரிடம் கொடுத்து, அதனை விற்று, அப்பணத்தைக் கொண்டு சர்க்கரை வாங்கி ஏழைகளுக்குப் பங்கிடுமாறு கூறினர். அவ்விதமே அவர் அதனைப் பெற்று, கடைத்தெரு சென்ற பொழுது, அவர்கள் கதவைத் தாளிடுங்கால் மீண்டும் அங்கு வரவேண்டாமென்று அவரிடம் கூறியனுப்பினார்கள்.

இது பற்றி அவர்களின் மாணவர்கள் அவர்களிடம் வினவிய பொழுது, ''அந்தப் போர்வையை விற்று உங்களை நான் பெரும் துன்பத்தி லிருந்து காப்பாற்றினேன். அவர் இங்கு நிகழும் இந்த 'ஸம் அ'வில் கலந்து கொள்ளத் தகுதியற்றவர். எனவே தான் இவ்வாறு செய்து நான் அவரை வெளியே அனுப்பிவைத்தேன். 'ஸம் அ'வின் முக்கியமான அம்சங்கள் ஸமான் (சூழல்), மகான் (இடம்) ஜுஃப்கா (நண்பர்கள்) ஆகியவையாகும்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

பிற்காலத்தில் ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கு 'ஸம் அ' வின் மீதே ஒருவித வெறுப்பு ஏற்படலாயிற்று. காரணம் வினவப்பட்ட பொழுது,

''அங்கு பாடப்படும் பேரின்பப் பாடல்களை உள்ளச்சத்துடன் செவியுறுவோர் இன்று உலகில் எவருமில்லை'' என்று அவர்கள் கூறினர். அந்நிகழ்ச்சிகளில் அளவற்ற அன்பு செலுத்துகின்றவருக்கு, அது தீமையையும், அவற்றில் நிதானமாக அக்கரை செலுத்துபவருக்கு அது நன்மையையும் நல்குகின்றது'' என்று அவர்கள் எடுத்துரைத்தார்கள்.

பிக்ஹுக் கலையில் மட்டுமின்றி, தஸவ்வுஃபிலும் மாபெரும் உச்சத்தை எய்தி நின்ற அவர்கள், ''இறை ஞானத்தில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு, மார்க்க அறிஞர்களுடைய தொடர்பு தேவை இல்லை. எனவே அவர்களை இறைவன் சூஃபிகளிடம் அனுப்பி வைக்கிறான்'' என்று கூறினர். இவ்வாறு கூறியதன் மூலம், பிக்ஹு பற்றிய கல்வி வேறு. தஸவ்வுஃப் பற்றிய கல்வி வேறு என்று கூறாமல் கூறினார்கள்.

ஒருநாள் ஒருவர் அவர்களிடம் வந்து, ''தஸவ்வுஃப் என்றால் என்ன?'' என்று வினவிய பொழுது, ''எதிலும் தொடர்பின்றி அல்லாஹ்வுடன் ஒன்றித்து இருப்பதாகும்'' என்று அவர்கள் விளக்கம் பகர்ந்தார்கள்.

மேலும் அவர்கள் அது பற்றிக் கூறும் பொழுது ''தஸவ்வுஃப் என்பது, எட்டு நபிமார்களின் நற்பண்புகளின் மீது எழுப்பப்பட்டதாகும்'' என்று கூறி, அதற்கான விளக்கத்தை அவர்கள் பின்வருமாறு எடுத்துரைத்தார்கள்:

1) தம் அன்புத் திருமகனார் இஸ்மாயீல் (அலை) அவர்களை இறைவனுக்காகப் பலியிட முன்வந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் தாராளத்தன்மை.

2) தம் இன்னுயிரை இறைகட்டளைக்குக் கீழ்ப்படிந்து இழக்க முன்வந்த இஸ்மாயீல் (அலை) அவர்களின் இணக்கம்.

3) துன்பத்தை இன்பமாகக் கருதி எவ்வித முணக்கமுமின்றிச் சகித்துக் கொண்ட ஐயூப் (அலை) அவர்களின் பொறுமை.

4) ஜகரிய்யா (அலை) அவர்களை நோக்கி இறைவன், ''நீர் மூன்று நாட்கள் வரைச் சாடையாகவன்றி, மனிதர்களுடன் பேசமாட்டீர்'' (3:41) என்று கூறியதற்கேற்ப ஜகரிய்யா (அலை) அவர்கள் மேற்கொண்ட மௌனம்.

5) தம்முடைய நாட்டிலேயே ஓர் அந்நிய நாட்டான் போன்றும், தம்முடைய உறவினர்களிடையே அயலான் போன்றும் வாழ்ந்த யஹ்யா (அலை) அவர்களின் பற்றற்ற பான்மை.

6) உலகப் பொருள்களை வெறுத் தொதுக்கி, தம்மிடம் ஒரு சீப்பையும், ஒரு குவளையுமே வைத்திருந்து ஒருவர் தம் கையால் தண்ணீர்

அள்ளி அருந்துவதைக் கண்டு, தம்மிடமிருந்த குவளையையும், ஒருவர் தம் விரல்களால் தம் தலைமுடியை ஒழுங்கு செய்வதைக் கண்டு, தம்மிடமிருந்த சீப்பையும் தூக்கி எறிந்த ஈஸா (அலை) அவர்களின் துறவு.

7) கம்பளி உடையணியும் மூஸா (அலை) அவர்களின் இயல்பு.

8) உலகக் கருவூலங்களின் திறவு கோலை அவர்களுக்கு இறைவன் அனுப்பி வைத்து, ''உம் மீது சிரமத்தை ஏற்படுத்திக் கொள்ளாதீர். இந்தக் கருவூலங்களின் மூலமாக இன்பங்களை நுகர்வீராக!'' என்று அருள் மொழி பகர்ந்த பொழுது, ''இறைவனே! அவற்றை நான் விரும்பவில்லை. ஒரு நாளைக்கு எனக்கு உணவைத் தா; அடுத்த நாளைக்கு என்னைப் பசித்திருக்கச் செய்'' என்று கூறிய அண்ணல் நபி (ஸல்) அவர் களின் ஏழ்மை.

இவ்வாறு கூறிய அவர்கள் பிக்ஹுக் கலையை வெளிப்படையாகப் போதித்த போதினும், தஸவ்வுஃப் பற்றிய கல்வியைத் தம் அறையின் கதவுகளைப் பூட்டிச் சாவியைத் தம் விரிப்பின் கீழ் பத்திரமாக வைத்துக் கொண்ட பின்னரே தம் மாணவர்களுக்குப் போதித்து வந்தார்கள். ஆனால், அவர்களின் மாணவர் அபூபக்ர் ஷிப்லி (ரஹ்) அவர்கள், அதனைப் பகிரங்கமாக மக்களுக்கு எடுத்துரைப்பதைக் கண்டு பாமரர்கள் வழி தவறி விட ஏதுவாகுமே; வலிமார்களைக் 'காஃபிர்' என்று ஃபத்வா கொடுக்க வழி கோலி விடுமே என்று அவர்கள் ஐயமும் அச்சமும் கொண்டார்கள்.

உண்மையில் ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம்முடைய ஆன்மீகப் படித்தரத்தைப் பல காலமாகப் பிறர் அறியா வண்ணம் இரகசியமாகவே வைத்திருந்தார்கள். எனினும், இதுபற்றி அவர்கள் ஒரு தடவை கூறும் பொழுது, ''நான் பத்தாண்டு காலமாக, என் இதயம் வழி தவறிச் சென்று விடா வண்ணம் கவனித்து வந்தேன். அதன் பின் பத்தாண்டு காலம் என் இதயம் என்னைக் கண்காணித்து வந்தது. ஆனால் இப்பொழுது, என் நிலைமை என்னவெனில், என் இதயம் என்னை அறிவதுமில்லை; நானும் அதனைப் பொருட்படுத்துவதுமில்லை. கடந்த இருபது ஆண்டு களாக, இறைவன் என் வாயிலாகப் பேசிக் கொண்டிருக்கிறான். வெளிப்படையான ஆன்மீக தத்துவங்களையே நான் இருபது ஆண்டு களாக மக்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டிருக்கிறேன். ஆன்மீக இரக சியங்களை நான் வெளிப்படையாக எடுத்துரைக்கக் கூடாதென்று எச்சரிக்கப்பட்டுள்ளேன். இறையச்சம் என்னை ஆட்கொள்ளும் பொழுது, நான் தன்னுணர்வற்றவனாகி விடுகிறேன். அவனுடைய கழிவிரக்கத்தை நினைவு கூறும் பொழுது எனக்கு மூர்ச்சை தெளிகிறது.

''நான் ஓர் அடிமை. எனக்குச் சுதந்திரமே இல்லை. இறைவன் என்னை எங்கு போகுமாறு கூறினும் - அது சுவனமாக இருந்த போதினும் சரி, நரகமாக இருந்த போதினும் சரியே, அங்கு நான் செல்வேன்.

''எனக்கும் என் இறைவனுக்கும் இடையே தீக்குழம்பாலான ஆறே ஓடிய போதினும், என் இறைவனைச் சந்திக்கும் பேரவாவால் உந்தப்பட்டு நான் அதை ஒரே தாண்டாகத் தாண்டி அவனை அடைவேன்.

''ஒரு சமயம் இருந்தது. அதில் விண்ணவரும் மண்ணவரும் என்னுடைய திக்பிரமையை (ஸஹரத்தை) கண்டு அழுதார்கள். மீண்டும் ஒரு நிலை வந்தது. அவர்கள் மறைந்து விட்டார்கள் (கைபத் ஆகி விட்டார்கள்) அது கண்டு நான் அழுதேன். இப்பொழுது என் நிலைமை என்னவெனில், என்னைப் பற்றியோ அவர்களைப் பற்றியோ, எனக்கு யாதொரு நினைவுமில்லாமல் போய் விட்டது'' என்று கூறினார்கள்.

மேலும் அவர்கள் தம்மைப் பற்றிக் கூறும் பொழுது என்னை முதலில் காண்பவர் 'ஸித்தீக்' (உண்மையான விசுவாசி) என்று கூறுவர். இறுதியாகக் காண்பவர் ஸிந்தீக் (அவிசுவாசி) என்று கூறுவர் எனவும் எடுத்துரைத்தனர்.

ஒரு தடவை அவர்கள் இறைவனளவில் தம்மை அழித்துக் கொள்ளும் ஃபனா நிலையை எய்திய பொழுது, 'லைஸ ஜுப்பத்திம் ஸிவல்லாஹ்' (என்னுடைய சட்டைக்குள் அல்லாஹ்வைத் தவிர எவன் உள்ளான்?) என்றும் ''பேசுகின்றவனும் நானே. கேட்கின்றவனும் நானே. ஈருலகிலும் வேறு யார் உள்ளார்?'' என்றும், தம்மையறியாமல் கூறி விட்டனர். இதன் காரணமாக அவர்களைக் காஃபிர் என்று மார்க்க அறிஞர்கள் கூறவும், அவர்கள் சிறைத் தண்டனைக்குள்ளாகவும் நேரிட்டது.

அவர்களுக்கும் அபூபக்கர் கிஸாயி (ரஹ்) அவர்களுக்கும் இடையே ஆழிய நட்பு இருந்து வந்தது. அவர்களைப் பற்றி ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஒரு தடவை குறிப்பிடும் பொழுது, அபூபக்ர் கிஸாயிக்கு நிகரான எவரும் நஹ்ரவான் பாலத்தைக் கடந்து நம்மைக் காண விரவில்லை என்று கூறி இருப்பதிலிருந்து அவர்கள் மீது ஜுனைத் (ரஹ்) அவர்கள் கொண்டிருந்த மதிப்பு தெற்றெனத் தெரிய வருகிறது. ஆன்மீக ஞானம் பற்றித் தமக்கேற்பட்ட ஆயிரக் கணக்கான ஐயங்களை, அவர்கள், இவர்களுக்கு எழுதி அனுப்ப, அனுப்ப இவர்கள் அவற்றிற்குச் சரியான விடை எழுதி அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களின் இறப்புச் செய்தியைக் கேள்வியுற்றதும், ஜுனைத் (ரஹ்) அவர்கள் துடிதுடித்து விட்டார்கள். ''நான் எழுதியனுப்பியவற்றையெல்

லாம் அவர் என்ன செய்தாரோ?' என்று இவர்கள் ஏங்கினார்கள். அப்பொழுது அவர்களின் இறப்புச் செய்தியைக் கொணர்ந்தவர், ''அவர்கள் இறப்பதற்கு முன் அவற்றையெல்லாம் தண்ணீரால் அழித்து விட்டனர்'' என்று கூறிய பொழுது தான் இவர்களுக்கு அமைதி ஏற்பட்டது.

இதன்பின் ஜுனைத் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, தாம் இறந்ததும் தாம் எழுதிய கட்டுரைகள் அடங்கிய தாள்கள் அனைத்தையும், தம்முடைய அடக்கவிடத்தில் தம்மோடு வைத்துப் புதைத்து விடுமாறு கூறினர். காரணம் வினவப்பட்ட பொழுது, அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அரும்பெறும் அறிவுரைகள் இவ்வுலகில் நிலவி வரும் பொழுது, தாம் தம் கருத்துக்கள் அடங்கிய கட்டுரைகளை இவ்வுலகில் விட்டு இறப்பது மரியாதையாகாது'' என்று கூறிவிட்டனர்.

இவ்வாறு உள்ளச்சத்துடன் வாழ்ந்து வந்த அவர்கள், அல்லும் பகலும் இடைவிடாது இறைத் தியானத்திலேயே மூழ்கித் திளைத்து வந்தார்கள். அவர்கள் முதுமையை எய்திய பொழுதும், அவர்கள் இளமையில் வழக்கமாக ஓதிவந்த ஔராதுகளைத் தொடர்ந்து ஓதியே வந்தனர். இதைப் பார்த்த சிலர் ''தங்களின் இயலாமையிலும், அவற்றை ஏன் தொடர்ந்து ஓதி வருகிறீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''துவக்கத்தில் என் ஆன்மீக முன்னேற்றத்திற்கான ஏணி போன்று இருந்த அவற்றை இப்பொழுது உதறித் தள்ளுவதா என்ன?'' என்று அவர்களுக்குப் பதிலளித்தார்கள்.

இக்காலை ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இருவர் அவர்களைக் காண்பதற்காக பக்தாதுக்கு வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவருக்குப் பிராணிகளின் மொழி தெரிந்திருந்தது. வழியில் இரு பூனைகள் கத்திக் கொண்டிருந்தன. அப்பொழுது பிராணிகளின் மொழி தெரிந்தவர், மற்றவரை நோக்கி, ''என்ன இது விபரீதமாக உள்ளது. நாம் ஜுனைத் (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக வெகு தொலைவிலிருந்து பக்தாது சென்று கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் அவர்களைக் காண முடியாது போலிருக்கிறதே'' என்று கூறினார்.

''என்ன இவ்வாறு திடுதிப்பெனக் கூறுகின்றீர்?'' என்று வினவினார் மற்றவர்.

அதற்கு அவர் ''இந்தப் பூனைகளில் ஒன்று ஜுனைத் (ரஹ்) அவர்கள் இறந்து விட்டார்கள் என்று கூறுகிறது'' என்று சொன்னார்.

''அவ்விதமானால் நாம் திரும்பிவிடுவோமா?'' என்றார் மற்றவர்.

''வேண்டாம்; நாம் பக்தாதை நெருங்கி விட்டோம், விரைவில் பக்தாது சென்று அவர்களின் திருமுகத்தையாவது பார்த்து விட்டு வருவோம்'' என்றார் நண்பர்.

இருவரும் பக்தாதை நோக்கி விரைந்தார்கள். பக்தாது வந்து சேர்ந்த அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களின் தவமடம் நோக்கி, அவர்களின் திருமுகத்தையாவது காணும் பேறு கிடைக்குமா, கிடைக்காதா என்ற ஏக்கத்துடன் சென்றார்கள்.

ஆனால், அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்கள், அப்பொழுது தான் தங்களின் தவமடத்தை விட்டும் வெளியே வந்து, தங்களின் முகத்தைக் கழுவிக் கொண்டிருப்பதைக் கண்டதும், அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. வழியில் நடந்ததை அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

அதுகேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூத்த வண்ணம் ''நாவிதனிடம் நான் என் தாடி மீசையை ஒழுங்கு செய்து கொண்டிருந் தேன். அப்பொழுது நான் வழக்கமாக ஓதிக் கொண்டிருக்கும் திக்ருகளை ஓதிக் கொண்டிருந்தேன். அவன் மீசையைக் கத்திரிக்கும் பொழுது, உதடு களை அசைக்க வேண்டாமென்று கூறினான். அவ்விதமே நாம் செய்ததால் சில நிமிடங்கள் திக்ருகளை ஓதவில்லை. என்னுடைய திக்ருகளை எப்பொழுதும் செவியுற்றுக் கொண்டிருக்கும் அந்தப் பூனைகள், என் திக்ரின் ஒலியைக் கேளாததன் காரணமாக நான் இறந்து விட்டதாகக் கருதிக் கொண்டு அவ்விதம் உரையாடிக் கொண்டிருந்திருக் கலாம்'' என்று எடுத்தியம்பினர்.

அவர்களோ, தம் இன்னுயிரை இஸ்லாத்திற்காகத் தியாகம் செய்து, இஸ்லாமிய வீரத்தியாகிகளின் பட்டியலில் தம் பெயரும் இடம் பெற வேண்டும் என்று காலமெல்லாம் விரும்பிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இறைவனின் நாட்டமோ வேறு விதமாக இருந்தது. கலீபா அல் மாமூன் காலத்திலிருந்து, கலீபா அல் முக்ததிரின் காலம் வரையிலும் நடந்த பன்னிரண்டு கலீபாக்களின் ஆட்சியிலும், பக்தாது மாநகரிலேயே வாழ்ந்து வந்த அந்த மேதகை, ஹிஜ்ரி 298 ஆம் ஆண்டில், நோயுற்றுப் பல நாட்கள் படுத்த படுக்கையிலானார்கள்.

அவர்கள் நோயுற்றதைக் கேள்வியுற்ற மக்கள் சாரிசாரியாக அவர்கள் இல்லம் வந்து கொண்டிருந்தார்கள். அத்துடன் நில்லாது அங்கேயே அமர்ந்து அவர்களுடன் நெடுநேரம் உரையாடிக் கொண்டும் இருந்தார்கள். இது அவர்களுக்கு ஒரு தர்மசங்கடமான சூழ்நிலையை ஏற்படுத்தியது. அவர்களைப் போகச் சொல்லவும் மனமில்லை. அவர்களுடன் பேசிக்

கொண்டிருக்கவும் அவர்களால் இயலவில்லை. நல்ல வேளையாக, அப் பொழுது ஆங்கிருந்த ஒருவர், தங்களுக்காக இறைஞ்சுமாறு அவர்களிடம் வேண்டவே, உடனே அவர்கள் இருகரம் ஏந்தி, "இறைவனே! நோயாளர் களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்ற ஒழுங்கு முறையை இவர்களுக்குக் கற்றுக் கொடு' என்று இறைஞ்சினர். அடுத்த கணம், அவர்கள் அனைவரும் தம் தவற்றை உணர்ந்து, அவ்விடத்தை விட்டும் ஒருவர் பின் ஒருவராகக் கிளம்பி விட்டார்கள்.

இறுதியாக ஒரு வெள்ளிக்கிழமைப் பிற்பகல், தம்முடைய எண்ப தாவது வயதில் இவ்வுலகு துறக்க வேண்டிய நேரமும் வந்து சேர்ந்தது. இதனை உணர்ந்த அவர்கள், தாம் தம்முடைய நண்பர்கள், மாணவர்கள் அனைவரும் உணவருந்திக் கொண்டிருக்கும் பொழுதே உயிர் துறக்க எண்ணி அவர்களுக்கெல்லாம், உணவு சமைக்குமாறு கூறி, அவர்களை உண்ணச் செய்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவர் களை இறப்பின் முதல் வேதனை கௌவிப் பிடித்தது. உடனே அவர்கள் தம் மாணவர் ஒருவரை நோக்கித் தாம் 'உளூ' செய்யத் தண்ணீர் கொணரு மாறு கூறினர். 'உளூ'ச் செய்யும் பொழுது, தண்ணீர் விரல்களுக்கிடையே வழிந்தோடாததைக் கண்ட அவர்கள், வழிந்தோடும் வண்ணம் தம் கைகளில் தண்ணீரை ஊற்றுமாறு கூறி, உளூவை ஒழுங்குறச் செய்து முடித்தனர்.

இதன்பின் அவர்கள் தொழச் செல்வதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், "இவ்வளவு காலமாகத் தாங்கள் நிகழ்த்திய வணக்கங் களும், தொழுகைகளும், போதாவென்று, இப்பொழுதுமா தொழச் செல் கின்றீர்கள்?" என்று வினவிய பொழுது, "இப்பொழுதை விட நான் தொழுவதற்கு வேறு எப்பொழுதும், அதிகத் தேவை இருந்ததில்லை" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

தொழுது முடித்ததும், அவர்கள் சஜ்தாவில் விழுந்து அழுவதைக் கண்ட அவர்களின் மாணவர்கள், "ஏன் இவ்வாறு அழுகின்றீர்கள்?" என்று கூறிய பொழுது, "என் வாணாளில் நான் இப்பொழுதை விட வேறு எப்பொழுதும், என்னுடைய ஆற்றாமையை இத்துணை அதிகமாக உணர வில்லை" என்று அவர்கள் கூறினர்.

பின்னர் அவர்கள் தம் அருகிலிருந்த திருக்குர் ஆன் பிரதியை எடுத்து ஓதத் துவங்கினார்கள். அது கண்ட அவர்களின் மாணவர்கள் 'என்ன! இந்நிலையில் குர் ஆன் முழுவதையும் ஓதுகின்றீர்களா?" என்று வினவிய பொழுது, 'என் வாழ்வுச் சுருள், சுருட்டப்படும் நிலையில் இருப்பதைப்

பார்த்தபின், நான் ஓதாது வேறு எப்பொழுது ஓதுவது? திருக் குர்ஆனை விட மேலான நண்பரும், ஆறுதல் கூறுபவரும் வேறு எவருமில்லை. என்னுடைய எண்பதாண்டு வணக்கமும், தொழுகையும், ஒரு சிறு நூலில் தொங்கிக் கொண்டுள்ளது. ஒரு காற்று வீசி அதனை அங்கு மிங்கும் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. அக்காற்று என்னை இறைவனை விட்டும் அப்புறப்படுத்துமோ அல்லது ஒன்றுபடுத்துமோ என்பதை நான் அறியேன். ஒரு பக்கம் சுவனம், நரகம் ஆகியவற்றிற்கான பாதைகள் தோற்றமளிக்கின்றன. மறுபக்கல் மரண தூதுவர் தோற்றமளிக்கின்றார். நீதி வழங்கும் எசமானன் அதோ நீதி வழங்கக் காத்துக் கொண்டிருக்கிறான். என் முன் இரண்டு பாதைகள் விரிந்து கிடக்கின்றன. அதில் எப்பாதையில் என் விதி என்னைச் சேர்த்திடுமோ நான் அறியேன்'' என்று அவர்கள் கூறினர்.

இதன்பின் வெகுசிரமத்துடன் திருக்குர் ஆன் முழுவதையும் ஓதி முடித்த அவர்கள், இரண்டாவது தடவையும் அதனை ஓதத் துவங்கிய பொழுது, ''ஏன் மீண்டும் சிரமத்துடன் அதனை ஓதுகின்றீர்கள்? அல்லாஹ், அல்லாஹ் என்று கூறுங்கள். அது போதும்'' என்று மாணவர்கள் கூறிய பொழுது, ''நான் ஒரு கணமேனும் அல்லாஹ்வை மறந்ததில்லையே. மற்றவர்களுக்கன்றோ அதனை நீங்கள் நினைவுறுத்த வேண்டும்'' என்று கூறித் தங்களின் விரல்களால் எண்ணிய வண்ணம் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று 'திக்ரு' செய்தனர்.

அதன் பின் அவர்கள் மீண்டும் திருக்குர் ஆனை ஓதினார்கள். அவர்கள் அதனை ஓதி வருங்கால், சூரத்துல் பகராவில் எழுபதாவது திருவசனமாகிய, ''அல்லாஹ் நாடினால் இனி நாம் நிச்சயமாக நேர்வழி பெற்று விடுவோம்'' என்பதனை ஓதியதும், அவர்களின் உயிர் அவர்களின் உடலை விட்டும் கழன்றது. மறுநாள் பக்தாதிலுள்ள ஷூனிஸியா அடக்க விடத்தில் அவர்கள் தம், மாமனார் ஸரீ அஸ் ஸகதீ (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்திற்கு அண்மையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். அப்பொழுது பக்தாது நகரமே துக்கத்தில் மூழ்கி இருந்தது.

அவர்களின் இறப்பிற்குப் பின், அவர்களை அபூ முஹம்மது ஹுரைரி (ரஹ்) அவர்கள், கனவில் கண்டு அவர்களைப் பற்றி வினவிய பொழுது, '' எல்லாம் பயனற்றுப் போயின. 'ஸுப்ஹானல் லாஹ்' என்று நான் ஓதிவந்தது தான் பலனளித்தது'' என்று அவர்கள் கூறினார்கள்.

மற்றொருவர் அவர்களைக்கனவில் கண்டு, அவர்களின் நிலை பற்றி விசாரித்த பொழுது, தமக்கு அன்பளிப்பாக வந்த பறவை ஒன்றைத் தாம் சில நாட்களாகக் கூட்டிலடைத்து வைத்த பின், அதனைத் திறந்து

விட்டதன் காரணமாக, இறைவன் தமக்கு மீட்சி நல்கியதாக அவர்கள் பதிலுரைத்தார்கள்.

மற்றொருவர் அவர்களைக் கனவில் கண்டு, அதே கேள்வியை அவர்களிடம் கேட்ட பொழுது, ''அல்லாஹ் என்னை என் வணக்கத்தின் காரணமாகவல்ல, தன்னுடைய கழிவிரக்கத்தின் காரணமாக, என் பவம் பொறுத்தருளினான். நள்ளிரவில் நான் துயிலெழுந்து தொழுத இரண்டு ரக அத் 'தஹஜ்ஜுத்' தொழுகையைத் தவிர்த்து, ஏனைய என்னுடைய வணக்கங்களெல்லாம், கற்ற கல்வியெல்லாம், எனக்கு எத்தகைய பயனும் அளிக்கவில்லை'' என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.



# 12. அபுல் ஹுஸைன் நூரி (ரஹ்)

“இரவில் அவர் பேசும் பொழுது, அவரின் வாயிலிருந்து ஒளி யொன்று புறப்பட்டு, அவரின் இல்லம் முழுவதையும் ஒளி மயமாக்கிற்று. அந்தப் பேரொளியினால் அவர் மனிதர்களின் உள்ளங்களின் இரகசியங்களை விளங்கிக் கொண்டார். எனவே தான், ஜுனைத் (ரஹ்) அவர்களும், அவரை ‘அபுல் ஹஸன் ஜாஸூஸுல் குலூப் ஆக (இதயங்களின் ஒற்றராக) உள்ளார்’ என்று கூறினர் என்றும், அதன் காரணமாக அவர் ‘நூரி’ என்றும் அழைக்கப்பட்டார் என்று கூறுவர் சிலர். ‘‘இல்லை; இல்லை. அது அவ்வாறன்று. அவரின் உள்ளம் ஆன்மீகப் பேரொளியால் நிரம்பப் பெற்றதன் காரணமாக, அவர் ஆன்மீகத் தெளிவு பெற்றுப் பற்பல ஆன்மீக இரகசியங்களை வெளிப்படுத்தினார். அதன் காரணமாக அவருக்கு அப் பெயர் ஏற்பட்டது’’ என்று எடுத்துரைப்பர் வேறு சிலர். ‘‘அவ்வாறெல்லாம் இல்லை. அவர் வனாந்தரங்களுக்குச் சென்று இரவு முழுவதும் விழித்திருந்து வணங்குவார். அப்பொழுது அவர் வணங்கிக் கொண்டிருக்கும் இடத்திற்கு நேரே ஒரு பேரொளி இலங்கிக் கொண்டிருக்கும். அதன் காரணமாக அவருக்கு அப்பெயர் ஏற்பட்டது என்ற விளக்கம் பகர்வர் மற்றும் சிலர். ஆனால் அது அவருக்கு எவ்வாறு ஏற்பட்ட போதினும், அவருடைய இயற்பெயர் அஹ்மதை விட அவருடைய குன்யத் அபுல் ஹுஸைனை விட, அவரின் புகழ்ப் பெயர் நூர் என்பதே நிலைத்து விட்டது. நூரி, நூரி என்றே அவர் எங்கணும் புகழ் பெற்றுப் பொலிவுற்றுத் திகழலானார்.

குராஸானிலிருந்து பக்தாது வந்து குடியேறிய ஒரு குடும்பத்தின் வழித்தோன்றலாக அவதரித்த அபுல் ஹுஸைன் அஹ்மது இப்னு முஹம்மது அல் நூரி, அக்காலத்தில் பக்தாது மாநகரில் வாழ்ந்து வந்த ஆண்டகை ஸரீஅஸ்ஸகதியின் ஆன்மீக மாணவராவர். அவர்கள் தம் ஆன்மீக வாழ்வைத் துவங்கிய புதிதில், ஒவ்வொரு நாளும் தாம் தம் கடைக்குச் செல்லுமுன், தாம் உண்பதற்கெனக் கையில் சில ரொட்டித் துண்டுகளை எடுத்துச் செல்வர். அவற்றை வழியிலேயே சில ஏழை எளியவர்களுக்கு அறம் செய்து விட்டு நேரே பள்ளிவாயில் சென்று

அங்கே நண்பகல் தொழுகை நேரம் வரை இருந்து வணக்கம் நிகழ்த்திக் கொண்டிருப்பர். அதன் பின் நண்பகல் தொழுகை தொழுது விட்டுத் தம் கடைக்குச் செல்வார்கள். அவர்களின் குடும்பத்தினரோ, அவர்கள் தம்முடன் எடுத்துச் செல்லும் ரொட்டித் துண்டுகளைக் கடையில் வைத்து உண்டு கொள்வர் என்று எண்ணி இருக்க, கடையிலுள்ளவர்களோ, அவர்கள் இல்லத்திலேயே உணவருந்தி விட்டு வருவதாக எண்ணிக் கொள்வார்கள். ஆனால் அவர்களோ, அவற்றை உண்ணாது வழியிலேயே ஏழை எளியவர்களுக்கு அறம் செய்து விட்டுச் செல்வது வீட்டிலுள்ளவர் களுக்கோ, கடையிலுள்ளவர்களுக்கோ எவருக்கும் தெரியாது. இவ்வாறு ஒரு நாளல்ல; பல நாட்களல்ல; ஒரு பத்து ஆண்டல்ல; இருபது ஆண்டுகள் நிகழ்ந்து வந்தன.

ஆன்மீகத் துறையில் புகுந்த அவர்கள், அதிலே உச்ச நிலையை எய்தப் பெறுவதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகளும், பிரயாசைகளும் சிறிதல்ல. அவற்றை அவர்களே கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''பல்லாண்டுகளாக நான், என் மனோ இச்சைகளுடன் பெரும் பேராட்டம் நிகழ்த்தினேன். மனிதர்களை விட்டும் வெருண்டோடி, எனக்கே நான் சிறைத்தண்டனை விதித்துக் கொண்டு, அறையின் கும்மி ருளில் குத்திக் கொண்டு கிடந்தேன். நான் எவ்வளவு தான் என் மனோ இச்சைகளை எதிர்த்துப் போராட்டம் நிகழ்த்திய போதினும், ஆன்மீக ஒளிப்பாதை எனக்குத் திறந்து வழிவிடவே இல்லை.

''நான் என்னுடைய நிலையை மேன்மைப்படுத்த, ஏதேனும் செய்தாக வேண்டும். இல்லையெனில் என் மனோ இச்சைகளிலிருந்து விடுபடச் செத்தாவது மடிய வேண்டும்'' என்று எண்ணினேன்.

''அதன்பின் நான் என் உடலை நோக்கி, 'உடலே! பல்லாண்டுகளாக நீ உன் இச்சையை, நீ விரும்பிய வண்ணம் உண்பதன் மூலமாகவும், பார்ப்பதன் மூலமாகவும், கேட்பதன் மூலமாகவும், உறங்குவதன் மூலமாகவும், இன்பம் நுகர்வதன் மூலமாகவும் தீர்த்துக் கொண்டுள்ளாய். இவ்வாறு செய்து உனக்கே நீ தீங்கிழைத்துக் கொண்டாய். இப்பொழுது நான் சொல்வது போல் செய். நீ இந்த அறையில் நுழைந்து கொள். நீ இறைவனுக்குச் செலுத்த வேண்டிய கடனுக்காக, நான் உன் கால் களையும், கைகளையும் தளைகளால் பிணைத்து, உன் கழுத்தில் அரிகண்டத்தை மாட்டுகின்றேன். நீ அவற்றைப் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டு, அமைதியாக இருப்பின், நீ பேரின்பத்தை எய்தப் பெறுவாய். ஒரு வேளை நீ அப்பேரின்பத்தை எய்தப் பெறும் நற்பேற்றினைப் பெறவில்லையாயின், இறைவனுடைய பாதையில் உயிர் நீத்த பாக்கியமாவது உன்னை வந்தெய்தும்'

“இவ்வாறு கூறி என் உடலை என் விருப்பத்திற்கு இணங்க வைத்து, அதனைச் சிறையிலடைத்த போதினும், எனக்கு யாதொரு ஆன்மீகப் பேரொளியும் தென்படவில்லை. அப்பொழுது, நான் என்னை நோக்கி, ‘ஆன்மீக ஞானிகளுடைய இதயமானது மிகவும் நுண்ணியது என்றும், அது தான் பார்த்தவற்றின், கேட்ட்வற்றின் இரகசியங்களை விளங்கிக் கொள்ளும் என்றும் கேள்வியுற்றுள்ளேன். ஆனால் எனக்கோ, ஒன்றுமே தென்படவில்லையே. இது என்னுடைய குறையேயன்றி வேறில்லை. நான் ஒரு நயவஞ்சகன். எனவேதான் ஆன்மீக ஞானிகளுக்குப் புலப்பட்ட ஞான இரகசியங்கள் எனக்குப் புலப்படவில்லை’ என்று கூறிக் கொண்டேன்.

“இதன் பின், என்னையே நான், உற்று ஆராயத் துவங்கினேன். இப்பொழுதுதான் என்னுடைய குறை எனக்குத் தெரிய வந்தது. என் இதயமும், என் தீய இச்சைகளும் ஒன்று சேர்ந்து சதி செய்து, எனக்கு ஆன்மீகப் பேரொளி பளிச்சிடாது செய்து விட்டன. இறைவனின் திருச் சந்நிதானத்திலிருந்து என் இதயத்தை அடையும் அந்த ஆன்மீகப் பேரொளியை, என் உடல் இச்சைகள் கௌவிப் பிடித்து மறைத்து விட்டன என்ற உண்மையை உணர்ந்தேன்.

“அப்பொழுது எனக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. என் இச்சைகளுக்கு இனி எல்லா விஷயங்களிலும் மாறு செய்வது என்ற முடிவுக்கு வந்தேன். தொழுகை, நோன்பு, ஜகாத் ஆகியவற்றிலும் கூட, நான் அதற்கு மாறு செய்தேன். அது நல்லது என்று எதனைக் கூறுகின்றதோ அதனை நான் செய்யாது விட்டொழித்தேன். அது தீயது என்று எதனைக் கூறுகின்றதோ, அதனை நான் தொடர்ந்து செய்து முடித்தேன். இவ்வாறு செய்து நான் அதனை முறியடித்து, என் உள்ளத்தை விட்டும் வெருண்டோடச் செய்தேன். இதன் பின்னரே எனக்கு ஆன்மீகப் பேரொளி பளிச்சிடலாயிற்று. ஆன்மீக இரகசியங்கள் எனக்கு வெளிப்படலாயின.

“ஒரு நாள் அது திடீரென என் முன் திருத்தோற்றம் வழங்கியது. அப்பொழுது நான் அதனை நோக்கி, ‘நீ யார்?’ என்று வினவினேன்.

“அதற்கு அது ‘நான் ஆசையற்ற நிலை என்ற சுரங்கத்தில் கண்டெடுக்கப்பட்ட நன்மணியாவேன்’ என்று கூறியது.

“இதன்பின் நான் திஜ்லாத நதிக்கரைக்குச் சென்று, நதியில் வலைவீசி, ‘என்வலையில் ஒரு மீன் அகப்படும் வரையில் நான் இவ்விடத்தை விட்டும் அகலமாட்டேன்’ என்று கூறினேன்.

“இறுதியாக, என் வலையில் ஒரு மீன் துள்ளி விழுந்ததும், வலையை இழுத்து மீனைப் பிடித்தேன். அப்பொழுது என் நா ‘ எல்லாப்

புகழும் இறைவனுக்கே ஆகும். அவன் என் அலுவலை அழகாக முடித்துத் தந்தான்' என்று கூறியது.

''அதன் பின் நான் ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் சென்று, நடந்த விவரத்தைக் கூறி, 'இறைவன் என் மீது பேரருள் பாலித்துள்ளான்' என்று கூறினேன்.

''அது கேட்ட அவர்கள், 'மீனுக்குப் பதிலாக ஒரு பாம்பு உன் வலையில் வந்து வீழ்ந்திருப்பின், அதனை இறைவன் உம் மீது அருள் பாலித்துள்ளான் என்று கூறலாம். ஆனால் நீரோ மீன் உம் வலையில் விழ வேண்டுமென்று ஆசை கொண்டு, அந்த ஆசை நிறைவேறிய பொழுது அதனை எவ்வாறு இறையருள் என்று கொள்ள இயலும்? நீர் எவ்வித ஆசையுமற்ற நிலையில் இருக்கும் பொழுது, இது நிகழ்ந்தாலன்றோ இதனை இறையருள் என்று கொள்ளலாம்' என்று இடித்துரைத்தார்கள்''

இதன்பின் ஆன்மீகத் துறையில் படிப்படியாக முன்னேறிச் சென்ற நூரி (ரஹ்) அவர்கள், தன் ஆசைகளையெல்லாம் விட்டொழித்து, இறை விருப்பமே தன் விருப்பமெனக் கொண்டு, அவனை அல்லும் பகலும் மனம், வாக்கு, காயம் ஒன்று பட்டு வணங்கி வந்தார்கள். ஒரு நாள் அவர் களின் நண்பரான ஷிப்லி ( ரஹ்) அவர்கள், அவர்களைக் காணச் சென்ற பொழுது, அவர்கள் தங்களின் உடலிலுள்ள ஒரு மயிர் கூட அசையாத நிலையில் தியானத்தில் ஈடுபட்டிருப்பதைக் கண்டனர். பின்னர் அவர்கள் தியானம் கலைந்து எழுந்த பொழுது, ''தாங்கள் இத்தகைய மேலான தியான நிலையை எவ்வாறு எய்தப் பெற்றீர்கள்?'' என்று ஷிப்லி ( ரஹ்) அவர்கள் வியப்புடன் வினவிய பொழுது, ''எலித்துளையின் முன் வீற்றிருந்த பூனையிடமிருந்து, இதனைக் கற்றுக் கொண்டேன். அது என்னை விட மிகவும் அமைதியாக மனம் ஒன்றி ஆடாது அசையாது இருந்தது'' என்று கூறினார்கள் அவர்கள்.

மற்றொரு நாள் ஷிப்லி (ரஹ்) அவர்கள் மேடை மீதமர்ந்து மக்களுக்கு அறபோதம் நல்கிக் கொண்டிருந்த பொழுது, ஆங்கு வந்த நூரி (ரஹ்) அவர்கள், ஷிப்லி (ரஹ்) அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்தனர். அவர்களும் அதற்குப் பதிலுரைத்தார்கள். அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள் ஷிப்லி (ரஹ்) அவர்களை நோக்கி, ''அபூபக்ரே! ஓர் அறிஞர் தாம் மற்றவர்களுக்கு எடுத்துரைப்பதைத் தாமே முதலில் பின்பற்றாத பொழுது, இறைவன் அவர் மீது மகிழ்ச்சியுறுவதில்லை. தாங்கள் பிறருக்கு அறபோதம் செய்வதைத் தாங்களே முதலில் பின்பற்றுபவரா யிருப்பின் மேடை மீதே அமர்ந்திருங்கள். இல்லையெனில் கீழே இறங்கி வந்து விடுங்கள்'' என்று கூறினர்.

அவர்களின் இக்கூற்று ஷிப்லி (ரஹ்) அவர்களின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியது. சற்றுநேரம் அவர்கள் சிந்தித்தார்கள். அதன்பின் அவர்கள் தாம் வீற்றிருந்த மேடையிலிருந்து கீழே இறங்கி விட்டார்கள்.

இதன்பின் இல்லம் சென்ற ஷிப்லி (ரஹ்) அவர்கள் தம் இல்லத்தின் கதவை இறுகத் தாழிட்டு நான்கு மாத காலம் அங்கேயே அடைபட்டுக் கிடந்தனர். இதன் பின் மக்கள் திரள்திரளாக அவர்களின் இல்லம் சென்று அவர்களுக்கு ஆறுதல் பல கூறி, அவர்களை வெளியே அழைத்து வந்து அவர்களை மேடை மீதேற்றித் தங்களுக்கு அறபோதம் நல்குமாறு கூறினர். அவர்களும் அறபோதம் செய்யத் துவங்கினார்கள். இச்செய்தி நூரி (ரஹ்) அவர்களின் செவிபட்டதும், அவர்களும் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

நூரி (ரஹ்) அவர்கள் அங்கு வந்து சேர்ந்தது தான் தாமதம், ''அபூபக்ரே! தாங்கள் உண்மையை மக்களிடம் எடுத்துரைக்காது மறைத்தீர்கள். அதன் காரணமாக, அவர்கள் தங்களை மேடை மீது ஏற்றித் தங்களுக்கு அறிவுரை நல்குமாறு செய்து விட்டார்கள். ஆனால் நானோ, அவர்களுக்கு உளப்பூர்வமாக அறிவுரை நல்கினேன். ஆனால் அவர்களோ, என்னைக் கல்லாலெறிந்து விரட்டியதுடன், குப்பை மேடையில் புரட்டியும் எடுத்தார்கள்'' என்று கூறினர்.

அது கேட்ட ஷிப்லி (ரஹ்) அவர்கள் ''இதயங்களின் இளவரசரே! தாங்கள் என்ன அப்படி அறிவுரை நல்கினீர்கள்? நான் என்ன அப்படி மறைத்தேன்?'' என்று வினவினர்.

அதற்கு நூரி (ரஹ்) அவர்கள், ''நான் என் அறிவுரையால் சொல்ல வேண்டியதை மக்களிடம் சொல்லி, அவர்களை இறைவனை நோக்கிச் செல்ல அனுமதித்தேன். தாங்களோ சொல்ல வேண்டியதை மக்களிடம் சொல்லாது, மறைத்து இறைவனுக்கும் மக்களுக்கும் இடையே ஒரு திரை போன்று நின்றீர்கள். அவ்விதம் செய்யத் தாங்கள் யார்? தாங்கள் அவ்விதம் செய்வது முறையற்றது என்பது என் கருத்து'' என்று கூறினர்.

நூரி (ரஹ்) அவர்களும், ஷிப்லி (ரஹ்) அவர்களும், ஜுனைத் ( ரஹ்) அவர்களின் ஆன்மீக மாணவராய் இருந்தனர். நூரி (ரஹ்) அவர்களும் ஷிப்லி (ரஹ்) அவர்களும் பள்ளித் தோழர்கள் என்ற முறையில் இவ்வாறு உரையாடிக் கொண்டார்கள். ஆனால் ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கும் நூரி (ரஹ்) அவர்களுக்கும், இடையேயுள்ள உறவு ஆசான் - மாணவன் என்ற முறையிலேயே இருந்தது.

ஒரு நாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன், நூரி (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக அவர்களின் இல்லம் சென்ற பொழுது, அவர்களின் தாளடிகளிலே நூரி (ரஹ்) அவர்கள் வீழ்ந்து "இறைவன் எனக்குச் செய்த அநியாயத்தைப் பார்த்தீர்களா? நான் கடுமையான போராட்டம் நிகழ்த்தினேன். இனிமேல் நான் பேராட எனக்கு ஆற்றலும் இல்லாதொழிந்து விட்டது. முப்பதாண்டுகளாக அவன் தோன்றும் பொழுது நான் மறைந்து விடுகின்றேன். நான் தோன்றும் பொழுது, அவன் மறைந்து விடுகின்றான். நான் இல்லாத போதுதான் அவன் தோன்றுகின்றான். நான் அவனை எவ்வளவோ கெஞ்சி, நானும் நீயும் ஒரே பொழுதில் தோன்ற வேண்டும் என்று இறைஞ்சிய போதினும் "அது முடியாது; ஒன்று நான் இருக்க வேண்டும் அல்லது நீ இருக்க வேண்டும்" என்று கூறிவிட்டான்" என்று இயம்பினர்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, "இறைவனால் முழுக்க முழுக்கச் சோதிக்கப்பட்டு, அதன் காரணமாக யாது செய்வதென அறியாது திக்பிரமையடைந்துள்ள இம்மனிதரைப் பார்த்தீர்களா? இவ்வித நிலையைத்தான் ஒவ்வொருவரும் அடைய முயல வேண்டும்" என்று கூறினர். அதன்பின் அவர்கள் நூரி (ரஹ்) அவர்களை நோக்கி, "அவன் உம்மால் திரையிடப்பட்ட போதினும், அல்லது உம்மால் வெளிப்படுத்தப்பட்ட போதினும், நீர், நீராக இருக்க மாட்டீர். எல்லாம் அவன் மயமாகவே இருக்கும்" என்று கூறினர்.

ஒரு நாள் சிலர் ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் சென்று "சில நாட்களாக நூரி (ரஹ்) அவர்கள், கையில் ஒரு செங்கல்லைத் தூக்கிக் கொண்டு, 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறிய வண்ணம், தெருத் தெருவாக அலைந்து கொண்டுள்ளார்கள். உண்பதோ உறங்குவதோ இல்லை. எனினும் ஒழுங்காகக் குறித்த வேளைகளில் 'உளூச்' செய்து தொழுது வருவதானால், அவர்கள் தம்மை மறந்த ஃபனா நிலையை எய்தவில்லை. தன்னுணர்வோடு தான் இருக்கிறார்கள் என்று எண்ணுகின்றோம்" என்று கூறினர்.

அது கேட்ட ஜுனைத் அவர்கள், "நீங்கள் எண்ணுவது தவறு. தம்மை மறந்த ஃபனா நிலையை எய்தியவர்களை, அவர்கள் மதக் கடமைகளைத் தவற விடாது நிறைவேற்றி வரும் வண்ணம் அல்லாஹ் கண்காணித்து வருகின்றான்" என்று கூறினர்.

இதன்பின் நூரி (ரஹ்) அவர்களைக் காணச் சென்ற ஜுனைத் (ரஹ்) அவர்கள், நூரி (ரஹ்) அவர்களை நோக்கி, "அபுல் ஹஸன்! 'அல்லாஹ், அல்லாஹ்' என்று தெருத் தெருவாக அலறித்திரிவதன் மூலம், அல்லாஹ் விடம் உமக்கு நற்கூலி கிடைக்கும் என்று நீர் எண்ணுவீராயின் கூறும்.

நானும் அவ்விதமே செய்கின்றேன். அதற்கு மாறாக, அவனுடன் திருப்தியுற்ற நிலையில் வாழ்ந்து வருவது அதை விட அதிகமான நற்பலன்களை நல்கும் என்று நீர் கருதுவீராயின், அனைத்தையும் அவன் பொறுப்பில் ஒப்படைத்து விட்டு அமைதியாக வீற்றிரும்'' என்று கூறினர்.

இதன் பின் நூரி (ரஹ்) அவர்கள், தெருவில் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறித் திரிவதை விட்டொழித்து அமைதியுற்றனர். ''எத்துணை மேலான ஆசான் எனக்குக் கிடைத்துள்ளார்! எத்துணை மேலாள ஆசான் எனக்குக் கிடைத்துள்ளார்!!'' என்று அவர்களுடைய நா ஜுனைத் (ரஹ்) அவர்கள் மீது துதி பாடியது.

ஒரு தடவை நூரி (ரஹ்) அவர்கள், நோய் வாய்ப்பட்ட பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவர்களைப் பூக்களுடனும், பழங்களுடனும், காண வந்தனர். பின்னர் ஜுனைத் (ரஹ்) அவர்கள் நோயுற்ற பொழுது, நூரி (ரஹ்) அவர்கள் தம் மாணவர்களை நோக்கி ''நீங்கள் அனைவரும் அவர்களின் நோயைப் பங்கு வைத்துக் கொள்கின்றீர்களா?'' என்று வின வினர். அதற்கு அவர்கள் ஒப்பினர். விரைவில் ஜுனைத் (ரஹ்) அவர்கள் நலம் பெற்றனர். அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''எவரும் நோயாளரைக் காணச் செல்லின் பூக்களையும், பழங் களையும் கொண்டு செல்வதை விட, இவ்வாறு செய்வது தான் நல்லது'' என்று கூறினார்கள்.

ஒரு நாள் நூரி (ரஹ்) அவர்களும், மற்றொருவரும் ஓரிடத்தில் அமர்ந்து கண்ணீர் வடித்து அழுது கொண்டிருந்தனர். அழுது முடிந்ததும், அவருடன் வீற்றிருந்தவர் எழுந்து போய் விட்டார். அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள் தம்மைக் காண வந்த தம் நண்பர்களை நோக்கி, ''இவன் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று வினவினர். ''தெரியாது'' என்று அவர்கள் பதில் கூறவே, ''இவன் தான் இப்லீஸ். இவன் தான் செய்த திருவிளையாடல்களையெல்லாம் என்னிடம் எடுத்துரைத்துத் தன் நிலை குறித்து வருந்திக் கண்ணீர் விட்டு அழுதான். அவனுடன் சேர்ந்து நானும் அழுதேன்'' என்று கூறினர்.

வேறொரு நாள் நூரி (ரஹ்) அவர்கள், தனியே அமர்ந்து, ''இறை வனே! நீயோ எல்லா ஆற்றல்களும் நிறைந்தவன். உன்னுடைய மாபெரும் ஆற்றலினால், நரகத்தையும், அதற்கு எரிபொருளாகப் பல மனிதர்களையும் படைத்துள்ளாய். எனினும் அம்மனிதர்களுக்கு அத்தகு விதியை நீ நிர்ணயித்து விட்ட போதினும், அவர்களைச் சில காலம் நரகத்தில் வீழ்த்தி வருத்தி விட்டுப் பின்னர் உன்னுடைய பேரருளினால், சுவனம் புகச் செய்யும் வாய்ப்பும் அற்றுப் போய்விடவில்லை. நீ என்னை

அவர்களுக்குப் பதிலாக நரகத்தில் வீழ்த்தி, அவர்கள் அனைவரையும் சுவனம் புகச் செய்வாயாக! நீயோ அருளாளரில் அருளாளன். அன்பாளரில் அன்பாளன். நீ விரும்பின் எல்லாம் நிகழும்'' என்று இறைஞ்சிக் கொண்டிருந்தனர்.

இது ஆங்கு வந்த ஜஃபருல் குல்தீ என்பவரின் செவிப் புகுந்ததும், அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. 'இவர்கள் என்ன இவ்வாறு இறைஞ்சுகின்றார்கள்' என்று அவர் எண்ணினார். அன்றிரவு அவர் அயர்ந்து உறங்குங்கால், கனவில் ஒருவர் அவரிடம் வந்து, 'அபுல் ஹுஸைனைக் கௌரவிப்பதாகவும், அவரின் இறைஞ்சுதலுக்காக அவர் மீது தான் இரங்குவதாகவும், அவர் தன் படைப்பினங்கள் மீது கொண்ட கழிவிரக்கத்திற்காக அவரின் பவம் பொறுத்தருளியதாகவும் அவரிடம் அல்லாஹ் கூறச் சொன்னதாகச் சொல்லி விட்டு மறைந்து விட்டார்.

நூரி (ரஹ்) அவர்கள் ஹஜ்ஜு செய்ய மக்கா சென்ற பொழுது, கஃபாவைச் சுற்றி வருங்கால், ஹஜ்ருல் அஸ்வத் என்னும் கருங்கல்லை அடையும் தோறெல்லாம் ''இறைவனே! என்றென்றும் மாறா நிலையையும், தன்மைகளையும் எனக்கு நல்குவாயாக!'' என்று இறைஞ்சி வந்தனர். ஓரிரவு கஃபாவைச் சூழ மனித அரவமே இல்லாதிருப்பதைக் கண்ட நூரி (ரஹ்) அவர்கள் விரைந்தோடிப் போய், அதனைச் சுற்றி வந்தக்கால், தாம் வழக்கமாகச் செய்து வரும் இறைஞ்சுதலை அப்பொழுது சொல்லி இறைஞ்சும் பொழுது, கஃபாவிலிருந்து அசரீரி ஒன்று பின்வருமாறு முழங்கியது; ''அபுல் ஹுஸைனே! உம்மை நான் எனக்குச் சமமாக ஆக்க வேண்டுமென்று நீர் விரும்புகின்றீரா, என்ன? நான் தான் என் தன்மைகளில் நின்றும் மாறாதவன். ஆனால், அதற்கு மாறாக என் அடியார்கள் ஒவ்வொருவரின் தன்மைகளையும் மாற்றியமைத்துக் கொண்டே உள்ளேன். எனக்கும் என் படைப்புகளுக்கும், இடையேயுள்ள வேற்றுமையைக் காட்டுவதற்காகவே இவ்வாறு செய்கின்றேன்.''

இவ் அசரீரியைச் செவியுற்றதும், தாம் செய்த தவற்றை உணர்ந்து இறைவனிடம், தம் பவம் பொறுத்தருளுமாறு அவர்கள் இறைஞ்சினார்கள்.

அவர்களிடம் மக்கள் வந்து ''அல்லாஹ் இருக்கிறான் என்பதற்கு என்ன ஆதாரம்?'' என்று வினவிய பொழுது, ''அல்லாஹ்வே அதற்கு ஆதாரம்'' என்று அவர்கள் விடை பகர்ந்தார்கள்.

மேலும் அவர்கள், அவர்களிடம் தஸவ்வுஃபைப் பற்றி வினவிய பொழுது, ''அல்லாஹ் மீது நட்பும், உலகின் மீது பகைமையும் கொள்வதாகும்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

வேறொரு தடவை ''தஸவ்வுஃப் என்றால் என்ன?'' என்று அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, ''எல்லா சுயநல இன்பங்களையும் துறப்பதேயாகும்'' என்று அவர்கள் பதில் மொழிந்தார்கள்.

''ஸூஃபி என்றால் யார்?'' என்று அவர்களிடம் மீண்டும் கேட்கப் பட்ட பொழுது, ''தமக்கு யாதொன்றும் கிடைக்காத பொழுது, வாய் மூடி மௌனமாக இருந்து, தமக்கு ஏதேனும் கிடைத்த பொழுது, தம்மை விட வேறொருவர் அதற்கு உரியவரெனக் கருதி அதனை அவருக்குக் கொடுப்பவரேயாவர்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

''அல்லாஹ்வுடன் ஒன்றிணைவது எப்படி?'' என்று அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, ''அல்லாஹ்வுடன் ஒன்றிணைவதென்றால், மற்றவை அனைத்தையும் விட்டும் பிரிந்து விடுவதாகும். மற்றவை அனைத்தையும் விட்டும் பிரிந்து விடுவதே அல்லாஹ்வுடன் ஒன்றிணைவதாகும்.'' என்று அவர்கள் கூறினர். அல்லாஹ்வுடைய நினைவில் மனம் ஒன்றித்து விடும் பொழுது, மற்றவை அனைத்தும் மறந்து விடும் பொழுது, மனம் அல்லாஹ்வின் பக்கல் ஒன்றித்து விடுவதையே அவர்கள் இவ்வாறு கூறினார்கள்.

''அல்லாஹ்வைத் தவிர ஒருவனை, அல்லாஹ்வின் பால் அழைத்துச் செல்பவர் வேறு எவருமில்லை'' என்று அவர்கள் கூறினர். இதற்கு ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் விளக்கம் கூறுங்கால், ''இறைவனால் படைக்கப்பட்ட எவராலும், ஒருவனை இறைவன்பால் அழைத்துச் செல்ல இயலாது. தம் பெரிய தந்தை அபூதாலிப் அவர்களை, அண்ணல் நபி (ஸல்) அவர்களால் கூட இறைவன்பால் அழைத்துச் செல்ல இயல வில்லையே'' என்று கூறுகின்றார்கள்.

ஓரிரவு சுதீஸிய்யா வாழ் மக்களுக்கு இறைநேசச் செல்வர் ஒருவர், சிங்கத்தின் பள்ளத்தாக்கில் சிறைப்பட்டிருப்பதாகவும், அவரைச் சென்று மீட்குமாறும் செய்தி வந்தது. உடனே அந்நகர மக்கள் அனைவரும் அப்பள்ளத்தாக்கை நோக்கிச் சென்றார்கள். அங்கு சென்று பார்க்கும் பொழுது, நூரி (ரஹ்) அவர்கள் ஒரு குழி தோண்டி, அதில் வீற்றிருந் தார்கள். அவர்களைச் சூழ பல சிங்கங்கள் அமர்ந்திருந்தன. அவர்களுடன் இதமாகப் பேசி, அவர்களை நகருக்கு அழைத்து வர மக்களுக்குப் பெரும் பாடாகப் போய்விட்டது.

அவர்களை நகருக்கு அழைத்து வந்தபின், அவர்கள் எவ்வாறு அச்சிங்கங்களின் பள்ளத்தாக்கை அடைந்தனர் என்று மக்கள் வினவிய பொழுது ''நான் பாலைவனங்களில் அலைந்து திரிந்தேன். உண்பதற்கோ ஒன்றுமில்லை. என் உள்ளம் புதிய பேரீச்சங்கனிகளை உண்ண

விரும்பியது. அப்பொழுது நான் என் உள்ளத்தை நோக்கி, ''இன்னும் உனக்கு ஆசையுள்ளதா? அதனை என்றுமே இல்லாது ஆக்கி விடு கின்றேன். சிங்கங்களின் பள்ளத்தாக்கிற்குச் செல்கின்றேன். அங்கு சிங்கங்கள் என்னைக் கீறிக் கிழித்துத் தின்றுவிடும். அத்துடன் நீயும் இல்லாதொழிந்து விடுவாய்'' என்று கூறி, சிங்கங்களின் பள்ளத்தாக்கை அடைந்தேன். சிங்கங்கள் என்னைக் கொன்று தின்பதற்கு மாறாக என் முன் வந்து குந்திக் கொண்டு இருந்தன'' என்று கூறினர்.

இக்காலை கலீபாவின் அமைச்சராக இருந்த குலாம் கலீல் என்பவர் சூபிகளின் மீது கொண்டிருந்த காழ்ப்பும் விரோதமும் சிறிதல்ல. அவர் கலீபாவிடம், சூபிகள் பற்றி இல்லாததும், பொல்லாதது எடுத்துரைத்து, அவருடைய உள்ளத்தைக் கெடுத்தார். அவர்கள் காபிர்களென்றும், இஸ்லாமிய நெறிமுறைகளுக்கு மாறாக நடப்பவர்களென்றும், மக்களை வழி கெடுக்கும் கேடர்களென்றும் எடுத்துரைத்தார். உடனே அவர்களை அழைத்து வருமாறு கலீபாவின் ஆணை பிறந்தது. சற்று நேரத்தில் கலீபாவின் முன்னிலையில் அபூஹம்ஸா, ரக்காம், ஷிப்லி, நூரி, ஜுனைத் ஆகியோர் நின்று கொண்டிருந்தார்கள்.

தம்முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட அந்த ஐவரையும், கலீபா யாதொரு கேள்வியும் கேட்கவில்லை. ஒரு முறை அவர்களை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''இவர்கள் ஐவரையும் சிரச் சேதம் செய்க'' என்று ஆணையிட்டார். அத்துடன் அவை கலைந்தது.

அடுத்த கணம் அவர்கள் ஐவரும் கொலைக்களம் நோக்கி அழைத்துச் செல்லப்பட்டார்கள். கொலைஞன் கொடு வாளினைக் கூர் செய்தான். அதன்பின் ரக்காம் (ரஹ்) அவர்களைக் கொலை மேடை மீதேறி வருமாறு கூறினான். ஆனால் அவர்களுக்கு முன்பாக, நூரி (ரஹ்) அவர்கள் பாய்ந்தோடி, ''என்னை முதலில் கொலை செய்க'' என்று கூறினார்கள். ''ஐய! இஃது தங்களின் முறையல்ல. முதலில் கொலை செய்யப்படுபவர் அவர்தாம். தங்களின் முறை வரும் பொழுது, தாங்கள் தவறாது தலை துணிக்கப் பெறுவீர்கள். அதுவரை பொறுத்திருங்கள். வாள் என்பது அவசரத்தில் பயன்படுத்தக் கூடிய பொருளல்ல'' என்று கூறினான்.

அது கேட்ட நூரி (ரஹ்) அவர்கள், ''நீ கூறுவது ஒரு வகையில் பார்த்தால் சரிதான். ஆனால் நானோ, என் நண்பர்களை, என்னை விட மிகமிக மேலாகக் கருதுகின்றேன். எனவே தான் இவ்வாறு கூறுகின்றேன். இவ் உலகில் உயரிய பொருள் ஒன்று உண்டென்றால், அது உயிர் தான். மறுமையின் ஆயிரம் ஆண்டுகளை விட, இம்மையின் ஒரு கணம் மிகவும் மேலானது என்பதை நான் நன்கறிவேன். எனினும் எஞ்சி இருக்கும் என் சிறிதளவு நேரத்தையும், என் சகோதரர்களின் உயிரை அந்தச் சிறிதளவு

நேரத்திற்கு நீடிப்பதற்காக நான் தியாகம் செய்ய விரும்புகின்றேன்'' என்று கூறினர்.

இச்செய்தி கலீபாவுக்குத் தெரியப்படுத்தப்பட்ட பொழுது, அவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ''இவர்கள் என்ன, வானவர்களா அல்லது மனிதர்கள் தாமா? இவர்களைப் பற்றி என்ன வென்ன வெல்லாமோ குலாம் கலீல் கூறினாரே. அவர் தவறாக நம்மிடம் கூறி இருப்பாரோ, என்னவோ தெரியவில்லையே. இவர்களைப் பற்றித் தீர விசாரித்து ஒரு முடிவு செய்வோம்'' என்று எண்ணிய கலீபா, ''அவர்களைக் கொலை செய்யவேண்டாம். விசாரணைக்கு நீதி மன்றம் அழைத்துச் செல்க'' என்று ஆணையிட்டார். கொலைக்களத்தில் நின்று கொண்டிருந்த அந்த ஐவரும், சிறிது நேரத்தில் நீதி மன்றத்தில் நின்று கொண்டிருந்தார்கள். நீதி மன்றம் மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

''எவ்வித ஆதாரமுமின்றி இவர்கள் மீது குற்றம் சுமத்தி, இவர்களைத் தண்டனைக் குள்ளாக்குவது தவறு'' என்று கூறித் தம் விசாரணையைத் துவங்கிய காஜி அபுல் அப்பாஸ் இப்னு அலீ, ஏற்கனவேயே ஜுனைத் (ரஹ்) அவர்களின் அறிவாற்றலை அறிந்திருந்ததாலும், நூரி (ரஹ்) அவர் களின் பேச்சைக் கேட்டிருந்ததாலும், அவர்கள் இருவரிடமும் யாதொன்றும் வினவவில்லை. எனவே ஷிப்லி (ரஹ்) அவர்களின் பக்கல் திரும்பி, ''இந்தப் பைத்தியக்காரரிடம், அவர் பதில் கூற இயலாத சில கேள்விகளைக் கேட்கின்றேன்'' என்று கூறிவிட்டு, ''இருபது தீனார் களுக்கு எத்தனை தீனார் ஜகாத் கொடுக்க வேண்டும்?' என்று வினவினார்.

அதற்கு ஷிப்லி (ரஹ்) அவர்கள் ''இருபதரை தீனார்கள்'' என்று பதிலிறுத்தார்கள்.

அது கேட்ட நீதிபதி சிரித்துக் கொண்டு, ''இந்தப் புனிதமான ஜகாத் முறையை நிறுவியவர் யார்?'' என்று வினவினார்.

அதற்கு ஷிப்லி (ரஹ்) அவர்கள் ''இந்த முறையை நிறுவியவர் அபூபக்ர் (ரலி) அவர்களாவர். அவர்கள் இறைவனுக்காக, இறைவனின் திருத்தூதருக்காக, இறைவனின் மார்க்கத்திற்காக, நாற்பதாயிரம் தீனார் களைச் செலவழித்தார்கள். தங்களுக்கென ஒரு தீனார் கூட வைத்துக் கொள்ளவில்லை'' என்று விடை பகர்ந்தனர்.

''அதெல்லாம் சரிதான்; என்னவோ அரை தீனார் என்று கூறினீரே. அஃதென்ன?'' என்று நீதிபதி வினவினார்.

''அதுவா? அதுவே ஒருவன் தன்னிடம், அந்த இருபது தீனார் களையும், தனக்கென வைத்துக் கொண்டதற்காகச் செலுத்த வேண்டிய அபாரத் தொகை'' என்று அவர்கள் பதில் கூறினார்கள்.

அது கேட்டு நீதிபதி சற்று நேரம் வாயடைத்து வீற்றிருந்தார்.

அதன்பின் நூரி (ரஹ்) அவர்களை நோக்கிப் பல்வேறு மார்க்க சட்ட திட்டங்கள் பற்றியும் வினவினார். அவற்றிற்கு அவர்கள் அளித்த மறுமொழியானது, நீதிபதியைத் திணற வைத்துவிட்டது. அவருடைய மூளை குழம்பியது. எல்லாம் அவருக்குக் குழப்ப மயமாகத் தென் பட்டன. அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள், நீதிபதியை நோக்கி, ''நீதிபதி அவர்களே! தாங்கள் பல்வேறு கேள்விகளைக் கேட்டீர்கள். ஆனால் தாங்கள் ஒழுங்கான ஒரு கேள்வியையாவது கேட்பீர்கள் என்று நானும் எதிர்பார்த்தேன். ஆனால் எதிர்பார்த்து, எதிர்பார்த்து ஏமாந்ததைத் தவிர்த்து வேறொன்றையும் நான் காணவில்லை. இறைவனுக்குச் சில நல்லடி யார்கள் உள்ளார்கள். அவர்கள் அவன் மூலமாகவே பார்க்கின்றார்கள். அவன் மூலமாகவே அமைதி கொள்கின்றார்கள் அவர்களின் வாழ்வு சிந்தனை முழுவதும் அவன், அவன் மயமாகவே உள்ளது. அவர்களின் வாழ்வு முழுவதும் அவன், அவன் மயமாகவே உள்ளது ஒரு கணம் அவர்களின் சிந்தனை அவனைவிட்டு வேறுபக்கம் திரும்பி விட்டாலும், அவர்களின் ஆன்மா தாங்கொணாத்துன்பத்தால், அவர்களின் உடலை விட்டும் கழன்றுவிடும். இது அறிவியல்களுக்கெல்லாம் அறிவியலாக இருக்க, இதைப்பற்றி ஒரு கேள்வியேனும் கேட்காது, வேறு எதைப் பற்றி எல்லாமோ கேட்கின்றீர்களே'' என்று கேட்டார்கள்.

யாது பதிலுரைப்பது என அறியாது திணறிய நீதிபதி, ஒரு காகிதத்தை எடுத்து மடமடவென்று யாதோ எழுதி, இலச்சினையிட்டு கலீபாவின் திருமுன் அனுப்பிவைத்தார். அந்த மடலில் அவர் என்ன எழுதினார் என்பது இறைவனுக்கும், அவருக்குமேயன்றி வேறு எவருக்கும் யாதொன்றும் தெரியாது.

அரியணையிலே கொலுவீற்றிருந்த கலீபாவின் முன் நீதிபதி எழுதிய மடலை அமைச்சர் எடுத்து வைக்க, அதனைக் கலீபா எடுத்துப் பிரித்துப் பார்க்க, அது பின்வருமாறு மிடுக்காகப் பேசியது: ''இவர்களை நிரீஸ் வரர்கள் என்றும், காஃபிர்கள் என்றும் நான் தீர்ப்பளிப்பின், உலகில் உருவ மற்ற ஒரே இறைவனைத் தொழுபவர் ஒருவருமில்லை என்று தான் நான் தீர்ப்பளிக்க வேண்டி இருக்கும்.''

நீதிபதியின் இம்மடல் கலீபாவின் தலையைச் சில கணம் கிடுகிடுக்க வைத்தது. அதன்பின் அவரின் வாயிலிருந்து ''அந்த ஐவரையும் ஈங்கு அழைத்து வருக!'' என்று ஆணை பிறந்தது.

சற்று நேரத்தில் தம்முன் வந்து நின்ற அந்த ஐவரையும், கலீபா நோக்கி, ''தங்களுக்கு ஏதேனும் விருப்பம் இருப்பின் அதனைக் கூறுங்கள். நிறைவேற்றித் தருகிறேன்'' என்று கனிவோடும் பரிவோடும் கூறினார்.

அதற்கு அவர்கள் அனைவரும் ஒருமித்து, ''தாங்கள் எங்களைப் பற்றிய நினைவே தங்களின் உள்ளத்தில் இடம் பெறாது, அகற்றி விடுவதே, தாங்கள் எங்களுக்குச் செய்யும் பேருதவியாகும். தாங்கள் எங்களைக் கௌரவப்படுத்துவதையும், நாங்கள் விரும்பவில்லை. எங்களைப்பற்றிய வரையில் அவை இரண்டும் எங்களுக்கு ஒன்றுதான்'' என்று கூறினர்.

கலீபாவின் கண்களில் நீர் மல்கியது. அவர்களை மரியாதையுடன் அனுப்பி வைத்தார் அவர்.

இது நிகழ்ந்து சிலகாலம் ஆயிற்று. நூரி (ரஹ்) அவர்கள் காஃபிர் என்று குற்றம்சாட்டப்பட்டு கலீபாவின் முன்னிலையில் மீண்டும் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருந்தார்கள். காஃபிர் என்று குற்றம் சாட்டப் படும் வண்ணம் அவர்கள் என்ன அத்துணைப் பெரிய தவறு செய்தார்கள்?

ஒருநாள் ஒருவர் பள்ளியில் தொழும் பொழுது, தம்முடைய மீசையை முறுக்கிக் கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''இறைவனுடைய மீசையி லிருந்தும், கையை எடு'' என்று கூறினார்கள். அவ்வளவுதான். உடனே பள்ளிமுழுவதும் ஒரே குழப்பமயமாகி விட்டது. ''எவ்வாறு இவர் இப்படிக் கூறலாம்? இது குஃப்ர் அல்லவா?'' என்று ஆங்கிருந்த மக்கள் சீறிச் சினந்தனர். இறுதியாக நூரி (ரஹ்) அவர்களைப் பிடித்துக்கொண்டு வந்து, கலீபாவின் முன் நிறுத்தி நடந்த, வரலாற்றை எடுத்துரைத்துத் தீர்ப்பு வழங்குமாறு வேண்டி நின்றார்கள்.

அப்பொழுது கலீபா, நூரி (ரஹ்) அவர்களை நோக்கி, ''நீர் அவ்வாறு கூறியது உண்மைதானா?'' என்று வினவினார்.

''ஆம்'' என்று திடமாக மறுமொழி பகர்ந்தார்கள் அவர்கள்.

''ஏன் அவ்வாறு கூறினீர்?''

''இறைவனின் அடியார்கள் யாருக்கு உரியவர்கள்''.

''இறைவனுக்கு''

''அவ்விதமாயின் அவரின் மீசை எவருக்கு உரியது?''

''அந்த அடியார் எவருக்கு, உரியவராக உள்ளாரோ அவருக்கு'' என்று பதில் கூறிய கலீபா, 'முன்னரே இவரைக் கொன்றொழிக்காது,

என்னைக் காத்தருள் புரிந்த இறைவனுக்கே எல்லாப் புகழும்'' என்று கூறி அவர்களை மரியாதையுடன் இல்லம் அனுப்பி வைத்தார்.

ஒருநாள் அவர்கள் பஸராவில், ஒரு தெரு வழியே சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஜாடிகள் ஒன்றின் பின் ஒன்றாக அங்கு கொண்டு வந்து இறக்கப்பட்டன. மொத்தம் முப்பது ஜாடிகள். அவற்றின் மீது 'லுத்ஃப்' (இன்பம்) என்ற சொல் பொறிக்கப்பட்டிருந்தது. அதைக் கண்ட அவர்கள் வியப்பு மேலிட்டவர்களாய், ''அதில் என்ன இருக்கிறது?'' என்று வினவினார்கள். 'மது' என்று பதில் கூறினான் ஒருவன். ''எங்கு செல்கிறது?'' என்று அடுத்து வினவினார்கள். ''அரண்மனைக்கு'' என்றான் அவன். அடுத்த கணம் அவர்கள் உணர்ச்சி மீக்குற்றவர்களாய், அவற்றின் மீது பாய்ந்து தம் கையிலிருந்த கழியால் அவற்றில் இருபத்து ஒன்பது ஜாடிகளை ஒன்றன் பின் ஒன்றாக உடைத்தெறிந்தார்கள், எஞ்சியது ஒன்றே ஒன்றுதான்.

இவ்வழக்கு அரசரின் முன் வந்தது. தம்முன் குற்றம் சாட்டப்பட்டு வந்து நின்ற நூரி (ரஹ்) அவர்களை, அரசர் 'மூதலித்' ஏற இறங்கப் பார்த்து 'யார் நீ?' என்று உக்கிரத்துடன் வினவினார்.

''நான் ஒரு சீர்திருத்தவாதி'' என்று அமைதியுடன் பதில் கூறினார்கள் நூரி (ரஹ்) அவர்கள்.

''என்ன! சீர்திருத்தவாதியா? எவன் அந்தப் பதவியை உமக்குத் தந்தான்?'' என்று அரசரின் வாயிலிருந்து, அனற்பொறி தெறித்தாற் போல் வெளி வந்தது அடுத்த கேள்வி.

''தங்களுக்கு எவன் இந்த அரசபாரத்தைத் தந்தானோ, அவனே எனக்குச் சீர்திருத்தவாதிப் பதவியை வழங்கினான்'' என்று மீண்டும் அமைதியாகப் பதில் கூறினார்கள் நூரி (ரஹ்) அவர்கள்.

அவர்களின் இப்பதில் அரசரைச் சற்று நேரம் திணற வைத்தது. எனினும் சமாளித்துக் கொண்டு, ''ஏன் அவற்றை உடைத்தீர்?'' என்று வினவினார்.

''தங்களின் மீது எனக்குள்ள அன்பால் தான் அவ்வாறு செய்தேன். தங்களைத் தவறிலிருந்து காக்க விரும்பியே அவ்வாறு செய்தேன்'' என்றனர் நூரி (ரஹ்) அவர்கள்.

''நல்லது; இருபத்தொன்பது ஜாடிகளை உடைத்த நீர், ஒன்றை மட்டும் உடைக்காது ஏன் பாக்கி வைத்து விட்டீர்?''

''இறைவனின் கட்டளைகள் புறக்கணிக்கப்படுவதை நான் விரும்பவில்லை. இறைவனுக்காக வேண்டியே, நான் அந்த ஜாடிகளை

உடைத்தேன். இருபத்தொன்பது ஜாடிகளை உடைக்கும் வரையில் அந்த எண்ணமே என் உள்ளத்தில் மிகைத்திருந்தது. ஆனால், அடுத்து எவருமே செய்யத் துணியாத ஒரு செயலை நான் செய்து விட்டதாக ஒருவிதத் திமிர் என் உள்ளத்தில் தளிர்விட்டது. அடுத்த கணம் நான் முப்பதாவது ஜாடியை உடைப்பதைவிட்டும், என்னுடைய கையைத் தடுத்துக் கொண்டேன்''.

இதைக் கேட்டதும் அரசரின் தலை கிடுகிடுத்தது. தம் முன் வந்து நிற்பவர் சாமான்யரல்லர், ஒரு மகான் என்பதை அவர் உணரலானார். உடனே அவர் நூரி (ரஹ்) அவர்களை நோக்கி, ''அடிகளாரே! சென்று வாருங்கள். இறை கட்டளைக்கு மாறாக, எது நடப்பினும் அதனைத் தடுத்து நிறுத்துங்கள். அதற்கு நான் தங்களுக்கு முழு உரிமை தருகிறேன்'' என்று மொழிந்தார் அரசர் மூதலித். அவர் உயிரோடிருக்கும் வரையில் பஸாராவில் வாழ்ந்து, சீர்திருத்தம் செய்து வந்த நூரி (ரஹ்) அவர்கள், அவர் இறந்ததன் பின்னரே பக்தாது திரும்பினர்.

அவர்கள் பக்தாதில் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுது, ஓரிரவு தங்களின் இல்லத்திலிருந்து வெளியே வந்தார்கள். தெருவில் எங்கணும் அமைதி நிலவியது. அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு அவர்கள் தெரு வழியே நடந்து கொண்டிருந்தார்கள். கடைவீதியின் பின்புறத்தில் அரசாங்க நகர்க் காவலன் ஒருவன், ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் பிடித்துக் கொண்டு ''நிச்சயமாக நீங்கள் குற்றமிழைத்து விட்டீர்கள். நான் உங்களை ஆட்சியாளரிடம் கொண்டு செல்வேன்'' என்று கூறிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது அவர்கள் அக்காவலனை அணுகி, ''அப்பா! அவர்களை விட்டுவிடு. அவர்களின் குற்றத்தை மன்னித்து மறைத்துவிடு'' என்று அவர்களுக்காகப் பெரிதும் பரிந்துரை செய்தார்கள். எனினும் அவன் கேட்கவில்லை.

எனவே அவர்கள் தம் பையிலிருந்த சில திர்ஹங்களையும் தம் போர்வையையும் அவனிடம் கொடுத்து, இவற்றை வைத்துக்கொள். அவர்களை விட்டுவிடு. நான் வேண்டுமென்றால் உன்னோடு ஆட்சி யாளரிடம் வருகிறேன்'' என்று கூறினர்.

அதுகேட்ட அவன் ''நல்லது, ஆனால் ஒரு நிபந்தனை. நான் தங்களைப் பற்றி ஆளுநரிடம் யாது கூறினும், அதனைத் தாங்கள் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது'' என்று கூறினான்.

''சரி; அவ்விதமே செய்கிறேன்'' என்றார்கள் அவர்கள். உடனே அவ்ன் அவ்விருவரையும் விட்டுவிட்டு, அவர்களின் கழுத்தில் துணியைப் போட்டு முறுக்கி, அவர்களை அழைத்துக் கொண்டு

ஆளுநரிடம் சென்று, ''நான் இவரைக் கடைத்தெருவில் ஒரு பெண்ணுடன் இருக்கும் பொழுது பிடித்தேன்'' என்று கூறினான்.

உடனே ஆளுநர், அவர்களை நோக்கி ''இதுபற்றி நீர் என்ன கூறுகிறீர்?'' என்று வினவினார்.

அதற்கு அவர்கள் நானும், இவரும் ஒரு பெண் ஆகிய மூவரும் கடைத்தெருவில் இருந்தோம்'' என்று கூறினர்.

அப்பொழுது அவர்களின் முகத்தைக் கூர்ந்து நோக்கி விட்டு, ''தங்களின் முகத்தைப் பார்த்தால், தீயாரின் முகம் போன்றில்லையே'' என்று கூறினார் ஆளுநர்.

அதன்பின் அவர் காவலனை நோக்கி, ''நடந்ததைக் கூறு. இல்லையேல் தண்டிப்பேன்'' என்று மிரட்டினார்.

அப்பொழுது காவலன், நடந்ததை நடந்தவாறே நவின்றான்.

அப்பொழுது ஆளுநரின் கண்கள் பனித்தன. அவரும் காவலனும், அவர்களின் கரம்பற்றி தங்களை மன்னித்தருளுமாறு வேண்டி, அவர்களை மரியாதையுடன் இல்லம் அனுப்பி வைத்தார்கள்.

தன்னுடைய அன்பிற்குரியாராகிய நூரி (ரஹ்) அவர்கள் மீது, தன்னுடைய அருண்மாரியை இறைவன் இடைவிடாது சொரிந்து கொண்டிருந்ததோடல்லாது, அவர்களுடைய இறைஞ்சுதலையும் இறைவன் நிறைவேற்றி வந்தான்.

ஒருநாள் நூரி (ரஹ்) அவர்கள் ஒரு குளத்தில் இறங்கிக் குளித்துக் கொண்டிருந்தபொழுது, கரையிலிருந்த அவர்களின் துணிகளைக் கள்வன் ஒருவன் களவாடிச் சென்று விட்டான். நூரி (ரஹ்) அவர்கள் குளத்தில் குளித்து விட்டுக் கரையேறிய பொழுது அக்கள்வன் தான் களவாடிச் சென்ற துணிகளை, ஆங்குக் கொண்டுவந்து வைத்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவனுடைய கை சூம்பிப் போயிருந்தது. அதைக் கண்டதும் நூரி (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. ''இறைவனே! அவன்தான் என் துணிகளைத் திருப்பிக் கொண்டு வந்து வைத்துவிட்டானே. இன்னும் ஏன் அவனைச் சோதிக்கின்றாய்? அவனுடைய கை முன்பு போல் ஆகப் பேரருள் பாலிப்பாயாக!'' என்று இறைஞ்சினர். இறைஞ்சிய அடுத்த கணம், அவனுடைய கை முன்பு போல் ஆனது.

மற்றொருநாள், பக்தாதின் அடிமைச் சந்தையிலே நெருப்புப் பற்றிக் கொண்டு, பக்தாது நகரமே அமளி துமளியாகியது. பல கடைகள் எரிந்து

சாம்பலாயின. பலர் நெருப்புக்கு இரையானார்கள். அப்பொழுது ஒரு கடையில் அழகொழுகும் இளங்காளைகளான இருகிரேக்கர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைச் சுட்டெரிக்க நெருப்பு நாக்கு நீட்டி முனைந்து நின்றது. அதனை எதிர்த்து அவர்கள் கடும் போராட்டம் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். போராட்டம் பலனளிக்காது போகவே, அவர்கள் கையை உயர்த்தி அபயம், அபயம் என்று அலறினார்கள். அப்பொழுது நெருப்பு அவர்களைச் சுற்றி வளைந்து கொண்டது. 'அவர்களை விரைவில் பிடித்து விழுங்கு' என்று கூறுமாப் போன்று காற்றும் கனவேகத்தில் வீசியது. அதன் காரணமாக அவ்விரு இளவல்களும் நெருப்புக்கு இரையாவது எக்கணமோ என்ற நிலை ஏற்பட்டது.

நிலையை நன்கு உணர்ந்த அவர்களின் எசமான், அவர்களை எவ்வாற்றானும் காப்பாற்றி விடவேண்டுமென்று எண்ணங்கொண்டு, அவர்களைக் காப்பாற்றிக் கொணபவர்களுக்கு ஆயிரம் தீனார் அன்பளிப்பு நல்குவதாகக் கூறினார்.

"ஆயிரம் தீனார் என்ன? ஆயிரம் ஆயிரம் தீனார் தந்தாலும் யார் அவர்களைக் காப்பாற்றத் தீயினுள் பாய்ந்து தன் உயிரை மாய்த்துக் கொள்வது?" என்று கூறிச்சென்றனர் பலர்.

அப்பொழுது ஒரு பெரியார் 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்று கூறிக்கொண்டு, சரேலெனத் தீயினுள் பாய்ந்தார். அடுத்த கணம் அந்த இரு இளவல்களையும், தம் இருபுயங்களிலும் இடுக்கிக் கொண்டு அவர் வெளியில் வந்தார். அது கண்டு அக்கடையின் எசமானருக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், மகிழ்ச்சிக்கும் மட்டில்லை, "இனி என் கடை முழுவதும் எரிந்து சாம்பலாகி விடினும், பாதகமில்லை. இந்த இரு இளவல்களின் உயிரும் காப்பாற்றப்பட்டதே எனக்குப் போதும்" என்று கூறினார் அவர். அதன்பின் தாம் வாக்களித்த வண்ணம் ஆயிரம் தீனார்களை எடுத்து அப்பெரியாரிடம் கொடுத்தார் அவர்.

அப்பொழுது அப்பெரியார் அதனை வாங்க மறுத்து, "அந்தப் பணத்தை நீரே வைத்துக்கொண்டு, இறைவனுக்கு நன்றி கூறுவீராக! எனக்கு இறைவன் அளித்த இத்தகுதி, இந்தப் பணத்தை நான் ஏற்றுக் கொள்ளாததன் காரணமாக, மறுமையை இம்மைக்காகப் பரிவர்த்தனை செய்து கொள்ளாததன் காரணமாக நல்கப்பட்டதேயன்றி வேறில்லை" என்று கூறினார். அவ்வாறு கூறிய அப்பெரியார் யார்?. நூரி (ரஹ்) அவர்களேயாவர்.

ஒரு தடவை அவர்கள் தமக்கு உரியதாக இருந்த வீடொன்றை விற்றார்கள். அதன் மூலம் அவர்களுக்கு இருநூறு பொற்காசுகள்

கிடைத்தன. அவற்றை எடுத்துக்கொண்டு சென்று, அவர்கள் ஒரு பாலத்தின் மீது அமர்ந்து, அவற்றை ஒன்றன் பின் ஒன்றாகக் கீழே ஓடிக் கொண்டிருந்த ஆற்றில் வீசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களின் வாய், ''இறைவனே! இவற்றால் மயங்கி உன்னை விட்டும் நான் வெருண்டோடி விடாமல் என்னைக் காத்தருள் புரிவாயாக!'' என்று இறைஞ்சிக் கொண்டிருந்தது.

சிலபொழுது அவர்களும், ஜுனைத் (ரஹ்) அவர்களும், பக்தாதின் கடைவீதி வழியாகச் செல்லும் பொழுது, கடைகளில் நுழைந்து தம் கையில் பட்டதை எடுத்துக் கொண்டு செல்வார்கள். வணிகர்களோ யாதும் கூறார்கள். அவ் இருவரும் அவற்றைத் தம் இல்லம் எடுத்துச் செல்வார்களா என்றால், இல்லை. மாறாக, தம்முன் எதிர்ப்பட்டவர்கள் அவற்றைக் கேட்பின், அவர்களிடம் அவற்றைக் கொடுத்துவிடுவார்கள், இவ்வாறு அவர்கள் செய்ததற்குக் காரணம், 'அனைத்தும் அல்லாஹ் வுக்கே உரியவை; எவரும் அவை பற்றி உரிமை பாராட்டுவதற்கில்லை' என்ற கொள்கையை அவர்கள் கொண்டிருந்ததேயாகும்.

ஒரு நாள் ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் ஒருவர் வந்து, நூரி (ரஹ்) அவர்கள் சிலரிடம் கைநீட்டிக் கேட்டதைத் தாம் கண்ணால் கண்டதாகக் கூறினார். அது கேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''அபுல் ஹஸன் தம் தேவையை முன்னிட்டு எவரிடமும் கைநீட்டி இரந்தார் என்று நீர் எண்ண வேண்டாம். பிறருக்கு நன்மை விளைவிப்பதற்காகவே அவர் அவ்வாறு செய்தாரேயன்றி வேறில்லை?'' எனக்கூறினர்.*

தம்முடைய பதில் அவருக்குத் திருப்தியளிக்காததைக் கண்ட அவர்கள், ஒரு தராசில் நூறு திர்ஹங்களை வைத்து நிறுத்து, அதற்கு மேல் ஒரு பிடிதிர்ஹங்களை அள்ளிப்போட்டு, அவற்றை நூரி (ரஹ்) அவர்களிடம் கொண்டுபோய்க் கொடுக்குமாறு கூறினர். அவரும் அவ்வாறே செய்தார். அதனைப் பெற்ற நூரி (ரஹ்) அவர்கள், ஒரு தராசு கொணருமாறு செய்து, அதில் நூறு திர்ஹங்களை நிறுத்து, அவற்றை ஜுனைத் (ரஹ்) அவர்களிடமே திரும்பிக் கொடுத்து விடுமாறு கூறி எஞ்சியதை மட்டும், தாம் எடுத்துக் கொண்டார்கள். அப்பொழுது அவர்கள் ''ஜுனைத் (ரஹ்) அவர்கள் நுண்ணறிவாளர். அவர்கள்

---

* யதுல் முஃத்தா அல் உல்யா'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். இதற்குக் கொடுக்கும் கை உயர்ந்தது என்று பொதுவாக விளக்கம் கூறப்படுகிறது. ஆனால் இதில் உள்ள 'யதுல் முஃத்தா' என்ற சொற்களுக்கு வாங்கக் கூடியவரின் கை! என்று சிலர் பொருள் விரிக்கிறார்கள். ஏனெனில் அவர்தாம் வாங்குவதன் மூலம், கொடுப்பவருக்கு நன்மை கிடைக்கச் செய்கின்றாரல்லவா? அதனால் அவருடைய கைதான் மேலானது என்று இயம்புகின்றனர்.

கயிற்றின் இரு நுனிகளையுமல்லவோ பிடித்துக்கொள்ள விரும்புகின்றனர்'' என்று கூறினர்.

அவற்றைப் பெற்ற அவர் அவற்றை ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் திரும்பக் கொண்டுவந்து கொடுத்து, நடந்தவற்றைக் கூற, ''அல்லாஹ்வுக்காக உள்ளதை எடுத்துக் கொண்டார், எனக்காக உள்ளதை அவர் திருப்பித் தந்துவிட்டார்'' என்று கூறினர். அவர்கள் கூறியதன் பொருள் யாது என்பதை விளங்காத அவர், அதனை விளக்கிக் கூறுமாறு வேண்ட, ''நான் அவருக்கு நூறு திர்ஹங்களை மறுமைப் பலனை எதிர்பார்த்தே அனுப்பிவைத்தேன். அதற்குமேல் ஒரு பிடி திர்ஹங்களையும் சேர்த்து அனுப்பியது, நான் அல்லாஹ்வுக்காகச் செய்த அறமாகும். நான் அல்லாஹ்வுக்காகச் செய்ததை ஏற்றுக் கொண்டு, எனக்காக உள்ளதைத் திரும்பித் தந்து விட்டார்'' என்று அவர்கள் எடுத்துரைத்தார்கள். அது கேட்டு வாயடைத்து வீற்றிருந்தார் அவர். நூரி (ரஹ்) அவர்களின் உண்மையான மகாத்மியம் அவருக்கு அப்பொழுதுதான் தெரியவந்தது.

அவர்களின் மகாத்மியம் நானிலத்தின் நாலாபக்கங்களிலும் பரவவே, அவர்களைக் காண்பதற்காக இஸ்பஹானிலிருந்து வெறுங் காலுடன் நடந்து வந்தார் ஒருவர். இதனை உள்ளுணர்வால் விளங்கப் பெற்ற நூரி (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களை நோக்கி, ''ஓர் இளவல் என்னைக் காண்பதற்காக இஸ்பஹானிலிருந்து வெறுங்காலுடன் நடந்து வருகிறார். அவர் வருவதற்குப் பாதையைத் துப்புரவு செய்துவையுங்கள்'' என்றனர்.

அவ்வாறே சற்று நேரத்தில் ஓர் இளவல் வெறுங்காலுடன், அவர்களின் தவச் சாலைக்கு வந்து சேர, அவர்களை எந்த ஊர் என்று வினவினர் மாணவர்கள். இஸ்பஹான் என்று அவர் பதில்கூறவே, அவரிடம் அவர்கள் மறுவார்த்தை பேசாது, அவரைத் தம் ஆசிரியரின் திருமுன் கொண்டுவந்து நிறுத்தினர்.

அப்பொழுது நூரி (ரஹ்) அவர்கள் அவரை ஏறிட்டுப்பார்த்து, ''உம் நாட்டு மன்னர் நீர் எம்மிடம் வருவதை விரும்பாது, 'நீர் அவரிடம் செல்லாதீர். நான் அதற்குப் பகரமாக ஓர் ஆரணங்கை உமக்கு மணமுடித்து வைத்து, ஓர் அழகு மாளிகையில் உம்மைக் குடியேற்றி வைக்கிறேன்' என்று கூறின் ''நீர் என்ன செய்வீர்?'' என்றனர். அதற்கு அவர் ''உண்மையில் அவ்வாறே நிகழ்ந்தது. என்னிடம் அவ் விதமே மன்னர் கூறினார். நான் அதனை ஏற்றுக் கொள்ளாது, தங்களை வந்தடைந்தேன்'' என்று கூறினார். அப்பொழுது அவர்கள் அவ் இளவலை நோக்கி ''அல்லாஹ்வை நாடுகின்றவன், அவனைத் துதிப்பதற்குப் பகரமாக அண்ட கோளங்களைத் தரினும் ஏற்றுக் கொள்ள மாட்டான்'' என்று கூறினர்.

ஒருநாள் அவர்களின் ஊழியப் பெண் வெளியிலிருந்து ரொட்டியும் பாலும் வாங்கி வந்தாள். பாலை அவர்கள் அடுப்பிலிட்டுக் காய்ச்சிய பொழுது, அடுப்புக்கரி அவர்களின் கையில் ஒட்டிக் கொண்டது. கரி பிடித்த கையுடன் அவர்கள் ரொட்டியைப் பிய்த்துப் பாலில் நனைத்துச் சாப்பிட்டதைக் கண்ட அவர்களிக் ஊழியப் பெண், 'இவர்களை அல்லாஹ்வின் அருள் நேசர் என்று கூறுகின்றார்கள். தூய்மையுடன் இருந்து உணவருந்தக் கூட இவர்களுக்குத் தெரியவில்லையே' என்று எண்ணினாள். இவ்வாறு எண்ணிவிட்டு, அவள் வெளியே வந்த பொழுது, ஒரு பெண் அவளைத் தன் உடைகளைத் திருடிச் சென்றதாகக் குற்றம் சாட்டி நீதிபதியிடம் அழைத்துச் சென்றாள். இதனைக் கேள்வியுற்ற நூரி (ரஹ்) அவர்கள் நீதிபதியிடம் சென்று, தம் ஊழியப் பெண் நிரபாரதி என்று கூற, அதற்கு ஆதாரம் யாது என்று வினவினார் நீதிபதி. அக்காலை வாதியின் உறவினரே களவு போனதாகக் கூறப்பட்ட உடைகளை நீதிபதி முன் கொண்டு வந்து வைத்துத் தாங்கள் ஒரு நிரபாரதி மீது திருட்டுக் குற்றம் சாட்டியதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். நீதிபதியும் அவளை விடுதலை செய்தார். இதன்பின் அவளைத் தம் இல்லம் அழைத்துவந்த அவர்கள், அவளை நோக்கி, ''அல்லாஹ்வின் அருள் நேசர்களை இழிவாக எண்ணியதற்கான பலனைப் பார்த்தாயா?'' என்று வினவினர். அதுகேட்டு வியப்புற்ற அவள் அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள்.

மாபெரும் மகாத்மாவாக, இறைக் காதலில் மூழ்கித் திளைத்த முதுபெரும் இறைநேசச் செல்வராக விளங்கிய நூரி (ரஹ்) அவர்கள், ஒரு நாள் தெருவழியே சென்று கொண்டிருந்த பொழுது ஒரு குருடர் 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர்கள் அவரை அணுகி, ''நீர் அல்லாஹ், அல்லாஹ் என்று அலறிக் கொண்டுள்ளீரே. உமக்கு அல்லாஹ்வைப் பற்றி என்ன தெரியும்? அவனைப் பற்றி உமக்கு உண்மையில் தெரியவரின் நீர் உயிரோடிருப்பீரா, என்ன?'' என்று கூறினர்.

இவ்வளவுதான் அவர்கள் கூறினர். அதற்குள் பேரின்பப் போதை அவர்களின் தலைக்கேறி, அவர்கள் தன்னிலை மறந்தார்கள். இந்நிலையிலேயே அவர்கள் காடு, கழனிகளெல்லாம் அலைந்து திரிந்தார்கள். அப்பொழுது காடுகளில் வளர்ந்திருந்த முட்செடிகள், அவர்களின் கால்களில் குத்தியதோடு, உடலையும் கிழித்தன. அதன் காரணமாக, அவர்களின் உடலிலிருந்து குருதி சிந்தியது. எனினும், அது அவர்களுக்குத் தெரியவில்லை. மண்ணில் விழுந்த குருதிச் சொட்டுகள் 'அல்லாஹ்' என்ற எழுத்து வடிவம் பெற்றன.

காடுகளிலும் கழனிகளிலும் உணர்வின்றி, உணவின்றி அலைந்து திரிந்ததன் காரணமாக, அவர்களின் உடலும் தளர்ந்தது. அவர்கள் மயங்கிக் கீழே வீழ்ந்தார்கள். அவர்கள் கானகத்தின் நடுவே மயக்கமுற்று வீழ்ந்துகிடப்பதைக் கேள்வியுற்ற அவர்களின் நண்பர்கள் ஆங்குச் சென்று அவர்களை, அவர்களின் இல்லம் எடுத்து வந்தனர். அவர்களின் முடிவு அண்மிவிட்டது என்பதை உணர்ந்த அவர்கள், அவர்களிடம் இஸ்லாத்தின் மூல மந்திரமாகிய 'வணக்கத்திற்குரியோன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை' என்பதை எடுத்தியம்ப, 'நான் ஏன் அதனைக் கூற வேண்டும்? நான் அங்குத் தானே சென்று கொண்டிருக்கிறேன்'' என்று ஈனக்குரலில் பதிலுரைத்தார்கள் அம்மேதகை. அத்துடன் அவர்களின் மூச்சும் நின்றது. வாழ்வும் முடிவுற்றது.



## 13. அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்)

அருள்பெற்ற பக்தாது மாநகரில் அப்பாஸியக் கலீபா அல் முஃதலித் பில்லாஹ் அரசோச்சிக் கொண்டிருந்த காலம் அது. மன்னர் மன்னர்களும் திரை கொணர்ந்து அவரின் திருவடிகளிலே வைத்து மரியாதை செய்யும் பெரும் பேற்றுடன் அவர் வாழ்ந்து வந்தார். ஒருநாள் தமாவந்த் மாநில ஆளுநருக்கு பக்தாது வந்து தம்மைக் காணுமாறு கலீபாவிடமிருந்து ஆணைவந்தது. ஆணைவந்த அடுத்தநாளே, அவர் தம்முடன் ரை மாநில ஆளுநரையும் மற்றும் பிரமுகர்களையும் அழைத்துக் கொண்டு பக்தாது புறப்பட்டார்.

பக்தாது வந்த அவர், கலீபாவின் திரு முன்வந்து மரியாதையுடன், தாம் கொண்டு வந்த காணிக்கைகளை நல்கிய பொழுது, கலீபா மகிழ்ச்சி மீக்குற்று அவருடன் அன்புடன் உரையாடி, அவரை அவசரமாக அழைத்தற்கான காரணத்தையும் எடுத்துரைத்து, அவருக்கும் அவருடன் வந்த ரை மாநில ஆளுநருக்கும், ஏனையோருக்கும் விலையுயர்ந்த ஆடைகளை அன்பளிப்பாக வழங்கிக் கௌரவித்தார்.

அவர்கள் கலீபாவிடமிருந்து விடை பெற்றுத் திரும்பி வரும் பொழுது, ரை மாநில ஆளுநருக்கு திடீரெனத் தும்மல் ஏற்பட்டு மூக்கின் வழியாகச் சளி வெளியே வந்தது. அவருடைய கையில் யாதொரு சிறு துணியும் இல்லாததன் காரணமாக, என் செய்வதென அறியாது திகைத்த அவர், சற்று முன் கலீபா தந்த அந்த விலையுயர்ந்த ஆடையிலேயே தம்மூக்கைத் துடைத்தார். இதனை எவனோ ஒரு கோளன் கலீபாவிடம் போய்க் கூற, அதுகேட்டுக் கலீபாவுக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அள வில்லை. தாம் வழங்கிய உடையையல்ல, தம்மையே அவர் அவமதித்து விட்டதாக எண்ணினார் கலீபா. இது அவருக்கு ஒரு மான, அவமானப் பிரச்சினையாகத் தோன்றியது. ''அந்தப் பயலைப் பிடித்து, நான் அவனுக்குக் கொடுத்த அந்த ஆடையையும் அவனிடமிருந்து பறித்து, அவனைச் சவுக்கால் அடித்துப் பதவியிலிருந்து நீக்குக!'' என்ற ஆணை அனற்பொறி தெறித்தாற்போல் கலீபாவின் வாயிலிருந்து வெளிவந்தது. ஆணை வந்த அடுத்த கணமே அது நிறைவேற்றவும் பட்டது.

இதைக் கண்டு தமாவந்த் மாநில ஆளுநருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. அவருடைய மூளைவேகமாக வேலை செய்தது. கலீபா ஒருவருக்கு அளித்த விலையுயர்ந்த ஆடையை, அவர் கண்ணியக் குறைவாகப் பயன்படுத்தியதற்கு அவருக்கு இத்தகு தண்டனை யென்றால், இறைவன் தமக்களித்துள்ள விலைமதிக்க வொண்ணா ஆடையாகிய வாழ்வு என்பதைக் கண்ணியக் குறைவாகத் தாம் பயன்படுத்தின், தமக்கு எத்தகு தண்டனை இறைவனால் வழங்கப்படும் என்று அவர் எண்ணினார். எண்ணியது தான் தாமதம், அவருடைய உடம்பெல்லாம் அதிர்ந்தது.

உடனே அவர் கலீபாவின் திருமுன் சென்று, ''கலீபா அவர்களே! ஒரு மனிதராகிய தாங்கள், மற்றொரு மனிதருக்கு அளித்த உடையை, அவர் கண்ணியக் குறைவாய்ப் பயன்படுத்தியதைத் தங்களால் அனுமதிக்க இயலாதபொழுது - தாங்கள் அளித்த உடையின் மதிப்போ எல்லோரும் அறிந்ததேயாகும் - அகிலங்களின் அரசனாகிய அல்லாஹ் எனக்களித்த கெளரவ உடையாகிய என் உடலை, ஒரு மனிதருடைய ஊழியத்தில் கைக்குட்டை போன்று பயன்படுத்துவதை எவ்வாறு அனுமதிப்பான்? எனவே, நான் ஐந்தாண்டு காலமாக வகித்து வந்த தமாவந்த் ஆளுநர் பதவியை இக்கணமே துறக்கிறேன்'' என்று கூறிவிட்டு வெளியே வந்தார். இதிலிருந்து அவருடைய வாழ்விலே ஒரு மாபெரும் திருப்பமும் துவங்கியது - ஏன்- புதுவாழ்வே துவங்கியது.

ஷிப்லா என்ற ஊரிலிருந்து ஒரு குடும்பம் பிழைப்பின் பொருட்டு ஸாமிரா நகரம் வந்து, அங்கே வாழ்ந்து வந்தது. அக்குடும்பத்தில் தோன்றிய ஒருவர், கலீபாவின் அரண்மனையில் பெரும் பதவி வகித்து வந்தார். ஹிஜ்ரி 247 - ஆம் ஆண்டில் அவரும், அவரின் மனைவியும் ஆற்றிய அருந்தவப் பயனாக, அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அன்புத் தோழர் அபூபக்ர் (ரலி) அவர்களின் அழகுசால் திருப்பெயரிட்டு, அவர்கள் அருமை, பெருமையுடன் வளர்த்து வந்தார்கள்.

நாளாக, ஆக சிறுவர் அபூபக்ர் நாளொரு மேனியாக வளர்ந்து வந்தார். இளம் வயதில் திருக்குர்ஆனை ஓதிமுடித்த அவர், இலக்கணம் பயில்வதற்காக இலக்கணப்பள்ளி சென்றார். அங்கு ஆசிரியர் 'ஸைது அம்ரை அடித்தான்' என்று பாடத்தைத் துவங்கிய பொழுது, ஸைது அம்ரை உண்மையில் அடித்தானா?'' என்று வினவினார் அவர். ''இல்லை, மேற்கோளுக்காக அவ்விதம் கூறுகின்றேன்'' என்று ஆசிரியர் மறுமொழி பகர்ந்ததைக் கேட்டதும், அவருக்கு அளவற்ற வெறுப்பு ஏற்பட்டது. ''முதலிலேயே பொய்யைக் கொண்டு துவங்கும் இக்கல்வி

எனக்கு வேண்டாம்'' என்று கூறி விட்டு, அக்கணமே பள்ளியை விட்டு வெளியேறி விட்டார் அவர்.

தம் மூதாதையர் பின்பற்றி வந்த மாலிக் மத்ஹபையே பின்பற்றி வந்த அவர், அந்த மத்ஹபின் மூல நூலான 'முஅத்தா' வை ஓதத்துவங்கி, அதனை விரைவில் மனனம் செய்து விட்டார். பின்னர் மார்க்க சட்ட திட்டங்கள் (ஃபிக்ஹு) பற்றிய கல்வியைப் பல்லாண்டுகளாகப் பயின்ற பின், இறைஞானம் பற்றி அறிய அவருக்குப் பேராவல் ஏற்பட்டது. பல்வேறு ஆசிரியர்களிடமும் சென்று, அதனைத் தமக்குப் போதித்துத் தருமாறு வேண்ட, அவர்களெல்லாம் தங்களுக்கு அதுபற்றி யாதும் தெரியாது என்று கூறிக் கையை விரித்துவிட்டார்கள். அதுகண்டு அவருக்கு ஏற்பட்ட எரிச்சலுக்கும் ஏமாற்றத்திற்கும் அளவில்லை. இந்நிலையில் தான் அவர் அரசாங்கத்துறையில் புகுந்து, தமாவந்த் மாநில ஆளுநர் பதவி ஏற்றுப் பணியாற்றி வந்தார். இக்காலை தான் நாம் மேலே கூறிய சம்பவம் நிகழ்ந்தது.

மாநில ஆளுநர் பதவி துறந்த அபூபக்ர் துலாப் பின் ஜஃஃதர் என்பார் இப்பொழுது இறைநேசச் செல்பவர் அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்களாக மாறும் ஞானப்பாதையிலே தள்ளாடித் தள்ளாடிச் சென்று கொண்டிருந் தார்கள். அப்பாதையிலே தாம் கீழே தடுக்கி விழுந்து விடாவண்ணம், தம்கரம் பிடித்து அழைத்துச் செல்பவர் எவரேனும் உண்டா என்றும் அவர்களின் கண்கள் அங்குமிங்கும் தூண்டித்துளாவிக் கொண்டிருந்தன. இறுதியாக, தம்ஊர்வாசியாகிய கைருந் நஸ்ஸாஜ் என்ற பெரியார், இறைஞானக் கல்வியில் தேர்ச்சியுற்று, பக்தாது மாநகரிலே வாழ்ந்து வருகின்றார்கள் என்பதைக் கேள்வியுற்றதும், அவர்களின் இருப்பிடம் நோக்கி இவர்கள் விறுவிறென நடந்து சென்றார்கள்.

தம் முன் வந்து தமக்கு இறைஞானக் கல்வியைப் போதிக்குமாறு வேண்டி நின்ற அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்களை, ஒரு முறைக்கு இரு முறை ஏற இறங்கப் பார்த்தார்கள் கைருந் நஸ்ஸாஜ். அவர்களுக்குத் தகுந்த ஆசான் ஜுனைத் (ரஹ்) அவர்கள் தாம் என்பதை நன்கு விளங்கிக் கொண்ட கைருந் நஸ்ஸாஜ் (ரஹ்) அவர்கள், முதலில் அவர்கள் செய்த சிறுபாவங்கள், பெரும்பாவங்கள் ஆகியவற்றிற்கு இறைவனிடம் மன்னிப்புக் கேட்குமாறு கூறினர். அவ்விதமே அவர்கள் செய்ய, அதன் பின் அவர்களை ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர்.

ஜுனைத் (ரஹ்) அவர்கள் மாணவர்கள் புடைசூழ, தம் பள்ளியிலே வீற்றிருந்தார்கள். அப்பொழுது நாற்பது வயதுக்கு மேற்பட்ட ஒருவர் கைருந் நஸ்ஸாஜ் அவர்களின் பரிவுரையுடன் தம் முன் வந்து நிற்பதைக் கண்டனர். அவர்கள், தம்முன் வந்து தாழ்மையுடன் நின்ற, அந்த நடுத்தர

வயதினரிடம் யாதொன்றும் கேட்பதற்குமுன், அவரே முதலில் பேச்சைத் துவங்கினார்: 'ஷைகு அவர்களே! தங்களிடம் ஒரு நன்முத்து இருப்பதாகக் கேள்வியுற்றேன். அதற்குரிய விலையை என்னால் தர இயலும் என்று தாங்கள் கருதுவீர்களாயின், அதற்குரிய பணத்தைப் பெற்றுக் கொண்டு, அதனை எனக்குத் தாருங்கள். அதற்குரிய விலையை என்னால் தர இயலாது என்று தாங்கள் கருதுவீர்களாயின், அதனை எனக்கு அன்பளிப் பாகத் தந்துதவுங்கள்'' என்று வினயமாகக் கூறினார்.

அவரின் இந்த எதிர்பாராத இனிய பேச்சு, ஜுனைத் (ரஹ்) அவர்களின் அழகுத் திருமுகத்தில் ஒரு முறுவலை மலரச் செய்தது.

''அதனை விலை கொடுத்து வாங்கவும் உம்மால் சாலாது. அதனை உம்மிடம் எக்கிரயமும் பெறாது தரவும் என் மனம் ஒப்பவில்லை, காரணம், இலவசமாகக் கிடைக்கும் யாதும் மதிப்பற்றதாகிவிடும்'' என்று கூறினார்கள்.

''அவ்விதமானால் நான் என் செய்வேன்? அதனை நான் எவ்வாறு பெறுவேன்?'' என்று ஏக்கத்துடன் வினவினார் அவர்.

அதுகேட்டு அவர் மீது இரங்கிய ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''ஏங்கற்க! நீரும் என் போன்று ஆன்மீகக் கடலில் மூழ்கி, உம்மையே அழித்துக் கொள்வீராயின், இறைவன் உமக்குப் பொறுமை, காத்திருத்தல் என்ற இருவாயில்களைத் திறந்துவிடுவான். அந்த இரு சோதனைகளிலும், நீர் தேர்ந்து விடுவீராயின், இறைவன் உமக்கு அந்த நன்முத்தைக் கிடைக்கச் செய்வான்'' என்று கூறினர்.

''நல்லது; அவ்விதமே செய்கின்றேன். நான் இனி என்ன செய்ய வேண்டுமென்று பணியுங்கள்'' என்று பணிவோடு வேண்டினர் ஷிப்லீ.

''போய், ஓராண்டு காலம், கடைத்தெருவில் கற்பூரம் விற்று வாரும்'' என்று பணித்தார்கள் ஜுனைத்.

அவ்விதமே அவர்கள் ஓராண்டு காலம் செய்துவிட்டு, ஜுனைத் (ரஹ்) அவர்களை அடைந்த பொழுது, ''நீர் கடைத்தெருவில் கற்பூரம் விற்றதனால், உமக்குச் சிறிது பிரபல்யமும் வணிகத் தொடர்பும் ஏற்பட்டு விட்டன. மேலும், நீர் கலீபாவின் அரண்மனை நிர்வாகியின் மகன் என்பதனாலும், நீர் ஓர் ஆளுநராக இருந்ததன் காரணமாகவும், உம் உள்ளத்தில் பெருமையுணர்வு உள்ளது. ஆதலின் நீர் ஒரு தர்வேஷாக ஆகி ஓராண்டுக் காலம் தெருத் தெருவாக அலைந்து பிச்சை எடும். அப்பொழுது உம் மதிப்பு உமக்குத் தெரியவரும்'' என்று கூறிய அவர்கள், ''ஆனால் ஓர் எச்சரிக்கை! நீர் வேறு யாதொன்றிலும் கவனம் செலுத்தக் கூடாது'' என்று பணித்தார்கள்.

''நீங்கள் கூறிய பணி, தலைமேற் கொண்டேன்'' என்று கூறி வெளிப் போந்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அடுத்தகணமே தெருத் தெருவாக அலைந்து, வீடு வீடாக ஏறிப் பிச்சை கேட்டார்கள். ஆனால் ஒருவரேனும் அவர்களுக்குப் பிச்சையிட முன்வரவில்லை.

ஓராண்டு காலம் இவ்வாறே உருண்டோடியது.

இதன்பின் அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை அணுகி நடந்த வரலாற்றைக் கூற, ''இப்பொழுதாவது நீர் உம்முடைய மதிப்பை உணர் கின்றீரா? உம்மை ஒரு பொருட்டாகக் கருதி, மக்கள் உமக்குப் பிச்சையிடக் கூட முன்வரவில்லை என்பதை அறிகின்றீரா? இனிமேல் நீர் அவர்களை ஒரு பொருட்டாகக் கருதக் கூடாது. அல்லாஹ்வையன்றி, அல்லாஹ்வின் படைப்பினங்கள் மீதோ, உலகப் பொருள்கள் மீதோ, உம் கவனத்தைச் செலுத்தக் கூடாது. உம்மைப் பிச்சை எடுக்குமாறு நான்கூறியது, உம்மைப் பரிபக்குவப்படுத்துவதற்காகவே யன்றி ஆதாயம் பெறுவதற்காகவல்ல.

''நல்லது; நீர் முன்னர் தமாவந்த் மாநில ஆளுநராக இருந்து பணியாற்றியவர். நீர் அப்பதவியில் அமர்ந்து பணியாற்றி வருங்கால் நீர் அம்மாநில மக்களுக்கு உம்மை அறியாமல் எத்தனையோ அநீதிகள் விளைத்திருக்கலாம். எனவே, அவர்களிடம் சென்று மன்னிப்புக் கேட்டு அவர்கள் உம்மை மன்னித்ததாக நற்சான்று இதழ் பெற்றுவாரும்'' என்று கூறினர்.

அவ்வாறே அவர்கள் தமாவந்த் நகர் சென்று, அங்குள்ள ஒவ்வொரு வீட்டுவாயிலிலும் ஏறி இறங்கி, அங்குள்ள மக்களிடம் தாம் தெரியாது அவர்களுக்குத் தீங்கு இழைத்திருப்பின் அதனை மன்னிக்குமாறும், மன்னித்தற்கான நற்சான்று இதழ் நல்குமாறும் அழுது கெஞ்சி வேண்டினர்.

அதுகண்டு அந்நகர மக்களுக்குத் தங்களின் கண்களையே தங்களால் நம்ப இயலவில்லை. முன்னொருக்கால் பட்டாடை உடுத்திப் பவிசோடு பவனிவந்த தங்களின் முன்னாள் ஆளுநரா, இவ்வாறு பஞ்சப்பராரி போன்று தங்களின் இல்லம் வந்து மன்னிப்புப் பிச்சை வேண்டுகின்றார் என்பதை எண்ணிப் பார்த்த பொழுது, அவர்களுக்கு அவர்மீது இரக்கம் வந்தது. அவரின் மாண்பினை உணர்ந்து, மறுபேச்சின்றி அவர்கள் அவ்விதமே மன்னிப்புப் பத்திரம் எழுதிக் கொடுத்தனர்.

இப்பொழுது ஷிப்லீ (ரஹ்) அவர்களுக்கு தாம் ஒரே ஒரு மனிதருக்கு மட்டும் செலுத்த வேண்டிய ஒரு திர்ஹம் பற்றிய நினைவு வந்தது. அவரிடம் அதனைச் செலுத்திவிடுவதற்காக அவரை, எங்கணும் தேடித் திரிந்தார்கள் அவர்கள், கால்நோவத் தேடித்திரிந்தார்கள் அவர்கள்.

கண்நோவத் தேடித் துளாவினார்கள் அவர்கள். எனினும், அவரைக் காணவில்லை. என் செய்வதென அறியாது திகைத்த அவர்கள், அவருக்குச் செலுத்த வேண்டிய அந்த ஒரு திர்ஹத்திற்குப் பகரமாக ஒரு நூறு திர்ஹங்களை இல்லை, இல்லை, ஓராயிரம் திர்ஹங்களை, இல்லை, இல்லை, ஓரிலட்சம் திர்ஹங்களை-அறவழியில், அல்லாஹ்வின் வழியில் செலவு செய்தார்கள்; அவ்விதம் செய்தும், அவர்களின் மனம் அமைதியுறவில்லை.

இந்த அலுவல்களைச் செய்து முடிப்பதற்கு அவர்களுக்கு நான்காண்டுகள் ஆயின. நான்காண்டுகளுக்குப் பின் அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை அடைந்த பொழுது, அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர் களை இன்னும் பற்பலவகைப் புடங்களில் போட்டு மாசற்ற தங்கமாக ஆக்குவதற் கான முயற்சிகளில் ஈடுபட்டனர் ''இன்னும் உம்முடைய உள்ளததிலே அகங்காரம் சிறிதளவு இருப்பதைக் காண்கிறேன். அதனையும் வேரறக் கிள்ளி வீசி எறிய வேண்டியுள்ளது. ஆதலின் இன்னுமோர் ஆண்டு பிச்சை எடும்'' என்று பணித்தார்கள் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

ஆசானின் பேச்சுக்கு மறுபேச்சுப் பேசாது, அடுத்த கணமே, மீண்டும் பிச்சை எடுக்கத் துவங்கி விட்டார்கள். ஷிப்லீ அவர்களின் மகாத்மியத்தை நன்கு உணர்ந்து கொண்ட மக்கள், இப்பொழுது அவர்களுக்குத் தாராள மாகப் பிச்சை வழங்கினார்கள். அவற்றையெல்லாம் பெற்றுத் தம் ஆசானின் கால்களில் அவற்றை அவர்கள் ஒவ்வொரு நாளும் காணிக்கை யாக வைத்த பொழுது, அவையனைத்தையும் ஏழைகளுக்கு அறம் செய்தனர் ஜுனைத். ஷிப்லீ (ரஹ்) அவர்களுக்கோ, அவர்கள் அவற்றில் அணுவத்தனையும் கொடுப்பதில்லை. எனவே பட்டினியும் பசியுமாக அவர்கள் நாட்களைக் கழித்து வந்தனர்.

இவ்வாறு ஓராண்டு கழிந்தபின், அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர் களின் முன் வந்து நின்றனர். ஷிப்லீ (ரஹ்) அவர்களின் உள்ளத்தில் உள்ளதை உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கிக் கொண்ட அவர்கள், ''நாம் உமக்கு தீட்சை வழங்குகிறோம். எனினும் நீர் இன்னும் ஓராண்டு துறவிகளுக்கு ஊழியம் புரியவேண்டும்'' என்று கூறினர். அவ்வாறே ஷிப்லீ (ரஹ்) அவர்கள் செய்து முடித்துத் தம் ஆசானின் திருமுன் வந்து, 'இன்னும் நான் என்ன ஆற்ற வேண்டுமோ கூறுங்கள். செய்து முடிக்கிறேன்'' என்று பணிவுடன் கூறினர்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களை ஏற இறங்கப் பார்த்து, ''அபூபக்ரே! இப்பொழுது நீர் உம்மை எவ்வாறு மதிக்கின்றீர்?'' என்று வினவினர். அதற்கு ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''நான்

என்னை இறைவனின் படைப்புகளிலெல்லாம் மிகவும் தாழ்ந்தவனாக மதிக்கிறேன்'' என்று கூறினர். அவர்களின் இச்சொல் ஜுனைத் (ரஹ்) அவர்களின் முகத்தை மலரச் செய்தது. ''இப்பொழுது தான் உம்முடைய இறை நம்பிக்கை முழுமை பெற்றது'' என்று அவர்கள் அமுதவாய் விண்டு, ஷிப்லீ (ரஹ்) அவர்களின் கரம் பிடித்து அவர்களுக்குத் தீட்சை வழங்கினர்.

இதன்பின் பல்லாண்டு ஜுனைத் (ரஹ்) அவர்களின் தாளில் அமர்ந்து, ஆன்மீகக் கல்வி பயின்று வந்தனர் ஷிப்லீ (ரஹ்). இக்காலை ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் மாணவரின் உள்ளத்தில் அகங்காரம் சிறிதேனும் மீண்டும் தலைகிளப்பி விடாவண்ணம், பெரிதும் கண் காணித்து வந்தனர். ஒரு தடவை மாணவர்கள் சூழ்ந்து இருக்குங்காலைச் சில மாணவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களின் வணக்கம், நேர்மை ஆகியவைப் பற்றிப் பெரிதும் புகழ்ந்துரைத்த பொழுது, ''நீங்கள் கூறுவது தவறு. அதனை என்னால் ஏற்றுக் கொள்ள இயலாது. ஷிப்லீ மார்க் கத்திற்கு முரணான கொள்கையுடையவர். இதனை நீங்கள் அறிய மாட்டீர்கள். நான் அறிவேன். அவரை இக்கணமே இவ்விடத்தை விட்டும் அப்புறப் படுத்துங்கள்'' என்று வெஞ்சினத்துடன் விளம்பினர். அவ்விதமே அவர்கள் அவ்விடத்தை விட்டும் அப்புறப்படுத்தப் பட்டார்கள். அது மாணவர்களிடையே பெரும் சலசலப்பை உண்டு பண்ணியது.

சற்று நேரம் கழிந்தது. ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் மாணவர்கள் அனைவரையும் ஒருங்கழைத்து, ''நான் உங்கள் மீது சினமுற்றதற்கும், ஷிப்லீயை இங்கிருந்து அப்புறப்படுத்துமாறு கூறியதற்கும் காரணம் என்ன தெரியுமா?'' என்று வினவினர்.

''தெரியாது'' என்று அவர்கள் ஒருமித்துப் பதில் கூறினார்கள்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

''மாணவர்களே! நீங்கள் அவரை, அவரின் முன்னாலேயே வைத்துப் புகழ்ந்துரைத்து அவரைக் கொன்று விட்டீர்கள். நான் மட்டும் அவரை அக்கணத்தில் இழித்துரைத்து வெளியே அப்புறப்படுத்தி, அவரின் மனத்தைப் புண்படச் செய்யாதிருப்பின், அவரில் உங்களின் புகழ்மொழி 'தான்' என்ற அகங்காரத்தை உண்டு பண்ணி இருக்கும். அதன் காரணமாக, அவர் அழிவுப் படுகுழிக்கான பாதையில் அடியெடுத்து வைத்து, அதில் வீழ்ந்திருப்பார். அப்பேரபாயத்திலிருந்து நான் அவரைக் காப்பாற்றி னேன்'' என்று கூறினர். அப்பொழுது மாணவர்களுக்கு ஏற்பட்ட வியப் பிற்கு அளவில்லை.

ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஆன்மீகக் கல்வி பயின்று கொண்டிருந்தக்கால் அவர்களின் ஆன்மீக அறிவு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. இதனை ஜுனைத் (ரஹ்) அவர்களும் கவனித்தே வந்தார்கள். ஒருநாள் ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''எவன் ஒன்றைத் தேடுகின்றானோ, அவன் அதனை எய்தப் பெறுவான்'' என்று கூறினர். இதைக் கேட்ட ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அல்ல, அல்ல. அவ்விதம் அல்ல. எவனுக்கு எது ஒன்று கிடைக்கப் பெறவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளதோ, அவனே அதனைத் தேடுவான்'' என்று மறுத்துரைத்தனர். தம் மாணவர் கூறிய சொற்களில், தாம் கூறியதைவிட ஆழிய கருத்து பொதிந்து கிடப்பதைக் கண்டு, ஆசானின் புருவங்கள் மேலேறின.

மற்றொரு தடவை ஜுனைத் (ரஹ்) அவர்கள், ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''உமக்கு இறைவனை நினைப்பதற்கோ, தியானிப்ப தற்கோ ஆற்றலில்லாத பொழுது, நீர் எவ்வாறு அவனை நினைக்கவோ, தியானிக்கவோ செய்கிறீர்?'' என்று வினவினர். அதற்கு ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அவன் என்னை ஒருமுறை நினைத்து, என்னைக் கடைக் கண்ணால் பார்க்கும் வரை, நான் அவனைத் தியானிப்பதை விடுவ தில்லை'' என்று பதில் கூறினர். அவர்களின் இப்பதில் ஜுனைத் (ரஹ்) அவர்களுக்கு மாபெரும் திடுக்கத்தை ஏற்படுத்தி, அவர்களை மூர்ச்சித்துக் கீழே விழுமாறு செய்து விட்டது. அதுகண்ட ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''இறைவனின் திருமுன் சில பொழுது அன்பளிப்புகளும், சில பொழுது அடிகளும் கிடைக்கின்றன'' என்று கூறினர்.

வேறொரு தடவை ஜுனைத் (ரஹ்) அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர் களை நோக்கி, ''நீர் உம் அலுவல்கள் அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைத்து விடுவீராயின் நலன் பெறுவீர்'' என்று கூறிய பொழுது, ''அல்ல; அல்ல. இறைவனே என்மீது நன்னம்பிக்கை கொண்டு, என் அலுவல்கள் அனைத்தையும் என்னிடம் ஒப்படைத்து விடுவானாயின், அப்பொழுதே நான் உண்மையில் நலன் பெற்றவனாவேன்'' என்று கூறினர் ஷிப்லீ. அது கேட்டுப் பெரிதும் வியப்படைந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''ஷிப்லீயின் வாள் குருதி சொட்டிக் கொண்டுள்ளது'' என்று கூறினர்.

மற்றொரு தடவை ஜுனைத் (ரஹ்) அவர்களும், ஷிப்லீ (ரஹ்) அவர்களும் நோய்வாய்ப்பட்டனர். அவர்களிருவருக்கும் மருத்துவம் செய்ய ஒரு கிறிஸ்துவ மருத்துவர் அழைத்து வரப்பட்டார். முதலில் அவர் ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''தங்களுக்கு என்ன தொந்தர வாக உள்ளது?'' என்று வினவிய பொழுது, அவர்கள், ''எனக்கு ஒன்றுமே

தொந்தரவில்லை'' என்று பதில் கூறினார்கள். பின்னர் அவர் அதே கேள்வியை ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் வினவிய பொழுது, அவர்கள் தங்களுடைய துன்பங்களை, ஒன்றின் பின் ஒன்றாக எடுத்துரைத்தனர். அவர்களுக்கு மட்டும் மருந்து கொடுத்து விட்டுச் சென்றார் அவர்.

இதன் பின் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களை நோக்கி, ''தாங்கள் ஏன் ஒரு கிறிஸ்தவரிடம் தங்களின் துன்பங்களை எல்லாம் எடுத்துரைத்தீர்கள்?'' என்று வினவினர். அதற்கு அவர்கள்,' 'இறைவன் தன்னுடைய நண்பனையே இவ்வாறு சோதிக்கும் பொழுது, ஏனையோரை அவன் என்ன செய்ய மாட்டான் என்பதை அவர் அறிந்து கொள்வதற்காக, அவற்றை ஒன்றின் பின் ஒன்றாக எடுத்துரைத்தேன்'' என்று கூறிவிட்டு, ''நீர் ஏன் அவரிடம் உம் உடல் துன்பங்களை எடுத்துரைக்கவில்லை?'' என்று வினவினர். அதற்கு ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''நான் என் நண்பனைப் பற்றி, அவனின் விரோதியிடம் குறைகூற விரும்ப வில்லை'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

இறைக் காதலில் மூழ்கித் திளைத்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள், சில பொழுது தன்னுணர்வு அற்றவர்களாய் இறைஞான இரகசியங்களை மேடை மீதேறி பகிரங்கமாக மக்களுக்கு எடுத்துரைக்கலானார்கள். இவ்விதம் செய்ய வேண்டாமென அவர்களின் ஆசான் அவர்களுக்கு எவ்வளவோ அறிவுரை பகர்ந்தும் அவர்கள் கேட்கவில்லை.

ஒரு நாள் அவர்கள் அவ்விதம் பகிரங்கமாய்க் கூறுவதை ஜுனைத் (ரஹ்) அவர்கள் தடுத்த பொழுது, ஆன்மீக போதையில் இருந்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அதனைக் கூறுபவனும் நானே. அதனைச் செவியுறு பவனும் நானே. விண்ணிலும் மண்ணிலும் என்னையன்றி வேறு எவர் தாம் உளர்? இச்சொல் இறைவனிடமிருந்தே வருகின்றது. மீண்டும் அது இறைவனிடமே செல்லும். இவற்றிற்கிடையே ஷிப்லீக்கு இடம் ஏது?'' என்று கூறினர்.

அப்பொழுது, ஜுனைத் (ரஹ்) அவர்கள், ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''அபூபக்ரே! உண்மையில் அது அவ்விதமே இருப்பினும், நீர் அதனைப் பகிரங்கமாக எடுத்துரைத்தது குற்றமேயாகும்'' என்றனர். அதற்கு அவர்கள், ''ஒருவர் இவ்வூரின் காஜியாக இருந்த போதினும், அவர் இவ்வுலக விவகாரங்களிலோ, மறு உலக விவகாரங்களிலோ, ஈடுபட்டிருப்பின், அவர் நான் பேசுவதைக் கேட்க வர வேண்டியதில்லை. இறைக் காதலால் பித்துப்பிடித்தவர்கள் தாம் என்னிடம் வர வேண்டும். ஏனையோர் வரவேண்டிய தேவையே இல்லை'' என்று பதிலுரைத் தார்கள்.

அவர்களின் இந்த ஆழிய பதிலைக் கேட்டுத் திடுக்குற்ற ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''நல்லது; உம் விருப்பம் போல் செய்யும்!'' என்று கூறினார்கள்.

ஒரு நாள் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களின் திருச்சபையில் வீற்றிருக்கும் பொழுது, திடீரென எழுந்து நின்று தம்மை மறந்த நிலையில் ''என் ஆசையின் கனியே!'' என்று அலறினார்கள். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள், ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''அபூ பக்ரே! இறைவன் தான் உம்முடைய ஆசையின் கனி என்றால், ஏன் அவனைக் குறிப்பிட்டு இவ்வாறு கூறுகிறீர்? அவன் இவ்வாறு குறிப்பிடப்படுவதை விட்டும் அப்பாற்பட்டவனல்லவா? நீர் வேறொருவரை மனத்தில் எண்ணிக் கொண்டு, அவ்விதம் கூறியிருப்பின் இறைவன் அதனை அறிவானல்லவா. உலகத்தினர் நீர் இறைவனைத் தான் அவ்வாறு விளிக்கிறீர் என்று எண்ணிக் கொள்ள, நீரோ வேறொருவரை எண்ணிக் கொண்டு அவ்விதம் சொல்லின், அது பொய்மையின் பாற்படு மல்லவா?'' என்று இடித்துரைத்தனர். உடனே ஷீப்லீ (ரஹ்) அவர்கள் தம் தவற்றை உணர்ந்து, தம்மை மன்னிக்குமாறு வேண்டினர். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் ''இறைவனை அறிந்தவன் வாய் மூடியல்லவோ இருப்பான்'' என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் ஷிப்லீ (ரஹ்) அவர்கள், மெய்ஞ்ஞான போதையில் மூழ்கி, தன்னுணர்வு அற்றவர்களாக, ஜுனைத் (ரஹ்) அவர்களின் இல்லம் சென்றனர். அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் தம் மனைவியுடன் வீற்றிருந்தார்கள். ஷிப்லீ (ரஹ்) அவர்களைக் கண்டதும், அவ்வம்மையார் எழுந்து உள்ளே செல்ல முயன்ற பொழுது, ''வேண்டாம் அவர் தன்னுணர்வு அற்றவராக உள்ளார். எனவே நீர் இங்கேயே இரும்'' என்று கூறினார் ஜுனைத்.

உள்ளே நுழைந்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள் பின் வரும் கருத்தமைந்த கவிதையை உரத்துச் சப்தமிட்டுப் பாடினார்கள்:

''காதலியால் நான் ஆசீர்வதிக்கப்படுவது வழக்கமாகி விட்டது. அது எனக்கு நீங்கா இன்பத்தைத் தந்து கொண்டிருக்கிறது. பிரிவை என்னால் தாங்கவே இயலவில்லை. அவன் சினமுற்று விட்டாலோ, என்னை நோக்கி, ' நீ என் மீது அளவுக்கதிகமாகக் காதல் கொள்வது ஒரு பாவம்'' என்று கூறுகிறாள். ஆனால் நானோ அது ஒரு பாவம் என்று எண்ணவில்லை. நான் என் காதலியுடன் கழித்த அந்த இன்பப் பொழுதின் மீது ஆணையாகக் கூறுகிறேன். அன்பின் பரிசு அன்பேயன்றி வேறில்லை.''

இக்கவிதையைச் செவியுற்ற ஜுனைத் (ரஹ்) அவர்கள், அதற்குத் தம் இணக்கத்தைத் தெரிவிக்கும் முறையில், தம் தலையை அசைத்து, 'அபூபக்ரே! நீர் கூறுவது உண்மை, உண்மை, முக்காலும் உண்மை ' என்று உணர்ச்சி வயப்பட்டுக் கூறினர்.

அதைக் கேட்ட ஷிப்லீ (ரஹ்) அவர்கள் உணர்ச்சி போதை மேலிட மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தனர். சில நிமிடம் கழித்து அவர்கள் அலறலானார்கள். அவர்களின் அலறல் கேட்டு அவர்கள் தன்னுணர்வு பெறும் நிலையை எய்தி விட்டார்கள் என்பதை உணர்ந்த ஜுனைத் (ரஹ்) அவர்கள், ''இப்பொழுது அபூபக்ர் தன்னுணர்வு பெற்று வருகிறார். எனவே 'உள்ளே செல்க!' என்று தம் துணைவியாருக்குப் பணித்தனர். அவ்விதமே அவ்வம்மையாரும் செய்தார்.

ஜுனைத் ரஹ்) அவர்கள், தம் மாணவர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் மீது அளவற்ற அன்பும் மதிப்பும் வைத்திருந்தார்கள். 'ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு மணிமகுடம் உண்டு. உங்களுக்கு மணிமகுடம் போன்றவர் ஷப்லீ' என்று அவர்கள் ஒரு தடவை தம் மாணவர்களை நோக்கிக் கூறினர்.

வேறொரு தடவை அவர்கள், ''அவர் இறைகாதலில் தம்மை மறந்து போதையிலுள்ளார். அவ்விதம் அவர் இருக்க வில்லையாயின் அவர் மக்களின் இமாமாக இருந்திருப்பார். மக்கள் அவரால் பெரிதும் பயன் பெற்றிருப்பர்' என்று அவர்கள் மீது புகழாரம் தொடுத்தார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் தம் மாணவர்களையும், ஏனையோரையும் நோக்கி, ''நீங்கள் ஒருவர் மற்றொருவரைப் பார்க்கும் கண்களுடன், அவரையும் பார்க்காதீர்கள். காரணம், அவர் அல்லாஹ்வின் கண்களைக் கொண்டு பார்க்கிறார்'' என்று புகழுரை பகர்ந்தார்கள் அவர்கள்.

ஒரு நாள் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் தம் ஆசானை அடைந்த பொழுது அவர்கள் அழகிய முறையில் தலைப்பாகை அணிந்திருப்பதைக் கண்டு அவர்களை நெருங்கி அதனைக் குலைத்தனர். அதைக் கண்ட மக்கள், ''ஏன் இவ்வாறு செய்தீர்கள்?'' என்று பதற்றத்துடன் வினவிய பொழுது, ''அது என் கண்களுக்கு அழகாகத் தென்பட்டது. எனவே நான் அதனை விரும்பவில்லை'' என்று பதிலிறுத்தனர் ஷிப்லீ (ரஹ்). அவர்களின் அப்பதில் ஜுனைத் (ரஹ்) அவர்களின் முகத்தை வாடச் செய்வதற்கு மாறாக மலரச் செய்தது.

இவ்வாறு அவர்கள் நடந்து கொண்டது, தம் ஆசானிடமுள்ள மரியாதைக் குறைவின் காரணமாக அல்ல. தாம் அழகையும் வனப்பையும் விரும்பக் கூடாது என்பதற்கேயாகும்.

தம் ஆசான் உயிரோடிருக்கும் பொழுது, அவர்கள் மீது எத்துணை மதிப்பு வைத்திருந்தார்களோ அதே போன்ற மதிப்பையே அவர்கள் இறந்ததன் பின்பும், அவர்கள் மீது ஷிப்லீ (ரஹ்) அவர்கள் வைத்திருந்தனர். ஒரு நாள் அவர்கள் தம் ஆசானின் அடக்கவிடத்திற்கு முன் கை கட்டித் தலை கவிழ்ந்து நின்று கொண்டிருந்த பொழுது, ஒருவர் அவர்களை அணுகி மார்க்கம் பற்றிய ஒரு வினாவை அவர்களிடம் வினவினார். அதற்கு அவர்கள் பதிலுரைக்காமல், ''என் ஆசான் இதோ மண்ணுள் மறைந்து கிடக்கின்றார்கள். எனினும் அவர்கள் உயிரோடிருந்தக்கால் என்னை அவர்கள் நோக்கும் பொழுது, ''நான் எவ்வாறு எதிர்நோக்க விழியின்றி தலைகுனிந்து வீற்றிருப்பேனோ, அதே நிலையில் தான் நான் இப்பொழுதும் உள்ளேன்'' என்ற கருத்தமைந்த கவியொன்றைக் கூறினர். இவ்வாறு அவர்கள் இக்கவியை எடுத்துரைத்ததன் மூலம், ''என் ஆசான் முன்னிலையில் நீர் அது பற்றி வினவ் வேண்டாம். நான் மரியாதையின்றி அதற்கு அவர்களின் முன் வைத்து பதிலுரைக்க மாட்டேன். பின்னர் வருக!'' என்று கூறாமல் கூறினார்களென்றால் அவர்கள் தம் ஆசான் மீது கொண்டிருந்த மதிப்பைத் தான் என்னென்பேம்!

ஷிப்லீ (ரஹ்) அவர்கள், தம் ஆசான் உயிரோடிருக்கும் பொழுதும், அதற்குப் பின்னரும் தங்களின் நஃப்ஸை எதிர்த்துப் பெரும் போராட்டம் நடத்தினார்கள். தம் வணக்கத்தில், தம்மையறியாமல் ஏதேனும் தவறு நிகழ்ந்து விடின், அதற்குத் தண்டனையாக எரியும் விறகுக் கட்டைகளால் அவை முறியும் வரையில் தம் முதுகில் அடித்துக் கொள்வார்கள். விறகுகளெல்லாம் முறிந்து விடின், அவர்கள் தம் உடலை மதிலில் கொண்டு போய் உராயச் செய்து காயமுண்டு பண்ணிக் கொள்வார்கள். தம் நஃப்ஸின் கலகத்தை அடக்குவதற்காக இவ்வாறு செய்வதாக அவர்கள் கூறுவார்கள். சில பொழுது நடுக்கும் குளிரில் தண்ணீரில் இறங்கி மணிக்கணக்காக நிற்பார்கள்.

இரவில் உறங்காது விழித்திருந்து, இறைவனை வணங்குவதற்காக அவர்கள், தம் கண்களில் உப்புப் பொடியை தூவிக் கொள்வார்கள். அல்லது கடும் கம்பியை நெருப்பின் அருகில் வைத்துச் சூடுண்டாக்கிக் கண்ணிமைகளில் தடவவோ அல்லது அதனை உப்பு நீரில் நனைத்துக் கண்ணிமைகளில் தடவிக் கொள்ளவோ செய்வார்கள். ''தாங்கள் இவ்வாறு செய்யின், கண் கெட்டு விடும்'' என்று மக்கள் அவர்களிடம் எச்சரித்த பொழுது ''இறைவனைக் காணாத இக்கண்கள் இருந்தென்ன, தொலைந்தென்ன?'' என்று எரிச்சலோடு கூறினார்கள்.

வேறொரு தடவை அவர்கள் இவ்வாறு செய்வதற்கான காரணத்தை ஒருவர் அவர்களிடம் வினவிய பொழுது, ''உன் காதலி உறங்காது

விழித்துக் கொண்டிருக்கும் பொழுது, நீ எவ்வாறு உறங்குவாய்?'' என்று இறைவன் என்னிடம் கேட்டு விட்டால் என் செய்வது? '' என்று அஞ்சியே இவ்வாறு செய்கிறேன்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

மற்றொரு தடவை வேறொருவர், இதே கேள்வியை அவர்களிடம் கேட்ட பொழுது, ''இறைவன் என்னை நோக்கி, 'உறங்குகின்றவன் கரிசனம் இல்லாதவன்; கரிசனமில்லாதவன் என்னை விட்டும் திரையிடப் பட்டவன்'' என்று கூறினான். எனவே தான் உறங்காது விழித்திருந்து வணங்குவதற்காகவே இவ்வாறு செய்கிறேன்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

''ஓரிரவு தந்தையார் தம் ஒரு காலை வீட்டுக் கூரை மீதும், மற்றொரு காலை வைக்கோல் போர் மீதும் வைத்துக் கொண்டு, இறைவனைத் துதித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள், இடைக்கிடையே தம் நஃப்ஸை நோக்கி 'நீ கண்ணை மூடினால், உன்னைத் தூக்கி முற்றத்தில் வீசி எறிந்து விடுவேன். ஜாக்கிரதை' என்று கூறிக் கொண்டிருந்தார்கள்'' என்று அவர்களின் மகன் யூனுஸ் கூறுகிறார்.

வைகறையானதும் அவர்கள், தம் மகன் யூனுஸை நோக்கி, ''மகனே! இன்றிரவு முழுவதும் இரண்டு 'தானக்'' விலையுள்ள ஒரு சேவலைத் தவிர்த்து, வேறொன்றும் இறைவனின் திருப்பெயரைக் கூறி இறைஞ்ச வில்லையே'' என்று வருத்தத்துடன் கூறினார்கள்.

இறைக்காதலில் அவர்கள் பைத்தியம் பிடித்தவர்கள் போன்று ஆகிவிட்டனர். தாம் உடுத்தி இருக்கும் வேட்டியை கிழித்துக் கொண்டு, அவர்கள் தலைவிரி கோலமாய் ஏதாவது வாயில் வந்த வண்ணம் பிதற்றிக் கொண்டு திரிவதைக் கண்டு, சிறுவர்கள் அவர்களை ஒரு பைத்தியக் காரரென எண்ணிக் கல்லால் எறிந்தனர். அதன் காரணமாக, அவர்களின் கால்கள் குருதி சிந்தின. சில பொழுது அவர்கள் சங்கிலியால் பிணைக்கப் பட்டு தெருத் தெருவாக இழுத்துச் செல்லப்பட்டார்கள்.

துவக்கத்தில் அவர்கள் சிறுவர்களையெல்லாம் ஒருங்கழைத்து, 'அல்லாஹ், அல்லாஹ் என்று சொல்லுங்கள்'' எனக் கூறி, அவர்கள் அவ்வாறு கூறியதும் அவர்களின் வாயில் சர்க்கரையை அள்ளி நிறைத்து வந்தனர். பின்னர் அவ்விதம் கூறியவர்களின் கைநிறையப் பொன் நாணயங்களை அள்ளி வழங்கி வந்தார்கள்.

சில காலம் கழித்து அவர்கள் திடீரென வேறு விதமாக மாறி விட்டார்கள். ''எவன் அல்லாஹ்வின் திருப்பெயைரக் கூறினானோ, அவனுடைய உடலை என்கை வாளால் இருதுண்டுகளாக்கி விடுவேன்'' என்று கூறிக் கொண்டு கையிலே வாளுடன் அலைந்து திரிந்தார்கள்.

''என்ன இவ்வாறு கூறிக் கொண்டு அலைந்து திரிகின்றீர்கள்?'' என்று அவர்களிடம் வினவப்பட்ட பொழுது, ''எவன் இக்காலத்தில் இறைவனின் திருப்பெயரை உள்ளச்சத்துடன் மொழிகிறான்? துவக்கத்தில் மனிதர்கள், இறைவனின் திருப்பெயரை பக்தியோடும், ஆன்மீக வெளிச்சம் பெறுவதற்காகவும் மொழிகின்றார்கள் என்று எண்ணிக் கொண்டேன். பின்னர் தான் அவர்கள் அதனை ஒரு சடங்கு போன்று கருதிச் செய்கின்றார்கள் என்பதை விளங்கலானேன். எனவே அந்தப் போலிகளை என் கை வாளால் தீர்த்துக் கட்ட அலைந்து திரிகிறேன்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதன்பின் அவர்கள் கண்ட கண்ட இடமெல்லாம் அல்லாஹ், அல்லாஹ் என்று கிறுக்கிக் கொண்டே சென்றார்கள். அப்பொழுது அசரீரி ஒன்று ''நீர் அப்பெயருக்குரியவனை தேடாது எத்துணை காலம், இவ்வாறு அவனின் திருப்பெயரைக் கிறுக்கிக் கொண்டு திரிவீர்'' என்று முழங்கியது.

அடுத்த கணம் அவர்களின் அமைதி குலைந்தது. 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அலறிய வண்ணம், அவர்கள் தன்னுணர்வற்ற நிலையில் ஒரு நாள் திஜ்லா நதியில் பாய்ந்தார்கள். ஆனால் அதனின் வெள்ளப் பெருக்கு அவர்களை மூழ்கடிப்பதற்கு மாறாக, அவர்களைச் சுமந்து சென்று கரை சேர்த்தது. மற்றொரு நாள் அவர்கள் கொழுந்து விட்டெரியும் வெந்தழலில் குதித்தார்கள். ஆனால், அதுவோ அவர்களை எரித்துச் சாம்பலாக்குவதற்கு மாறாகத் தானே அவிந்து சாம்பலாகியது. வேறொரு நாள் அவர்கள் சிங்கம், வாழ் கானகத்தில் அலைந்து திரிந்தார்கள். ஆனால் சிங்கங்களோ, அவர்களைக் கொன்று தின்பதற்கு மாறாக, அவர்களைக் கண்டதும் குலை நடுக்கமுற்று வெருண்டோடின. பிறிதொரு நாள் அவர்கள் மலையின் உச்சியிலிருந்து கீழே விழுந்தார்கள். ஆனால் அவர்கள் இறந்தொழிவதற்கு மாறாக, காற்றிலே மிதந்து வந்தது போன்று தரை வந்து சேர்ந்தார்கள்.

இவற்றைக் கண்டு அவர்களுக்கே தம் மீது எரிச்சல், எரிச்சலாக வந்தது. ''நீரோ, நெருப்போ, சிங்கமோ, சிகரமோ என்னை ஏற்றுக் கொள்ளாது, ஒதுக்கித் தள்ளுகின்றனவே' என்று அவர்கள் அங்கலாய்த்துக் கொண்டார்கள். அப்பொழுது அசரீரி ஒன்று, ''அல்லாஹ்வால் ஏற்றுக் கொண்ட ஒருவரை, வேறு யாதொன்றும் ஏற்றுக் கொள்ளாது'' என்று முழங்கியதை அவர்கள் செவியுற்றனர்.

அவர்கள் ஒவ்வொரு நாளும் பித்துக்குளி போன்று ஏதாவதொன்றைச் செய்து கொண்டிருப்பதைக் கண்டு மக்கள், அவர்கள் உண்மையில் பைத்தியக்காரராகி விட்டார்கள் என்றே எண்ணினர். ஆம்: அவர்கள்

உண்மையில் இறைக்காதலின் காரணமாக, மூளை கலங்கப் பெற்றவர்களாகவே இருந்தனர். எனவே ஒரு தடவை அவர்கள் தம் மாணவர் அலீபின் ஹுஸ்ரீயை நோக்கி, ''நீரும் பைத்தியம், நானும் பைத்தியம்'' என்று கூறினார்கள்.

அவர்களின் இக்கூற்றையெல்லாம் கேட்டு மக்கள் அவர்களைப் 'பைத்தியம், பைத்தியம்' என்று அழைத்த பொழுது, ''நான் பைத்தியமல்ல; நீங்கள் தாம் பைத்தியம். இந்த உண்மை உங்களுக்கு நியாயத் தீர்ப்பு நாள் அன்றுதான் தெரியவரும்'' என்று கூறினார்கள் அவர்கள்.

ஒருநாள் மக்கள் அவர்களின் கால்களிலும், கைகளிலும் விலங்கிட்டு, அவர்களுக்கு மருத்துவம் செய்வதற்காக, அவர்களை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார்கள். அப்பொழுது ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அவர்களை நோக்கி, ''நீங்கள் புத்தி சுவாதீனமுள்ளவர்களென்றும், நான் புத்தி சுவாதீனமற்றவனென்றும் நீங்கள் எண்ணிக் கொண்டுள்ளீர்கள். அல்லாஹ் உங்களுடைய புத்தி சுவாதீனத்தையும், என்னுடைய புத்தி சுவாதீனமற்ற தன்மையையும் அதிகப்படுத்துவானாக! அதன் காரணமாக நான் இறையண்மையை அதிகமாக எய்தவும், நீங்கள் இறைவனை விட்டு நெடுந்தொலைவு அப்பாற்படவும் ஆகும்'' என்று கூறினர்.

அவர்களுக்கு மருத்துவம் செய்வதற்காக, கலீபா தம் பணியாளர்களை அனுப்பி வைத்த பொழுது, அவர்கள், அவர்களின் வாயில் வலுக்கட்டாயமாக மருந்தை ஊற்ற முற்பட்ட காலை, ''உங்களுடைய மருந்தால் என்னுடைய பைத்தியம் தெளியாது. அது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே செல்லும்'' என்று அவர்கள் இயம்பினார்கள்.

ஆம்; உண்மையில் அது அவர்களுக்கு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே சென்றது. ஒருநாள் அவர்களின் வீட்டுக்கதவை வேற்றூர் மனிதர் ஒருவர் வந்து தட்டினார். கதவைத் திறந்து கொண்டு அலங்கோல நிலையில் வெளி வந்த அவர்கள் ''எவரைத் தேடிவந்தீர்?'' என்று வினவினர். 'ஷிப்லீ (ரஹ்) அவர்களை' என்று அவர் பதிலுரைத்ததும், ''ஷிப்லீ தான் காஃபிராக இறந்துவிட்டானே; அவன்மீது இறைவன் பேரருள் பாலிப்பானாக!'' என்று கூறிக் கதவை மீண்டும் இறுக மூடித் தாளிட்டுக் கொண்டார்கள்.

ஒருநாள் அவர்கள் தம் மாணவர் அப்துர் ரஹ்மான் குராஸானியை நோக்கி, ''ஷிப்லீயைத் தவிர எவனாவது, தன்னை அல்லாஹ் என்று கூறிக்கொண்டு திரிவதை நீர் பார்த்தீரா?'' என்று வினவினர். ''ஷிப்லீ கூட அவ்விதம் கூறிக்கொண்டு திரிந்ததில்லையே'' என்று அவர் மறுமொழி பகர்ந்தார். அதைக் கேட்டதும் அவர்கள் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து விட்டார்கள்.

ஒருநாள் அவர்களைச் சிலர் காண வந்த பொழுது, அவர்கள் பாதாம் பருப்புகளையும், சர்க்கரையையும் நெருப்பிலிட்டு எரித்துக் கொண்டிருப் பதைக் கண்டனர். தம்மை இறை நினைவிலிருந்து அவை மறக்கடிப்பதன் காரணமாகத், தான் அவற்றை எரித்துச் சாம்பலாக்கிக் கொண்டிருப்பதாக அவர்கள் அதற்கு விளக்கம் பகர்ந்தார்கள்.

அவர்கள் புத்தம் புதிய ஆடைகளை அணிந்தால் சில பொழுது அவற்றில் அங்குமிங்கும் சில துளைகளைப் போட்டுக் கொள்வார்கள். மற்றும் சில பொழுது அவற்றைக் கழற்றி எரித்துச் சாம்பலாக்கி விட்டுத் தான் மறுவேலை பார்ப்பர், ''ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்?'' என்று எவரேனும் அவர்களை வினவின், ''நிச்சயமாக, நீங்களும், நீங்கள் விசுவா சிக்கும் அவைகளும், நரக நெருப்புக்கு இரையேயாகும்'' என்று இறைவன் தன் திருமறையில் கூறவில்லையா? அவற்றை அணிந்ததும் அவற்றின் மீது எனக்கு ஒருபிரியம் ஏற்படுகிறது. அதனால் அவற்றை நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கி விட்டேன்'' என்று கூறுவர்.

''அவற்றை ஏன் வீணே எரித்துச் சாம்பலாக்க வேண்டும்? அவற்றைத் தாங்கள் விரும்பாத போதினும், ஏழை எளியவர்களுக்கு அறம் செய்து விடின், அதனால் அவர்களுக்கும் தங்களுக்கும் நற்பலன் ஏற்படுமே'' என்று எவரேனும் அவர்களிடம் கூறின், ''எவ்வாறு அதனால் எங்கள் இருவருக்கும் நற்பலன்கள் ஏற்படும்? அவற்றை அவர்களுக்கு அறம் செய்து விடின், அவற்றின் பகட்டில் மயங்கி அவர்களும் கெட்டுவிடுவர். அவர் களுக்கு அவற்றை வழங்கி, அவர்களைக் கெடுத்த பாவம் என்னையு மல்லவோ சாரும். இறைவனைத் தவிர்த்து, மனிதனின் அன்பையும், பக்தியையும் கவர்ந்து நிற்கும் எதனையும் எரித்துச் சாம்பலாக்குவது கடமை (வாஜிப்) அல்லவா? எனவே அவ்வாறு செய்தேன். இப்ராஹீம் (அலை) அவர்கள் 'கத்தூம்' என்ற இடத்தில் இருந்த பொழுது, விருத்த சேதனம் செய்து கொள்ளுமாறு இறைவனிடமிருந்து ஆணை வந்ததும், அதற்கான கத்தி கிடைக்கும் வரை கூடப் பொறுத்திராது, அக்கணமே தம் கையிலிருந்த தச்சனின் ஆயுதத்தால் தம்முடைய நூறாவது வயதில் தமக்கே தாம் விருத்த சேதனம் செய்து தம் கடமையை நிறைவேற்ற வில்லையா? தமக்கு முதிய வயதாயிற்றே; தம்மிடம் விருத்த சேதனம் செய்வதற்காக, கூரிய கத்தி இல்லையே என்று அவர்கள் ஒரு கணமேனும் தயங்கினார்களா, என்ன?'' என்று அவர்கள் கூறுவார்கள்.

ஒரு பெருநாளன்று அவர்கள் புத்தாடை அணிந்து பள்ளிவாயிலுக்குச் சென்ற பொழுது, மக்கள் படாடோபமான உடையணிந்து வந்திருந்த செல்வச் சீமான்களைப் போய் கைலாகு கொடுப்பதைக் கண்ட அவர்கள், அக்கணமே தாங்கள் அணிந்திருந்த உடைகளைக் கழற்றி, அவ்விடத்தி

லேயே அவற்றை நெருப்புக்கிரையாக்கினார்கள். காரணம் வினவப்பட்ட பொழுது, ''அல்லாஹ்வை வணங்க வந்த இடத்தில், இவர்கள் பகட்டான உடைகளையல்லவோ வணங்குகிறார்கள். எனவே, அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படுபவை அனைத்தும், நரக நெருப்புக்கிரையே யாதலின் அவற்றை நான் நெருப்பிலிட்டுக் கொளுத்தினேன்'' என்று கூறினார்கள் அவர்கள்.

மற்றொரு நாள் அவர்கள் விலையுயர்ந்த ஆடை ஒன்றை அணிந்து வந்தார்கள். திடீரென அதனைக் கழற்றி நெருப்பிலிட்டுப் பொசுக்கி னார்கள். காரணம் வினவப்பட்ட பொழுது, ''அந்த ஆடை என் கவனத்தை அவனைவிட்டு ஒரு நிமடமேனும் திருப்பி விடுமாயின், என்னையும் அந்த ஆடையையும் நெருப்பிலிட்டுப் பொசுக்கப் போவதாக இறைவன் கூறினான். எனவே இறை முனிவுக்கு ஆளாகாதிருப்பதற்காக நானே அதனைத் தீயிலிட்டுச் சாம்பலாக்கி விட்டேன்'' என்றார்கள் அவர்கள்.

வேறொரு நாள் அபூ அப்துல்லாஹ் அல் ராஸி அவர்கள் தமக்கு இப்னு அல் அன்பாரி அன்பளிப்புச் செய்த கம்பளி உடையை அணிந்து கொண்டு வெளியே வந்தனர். அப்பொழுது ஷிப்லீ (ரஹ்) அவர்கள் குல்லாய் அணிந்து கொண்டு, ஓரிடத்தில் இருப்பதைக் கண்டதும், அது தம்முடையதாக இருப்பின், தாம் அணிந்திருக்கும் கம்பளி உடைக்குப் பொருத்தமாக இருக்குமே என்று எண்ணினர். சற்றுநேரம் கழித்து, ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்ட பொழுது, அல் ராஸியும் அவர்களுடன் சேர்ந்து அவர்களின் இல்லம் சென்றனர். இல்லம் வந்ததும் ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அல்ராஸியை நோக்கி ''உம் கம்பளி உடையைக் கழற்றும்'' என்றனர். அவ்வாறே அவர் கழற்றிக் கொடுத்ததும், தாம் அணிந்த குல்லாயையும் கழற்றி, அதன்மீது வைத்து அவ்விரண்டையும் சேர்த்துத் தீயிட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கினார்கள் அவர்கள்.

துவக்கத்தில் கறுப்பு உடை அணிந்து வந்த அவர்கள், பின்னர் பக்கீர்கள் அணியும் காவி உடை அணிந்து வந்தார்கள். ஆனால், ஒருபெரு நாளன்று அவர்கள் கறுப்பு உடை அணிந்து பள்ளிவாயிலுக்கு வந்ததைக் கண்ட மக்கள், ''ஏன், மகிழ்ச்சி மிகு பெரு நாளன்று கறுப்பு உடை அணிந் துள்ளீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''மக்கள் மாய்கையில் மூழ்கி, இறைவனை மறந்து திரிகின்றனரே என்ற எண்ணம் என்னிடம் மிகைத்த போது, எனக்குத் துக்கம், துக்கமாக வந்தது. எனவே துக்கத்தின் அறி குறியாகக் கறுப்பு உடை அணிந்து வந்தேன்'' என்று அவர்கள் பதிலிறுத் தார்கள்.

ஒருநாள் குயில் 'கூ கூ' என்று கூவுவதைக் கேட்டதும், அவர்களுக்கு இறைக்காதல் உணர்வு அதிகமாகி அவர்களும் 'ஹூ ஹூ' என்று அதனோடு ஒத்து இராகம் போட்டுக் கூறிக் கொண்டு ஆடத் துவங்கிவிட்டார்கள்.

மற்றொரு நாள் அவர்கள், அழுது கண்ணீர் வடித்துக் கொண்டு, அங்கு மிங்கும் அலைந்து கொண்டு திரிவதைக் கண்ட மக்கள், "ஏன் இவ்வாறு அழுது கொண்டு திரிகின்றீர்கள்? தங்களுக்கு யாது நிகழ்ந்தது?" என்று பரிவோடு வினவிய பொழுது, "இறைவன் எனக்கிட்ட கட்டளையைச் சரிவரச் செய்ய இயலவில்லையே என்ற கவலை என்னுள்ளத்தில் மிகைத்ததன் காரணமாக, என் கண்கள், என்னை யறியாமல் கண்ணீர் மழையைச் சொரிந்து கொண்டுள்ளன" என்று பதில் கூறினார்கள்.

வேறொரு நாள் அவர்கள், தம் முதுகைக் கடுமையாகச் சொரிந்த தனால், முதுகில் கோடு விழுந்து இரத்தம் கசிந்தது. இதனைக்கண்ட ஒருவர் "ஏன் இவ்வாறு செய்தீர்கள்?" என்று அவர்களிடம் வினவிய பொழுது, "இன்று எனக்கு ஓர் இரகசியத்தை இறைவன் வெளியாக்கி னான். அதன் வேதனையை என்னால் பொறுத்துக் கொள்ள இயல வில்லை. எனவே, அந்த வேதனையை மறப்பதற்காகவும், அத்துடன் அந்த இரகசியத்தை மறப்பதற்காகவும், நான் இவ்வாறு செய்து கொண்டுள் ளேன். ஆனால், அந்த இரகசியத்தையும் என்னால் மறக்க இயலவில்லை. நான் சொரிவதும் எனக்கு வேதனை அளிக்கவில்லை. அந்த இரகசியம் அளிக்கும் வேதனையைத் தான் என்னால் தாங்க இயலவில்லை" என்று பதில் கூறினார்கள் அவர்கள்.

பிறிதொரு நாள் அவர்கள் ஒருவழியே செல்லும் பொழுது, ஒரு மனிதனின் மண்டையோடு கிடப்பது அவர்களின் கவனத்தை ஈர்த்தது. அதனை அவர்கள் உற்றுப் பார்த்தபொழுது, அதன் நெற்றியில் "இம்மை மறுமை ஆசைகளை விட்டொழிப்பாயாக!" என்ற வாசகம் பொறிக்கப் பட்டிருப்பது போன்று அவர்களின் கண்களுக்குத் தென்படவே, அவர்கள் பெரும் சப்தமிட்டு அலறி, 'இது ஒரு நபியுடையவோ, ஒரு வலியுடையவோ மண்டை ஓடு' என்று கூறினர் "அது உங்களுக்கு எவ்வாறு தெரியவந்தது?" என்று ஆங்கிருந்தோர் அவர்களைக் கேட்ட பொழுது, ஒருவன் இவ்வுலகையும், மறு உலகையும் பற்றிய எல்லா விதமான ஆசைகளையும் துறக்கும் வரை, இறைவனுடன் ஐக்கியமாக இயலாது என்பது பரம இரகசியம். அந்த இரகசியம் அவருடைய நெற்றியில் எழுதப்பட்டுள்ளதை நான் கண்டேன். எனவே தான் நான் அவ்வாறு கூறுகின்றேன்" என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

அவர்கள் மற்றொரு தடவை கூறும்பொழுது, ''நான் தெருவில் செல்லும் பொழுது, என்முன் எதிர்ப்படும் மக்களின் நெற்றியில், இவர் இறை விசுவாசி (முஃமின்) என்றோ, இறை மறுப்பவர் (காஃபிர்) என்றோ எழுதப்பட்டிருப்பதைக் காண்கிறேன்'' என்று கூறினார்கள்.

ஒருதடவை அவர்களின் பேரன் இறந்துவிட்ட பொழுது, அவனின் அன்னை துக்கம் தாளாது தம் தலை மயிரைப் பிய்த்துக் கொண்டார். அது கண்ட அவர்கள், தம்முடைய தாடியையும் பிய்த்துக் கொண்டார்கள். அவர்களிடம் துக்கம் விசாரிக்க வந்தவர்கள், அவர்களின் அலங்கோல நிலையைக் கண்டு 'ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என்று வினவிய பொழுது, 'என் மகளோ ஒருவனை இழந்து விட்டதற்காகத் தன் தலை மயிரைப் பிய்த்துக் கொண்டாள். நானோ ஒருவனைக் கண்டு கொண்டதற்காக என் தாடி மயிரைப் பிய்த்துக் கொண்டேன். அவ்விதம் செய்த நான், அந்த மயிர்களையெல்லாம் ஒருங்கு சேர்த்து இறைவனை வணங்குவதை விட்டுவிட்டு, என்னிடம் துக்கம் விசாரிக்க வந்த உங்களின் மடமைக்கு அர்ப்பணம் செய்து விட்டேன்'' என்று கூறினார்கள்.

ஒருநாள் தெருவில் ஒரு பிரேதம் எடுத்துச் செல்லப்பட்டது. அதன்பின் சென்ற ஒரு மனிதர், 'ஆஹ்! மின் பிராக்கில் வலதீ' (என் மகனைப் பிரிந்த ஆகூலமே) என்று கூறிக் கண்ணீர் விட்டுக் கதறிக் கொண்டு சென்றார். அதைக் கேட்டதும், அவர்களின் இறைக்காதல் உணர்வு அதிகமாகி 'ஆஹ்! மின்பிராக்கில் அஹதீ' (ஆ! ஒருவனாகிய இறைவனை விட்டுப் பிரிந்த என்துக்கமே!) என்று அலறிக் கொண்டே அப்பிரதேத்தைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

மற்றொருநாள் அவர்கள் ஆற்றோரமாய் நடந்து சென்ற பொழுது, படகிலிருந்து மதுப்புட்டிகள் கரையில் இறக்கப்பட்டுக் கொண்டிருந்தன. அப்பொழுது கரையிலிருந்த கூலியாள், படகுக்காரனை நோக்கி, ''இன்னும் எத்தனை புட்டிகள் இறக்கப்படாமல் பாக்கி உள்ளன?'' என்று வினவினான். ''ஒன்றே ஒன்று தான்'' என்று பதில் கூறினான் படகுக் காரன். இது ஷிப்லீ (ரஹ்) அவர்களின் செவிப்பட்டதும், அவர்கள் பேரின்ப போதையில் மூழ்கி, ''ஆம், ஒன்றே ஒன்றுதான் என்றென்றும் நிலைத்து நிற்கும்'' என்று முழங்கிய வண்ணம், அந்த ஆற்றங்கரை யிலேயே ஆடத்துவங்கி விட்டார்கள். அவர்கள், ஒன்று என்று கூறியது ஏகனாகிய இறைவனையேயன்றி வேறில்லை.

வேறொரு நாள் அவர்கள் தம் இல்லத்தில் வீற்றிருக்கும் பொழுது, இனியகுளிர் பானம் விற்கும் ஒருவன் ஒரு குவளை நிறையக் குளிர் பானத்தை வைத்துக் கொண்டு, 'லம் யப்லக இல்லா வாஹிதுன்' (எல்லாம் போய்விட்டது. ஒன்றே ஒன்று தான் எஞ்சியுள்ளது) என்று

தெருவழியே கூறிக் கொண்டு சென்றது அவர்களின் காதுகளில் விழுந்தது. அவனுடைய இச்சொல், 'எல்லாம் அழிந்துவிடும்; இறைவன் ஒருவனே நிலைத்திருப்பான்' என்ற தனிப்பெரும் உண்மையை அவர்களின் உள்ளத்தில் உணர்த்தவே, அவர்கள் உணர்ச்சி மீக்குற்று, அவனே போன்று, 'லம்யப்லக இல்லா வாஹிதுன்; லம் யப்லக இல்லா வாஹிதுன்' என்று கூச்சலிடத் துவங்கிவிட்டார்கள். அதுகண்டு அவன், ''இவர் என்ன என்னை நையாண்டி பண்ணுகின்றாரா'' என்று எண்ணி, அவர்களை வெறிக்க, வெறிக்கப் பார்த்துக் கொண்டு சென்றான்.

பிறிதொரு நாள் அவர்கள், ''இறைவனை நீங்கள் மறந்துவிடும் பொழுது, அவனை நினைவு கூருங்கள்'' என்று பொருள்படும் 18: 23 ஆவது திருவசனத்தைச் செவியுற்றதும் ''இறைவனை நினைவு கூர்வது, தன்னை மறப்பதேயாகும். அகில உலகமும் அவனை நினைவு கூர்வதில் தான் குறை வைக்கிறது'' என்று அலறியவர்களாய்த் தன்னுணர்வற்றுக் கீழே சாய்ந்தார்கள். பின்னர் உணர்வு பெற்று எழுந்ததும், 'இறைவனின் திருவசனங்களைக் கேட்டு மனம் துளும்பாது இருக்கும் பாவியைப் பார்த்துத் தான் எனக்கு வியப்பாக உள்ளது'' என்று கூறினர்.

ஓராண்டு ரமலான் திங்களில் ''நாம் விரும்பியிருப்பின், நாம் உமக்கு வஹீ மூலம் அனுப்பிவைத்ததை, நிச்சயமாகத் திரும்பப் பெற்றுக் கொள் வோம்'' என்ற திருவசனத்தை இமாம் தொழுகையில் நின்று ஓதிய பொழுது அவருக்குப்பின் தொழுகையில் நின்று கொண்டிருந்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள், தம்மையறியாமல் அலறிவிட்டார்கள். அவர்கள் போட்ட கூச்சலைக் கேட்டு, அவர்கள் இறந்துவிட்டார்களோ என்று கூட மக்கள் எண்ணினர். தொழுகையை முடித்துவிட்டு, இமாமும் ஏனையோரும் அவர்களை அணுகிப் பார்த்த பொழுது, அவர்கள் ''எம் பெருமானார் (ஸல்) அவர்களை நோக்கியே இறைவன் அவ்வாறு கூறினான் என்றால், என்போன்ற பாவிகளை நோக்கி அவன் என்ன கூறுவான் என்று எனக்குத் தெரியவில்லையே'' என்று உளம் பதைபதைக்கக் கூறிக் கொண்டிருந்தார்கள.

ஒருதடவை ஒருவர் அவர்களை அணுகி, ''அல்லாஹ்வின் திரு மறையில் ஒரு வசனம் என்னை அடிக்கடி இவ்வுலகை விட்டே இழுத்துச் செல்கிறது. பின்னர் நான் என்னுடைய முந்தைய சுய நிலைக்கு வந்த போதினும், நான் அதில் நீடித்திருப்பதில்லை''என்று கூறிய பொழுது, ''உங்களை இறைவன் தன்பால் இழுத்துக் கொள்ளும் திருவசனத்தைக் கேட்டுள்ளீர்கள். அதுவே இறைவன் உங்கள் மீது பொழியும் பேரரு ளாகும்'' என்று இயம்பினார்கள் அவர்கள்.

ஒருநாள் அவர்கள் கடைத்தெருவுக்குச் சென்று, ஒரு திர்ஹத்திற்கு ஒரு சட்டையும், மற்றொரு திர்ஹத்திற்கு ஒரு தொப்பியும் வாங்கி அணிந்து கொண்டு, அங்கே வருவோர் போவோர்களையெல்லாம் நோக்கி, ''ஒரு சூஃபியின் விலை இரண்டு திர்ஹம். வேண்டுவோர் வாங்கிக் கொள்ள லாம்'' என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

மற்றொரு நாள் அவர்களை, அவர்களின் இல்லத்திலோ, பள்ளி யிலோ, காணாத அவர்களின் மாணவர்கள் அவர்களை பகுதாது நகரம் முழுவதும் தேடியலைந்து, இறுதியாக பெண்ணையர் அலிகள் வாழும் பகுதியில் அவர்களுடன் வீற்றிருப்பதைக் கண்டு, ''ஏன் இங்கு வந்தீர்கள்?'' என்று வினவிய பொழுது,'' இவர்கள் ஆணுமல்ல; பெண்ணுமல்ல. அவ் விதமே நானும் உள்ளேன். எனவே என் இனத்தோடு நான் சேர்ந்து கொண்டேன். இதில் என்ன தவறு உள்ளது?'' என்று தம்மை மறந்த நிலையில் கூறினார்கள்.

ஒரு தடவை அவர்கள் கொள்ளிக் கட்டையை எடுத்துக் கொண்டு, தெருவில் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருப்பதைக் கண்டு, அதற்கான காரணத்தை மக்கள் வினவிய பொழுது, ''நான் கஃபாவை எரித்துச் சாம்பலாக்கப் போகின்றேன். அவ்விதம் செய்தால் தான் மக்கள் அக்கருங்கல் கட்டடத்தின் பக்கல் முகத்தைத் திருப்பாது, இறைவன் பக்கல் முகத்தைத் திருப்புவர்'' என்று கூறினர்.

மற்றொரு தடவை அவர்கள் இவ்வாறு சென்ற பொழுது, அதே கேள்வியை அவர்களிடம் கேட்கப்பட்ட காலை, 'நான் சுவனத்தையும், நரகத்தையும் எரித்துச் சாம்பலாக்கச் சென்று கொண்டுள்ளேன். அவ்விதம் செய்தால் தான் மக்கள் சுவனத்தை விரும்பியோ, நரகத்திற்கு அஞ்சியோ இறைவனை வணங்காது, அவனை அவனுக்காக வேண்டியே வணங்கத் தலைப்படுவர்'' என்று கூறினர்.

''இறைவனே! இம்மையையும், மறுமையையும் என்னிடம் தந்து விடு. நான் அவற்றைச் சுருட்டி ஒரு யூதனின் வாயில் போட்டு விடு கிறேன். அவ்விதம் செய்தால் தான், உனக்கும் மனிதர்களுக்கும், இடையேயுள்ள இருதிரைகளும் நீக்கப் பெற்று, உன்னை, உனக்காக அவர்கள் அணுக ஏதுவாயிருக்கும்'' என்று கூறி அவர்கள் இறைஞ்சி னார்கள்.

ஒரு தடவை ஒருவர் பள்ளியில் பாங்கு சொல்லும் பொழுது, 'அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹ்' என்று கூறிவிட்டு, 'அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்' என்று கூறியதும், ''இறைவனே! நீ அநுமதித்திரா விடின் அவர் உன் பெயருடன் வேறு ஒருவருடைய பெயரையும் கூறியிருக்க மாட்டாரே'' என்று அவர்கள் அலறினார்கள்.

இவ்வாறு அவர்கள் அலறித் துடித்து அரற்றியதன் காரணமாக, அவர்கள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் மீது மதிப்பு வைத்திருக்கவில்லை என்று பொருளல்ல. உண்மையில் அவர்கள் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் மீது அளவற்ற அன்பும் மதிப்பும் வைத்திருந்தார்கள்.

ஒரு நாள் இப்னு முஜாயித் (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களுடன் பள்ளியில் அமர்ந்திருந்த பொழுது, அங்கு ஷிப்லீ (ரஹ்) அவர்கள் வரவே, எழுந்து நின்றார்கள். அதன்பின் மாணவர்களில் ஒருவர், ''அமைச்சர் அலி இப்னு ஈஸா வந்த பொழுது கூடத் தாங்கள் எழுந்து நிற்க வில்லையே. தாங்கள் ஏன் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் வந்தபொழுது எழுந்து நின்றீர்கள்?'' என்று இப்னு முஜாயித்(ரஹ்) அவர்களிடம் வினவினார். அதற்கு அவர்கள், ''எம்பெருமானார் (ஸல்) அவர்களால் மதிக்கப்பெறும் ஒருவருக்கு மரியாதை செய்ய வேண்டாமா? நேற்றிரவு எம்பெருமானார் (ஸல்) அவர்கள் என் கனவில் திருத்தோற்றம் வழங்கி, ''சுவனவாசிகளில் ஒருவர் நாளை உம்மிடம் வருகிறார்'' என்று திருவாய் மலர்ந்து விட்டு மறைந்தனர். அவர்கள் கூறிச் சென்ற வண்ணம் ஷிப்லீ (ரஹ்) அவர்களே வந்தனர். எனவே நான் அவர்களுக்கு எழுந்து நின்று மரியாதை செய்தேன்'' என்று கூறினார்கள்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின், மீண்டும் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் இப்னு முஜாயித் (ரஹ்) அவர்களின் கனவில் தோன்றி, ''சுவன வாசிகளின் ஒருவரை நீர் கௌரவித்தீர். அதன் காணரமாக இறைவன் உம்மையும், சுவனவாசிகளில் ஒருவராக ஆக்கியுள்ளான்'' என்று கூறினர்.

அப்பொழுது இப்னு முஜாயிர் (ரஹ்) அவர்கள், ''அபீ பக்ர் ஷிப்லீ சுவனவாசிகளில் ஒருவராகக் காரணம் யாது?'' என்று வினவினர். அதற்கு அண்ணல் அவர்கள், ''அவர் எண்பது ஆண்டுகளாக ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் திக்ரு, ஸலவாத் ஆகியவை ஓதியபின், சூரா தௌபாவின் 'லகத்ஜா அகும் ரசூலுன்...... ரப்புல் அர்ஷில் அளீம்'' (128, 129) என்ற திருவசனங்களை ஓதி வருகிறார்'' என்று அருண்மொழி பகர்ந்தனர்.

இறைக் காதலிலே மூழ்கி, அவனைத் தேடி அலைவதையே தங்களின் வாழ்வின் அலுவலாகக் கொண்டிருந்த அவர்கள், இறைக் காதலில் தம்மையே மறந்து வீற்றிருப்பர். தொழுகை நேரம் வந்ததும், தன்னுணர்வு பெற்று 'உளூ'ச் செய்து தொழுதுவிட்டு, மீண்டும் தம்மை மறந்த ஃபனா நிலையில் ஆகிவிடுவர். இதைப் பற்றி அவர்கள் ஒரு தடவை கூறும் பொழுது, ''ஒரு நிமிடம் இறைவனளவில் தன்னை

பொருளடக்கம்



அழித்துக் கொண்டிருப்பது, உலகத்தின் துவக்க நாளிலிருந்து முடிவு நாள்வரை அகிலத்தின் அனைத்து மக்களும் சேர்ந்து நிகழ்த்தும், வணக்கத்தை விட மேலானதாகும்'' என்று இயம்பினார்கள்.

ஒருநாள் எவரோ ஒருவர், தெருவில் 'ஸல்மாவைப் பற்றியா வினவு கின்றீர்கள்? அவளைப் பற்றி அறிந்தவர் எவரேனும் உளரா?'' என்ற கருத்தமைந்த கவிதை ஒன்றைப் பாடிக் கொண்டு செல்வதைச் செவி யுற்றதும், அவர்களுக்கு தெய்வீகக் காதல் உணர்வு ஏற்பட்டு, ''அவள் எங்கே உள்ளாள் என்பது இரண்டு உலகங்களிலும் ஒருவருக்கும் தெரியாது, தெரியாது'' என்று சப்தமிட்டு அலறத்துவங்கி விட்டார்கள்.

தம்மைப் பார்க்க எவரேனும் வரின் அவர்களை நோக்கி, மஜ்னூன் பாடிய பின்வரும் கண்ணிகளைப் பாடுவார்கள்:

''அஸாயில அன்லைலி ஃபஹல்மின் முகப்பரு.

யஹ்பர்னா இல்மாபிஹா அய்ன துனஸ்ஸலு''

இதன் பொருள், ''தாங்கள் என்னிடம் லைலாவைப் பற்றியா வினவு கின்றீர்கள்? இப்பொழுது அவள் எங்கே தங்கி உள்ளாள்? அவளை எவ்விதம் காண்பது என்பது பற்றி எனக்குத்தகவல் கூறுபவர் எவரேனும் உள்ளனரா?'' என்பதாகும்.

இக்கருத்தமைந்த கண்ணிகளைப் பாடியபின், ''இறைவனே! உன் மாண்பின் மீது ஆணையாக, உன்னைப் பற்றித் தகவல் தெரிவிப்போர், மண்ணகத்திலும் விண்ணகத்திலும் உன்னையன்றி வேறு எவர் உளர்?'' என்று கூறுவர்.

ஒருநாள் அவர்களிடம் ஒருவர் வந்து, ''ஷைகு அவர்களே! எனக்காக இறைவனிடம் இறைஞ்சுங்கள்'' என்று வேண்டி நின்றார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''மக்கள் என்னுடைய பரிவுரையை வேண்டி நின்ற காலம் மலை ஏறிவிட்டது. இப்பொழுது எனக்காக வேண்டி லைலாவிடம் என்னைப் பற்றிப் பரிந்துரைப்பவர் எவரேனும் இருந்தால் கூறுங்கள்'' என்று இயம்பினார்கள் அவர்கள்.

இறைக் காதல் பற்றி அவர்கள் கூறுங்கால், ''இறைக் காதல் என்றால் மற்றொருவனும் இறைவன் மீது காதல் கொண்டுள்ளான் என்பதை உணர்ந்து, அதன் காரணமாக உரோஷம் ஏற்பட்டு, அவனை மிஞ்சும் வகையில் இறைவனை அதிகமதிகமாக நேசிப்பதாகும். மேலும் தன் உள்ளத்தில், அவன் பற்றிய நினைவிற்கன்றி, வேறு எவ்வித நினை விற்கும் இடமில்லாமல் செய்து விடுவதாகும். காதலுக்கு 'மஹப்பத்' என்ற சொல்லைப் பயன்படுத்துவதற்குக் காரணம், அது காதலியைத் தவிர

வேறு எவரைப் பற்றிய எண்ணத்தையும், காதலனின் உள்ளத்திலிருந்து தம்ஹூ செய்வதால் (அழித்து விடுவதால்) தான்'' என்று கூறினர்.

மேலும் அதுபற்றி அவர்கள் எடுத்துரைக்குங்கால், மஜ்னூன் பற்றிய ஒரு செய்தியைக் கூறினார்கள். ஒருநாள் மக்கள் மஜ்னூனிடம் சென்று, ''நீர் லைலா மீது காதல் கொண்டீரா?'' என்று வினவிய பொழுது, 'இல்லை' என்று அவர் பதில் கூறினார். அதுகேட்டு வியப்புற்ற மக்கள், 'என்ன இவ்வாறு கூறுகின்றீர்? அவள் மீது அளவுக்கு மீறிக் காதல் கொண்டதன் காரணமாகத் தானே நீர் மஜ்னூனாக (பைத்தியக்காரராக) அங்குமிங்கும் அலைந்து பிதற்றிக் கொண்டு திரிகின்றீர்' என்று கூறிய பொழுது, 'எதனையும் ஆழ்ந்து கவனியாது, உங்களின் கருத்தை அள்ளித் தெளிக்க வேண்டாம். காதல் என்பது இரு உள்ளங்களை ஒன்று சேர்க்கும் பிணைப்பு. மஜ்னூனும் லைலாவும் இருவரல்ல, ஒருவர் என்ற நிலை ஏற்பட்ட பின்னர், அப்பிணைப்பு எதற்கு? நானே லைலாவாகவும், அவளே மஜ்னூனாகவுமல்லவோ உள்ளோம்' என்று பதில் கூறினார் அவர்'' என மொழிந்தார்கள்.

ஒரு தடவை மரச்சுள்ளி ஒன்றின் ஒரு முனையில் தீப்பற்றி எரியவும், மற்றொரு முனையில் நீர் கசிந்து கொண்டிருக்கவும் கண்டு, ஆங்கு நின்று கொண்டிருந்த மக்களை நோக்கி, ''நீங்கள் இறைக்காதலில் எரிந்து கொண்டிருப்பதாகக் கூறுகின்றீர்களே. அவ்விதமாயின் அம்மரச் சுள்ளி போன்று உங்களின் கண்களிலிருந்து நீர் ஏன் கசியவில்லை?'' என்று வினவினார்கள்.

சில பொழுது அவர்கள் இறைவனை நோக்கி, ''இறைவனே! நான் உன்னை ஒரு கணமேனும் அறிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக, நாற்பதாண்டுகளாகத் தவம் கிடந்தும், உன்னை என்னால் அறிந்து கொள்ள இயலவில்லையே'' என்று கூறி அழுவர்.

வேறு சில வேளைகளில், ''இறைவனே! நீ விண்ணை வளையமாக ஆக்கி என் கழுத்திலும், மண்ணை விலங்காக மாற்றி என் காலிலும் மாட்டி, உலகத்தினர் அனைவரையும் என் உயிர்குடிக்கும் பகைவர்களாக ஆக்கிய போதினும், நான் உன்னை விட்டும் என் முகத்தை அணுவத்தனையும் திருப்பமாட்டேன்'' என்று கூறி இறைஞ்சுவார்கள்.

மேலும் அவர்கள் இறைவனை நோக்கி, ''மறைவானவற்றை அறிந்தவனே! உன்னிடத்தில் என்பெயர் என்ன? நீ என்னிடம் எப்படி நடந்து கொள்வாய் என்று தெரிந்தால் நன்றாயிருக்குமே. பாவங்களை மன்னிக்கக் கூடியவனே! இதயங்களை மாற்றக் கூடியவனே! என் முடிவு யாதாகுமோ அறியேனே'' என்று கூறிக் கொண்டு பின்வரும் கவிதையைப் பாடினார்கள்.

''என்னைப் பற்றி அல்லாஹ் தன்னுடன் நெருங்கியவர்களிடம் யாது கூறுவானோ? நல்லவன் என்று கூறுவானோ, தீயவன் என்று கூறு வானோ தெரியவில்லையே.

''மஹ்ஷர் வெளியில் என் நிலை யாதாகுமோ?

''என் இறப்பு இறை நம்பிக்கையோடு நிகழுமோ? இறை மறுப்போடு நிகழுமோ அறியேனே.

என்பேச்சை அவன் ஏற்றுக் கொள்வானென்று எண்ணுகின்றாயா, என்ன?

என் இதயத்தை அவன் விரிவாக்குவான் என்று கருதுகின்றாயா?

நான் சுவனம் செல்வேனோ? நரகம் புகுவேனோ அறியேனே.

நீங்கள் என்னைப் புகழ்வதை விட்டு விடுங்கள். நான் என் நிலையை நன்கு அறிவேனே.''

இவ்வாறு பாடிக் கொண்டு அவர்கள் தன்னுணர்வற்று இருப்பர்கள். அப்பொழுது அவர்கள் தம் உடை கிழிந்திருப்பதைக் கண்டதும், ''இறைவனே! நான் உனக்காக, என் உடைகளைக் கிழித்துக் கொண்டேன். நீ என் இதயத்தை உனக்குச் சாதகமாகவல்லவோ மாற்றிவிட்டாய்'' என்று கூறுவார்கள்.

ஒரு நாள் அவர்கள் மாலை நேரத் தொழுகையை நிறைவேற்றுவதில் பெரிதும் தாமதம் ஏற்பட்டு விட்டது. கதிரவன் மேற்றிசையில் மறையும் நேரத்தில், அவர்கள் ஓடோடிச் சென்று, 'உளூ'ச் செய்து தொழுதார்கள். பின்னர் மக்களை நோக்கி, 'காதல் மயக்கத்தில் நான் தொழுவதைக் கூட மறந்து விட்டேன். இரவு கழிந்ததும், பொழுது புலர்ந்ததும் கூட, எனக்குத் தெரியாது போய்விட்டதே' என்று ஓர் அரபிக் கவிஞர் பாடிய கவிதை ஒன்றைப் பாடினார்கள்.

அவர்கள் சில பொழுது, தம் வணக்க அறையில் தம்மையே மறந்து தியானத்தில் வீற்றிருப்பார்கள். அப்பொழுது எவர் வந்து அவர்களை அழைத்த போதினும், அவர்கள் கதவைத் திறக்க மாட்டார்கள். ஒரு தடவை, எவரோ ஒருவர் வந்து அவர்களின் வணக்க அறையின் கதவைத் தட்டினார். ''யார் அது?'' என்று வினவினார்கள். ''அபூபக்ர்'' என்று பதில் வந்தது. ''அபூபக்ரா? எந்த அபூபக்ர்? இப்பொழுது அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் முதற்பெரும் தோழர் சையிதினா அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்தால் கூடக் கதவைத்திறக்க இயலாது, போ'' என்று உள்ளே இருந்து கொண்டே உரத்துக்கூறினார்கள்.

இறைக் காதலில் மூழ்கித் திளைக்கும் அவர்கள், சில பொழுது அந்த வெறி தலைக்கேறி விடின் தன்னுணர்வற்றுப் பெரும் கூச்சல் போடு வார்கள். ''இறைக் காதலே எனக்குத் தன்னுணர்வற்ற மயக்க நிலையை உண்டு பண்ணியுள்ளது. அவ்வித மயக்க நிலையை எய்தப் பெறாத எந்த இறைக்காதலரையும் நீங்கள் பார்த்துள்ளீர்களா?'' என்று கூறினார்கள் அவர்கள்.

ஒரு தடவை 'ஸம்அ' என்ற பேரின்ப இசை நிகழ்ச்சியில் கலந்து கொண்ட அவர்கள், திடீரெனப் பெரும் சப்தமிட்டு அலறினார்கள். பின்னர் அவர்களிடம் அதற்கான காரணம் வினவப்பட்ட பொழுது, ''நான் இந்த 'ஸம்அ' வை நுகர்வது போன்று, ஏனையோரும் நுகர்ந்தால் அவர்கள் என் போன்று அலறமட்டும் செய்யமாட்டார்கள். இசைவாணரின் முன் 'ருகூஉ' விலும் 'சுஜூது' லும் விழுந்து விடுவார்கள்'' என்று பதிலிறுத்தனர்.

ஒருநாள் அவர்கள் திஜ்லா நதியின் ஓரத்தில் தம் மாணவர்களுடன் வீற்றிருந்த பொழுது, திடீரெனப் பெரும் கூச்சல் போட்டனர். அப்பொழுது ஆங்கு நின்று கொண்டிருந்த ஒரு மனிதன், அவர்கள் கூச்சல் போட்டது போன்று பெரும் கூச்சல் போட்டான். உடனே அவர்கள் அவனை அநாயாசமாகத் தூக்கி ஆற்று வெள்ளத்திலே வீசி எறிந்தார்கள். அப்பொழுது அவர்களின் மாணவர்கள், ''ஏன் அவனை இவ்வாறு செய் தீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''உண்மையில் அவன் என்போன்று இறைக்காதல் மீக்குற்று சப்தம் செய்திருப்பின், இறைவன் செங்கடலை இரண்டாகப் பிளக்குமாறு செய்து மூஸா (அலை) அவர்களைக் காத் தருளியது போன்று அவனையும் காத்தருள் புரிவான். அவன் பொய்மைக் காக அவ்விதம் கத்தி இருப்பின், இறைவன் அவனை ஃபிர் அவ்னை மூழ்கடித்தது போன்று அவ்வெள்ளத்தில் மூழ்கடித்து விடுவான்'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் பக்தாதின் 'கர்க்' பகுதியில் நடந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு மோசக்காரன் ''பேச்சைவிட மௌனம் மேலானது'' என்று கூறியதைச் செவியுற்றதும், ''உன்னுடைய பேச்சை விட உன் மௌனம் மேலானது தான். ஏனெனில் உன் பேச்சு பெருமையின் பாற்பட்டதாகவும், மௌனம் சோம்பேறித்தனத்தின் அடையாளமாகவும் உள்ளது. ஆனால் என் பேச்சு அறிவார்ந்ததாகவும், என் மௌனம் அடக்கத்தின் பாற்பட்டதாகவும் உள்ளது'' என்று இயம்பினார்கள்.

அவர்களின் அபார வணக்கத்தின் காரணமாக, அவர்களுக்கு அடிக் கடி உடல் நலிவு ஏற்பட்டது. எனினும் அவர்கள் அதனைப் பொருட்படுத் துவதில்லை. ஒரு தடவை அவர்களுக்குக் கடுமையான நோய் ஏற்பட்ட பொழுது, அவர்கள் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

அப்பொழுது மருத்துவர் அவர்களுக்கு மருந்து கொடுத்து, பத்தியம் காக்குமாறு கூறியக்கால், ''என்னை ஏன் வீணே துன்புறுத்துகின்றீர்கள்? நடக்க வேண்டியது நடந்தே தீரும். நடக்கக் கூடாதது ஒரு போதும் நடக்காது'' என்று அவர்கள் கூறினார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் நோயுற்ற பொழுது, மருத்துவர் அவர்களை நோக்கி, சிலவற்றை உண்பதைத் தவிர்ந்து கொள்ளுமாறு கூறினர். அதுகேட்டு முகம் சுளித்த அவர்கள் 'எந்தச் சிலவற்றை உண்பதைத் தவிர்ந்து கொள்ளுமாறு' கூறுகிறீர்கள்? அல்லாஹ் எனக் களித்த சிலவற்றையா? அல்லாஹ் எனக்களிக்காத சிலவற்றையா? முன்னையதை தவிர்ந்து கொள்வது என்னால் இயலாத செயல், பின்னையதைத் தவிர்ந்து கொள்வது என் கைவசமில்லாதது'' என்று அவர்கள் கூறினார்கள்.

பின்பெருகால் அவர்கள் கடுமையான நோய் வாய்ப்பட்ட பொழுது, அதனை அமைச்சர் அலியின் ஈஸா, கலீபா அல்முக்ததிர் பில்லாஹ்வுக்குத் தெரியப்படுத்தியதும், அவர்தம் சொந்தமருத்துவரை அனுப்பி அவர் களுக்குச் சிகிச்சை அளிக்குமாறு செய்தார். அவர்கள் மருத்துவமனையில் இருக்குங்கால், அவர்களைக் காண்பதற்காக அவர்களின் நண்பர்கள் சிலர் வந்த பொழுது, தன்னுணர்வற்ற நிலையில் இருந்த அவர்கள், அவர்களைக் கற்களால் எறிந்து விரட்டினர். அவர்கள் ஓட ஓட இவர் களும், அவர்களை விரட்டிக் கொண்டே ஓடி, ''நயவஞ்சகர்களே! நீங்கள் என்னுடைய உண்மையான நண்பர்களாய் இருப்பின், எனக்கு ஏற்பட்ட நோய்பற்றிப் பொறுமையை அல்லவோ மேற்கொண்டிருக்க வேண்டும்? அவ்விதம் செய்வதை விட்டொழித்து, என்னுடைய உடல் நலன் பற்றி விசாரிக்க வந்து விட்டீர்களே. வேறொரு விதத்தில் பார்த்தாலும், நீங்கள் ஓடுவது தவறல்லவோ? நீங்கள் என்னுடைய உண்மையான நண்பர் களாக இருப்பின், என்னுடைய கல்லடிகளைப் பொறுத்துக் கொண்டு ஓடாமல் அல்லவோ இங்கு வீற்றிருக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

அவர்கள் உடல் நலமெய்தியதும், அவர்களுக்குச் சிகிச்சை செய்த மருத்துவர், அவர்களை நோக்கி, ''தங்களுக்குச் சிகிச்சை செய்வதற்கு மனித இறைச்சி தேவைப்பட்டிருப்பினும், நான் அதனை மகிழ்ச்சியுடன் என் உடலிலிருந்து அறுத்துக் கொடுத்திருப்பேன்'' என்று கூறிய பொழுது, ''எனக்குத் தேவைப்பட்ட மருந்து அதுவல்ல. அதைவிட மிகமிக எளிதானது'' என்று கூறினர். ''என்னஅது?'' என்று அவர் வியப்புடன் வினவியபொழுது,''நீர் உம்முடைய பூணூலை அறுத்தெறிவது தான் அது'' என்று பதில் கூறினார்கள் அவர்கள். அடுத்தகணம் அவர் அவ்

இச்செய்தி கலீபாவின் செவிப்பட்டதும், அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. "நான் அவரை அவர்களுக்குச் சிகிச்சை செய்ய அனுப்பினேனா? அல்லது அவர்களிடமிருந்து சிகிச்சை பெற அனுப்பினேனா, என்று எனக்கு விளங்கவில்லையே" என்று வியப்பு மொழிபகர்ந்தார்கள்.

அவர்கள் சிலபொழுது ஒரு மாதிரியாகவும், வேறு சில பொழுது வேறொரு மாதிரியாகவும் பேசுவது, ஒருவருக்கு வியப்பாக இருந்தது. எனவே ஒரு நாள் அவர், அவர்களை அணுகி, அது பற்றி வினவிய பொழுது, "நான் சில பொழுது (பாஹூத்) ஆக இருக்கிறேன். வேறு சில பொழுது நான் இல்லாதவன் (பேஹூத்) ஆக இருக்கிறேன்" என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

ஒருதடவை ஒருவர் 'அல்லாஹ்', 'அல்லாஹ்' என்று ஓயாமல் கூறிக் கொண்டிருப்பதைக் கண்ட அவர்கள், "எவ்வளவு நேரம் தான் நீர் இவ்வாறு கூறிக் கொண்டிருப்பீர்? அவன் உம்மை நோக்கி, "என்னுடைய அடியானே, லப்பைக் (இதோ உன் வசமாகிவிட்டேன். கட்டளையிடு) என்று பதிலுரைப்பதை நீர் செவியுறவில்லையா?" என்று கூறினர். அதற்கு அவர், "நான் அதனைச் செவியுறத்தான் செய்கிறேன். எனவே தான் மீண்டும் மீண்டும் நான் அவனை அவ்வாறு அழைத்துக் கொண்டுள்ளேன்" என்று பதில் கூறினார். அவரின் இப்பதில் ஷிப்லீ (ரஹ்) அவர்களைத் தூக்கிவாரிப் போட்டது. அவரின் மகாத்மியத்தை உணர்ந்து கொண்ட அவர்கள், "நல்லது; தாங்கள் செய்வதே சரி" என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் ஒருவர் அவர்களை அணுகி, "எவ்விதப் பொறுமை மிகவும் துன்பம் பயக்கக் கூடியது?" என்று வினவினார். அதற்கு அவர்கள் 'அஸ்ஸப்ருல்லாஹ்' (அல்லாஹ்வுடைய அலுவல்களில் பொறுமையை மேற்கொள்வது மிகவும் துன்பம் பயக்கக் கூடியது) என்று பதில் கூறினர். அதற்கு அவர், 'அல்ல' என்று கூறினார். அதுகேட்ட அவர்கள், 'அஸ்ஸப்ருலில்லாஹ்' (அல்லாஹ்வுக்காகப் பொறுமையை மேற்கொள்வது மிகவும் சிரமமானது) என்று சொன்னார்கள். உடனே அவர் மீண்டும் 'அல்ல' என்ற சொல்லையே உதிர்த்தார். அப்பொழுது அவர்கள் சற்றுச் சினமுற்றவர்களாய், "எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான். மாமேதை போன்று பேசக்கூடிய நீவிர் தாம் அதற்குச் சரியான விடை கூறுமே, பார்ப்போம்" என்று மொழிந்தனர். அடுத்தகணமே அவர், 'அஸ்ஸப்ரு அனில்லாஹ்' (அல்லாஹ்வை விட்டும் பிரிந்திருக்குங்கால், பொறுமையை மேற்கொள்வதே மிகவும் துன்பம் பயக்கவல்லது) என்று கூறினார். அப்பொழுது அவர்கள் உணர்ச்சி மீக்குற்று தங்களை அறியாமலேயே அலறிவிட்டார்கள்.

ஒருதடவை அவர்கள் தொழுவதற்காக, 'உளூ'ச் செய்தார்கள். 'உளூ'ச் செய்து பள்ளிவாயிலுக்குள் நுழையும் பொழுது, ''நீர் உம் வெளிப்புறத்தை மட்டும் துப்புரவு செய்து விட்டீரே. உட்புறத்தைத் துப்புரவு செய்ய வேண்டாமா?'' என்று எவரோ கூறுவது போன்று கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள். ஒருவருமில்லை. இஃது இறைவன் பாலிருந்து தமக்கு வந்த அருள் எச்சரிக்கை என்பதை விளங்கிக் கொண்ட அவர்கள், உடனே தம் இல்லம் திரும்பித் தம்மிடமிருந்த உடைமைகள் அனைத்தையும், ஏழைகளுக்கு அறம் வழங்கினார்கள். இதன்பின் தொழுகைக்கு அவசியப்படும் அளவு உடைகளையே அணிந்து வந்தார்கள். இந்நிலையில் ஒருநாள் தம் ஆசானை அணுகிய பொழுது, அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''அபூபக்ரே! நீர் செய்த தூய்மை மிகவும் பயனளிக்க வல்லதாகும். அல்லாஹ் உம்மை எப்பொழுதும் தூய்மையுடனே வைத்திருப்பானாக!'' என்று கூறினர்.

மற்றொரு நாள் அவர்கள், 'உளூ'ச் செய்து கொண்டு பள்ளிவாயிலுக்கு வந்த பொழுது, மீண்டும் அசரீரி முழங்கியது. ''நீர் தூய்மை பெற்று விட்டதாக உமக்கு உத்தண்டம் ஏற்பட்டுவிட்டதா? என் இல்லத்திற்குள் இத்துணைத் துணிச்சலுடன் அடியெடுத்து வைக்கிறீரே''.

அதுகேட்ட அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். ''என்ன! என் இல்லம்வந்து விட்டுத் திரும்பச் செல்ல விரும்புகின்றீரா! நீர் எங்கே தான் செல்கின்றீரென்று பார்ப்போமே'' என்று மீண்டும் அந்த அசரீரி வினவியது.

அதனைச் செவியுற்ற அவர்கள் தம்மையறியாமல் அலறி விட்டார்கள். ''என்ன! என்னைக் குறைகூறித் திட்டி, என்னை இழிவுபடுத்துகிறீரா?'' என்று மீண்டும் அந்த அசரீரி முழங்கியது.

யாது செய்வதென அறியாது அவர்கள் திக்கு முக்காடித் தயங்கிக் கீழே அமர்ந்து அயர்ந்திருந்த பொழுது, ''என்ன! நான் தரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்வது போன்று பாவனை செய்கின்றீரா? இவ்விதம் பொறுமையோடு வாய் பொத்தி, வீற்றிருப்பதன் பொருள் தான் என்ன?'' என்று அந்த அசரீரி மீண்டும் கடாவியது.

அதுகேட்ட அவர்கள், ''இறைவ என் பெரும! உன்னை விட்டும் காத்தருள் புரியுமாறு நான் உன்னிடமே இறைஞ்சுகின்றேன். என்மீது இரங்கி எனக்கு இன்னருள் பாலிக்குமாறு உன்னிடமே அடைக்கலம் புகுகிறேன்.'' என்று கல்லும் கரைந்துருகும் வண்ணம் அழுது பிரலாபித்தார்கள்.

அவர்களுக்கும் இறைவனுக்கும் இருந்த உறவோ, விநோதமாக இருந்தது. ஒரு பஞ்ச காலத்தின் போது மக்கள் அவர்களிடம் வந்து மழைக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறு வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது அவர்கள் தம் மேலாடையைக் கழற்றி ஒருவரிடம் கொடுத்து, அதனைத் தண்ணீரில் துவைத்துக் காயப் போடுமாறு கூறினர். அவ்விதம் அவர் செய்ய, அவர்கள் தம் இருகரம் ஏந்தி ''இறைவனே! என் மேலாடை ஈரமாக உள்ளது. எனவே அதனைக் காயப் போட்டுள்ளேன். எனவே இது காய வெயிலைக்கொடு'' என்று இறைஞ்சினார்கள். சற்று நேரத்தில் மழை கொட்டத் துவங்கிவிட்டது! இஃதென்ன வேடிக்கை!!

அவர்கள் ஒரு சிறந்த கவிஞராகவும் விளங்கினர். இறைஞானக் கருத்துக்களை கவிதையில் யாத்த முதல்வரும் அவர்களே என்று கூறப்படுகிறது. அவர்கள் ஒரு கவிதையில், ''நான் உன் அண்மையில் இருந்து பழகி விட்டதால், உன்னைப் பிரிந்திருப்பதை என்னால் பொறுக்க இயலவில்லையே. பிரிவினை என்னைக் கொல்லாது கொல்கின்றதே'' என்று அலறுகிறார்கள்.

மற்றொரு கவிதையில், ''இறைவனே! நான் ஒரு யூதனை விட இழிந்தவனாக உள்ளேனே. என்னுடைய இழிந்த நிலை யூதனுடைய இழிந்த நிலையையும் மிகைத்து விட்டதே'' என்று கூறி அழுகிறார்கள்.

''நான் என் வாணாள் முழுவதும் இறைவனுடன் ஒரு கணமேனும் தனித்திருக்க - அப்பொழுது எனக்கும் இறைவனுக்கும் இடையில் என்னுடைய 'நான்' என்பது கூடக்குறுக்கிடாது தனித்திருக்க ஏங்கிக் கொண்டிருக்கிறேன்; முடியவில்லையே.

''நான் நாற்பதாண்டுகளாக இறைவனை ஒரு கணமேனும் அறிய வேண்டும் என்று முயன்று கொண்டிருக்கிறேன். முடியவில்லையே'' என்று அவர்கள் வேறொரு கவிதையில் அழுது புலம்புகிறார்கள்.

''உண்மையான பக்தி என்றால், உலகையே மறந்து இறை நினைவில் திளைத்திருப்பதேயாகும்.

''எல்லாவற்றையும் துறந்து இரு. அதுவே இறையண்மையை எய்துவதற்கான அடையாளமாகும். அவனைத் தவிர வேறோர் எண்ணமும் உன் உள்ளத்தில் புக அனுமதியாதே. அவனையன்றியுள்ள அனைத்து எண்ணமும் முட்டாள் தனமானதேயாகும்.

''இரவில் ஒரு மணிநேரம் இறைவனை மறந்து விட்டு உறங்குவது, ஆன்மீகப் பந்தய ஓட்டத்தில் ஓராயிரம் ஆண்டுகள் பின் தங்கிவிட்டதாக முடியும்''.

''அறிவாளர்களுக்கு ஒரு கணம் இறைவனை மறந்துவிட்டிருப்பது, மிகப் பெரும் குஃப்ரிய்யத்தாக உள்ளது.

''என்னோடு அமர்ந்திருக்கும் ஒருவன், ஒரு நிமிடம் கூட உலக எண்ணங்களையெல்லாம் மறந்து, இறைவனை நினைவு கூர்ந்திருக்க இயலவில்லையாயின், அவன் என்னுடன் அமர்ந்திருக்கத் தகுதியற்ற வனாவான்'' என்று அவர்கள் வேறொரு கவிதையில் பாடுகிறார்கள்.

''சூஃபி எவரெனில், ஈருலகிலும் இறைவனையன்றி வேறொன்றையும் காணாதவரேயாவார்''. இவ்வாறு அவர்கள் கூறுகிறார்கள்.

எவரேனும் அவர்களை அணுகின் 'மாஅன்த (நீ என்ன?) என்று தான் வினவுவர். இவ்விதம் அவர்கள் ஒருவரை வினவிய பொழுது, அவர், ''நான் 'பே' என்ற எழுத்தின் கீழே உள்ள புள்ளி ஆவேன்'' என்று பணிவுடன் கூறினார். அது கேட்டுப் பரவசமடைந்த அவர்கள், ''நீர் உம்மைத் தாழ்வுபடுத்திக் கொண்டதன் காரணமாக, இறைவன் உம்மை உயர்வுபடுத்துவானாக!'' என்று கூறி, அவருக்காக இறைவனிடம் இரு கரம் ஏந்தி இறைஞ்சினார்கள்.

அவர்கள் தம்மைப்பற்றிக் கூறும் பொழுது, பெரிதும் தாழ்மை யாகவே கூறிக் கொள்வார்கள். ''நான் தாழ்மை, பணிவு ஆகியவற்றில் அடைக்கலம் புகுகிறேன்'' என்று அவர்கள் கூறினார்கள். 'நான் மக்களின் கண்களில் படாவண்ணம் மலைப் பொதும்பில் போய் ஒளிந்து கொள்ள விரும்புகிறேன். மக்கள் என்னை எங்கு தேடியும் கண்டுபிடிக்க இயலாது அலுத்துத் திரும்பிவிட வேண்டும் என்று விரும்புகிறேன்'' என அவர்கள் ஒருதடவை கூறினார்கள்.

''உண்மை இருக்க வேண்டிய என்னுடைய உள்ளத்தில், பொய்மை குடிகொண்டு விட்டதே. அதன் காரணமாக என் உள்ளம் இறைவனுக்கு மாறு செய்யத் துவங்கிவிட்டதே. அதற்கு மருத்துவம் செய்ய வேண்டு மென்ற கவலையே இல்லாது, நான் மருண்டு கிடக்கின்றேனே'' என்று கூறி வேறொரு தடவை அவர்கள் அலறினார்கள்.

'ஹஸ்பியல்லாஹு¬ (இறைவன் எனக்குப் போதுமானவன்) என்று கூற வேண்டுமென்று நான் பன்னெடுங்காலமாக எண்ணிக் கொண்டுள் ளேன். அவ்விதம் நான் கூறின், நான் எண்ணிக் கொண்டிருப்பது ஒன்று, சொல்வது ஒன்றாகி விடுமோ என்ற ஐயத்தின் காரணமாக, அதனைக் கூறாது வாய்மூடிக் கொண்டுள்ளேன்'' என்று அவர்கள் மற்றொரு தடவை மொழிந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் பள்ளியில் அமர்ந்து 'அல்லாஹ், அல்லாஹ்' என்று மொழிந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருக்குங்கால்,

அண்மையில் வீற்றிருந்த ஓர் இளவல் அவர்களை நோக்கி, 'லாஇலாஹ இல்லல்லாஹு' என்று சொல்லுங்களேன்'' என்று கூறிய பொழுது, ''நான் அவனுக்குப் பதிலாக, வேறொருவனைத் தேடமாட்டேன்'' என்றார்கள் அவர்கள். அதுகேட்டு வியப்புற்ற அவ் இளவல் ''இன்னும் கூறுங்கள்'' என்று இயம்ப, ''லாஇலாஹ என்று கூறும் பொழுதே, என் மூச்சு வெளியேறி நான் இறந்துவிடின், நான் இறைவனை மறுத்த நிலையில் காஃபிராக இறப்பெய்த ஏதுவாகிவிடுமோ என்ற அச்சத்தின் காரணமாகவே அவ்விதம் கூறாது இவ்விதம் கூறிக் கொண்டுள்ளேன்'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

இப்பொழுது அவ் இளவலின் வியப்பு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகியது. ''இன்னும், இன்னும்'' என்று அவர் கத்தினார்.

அவர்களும் அவரின் வேண்டுகோளுக்கு இணங்கி, ''இறைவன் தன் திருமறையில், 'குலில்லாஹு ஃதும்மஃதர் ஹும்ஃபீ ஹவ்லிஹிம் யல்அபூன்' (அல்லாஹு என்று சொல்லும். பின்னர் அவர்களை விளையாடியவர்களாய் விட்டு விடும்'' என்று கூறுகின்றான்'') என்று இயம்பினர், அதுகேட்ட அவ் இளவல் உணர்ச்சி மீக்குற்றவராய் அலறித்துடித்துக் கீழே சாய்ந்து அக்கணமே உயிர் நீத்தார்.

இச்செய்தி பக்தாது நகரம் முழுவதும் ஒரு நொடியில் பரவி, பெரும் பரபரப்பை உண்டு பண்ணிவிட்டது. 'ஷிப்லீ அநியாயமாக ஒருவரைக் கொன்று விட்டார்' என்று விஷமிகள் நகரமெங்கும் புரளியைக் கிளப்பி விட்டார்கள்'' எனவே கொலைக் குற்றம் சாட்டப்பட்டு ஷிப்லீ (ரஹ்) அவர்கள் கலீபாவின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டார்கள்.

தன்னுணர்வற்ற நிலையில் தம் முன் வந்து நின்ற ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கிக் கலீபா, ''தாங்கள் அவரைக் கொன்றது உண்மையா?'' என்று வினவினார்.

''அல்ல'' என்று பேச்சைத் துவங்கிய ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அர்ரூஹு ஹன்னத்; ஃபரஹத்; வதுயியத்; ஃப அஜாபத்; வஸமி அத் ஃப அனாபத் (ஓர் ஆன்மா அவாவுற்றது. பின்னர் அஞ்சியது. அதன்பின் அது அழைக்கப்பட்டது. உடனே அது பதில் கூறிக் கேட்டுக்கொண்டு பறந்துவிட்டது.'') என்று பதிலிறுத்தனர்.

அவர்களின் இம்மறுமொழி, கலீபாவுக்கு ஒருவித மயக்கத்தை அளித்தது. உடனே அவர் தம் பணியாளர்களை நோக்கி, ''விரைவில் ஷிப்லீயை இவ்விடத்தை விட்டும் அப்புறப்படுத்துங்கள். என்தலை கிறுகிறுக்கிறது. நான் அரியணையிலிருந்து மயங்கிக் கீழே வீழ்ந்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன்'' என்று பதற்றத்துடன் கூறினார்.

ஒருதடவை அவர்கள் பள்ளியில் வீற்றிருந்தக்கால், அவர்களிடம் ஒருவர் வந்து 'வஸ்லு' என்றால் என்ன?' என்று வினவினார். அதற்கு அவர்கள், ''நீர் உமக்கு முன்னாலும் பின்னாலும் உள்ள இரு தடைகளாகிய இம்மை, மறுமை ஆகியவற்றைவிட்டும், உம்மைப் பாதுகாத்துக் கொளின், நீர் இறைவனை எய்தப் பெறுவீர். மக்களில் சிலர் இவ்வுலகமே சதமெனக் கருதி, இங்கேயே எல்லாவித இன்பங்களையும் நுகர்ந்து தீர்த்து விட விரும்புகின்றனர். வேறு சிலரோ, அவ் உலக வாழ்வே அழிவில்லாதது எனக் கொண்டு, அதனை எய்தப் பெற, அயராது பாடுபடுகின்றனர். ஆனால், இம்மைப் பலனையும் விரும்பாது, மறுமைப் பலனையும் விரும்பாது, அல்லாஹ்வை விரும்புவோர் அரிதாகவே உள்ளது'' என்று கூறிய அவர்கள், ''அல்லாஹ், அல்லாஹ் என்று மொழிந்த போதினும் அவனே, அவ்வாறு மொழியாதிருந்த போதினும் அவனே. அதனைத் தவிர அவனை அறிந்தவர் எவருளார்? அவனைத் தவிர, வேறு எவர் தாம் அவனை முற்றிலும் அறிய இயலும்'' என்று கூறிய வண்ணம் மூர்ச்சித்துக் கீழே சாய்ந்து விட்டார்கள்.

மற்றொரு தடவை ஒருவர் அவர்களிடம் வந்து வள்ளலுக்கும் வள்ளல் (அக்ரமுல் அக்ரமீன்) எவன்?'' என்று வினவினார். ''அல்லாஹ்'' என்று ஒரே சொல்லில் அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள். ''எவ்வாறு?'' என்று அவர் மீண்டும் வினா எழுப்பினார். அதற்கு அவர்கள், ''வள்ளல் என்றால் ஒருவன் செய்த பாவத்தை மன்னிப்பவன். ஆனால் வள்ளலுக்கு வள்ளலோ, அதே பாவத்தைச் செய்த ஏனையோரையும், தான் முன்னவனை மன்னித்ததன் காரணமாக மன்னிப்பவன். இத்தன்மையுடையவன் அல்லாஹ்வையன்றி வேறொருவருமில்லை'' என்று அவர்கள் விடை பகர்ந்தார்கள்.

''இதனைச் சற்று விளக்கமாகக் கூறுங்கள்'' என்று அவர் வேண்டிய பொழுது, ''ஆதம் (அலை) அவர்களின் பாவத்தை மன்னித்த இறைவன், அதே பாவத்தைச் செய்து கொண்டிருக்கும் (அதாவது அவர்கள் செய்தது போன்று கோதுமையைத் தின்று கொண்டிருக்கும்) அவர்களின் மக்களையும் மன்னித்துக் கொண்டுள்ளானல்லவா? எனவே, 'அக்ரமுல் அக்ரமீன்' என்ற மாண்புசால் திருப்பெயருக்குச் சொந்தக்காரன் அல்லாஹ் ஒருவனேயன்றி வேறு எவனுமில்லை'' என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தார்கள்.

ஒருநாள் அவர்கள் மக்களை நோக்கி, ''நீங்களெல்லாம் புதை குழிக்குள் இருக்கின்றீர்கள்'' என்று கூறினர். ''ஏன் இவ்வாறு கூறுகின்றீர்கள்?'' என்று ஒருவர் வினவியபொழுது, ''நீங்கள் துணியால் மூடப்பட்டிருக்கிறீர்களல்லவா?'' என்று மறுமொழி பகர்ந்தார்கள் அவர்கள்.

''அவ்விதமாயின் நாங்களெல்லாம் இறந்தவர்களென்று எண்ணிக் கொண்டீர்களா?'' என்று அவர் வினவிய பொழுது, ''நிச்சயமாக அறிவாளர்கள் உறக்கத்திலும், அறிவற்றோர் இறந்த நிலையிலும் தான் உள்ளனர்'' என்று அவர்கள் விடையிறுத்தனர்.

ஒருமனிதர் அவர்களிடம் வந்து ''இறை தரிசனத்தை எவ்வாறு எய்தப் பெறுவது?'' என்று வினவிய பொழுது, ''நீங்கள் ஏன் அதைப்பற்றிக் கவலைப்படுகிறீர்கள்?'' அவன் தான் உங்களை எப்பொழுதும் தரிசித்துக் கொண்டுள்ளானே'' என்று அவர்கள் கிண்டலாகப் பதிலுரைத்தார்கள்.

இதன்பின் வேறொருவர் அவர்களிடம் வந்து, ''ஆன்மீகப் பாதையில் தங்களுக்கு வழிகாட்டியாக அமைந்தவர் யார்?'' என்று வினவினார். அதற்கு அவர்கள் ''ஒரு நாய்'' என்று பதிலுரைத்தார்கள். அவர்களின் இப்பதில் கேள்விகேட்டவரைத் தூக்கி வாரிப் போட்டது. ''என்ன இவ்வாறு கூறுகிறீர்கள்? என்னை வேண்டுமென்றே கிண்டல் பண்ணுகின்றீர்களா, என்ன?'' என்று கேட்டார் அவர்.

அதற்கு அவர்கள் ''கிண்டல் பண்ணவில்லை. உள்ளதை உள்ளபடி உரைத்தால், உமக்குக் கிண்டல் போன்று தோன்றுகிறது. அதற்கு நான் என் செய்வது? கேளும், நண்பரே! ஒருநாள் நான் குளக்கரை ஓரமாகச் சென்று கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு நாய் பெரிதும் தாகத்துடன் ஆங்கு நின்று கொண்டிருந்தது. அது நீர் அருந்தத் தண்ணீர் அருகே தன் வாயைக் கொண்டு சென்றதும், தண்ணீருக்குள் ஒரு நாய் நிற்பதைக் கண்டு- அது தன் உருவத்தின் பிரதிபலிப்பு என்பதை அறியாது- திடுக்குற்றுத் தன் வாயை எடுத்துக் கொண்டது. இவ்வாறு அது தண்ணீர் அருகே தன்வாயைக் கொண்டு செல்வதும், பின்பு திடுக்குற்று தண்ணீர் அருந்தாது வாயை எடுத்துக் கொள்வதுமாக சிறிது நேரம் நிகழ்ந்தது.

''அதற்கோ தாகவிடாய் தாங்க இயலவில்லை. எனவே, 'என்ன வானாலும் ஆகட்டும்' என்று அது துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, தண்ணீருக்குள் பாய்ந்தது. அடுத்த கணம் தண்ணீருக்குள் இருந்த 'மற்றொரு நாய்' மாயமாய் மறைந்து விட்டது. தனக்கும் தண்ணீருக்கும் இடையே குறுக்கீடாக நின்றது தானே என்பதையும், அது இப்பொழுது மறைந்து விட்டது என்பதையும் இப்பொழுதுதான் நாய் உணர்ந்தது.

''இதிலிருந்து நான் ஒரு நல்ல பாடத்தைக் கற்றுக் கொண்டேன். எனக்கும் இறைவனுக்கும் இடையே குறுக்கீடாக உள்ளது நானே என்பதை உணர்ந்தேன். அந்த 'நான்' என்பதை அழித்துவிடின் இறைவனை எய்தப் பெறலாம் என்ற உண்மையும் எனக்கு வெளிச்சமாகியது. எனவே ஆன்மீகப் பாதையில் எனக்கு வழிகாட்டிச் சென்ற ஆசான், அந்த

நாயேயன்றி வேறில்லை என்று நான் கூறின், அதில் என்ன தவறுள்ளது?'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் ''ஆசையே எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாகும். அது மனிதனை அறிவுக்கண் குருடனாக ஆக்கி விடுகிறது'' என்று கூறினார்கள். இவ்வாறு கூறிய அவர்கள், தாம் கூறியதை விளக்க பின்வரும் கதை ஒன்றையும் எடுத்துரைத்தார்கள்.

'வலையன் ஒருவன் ஒரு பறவையை வலை வைத்துப் பிடித்து, அதனைக் கறி சமைத்துத் தின்பதற்காக அறுக்கப் போனான். அப்பொழுது அப்பறவை அவனை நோக்கி, ''ஐய! என்னை நீர் அறுத்துக் கறி சமைத்துக் சாப்பிட்டால், உம் வயிறும் நிரம்பப்போவதில்லை. உம் மனமும் நிறைவுறப் போவதில்லை. ஆனால் உமக்கு மூன்று செய்திகளைக் கற்றுத்தருகிறேன். அவை நீர் என்னைக் கறி சமைத்து உண்பதைவிட ஆயிரம் மடங்கு மேலானவையாகும்'' என்று கூறிற்று.

அப்பொழுது வலையன் அந்தப் பறவையை நோக்கி, ''அவற்றை எனக்குக் கற்றுத்தா?'' என்று கூறினான்.

பறவை கூறியது: ''இப்படியெல்லாம் நீர் கேட்டால் அவற்றை நான் கற்றுத் தருவேனா, என்ன? அவை மாண்பார்ந்த செய்திகளாயிற்றே. ஒன்றை வேண்டுமானால் நான் உம் கையில் இருக்கும் பொழுது கூறுகின்றேன். மற்றொருன்றை நீர் என்னை விடுதலை செய்த பொழுது கூறுவேன். வேறொன்றை நான் பள்ளத்தாக்கில் வீற்றிருக்கும் பொழுது கூறுவேன்.''

''நல்லது; அவ்விதமே செய். இப்பொழுது முதலாவதைக் கூறு'' என்று சொல்லி, அதனைப் பிணைத்திருந்த தளைகளை நீக்கி, அதனைத் தன் கைமேல் வைத்துக் கொண்டு கேட்டான் வலையன்.

உடனே பறவை ''உம் கையை விட்டு நழுவியதைப் பற்றிக் கவலையுறாதீர்'' என்று கூறிவிட்டு, மறுகணம் சிறகு விரித்துப் பறந்து மரக்கிளையில் போய் அமர்ந்தது.

இப்பொழுது வலையனுக்கு என்ன செய்வதென்றே விளங்க வில்லை. எனினும் சமாளித்துக் கொண்டு, ''நல்லது பறவையே! நீ கூறிய வண்ணம் என் கையைவிட்டு நீ நழுவிச் சென்றதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நீ என்னிடமிருந்து இப்பொழுது விடுதலை பெற்று விட்டாயல்லவா? இப்பொழுது அந்த இரண்டாவதைக் கூறு'' என்று வேண்டினான்.

இவ்வாறு கூறிவிட்டு, ''நீர் என்ன இத்துணை துர்அதிர்ஷ்டசாலியாக உள்ளீர். நீர் என்னை அறுத்து வயிற்றைப் பிளந்திருப்பின் என் வயிற்றிற்குள் ஒவ்வொன்றும் இருபது தோலோ எடையுள்ள, இரண்டு பொன்னா பரணங்களைக் கண்டிருப்பீரே. என்ன கைதேசம் இது'' என்று சொன்னது.

அதுகேட்ட வலையனுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. தன் விதியை நொந்து கொண்டான் அவன்.

இப்பொழுது பறவை பறந்து சென்று பள்ளத்தாக்கில் அமர்ந்தது.

''நல்லது, பறவையே! நீ இப்பொழுது அந்த மூன்றாவதைக் கூறு'' என்று வேண்டினான் வலையன்.

பறவை கூறியது, ''ஐய! அதனை நான் எவ்வாறு உம்மிடம் கூறுவேன். கையை விட்டு நழுவி விட்டதைப் பற்றிக் கவலைப்படக் கூடாதென்றும், சாத்தியமில்லாத ஒன்றை நம்பக் கூடாதென்றும் நான் உம்மிடம் கூறினேனல்லவா? என் இரத்தம், இறைச்சி, இறக்கைகள், மயிர்கள் ஆகிய அனைத்தையும் நிறுத்துப் பார்த்தாலும், இருபது தோலாவுக்கு மேல் வராதே. அவ்வாறிருக்க, எவ்வாறு ஒவ்வொன்றும், இருபது தோலா எடையுள்ள இரண்டு பொன்னாபரணங்கள் என் வயிற்றிற் குள் இருக்க முடியும்? இதனை நீர் நம்பலாமா? நம்பி, உம் விதியை நொந்து வருத்தமுறலாமா?'' என்று இடித்துரைத்து விட்டு, அவ்விடத்தை விட்டும் பறந்து சென்றது.''

இவ்வாறு அவர்கள், தன்னுணர்வோடு இருக்கும் பொழுது கூறிய செய்திகள் பாமரரும் விளங்கும் வண்ணம் இருந்தன. ஆனால், அவர்கள் தன்னுணர்வற்று இருக்கும் பொழுது கூறிய கூற்றுக்களும், நடந்து கொண்ட முறைகளும் பாமரர்களுக்கு விளங்காதவையாகவும், அறிஞர் களுக்கு விநோதமாகவும், மார்க்கத்திற்கு முரணாகவும் தென்பட்டன. ஒரு பொழுது மார்க்க அறிஞர்கள் எழுதுவதற்காகப் பயன்படுத்தும் மைக்கூட்டை அவர்கள் கண்டதும், ''இந்தக் கறுப்பு மையை இங்கிருந்து எடுத்துச் செல்லுங்கள். என் உள்ளத்தில் படிந்துள்ள கருமையைப் போக்குவதே எனக்குப் பெரும் பாடாக உள்ளது'' என்று அவர்கள் கூறி னார்கள். மற்றொரு தடவை அவர்கள், 'மார்க்க அறிஞர்கள் காகிதத்தில் நிரப்பி வைத்திருக்கும் அவர்களின் அறிவை, என்னுடைய கிர்க்கா (துறவு ஆடை)யுடன் ஒப்பு நோக்கின், என் கிர்க்காவே மேலானதாகத் தெரிகிறது'' என்று கூறினர். இது கேட்டு மார்க்க அறிஞர்கள் அவர்கள் மீது சினமுற்றனர்.

அவர்களிடம் மார்க்க சட்ட திட்டங்கள் பற்றிக் கேள்வி கேட்டு, அவர்களை மானபங்கப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன்,

அல்லாமா அபூ உம்ரான் தம் மாணவர் குழாத்துடன் அவர்களை அணுகி, மாதவிடாய் பற்றி ஒரு சிக்கலான கேள்வியைக் கேட்டார். அதற்கு அவர்கள் அருமையான முறையில் விளக்கம் கூறியதைக் கேட்ட அவர், இன்னும் பல சிக்கலான பிரச்சினைகள் பற்றிப் பல்வேறு கேள்விகளைக் கேட்க, அவற்றிற்கெல்லாம் அவர்கள் வியக்கத்தக்க முறையில் மறுமொழி பகர்ந்தனர். அது கண்டு உணர்ச்சி மீக்குற்ற அபூ உம்ரான் ஓடோடிச் சென்று ஷிப்லீ (ரஹ்) அவர்களைக் கட்டித்தழுவி, "தங்களிடம் கேள்வி கேட்குமுன், எனக்கு, மாதவிடாய் பற்றி மூன்றே மூன்று விளக்கங்கள் தான் தெரிந்திருந்தன. ஆனால் இப்பொழுதோ, நான் பன்னிரண்டு புது விளக்கங்களைத் தெரிந்து கொண்டேன்" என்று மகிழ்ச்சிக் கண்ணீர் உகுத்தார்.

ஷிப்லீ (ரஹ்) அவர்கள் பால் மக்கள் சாரி சாரியாகச் செல்வதைக் கண்டு காழ்ப்புண்டு, அவர்களுக்கு எதிராகத் தீவிரப் பிரச்சாரம் செய்து வந்த மற்றொருவர், அல்லாமா இப்னு பஷ்ஷார் என்பவர். அவர், தாம் எதிர் பார்த்ததற்கு மாற்றமாக, அவர்களின் புகழ் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கி வருவதைக் கண்டு, அவர்கள் எத்தகையவர்கள் என்பதைச் சோதித்தறிவதற்காக ஒரு நாள் அவர்களிடம் சென்று, "ஒருவனிடம் ஐந்து ஒட்டகைகள் இருப்பின், அவன் அவற்றிற்காக எவ்வளவு ஜகாத் வழங்க வேண்டும்?" என்று வினவினார்.

சற்று நேரம் அவர்கள் யாதும் கூறாது வாய்மூடி இருப்பதைக் கண்ட அல்லாமா இப்னு பஷ்ஷார், ஷிப்லீ (ரஹ்) அவர்களின் வாய் அடைபட்டு விட்டதாக எண்ணிக் கொண்டு, மீண்டும் மீண்டும் அக்கேள்வியைக் கேட்க, "ஷரீ அத்தின் படி, அவன் ஓர் ஆட்டை ஜகாத்தாக வழங்குவது அவன் மீது கடமை. ஆனால், எங்களின் கோட்பாட்டின் படி, அவன் ஐந்து ஒட்டகங்களையும் ஜகாத்தாக வழங்கி விட வேண்டும்" என்று பதிலிறுத்தனர் ஷிப்லீ (ரஹ்)

இதைக் கேட்டுப் பெரிதும் வியப்புற்ற அல்லாமா இப்னு பஷ்ஷார், "எந்த இமாமையாவது பின்பற்றி இவ்வாறு கூறுகின்றீர்களா?" என்று வினவினார்.

"ஆம்; ஓர் இமாமைப் பின்பற்றி இவ்வாறு கூறுகின்றேனேயன்றி, என் மனம் போன போக்கில் கூறவில்லை" என்று சடாரெனப் பதில் கூறினார்கள் ஷிப்லீ (ரஹ்).

அவர்களின் இப்பதில், அல்லாமா இப்னு பஷ்ஷாரைத் தூக்கி வாரிப் போட்டது "எந்த இமாம் அவர்?" என்று வியப்புடன் வினவினார்.

அதற்கு ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அந்த இமாம் வேறு எவருமில்லை. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அருமைத் தோழர் அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்களேயாவர். இஸ்லாத்திற்காக வேண்டித் தங்களின் சொத்து அனைத்தையும் செலவழித்த அவர்கள், தபூக் படையெடுப்பின் போது தங்களிடம் எஞ்சியிருந்த உடைமைகளையெல்லாம் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் தாளில் கொண்டு வந்து வைத்த காலை, ''தங்களின் குடும்பத்தினருக்கு ஏதேனும் விட்டு வைத்து வந்தீர்களா?'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் வினவிய பொழுது, ''ஆம்; அல்லாஹ்வையும் அவனுடைய திருத்தூதரையும் தான் விட்டு வைத்து வந்தேன்'' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தது தங்களுக்குத் தெரியாததல்லவே'' என்று மறுமொழி பகர்ந்தனர். அது கேட்டு அல்லாமா இப்னு பஷ்ஷார் (ரஹ்) வாயடைத்து வீற்றிருந்தார். அக்கணத்திலிருந்து அவர்கள் மீதிருந்த வெறுப்பு மதிப்பாக மாறத் துவங்கியது.

ஆக, மார்க்க அறிஞர்களும், மற்றவர்களும் அவர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களிடம் இறைஞானக் கல்வியைப் பயிலுவதற்காக வந்தனர். எவ்வாறு தம் ஆசான் தமக்கு, அதனைக் கற்றுத் தருமுன், தம்மைக் கடுமையான சோதனைகளுக்கும், பயிற்சிகளுக்கும் ஆளாக்கினார்களோ, அவ்விதமே அவர்களும் தம் மாணவர்களைக் கடுமையான சோதனைகளுக்கும், பயிற்சிகளுக்கும் ஆளாக்கினார்கள். அவர்கள் ஒருவரை நோக்கி, ''நீர் மக்களின் எண்ணத்திலிருந்து மறக்கப்படும் வண்ணம், சுவரின் ஓரமாக ஒதுங்கிச் சுவரைப் பார்த்த வண்ணம் அமர்ந்து, இறப்பு உம்மை வந்தடையும் வரை இறைத் தியானத்தில் வீற்றிருப்பீராக!'' என்று கூறினர். மற்றொருவரைப் பார்த்து, ''இன்று வெள்ளிக் கிழமை பாடம் கேட்கும் வரையில், உம்முடைய உள்ளத்தில் அல்லாஹ்வுடைய தியானத்தைத் தவிர வேறொன்றையும் நுழைய அனுமதிக்கக் கூடாது. அநுமதித்துவிடின் நீர் என்னுடைய வாயிலுக்கு வருவது ஹராம்'' என்று கண்டிப்பாகக் கூறினார்கள். வேறொருவரிடம் ''நீர் கானகம் சென்று சிலகாலம் வாழ்ந்து விட்டுப் பின்னர், 'ஹஜ்'ஜு செய்து விட்டு என்னிடம் வாரும்'' என்று கூறி, எவ்வித வாகனமோ, உணவோ நல்காது அவரை வெளியேற்றி விட்டார்கள்.

இதைக் கண்டு சிலர், '' என்ன இவ்வாறு செய்து விட்டீர்கள்! இவ்வாறு செய்வது இறைவனின் படைப்பை, உயிரோடு புதைப்பது போல் உள்ளதே'' என்று கூறிய பொழுது, ''இதற்கெல்லாம் உட்பட விரும்பாதவர், உண்மையை அறிய அருகதையற்றவராவார். அவர் என்னிடம் வருவதை விட வராமலிருந்து விடுவதே மேலானதாகும். அவர் இறை ஞானத்தைத் தேடும் வழியில், இறப்பை எய்திவி:டின்,

யெல்லாம் கடந்துவிடின், அவர் என்னுடன் பத்தாண்டுகள் வீற்றிருந்து பெற இயலாத மாண்பினைச் சிறிது காலத்தில் பெற்று விடுவார் என்பது உங்களுக்குத் தெரியுமா, என்ன?'' என்று வெகுண்டுரைத்தார்கள்.

ஒரு நாள் அவர்கள் தங்களின் நாற்பது மாணவர்களை நோக்கி, ''வமையத்தகில்லாஹ யஜ் அல்லஹூமஹ்ரஜம்வயர்ஸுகுஹூமின் ஹைது லாயஹ் தஸிபு. வமையத வக்கல் அலல்லாஹி ஃபூவ ஹஸ்புஹூ'' (இறையச்சம் உள்ளவர்களுக்கு, இறைவன் உணவுக்கான ஒரு வழியை ஏற்படுத்துகிறான். அவர்கள் அறியாவண்ணம், அவர்களுக்கு உணவளிக்கிறான். இறைவன் மீது தவக்குல் (நம்பிக்கை) வைக்கும் அவர் களுக்கு இறைவன் போதுமானவன்'' என்ற இறை திருவசனத்தை ஓதி விளக்கம் பகர்ந்தனர்.

அவ்விளக்கத்தைக் கேட்டுப் பெரிதும் மனத் தெளிவும், உறுதியும் பெற்ற அவர்கள், இறையருளில் முழு நம்பிக்கை கொண்டு தங்களின் இடத்திலேயே அமர்ந்து, உண்ணாது, உறங்காது, இறை தியானத்தில் வீற்றிருந்தார்கள். நான்காவது நாள், புலர்ந்ததும் ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அவர்களின் முன் வந்து, ''இறைவன் தன் பூமியில் எங்கணும் சென்று அவனுடைய உணவைத் தேடுமாறு கூறியுள்ளான் என்று சொல்லி (ஜுமுஆ) தொழுகை முடிந்தால், (பள்ளியிலிருந்து வெளியாகி) 'பூமியில் சென்று அல்லாஹ்வுடைய அருளைத் தேடிக் கொள்ளுங்கள்' (63:10) என்ற திரு வசனத்தை ஓதினர்.

அதன்பின் அவர்கள், அவர்களை நோக்கி, ''எனவே, நீங்கள் அவன் மீது 'தவக்குல்' வைத்து, உணவைத் தேடுவதே அறிவுடைமையாகும் . ஆனால் ஒரு நிபந்தனை. நீங்கள் எவரிடமும் கையேந்தி இரக்கக் கூடாது'' என்று கூறினர்.

அது கேட்ட அவர்கள், தங்களின் நல்லார் ஒருவரை உணவு ஈட்டிவர வெளியே அனுப்பி வைத்தனர். அவர் அந்நகரமெங்கும் சுற்றித் திரிந்தும், யாதோர் உணவும் கிடைக்காததன் காரணமாகப் பெரிதும் களைப்புற்று, ஒரு மருத்துவமனையின் அருகே சென்று, அங்கு சற்றுநேரம் வீற் றிருந்தார். அப்பொழுது அங்கு குழுமி இருந்த எல்லா நோயாளர் களையும் பரிசோதித்துப் பார்த்து மருந்து கொடுத்து வந்த மருத்துவர், இவரையும் ஒரு நோயாளர் என எண்ணி இவரையும் சோதித்துப் பார்த்தார்.

இவரை எவ்வளவோ சோதித்துப் பார்த்தும், யாதொரு நோய்க்கான அறிகுறியும் இல்லாததைக் கண்ட அவர், இவருக்கு வேண்டியது மருந்தல்ல, உணவு தான் என்பதை உணர்ந்து, உடனே உணவுப் பொருள்

வாங்கி வருமாறு தம் ஏவலாளருக்குப் பணித்தார். அவ்விதமே அவர் செய்ய, அவ்வுணவுப் பொருளை இவரின்முன் கொண்டு வந்து வைத்து, உண்ணுக என்று வேண்டி நின்றார் அந்தக் கிறிஸ்தவ மருத்துவர்.

அப்பொழுது அவர் அந்த மருத்துவரை நோக்கி,''என்னைப் போன்று இன்னும் முப்பத்தைந்து பேர்கள் உள்ளனரே, நான் மட்டும் இதனை எவ்வாறு உண்பது? என கூறினார்.

உடனே அந்த மருத்துவர் தம் பையிலிருந்து பணத்தை எடுத்துக் கொடுத்து, முப்பத்து ஒன்பது பேர்களுக்கான உணவுப் பொருள்களை வாங்கி வருமாறு செய்து, அவற்றை அவருடன், அவரின் தவமடத்திற்கு அனுப்பி வைத்து, என்ன நிகழ்கிறது என்பதைப் பார்த்து வருவதற்காக அவர் அறியாமல், அத்தவமடம் நோக்கிச் சென்றார்.

தம் தோழர் ஏராளமான உணவுப் பொருள்களுடன் வந்தது கண்டு, தியானத்தில் வீற்றிருந்த ஷிப்லீ (ரஹ்) அவர்களின் மாணவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ஓடோடிச் சென்று தங்களின் ஆசானிடம் அதனை எடுத்துரைக்க, அவர்கள் நடந்த வரலாற்றினைக் கேட்டு உவகை பூத்தனர். பின்னர் அவர்களை நோக்கி, ''இறைவன் உங் களுக்கு ஒரு கிறிஸ்துவர் மூலம் அளித்த உணவாகும் இது. எனவே அவருக்காக இறைவனிடம் இறைஞ்சி விட்டு அதனை உண்ணுங்கள்'' என்று கூறினர்.

அவ்விதமே அவர்கள் செய்ய, அதனை மறைவிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த அந்தக் கிறிஸ்தவ மருத்துவர், அவர்கள் இறைஞ்சிய இறைஞ்சுதலின் காரணமாகவும், அவர்களின் தவ வாழ்வின் மேன்மை யைக் கண்டு இறும்பூதெய்தியதன் காரணமாகவும், அடுத்த கணம் சரேலென உள்ளே நுழைந்து, ஷிப்லீ (ரஹ்) அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தைத் தழுவினார்.

ஒருவர் அவர்களிடம் வந்து, தமக்கு அதிகமான குழந்தைகள் இருப்பதால் தம் இல்லத்தில் அதிகமான உணவுத் துன்பமாக இருக்கிற தென்று கூறிய பொழுது, ''நீர் உடனே உம் இல்லம் சென்று, எவர் எவருக்கு அல்லாஹ்வின் இரணம் இல்லையென்று கருதுகின்றீரோ அவர்களையெல்லாம் வீட்டை விட்டு விரட்டிவிடும்'' என்று கூறினர்.

இவ்வாறு நையாண்டி பண்ணி,''இறைவன் அவர்களுக்கு இரணம் அளிக்க இருக்கும் பொழுது, நீர் ஏன் கவலையுறுகிறீர்?'' என்று அவரிடம் கூறாமல் கூறினார்கள்.

ஒரு நாள் தர்வேஷ் ஒருவர் அவர்களை அணுகி, ''நான் வறுமையில் பெரிதும் துன்புறுகிறேன், என்ன செய்வதென்றே எனக்கு விளங்க

வில்லை'' என்று அழாக்குறையாக எடுத்துரைத்தார். அது கேட்ட அவர்கள், ''இதற்காக நீர் இறைவனின் திருவாயிலை விட்டும் நீங்குவது, குஃப்ரிய்யத் ஆகும், அவநம்பிக்கையுறாதீர்கள். என் பேரருளில் நம்பிக் கையுடன் இருங்கள்' என்று இறைவன் கூறியுள்ளதை நீர் அறியமாட்டீரா, என்ன?'' என்று ஆறுதல் கூறினார்கள் அவர்கள்.

அவர்களின் இச்சொல் அவருக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. தங்களின் அறிவுரை கேட்டபின் என் கவலையெல்லாம் மறைந்துவிட்டன என்று கூறினார் அவர்.

அப்பொழுது அவர்கள் ''என்ன நீர் இவ்வாறெல்லாம் இறைவனைச் சோதிக்கின்றீர்? எப்பொழுதும் கவலையுடன் இருங்கள். அச்சமற்று இருக்க வேண்டாம். நான் என்னுடைய அடியார்களை அடிக்கடி சோதித்து வருகிறேன்'' என்று இறைவன் கூறியுள்ளானல்லவா? அதனை நீர் விளங்க மாட்டீரா, என்ன?'' என்று அவரை மடக்கினார்கள்.

தர்வேஷுக்கோ என் செய்வதென்றே விளங்கவில்லை. ''என்னை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்றுங்கள். என் வறுமை தீர வழி கூறுங்கள்'' என்று வேண்டினார்.

அதற்கு அவர்கள், ''போய் இறைவனின் திருவாசலில் உம் இறுதி மூச்சு இருக்கும் வரை, உம் தலையை முட்டும். இறைவன் உம் முட்டு தலைக் கேட்டு 'யார் அது?' என்று வினவுவான்'' என்று கூறினார்கள்.

மற்றொரு நாள் அவர்களின் இல்லத்திற்கு அவர்களைக் காண்பதற் காகப் பல ஸூஃபிகள் வந்தனர். அவர்களுக்கு உணவளிக்க, அவர்களின் இல்லத்தில் யாதொன்றும் இல்லை. எனவே ஒருவரைத் தமக்குத் தெரிந்த செல்வர் ஒருவரிடம் அனுப்பி, நிலைமையை எடுத்துரைத்துப் பணம் வாங்கி வருமாறு கூறினர். அவர் சென்று பணம் கேட்ட பொழுது, ''நீர் போய் அபூபக்ர் ஷிப்லீயிடம் உமக்குத்தாம் 'ஹக்'கைத் தெரியுமே. அவனிடம் கேட்டால் என்ன? என்று நான் கூறியதாகச் சொல்லும்'' என்று கூறி அனுப்பினர்.

அது கேட்ட ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அச்செய்தி கொண்டு வந்த வரிடமே, ''அவரிடம் சென்று உலகப் பொருள்கள் இழிதன்மையுடை யவை. எனவே இழிந்தவராகிய அவரிடமே அவற்றைக் கேட்டனுப்பி னேன். 'ஹக்'கிடம் 'ஹக்'கான பொருள்களையே கேட்பேன் என்றும் நான் சொன்னதாகக் கூறிவிட்டு வாரும்'' என்று சொல்லி அனுப்பினார்கள்.

வேறொரு நாள் ஒருவர் அவர்களை அணுகி, ''அல்லாஹ் மிக அன்பாளன் என்று தங்களுக்குத் தெரியாதா?'' என்று வினவிய பொழுது ''தெரியும்; தெரிந்த அக்கணத்திலிருந்து, அவனிடமிருந்து யாதொன்

றையும் கேட்பதில்லை என்று முடிவு செய்தேன்'' என்று கூறினார். ''ஏன் அவ்வாறு முடிவு செய்தீர்கள்?'' என்று அவர் வியப்புடன் வினவிய பொழுது, ''ஒருவரிடம் எவ்வித உதவியும் கோராது, ஒருவன் தன் மதிப்புடன் வாழ்வது மாண்பாகும் நற்பண்பல்லவோ?'' என்று மறுமொழி பகர்ந்தார்கள் அவர்கள்.

மேலும் ''மெய்ஞ்ஞானிகளுக்கு இம்மையைக் கீழே அணியும் உடுப்பாகவும், மறுமையை மேலே அணியும் உடுப்பாகவும் அளிக்கப்பட்ட போதினும், அவற்றைக் கழற்றி இறைவன் முன்னிலையில் வைத்து விட்டு, அவர்கள் சுதந்திரமாக நிற்பார்கள்'' என்றும் அவர்கள் உணர்ச்சியுடன் கூறினார்கள்.

பிறிதொரு நாள் அவர்களுடைய உள்ளம் அவர்களை நோக்கி, ''நீ ஓர் உலுத்தன்'' என்று கூறியது. அதற்கு அவர்கள், ''நான் உலுத்தனல்ல'' என்று பதில் கூறினர். ''இல்லை, இல்லை நீ உலுத்தனே உலுத்தன் தான்'' என்று அது எதிர்மொழிந்தது. அப்பொழுது அவர்கள் தம் மனத்தை நோக்கி, ''அப்படியா! பார், நான் உன்னுடைய கூற்றை உடைத்துச் சுக்கு நூறாக்குகின்றேன்'' என்று ஆணையிட்டுக் கூறினார்கள்.

இதன்பின் சற்று நேரம் சென்றது. ஒரு மனிதர் அவர்களிடம் வந்து, அவர்களுக்குக் காணிக்கையாக ஐம்பது பொற் காசுகளை வழங்கிச் சென்றார். அவற்றை எடுத்துக் கொண்டு தாம் முதலில் சந்திக்கும் ஓர் ஏழையிடம் கொடுத்துவிட எண்ணி அவர்கள் வெளியே சென்ற பொழுது, ஒரு நாவிதரிடம் ஒரு குருடர் தலைமுடி இறக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே அவரிடம் சென்று அவற்றை அவருக்கு அன்பளிப்புச் செய்தனர். ஆனால், அக்குருடரோ அவற்றை ஏற்றுக் கொள்ளாது, தமக்குத் தலை மழித்துவிட்ட நாவிதருக்கு அதனைக் கொடுக்குமாறு கூறினார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''என்ன இவ்வாறு கூறுகின்றீர்? தலையை மழிப்பதற்கு ஐம்பது பொற்காசுகளா கூலி கொடுப்பது?'' என்று வினவினர். இது அக்குருடரின் செவிப்பட்டதும், அவர்தம் தலையைச் சற்று உயர்த்தி, ''நீர் உலுத்தன் என்று நான் முன்பே கூறவில்லையா?'' என்று சினமொழி பகர்ந்தார்.

அது கேட்டு அதிர்ச்சியுற்ற அவர்கள், அந்த நாவிதரிடம் அப் பணத்தைக் கொடுத்த பொழுது, ''இக்குருடர் என்னிடம் முடி இறக்க வந்த பொழுதே, அவரின் ஏழ்மையையும், இயலாத தன்மையும் கண்டு மனமிரங்கி, அவரிடம் கூலி பெறாது தலைமுடி இறக்கிவிட வேண்டு மென்று நிர்ணயம் செய்து கொண்டேன். எனவே உம் பணம் எனக்கு வேண்டாம்'' என்று கூறினான்.

அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட உரோஷத்திற்கு அளவில்லை. அப்பணத்தைக் கடலிலே தூக்கி எறிந்து, "அல்லாஹ் உன்னை நாச மாக்குவானாக! உன் மீது எவரேனும் சிறிதளவு அன்பு செலுத்திய போதினும், அவன் அவரையும் இழிவுக்குள்ளாக்குவானாக!" என்று சபித்தார்கள்.

வேறொருநாள் அவர்கள் திஜ்லா நதியின் கரையோரமாகச் சென்று கொண்டிருந்த பொழுது, திடீரெனத் தம் சட்டை பையில் கையைவிட்டு, அதிலிருந்த நானூறு பொற்காசுகளை எடுத்து, ஓடும் வெள்ளப் பிரவாகத்தில் வீசி எறிந்தார்கள். அதைக் கண்ட ஒருவர் "ஏன் இவ்வாறு செய்தீர்கள்? அவற்றை ஏழைகளுக்கு அறம் செய்யக் கூடாதா?" என்று அவர்களை வினவிய பொழுது, "எல்லாப் புகழும் இறைவனுக்கே! நான் என் இதயத்தை மூடியிருக்கும் திரையை எடுத்து, என் சகோதர முஸ்லிம் களின் இதயங்களில் போட்டு அவற்றை மூடிவிட்டால், நான் இறைவனுக்கு என்ன சமாதானம் கூறுவேன். என் நலனைப் பெரிது கண்டு, பிறருக்குத் தீங்கிழைப்பது மார்க்கத்திற்கு விரோதமானதல்லவா?" என்று அவர்கள் விடையிறுத்தனர்.

அவர்களின் உள்ளம் அன்பு மயமாக விளங்கியது. ஓரிரவு கடும் குளிரில் ஒரு பூனைக்குட்டி தெருவில் கிடந்து நடுங்கிக் கொண்டிருப் பதைக் கண்ட அவர்கள், அதனைத் தம் துணியால் மூடித் தம் இல்லம் எடுத்து வந்து அதற்கு உணவளித்து, அதனை இறப்பின் கொடும் பிடியி லிருந்து காப்பாற்றினார்கள்.

மற்றோர் இரவு அவர்கள் கடைத்தெருவிலிருந்து வாங்கி வந்த கோதுமை மூட்டையில், ஓர் எறும்பு சேர்ந்து வந்திருப்பதையும், அது எங்கு செல்வதென அறியாது அம்மூட்டைக்குள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருப்பதையும் கண்டு, அன்றிரவு முழுவதும் அவர்களுக்கு வருத்தமாக இருந்தது. "நான் என் இல்லத்தில் சுகமாகப் படுத்திருக்கும் பொழுது, அது தன் இல்லத்தை விட்டு இங்கு வந்து விட்டதாலல்லவோ யாது செய்வதென் அறியாது தத்தளித்துக் கொண்டிருக்கிறது. இது என்னால் அதற்கு ஏற்பட்ட தீமையல்லவா?" என்று அவர்கள் எண்ணி, எண்ணி ஏங்கினார்கள். விடிந்தெழுந்ததும், அவர்கள் அக்கோதுமை மூட்டையை அவிழ்த்துக் கீழே கொட்டி அந்த எறும்பைப் பிடித்துத் தாம் கோதுமை வாங்கிய கடையில் கொண்டு போய் விட்டு விட்டு வந்துதான் மறு வேலை பார்த்தார்கள்.

ஒரு தடவை அவர்கள் மக்களை நோக்கி, "நீங்கள் இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோருவதில் தாமதம் செய்வதே பாவமாகும். ஏனெனில், நீங்கள் தாமதம் செய்யும் காலமெல்லாம், பாவத்திலேயே

கிடந்து உழன்று கொண்டிருப்பீர்கள். மேலும் இறைவன் உங்களுக்கு அளித்த வாழ்வினை நன்முறையில் பயன்படுத்துங்கள். அதுவே உங்களின் மறுமைப் பெரு வாழ்விற்கான மூலதனமாகும்'' என்று எடுத்துரைத்தார்கள்.

அவர்கள் 'ஹலால்' ஆன பொருளையே அன்றி, வேறொன்றையும் உண்பதில்லை என்ற உள உறுதியுடன் பேணுதலான வாழ்க்கை நடத்தி வந்தனர். ஒரு தடவை அவர்கள் காட்டில் திரிந்து கொண்டிருந்த பொழுது, ஓர் அத்தி மரம் பழுத்துக் குலுங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு, அதிலிருந்து சில பழங்களைப் பறித்துத் தின்னலாமென்று அவர்கள் தம் கையை நீட்டினர். அப்பொழுது அந்த அத்திமரம் அவர்களை நோக்கி, ''நீர் என்னைத் தொடாதீர். உம் உறுதியைக் காத்துக் கொள்ளும்; நான் ஒரு யூதனுடைய உடைமையாகும்.'' என்று கூறுவது போன்ற உணர்வைப் பெற்றனர். அடுத்த கணம் நீட்டப்பட்ட அவர்களின் கை தானாகவே மடங்கிக் கொண்டது.

மற்றொரு தடவை அவர்கள் தெருவழியே சென்ற பொழுது, தெருவிலே கண்டெடுத்த ஓர் அக்ரோட் கொட்டையைப் பற்றி இரு சிறுவர்கள் தங்களிடையே சண்டை போட்டுக் கொள்வதைக் கண்டனர். உடனே அவர்கள் தலையிட்டு, ''நீங்கள் வீணே ஓர் அக்ரோட் கொட்டைக்காகச் சண்டையிடாதீர்கள். நான் அதனை உடைத்து, அதன் பருப்பை உங்களிருவருக்கும் சரிசமமாகப் பங்கு வைத்துத் தருகிறேன்'' என்று கூறி அந்த அக்ரோட் கொட்டையை வாங்கி உடைத்தார்கள்.

அவர்கள் அதனை உடைத்துப் பார்த்த பொழுது, என்ன பரிதாபம்! அதில் சிறிதளவு பருப்புக் கூட இல்லை. உள்ளே முற்றிலும் காலியாக இருந்தது.

அப்பொழுது அசரீரி ஒன்று, ''பங்கு வைப்பவரே! உம்மால் முடிந்தால் பங்கு வையுமே'' என்று இழித்துரைத்தது.

இது அவர்களின் செவிப்பட்டதும் ''எல்லாச் சண்டைகளும் ஒன்றுமில்லாததற்காகத் தான் நடந்து வருகின்றன. எல்லாரும் ஒன்றுமில்லாததைப் பங்கு வைப்பதாகவே பாவனை செய்கிறார்கள்'' என்று அவர்கள் முணுமுணுத்தார்கள்.

ஒருநாள் அவர்கள் காட்டின் வழியே சென்று கொண்டிருந்த பொழுது, அங்கு பஹ்லுல் மஜ்னூனைக் கண்டனர். அவரின் ஒரு கையில் மூங்கிலாலான ஒரு குதிரை இருந்தது. மற்றொரு கையில் பிரம்பு ஒன்று இருந்தது. அவர் ஓடிக் கொண்டிருந்தார். அவரை நிறுத்தி, ''எங்கே

செல்கின்றீர்?' என்று அவர்கள் வினவினார்கள். 'அல்லாஹ்விடம்' என்று அவர் பதில் கூறினார்.

சற்று நேரம் கழித்து, அவர் திரும்பி வந்தார். அவர் கையிலிருந்த மூங்கிலாலான குதிரை உடைந்திருந்தது. அவருடைய கண்கள் அழுது, அழுது சிவந்திருந்தன. ''என்ன நேர்ந்தது? ஏன் அழுகிறீர்?'' என்று அவர்கள் வினவினார்கள். அதற்கு அவர், ''நான் அல்லாஹ்வின் திருமுன், அவன் என்னையும் தன் அடியார்களில் ஒருவனாக ஏற்றுக் கொள்ளட்டும் என்று எணணிய வண்ணம் நின்று கொண்டிருந்தேன். ஆனால் அவன் என்னை அறிந்த பொழுது, 'என் முன் நிற்காதே' என்று கூறி, என்னை விரட்டி விட்டான்'' என்று கூறினார்.

மற்றொரு நாள் அவர்கள் தெருவழியே சென்று கொண்டிருந்த பொழுது, ஒருவரைச் சிறுவர்கள் கல்லாலெறிந்து கொண்டிருந்தார்கள். சிறுவர்கள் எறிந்த கற்களில் ஒன்று அவரின் தலையில் பட்டு இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. அது கண்டு அவர் மீது இரங்கிய அவர்கள், சிறுவர்களை விரட்டினார்கள். ஆனால் சிறுவர்களோ, ஓடுவதற்கு மாறாக அவர்களை அணுகி, ''ஷைகு அவர்களே! எங்களை, எங்களின் போக்கில் விட்டு விடுங்கள். நாங்கள் அவரை இக்கணமே கொன்றொழித்து விடுகிறோம்'' என்று கூறினர்.

''ஏன் அவர் மீது உங்களுக்கு இத்துணை ஆத்திரம்?'' என்று வின வினார்கள் அவர்கள்.

'அவர் ஒரு காஃபிர்'' என்றார்கள் அவர்கள் பற்களை நெறு நெறெனக் கடித்துக் கொண்டு.

''எவ்வாறு அவரைக் காஃபிர் என்று கூறுகின்றீர்கள்?'' என்று வியப்போடு வினவினார்கள் அவர்கள்.

''அவர், தாம் இறைவனைக் கண்டதாகவும், அவனுடன் உரையாடியதாகவும் கூறுகிறார். இது குஃப்ரியத்தல்லவா?'' என்றார்கள் அவர்கள்.

உடனே ஷிப்லீ (ரஹ்) அவர்கள், அச்சிறுவர்களை நோக்கி, ''சற்றுப் பொறுமையாயிருங்கள். நான் இது பற்றி அவரிடம் விசாரித்து வருகிறேன்.'' என்று கூறிவிட்டு அவரிடம் சென்றனர்.

அவரோ தம்மோடு பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் தம்மை நோக்கி, ''இந்தச் சிறுவர்கள் உம் பேரில் குற்றம் சுமத்தும் வண்ணம் நீர் நடந்து கொள்வது உமக்கு அழகா?'' என்று கடாவிக் கொண்டிருந்தது ஷிப்லீ (ரஹ்) அவர்களின் செவியில் விழுந்தது.

அவர்கள் அவரை அணுகி, ''என் உடன் பிறந்தாரே! இந்தச் சிறுவர்கள் உம்மைப் பற்றி ஏதோ குறை கூறுகிறார்களே. அது உண்மையா?'' என்று வினவினர்.

''என்ன குறை கூறுகிறார்கள்?'' என்று அவர்கள் வினவினர்.

''நீர் இறைவனைக் கண்டதாகவும், அவனுடன் உரையாடியதாகவும் கூறினீராமே. அது உண்மையா?'' என்று வினவினர்.

அது கேட்ட அவர் பெரும் சப்தமிட்டு அலறி, ''ஷிப்லியே! எவன் தன் காதலால் என்னைப் பணிவுள்ளவனாக்கி, தன் தொலைவினால் என்னைப் பித்துப் பிடித்தவனாகச் செய்தானோ அவன் மீது ஆணையாகச் சொல்கிறேன். அவன் ஒரு நொடி என்னை விட்டு மறைந்தாலும், நான் பிரிவாற்றாமையால் துகள் துகளாகச் சிதறுண்டு போவேன்'' என்று கூறிவிட்டு,

**''ஜமாலுக ஃபீ அய்னீ வ ஃதிக்ருக ஃபீ ஃபம்மீ**
**வ ஹுப்பிக ஃபீகல்பீ ஃபஅய்ன தயீபு''**

(உன் அழகு என் கண்களில் உள்ளது. உன் புகழ் (திக்ர்) என் வாயிலுள்ளது. உன் மீதுள்ள காதல் என் இதயத்தில் உள்ளது. இவ்வாறு இருக்கும் பொழுது நீ எங்குப்போய் ஒளிவாய்?)

என்று பாடிக் கொண்டு, அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டார்.

வேறொரு நாள் அவர்கள் ஒரு சிற்றூரின் வழியே சென்று கொண்டிருந்த பொழுது, மிகவும் மெலிந்த இளவல் ஒருவரை அவர்கள் அலங்கோல நிலையில் கண்டார்கள். அவரின் தலைமுடி பரட்டையாக இருந்தது. அடிக்கடி அவர் தம் முகத்தை மண்ணில் புரட்டிக் கொண்டிருந்தார். சில பொழுது அண்ணாந்து வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய வாய் ஏதோ ஒன்றை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவருடைய கன்னங்களில் கண்ணீர் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது.

இதைக் கண்ட அவர்கள், அவரின் அவலம் பற்றி விசாரித்து ஆவன செய்ய எண்ணி, அவரை அணுகினர். அவர்களைக் கண்டதும், அவர் ஓடத் துவங்கினார். அவர்களும் அவரின் பின்னே ஓடினர். அவர் ஓட, அவரை விரட்டிக் கொண்டு அவர்கள் ஓட, இவ்வாறு சிறிது தொலைவு அவ்விருவரும் ஓடினர். எனினும் அவரை அவர்களால் பிடிக்க இயலவில்லை, அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, உரத்து சப்தமிட்டு, 'இறைவனின் நேசரே! என் மீது இரங்குவீராக!' என்று கூறினர்.

''அல்லாஹ்வின் மீது ஆணையாக,'மாட்டேன் மாட்டேன்'' என்று கூறிவிட்டு அவர் ஓடிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''அல்லாஹ்வுக்காக வேண்டி, சற்று நில்லும்'' என்று கூறினர்.

''மாட்டேன்' என்று கூறுவது போன்று, அவர் தம் கையால் சாடை செய்து விட்டு, 'அல்லாஹ்' என்று சப்தமிட்ட வண்ணம் ஓடினார்.

அவரின் இச்செயல் அவர்களுக்குப் பெரும் வியப்பை அளித்தது. ''நீர் அல்லாஹ்வின் பெயரை உளப் பூர்வமாக உச்சரிப்பது உண்மை யானால், நீர் அல்லாஹ்வுடன் எத்தகு அன்புத் தொடர்பு கொண்டுள்ளீர் என்பதை வெளியிடுமே'' என்று அவர்கள் கூறினர்.

அடுத்த கணம் அவர் மூன்று முறை ''அல்லாஹ்'' என்று உரத்து சப்த மிட்ட வண்ணம் கீழே சாய்ந்தார். அவர்கள் ஓடோடிச் சென்று அவரைப் பார்த்த பொழுது, மூச்சே இல்லை. அவர் பிணமாகக் கிடந்தார்.

அதன்பின் அவரை நல்லடக்கம் செய்வதற்காக, அருகிலிருந்த சிற்றூருக்குச் சென்று, அதற்கான பொருள்களை வாங்கிக் கொண்டு வந்து பார்த்த பொழுது, அவருடைய உடலைக் காணவில்லை. எவரேனும் வழிப்போக்கர்கள் அவருடைய வெற்றுடலை நல்லடக்கம் செய்து விட்டுச் சென்றுள்ளனரோ என்று அங்குமிங்கும் பார்த்த பொழுது, அத்தகைய அடையாளம் யாதொன்றும் தென்படவுமில்லை.

அப்பொழுது அசரீரி ஒன்று முழங்கியது: ''ஷிப்லீயே! அவரின் உடலை அமரர்கள் நல்லடக்கம் செய்து விட்டார்கள். ஆதலின் நீர், அதைப் பற்றிக் கவலையுறாது, இறைவனைத் தியானிப்பதிலும், அதிகமதிகமாக அறம் செய்வதிலும் உம் வாணாளைக் கழித்து வருவீராக! ஏனெனில் இந்த இளவல் ஒரு நாள் செய்த ஓர் அறத்தின் காரணமாக இத்தகு தகுதியை எய்தப் பெற்றார்.''

அது கேட்டுப் பெரிதும் வியப்படைந்த ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ''அப்படியா! அப்படி அவர் என்ன பேரறம் செய்தார்?'' என்று வினவினர்.

மீண்டும் அசரீரி முழங்கியது. ''ஷிப்லியே! இந்த இளவல் துவக்கத் தில் பெரிதும் பாவம் செய்பவராக இருந்தார். ஓரிரவு அவர் கனவொன்று கண்டார். அதில் பாம்புகள் அவரைச் சூழ்ந்து கொண்டிருப்பது போன்றும், அவற்றின் வாயிலிருந்து வெளிவரும் நெருப்புச் சுவாலை அவரின் வாயில் நுழைந்து உடலிலும் ஊடுருவிப் பாய்ந்து அதனைச் சுட்டெரிப்பது போன்றும் கண்டார். அதிலிருந்து அவருடைய வாழ்விலேயே பெரும் மாற்றம் ஏற்பட்டது.

''இதன்பின் உலகை முற்றிலும் துறந்து, இறைத் தியானத்திலே ஈடுபட்டார். ஓராண்டல்ல, ஈராண்டல்ல, பன்னிரண்டு ஆண்டுகள். நேற்று ஒரு பக்கீர் இவரிடம் வந்து, தமக்கு ஏதாவது உணவு தருமாறு வேண்டி னார். அவரிடம் அவருக்குக் கொடுப்பதற்கு யாதொன்றும் இல்லை. தாம் அணிந்திருந்த மேலங்கியைக் கழற்றி அவரிடம் கொடுத்து விட்டார். அதனைப் பெற்றதும், அந்த பக்கீருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. 'இறைவனே! இவரின் பாவங்களைப் பொறுத்தருள் வாயாக!'' என்று இறைஞ்சினார். அதன் காரணமாக அவர் பாவம் பொறுக்கப் பெற்று, இத்துணைப் பெரிய தகுதியை எய்தப் பெற்றார்.''

அசரீரி இவ்வாறு முழங்கியதை கேட்டதும், ஷிப்லீ (ரஹ்) அவர் களுக்கு ஏற்பட்ட வியப்பு, முன்னை விடப் பன்மடங்கு அதிகமாகியது.. ஒரு தடவை அவர்கள் சிரியாவில் சுற்றுப் பயணம் செய்த பொழுது, அவர்களுடையதையும் அவர்கள் சென்ற வணிகக் குழுவினருடையவும் பொருள்களைக் கள்வர்கள் கொள்ளையடித்துச் சென்றனர். பின்னர் அக்கள்வர்கள் ஓரிடத்தில் சூழ அமர்ந்து, அக்கொள்ளையில் தங்களுக்குக் கிடைத்த பாதாம் பருப்பையும் சர்க்கரையையும் ஒன்று சேர்த்துத் தின்ற பொழுது, அவர்களின் தலைவர் மட்டும் அவர்களுடன் சேர்ந்து அவற்றைத் தின்னாதிருப்பதைக் கண்டு; ''ஏன் நீர் அவற்றைத் தின்ன வில்லை?'' என்று வினவினர் ஷிப்லீ (ரஹ்).

''நான் நோன்பு நோற்றிருக்கிறேன்'' என்று அவர் பதில் மொழிந்தார்.

அவரின் இப்பதில் ஷிப்லீ (ரஹ்) அவர்களின் முகத்தில் ஒரு புன் முறுவலை மலரச் செய்தது. ''என்ன! மக்களைக் கொள்ளை அடித்து, அவர்களைத் துன்புறுத்துகிறீர். அத்துடன் நோன்பும் நோற்றுக் கொள்கிறீரே. இஃதென்ன வேடிக்கையாக உள்ளது'' என்று அவர்கள் வினவினர்.

அதற்கு அவர், ''ஆம்; நான் தீயவழியில் சென்று கொண்டிருந்த போதினும், நல்வழியின் வாசலை மூடிவிடாது திறந்து வைத்துக் கொண்டுள்ளேன்'' என்று கூறினார்.

சிறிது காலம் சென்று ஷிப்லீ (ரஹ்) அவர்கள் 'ஹஜ்'ஜு செய்வ தற்காக மக்கா சென்ற பொழுது, அங்கே அவரை இஹ்ராம் அணிந்து தல்பியா கூறியவராகக் கண்டு, 'நீர் இன்னாரல்லவா? நாம் இருவரும் இன்ன இடத்தில் சந்தித்துள்ளோமல்லவா?'' என்று வினவினர்.

அதற்கு அவர், ''நான் அவரேதான். எனினும் புது மனிதர். அப் பொழுது நோன்பு நோற்றிருந்தேனல்லவா? அதைப் பற்றிக் கூட நீர் கிண்டலாக வினவினீரல்லவா? அந்த நோன்பே, எனக்கும் இறை

வனுக்கும் இடையே ஓர் இணக்கத்தை உண்டுபண்ணி, என்னை நேர்வழிப் படுத்தி விட்டது'' என்று கூறினார்.

மற்றொரு தடவை அவர்கள் தம் மாணவர்களுடன் 'ஹஜ்ஜு' செய்யப் புறப்பட்ட பொழுது, ''ஏழை ஹஜ்ஜுப் பயணிகளுக்குக் காலணி வாங்குவதற்கு ஆயிரம் திர்ஹங்கள் நன்கொடையளிப்போர் இங்கு எவரேனும் உண்டோ?'' என்று அவர்கள், அங்குக் கூடி இருந்த மக்கள் திரளை நோக்கி வினவினார்கள். அப்பொழுது ஒரு கிறிஸ்தவ இளவல் எழுந்து, ''நான் அத்தொகையைத் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை., தாங்கள் என்னையும் தங்களுடன் மக்காவுக்கு அழைத்துச் செல்ல வேண்டும்' என்று கூறினார்.

அதற்கு அவர்கள், ''நீரோ ஒரு கிறிஸ்தவர் உமக்கு 'ஹஜ்' செய்வது கடமையல்ல. அவ்விதமிருக்க நீர் ஏன் எங்களுடன் சேர்ந்து மக்காவுக்கு வர விழைகிறீர்?'' என்று வினவினார்கள்.

''அது சரிதான்; எனினும் தாங்கள், தங்களுடன், தங்களின் கோவேறு கழுதையையும் மக்காவிற்கு அழைத்துச் செல்கின்றீர்களல்லவா. அது போன்று என்னையும் எண்ணிக் கொண்டு, அழைத்துச் செல்லுங்கள்'' என்று கூறினார்.

அதற்கு அவர்களும் இணங்கி, அவரைத் தம்முடன் அழைத்துச் சென்றார்கள். வழியில் அவர்கள் அவரை நோக்கி, ''எவ்வாறு உள்ளீர்?'' என்று வினவியபொழுது, ''தங்களுடன் வரும் மகிழ்ச்சியில் எனக்கு உறக்கமே வரவில்லை'' என்று கூறினார்.

வழி நெடுக அவர் ஹஜ்ஜுப் பயணிகளுக்கு அளவற்ற குற்றுழியங்கள் செய்து வந்தார். குறிப்பிட்ட எல்லை வந்ததும், அவரும் ஏனையோர் போன்று 'இஹ்ராம்' அணிந்து கொண்டார்.

இறுதியாக அவர்கள் மக்கமா நகர் வந்து சேர்ந்தார்கள். பின்னர் அவர்கள் 'தல்பிய்யா' கூறியவண்ணம், ஹரம் ஷரீஃபின் நுழை வாயில்களில் ஒன்றான, பாபுஸ்ஸலாமை அடைந்த பொழுது, ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''இளைஞரே! நீர் கிறிஸ்தவ மதத்தைத் துறந்து இஸ்லாத்தைத் தழுவினாலொழிய நான் உம்மை உள்ளே அனுமதிக்க முடியாது'' என்று கூறினார்கள்.

அப்பொழுது அவர் தம் தலையை அந்த வாசலில் வைத்து ''இறைவனே! உன்னுடைய இல்லத்தில் நுழைய ஷிப்லீ என்னை அனுமதிக்க மாட்டேன் என்கிறார். இஃதென்ன அநியாயம்; இஃதென்ன அநியாயம்'!! என்று அலறினார்.

அப்பொழுது "ஷிப்லீ! அவருக்கு வழி விடும். அவரை அன்பால் பிணைத்து நம் இல்லம் அழைத்து வந்தோம்" என்று அசரீரி முழங்கியது.

அது கேட்டுத் திடுக்குற்ற ஷிப்லீ (ரஹ்) அவர்கள், உடனே அவரை உள்ளே நுழைய அனுமதித்தனர். அவரின் பின்னே மற்றவர்களும் உள்ளே நுழைந்தனர்.

ஆங்குத் தொழுதுவிட்டு, அவர்கள் அனைவரும் திரும்பிய பொழுது, அந்த இளவல் மட்டும் திரும்பவில்லை. அவரை வெளியே வருமாறு ஷிப்லீ (ரஹ்) அவர்கள் கூறிய பொழுது, "நான் என் செய்வேன்? அவன் என்னை வெளியே வர அனுமதிக்கின்றானில்லையே. நான் வாயிலை அடையும் ஒவ்வொரு தடவையும் கதவு மூடப்பட்டிருப்பதை யல்லவோ காண்கிறேன்" என்று பதிலுரைத்தார்.

இறைநேசச் செல்வர் அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் எண்பத்தேழு ஆண்டு காலம் இவ்வுலகில் வாழ்ந்து, இறுதியாக இறைவனை அடையும் காலமும் வந்து சேர்ந்தது. அவர்களைப் பீடித்த நோயின் கொடுமையும் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது.

ஒரு வெள்ளியன்று அவர்களுக்குச் சிறிது உடல் நலன் ஏற்பட்டது போல் தோன்றிய பொழுது, அவர்கள் தம் சீடர் ஒருவரின் துணையுடன் பள்ளி சென்றார்கள். வழியில் ஒருவர் எதிர்ப்பட்ட பொழுது , "நாளை இவருடைய உதவி எனக்குத் தேவைப்படும்" என்று கூறினார்கள்.

'ஜும்ஆ' தொழுது விட்டு அவர்கள் இல்லம் திரும்பியதும், அவர் களின் நோய் அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. அன்றிரவு முழுவதும் அவர்கள் தூங்கவே இல்லை. நோயின் கொடுமை தாங்க இயலாது, படுக்கையில் கிடந்து அங்குமிங்கும் புரண்டு கொண்டிருந்த அவர்கள், பின்வரும் கருத்தமைந்த கவிதை ஒன்றைத் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருந்தார்கள்.

"இறைவனே! உன் அழகுத் திருமுகமே எங்களின் அடைக்கல பூமியாகும். ஒவ்வொருவரும் தங்கள், தங்களின் சாதனையைக் கொண்டு வரும் அந்நாளில், எங்களின் சாதனை உன்னுடைய தரிசனமேயன்றி வேறென்ன? நிச்சயமாக நீ வாழும் இல்லத்தில் விளக்கேற்ற வேண்டிய தேவையே இல்லை."

அவர்களை இறப்பு அண்மிய பொழுது, அவர்கள் தம்மைச் சூழ இருந்தவர்களை நோக்கித் தம் தலைமீது சாம்பலைக் கொட்டுமாறு பரபரப்புடன் கூறினர். 'ஏன்' என்று மக்கள் வினவிய பொழுது, "நான் இந்நேரத்தில் ஷைத்தானைப் பார்த்துப் பொறாமைப்படுகிறேன். அந்தப்

பொறாமைத் தீ என்னைச் சுட்டெரித்துக் கொண்டிருக்கிறது. அவனுக் காவது இறைமுனிவு என்ற பரிவட்டம் இறைவனால் போர்த்தப் பட்டுள்ளது. எனக்கோ இறைவனிடமிருந்து யாதொரு பரிவட்டமும் போர்த்தப்படவில்லையே என்பதை எண்ணும் பொழுது, எனக்குப் பொறாமை, பொறாமையாக வருகிறது. அவனோ இறைமுனிவு என்ற பரிவட்டத்தை இறைவனிடமிருந்து பெற்றுப் பெரிதும் திருப்தியுடன் இருக்கிறான். நானோ யாதும் பெறாத அவல நிலையிலுள்ளேன்'' என்று கூறினர்.

இவ்வாறு கூறியபின் சிறிது அமைதியாக இருந்த அவர்கள், மீண்டும் பரபரப்படைந்தவர்களாய், ''இந்நேரம் இரண்டு காற்றுக்கள் வீசிக் கொண்டுள்ளன. ஒன்று இறையருள் என்ற காற்று. மற்றொன்று இறை முனிவு என்ற காற்று. இறையருள் காற்றுப்பட்டோர், இறை சந்நி தானத்தை எய்தி நிற்கின்றனர். இறைமுனிவு காற்றுப்பட்டோர் இறை சந்நிதானத்தை அடைவதை விட்டும் தடுக்கப்பட்டுள்ளார்கள். என் மீது எந்தக் காற்று வீசுமோ அறியேனே'' என்று கூறிப் புலம்பினார்கள்.

பின்னர் அவர்கள், தம் அண்மையில் இருந்தவர்களை நோக்கி, ''இவ்வுலகில் நான் ஒருவருக்கு ஒரு திர்ஹம் கொடுக்க வேண்டியது பாக்கியாக இருந்தது. அதற்காக நான் ஆயிரக்கணக்கான திர்ஹங்களை அறவழியில் செலவழித்து விட்டேன். எனினும் என் மனம் ஆறுதல் பெறவில்லை'' என்று கூறினர்.

தங்களின் இறுதி அண்மிவிட்டதை உணர்ந்த அவர்கள், இறை வனிடம் செல்லும் பொழுது, தூய்மையுடன் செல்ல வேண்டுமென்று கருதி, தம் மாணவர் ஜஃபரை நோக்கித் தமக்கு 'உளூ'ச் செய்து வைக்கு மாறு கூறினர். அவ்வாறே அவர் செய்த பொழுது, அவர், அவர்களின் தாடியை நன்கு கோதிக் கழுவத் தவறிவிட்ட காலை, அச்சிறு குறையும் இல்லா முறையில், அவர்கள் ஜஃபரின் கையைப் பிடித்துத் தம் தாடியினுள் விட்டுக் கோதிக் கழுவினார்கள்.

அவர்களின் இறுதிச் சடங்கில் கலந்து கொள்வதற்காக, மக்கள் திரள் திரளாக வந்து கொண்டிருப்பதைக் கண்ட அவர்கள், ''இஃதென்ன வியப்பு இறந்து போனவர்கள், உயிரோடிருப்பவருக்காகப் பிரேத அடக்கத் தொழுகை தொழ வந்துள்ளார்களே'' என்று கூறினார்கள். அதுகேட்ட மக்கள் அழத்துவங்கி விட்டார்கள்.

அவர்களின் நண்பர்கள், அவர்கள் கூறியதைச் சற்றேனும் பொருட் படுத்தாது, அவர்களுக்கு மீண்டும் மீண்டும் கலிமாச் சொல்லிக் கொடுத்த பொழுது, அவர்கள் அதனைக் கூறாது, ''அவனைத் தவிர வேறொன்றும்

இல்லாதிருக்கும் பொழுது, அவனைத் தவிர வேறொருவருமில்லை என்று மட்டும் ஏன் கூறச் சொல்கிறீர்கள்?'' என்று மொழிந்தார்கள்.

அப்பொழுது அவர்களின் நண்பர்கள், ''இஃது மார்க்கக் கட்டளை யல்லவா? கலிமாவுடன் உயிர் பிரிய வேண்டுமல்லவா?'' என்று கூறியக்கால், 'அன்புள்ளம் கொண்ட அரசன், என்னிடமிருந்து கை யூட்டை ஏற்றுக் கொள்கின்றானில்லையே. நான் என் செய்வேன்?'' என்று அவர்கள் கூறினர்.

அச்சமயம் ஆங்கிருந்த ஒருவர், ''லா இலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுங்கள்'' என்று உரத்து சப்தமிட்டுக் கூறிய பொழுது, ''இறந்த ஒருவர் உயிரோடுள்ள ஒருவருக்குக் கலிமாச் சொல்லிக் கொடுக்க முன்வந்து விட்டார்'' என்று நையாண்டியாக அவர்கள் மொழிந்தனர்.

இதன்பின் அமைதி நிலவியது. அது முடிவில்லா அமைதியின் துவக்கமாக இருந்தது. அப்பொழுது ஒருவர் அவர்களை நோக்கி, ''தங்களின் நிலை எவ்வாறு உள்ளது?'' என்று வினவினார். அதற்கு அவர்கள் ''நான் என் நேசனை அடைந்து விட்டேன்'' என்று கூறிக் கண் களை இறுக மூடிக் கொண்டார்கள். இஃது ஹிஜ்ரி 334 ஆம் ஆண்டு, துல்ஹஜ் மாதம், பிறை 27 வெள்ளிக்கிழமை நிகழ்ந்தது.

அவர்களை நல்லடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகள் வைகறையில் துவக்கப்பட்டன. அவர்களின் மாணவர்கள் ஒருங்கு சேர்ந்து அவர்களை முன் தினம் ஜும்ஆ தொழ அழைத்துச் சென்ற தம் சகாவிடம் ஒருவரின் முகவரியைக் கொடுத்து, அவரைப் போய்க் குளிப்பாட்ட அழைத்து வருமாறு கூறினர். அவர் அந்த முகவரியில் சென்று கதவைத் தட்டி 'ஸலாம்' கூறிய பொழுது, ஒருவர் பதிலுரைத்த வண்ணம் வந்து, கதவைத் திறந்தார். அவர் வேறு எவருமில்லை. அதற்கு முன் தினம் ஜும்ஆவுக்குச் சென்ற பொழுது, வழியில் எதிர்ப்பட்ட அவரே தாம்.

கதவைத் திறந்ததும் அவர் கேட்ட முதற் கேள்வி, ஷிப்லீ (ரஹ்) அவர்கள் இறந்து விட்டார்களல்லவா என்பதாகவே இருந்தது. ''ஆம். அவர்களைக் குளிப்பாட்டிக் கஃபனிடவே தங்களை அழைத்துச் செல்ல வந்தேன்'' என்று பதில் கூறிய மாணவர், மீண்டும் அவரை நோக்கி, ''ஷிப்லீ (ரஹ்) அவர்கள் இறந்து விட்ட செய்தி தங்களுக்கு எவ்வாறு தெரிய வந்தது?'' என்று வியப்புடன் வினவினார்.

அதற்கு அவர் ''அவர்களை சற்றுமுன் கனவில் கண்டேன். நான் இறந்து விட்டேன். என்னை வந்து குளிப்பாட்டிக் கஃபனிட்டு நல்ல

டக்கம் செய்யும். அது நீர் எனக்குக் கடன்பட்ட தொகைக்குப் பிரதியாக ஆகட்டும்'' என்று அவர்கள் கூறி மறைந்தனர்'' என்று மறுமொழி பகர்ந் தார் அவர்.

இதன்பின் அவர்களின் அடக்கச் சடங்குகள் துரிதமாக செய்யப் பட்டன. அவர்களின் பொன்மேனி பக்தாதில் இமாமுல் அஃலம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்களின் அடக்க இடத்திற்கு அண்மையில் உள்ள புனிதபூமியில் நல்லடக்கம் செய்யப்பட்டது.



# 14. மன்சூர் ஹல்லாஜ் (ரஹ்)

ஈரானில் ஃபார்ஸ் மாநிலத்தில் உள்ள பைழா என்னும் ஊரின் அருகிலுள்ள தூர் என்னும் சிற்றூரில், ஹிஜ்ரி 244 (கி.பி. 858) ஆம் ஆண்டில் மன்சூர் என்பவருக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது.* அதற்கு, அவர் 'அழகானவர்' என்று பொருள்படும் ஹுஸைன் என்னும் அழகிய பெயரிட்டு, அருமை பெருமையுடன் வளர்த்து வந்தார். நாளொருமேனி யாக வளர்ந்து வந்த ஹுஸைன், பதினாறு வயது வாலைப் பருவத்தை எய்தியதும், துஸ்தர் நகர் சென்று ஆங்கு வாழ்ந்து வந்த இறைநேசச் செல்வர் ஸஹ்ல் இப்னு அப்துல்லாஹ் துஸ்தரீ (ரஹ்) அவர்களிடம் ஈராண்டுகள் வரையில் கல்வி பயின்றார்.

அதன்பின் ஆசானின் அனுமதியின்றியே துஹார்க்கா என்ற ஊரை அடைந்த அவர், அங்கு வாழ்ந்து வந்த அம்ர் இப்னு உதுமான் மக்கீ (ரஹ்) அவர்களை அணுகி, அவர்களின் தாளடியில் பதினெட்டு மாதங்கள் வீற்றிருந்து, ஆன்மீகக் கல்வி பயின்று வந்தார். இக்காலை அவருடைய அறிவுத் தெளிவையும், ஆன்மீகப் பயிற்சியையும் கண்டு வியந்த யஃகூப் அல் அக்தா என்பவர், தம் அருமை மகளை அவருக்கு கடிமணம் செய்து தர முன்வரவே, அதனை ஏற்று இல்லறச் சோலை புகுந்து இன்ப வாழ்வு வாழ்ந்து வந்தார் அவர். அத்திருமணத்தின் மூலம் அவர்களுக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. அதற்கு ஹம்து (புகழ்) எனப் பெயரிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார்கள் அவர்கள்.

இக்காலை அவருடைய வாழ்வையே மாற்றி அமைக்க வல்ல மாபெரும் நிகழ்ச்சியொன்று நடந்தது. ஒருநாள் அமர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்கள், தாம் மொழி பெயர்த்து வைத்திருந்த கருவூலம் பற்றிய நூலின் பிரதியைத் தம் தொழுகை விரிப்பின் கீழே வைத்துவிட்டு, 'உளூச்'

---

* மன்சூரின் தந்தை ஒரு தீ வணங்குபவர் என்று ஒரு வரலாறு கூறுகிறது. அவர் அபூ ஐயூப் அன்ஸாரி (ரலி) அவர்களின் வழி வந்தவர் என்று மற்றொரு வரலாறு கூறுகிறது. அவர் பஞ்சு வெட்டி வாழ்ந்ததால் 'பஞ்சு வெட்டுபவர்' என்று பொருள்படும் ஹல்லாஜ் என்று அழைக்கப்பட்டார்.

செய்யச் சென்றார்கள். அவர்கள் 'உளூச்' செய்து கொண்டிருக்கும் பொழுது, அதுபற்றிய நினைவு அவர்களுக்கு வரவே, தம் ஊழியர் ஒருவரை அழைத்துத் தாம், தம் தொழுகைவிரிப்பின் கீழே ஒரு காகிதக் கட்டை வைத்துவிட்டு வந்ததாகவும், அதனை எவரும் எடுத்துச் சென்று விடா வண்ணம் பாதுகாத்துக் கொண்டு நிற்குமாறும் கூறினர். அவ்வாறே அவர் அங்கு சென்று பார்த்தபொழுது அதனைக் காணவில்லை. இதனை அவர் அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களிடம் வந்து கூறியபொழுது, அவர்களுக்கு ஏற்பட்ட துக்கத்திற்கும், சினத்திற்கும் அளவில்லை. ''அதனை எடுத்துச் சென்றவன் எவனாக இருந்தபோதினும், அவனுடைய கைகளும் கால்களும் வெட்டப்பட்டு, கழுவிலேற்றப்பட்டு எரித்துச் சாம்பலாக்கப்படுவானாக!'' என்று சபித்தார்கள்.

அதை எடுத்துச் சென்றவர் யார்? அவர்களின் மாணவர் ஹுஸைன் தான். அவர்கள் இத்துணை சினமுற்று முனியும் வண்ணம் அதில் என்ன அத்துணை மாபெரும் இரகசியம் எழுதப்பட்டிருந்தது.

இரகசியமா? மனித உற்பத்தியின் இரகசியமே அதில் பொறிக்கப் பட்டிருந்தது.

ஆன்மாவானது ஆதத்தின் உடலில் புகுந்த சமயத்தில், இறைவன் வானவர்களை நோக்கி, ஆதத்திற்குப் பணியுமாறு கூறினான். இப்லீஸைத் தவிர அனைவரும் அவ்விதமே செய்தார்கள். ஆனால் இப்லீஸோ, ''நான் ஆதத்திற்கு அடிபணிய மாட்டேன். நான் நிமிர்ந்து நின்று அந்த இரகசியத்தைப் பார்ப்பேன். அதற்காக இறைவன் என்னை முனிந்தாலும் பாதகமில்லை'' என்று கூறினான்.

இவ்வாறு கூறிய அவன், அவ்வாறே செய்து மனிதன் பற்றிய இரகசியத்தைத் தம் கண்களால் பார்த்து விளங்கிக் கொண்டான். அவன் அந்த இரகசியத்தைப் பிறரிடம் வெளியிடாமல் இருக்க, அவனை இறைவன் கொன்றொழிக்க முற்பட்ட பொழுது, அவன் தனக்கு உயிர்ப்பிச்சை அளிக்குமாறு வேண்டினான்.

அவ்வாறே அவனுக்கு உயிர்ப்பிச்சை அளித்த இறைவன், ''உன்னை மக்கள் எப்பொழுதும், சந்தேகக் கண்கொண்டே பார்ப்பர். ஒருவனும் உன்னை உண்மை உரைப்பவனாகக் கருதமாட்டார்கள்'' என்று கூறினான்.

இறைமுனிவுக்கு ஆளாகி, மதிப்பிழந்து புறக்கணிக்கப்பட்ட அவனே ஷைத்தானாவான்.

இதுபோன்று இன்னும் எத்தனை எத்தனையோ செய்திகளெல்லாம் அதில் எழுதப்பட்டிருந்தன. அவற்றைப் படித்ததும் ஹுஸைனின் மூளை சக்கரவாகமாகச் சுழலத் துவங்கியது.

"ஏன் இதுவரை என் ஆசான் எனக்கு இவற்றைப் போதிக்காது மறைத்து வைத்திருந்தார்? வேண்டுமென்றே இவற்றை எனக்குப் போதிக்காது மறைத்து வைத்திருந்து, என்னை வஞ்சித்தாரா, என்ன? அல்லது மறந்துவிட்டு அவற்றை எனக்குப் போதிக்காது இருந்து விட்டாரா, என்ன? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே? நல்லது; எது எப்படி இருந்த போதினும், நான் தான் அவற்றை விளங்கிக் கொண்டேனே. இனிமேல் நான் அவற்றை மக்களுக்கு எடுத்துரைப்பதே என் அலுவல்" என்று கூறி வீறிட்டெழுந்தார் அவர்.

இதன்பின் என்ன? வீதிகளிலும், தெருக்களிலும், சந்துகளிலும், பொந்துகளிலும் ஹுஸைன் இப்னு மன்சூரின் வாய் ஒரு கணமும் ஓயாது ஆன்மீக இரகசியங்களை அப்பட்டமாக முழங்கிக் கொண்டிருந்தது. அம்முழக்கங்களைக் கேட்டு, அவருடன் ஒத்து இசைபாடுவது போன்று வீதிகளும், தெருக்களும், சந்துகளும், பொந்துகளும் எதிரொலி செய்தன.

அதுகேட்டு மக்கள் வியப்பும் திகைப்பும் அடைந்தார்கள். "இவர் என்ன, இவ்வாறு திடீரென உளறுகின்றார்? பேசுவதெல்லாம் மார்க்கத் திற்கு முரணாகவும் அபத்தமாகவும் உள்ளதே" என்று அவர்கள் பேசிக் கொண்டார்கள். அவர்கள் அவரின் ஆசான் அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களிடம் ஒருங்கு திரண்டு சென்று, "ஹுஸைன் தங்களுடைய மாணவர் தாமே, அவர் இவ்வாறு இவ்வாறெல்லாம் தெருக்களில் உளறிக் கொண்டிருக்கிறாரே. இவ்வாறுதானா தாங்கள் அவருக்குக் கல்வி போதித்தீர்கள்?" என்று கேட்டார்கள்.

முதலில் அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களுக்கே இவை யெல்லாம் என்னவென்றே விளங்கவில்லை. அதன்பின் நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்டார்கள். அவர்கள் தாம் எழுதி வைத்திருந்த ஆன்மீக இரகசியங்கள் அடங்கிய கையேட்டை, அவர் தாம் எடுத்துச் சென்றிருக்க வேண்டும்; அது தான் அவரை இவ்வாறெல்லாம் படுத்துகின்றது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். தாம் அதுபற்றிக் கவனித்து ஆவன செய்வதாகக் கூறி, வந்தவர்களை வழியனுப்பி வைத்தார்கள் அவர்கள்.

இதன்பின் அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்கள், தம் மாணவர் களில் ஒருவரை அனுப்பி, ஹுஸைனை அழைத்து வருமாறு செய்தனர். ஹுஸைன் வந்ததும், அவரிடம் தாம் கேள்விப்பட்டதை வினவ, "ஆம்; அதில் என்ன தவறு? தாங்கள் ஒளித்து வைத்திருந்ததை நான் வெளியில் எடுத்துரைத்தேன். உள்ளே இருந்தது வெளியே வந்துவிட்டது. இரகசிய மாக இருந்தது பரகசியமாக ஆகிவிட்டது. இறைவன் மனிதத் தன்மையில்* தன்னுடைய ஒளிமயமான தெய்வீகத் தன்மையின்

* இது முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களைக் குறிக்கும்.

இரகசியத்தை வெளிப்படுத்தினான். அதன்பின் தன் படைப்பினங்களின் முன் உண்ணவும் அருந்தவுமான உருவில் தோற்றம் வழங்கினான். இதை ஏன் நாம் மக்களுக்குத் தெரியாது ஒளித்து வைக்க வேண்டும்?'' என்று அமைதியாகப் பதில் கூறினார் ஹுஸைன்.

அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களுக்கோ, என் செய்வதென்றே தெரியவில்லை. அவர்கள் துவக்கத்தில் ஹுஸைனை இதமாக நோக்கி, ''ஹுஸைனே! அவையெல்லாம் பாமரர்களுக்குப் பகிரங்கமாக எடுத் துரைக்கக் கூடிய செய்திகளல்ல. அறிவாளிகளுக்கே உணர்த்தப்பட வேண்டியவை. பாமரர்களுக்கு அவற்றை எடுத்துரைப்பின், அவர்கள் தவறுப் படுகுழியில் போய் வீழ்ந்து விடுவார்கள்'' என்று கூறினர். அவர்கள் இதமாக இன்னும் எவ்வளவோ எடுத்துரைத்தும், ஹுஸைன் கேட்கவில்லை ''அவ்விதமாயின் நீர் இனிமேல் என் பள்ளிக்கு வரக் கூடாது. இனிமேல் உமக்கும் எனக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை'' என்று கூறினார்கள் அவர்கள். ஹுஸைன் மறுவார்த்தை பேசவில்லை. சொல்லாமல் கொள்ளாமல் அவ்விடத்தை விட்டும் நீங்கினார்.

இதன்பின் பக்தாது மாநகரம் வந்த ஹுஸைன், அங்கு ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வந்த அபுல் காசிம் ஜுனைத் (ரஹ்) அவர்களின் திருச் சமுகத்தை அணுகி, அவர்களுடன் சில காலம் இருந்தார். அவரின் எண்ணக் குழப்பத்தைக் கண்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், அவர் வாய் மூடித் தனிந்திருக்க வேண்டுமென்று ஆணை பிறப்பித்தனர். அவ்வாறே இருந்த அவர், பின்னர் மக்கா சென்று ஆங்கு ஓராண்டு வாழ்ந்தார். அதன் பின் பக்தாதுக்கே திரும்பிவந்த அவர், சில ஆத்மீக ஞானிகளுடன் ஜுனைத் (ரஹ்) அவர்களின் திருமுன் சென்று பற்பல ஆத்மீக தத்துவங்கள் பற்றி வினவினார்.

''ஹுஸைனே! நீர் இவ்வாறெல்லாம் பகிரங்கமாக என்னிடம் வினவக் கூடாது. அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அழகிய முன்மாதிரி இதோ நம்முன் இருக்கிறது. அதன்படிச் செயலாற்றுவீராக!'' என்று இதமாகக் கூறினர் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

ஆனால் ஹுஸைனோ கேட்கவில்லை. ''அவ்விதமாயின் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் இரகசியங்களையெல்லாம் மக்கள் எவ்வாறு அறிவது? அவற்றை அறியாமல் மக்கள் எவ்வளவு காலம் தான் தத்தளித்துத் தடுமாறிக் கொண்டிருப்பது? இவ்வாறெல்லாம் பாமர மக்களை ஏன் இருளில் வைத்தே சாகடிக்க விரும்புகிறீர்கள்? அவர் களை ஒளிப்பாதையில் அழைத்துச் செல்வது தங்களைப் போன்றவர் களின் கடமையல்லவா? அதை ஏன் தாங்கள் செய்யத் தவறுகின்றீர்கள்? இதற்குத் தாங்கள் அல்லாஹ்விடம் மறுமையில் பதில் கூறித்தான் ஆக வேண்டும்'' என்று உணர்ச்சி வயப்பட்டுப் பேசினார்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவரை அருகே அழைத்து, ''ஹுஸைனே! நீர் இவ்வாறெல்லாம் வெளிப்படையாகக் கூறித் திரியக் கூடாது. திரிந்தால் உம்முடைய இரத்தத்தால் மரத்தின் நுனி சிவப்பாகும் நாள் வெகு தொலைவில் இல்லை'' என்று எச்சரித்தார்கள்.

அதுகேட்ட அவர் உணர்ச்சி மீக்குற்றவராய், ''ஆம், அந்நாளில் தாங்கள் ஆத்மீக ஞானிகளின் உடைகளைக் கழற்றி விட்டு, மார்க்க மேதைகளின் உடைகளை அணிந்திருப்பீர்கள்'' என்று கூறினார்.

இவ்வாறு அவர் துடுக்காக ஜுனைத் (ரஹ்) அவர்களுக்குப் பதில் கூறிய போதினும், ஓர் இனம் தெரியாத உணர்ச்சி மேலிட்டு அவரின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது. அழுத கண்களுடன் அவர் அச்சபையை விட்டும் வெளியேறினார். அவருடைய கால்கள் அவரை அண்மையிலிருந்த அடக்கவிடம் ஒன்றுக்கு இழுத்துச் சென்றன. அவரைப்பின் தொடர்ந்து ஜுனைத் (ரஹ்) அவர்களின் சபையில் வீற்றிருந்த ஜுரைரி என்பவரும் சென்றார். ஆனால் அதனை ஹுஸைன் கவனிக்கவில்லை.

அவரின் எளிய, வறிய நிலையைக் கண்டு இரங்கிய ஜுரைரி தம் நண்பர் ஒருவரை அவருக்கு ஏதாவது உணவுப் பொருள் வாங்கி வருமாறு அனுப்பி விட்டு, அவரைப்பின் தொடர்ந்து சென்றார். விரைவில் அடக்க விடம் சென்றடைந்த ஹுஸைன், அங்கு ஓரிடத்தில் அமர்ந்து முழங்கால் களைக் கட்டிக்கொண்டு அவற்றினிடையே தம் தலையைப் புதைத்த வண்ணம் வீற்றிருந்தார்.

ஜுரைரி அவரின் அருகே சென்று நின்றதும், ஆள் அரவம் கேட்டுத் தலையை நிமிர்த்தினார் அவர். அப்பொழுது அவருக்குப் பல ஆறுதல் மொழிகளைக் கூறினார் ஜுரைரி. அச்சமயத்தில் உணவு வாங்கி வரச் சென்ற அவருடைய நண்பரும் வந்துவிடவே, அவர் கொண்டுவந்திருந்த உணவுப் பொட்டலத்தை அவரின் முன் வைத்து, ''உண்ணும்!'' என்று கூறி உபசரித்தார் ஜுரைரி. அதில் சிறிதளவு எடுத்து உண்டார் ஹுஸைன்.

அப்பொழுது ஜுரைரி அவரை நோக்கி, ''இளைஞரே! உமக்கு எந்த ஊர்?'' என்று வினவினார்.

அதற்கு அவர், ''என் சொந்த ஊர் பைழா. அங்குதான் நான் பிறந்தேன். ஆனால் நான் வளர்ந்ததோ கூஸிஸ்தானிலும் பஸராவிலும் தாம்'' என்று பதில் கூறினார்.

''உம் பெயர் என்ன?'' - இது ஜுரைரியின் அடுத்த கேள்வி.

''ஹுஸைன் இப்னு மன்சூர்'' என்று பதில் கூறினார் அவர்.

இதன்பின் அவரிடமிருந்து விடை பெற்றுச் சென்றார் ஜுனைத்.

இதன்பின் பக்தாதில் வாழவே அவருக்கு மனம் இல்லை. எனவே தம் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு, பக்தாதை விட்டு நீங்கிய ஹுஸைன், துஸ்தர் நகர் சென்று அங்கு ஓராண்டு காலம் வாழ்ந்தார். இக்காலை, அவர் ஆன்மீகக் கருத்துக்களை எங்கணும் கூறித்திரியவே மக்களின் சினம் வடவாக்கினியெனக் கிளம்பி, அவரைச் சுட்டெரிக்க முனைந்து நின்றது. அதற்குத் தூபம் போட்டாற் போன்று அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களும் அவரைக் குறைகூறி அந்நகர மக்களுக்கு கடிதம் எழுதினர்.

எனவே இனிமேல் அங்கு தங்கியிருக்க இயலாது என்பதை உணர்ந்த அவர், அவ்வூரை விட்டு நீங்கினார். இதன்பின் ஆத்மீக ஞானிகளின் உடை அணிந்து, அவர் ஐந்தாண்டு காலம் மக்களின் கண்களை விட்டும் மறைந்து குராஸான், ஷீஸ்தான் பகுதிகளில் சுற்றித் திரிந்தார். இப்பொழுது அவர் பல நூல்களை எழுதினார்.

இக்காலை அவர் நாளொன்றுக்கு நானூறு 'ரகஅத்'கள் வீதம் தொழுது வருவதைக் கண்ட மக்கள், தாங்கள் ஆத்மீகத் துறையில் மிகவும் உச்ச நிலையை எய்தியிருக்கும் பொழுது, ஏன் இத்துணைச் சிரமம் எடுத்துத் தொழுது வருகிறீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''துன்பங்கள் நண்பர் களுக்குத் துன்பமாக இல்லாது இன்பமாகவல்லவோ இருக்கும். உங்களுக்குத்தான் துன்பமோ, இன்பமோ தோன்றும். இறைவனளவில் தன்னை அழித்துக் கொண்ட ஒருவனுக்குத் துன்பமும் தெரியாது, இன்பமும் தெரியாதே'' என்று அவர் பதிலிறுத்தார்.

இவ்வாறு அவர் அல்லாஹ்வுடைய பாதையில் வெகுபிரயாசை எடுத்து வணக்கம் நிகழ்த்திக் கொண்டிருக்கும் பொழுது, அவர் பல்லாண்டுகளாக ஒரே சட்டையைக் கழற்றாது அணிந்திருந்தார். ஒருநாள் மக்கள் அதனைக் கட்டாயப் படுத்திக் கழற்றச் செய்த பொழுது அதில் ஒரு தேள் இருந்தது. அதனை அவர்கள் கொல்ல முற்பட்ட பொழுது, ''வேண்டாம்! அதனை அது இருந்த இடத்திலேயே விட்டு விடுங்கள். அதுவும் நானும் இருபதாண்டு காலமாக நட்புறவுடன் இருந்து வருகிறோம்'' என்று கூறினார் அவர்.*

இதன்பின் அஹ்வாஸ் வந்தடைந்த அவர், வழக்கம் போல் ஆத்மீக இரகசியங்களை மக்களுக்கு வெளிப்படையாக எடுத்துரைக்கத் துவங்கினார். அவரை ஆதரித்து ஒரு கூட்டமும், எதிர்த்து ஒரு கூட்டமும்

* அதில் ஏராளமான பேன்கள் இருந்ததாக மற்றொரு வரலாறு கூறுகிறது.

திரண்டது. ஆதரித்தோர் அவரை 'ஆன்மீக இரகசியங்களின் அதிபர்' என்று பாராட்டினர். எதிர்த்தோர் 'ஊரைக்கெடுக்கவந்த உளறுவாயனே! ஊரைவிட்டு ஓடிப்போ!' என்று கூக்குரலிட்டனர்.

எனவே ஆத்மீக ஞானிகளின் உடைதரித்து மக்கமாநகர் நோக்கிப் புறப்பட்டார் அவர். அவரை, . அவரே போன்று உடைதரித்த நாலாயிரம்பேர் பின்பற்றி நடந்து சென்றனர்.

மக்கமாநகர் சென்ற அவர், தம் கருத்துக்களை அந்நகரின் நாலா பக்கங்களிலும் அள்ளித் தெளிக்கவே, அந்நகரின் பிரமுகர் யஃகூப் நஹ்ரஜூரி அவரை ஒரு மந்திரவாதி என்றும், மாயக்காரன் என்றும் இழித்துரைத்தார். அவ்வளவுதான். ''மந்திரவாதியே ஓடிப்போ! மாயக்காரனே ஓடிப்போ''! என்ற கோஷம் மக்கமா நகர் முழுவதும் ஒலிக்கலாயிற்று.

எனினும் அதனைப் பொருட்படுத்தாது 'ஹஜ்'ஜுக் கடமையை ஆற்றிய அவர், தம் பின் வந்தவர்களையெல்லாம், அவரவர் ஊர்களுக்கு அனுப்பி விட்டு ஓராண்டு காலம், அப்புனித நகரிலேயே தங்கிக் கடும் வணக்கத்தில் ஈடுபட்டார்.

இந்த ஓராண்டுக் காலமும், அவர் பதைபதைக்கும் வெய்யிலில் கஃபாவின் முன் தலை திறந்தவராக நின்று கடும் தவம் செய்தது, கல் மனத்தையும் உருக்குவதாக இருந்தது. வெய்யிலின் கொடுமை தாங்க இயலாது அவரின் உடல் வெடித்து, அதிலிருந்து கொழுப்பு உருகி ஓடியது கண்டு மக்கள் கண்ணீர் வடித்தனர். அவர் மீது இரங்கி அவர்கள் அவருக்கு நாள்தோறும் ஒரு ரொட்டி கொண்டு வந்து கொடுக்க, அதன் விளிம்பை மட்டும் பிய்த்துத் தின்று விட்டு மீதியை அவர் வைத்து விடுவார்.

அவர் கஃபாவின் திரையைப் பிடித்துக் கொண்டு, ''இறைவ! எம் பெருமர்! மயக்கம் என்ற பள்ளத்தாக்கின் வழியாகச் சென்று கொண்டிருக்கும் பயணிக்கு வழிகாட்டி நீயே ஆவாய். நான் ஒரு காஃபிரான (இறைமறுப்பவனாக) இருப்பின், என்னுடைய குஃப்ரிய்யத்தை (இறை மறுப்பை) அதிகப்படுத்துவாயாக!'' என்று இறைஞ்சினார்.

இவ்வாறு இறைஞ்சும் அவர் மக்களெல்லாம் அவரை விட்டு நீங்கிய பின், ''இறைவ எம்பெருமர்! எனக்கு உன்னை மாத்திரமே தெரியும். உன்னைத் தவிர வேறொன்றையும் நான் வணங்குவதுமில்லை. நீ என்மீது அருளிய அருட்கொடைகளுக்கெல்லாம் நான் பெரிதும் நன்றியுடைய வனாக உள்ளேன். நானோ உன்னுடைய அடிமை. நீ எனக்கு நல்கிய அருட்கொடைகளோ அனந்தம். அவற்றிற்கெல்லாம் நான் என்னுடைய

ஒரு சிறு நாவைக் கொண்டு, உனக்கு நன்றி செலுத்த இயலாது. ஆதலின் என் சார்பாக நீயே உனக்கு செலுத்திக்கொள்'' என்று இறைஞ்சினார்.

இதன்பின் பக்தாது திரும்பிய அவர், நேரே ஜுனைத் (ரஹ்) அவர்களின் தவமடத்திற்குச் சென்று, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து நின்றார். அவரைக் கண்டதும், ''ஏன் இங்கே மீண்டும் வந்தீர்?'' என்று சற்றுக் கடுமையுடன் வினவினார்கள் ஜுனைத் (ரஹ்) அவர்கள்.

''தங்களின் ஆன்மீக வட்டத்திற்குள் வாழ்வதற்காக'' என்று சுருக்கமாகப் பதில் கூறினார் அவர்.

அதுகேட்ட அவர்கள், ''பைத்தியக்காரர்களை எல்லாம் என் குழுவில் சேர்த்துக் கொள்வதில்லை பைத்தியக்காரர்களுடன் சேர்ந்து வாழ முடியுமா, என்ன?''

''நட்புறவு கொண்டு வாழ புத்தி சுவாதீனம் தேவை. நீர் ஸஹ்ல் இப்னு அப்துல்லாஹ் துஸ்தரீ (ரஹ்) அவர்களுடனும், அம்ர் இப்னு உதுமான் (ரஹ்) அவர்களுடனும் நடந்து கொண்ட முறை, நீர் புத்தி சுவாதீனத்துடன் இருப்பதாகக் காட்டவில்லையே'' என்று கூறினர்.

அதுகேட்ட அவர், ''நிதானம் இழக்காதிருப்பதும், போதையுறுவதும் மனிதனின் இருபண்புகளேயாகும். அவை அழிக்கப்படும் வரை அவன் இறைவனிடமிருந்து திரையிடப்பட்டுத் தானே இருப்பான்'' என்று கூறினார்.

அப்பொழுது ஜுனைத் (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி ''மன்சூரின் மகனே! ஆன்மீகத் துறையில் நிதானம் இழக்காதிருப்பதைப் பற்றியும், போதையுறுவதைப் பற்றியும் நீர் கொண்டுள்ள கருத்து தவறானதாகும். முன்னையது ஒருவன் இறைவனுடன் கொண்டுள்ள தொடர்பில் திண்மையைக் காட்டும் பொழுது, பின்னையதோ பேராசையையும் அளவுக்கதிகமான காதலையுமல்லவோ காட்டுகிறது. அவை இரண்டினையும் மனித முயற்சியால் பெற இயலாது. எனவே உம் கருத்து அபத்தமானது, முட்டாள் தனமானது'' என்று கூறினார்கள்.

எனவே மனமுடைந்து அவ்விடம் விட்டு நீங்கி பஸரா வந்தடைந்த அவர், மீண்டும் அஹ்வாஸ் சென்றார். அங்கும் மக்கள் அவரை அமைதியாக இருக்க விடவில்லை. எனவே ''நான் இனிமேல் உருவத் தொழும்பர் வாழும் நாடுகளில் அலைந்து திரிந்து மக்களை இறைவன் பால் அழைக்க விரும்புகிறேன்'' என்று கூறி விட்டு, அவ்வூரை விட்டும் வெளியேறினார். இதன்பின் அவர் இந்தியா, சீனா முதலிய நாடுகளிலெல்லாம் சுற்றித்திரிந்தார். அப்பொழுது அவரின் பின்னே அவரின்

'நஃப்ஸ்' நாயின் உருவில் ஓடிக் கொண்டிருந்தது. இதனை அவரே யன்றி வேறு எவரும் அறியார்கள்.

இந்தியர்கள் அவரை 'அபுல்முகீத்' என்றும், சீனர்கள் அவரை 'அபுல் முஃமின்' என்றும், குராஸானியர் அவரை 'அபுல் மொஹர்' என்றும், பார்ஸிகள் அவரை 'அபூ அப்துல்லாஹ்' என்றும், கூஸஸ்தானியர் அவரை இரகசியங்களின் 'ஹல்லாஜ்' என்றும், பக்தாது வாசிகள் அவரை 'முஸ்தலிம்' என்றும், பஸரா மக்கள் அவரை 'முகப்பர்' என்றும் அழைக்க லாயினர். ஆனால், பொதுவாக அவர் அவரின் தந்தையின் பெயரையும், குடும்பப் பெயரையும் சேர்த்து மன்சூர் ஹல்லாஜ் என்று எல்லாராலும் அழைக்கப்பட்டார்.

இதன்பின் பக்தாது வந்தடைந்த அவர் அங்கு ஓராண்டு காலம் தங்கி இருந்தார். அக்காலை அவர் தம் நண்பர் ஒருவருடன் தெரு வொன்றில் நடந்து கொண்டிருந்த பொழுது புல்லாங்குழலின் நாதம் காற்றிலே மிதந்து வந்து அவர்களின் காதுகளில் விழுந்தது. அப்பொழுது நண்பர், அவரை நோக்கி, ''என்ன அது?'' என்று வினவினார். ''அதுவா? அதுதான் சாத்தானின் அழுகைக் குரல். 'உலகை இழந்து விட்டேனே' என்று அவன் ஒப்பாரி வைத்து அழுது கொண்டிருக்கிறான்'' என்று அவர் பதில் கூறினார்.

மற்றொரு நாள் அவர் தம் நண்பர் மூஸாவுடன் தெருவொன்றில் சென்று கொண்டிருக்கும் பொழுது, மாடியில் நின்று கொண்டிருந்த ஒருவரின் நிழல் திடீரெனத் தரையில் விழுந்தது. 'யார்அவர்?' என்று எண்ணி அவர் ஏறிட்டுப் பார்த்த பொழுது, அங்கு ஓர் அழகிய மங்கை நின்று கொண்டிருந்தாள். அடுத்தகணம் தம் முகத்தைத் திருப்பிக் கொண்ட அவர், தம்முடன் வந்து கொண்டிருந்த நண்பர் மூஸாவை நோக்கி, ''இன்று என் கண்கள் செய்த தவற்றினுக்கு ஒருநாள் தண்டனையை அனுபவிக்கும்'' என்றுகூறினார்.

அவரை மக்கள் 'மந்திரவாதி' என்றும் 'மாயக்காரன்' என்றும் 'பைத்தியக்காரன்' என்றும் இழித்துரைத்த போதினும், ஆரம்ப முதலே அவரின் ஒழுக்கத்தில் எவரும் அணுவத்தனை மாசும் கற்பிக்க இயலா வண்ணம், அவர் ஒழுக்க சீலராக விளங்கினார். அவரின் ஒழுக்க சீலத்தையும், நற்பண்புகளையும், வணக்க வழிபாடுகளையும், கண்டு அவரைத் துவக்கத்தில் மக்கள் அற்புதம் ஆற்றவல்ல இறை நேசச் செல்வர் என்று கூடக்கருதினார்கள். இதுபற்றி ஒரு நிகழ்ச்சியை நீதிபதி முஹம்மது இப்னு உபைத் இதோ கூறுகின்றார். நாமும் கேட்போம்.

''இளமையில் நான் ஹல்லாஜிடம் கல்வி பயின்றேன். அப்பொழுது அவர் பஸரா பள்ளிவாயிலில் மாணவர்களுக்குக் குர்ஆன் ஓதிக்

கொடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுதெல்லாம் அவர் பிற்காலத்தில் ஏதோதோ கூறிக்கொண்டு திரிந்தது போன்று திரியவில்லை. ஒரு நாள் என் சிறிய தந்தையார் அவரைக் காண வந்து, அவருடன் வெகுநேரம் உரையாடிக் கொண்டிருந்தார். நான் அவரின் அருகே அமர்ந்து அவர்களின் உரையாடலை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தேன்.

அப்பொழுது ஹல்லாஜ், என் சிறிய தந்தையை நோக்கி, ''நான் பஸராவை விட்டுப் போக எண்ணியுள்ளேன்'' என்று கூறினார் அவர்.

'என்ன அப்படி அவர்கள் தங்களைப் பற்றி அதீதமாகக் கூறுகின் றார்கள்?'' என்று வினவினார் முஹம்மது இப்னு உபைத்.

''அவர்கள் என்னவென்ன வெல்லாமோ கூறுகின்றார்கள். தாங்கள் கூறுவது உண்மையா, பொய்யா என்று கூட அவர்கள் சிந்தித்துப் பார்ப்ப தில்லை. நான் இறைவனிடம் இறைஞ்சுவது, இறைவனால் உடனுக் குடன் நிறைவேற்றப் பெறுவதாகவும், நான் அற்புதங்கள் பல நிகழ்த்துவ தாகவும், அவர்கள் கூறுகிறார்கள். நான் என்ன, அற்புதங்கள் நிகழ்த்தும் வண்ணம் அத்துணை மாண்புடையவனா, என்ன?

''உதாரணத்திற்காக ஒன்று கூறுகின்றேன், கேளுங்கள். சில நாட் களுக்குமுன் நான் இங்கு அமர்ந்திருந்த, பொழுது ஒருவர் சில திர்ஹங்களை என்னிடம் கொண்டு வந்து கொடுத்து, 'இவற்றை ஏழை, எளியவர்களுக்கு அறம் செய்து விடுங்கள்' என்று கூறினார். அப்பொழுது நான் சுற்று முற்றும் பார்த்தேன். ஏழை, எளியவர்கள் எவரும் என் கண்களில் தென்படவில்லை. எனவே, அவற்றை ஒரு தூணின் அடியில் உள்ள பாய்க்குக் கீழே வைத்து அந்தத் தூண் இருக்கும் இடத்தையும் மனத்தில் பதிய வைத்துக்கொண்டேன். எளியார் எவரேனும் வருவாரா என்று வெகு நேரம் வரைக்கும் பள்ளியில் காத்திருந்தேன். ஒருவரும் வர வில்லை. இருட்டிவிட்டதால் நானும் இல்லம் சென்றேன்.

''வைகறையில் தொழுவதற்காகப் பள்ளி சென்ற நான் அந்தத் தூண் அருகே நின்று தொழுது கொண்டிருந்தேன். அப்பொழுது சில சூஃபிகள் வந்து என்னருகே அமர்ந்தார்கள். நான் தொழுது முடிந்தபின், பாயைக் கிளப்பி அதன் கீழே இருந்த திர்ஹங்களை எடுத்து, அவர்களிடம் கொடுத்தேன். அவற்றைப் பெற்றுக் கொண்டு சென்ற அவர்கள் என்னைப் பற்றிப் பெரிதும் புகழ்ந்துகூறத் துவங்கி விட்டார்கள். நான் மண்ணைத் தொட்டாலும் அது பொன் நாணயங்களாகவும் வெள்ளி நாணயங் களாகவும் ஆகிவிடுகின்றன என்ற வதந்தியை நகரமெங்கணும் பரத்திவிட்டார்கள். எனவே, இவ்வூரில் இருக்க இனிமேல் எனக்குத் தகுதியில்லை என்ற முடிவுக்கு வந்துள்ளேன்'' என்று கூறினார்.

இத்துடன் அவர் நின்றாரில்லை. இம்மாதிரியான பற்பல நிகழ்ச்சிகளையும் தாம் செய்துள்ள முடிவுக்கு ஆதாரமாக எடுத்துரைத்தார் அவர்.

இதன்பின் என் சிறிய தந்தையார், அவரிடமிருந்து விடைபெற்றுப் புறப்பட்டார். அப்பொழுது நானும் அவருடன் சேர்ந்து புறப்பட்டேன். வழியில் என் சிறிய தந்தையார் என்னை நோக்கி 'இவர் ஓர் ஏமாற்று வித்தைக்காரர் போன்று தோன்றுகிறது. பொறுத்திருந்து பார்ப்போம்'' என்று கூறினார்.

உண்மையில் அவர் ஏமாற்று வித்தைக்காரரல்ல. மக்கள் தம்மை அதீதமாக மதிக்கின்றார்களென்பதைக் கண்டு மனம் வருந்தித் தாம் அவர்கள் நினைப்பது போன்று பாவனை செய்தால், தாம் ஓர் ஏமாற்றுக் காரராக ஆகிவிடக்கூடும் என்ற உள்ளச்சத்தின் காரணமாகவே அவ்விதம் கூறினாரேயன்றி வேறில்லை. இந்த உள்ளச்சமே அவரை நாளுக்கு நாள் உயர்த்தி, அவரை உண்மையில் அற்புதம் ஆற்றவல்ல இறைநேசச் செல்வராகவே ஆக்கிவிட்டது.

பக்தாதில் இப்னு ஹாரூன் என்பவர் உல்லாச விடுதி ஒன்று வைத்து நடத்தினார். அங்கு, நகரிலுள்ள ஷைகுமார்களெல்லாம் வந்து இன்பகரமாக உரையாடிக் கொண்டிருப்பது வழக்கமாக இருந்தது. ஒருநாள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், திடீரென அங்கு வந்து அமர்ந்து, ஆங்கு வீற்றிருந்த ஷைகுமார்களை நோக்கி, ''என்னை யார் என்று விளங்கிக் கொள்ள உங்களுக்கு நேரமில்லையா?'' என்று வினவினார்கள். அதன்பின் அவர்களிடமிருந்து, யாதொருபதிலையும் எதிர் பாராமலேயே என்னுடைய உண்மையை விளங்கிக்கொள்ளுங்கள். என்னுடைய முதலாவது, நான்காவதைவிட மென்மையானது. என்னுடைய ஐந்தாவது என்னுடைய மூன்றாவதைவிட நீளமானது. என்னுடைய இரண்டாவது எல்லாவற்றையும் விடச் சாதாரணமானது, மூன்று தடவை மூன்று மூன்றுகளாகும், அந்தச் சொல் யாது? தெய்வீகத் தன்மையானது. ஒளியால் போர்த்தப்பட்டு மூஸா (அலை) சினாய் மலைமீது எங்கு நின்றார்களோ, அங்கு நான் நிமிர்ந்து நிற்பதைக் காண்பீர்கள்'' இவ்வாறு அவர் ஏதேதோ கூறினார்கள். அவர் என்ன கூறுகிறார்கள் என்பது அங்கு வீற்றிருந்த ஒருவருக்குமே விளங்கவில்லை. இச்சமயத்தில் ஒருவன் ஓடோடி வந்து நோய்வாய்ப்பட்டிருந்த இப்னு ஹாருனின் மகன் இறந்து கொண்டிருக்கிறான், என இப்னு ஹாரூனிடம் கூறினான். அதுகேட்ட இப்னுஹாரூன் அங்கு வீற்றிருந்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை நோக்கி, ''ஷைகு அவர்களே! என் மகன் இறப்புப் படுக்கையில் கிடக்கிறான், அவனுக்காக இறைவனிடம் இறைஞ்சுங்கள்.'' என்று அழாக்குறையாக வேண்டினார்.

அதுகேட்ட ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், ''கவலையை விடும். உம்மகன் ஏற்கெனவேயே நலம் பெற்றுவிட்டான்'' என்று அனாயா சமாகக் கூறினார்கள்.

அவர்கள் இவ்வாறு கூறி வாய் மூடுமுன், இப்னு ஹாரூனின் இளம் மகன் அங்குக் கொணரப்பட்டான். எவ்வித நோயும் இல்லாதவன் போன்று அவன் நலமாகக் காணப்பட்டதைக் கண்டு, அங்கிருந்தோர்க்குத் தம் கண்களையே தம்மால் நம்ப இயலவில்லை.

மகிழ்ச்சி மீக்குற்று இப்னு ஹாரூன் தம் பெட்டியைத் திறந்து மூவாயிரம் பொற்காசுகள் நிரம்பிய ஒரு பணமுடிப்பை எடுத்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்களிடம் நீட்டி ''ஷைகு அவர்களே! இதனைத் தாங்கள் என்னுடைய அன்புக் காணிக்கையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று கூறினார்.

அதனைப் பெற்ற ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், அடுத்தக் கணம், அதனைப் பக்கத்தில் ஓடிக்கொண்டிருந்த திஜ்லா நதியில் வீசி எறிந் தார்கள்.

பின்னர் ஆங்கு வீற்றிருந்த ஷைகுமார்களை நோக்கி, ''ஷைகு மார்களே! நீங்கள் என்னிடம் சில கேள்விகள் கேட்க விரும்பலாம்'' என்று கூறிய அவர்கள், அடுத்தகணமே ''நீங்கள் என்னிடம் என்ன கேள்விகளைக் கேட்கப் போகின்றீர்கள்? நீங்கள் கூறுவது சரியாகவும், நான் கூறுவது தவறாகவும் இருக்கின்றதே'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டும் அகன்றார்கள்.

இவையெல்லாம் இப்னு ஹாரூனுக்கு என்னவென்றே புரிய வில்லை. நடப்பது கனவா, நனவா என்று சிறிது நேரம் ஐயுற்றார். அதன்பின் உண்மையை உணர்ந்து கொண்ட அவர், தாம் பாடாய்ப்பட்டுச் சேர்த்த மூவாயிரம் பொற்காசுகள் எவருக்கும் பயன்படாது ஆற்றிலே வீசி எறியப்பட்டதை எண்ணி வருந்தினார்.

ஒருமணி நேரம் கழிந்தது. ஒருவன் பணப்பையுடன் வந்து, ''ஷைகு ஹல்லாஜ் அவர்கள், தங்களுக்கு ஸலாம் கூறினார்கள், தாங்கள் வருந்த வேண்டாமென்றும், தாங்கள் அவர்களுக்குக் கொடுத்த இந்தப் பணப்பையைத் தங்களிடம் தந்து, 'இறைவனுக்கு அடிபணிந்து நடக்கும் ஒருவனுக்கு இறைவன் மண்ணிலும், தண்ணீரிலும் ஆதிக்கம் நல்கியுள்ளான்' என்று கூறிவிட்டு வருமாறும் பணித்தார்கள்'' என்று கூறி அந்தப் பணப்பையை அவரிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். அந்தப் பணப்பை, தாம் அவருக்குக் கொடுத்த, அதே பணப்பையாக இருப்பதைக் கண்டு இப்னு ஹாரூனுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

உடனே அவர் அந்தப் பணப்பையை எடுத்துக் கொண்டு அன்று தம் விடுதிக்கு வந்திருந்த அத்தனை ஷைகுமார்களின் இல்லங்களுக்கும் சென்று, அதனைக்காட்டி நடந்ததைக் கூறினார். அப்பொழுது, அவர்களுக்கும் ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. இவையெல்லாம் மந்திரமா? மாயமா? அல்லது கராமத்தா (அற்புதமா) என்று விளங்கவில்லையே என்று கூறித் தம் ஆற்றாமையை வெளிப்படுத்தினார்கள் அவர்கள்.

இந்த ஓர் அற்புதம் அன்றி, எத்தனையோ அற்புதங்களை அவர்கள் ஆற்றி வருவதாக மக்கள் பேசிக் கொண்டார்கள். மக்களின் உள்ளங்களிலுள்ளதை அறிந்து, அவர்கள் கூறி விடுவார்களென்றும், கோடை காலப் பழங்களைக் குளிர் காலத்திலும், குளிர்காலப் பழங்களைக் கோடை காலத்திலும் அவர்கள் தருவார்களென்றும், வானில் அவர்கள் கையை நீட்டியதும், அவர்களின் கை நிறையப் பொற்காசுகள் மின்னின என்றும், ஒவ்வொரு பொற்காசின் மீதும், "லா இலாஹ இல்லாஹ்" என்று திருக் கலிமா பொறிக்கப்பட்டிருந்ததென்றும், அவர்கள் கூறினார்கள். ஜின்கள் அவர்களுக்குக் குற்றூழியம் செய்வதாகவும், அவர்கள் பேசிக் கொண்டார்கள்.

ஒருசமயம் இப்னு நாஸிர் என்பவர் நோய் வாய்ப்பட்டார். அவருக்கு அப்பொழுது ஆப்பிள் பழம் தின்ன வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஆனால், அப்பொழுது ஆப்பிள் பழுக்கும் காலம் அல்ல. எனவே எங்கு தேடியும் ஒரு பழம் கூடக் கிடைக்கவில்லை.

இதனைக் கேள்வியுற்ற ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், திடீரென விண்ணை நோக்கித் தம் கையை உயர்த்தினார்கள். அவர்களின் கையில் ஓர் ஆப்பிள் பழம் தகதகவென்று மின்னியது.

அதனை வாங்கி ஒருவர் உடைத்தபொழுது, அதன் ஒரு பகுதியில் பூச்சி பிடித்திருந்தது. அதுகண்ட அவர் "என்ன! வானுலகப் பழத்திற்குள் எவ்வாறு பூச்சி புகுந்தது?" என்று வியப்பு மொழி பகர்ந்தார்.

அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் "அது விண்ணுலகத்தில் இருந்தபொழுது, நல்ல நிலையில் தான் இருந்தது. ஆனால் அது இந்த மண்ணுலகம் வந்ததும், இங்குள்ள நோய் அதனைத் தொத்திக் கொண்டது, அதன் காரணமாக அதில் பூச்சி பிடித்துவிட்டது" என்று கூறினார்கள்.

இக்காலை நிகழ்ந்த மற்றொரு நிகழ்ச்சியை இதோ இப்னு அதீக் கூறுகிறார். அதை நாமும் கேட்போம்.

''வான் வெளியில் வெண்ணிலா பவனி வந்து கொண்டிருக்கும் ஓர் இரவில், நான் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களின் அடக்க விடத்திற்கு 'ஜியாரத்'திற்குச் சென்றேன். அப்பொழுது ஒருவர் தொலைவில் கிப்லாவை நோக்கிய வண்ணம் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். நான் அவரை நோக்கிச் சென்றேன். ஆனால் அவரோ, என்னைக் கவனிக்கவில்லை. அவரை நெருங்கியபொழுது தான் அவர் ஹல்லாஜ் (ரஹ்) என்று எனக்குத் தெரியவந்தது. அவர் சப்தமிட்டு அழுது கொண்டிருந்தார். அப்பொழுது அவர் பின்வருமாறு அரற்றுவது என் செவியில் புகுந்தது.

''உன்னுடைய காதல் மதுவை என்னை அருந்தச் செய்து விட்டு, நிரந்தரமான தனிமையில் வாழ்ந்து கொண்டிருப்பவனே! இப்பொழுது நீ என்னுடைய ஆன்மாவை, என்னை விட்டும் மறைத்துவிட்டாய். மீண்டும் அதைக்காண நீ என்னை அனுமதிக்காதே! நாடு, நகரங்கள், பட்டித்தொட்டிகளளெல்லாம், என்னை வெறுப்பவர்களின் எண்ணிக் கையை அதிகரிக்கச் செய். என் உயிர் குடிக்க விரும்பும் உன்னுடைய நல்லடியார்களின் தொகையையும் அதிகப்படுத்துவாயாக!''

''இவ்வாறு அரற்றி அழுது இறைஞ்சிக் கொண்டிருந்த அவர், என்னைக் கண்டதும் புன்முறுவலுடன் என்னை நோக்கி வந்து'' 'அபுல் ஹுஸைனே! ஆன்மீகப்பாதையில் அடியெடுத்து வைப்பவனின் முதல் கட்டத்திற்கு அப்பால், என்னால் செல்ல இயலவில்லையே' என்று கூறினார்.

''என்ன! முதல் கட்டமா? என்ன இவ்வாறு கூறுகிறீர்கள்? நான் சற்றுமுன் பார்த்த நிலையை விட வேறு எந்நிலை மேலானதாக இருக்க இயலும்?'' என்று நான் வினவினேன்.

அதற்கு அவர், ''அபுல் ஹுஸைனே! நான் தவறாகக் கூறிவிட்டேன். அது ஓர் இறை நம்பிக்கையாளரின் முதல் படித்தரம் அல்ல. அது இறை மறுப்பின் (குஃப்ரிய்யத்தின்) முதல் படித்தரம்'' என்று கூறினார்.

''இவ்வாறு மூன்று தடவை உரத்துக் கூறிவிட்டுக் கீழே சாய்ந்தார். அவருடைய உதடுகளிலிருந்து இரத்தம் வந்து கொண்டிருந்தது. கையால் சாடை செய்து என்னைப் போகுமாறு கூறினார். நானும் அவ்விடத்தை விட்டு அகன்றேன்.

''அடுத்தநாள் காலை நான் அவரை மன்சூரின் பள்ளிவாயிலில் சந்தித்தேன். அவர் என் கையைப் பிடித்துக் கொண்டு, 'அபுல் ஹுஸைனே! நீர் நேற்று இரவு கண்டதை எவரிடமும் கூற வேண்டாம்!' என்று கேட்டுக் கொண்டார்.

''மற்றொரு நாள் நான் அவரைக் காஷியா கடைத்தெருவில் கண்டேன். அவர் கண்ணீர்விட்டு அழுத வண்ணம், 'மக்களே! என்னை இறைவனின் கண்களில் படாவண்ணம் ஒளித்து வையுங்கள்! அவன் என்னிலிருந்து, என்னை எடுத்துக் கொண்டான். மீண்டும் அவன் என்னைத் தனியாகவிட்டு விடுவானோ என்ற அச்சத்தின் காரணமாக, அவனின் திருமுன் நின்று அவனை வணங்கக்கூட என்னால் இயலாது போய் விட்டது. அவன் என்னைப் புறக்கணித்துச் சென்றுவிடுவானோ என்னவோ தெரியவில்லை. அவனால் புறக்கணிக்கப்பட்டவனுக்குக் கை சேதமே, கைசேதம்!'' என்று சப்தமிட்டுப் புலம்பினார். அதுகேட்டு ஆங்கு நின்று கொண்டிருந்த மக்கள் எல்லாம் அழுதார்கள்.

''இதன்பின் அத்தாப் பள்ளிவாயிலுக்குச் செல்லும் வழியில் நின்று கொண்டு, தம் வாயில் வந்தவண்ணம், ஏதேதோ புலம்பினார். அவற்றில் சில விளங்கின. மற்றும் சில விளங்கவில்லை.

''அவர் கூறினர்: இறைவன் படைப்புகளைப் படைத்தான் என்றால், அவற்றின் மீதுள்ள நல்லெண்ணத்தின் காரணமாக அவற்றைப் படைத் தானேயன்றி வேறில்லை. சிலபொழுது அவன் அவற்றிற்குத் தென் படவும், மற்றும் சிலபொழுது தன்னை ஒரு திரையால் மறைத்துக் கொள்ளவும் அவன் செய்வானாயின், அவை அந்தப் படைப்புகளின் முன்னேற்றத்தின் அடையாளமேயாகும். அவனிடமிருந்து ஒளிக்கதிர் வரவில்லையாயின், மனிதன் இறைவனின் உள்ளமையையே மறுத்து விடுவான். அந்த ஒளிக்கதிர்கள் திரையிட்டு மறைக்கப்படாவிடின், அனைத்தும் திக்பிரமை பிடித்தது போன்று ஆகிவிடும். எனவே தான், அவன் இந்த இரு நிலைகளில் யாதொன்றையும் நீடித்து இருக்கச் செய்வதில்லை. என்பற்றிய வரையில், இப்பொழுது எனக்கும் அவனுக்கும் இடையில் யாதொரு திரையும் இல்லை. என்னுடைய மனிதத்தன்மை அவனுடைய தெய்வீகத் தன்மையில் செத்து மடிந்து விட்டது. என்னுடைய உடல் அவனுடைய நெருப்பால் எரிந்து கொண்டி ருக்கிறது.''

இவ்வாறு ஏதேதோ கூறிக்கொண்டு, அலைந்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை, இதன்பின் பக்தாதைவிட்டு நீங்கி பஸரா வழியாக மக்கமா நகர் வந்து சேர்ந்து, அங்கு இரண்டாண்டுகள் தங்கி இருந்தனர். இப்பொழுது அவர்களின் வாழ்க்கையிலே மாபெரும் புரட்சி ஏற்பட்டது. அவர்களின் எண்ணத்திலே மாபெரும் போராட்டம் நிகழ்ந்தது. அவர்களின் உள்ளமெல்லாம் கொந்தளித்துக் குமுறத் துவங்கியது. இப்பொழுது அவர்களின் வாயிலிருந்து 'அனல் ஹக்' (நானே உண்மை; நானே மெய்ப்பொருள்) என்ற சொற்கள் முதன் முதலாக வெளி வந்தன.

இதன்பின் என்ன? 'அனல் ஹக், அனல் ஹக்' என்று அவர்கள் எங்கணும் கத்திக் கொண்டு திரிந்தார்கள். அவர்களின் ஒவ்வொரு மூச்சும் 'அனல் ஹக், அனல் ஹக்' என்றே வெளிவந்தன. அதுகேட்டு மக்கள் திடுக்குற்றார்கள். ''சாதாரண ஒரு மனிதன், தன்னை மெய்ப்பொருளாகிய இறைவன் என்று பிதற்றிக் கொண்டு திரிகின்றானே. இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ, என்னவோ தெரியவில்லையே. ஆனால், இவனைப் பார்த்தால் சாதாரணப் பைத்தியக்காரன் போல் தோன்ற வில்லையே. விஷமக்காரப் பைத்தியம் போல் தோன்றுகிறதே. இவனை இவ்வூரில் வசிக்க விட்டால், எல்லாரையும் பைத்தியக்காரனாக்கி விடுவானே. ஊரையே நாசப்படுத்தி விடுவானே'' என்று கூறி அவர்களை மக்கமா நகரை விட்டும் விரட்டியடித்தார்கள்.

அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மக்கமா நகர மக்களை நோக்கி, ''நீங்கள் இறைவனை அறியாவிட்டாலும், இறைவனுடைய அடையாளங்களையாவது அறிந்து கொள்ளுங்கள்! நான் தான் இறைவனின் அடையாளம். நான் தான் மெய்ப்பொருள் (அனல் ஹக்). உண்மையின் மூலமாகிய நானே நிரந்தரமான உண்மையாவேன், இப்லீசும், ஃபிர் அவ்னும் என்னுடைய நண்பர்கள்; ஆசிரியர்கள். 'நான் உன்னை நரக நெருப்பில் தூக்கிப் போடுவேன்' என்று இறைவன் இப்லீசைப் பயமுறுத்தியும், உண்மையான இறை பக்தனாகிய அவன் ஆதத்திற்கு சுஜூது செய்ய முன் வரவில்லை. ஃபிர்அவ்ன் கடலில் மூழ்கடிக்கப்பட்ட பொழுதும், அவன் தான் கூறியதை மாற்றிக் கொள்ள வில்லை. ஏனெனில், தனக்கும் இறைவனுக்கும் இடையே யாதொன்றும் இருப்பதை (மூஸா இருப்பதை) அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. அதுபோன்று நீங்கள், என்னைக் கொன்றாலும், என் கால்களையும் கைகளையும் ஒவ்வொன்றாக வெட்டிச் சித்திரவதை செய்தாலும், நான் 'அனல் ஹக்' என்று கூறுவதை விட மாட்டேன்'' என்று கூறிவிட்டு மக்கமா நகரைவிட்டும் வெளியேறினர் ஹல்லாஜ். அப்பொழுது அவர் களின் வாய் பின்வரும் கவிதையை முணுமுணுத்தது.

''இறைவன் என் கை இரண்டினையும்
என்றன் முதுகின் பின் கட்டி
நிறைவாம் கடலில் எனைத்தூக்கி
நீசா நீசா என எறிந்தான்.
எறிந்த பின்னர் என் இறைவன்
என்பால் இரக்க முற்றாற்போல்
சிறியோய்! உன்உடை நனையாது
காவாய், காவாய் எனச்சிரித்தான்.

இவ்வாறு தன் நிலையை ஒரு சிறு கவிதையில் உள்ளடக்கி - ''தம்மை 'அனல் ஹக்' என்று கூறுமாறு செய்தவனும் அவனே, அதன் காரணமாக மக்கள் தம்மை மக்கமா நகரை விட்டு விரட்டுமாறு செய்து, வேடிக்கை பார்ப்பவனும் அவனே' என்று பாடிய வண்ணம் அவர்கள் வேற்றூர் நோக்கிப் பயணமாயினர்.

வழிநெடுக அவர்களின் உள்ளிலிருந்து கவிதைகள் வெள்ளப் பிரவாகமாக வெளிவந்து கொண்டிருந்தன.

தாகம் மீக்குற்று மதுவருந்த எண்ணி, என் வாயை மதுக் கிண்ணத்தின் அருகில் கொண்டு சென்றேன். என்ன வியப்பு! மதுக்கிண்ணத்தின் உள்ளே ஒரு நிழல் தென்பட்டது. அதனை நான் உற்றுப் பார்த்த பொழுது,

அது நீயாவே இருந்தது.
என் இதயம் கண்ணாக மாறிவிட்டது.

அக்கண்ணின் முன் இறைவன் தோற்றம் வழங்கினான். உடனே நான் அவனை நோக்கி, ''நீ யார்?'' என்று வினவினேன்.

''நீதான்'' என்ற பதில் எதிரொலி செய்தது.
ஆ! இஃதென்ன புதுமை!!
அதுநானா? அல்லது நீயா?
இரண்டு கடவுளர்களா?
அஸ்தஃபிருல்லாஹ்! அஊது பில்லாஹ்!!

அவ்விதம் கூறுவதை விட்டும் அப்பாற்பட்டவன் நான், எனினும் எனக்கும் உனக்கும் இடையில்,

'அது நான்' என்பது கிடந்து துன்புறுத்துகிறதே. நம்மிடையே இருந்து 'அது நான்' என்பதை எடுத்துவிடு.

'அது நீ தான்; அது நீ தான்' என்பது உறுதியாகிவிடும்.

இவ்வாறு அவர்கள் பாடிக் கொண்டே, அடுத்த ஊர் வந்தடைந் தார்கள். ஆனால் அவர்கள், அதனை அடையுமுன் அவர்களைப் பற்றிய செய்தி அங்கும் சென்று விட்டது. அவர்கள் அங்கு வந்தடையும் முன்பே அவர்களுக்கு வரவேற்பு இல்லை, இல்லை - எதிர்ப்பு தலை தூக்கி விட்டது. ''வராதே! வராதே! மார்க்க விரோதியே!! எங்கள் ஊருக்கு வராதே! திரும்பிப் போ!! திரும்பியே பாராது, திரும்பிப் போ!!! என்ற கோஷங்கள் விண்ணை முட்ட எழுந்தன.

ஆனால் அவர்களின் கூப்பாடு, ஊழைகளையெல்லாம் கேட்டு, மன்சூர் ஹல்லாஜ் அவர்கள் நடுங்கி விடவில்லை. அவர்கள், 'அனல் ஹக்,' 'அனல் ஹக்' என்று மேலும், மேலும் முழக்கமிட்டார்கள்.

இவ்வாறு ஓரிரண்டு ஊர்களில் மட்டும் நடக்கவில்லை. அவர்கள் சென்ற ஐம்பது ஊர்களிலும் இதே கதை தான் இதே காட்சி தான் திரும்பத் திரும்ப நடந்தது. இது கண்டு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அலுக்கவோ சலிக்கவோ இல்லை. முன்னை விடப், பன்மடங்கு அதிகமாக ஆனந்தப் பரவசமுற்று, 'அனல் ஹக்,' 'அனல் ஹக்' (நானே மெய்ப் பொருள், நானே மெய்ப் பொருள்) என்று உக்கிரமாக எக்காளமிட்டார்கள். இது கண்டு மக்களுக்கு என் செய்வதென்றே விளங்கவில்லை. "இவர் என்ன முதிர்ந்த ஞானியா அல்லது முற்றிய பைத்தியமா? என்னவென்றே விளங்க வில்லையே" என்று அவர்கள் கூறினர். "பைத்தியமே பைத்தியம். அதில் அணுவத்தனையும் ஐயமில்லை" என்று சிலர் கூறினார்கள். "இல்லை; இவர் மாபெரும் ஞானி. இறைவனின் இரகசியங்களை அறிந்தவர். அவரின் இரகசியங்களை நீங்கள் அறிய மாட்டீர்கள்" என்று வேறு சிலர் எதிர்த்துரைத்தார்கள். "இல்லை; இல்லை. அவர் பைத்தியமுமல்ல; ஞானியுமல்ல. நம்மையெல்லாம் பைத்தியமாக்கும் புத்திசாலி" என்று மற்றும் சிலர் கிண்டலாகப் பேசினார்கள். இவ்வாறு அவர்களைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். ஆனால் அவர்களோ, "நானே மெய்ப்பொருள்! நானே மெய்ப்பொருள்!!" என்று எங்கணும் கூறித் திரிந்தார்கள்.

அவர்கள் இவ்வாறு கூறித் திரிந்ததைக் கண்ட மக்கள் வெகுண்டெழுந்தனர். "அவனே மெய்ப் பொருள், அவனே மெய்ப் பொருள், என்று கூறு, கூறு" என்று மக்கள் கத்தினார்கள். ஆனால் அவர்களோ, "நானே மெய்ப்பொருள், நானே மெய்ப்பொருள்" என்று எதிர் முழக்கமிட்டார்கள்.

இது கண்டு மக்களுக்கு என்ன செய்வதென்றே விளங்கவில்லை. மார்க்க அறிஞர்களிடம் ஓடினார்கள். மார்க்க அறிஞர்களுக்கும் என்ன செய்வதென்றே விளங்கவில்லை. "இவ்வாறு கூறுவது எத்துணைத் தவறு. எத்துணைத்தவறு!" என்று அவர்கள் அங்கலாய்த்தார்கள். இது பற்றி மாநாடு கூட்டி ஆலோசனை செய்ய முடிவு செய்தார்கள். அவ்விதமே முந்நூற்று எழுபது மார்க்க விற்பன்னர்கள் ஒருங்கு சேர்ந்து, தங்களின் மண்டையை உடைத்துக் கொண்டார்கள். என்ன செய்தும் என்ன? அவர்களுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. எனவே அவர்கள் , ஆத்ம ஞானிகளை அணுகி, இதுபற்றி ஆலோசனை கலந்தார்கள். அவர்களுக்கும் இவையெல்லாம் என்ன வென்றும், இவர் பற்றி என்ன செய்வதென்றும் விளங்கவில்லை. இறுதியாக அவர்களெல்லாம் ஒருங்கு சேர்ந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை அவ்விதம் கூறாது தடுக்க முயன்றார்கள்.

ஆனால், ஹல்லாஜ் (ரஹ்) அவர்களோ, அந்த மார்க்க விற்பன்னர்கள், ஆத்மீக ஞானிகள் ஆகிய அனைவருடைய பேச்சையும் அணுவேனும் பொருட்படுத்தாது, "நானே மெய்ப்பொருள்; நானே மெய்ப்பொருள். நேசனும் நானே. நேசிக்கப்படுபவனும் நானே. நாங்கள் இருவரும் ஒரே உடலில் வதியும் இரு ஆன்மாக்களாவோம். என்னைப் பார்க்கும் பொழுது, அவனையே பார்க்கிறீர்கள். அவனைப் பார்க்கும் பொழுது, என்னையே பார்க்கிறீர்கள்" என்று கூறலாயினர்.

அவர்களின மூளை எப்பொழுதும் கொந்தளித்துக் குமுறிக் கொண்டிருந்தது. எனவே அமைதி என்பது அவர்களுக்கு இல்லாமல் போய் விட்டது. படுக்கப் பாயோ, தலையணையோ அவர்களிடம் கிடையாது. இரவில் அவர்கள் வெறுந்தரையிலாவது, படுத்துறங்குவார்களா என்றால் அதுவும் இல்லை. இரவு முழுதும் நின்று கொண்டு, ஏதேதோ கூறிக் கொண்டிருப்பார்கள். அலுத்து அவர்களின் கண்ணிமைகள் தாமாகவே மூடின், கீழே அமர்ந்து தம் முழங்கால்களில் தம் தலையை வைத்துச் சற்று உறங்குவர். அவ்வளவுதான். அதன்பின் விழித்து 'அனல் ஹக், அனல் ஹக்' என்று கூறத்துவங்கி விடுவார்கள்.

அவர்களின் இந்நிலையைக் கண்ட ஒருவர், "தாங்கள், தங்களுடன் நட்புறவோடு நடந்து கொள்ள வேண்டும்" என்று கூறினார்.

அதற்கு அவர்கள், "என் உடல் என் நண்பன்தான். எனினும் அது என்னுடன் நட்புறவாக இல்லையே" என்று பதிலிறுத்தார்கள்.

ஒரு நாள் அவர்கள் பரவசமற்ற நிலையில் அமைதியாக வீற்றிருந்தார்கள். அப்பொழுது மக்கள் அவர்களை அணுகி, "ஏன் மார்க்கத்திற்கு முரணாக 'அனல் ஹக்,' 'அனல் ஹக்' என்று கூறித் திரிகிறீர்கள்?" என்று வினவிய பொழுது, "நான் எப்பொழுது அவ்வாறு கூறினேன்? இனிமேல் நான் அவ்விதம் கூறின் என்னை வாளுக்கிரையாக்கி விடுங்கள்! அதுவே அதற்குரிய தண்டனை" என்று அழுத்தமாகக் கூறினார்கள் அவர்கள்.

இக்காலை அவர்களைச் சந்தித்த இப்ராஹீம் இப்னு அதீக் தம் சந்திப்பு விவரத்தை இதோ கூறுகின்றார்.

"ஒரு நாள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் அறைக்குள் சந்தடி செய்யாமல் நுழைந்தேன். அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தம் தலையைப் பூமியில் வைத்து சுஜூது செய்த நிலையில் 'உன்னுடைய நெருக்கம், என் உடலை இறுக்கும் வண்ணம் இருப்பவனே! உன்னுடைய இரகசியம் என்னைத் தொலைவில் தூக்கி எறியும் வண்ணம் உள்ளவனே! ஒரு வேளை நீ என் முன் ஒளிர்ந்து கொண்டிருப்பதைக்

கண்டு நீ தான் அனைத்தும் என்று நான் கூறுகிறேன். மறுவேளை, நீ உன்னை, என்னை விட்டும் மறைத்துக் கொள்ளும் பொழுது, நீ இங்கில்லை என்று நான் கூறுகிறேன். இறைவனே! நீ என்னை விட்டும் தூரப் போய்விட்டால், நான் அனாதையாகி விடுவேன். நீ என்னை நெருங்கி வந்தால், எனக்குப் பெரிதும் உதவியாய் இருக்கும். நீ என்னுடன் போர்தொடுத்தால், நான் அழிந்து போவேன். நீ என்னுடன் சமாதானமாய் இருந்தால் எனக்கு ஆறுதலாயிருக்கும்'' என்று கூறி இறைஞ்சிக் கொண்டிருந்தார்கள்.

''என்னுடைய அரவம் கேட்டுத் தலையை கிளப்பிய அவர்கள், 'உள்ளே வாரும்! உம்முடைய வரவால் எனக்கு யாதொரு தொந்தரவும் இல்லை' என்று கூறினார்கள்.

''எனவே நான் உள்ளே சென்று, அவர்களின் முன் அமர்ந்தேன். அவர் களின் கண்கள் தீக்கங்கு போல ஜொலித்தன.

'என் அன்பு மகனே! என்னைச் சிலர் 'வலீ' என்றும், சிலர் 'காஃபிர்' என்றும் கூறுகிறார்கள். என்னைக் 'காஃபிர்' என்று கூறுபவர்களையே நான் விரும்புகிறேன். அல்லாஹ்வும், அவர்களையே விரும்புகிறான்' என்று அவர்கள் என்னிடம் கூறினார்கள்.

''அது கேட்ட நான், 'ஷைகு அவர்களே! ஏன் இவ்வாறு கூறுகின் றீர்கள்?'' என்று வினவினேன்.

''அதற்கு அவர்கள் ' என்னை மதிப்பவர்கள் என்னை 'வலீ' என்று கூறுகிறார்கள். மற்றவர்களோ மார்க்கத்தின் மீது தங்களுக்குள்ள பக்தியின் காரணமாக, என்னைக் காஃபிர் என்று கூறுகிறார்கள். அல்லாஹ்வின் படைப்பினங்களில் ஒன்றாகிய என்னை மதிப்பவர்களை விட, மார்க்க பக்தியுள்ளவர்களையே நானும் விரும்புகிறேன், அல்லாஹ்வும் விரும்பு கிறான்.

''இப்ராஹீம் நான் தூக்கிலிடப்பட்டு, என் உடல் எரிந்து சாம்பலாக்கப் படும் நாளைப் பற்றி என்ன கூறுகிறீர்? என்னைப் பற்றிய வரையில் அதுவே என் வாழ்வில் மிகவும் மகிழ்ச்சிகரமான நாளாகும்'' என்று கூறினார்கள்.

''அதன்பின் அவர்கள் என்னை நோக்கித் திடுதிப்பென, ''நீ இங்கே இருக்க வேண்டாம்' அல்லாஹ்வின் காவலாய்ச் சென்று வா. மக்களிடம் சென்று ''நான் ஆழ்கடலில் தண்டு வழித்துச் சென்றேன். நடுக்கடலில் படகு உடைந்து விட்டது. நான் சாகப் போகிறேன். புனித நகரங்களுக்கு நான் போகப் போவதில்லை என்று கூறு'' என்று சொன்னார்கள்.

ஒரு நாள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மன்சூரின் பள்ளி வாயிலுக்குச் சென்று, ''மக்களே! வாருங்கள்! நான் ஒரு செய்தியைக் கூறப் போகிறேன்'' என்று பெரும் சப்தமிட்டு முழங்கினார்கள். ஒரு நொடியில் பெருங் கூட்டம் திரண்டு விட்டது. அதிலே அவர்களை நேசிப்பவர்களும், வெறுப்பவர்களும் புகழ்பவர்களும், குறை கூறுபவர்களும் நின்று கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அக்கூட்டத்தினரை நோக்கி, ''இறைவன் என்னை மார்க்கத்திலிருந்து வெளியேற்றி விட்டான். ஆதலின் என்னைக் கொன்றொழியுங்கள், கொன்றொழியுங்கள்'' என்று கத்தினார்கள்.

அது கேட்டு கூட்டத்திலிருந்த பலர் 'கோ' வென்று அலறிவிட்டனர். ஆனால் சூஃபி அப்துல் வதூத் என்பவர், அவர்களை நெருங்கி ''ஷைகு அவர்களே! தாங்களோ கலிமாச் சொல்கிறீர்கள், தொழுகிறீர்கள். நோன்பு நோற்கிறீர்கள். இத்தகைய ஒருவரை நாங்கள் எவ்வாறு கொன்றொ ழிப்பது?'' என்று வினவினார்கள்.

அதற்கு அவர்கள் ''அவற்றிற்கும், என்னைக் கொன்றொழிப்பதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஆதலின், என்னைக் கொன்றொழியுங் கள்! நீங்கள் அதற்கான நற்பலனைப் பெறுவீர்கள், நானும் அமைதி பெற்று விடுவேன். அது உங்களுக்கு புனிதப் போராக இருக்கும். எனக்கோ உயிர்த் தியாகமாக இருக்கும்'' என்று கூறினார்.

இவ்வாறு கூறிவிட்டு பள்ளி வாயிலை விட்டு வெளியே சென்றார்கள். எனினும், சூஃபி அப்துல் வதூத் அவர்களை விடவில்லை. அவர்களின் பின்னே சென்று, 'ஷைகு அவர்களே! தாங்கள் கூறியது எங்களுக்குப் பெரிதும் கவலையை அளிக்கிறது. தாங்கள் என்னதான் கூறு கிறீர்கள் என்பதை எங்களால் விளங்கிக் கொள்ள இயலவில்லை'' என்று கூறினார்கள்.

அப்பொழுது அவர்கள், ''மகனே! இப்பொழுது முஸ்லிம்களுக்கு மிகவும் அவசியமான, அவசரமான அலுவல் என்னவென்றால், என்னைச் சிரச்சேதம் செய்வதேயாகும். என்னுடைய இறப்பே, இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தைத் தாங்கிப் பிடித்து காத்து நிற்கும்'' என்று கூறினர்.

இதன்பின் அவர்களின் வாய், 'அனல் ஹக், அனல்ஹக்' என்று முழங்கலாயிற்று. வீட்டிலும், வீதிகளிலும், காட்டிலும், கடைத்தெருக் களிலும், அவர்கள் ஆனந்தப் பரவசமுற்ற நிலையில், 'அனல் ஹக், அனல் ஹக்' என்று முழங்கிக் கொண்டிருந்தார்கள்.

அது கேட்டு மக்களுக்கு இவையெல்லாம் என்னவென்றே விளங்க வில்லை. இவரை இனிமேல் இவ்வாறு விட்டு வைக்காது, சிறையி லடைத்தால், இவரின் பிதற்றல்களுக்கு ஒரு முடிவேற்படும். இல்லை யெனில் மக்களின் மனத்தையெல்லாம் இவர் மாசுபடுத்தி விடுவார் போலிருக்கிறது' என்று அவர்கள் எண்ணினார்கள். எனவே அவர்கள், அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸை அணுகி, அவரிடம் முறை யிட்டார்கள்.

இதனை அமைச்சர், கலீபா அல் முக்ததிர் பில்லாஹ்விடம் கூற, அவர் உடனே ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைச் சிறை செய்யுமாறு ஆணை பிறப்பித்தார். ஆனால் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களோ, அதற்கு முன்பே தம் சீடர் ஒருவருடன் பக்தாதை விட்டு நீங்கிவிட்டார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 297 - ஆம் ஆண்டிலாகும், அப்பொழுது அவர்களின் வாய்,

**"மதுவோடு கண்ணீர் கலந்தாற் போன்று உன் ஆன்மா**
**என் ஆன்மாவோடு கலந்துள்ளது.**
**ஏதேனும் ஒன்று உன்னைத் தொடுமாயின்**
**அது என்னையே தொடுகிறது.**
**ஒவ்வொன்றிலும் நீ நானாகவே இருக்கிறேன்.**
**நான் நேசிக்கும் அவனும் நான் தான்.**
**என்னால் நேசிக்கப்படும் அவனும் நான் தான்.**
**என்னை நீ பார்க்கும் பொழுது அவனையே நீ பார்க்கிறாய்.**
**அவனை நீ பார்க்கும் பொழுது என்னையே நீ பார்க்கிறாய்"**

என்று பாடியது.

இதன் பின் அவர்கள் நான்கு ஆண்டுகள், பல்வேறு இடங்களிலும் சுற்றித் திரிந்தார்கள். இறுதியாக அவர்கள் ஹிஜ்ரி 301 ஆம் ஆண்டில் சூஸா வந்த பொழுது, காவல்துறை அதிகாரிகளால் கைது செய்யப்பட்டு, பக்தாது அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு அவர்கள் தற்காலிக மாகக் கலீபாவின் அரண்மனையின் ஒரு பகுதியில் சிறை வைக்கப் பட்டார்கள்.

அரண்மனையில் சிறைவைக்கப்பட்ட சில நாட்களுக்குள், அரண் மனையின் நிர்வாக அதிகாரி நஸர் உட்பட, ஆங்கிருந்த ஊழியர்கள் அனைவரும் அவர்களின் சீடர்களாகிவிட்டனர். இது அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸுக்குத் தெரிய வரவே, அவர், அவர்கள் அனைவரையும் அழைத்து விசாரித்தார். அவர்கள் அனைவரும் ஹல்லாஜ் தான் அல்லாஹ் என்றும், அவரால் இறந்தவரை உயிர் பெற்றெழச் செய்ய இயலும் என்றும் ஒருமித்துக் கூறினர்.

உடனே ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை அழைத்து வருமாறு ஆணையிட்டார் அமைச்சர். அவர்கள் அங்கு வந்ததும், முன்னர் கூறியது போன்றே கூறினர் ஊழியர்கள்.

அது கேட்ட ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் ''அஸ்தஃபிருல்லாஹ்! நான் இறைவனென்றோ, நபியென்றோ கூறுவதை விட்டும், அல்லாஹ் என்னைக் காத்தருள் புரிவானாக! நான் ஒரு சாதாரண மனிதனேயாவேன். இறைவனை வணங்குகிறேன். நோன்பு நோற்கிறேன், இன்னும் பல நற்செயல்களை ஆற்றுகிறேன். அவ்வளவுதான்'' என்று கூறினார்கள்.

இதன்பின் யாது செய்வதென அறியாது திணறிய அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ், மாலிகி மத்ஹப் நீதிபதி அபூ உமரையும், ஹனஃபீ மத்ஹப் நீதிபதி இப்னு பஹ்லூலையும் சந்தித்து, ஹல்லாஜ் பற்றி, அவர்களுடன் ஆலோசனை கலந்தார். 'போதிய சாட்சிகளின்றி அவர் மீது குற்றம் சாட்ட இயலாது. மார்க்கத்திற்கு முரணான மாபெரும் குற்றம் இழைத்திருந்தாலன்றி அவரைச் சிரச்சேதம் செய்ய இயலாது'' என்று கருத்துத் தெரிவித்தார்கள் அவர்கள்.

இதனை அவர் கலீபா முக்ததிர்பில்லாஹ்விடம் தெரியப்படுத்திய பொழுது, ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை அலீ இப்னு ஈஸாவிடம் அனுப்பி விசாரிக்கச் செய்யுமாறு பணித்தார் அவர். ஆனால், அலீ இப்னு ஈஸாவோ அப்பணியைத் தம்மால் திறம்படச் செய்ய இயலாதென்றும், எனவே, தம்மை மன்னித்தருளுமாறும் கூறி, அப்பொறுப்பிலிருந்து நழுவிக் கொண்டார்.

இதன்பின் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு விரோதமான சாட்சியங்களைச் சேகரிப்பதில் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் தீவிரமாக ஈடுபட்டார். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் சீடர்களில் ஒருவரான ஸமர்ரியின் மகளை அழைத்து வரச் செய்து, அவரிடம் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைப் பற்றி விசாரித்தார். அவர் கூறினார்; ''முதல் தடவையாக என் தந்தை, என்னை அவர்களிடம் அழைத்துச் சென்ற பொழுது, எனக்கு அவர்கள் சில, சிறு சிறு அன்பளிப்புகள் செய்தனர். அதன்பின் அவர்கள் என்னை நோக்கி, ''நான் உன்னை என் அருமை மகன் சுலைமானுக்கு மணமுடித்துக் கொடுக்க விழைகிறேன். அவன் நீஷாப்பூரில் வாழ்ந்து கொண்டிருக்கிறான். கணவனுக்கும் மனைவிக்கும் இடையே மனத் தாங்கல் ஏற்படுவதுண்டு. அவன் செய்கைகளில் சில உனக்குப் பிடிக்காமல் போகலாம். நீ அவனிடம் விரைவில் செல்வாய். நீ விரும்பாத ஒன்றை அவன் செய்யின், நான் கூறுகின்றபடிச் செய்! ஒரு நாள் நோன்பு வை. நோன்பு திறக்கும் வேளையில் மொட்டை மாடிக்குச் சென்று, அதன் தளத்தில், சூடத்தையும், உப்பையும் தூவி, அவற்றின்

மீது நின்று கொண்டு நோன்பு திற! அதன்பின் நான் இருக்கும் திக்கு நோக்கி முகத்தைத் திருப்பி, நீ விரும்பாத எதனை அவன் செய்கிறான் என்று என்னிடம் கூறு! நான் அப்பொழுது உன்னைப் பார்க்கவும், நீ கூறுவதைக் கேட்கவும் செய்வேன்'' என்று கூறினார்கள்.

''மற்றொரு நாள் காலை நான் அவர்களின் இல்லம் சென்றேன். அவர்களின் மகளும் அங்கு இருந்தார். அவர்கள் என்னைத் தம் அருகே அழைத்துத் தம் சட்டைப்பையில் கையை விட்டு எடுத்தார்கள். கை நிறையக் கஸ்தூரி இருந்தது. அதனை என்னிடம் தந்தார்கள். மீண்டும், மீண்டும் கையை விட்டுப், பிடி பிடியாகக் கஸ்தூரியை அள்ளி என்னிடம் தந்து, 'இதனை உன் வாசனைத் திரவியங்களில் போட்டு வை! ஒரு பெண் தன் கணவனிடம் செல்லும் பொழுது, ஏராளமான வாசனைத் திரவியங்கள் தேவைப்படும்'' என்று கூறினார்கள்.

''மற்றொரு நாள் நான் அவர்களைக் காணச் சென்ற பொழுது, அவர்கள் தம் அறையில் தனியே வீற்றிருந்தார்கள். அறை முழுவதும் பாய் விரிக்கப்பட்டிருந்தது. அவர்கள் என்னை நோக்கி, ''அதோ மூலையில் இருக்கும் பாயைத் தூக்கி அதன் கீழே உள்ளவற்றில் உனக்கு வேண்டியதை எடுத்துக் கொள்' என்று கூறினார்கள். நானும் அங்கு சென்று, அங்கு விரிக்கப்பட்டிருந்த பாயைத் தூக்கினேன். தரை முழுவதும் பொற்காசுகள் மின்னிக் கொண்டிருந்தன'' என்று இயம்பினார்.

இவற்றையெல்லாம் கேட்டு அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸின் மூளை குழம்பியது. எனினும், மனம் தளராது உளவாளிகளை நாட்டின் நாலா பக்கங்களிலும் அனுப்பி வைத்து, ஹல்லாஜின் சீடர்களைத் தேடிக் கண்டு பிடித்து, அவர்களின் இல்லங்களைச் சோதிக்குமாறு கட்டளையிட்டார். அவ்விதமே செய்யப்பட்ட பொழுது, அங்குச் சீனத் தாள்களில் எழுதப்பட்ட ஏராளமான தஸ்தாவேஜுகள் கிடைத்தன. அவற்றில் சில தங்க மையால் எழுதப்பட்டு, பட்டாலும் மெல்லிய தோலாலும் பைண்ட் செய்யப்பட்டிருந்தன. ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தம் சீடர்களுக்கு எழுதிய கடிதங்களும், சீடர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு எழுதிய கடிதங்களும், ஏராளமாகச் சிக்கின. ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், தம் சீடர்களுக்கு எழுதிய கடிதங்களில், மக்களுக்கு எவ்வாறு தம் கொள்கைகளைப் போதிக்க வேண்டும், எவ்வாறு மக்களுக்கு அவர்களின் தகுதிக்குத் தக்க வண்ணம், அவற்றைப் படிப்படியாக எடுத்துரைக்க வேண்டும் என்பது பற்றியெல்லாம் ஆலோசனை பகர்ந்திருந்தார்கள்.

தினாவரில் ஒரு மனிதர் இருந்தார். அவரோ ஒரு சாக்குப் பையில் எதையோ சுருட்டிவைத்துக் கட்டி, அதனை இரவு பகலாகக் கண்ணிமைக்

காது காத்துவந்தார். ஒருகணம் கூட அதைவிட்டும் அவர் பிரிவதில்லை. எனவே அவர் மீது ஐயுற்ற அரசாங்க உளவாளிகள், அவரைப் பிடித்து, அவரின் கையிலிருந்த சாக்கு மூட்டையைப் பிடுங்கிப் பிரித்துப் பார்த்ததில், அதில் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், அவருக்கு எழுதிய சில கடிதங்கள் சிக்கின. அவற்றின் தலைப்பில் 'அருளாளனும் அன்பாளனு மானவன் இன்னாருக்கு எழுதியது' என்ற வாசகம் பொறிக்கப் பட்டிருந்து.

இவற்றையெல்லாம் சேகரித்து, உளவாளிகள் கொண்டு வந்து அமைச்சரின் திருமுன் வைத்ததும், ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை ஒழித்துக் கட்டத் தமக்குப் போதிய ஆதாரங்கள் கிடைத்தது கண்டு துள்ளிக் குதித்தார் அமைச்சர்.

இதன்பின் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதனை இதோ அரசாங்க எழுத்தர் இப்னு ஸஞ்சி கூறுகின்றார். நாமும் கேட்போம்.

''நானும் என் தந்தையாரும் ஒரு நாள், அமைச்சர் ஹாமிதைச் சந்திக்கச் சென்றோம். எங்களுடன் சற்றுநேரம் உரையாடிய அமைச்சர், ஏதோ ஓர் அலுவலாக வெளியே சென்றார். நாங்களும் வெளியே வந்து ஆங்கிருந்த சிற்றுண்டிக் கடையில் போடப்பட்ட நாற்காலியில் அமர்ந்தோம். சிறிது நேரத்தில் அங்கு வந்த கடை அதிபர் ஹாரூன், என் தந்தையைக் கண்டதும் அவருக்கு 'ஸலாம்' உரைத்து, இனிமையாக உரையாடிக் கொண்டிருந் தார். அப்பொழுது ஹல்லாஜ்ஜைக் கண்காணித்து வந்த ஹாமிதுடைய அடிமை ஓடோடி வந்து, ஹாரூனை அழைத்தான். ஹாரூன் சென்றார். சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்தார். அவரின் முகமெல்லாம் வெளுத் திருந்தது.

''அதுகண்டு என் தந்தையார் என்ன செய்தி?'' என்று ஏக்கத்துடன் வினவினார்.

''ஹாரூன் கூறினார்:

''வந்தவன் ஹல்லாஜைக் கண்காணித்து வந்த ஹாமிதின் அடிமை. அவன் ஹல்லாஜின் முன்வைக்கப்பட்டிருந்த உணவுத் தட்டை, அவர் உண்டு முடித்தபின் எடுப்பதற்காக வழக்கப் போல் சென்றானாம். அப்பொழுது அந்த அறை முழுவதும், ஹல்லாஜ் விசுவரூபம் எடுத்து நின்று கொண்டிருந்தாராம். அது கண்டு திடுக்குற்ற அவன், கையிலெடுத்த உணவுத் தட்டை அப்படியே கீழே போட்டுவிட்டு, ஓடிவந்து விட்டானாம். அவனுடைய உடல் முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்தது. காய்ச்சலோ, கை பொறுக்கவில்லை'' என்று கூறினார்.

''அதுகேட்டு நாங்கள் பெரிதும் வியப்பில் ஆழ்ந்தோம். அப்பொழுது அமைச்சரின் பணியாள் எங்களிடம் வந்து, அமைச்சர் எங்களை அழைப்ப தாகக் கூறினான். நாங்கள் சென்றோம். ஹாரூன் கூறிய செய்தியைக் கூறினோம்.

''உடனே அதுபற்றிய உண்மையை அறிய, அந்த அடிமையை அழைத்து வர ஆணையிட்டார் அமைச்சர். அவன் வந்ததும், அதுபற்றி அவர் விசாரித்தார். ஹாரூன் எங்களிடம் கூறியவண்ணமே அவன் எடுத்துரைத்தான்.

'அவனை அமைச்சர் வசைமொழிகளால் திட்டி,' ''என்னடா பொய்யுரைக்கிறாய்? ஹல்லாஜின் மாய வித்தைகளைக் கண்டு மருண்டு விட்டாயா? போடா வெளியே. என் கண்முன் நிற்காதே!'' என்று கூறி விரட்டினார்.

அடிமை வெளியே சென்றான். அவனுடைய காய்ச்சல் தணியப் பல நாட்களாயின.

இதன்பின் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை, அரசாங்கப் பொதுச் சிறையில் அடைக்குமாறு ஆணையிட்டார் கலீபா. அப்பொழுது அரண் மனை நிர்வாக அதிகாரி நஸ்ர், கலீபாவிடம் பரிந்துரைத்து, ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு அரசாங்கப் பொதுச் சிறைக்கு அண்மையில் ஒரு வசதியான சிறு இல்லம் தம் செலவில் அமைத்துக் கொடுத்தார். அதற்கும் பொதுச் சிறைக்கும் போகவர வாசல் இருந்தது. ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் மகன் ஹம்து, இரவில் தம் அன்னையுடன் இருந்துவிட்டு பகலில் அச்சிறை இல்லத்திற்கு வந்து தம் தந்தையுடன் இருப்பது வழக்கமாக இருந்தது.

ஓரிரவு சிறைக் காவலர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சிறை வைக்கப் பட்டிருந்த அறையைக் காவல் செய்வதற்காக வந்தபொழுது, அவர் களுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கும், திகிலுக்கும் அளவில்லை. அப்படி அவர்கள் அங்கு என்ன கண்டார்கள்? ஹல்லாஜ் எங்கே? என்று ஒருவர் காதோடு மற்றொருவர் பேசிக் கொண்டார்கள். ஆனால், ஹல்லாஜ் எங்கே என்பது தான் ஒருவருக்கும் தெரியாத புதிராக இருந்தது. எனவே ஊமையன் கனவு கண்டது போன்று, அதனை எவரிடமும் எடுத்துரைக் காது, உள்ளுக்குள் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். எனினும் அவர்களின உள்ளின் உள்ளே மட்டும் ஹல்லாஜ் தப்பி ஓடக்கூடியவரல்லர். ஒருவேளை அவர் வெளியே சென்றிருந்த போதினும், திரும்பச் சிறைக்கு வந்து விடுவார் என்ற எண்ணம் மிகைத்திருந்தது.

பொழுது புலர்ந்தது. எனினும் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைச் சிறையில் காணவில்லை. "என்ன இஃது புதுமையாக இருக்கிறது? எங்கே அந்த மனிதர் போய்த்தொலைந்தார்? எப்பொழுது திரும்பி வருவாரோ தெரியவில்லையே". என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

பொழுது பட்டது. மீண்டும் சிறைக்காவலர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைத் தேட முற்பட்டார்கள். ஆனால் என்ன விந்தை! "சென்ற இரவு ஹல்லாஜைத் தான் காணவில்லை. இன்றிரவு அவர் சிறை வைக்கப்பட்டிருந்த அறையையே காணோமே. எங்கே அவர்? எங்கே அவர் சிறை வைக்கப்பட்டிருந்த அறை?" என்று ஒருவர் மற்றொருவரைக் கேட்ட வண்ணம் அங்குமிங்கும் தேடியும் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களையும் காணவில்லை. அவர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த அறையையும் அவர்கள் காணவில்லை.

இப்பொழுது தான் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் மகாத்மியம் அவர்களுக்குத் தெரியவந்தது. சிலர் கூறுவதுபோன்று, அவர் பைத்தியக் காரருமல்ல, மார்க்க விரோதியுமல்ல. இறைவனின் அருள்நேசர் என்ற உண்மையை அவர்கள் உணரலானார்கள், எனவே, 'அவர் நம்மைத் தவிக்க விட்டு ஒருபோதும் தப்பித்துச் சென்று விடமாட்டார். அவர் அங்கேதான் இருப்பது நம்முடைய ஊனக்கண்களுக்குத் தெரியவில்லை' என்று அவர்கள் பேசிக் கொண்டார்கள்.

பொழுது புலர்ந்தது எனினும் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களையும் காணவில்லை. அவர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த அறையையும் காணவில்லை. என் செய்வது என்று அறியாது அவர்கள் விழித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் இதயம் திகிலால் படக், படக்கென்று அடித்துக் கொண்டிருந்தது.

கதிரவன் மேற்றிசையில் மறைந்ததும், ககன வெளி முழுவதும் மலர்தூவப் பெற்றது போன்று, விண்மீன்கள் மின்னின திடீரென ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சிறையில் காணப்பட்டார்கள்.

அவர்களைக் கண்டதும், சிறைக்காவலர்களுக்கு உயிர் வந்தது போன்றிருந்தது. எனினும் தாங்கள் காண்பது கனவா அல்லது நனவா என்பதை அறியாது, அவர்கள் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தார்கள். நனவு தான் என்பதை உணர்ந்ததும், அவர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களிடம் சென்று "தாங்கள் இரண்டு இரவுகளாக எங்கே சென்றிருந்தீர்கள்? சென்ற இரவு இந்த அறையைக் கூடக் காணோமே' இஃதென்ன புதுமை! என்று கூறினர்.

அதற்கு அவர்கள், ''புதுமையா? பூ! இதில் என்ன புதுமை உள்ளது? முதல் நாள் இரவு இறைவனின் திருச்சந்நிதானத்தில் வீற்றிருந்தேன். எனவே நீங்கள் என்னை இங்குக் கண்டிருக்க மாட்டீர்கள். இரண்டாம் நாள் இரவு இறைவனே இங்குத் தரிசனம் தந்தான். எனவே என்னை நீங்கள் கண்டிருக்க மாட்டீர்கள். நான் அடைக்கப்பட்டிருந்த அறையையும் நீங்கள் கண்டிருக்கமாட்டீர்கள். இப்பொழுது ஷரீ அத்தைப் பாதுகாப்பதற்காக மீண்டும், இங்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளேன். எனவே இங்கு வந்துள்ளேன்'' என்று அவர்கள் அமைதியாகப் பதிலுரைத் தார்கள்.

அவர்கள் ஓராண்டு காலம் சிறையில் வைக்கப்பட்டிருந்தார்கள். அந்த ஓராண்டு காலமும் அவர்கள் நாளொன்றுக்கு ஆயிரம் 'ரக்அத்' கள் வீதம் தொழுது வந்தார்கள், அப்பொழுது அவர்களைக் காண வந்த மக்கள், ''தாங்கள் தாம், தங்களை இறைவன் என்று கூறுகிறீர்களே. பின்னர் எவருக்காக இத்தொழுகையைத் தொழுகின்றீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''என்னுடைய மகத்துவத்தை நான் ஒருவனே நன்கு அறியேன். நேசனும் நானே; நேசிக்கப்படுபவனும் நானே! தொழுபவனும் நானே; தொழப்படுபவனும் நானே. 'அனல் ஹக்' அனல் ஹக்' ' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

அப்பொழுது அவர்கள் அளவற்ற பொறுமையுடன் துன்பங்களை நுகர்ந்து வருவதைக் கண்டு வியப்புற்று ஒருவர், ''பொறுமை என்றால் என்ன?'' என்று வினவிய பொழுது, ''ஒருவன் தன் கைகளைக் கொடு வாளால் வெட்டுவதற்கு நீட்டுவதும், கழு மரத்தில் ஏற்றப்படினும், அமைதி குலையாது மௌனமாக இருப்பதும் ஆகும்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். அதுகேட்டு, கேள்வி கேட்டவருக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு அளவில்லை.

இந்த விநோத மனிதரைக் காண்பதற்காக, மக்கள் சாரி சாரியாகச் சிறைசாலைக்கு வரத் துவங்கவே, எவரும் அவர்களைக் காணச் சிறைச் சாலைக்குச் செல்லக் கூடாது என்று கண்டிப்பான உத்தரவிட்டார் கலீபா. எனவே, அவர்கள் சிறை செய்யப்பட்ட ஐந்து தினங்களுக்குப் பின், அவர்களை இருவரேயன்றி, வேறு எவரும் வெளியிலிருந்து சென்று காண வில்லை. அவர்களில் ஒருவர் இப்னு அதா; மற்றொருவர் இப்னு அபீஃப்.

இப்னு அதா, சிறைக் கூடத்திற்குள் நுழைந்ததும், ஆங்கு வீற்றிருந்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் அவல நிலையைக் கண்டு கண்ணீர் விட்டு, ''ஷைகு அவர்களே! ஏன் வீணே துன்புறுகிறீர்கள்? தாங்கள் மொழிந்தது தவறு என்று கூறி விடுங்கள்! தாங்கள் விடுதலைசெய்யப்படுவீர்கள்'' என்று கூறினார்.

அதுகேட்ட ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், ''இப்னு அதா! என்னிடம் இதைப்பற்றிக் கூறி என்ன பயன்? அதனை மொழிந்தவனிடமே, அதுபற்றி மன்னிப்புக் கேட்குமாறு கூறும்'' என்று பதிலிறுத்தார்கள்.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் உளத்திண்மை, அவர்கள் மீது இப்னு அதாவுக்கு இருந்த மதிப்பைப் பன்மடங்கு உயரச் செய்தது. வெளியே வந்த அவர், தம் நண்பர்களிடம் இதனை எடுத்துரைத்து, ''நாம் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் கால் தூசிக்குக் கூடச் சமமாக மாட்டோம்'' என்று கூறினார்.

அடுத்து இதோ இப்னு அபீஃப் தாம் சிறைக்கூடம் சென்று, ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைச் சந்தித்த விவரத்தைக் கூறுகிறார். நாமும் கேட்போம்.

''மக்கா சென்று 'ஹஜ்'ஜு செய்து விட்டு ஊர் திரும்பும் வழியில், பக்தாது வந்து சேர்ந்தேன். அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைக் காண வேண்டுமென்ற ஆசை என் உள்ளத்தில் மிகைத்தது. அக்காலை ஒருவரும் அவர்களைச் சந்திக்க அனுமதிக்கப்படவில்லை என்று கேள்விப்பட்டேன். எனினும் மனம் தளராது, எனக்குத் தெரிந்த ஒரு போர் வீரரை அணுகி, அவரிடம் என் வேணவாவை எடுத்துரைத்தேன். அவர் எனக்காகச் சிறைக்காவலனிடம் பரிந்துரைத்தார். அவன் உயர் அதிகாரிகளுடன் சேர்த்து உள்ளே அழைத்துச் சென்றான். நானும் எவருக்கும் தெரியாமல் கும்பலோடு கும்பலாக உள்ளே சென்றேன். சிறைக்குள் சென்றதும், சுவரில் புதிதாக வைக்கப்பட்ட ஒரு வாசலை சிறைக் காவலன் என்னிடம் காட்டி 'அதன் வழியே செல்லும்' என்று கூறிச் சென்று விட்டான்.

''நான் உள்ளே சென்றேன். அங்கு நஸரினால் கட்டப்பட்ட ஒரு விசாலமான கூடம் இருந்தது. அதில் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. அதன் நாலாபக்கங்களிலும் தங்க ஜரிகையாலான திரைகள் தொங்கிக் கொண்டிருந்தன. ஓர் இளவலும், ஒரு வயோதிகரும் அங்கு வீற்றிருந்தார்கள். வயோதிகரைப் பார்த்தால் ஊழியர் போன்று தோன்றியது. அவர்கள் இருவரும் என்னைக் கண்டதும், எழுந்து நின்று வரவேற்று அமருமாறு கூறினார்கள்.

அதன்பின் அவர்கள் என்னை நோக்கி, ''வெளியிலிருந்து பார்வையாளர்கள் இங்கு வந்து வெகு நாட்களாகின்றன. சிறைக்காவலர்களைத் தவிர்த்து, வேறு எவரும் இங்கு வருவதில்லை'' என்று கூறினார்கள்.

''ஷைகு அவர்கள் எங்கே?'' என்று நான் வினவினேன்.

''அவர்கள் வேலையில் ஈடுபட்டுள்ளார்கள்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

''அவர்களுக்கு இங்கு என்ன அத்துணை அபாரமான வேலை'' என்று நான் வியப்புடன் கேட்டேன்.

''அதற்கு அவர்கள், ''தாங்கள் வந்தீர்களல்லவா? அதுவே இங்கிருந்து பொதுச்சிறைக்குச் செல்லும் வழி. ஷைகு அவர்கள் அவ் வழியே தான் பொதுச் சிறைக்குச் சென்றுள்ளார்கள். அங்குத்தான் திருடர்கள், கொலையாளிகள், போக்கிரிகள், கொள்ளைக் கூட்டத்தினர் ஆகியோர் சிறைவைக்கப்பட்டுள்ளனர். அவர்களிடம் சென்று அறிவுரை பகர்ந்து, அவர்களை நேர்வழிப்படுத்துவதற்காக அவர்கள் சென்றுள் ளார்கள். அவர்கள் அனைவரும் ஷைகு அவர்களின் அறிவுரை கேட்டு, இறைவனிடம் பாவமன்னிப்பு இறைஞ்சி நல்லவர்களாக மாறி விட்டனர்'' என்று கூறினார்கள்.

''இவ்வாறு நாங்கள் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுதே, ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும் அங்கு வந்து விட்டார்கள். அவர்களின் திருமுகத்தை நான் ஏறிட்டுப் பார்த்தேன். அதில் அருட்களை ததும்பிக் கொண்டிருந்தது. அவர்கள் தூய வெண்ணிறக் கம்பளி உடை அணிந் திருந்தார்கள். எங்களின் அருகே வந்து, எங்களோடு சோபாவில் அமர்ந் தார்கள்.

''பின்னர் அவர்கள் என்னை ஏறிட்டுப்பார்த்து, எனக்கு ஸலாம் உரைத்து 'தங்களுக்கு எந்தஊர்?'' என்று வினவினார்கள்.

'ஷீராஸ்' என்று பதிலுரைத்தேன்.

''அப்பொழுது அவர்கள் ஷீராஸில் வாழ்ந்து வந்த பல ஷைகுமார் களைப் பற்றியெல்லாம் விசாரித்தார்கள். நான் என்னால் இயன்றவரைப் பதிலுரைத்தேன்.

'அதன் பின் அவர்கள், தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று வினவினார்கள்.

''மக்காவிலிருந்து '' என்று கூறினேன்.

அப்பொழுது அவர்கள் என்னிடம் மக்காவில் வாழ்ந்து வரும் ஷைகு மார்களைப் பற்றியெல்லாம் விசாரித்தார்கள். அதன்பின் அவர்கள் என்னை நோக்கி, 'பக்தாது ஷைகுமார்களில் எவரையேனும் தாங்கள் பார்த்திருக் கிறீர்களா?'' என்று வினவினார்கள்.

நான், 'ஆம்' என்றேன்.

''அப்படியானால் அப்பாஸ் இப்னு அதாவைத் தாங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவர் எப்படி உள்ளார்?'' என்று அவர்கள் வினவினார்கள்.

''அதற்கு நான், 'பார்த்துள்ளேன். அவர்கள் நலமாக உள்ளனர்' என்று பதிலிறுத்தேன்.

''நல்லது; அவரைத் தாங்கள் மீண்டும் பார்க்க நேரிடின், அந்தக் கையெழுத்துப் பிரதிகள்ளையெல்லாம் பத்திரமாக வைத்திருக்குமாறு நான் கூறியதாகச் சொல்லுங்கள்' என்று கூறிய அவர்கள் மீண்டும், என்னை நோக்கி, ''தாங்கள் எவ்வாறு இங்கு வந்தீர்கள்?'' என்று வினவினர்.

''ஷீராஸில் எனக்குத் தெரிந்த ஓர் இராணுவ வீரரின் உதவியால் இங்கு வந்தேன்'' என்று நான் விடையிறுத்தேன்.

''இப்பொழுது சிறைக்காவலன் திடீரென உள்ளே வந்தான். அதன் காரணமாக எங்களின் உரையாடல் தடைப்பட்டது. அவன் பயத்துடன் நடுங்கிக் கொண்டு வந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு முன்பிருந்த தரையை முத்தமிட்டான்.

''என்ன சங்கதி? ஏன் இவ்வாறு செய்கிறாய்!'' என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் வினவினார்கள்.

''அதற்கு அவன் ' என்னைப் பற்றி எவரோ கலீபாவிடம் புகார் கூறி இருக்கின்றார்கள். நான் சிறையிலிருந்த இளவரசனை தப்பியோட விட்டு அவனே போன்று உருவமைந்த ஒருவனைச் சிறையில் வைத்துக் காவல் காத்துக் கொண்டிருக்கிறேனாம். இப்பொழுது என் பதவிக்கு மட்டுமல்ல, என் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டுள்ளது' என்று அழாக்குறையாகக் கூறினான்.

''போ! ஒன்றிற்கும் கவலைப்பட வேண்டாம்! அல்லாஹ் காத்தருள் புரிவான்'' என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அவனுக்கு ஆறுதல் கூறியனுப்பினார்கள்.

''அவன் சென்றதும், ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் எழுந்து கூடத்தின் மத்திய பாகத்திற்குச் சென்று அமர்ந்து, ' யா ரப்பீ'' என்று கூறியவண்ணம் தரையிலே விழுந்து சுஜூது செய்து அழுதார்கள். கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடித் தரையை நனைத்தது. நெடுநேரம் சுஜூதிலேயே கிடந்தார்கள்.

அப்பொழுது சிறைக்காவலன் மீண்டும் வந்ததும் ''என்ன செய்தி?'' என்று குப்புறக் கிடந்த நிலையிலேயே அவனிடம் வினவினார்கள்.

''கலீபா என்னை மன்னித்து விட்டார்'' என்று மூச்சுத் திணறக் கூறினான்.

இப்பொழுதுதான் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தலையைத் தரையிலிருந்து உயர்த்தினார்கள்.

''எழுந்து, தாம் முன்பிருந்த இடத்திற்குச் சென்று அமர்ந்து, 'கலீபா என்ன கூறினார்?' என்று அவனை நோக்கி வினவினார்கள்.

''உன்னைச் சிரச்சேதம் செய்வதற்காகவே அழைத்து வரச் சொன்னேன். அதற்குள் என் மனம் மாறிவிட்டது. உன்னை இந்தத் தடவை மன்னித்தேன். இனிமேல் இவ்விதம் நிகழா வண்ணம் எச்சரிக்கையாக இரு'' என்று கூறினார்.

''அப்பொழுது நான் கலீபாவை நோக்கி, 'இறை நம்பிக்கையாளரின் தலைவ! எவரோ கெடுமதி படைத்தோர் என்னைப் பற்றி வீண் புரளியைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள்' என்று வினயமாகக் கூறினேன்.

''அது கேட்டு மகிழ்ந்த கலீபா, எனக்குக் கௌரவ உடையும் அன்பளிப்புகளும், பணமும் தந்தார்'' என்று கூறி முடித்தான்.

''இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் பதினைந்து அடி நீளமுள்ள சோபாவின் ஒரு நுனியில் அமர்ந்திருந்தார்கள். அதன் அடுத்த நுனியில் அவர்களின் கைக்குட்டை கிடந்தது. அதனை எடுப்பதற்காக அவர்கள் தம் கையை நீட்டி அதனை எவ்விதச் சிரமமுமின்றி எடுத்துக் கொண்டார்கள். அவர்களின் கைதான் அவ்வளவு தொலைவுக்கு நீண்டதோ, அல்லது அவர்களின் கைக்குட்டை தான் அவர்களை நோக்கி வந்ததோ, நான் அறியேன். நான் அதைப் பார்த்ததும், இது போன்ற பலவற்றைக் கண்டு தான் அவர்களை, அவர்களின் எதிரிகள் மந்திரக்காரன் என்றும் மாயக்காரன் என்றும் கூறுகிறார்கள் என்று என் மனத்திற்குள் எண்ணிக் கொண்டேன்.

''பின்னர் அவர்களிடமிருந்து விடைபெற்று வெளியே வந்தேன். இப்னு அதாவைச் சந்தித்து அவர்கள் கூறிய செய்தியை அவரிடம் எடுத்துரைத்தேன். அப்பொழுது அவர் 'தாங்கள் மீண்டும் அவர்களை சந்திப்பின், அரசாங்கம் என்னைச் சிறை செய்த போதினும் நான் அந்த தஸ்தாவேஜுகளைப் பத்திரமான இடத்தில் வைத்துப் பாதுகாப்பேன் என்று கூறுங்கள்'' என்று சொன்னார்.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கோ சிறைச்சாலை, சிறைச்சாலையாக இல்லை. அது அவர்களுக்கு தவச்சாலையாகவே இருந்தது. அங்கு அவர்கள் தனியே வீற்றிருந்து கடுந்தவம் செய்து கொண்டிருந்தார்கள். சில பொழுது ஆனந்தப் பரவசமுறுங்கால், அவர்களின் வாய் அவர்களறியாமல் 'அனல் ஹக், அனல் ஹக்' என்று முழங்கியது. மற்ற வேளைகளில்

அவர்கள் இறைவனை அமைதியாக வீற்றிருந்து துதித்துக் கொண்டிருந் தார்கள்.

"இறைவ எம் பெரும! காத்தாலும் நீயே, கைவிட்டாலும் நீயே! உன்னையன்றி எனக்குக் கதியும் இல்லை; விதியும் இல்லை. உன் எண்ணமேயன்றி என் உள்ளத்தில் வேறு யாதொன்றும் இடம் பெறவில்லை. உன் மீது ஏற்பட்ட அணையாக் காதலால், என் உடலும் உள்ளமும் ஒருங்கு சேர்ந்து தகிக்கின்றன. இனிமேல் உன்னைப் பிரிந்து என்னால் ஒரு கணமும் இருக்க இயலாது. எனவே உன்னையும் என்னையும் பிரித்து வைக்கும் திரையை நீக்கு; நீக்கு! நான் உன்னை விரைவில் அடைய விரும்புகின்றேன். அம்முயற்சியில் நான் கழுமரம் ஏறவும் தயாராயுள்ளேன்" என்று கூறிக் கண்ணீரும் கம்பலையுடனும் இறைஞ்சினார்கள்.

இக்காலை அவர்கள் ஓரிரவு அயர்ந்து உறங்கும் பொழுது, அற்புதக் கனவொன்று கண்டார்கள். அண்ணலெம் பெருமான் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் தம் அன்புத் தோழர் புடைசூழ, ஒரு கூடாரத்தில் வீற்றிருக்கின்றார்கள். அப்பொழுது அக்கூடாரத்திலுள்ள ஒரு துளை வழியாகக் கதிரவனின் கதிர்கள் உள்ளே பாய்கின்றன. அதனால் உள்ளே இருப்பவர்களுக்குப் பெரிதும் சிரமம் ஏற்படுகிறது. அத் துளையை அடைக்க அவர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், அவர்களை நோக்கி, 'மன்சூரின் தலையைக் காவு கொடுக்காத வரை அத்துளையை எவராலும் அடைக்க இயலாது. எஞ்ஞான்றும் அடைக்க இயலாது" என்று கூறுகிறார்கள்.

அது கேட்டு ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தப் பரவசத்திற்கு அளவில்லை. 'ஒரு தலையென்ன, ஓராயிரம் தலை எனக் கிருப்பினும், அவற்றை அல்லாஹ்வின் பாதையில் அர்ப்பணம் செய்யத் தயாராயுள்ளேன். இத்தியாகத்தை நண்பனுக்காக, நண்பன் செய்வது என்ன பெரிய காரியமா?" என்று கூறி மகிழ்ச்சிக் கூத்தாடினார். அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் "மன்சூர் ஒரு மெய்க்காதலர்" என்று அமுதவாய் திறந்துஅருளினார்கள்.

இக்கனவு கண்டு விழித்தெழுந்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் உள்ளம் உவகையால் பூரித்தது. தமக்கு அண்ணலம்பெருமான் (ஸல்) அவர்களின் நற்சான்று கிடைத்தது அவர்களுக்கு முன்னைவிட அளவற்ற மகிழ்வை நல்கியது. எனவே முன்னைவிட, உக்கிரமாக 'அனல் ஹக், அனல் ஹக்' என்று முழங்கத் துவங்கிவிட்டார்கள். அப்பொழுது சிறைச் சுவர்களும், சுற்றுச் சார்புகளும் 'அனல் ஹக், அனல் ஹக்' என்று எதிரொலி செய்தன.

இவ்வாறு சிறைச்சாலை முழுவதும் 'அனல் ஹக், அனல் ஹக் என்ற சொற்களே எதிரொலித்துக் கொண்டிருக்கும் பொழுது, வெளியே என்ன நடந்து கொண்டு வருகின்றது என்பதைப் பார்ப்போம். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு விரோதமான கிளர்ச்சி நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. அவர்களை எவ்வாறாவது கழுவிலேற்றி விட வேண்டும் என்று சில விஷமிகள் கங்கணம் கட்டிக் கொண்டு முனைந்து நின்றார்கள். அவர்கள் அனைவரும் ஒருங்கு திரண்டு, அச்சமயம் அரசாங்க முஃப்தியாக இருந்த அல்லாமா அபுல் அப்பாஸ் இப்னு ஸுரைஜ் அவர்களை அணுகி, ''தாமே இறைவன் என்று அல்லும் பகலும் அலறிக் கொண்டிருக்கும் ஹல்லாஜைப் பற்றித் தங்கள் கருத்தென்ன?'' என்று வினவினர். முதலில் அவர்கள் யாதொரு கருத்தும் கூற மறுத்து விட்டார்கள். எனினும் அவர்கள், அப்பெரியாரை வெறுமனே இருக்கவிடவில்லை. அயராது அவர்களை நச்சரிக்க, யாது செய்வதென அறியாது திணறிய அவர்கள், ''அவர் பற்றி என்ன கூறுவதென்றே எனக்குத் தெரியவில்லை. அவர் பற்றி யாதும் கூற நான் இயலாதவனாயுள்ளேன்'' என்று கூறித் தம் ஆற்றாமையை வெளிக் காட்டினார்கள்.

எனினும் விஷமிகள் அயரவில்லை. அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸை அணுகி ஹல்லாஜுக்கு எதிராக உடனே தீவிர நடவடிக்கை எடுக்குமாறும், இனிமேலும் ஒய்ந்திருக்க வேண்டாமென்றும் கூறினர். ஹல்லாஜ் தாமே இறைவன் என்று கூறி மக்கள் திரளை ஒருங்கு சேர்த்து அரசாங்கத்திற்குள் அரசாங்கத்தை ஏற்படுத்த அந்தரங்கத்திலே ஆசைப் படுகிறார் போல் தெரிகிறது. இது எங்களுடைய கணிப்பு. அவருடைய செயலை வளர விட்டுக் கொண்டு சென்றால், அரசாங்கத்திற்கே பேர பாயம் ஏற்பட்டு விடும். எனவே வரு முன்னர் காப்பதே அறிவுடைமை'' என்று அபாய ஒலி எழுப்பினார்கள். இது அமைச்சர், ஹல்லாஜ் மீது கொண்டிருந்த காழ்ப்புக்கும் பகைமைக்கும் தூபம் போட்டது போன்றிருந்தது.

உடனே வீறிட்டெழுந்த அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் மார்க்க விற் பன்னர்களை அணுகி, ''ஹல்லாஜ் இறைவனுக்கும் அரசாங்கத்திற்கும் எதிராகப் புரட்சிக் கொடி தூக்கிவிட்டார். எனவே அவரைக் கொன்றொழிப்பதே முறைமை; எனவே அவ்வாறு நீங்கள் தீர்ப்பு நல்குங்கள்! அடுத்த கணம் நான் அவரைக் கழுவிலேற்றிவிட்டு மறுவேலை பார்க்கிறேன்'' என்று கூறினார்.

மார்க்க விற்பன்னர்கள் பல நாட்கள் கூடி ஆலோசனை கலந்தார்கள். அவர்களுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. திகைத்தார்கள், திணறினார்கள், விழித்தார்கள், வாய்மூடி மௌனம் சாதித்தார்கள்.

இதற்கிடையில் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு விரோதமான விஷமிகளின் கிளர்ச்சி நாளுக்கு நாள் வலுப்பட்டுக் கொண்டு வந்தது. ''அவரைக் கொன்றொழிக்குமாறு 'ஃபத்வா' கொடுங்கள்! இல்லையேல் நாங்கள் உம்மைக் கொன்றொழித்து விடுவோம்' என்று அவர்கள் கூக்குரலிட்டார்கள், அப்பொழுது மார்க்க விற்பன்னர்கள், அவர்களை நோக்கி, ''அவர் ஷரீஅத்துக்கு விரோதமாக எழுதிய ஏதாவதொன்றைச் சான்றாகக் காட்டாத வரையில், நாங்கள் அவர் மீது கொலைத் தண்டனை விதியோம்'' என்று கூறினார்கள்.

இப்பொழுது சிறையிலே நூதன சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. ஓரிரவு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் ஆங்குச் சிறை வைக்கப்பட்டிருந்த முந்நூறு கைதிகளையும் நோக்கி, ''நான் உங்களை விடுதலை செய்யவா?'' என்று வினவினர். அது கேட்ட கைதிகள், ''எங்களை விடுதலை செய்வதாகக் கூறும் நீங்கள் ஏன் முதலில் உங்களையே விடுதலை செய்து கொள்ளக் கூடாது?'' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், ''நானோ இறைவனின் கைதி. நீங்களோ கலீபாவின் கைதிகள். நீங்கள் விரும்பின் உங்களை விடுதலை செய்து விடுகிறேன்'' என்று கூறினர்.

''எவ்வாறு?'' என்று அவர்கள் வினவினார்கள்.

''இவ்வாறு தான்'' என்று கூறி அவர்கள் தம் சுட்டு விரலால் சாடை செய்தனர். அடுத்த கணம் அவர்களைப் பிணைத்திருந்த தளைகளெல்லாம் சுக்கு நூறாகத் தெறித்துச் சிதறின. அது கண்டு கைதிகளுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

''நல்லது, கதவு பூட்டப்பட்டுள்ளதே. நாங்கள் எவ்வாறு வெளியே செல்வோம்?'' என்று அவர்கள் வினவினார்கள்.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தங்களின் சுட்டுவிரலை மீண்டும் அசைத்தார்கள். சிறைச் சுவர் ஒன்று மெதுமெதுவாகப் பிளந்தது. அதனை அவர்கள் சுட்டிக்காட்டி, ''இதன் வழியே செல்லுங்கள்!'' என்று கூறினர்.

''தாங்களும் வரவில்லையா?'' என்று கைதிகள் வினவினார்கள்.

''இல்லை, எனக்கும் இறைவனுக்கும் இடையே ஓர் இரகசியம் இருக்கிறது. அதனை நான் தூக்குமேடையில் வைத்து வெளியிட வேண்டும். நான் இறைவன் கைதி. அவனே என்னுடைய எசமானன். நான் அவனுடைய வேதக்கட்டளைகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

இதன்பின் அச்சிறையிலிருந்து முந்நூறு கைதிகளும் அப்பிளவின் வழியே வெளியேறி ஓடினார்கள்.

கைதிகள் அனைவரும் தப்பி ஓடிய செய்தி விடிந்தபின் தான் சிறைக்காவலர்களுக்குத் தெரியவந்தது. அவர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை அணுகி ''எங்கே கைதிகள்?'' என்று வினவினர். 'அவர்களை நான் விடுதலைசெய்துவிட்டேன்' என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அமைதியாகப் பதிலிறுத்தார்கள். ''அவ்விதமாயின் தாங்கள் ஏன் செல்ல வில்லை?'' என்று அவர்கள் வினவினர். அதற்கு அவர்கள், ''என் எச மானன் என்னோடு கோபமாக இருக்கிறான். எனவே தான் எனக்கு இத்தண்டனை விதித்துள்ளான். எனவேதான் நான் எங்கும் போகாது இங்கேயே இருக்கிறேன்'' என்று பதில் மொழிந்தார்கள்.

இச்செய்தி கலீபாவுக்கு எட்டியதும், அவருக்குக் குலைநடுக்கம் ஏற்பட்டது. ''இனிமேல் நாடெங்கணும் அராஜகம் நிலவுமே, என் செய்வது? என்று அவர் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸுடன் ஆலோசனை கலந்தார். ''ஹல்லாஜைக் கொன்றொழிப்பதே இனிச் செய்ய வேண்டிய வேலை'' என்று கட்டளையிட்டார் கலீபா.

விரைவில் மார்க்க விற்பன்னர்களின் பேரவை கூட்டப்பட்டது. அதிலே மார்க்க விற்பன்னர்கள் தங்கள் தங்களின் கருத்துக்களை வன்மையுடன் எடுத்துரைத்தார்கள். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும் ஆங்குக் கொணரப்பட்டு விசாரிக்கப்பட்டார்கள். அப்பொழுது அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் தம் சட்டைப் பையிலிருந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் தம் கைப்பட்டு எழுதிய கடிதம் ஒன்றை எடுத்து ''இது நீர் எழுதியது தானா?'' என்று வினவினார்.

அதனை வாங்கிப் பார்த்த ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், ''ஆம்; அது நான் எழுதியது தான்'' என்று திடமாக மறுமொழி பகர்ந்தார்கள்.

அதிலே அருளாளனும் அன்புடையோனுமாகியவனிடமிருந்து இன்னாருக்கு எழுதப்பட்டது என்று குறிப்பிட்டுள்ளீரே, அவ்விதமாயின் இறைத்துவம் உமக்கு உண்டு என்று கூறுகிறீரா?'' என்று வினவினார் அமைச்சர்.

''அவ்விதம் நான் கூறவில்லை. ஆன்மீக நிலையின் சாரமே அதுதான். எழுதுகின்றவன் இறைவன் தானே. மனிதனின் கை இறைவன் பயன்படுத்தும் ஒரு கருவியைத் தவிர வேறென்ன?'' என்று பதிலிறுத் தார்கள் அவர்கள்.

''உம்முடைய இக்கருத்தை ஏற்றுக் கொள்வார் எவரேனும் உண்டா?'' - இது அமைச்சரின் அடுத்த கேள்வி.

''ஏன் இல்லை? இப்னு அதா இருக்கிறார். அபூ முஹம்மது அல் ஜுரைரீ இருக்கிறார். அபூபக்ர் ஷிப்லீ இருக்கிறார். ஆனால் முதலாமவர் என் கருத்தை முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்வார். மற்ற இருவரும் மனத்திற்குள் என் கருத்தை ஏற்றுக் கொண்ட போதினும், வெளியிலே எடுத்துரைக்கத் தயங்குவர்'' என்று கூறினர்.

இதன்பின் அல் ஜுரைரி ஆங்கு வரவழைக்கப்பட்டு இது பற்றி விசாரிக்கப்பட்டார்.

''இவ்விதம் கூறுபவர் ஓர் இறை மறுப்பவர் (காஃபிர்) ஆவார். அவர் கொல்லப்பட வேண்டும்'' என்று கூறினார் அல் ஜுரைரி.

பின்னர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அழைத்து வரப் பெற்று விசாரிக்கப்பட்டார்கள்.

''இவ்வாறு கூறாது தடுத்து நிறுத்தப்பட வேண்டும்'' என்று அவர்கள் பட்டும் படாதது போல் பதிலுரைத்தார்கள்.

மூன்றாவதாக இப்னு அதாவை விசாரித்த பொழுது, ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கூறியதை ஒப்பினார் அவர்.

இதன்பின் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் எழுந்து, அரசாங்க எழுத்தர் இப்னு ஸஞ்சியின் தந்தையின் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்து ''இதனை எல்லோரும் கேட்கும் வண்ணம் உரத்து சப்தமிட்டுப் படியுங்கள்!'' என்று கூறினார். அவரும் அவ்வாறே இதோ படிக்கிறார்.

''ஹஜ்ஜு கடமையான ஒரு மனிதன், ஹஜ்ஜுக்குச் செல்ல விரும்பி, ஏதோ காரணங்களால் செல்ல இயலவில்லையாயின், அவன் தன் இல்லத்தின் ஒரு மருங்கில் சதுரவடிவமான ஓர் இடத்தை ஒதுக்கி, அங்கு எவரும் செல்லாமலும், அங்கு எத்தகைய அசுத்தமும் ஏற்டாமலும், பேணுதலாகப் பாதுகாத்து வரவும். ஹஜ்ஜுடைய நாட்கள் வந்ததும், அவன் அந்த இடத்தைச் சுற்றி வருவதோடு, மக்காவில் எந்த எந்த இடங்களில், எந்த எந்த ஹஜ்ஜுக் கிரியைகளைச் செய்ய வேண்டுமோ, அத்தனை ஹஜ்ஜுக்கிரியைகளையும் அங்கேயே செய்யவும். அதன்பின் தம் இல்லத்தில் நல்ல அருசுவை உண்டி தயாரித்து, முப்பது அநாதைக் குழந்தைகளை அழைத்து வந்து, தாமே உணவு பரிமாறி விருந்து செய்து, அவர்கள் விருந்துண்டு முடிந்ததும், தாமே அவர்களின் ஊழியன் போன்று அவர்களின் கைகளைக் கழுவிவிட்டு அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு சட்டையும், ஏழு திர்ஹங்களும் அன்பளிப்புச் செய்து அனுப்பி வைக்கவும். இது மக்கா சென்று 'ஹஜ்'ஜு செய்வதற்குப் பகரமாக அமையும்.''

இதைக் கேட்டு அனைவருடைய புருவங்களும் மேலேறின; சிலருடைய கண்கள் சினத்தால் சிவந்தன. அப்பொழுது மாலிக் மத்ஹபின் காஜி அபூ உமர், ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை உக்கிரத்துடன் நோக்கி, ''இதனை நீர் எங்கிருந்து கற்றீர்'' என்று வினவினார்.

''ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் எழுதிய வணக்கம் பற்றிய நூலிலிருந்து கற்றேன்'' என்று மறுமொழி பகர்ந்தார் அவர்கள்.

அதுகேட்டுச் சீறிச் சினந்த காஜி அபூ உமர், 'காஃபிர்! பொய் கூறு கின்றாய். உன்னை இப்பொழுது கொல்லுவது சட்டப்படி ஆகும். நானும் மக்காவில் ஓதிக் கொண்டிருந்த பொழுது அந்நூலை ஓதியுள்ளேன். ஆனால் அதில் அப்படி ஒன்றும் எழுதப்பட்டிருப்பதை நான் பார்த்த தில்லையே' என்று கூறினார்.

காஃபிர் என்ற சொல் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸின் செவியில் விழுந்ததும், அவர் துள்ளிக்குதித்து ''அதனை அப்படியே தாளில் எழுதித்தாருங்கள்'' என்று கூறினார் அவர். ஆனால் காஜி அபூ உமரோ ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை விசாரணை செய்வதிலேயே, தம் முழுக் கவனத்தையும் செலுத்தியதால் அவர் கூறியதைக் கவனிக்க வில்லை.

இப்பொழுது ஃபகீஹ் அபூபக்ர் முஹம்மது இப்னு தாவூத் முன் வந்து ''அல்லாஹ், நபிக்கு இறக்கி வைத்தது உண்மையாயின் ஹல்லாஜ் கூறுவது தப்பும் தவறுமாகும்'' என்று தம் கருத்தைத் தெரியப்படுத்தினார்.

உடனே காஜி பஹ்லுல் குறுக்கிட்டு, ''அதனை எழுதியதனால் மட்டும் ஹல்லாஜைச் சிரச்சேதம் செய்ய இயலாது. அவர் அதுவே சரியான கொள்கை என்று ஒப்புக் கொள்ளவும் வேண்டும். அப்பொழுது தான் அவர் அத்தண்டனைக்கு உரியவராவார். தாம் என்னவோ அக்கொள்கையை எழுதவோ, எடுத்துரைக்கவோ செய்ததாகவும் எனினும் அக்கொள்கையில் தமக்கு நம்பிக்கை இல்லையென்றும் அவர் கூறிவிடின், அவரை அழைத்து, அதற்காக அவரைப் பாவமன்னிப்புக் கோரச் சொல்ல வேண்டும். அவர் அவ்விதமே செய்யின், அவர்மீது எவ்வித வழக்குமில்லை. அதற்கு மாறாக அவர் அவ்விதம் செய்ய மறுப்பின், அப்பொழுது அவர் சிரச்சேதம் செய்யப்பட வேண்டியவர் தாம்'' என்று தம்கருத்தை வெளியிட்டார். அப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் எதிரிகளுடைய முகத்தில் சிறிது வாட்டம் தென்பட்டது.

இவ்வாறு விசாரணையை வளர்த்திக் கொண்டே சென்று, விஷயத்தைக் குழப்பிக் கொள்ள அமைச்சர் விரும்பவில்லை. எனவே, அவர் நடுவே குறுக்கிட்டு, காஜி அபூஉமரை நோக்கி, ''தாங்கள் அவரை

ஒரு காஃபிர் என்றும், அவரைக் கொல்லுவது சட்டப்படி ஆகும் என்றும் கூறினீர்களல்லவா? அதனை ஒரு காகிதத்தில் எழுதித்தாருங்கள்'' என்று கூறினார்.

காஜி அபூ உமர் அவ்விதம் செய்து கொடுக்க முதலில் மறுத்தார். 'ஏதோ உணர்ச்சியில் அவ்வாறு கூறினேனே அன்றி ஆழ்ந்து சிந்தித்து அவ் விதம் கூறவில்லை'' என்று கூறி மழுப்பினார் அவர். எனினும் அமைச்சர் அவரை விடவில்லை. 'தாங்கள் சொல்லாததை நான் எழுதச் சொல்ல வில்லையே. ஆதலின் தயவுசெய்து அதனை எழுதிக் கைச்சாத்திட்டுத் தாருங்கள்' என்று மீண்டும், மீண்டும் வற்புறுத்தினார் அமைச்சர். வற்புறுத்தலுக்கு வழிப்பட்டு, அவ்வாறே எழுதித் தம் கைச் சாத்திட்டார் காஜி அபூ உமர். ஏனைய மார்க்க விற்பன்னர்களும் மறுபேச்சின்றி ஒருவர் பின் ஒருவராக வந்து அதில் கைச்சாத்திட்டார்கள்.

அப்பொழுது ஆங்கு நின்று கொண்டிருந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அந்த மார்க்க விற்பன்னர்களை நோக்கி, ''என்னைக் கசையால் அடிக்கவோ, என் இரத்தத்தைச் சிந்தவோ உங்களால் சட்டப்படி இயலாது. அவ்விதம் செய்ய உங்களுக்கு எவ்வித உரிமையுமில்லை. அவ்விதம் செய்வது நீதியுமல்ல. என்னுடைய இஸ்லாமிய வாழ்வு அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அழகிய வழிமுறையை (சுன்னத்தை) அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. நான் நாற்பெரும் கலீபாக்களையும், சுவனத்தைக் கொண்டு நன்மாராயம் பெற்ற பதின்மரையும், நான்கு இமாம்களையும் மதித்துக் கௌரவிக்கின்றவனே யன்றி வேறில்லை. மேலும் நான் நபியின் வழி முறையை (சுன்னத்தை)ப் பற்றி ஒரு நூல் எழுதியுள்ளேன். அதனை நீங்கள் படித்திருக்கலாம். புத்தகக் கடைகளிலும் அது விற்பனைக்கு உள்ளது. எனவே, என் இரத்தத்தை வீணே சிந்தாதுகாத்தருள் புரியுமாறு நான் இறைவனிடமே காவல் தேடுகிறேன்; நான் இறைவனிடமே காவல் தேடுகிறேன்'' என்று கூறினார்கள். எனினும் மார்க்க விற்பன்னர்களோ, அவர்கள் கூறுவதைச் சிறிதேனும் பொருட்படுத்தாது, அந்த 'ஃபத்வா'வில் கைச்சாத்திடுவ திலேயே மும்மரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

ஆனால் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் அதில் கையெழுத்திடாததைக் கண்ட மார்க்க விற்பன்னர்கள், அதில் கையெழுத்திடுமாறு அவர்களை வேண்டிக் கொண்ட பொழுது, ''அபுல் அப்பாஸ் இப்னு சுரைஜ் போன்ற சான்றோர்களே அவர் கூறுவது, சரியா, தவறா என்று தீர்மானிக்க இயலவில்லை என்று கூறியிருக்க, என் போன்றோரை அவருக்கு விரோதமாகக் கைச் சாத்திடுமாறு கூறுகிறீர்களே. இது நியாயமா?'' என்று கூறி நழுவி விட்டார்கள் அவர்கள்.

எனினும் பெரும்பாலான மார்க்க விற்பன்னர்களின் 'ஃபத்வா' வைப் பெற்றதும், திருப்தியுற்ற அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ், அதனை எடுத்துக் கொண்டு கலீபாவிடம் ஓடினார். அந்தப் ஃபத்வா முழுவதையும் படித்துப் பார்த்த கலீபா முக்ததிர்பில்லாஹ் அதில் ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களின் கைச்சாத்து இல்லாததைக் கண்டதும், அவர்கள் அதில் கைச்சாத்து இட்டலான்றித் தாம் அதில் கையெழுத்திட இயலாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

உடனே அந்த 'ஃபத்வா'வை எடுத்துக் கொண்டு, ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் விரைந்தோடிய அமைச்சர், அதில் கையெழுத்திடுமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டார். ஆனால் அவர்களோ அதில் கையெழுத்திடாது, காலம் தாழ்த்திக் கொண்டே சென்றார்கள். ஒருநாளல்ல, இரண்டு நாட்களல்ல, ஆறு மாதங்கள். இந்த ஆறு மாதங்களில், ஆறு தடவை அவர்களின் கையெழுத்தைப் பெறுவதற்காக அந்த 'ஃபத்வா' அவர்களிடம் அனுப்பி வைக்கப்பட்டும், அது கையெழுத்திடப் படாது திருப்பி அனுப்பப்பட்டது. ஏழாவது தடவை கலீபாவே அவர்களிடம் நேரில் வந்து, ''இதில் கையெழுத்திடுவதாயிருந்தால் கையெழுத் திடுங்கள். இல்லையெனில் 'முடியாது' என்று முடிவாகக் கூறிவிடுங்கள்! வெறுமனே இதனைக் கால வரையின்றி இழுத்துக் கொண்டே செல்ல வேண்டாம்! நீதி பகர்வதில் தாமதிப்பது அநீதி இழைப்பதேயாகும்'' என்று கூறினார்.

கலீபாவின் இந்தக் கண்டிப்பான உத்தரவைக் கேட்ட ஜுனைத் (ரஹ்) அவர்கள், யாது செய்வதென அறியாது சற்று நேரம் திகைத்தார்கள். அதன்பின் தாம் அணிந்திருந்த 'ஸூபி'களின் உடையைக் களைந்துவிட்டு உலமாக்களின் உடையணிந்து கொண்டு, 'ஷரீஅத்'' சட்டப்படி வெளிரங்க மாகப் பார்த்து, இந்த ''ஃபத்வா' வில் கைச் சாத்திடுகின்றேன். அவருடைய அந்தரங்கத்தை அல்லாஹ்வே அறிவான்'' என்று கூறி அதில் கைச் சாத்திட்டார்கள். இவ்வாறு முன்பொருநாள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் ஜுனைத் (ரஹ்) அவர்களுடன் தர்க்கம் செய்தபொழுது, செய்த முன்னறிவிப்பு உண்மையாகிறது.

ஆறு மாதங்களாக ஜுனைத் (ரஹ்) அவர்களின் கையெழுத்திற்காகக் காத்திருந்தும், இறுதியாக ஹல்லாஜ் (ரஹ்) அவர்களுக்கு நல்கப்பட்ட தீர்ப்பு சிறைத்தண்டனையல்ல; சிரச்சேதம்!

இதனையறிந்தும் அரண்மனை நிர்வாக அதிகாரி நஸர், கலீபாவின் அன்னை ஷகப்பிடம் ஓடிச் சென்று செய்தியை எடுத்துரைத்து, ''அம்மையே! தாங்கள் இதில் தலையிட்டுக் கொலை நிகழ்வதைத் தடுத்து நிறுத்துங்கள்! இல்லையெனில் தங்களின் அன்புத் திருமகன்

அல்லாஹ்வின் வெஞ்சினத்திற்கு ஆளாக நேரிடும்'' என்று அழுது கொண்டே கூறினார்.

நஸ்ர்கூறிய இச்சொற்கள் அம்மூதாட்டியை நடுநடுங்க வைத்தன. ஹல்லாஜ் கொல்லப்படப் போகிறார் என்பதைக் கேட்டா? இல்லை, இல்லை. ஹல்லாஜ் கொல்லப்படுவதன் காரணமாகத் தம் மகன் இறை முனிவுக்கு ஆளாகி, இறப்பைத் தழுவ நேரிடினும் நேரிடலாமே என்ற அச்சத்தின் காரணமாக.

தள்ளாடித் தள்ளாடித் தம் மகனின் அந்தப்புரத்தை அடைந்த அவர் தம் மகனைச் சந்தித்து, ''மகனே! முக்ததிர்! பத்துமாதம் உன்னைச் சுமந்து பெற்றுப் பாலூட்டி வளர்த்த உன் மாதாவின் வார்த்தையைக் கேள்! ஹல்லாஜ் ஓர் இறைநேசச் செல்வர். அவரை எவர் பேச்சைக் கேட்டோ நீ கொன்று விடாதே! கொன்றுவிடின் உன்னையும், நம் குலத்தையும் அவரைக் கொன்ற வாள் பழி தீர்த்துவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன்'' என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கூறினார். எனினும் கலீபா முக்ததிர் கேட்கவில்லை.

உடனே அவர் அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸுக்குப் பின் வருமாறு குறிப்பை எழுதி அனுப்பினார்.

''ஹல்லாஜைக் காவற்றுறை நிலையத்திற்கு அழைத்துச் சென்று, அவருக்கு ஆயிரம் கசையடிகள் கொடுக்கவும். அவற்றாலும் அவர் இறக்க வில்லையாயின், மீண்டும் அவருக்கு ஆயிரம் கசையடிகள் கொடுக்கவும். அவற்றாலும் அவர் இறக்கவில்லையாயின் அவரைச் சிரச்சேதம் செய்யவும்.''

இவ்வாறு எழுதியனுப்பிய சிறிது நேரத்திற்குள், அவருக்குக் கடுமையான சுரம் ஏற்பட்டது. அது கண்டு பயந்துபோன கலீபா, ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைத் தண்டிப்பதை ஒத்தி வைக்குமாறு அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸுக்கு அவசர ஆணை அனுப்பி வைத்தார். அதன்படி ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைச் சிரச்சேதம் செய்வது சில நாட்கள் ஒத்திவைக்கப்பட்டது.

இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் என்ன செய்து கொண்டிருக் கிறார்கள் என்பதைப் பார்த்து வருவோம். தமக்குச் சிரசாக்கினை விதிக்கப்பட்டதை அறிந்து, அவர்கள் சிறிதேனும் வருந்தவோ, துயருற வோ செய்யவில்லை. அதற்கு மாறாக இறைவன் விட்ட விதியைத் திருப்தியுடன் பொருந்திக் கொண்டவர்களாய்,

''என் இறைவனே! என் எசமானே!! உன் நாட்டம் எதுவோ அது நடக்கட்டும்!!!

''என்னுடைய குறிக்கோளே! என்னுடைய உட்பொருளே! உன்னுடைய நாட்டம் எதுவோ அது நடக்கட்டும்!!!

என்னுடைய உயிர்ச் சத்தே! என் ஆசையின் கனியே!

என்னுடைய பேச்சே! சாடையே!! சைக்கினையே!

என்னுடைய எல்லாமுமாக உள்ளவனே! என்னுடைய கேள்வியே! என்னுடைய பார்வையே!!

என்னுடைய அனைத்துமாக உள்ளவனே! என்னுடைய மூலப் பொருளே!! என் அணுவுக்குள் அணுவாக உள்ளவனே!!!

உன்னுடைய நாட்டம் எதுவோ அது நடக்கட்டும்!

இறைவனே! நான் உன்னுடைய காதலின் இனிய மூச்சையும், உன்னுடைய பிரசன்னத்தின் இனிய நறுமணத்தையும் நுகர்வதால், நான் நீண்டுயர்ந்த மலைகளையும், வானங்களையும் பூமியையும் துச்சமாகக் கருதுகிறேன். உன்னுடைய உள்ளமையின் மீது ஆணையாக, என்னுடைய ஒரு கண பரசவ நிலைக்குப் பகரமாகவோ, என்னுடைய கடைசித் தரத்தி லுள்ள ஆன்மீக நிலையின் மின்னொளிக்குப் பகரமாகவோ, சுவனத்தை நீ எனக்குத் தருவதாகக் கூறினும், நான் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டேன். நரக நெருப்பையும், அதிலுள்ள பல்வேறு துன்பச் சூழ்நிலை களையும் நீ என் கண்முன் காட்டிய போதினும், அவையெல்லாம் நீ உன்னை என்னிலிருந்து மறைத்துக் கொள்வதனால் எனக்கேற்படும் மனத்துயருக்கு முன் அணுவளாகவே படும்.

''எனக்கு விரோதமாகச் செயல்படும் அந்த மக்களை மன்னிப்பாயாக! ஆனால், என்னை மன்னிக்காதே! அவர்கள் மீது கிருபை கூர்வாயாக! ஆனால் என்மீது கிருபை கூர வேண்டாம். நான் எனக்காக வேண்டி உன்னிடம் இரக்கவோ, என் உரிமைகளை எடுத்துரைத்து உன்னிடம் இறைஞ்சவோ போதில்லை. உன் விருப்பம். உன் நாட்டமே என் நாட்டம். அது நடக்கட்டும்!'' என்று இதோ ஒருவர் இறைஞ்சிக் கொண்டுள்ளாரே. அவர் தாம் ஹல்லாஜா? ஆம். அவரே தாம். அவரைத்தவிர வேறு எவர் தாம் இவ்வாறு இறைஞ்சிக் கொண்டிருப்பார்கள்.

நாளாக, ஆக அமைச்சர் அப்பாஸுக்கு ஒரு நிலைக்கொள்ள வில்லை. ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைப் பற்றிய பிரச்சினையைக் கலீபா நிரந்தரமாக ஒத்திபோட்டு விடுவாரோ என்ற ஐயம் அவரின் உளத் திரையில் இலேசாக இரேகை விட்டது. அடுத்தகணம் அவரை யறியாமல், அவருடைய கால்கள், அவரைக் கலீபாவின் முன் கொண்டு வந்து நிறுத்தின. ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைக் கழுவிலேற்ற

வேண்டியதன் அவசரத்தையும், அவசியத்தையும் பற்றிக் கலீபாவிடம் வினயமாக எடுத்துரைத்தார் அமைச்சர். ஆனால் கலீபாவோ அவர் கூறியதைக் காது தாழ்த்திக் கேட்கவில்லை.

அப்பொழுது அமைச்சர் கலீபாவை நோக்கி, ''இறை நம்பிக்கை யாளரின் தலைவ! அந்த மனிதரைத் தாங்கள் கொன்றொழிக்காது வாழவிட்டீர்களானால், அவர் நாட்டில் அராஜகத்தை விளைவித்து விடுவார். தங்களின் குடிமக்களையெல்லாம் காஃபிராக ஆக்கி விடுவார். பழம்பெருமை வாய்ந்த தங்களின் பாரம்பரியத்தையும் வேரற்று வீழச்செய்து விடுவார். அவரைக் கொன்றொழிப்பதனால் ஏதேனும் தீமை விளையின், என்தலை இதோ உள்ளது. அதனைத் துணிந்து விடுங்கள்! '' இவ்வாறு தந்திரமாகப் பேசிக் கலீபாவைத் தம் வலைக்குள் மாட்டச் செய்துவிட்டார் அமைச்சர். ''நாளை அவரைச் சிரச்சேதம் செய்க!'' என்ற ஆணை கலீபாவின் வாயிலிருந்து வேதனையுடன் வெளிவந்தது.

அன்றிரவு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் எவ்வாறு இருந்தார்கள் என்பதை இதோ அவர்களின் மகன் ஹம்து படம் பிடித்துக் காட்டுகிறார்.

''தந்தையார் தொழ எழுந்து நின்று இரண்டு 'ரகஅத்' நஃப்ல் தொழுதார்கள். அதன்பின் 'மாயை, எல்லாம் மாயை' என்று நள்ளிரவு வரையில் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தார்கள். அதன் பின் நெடு நேரம் வரை யாதும் கூறாது வாய்மூடி அமைதியாக வீற்றிருந்தார்கள். பின்னர் திடீரென்ற பெரும் சப்தமிட்டு ஹக், ஹக் (உண்மை, உண்மை) என்று முழங்கிய வண்ணம் எழுந்து நின்று தம் உடைகளை ஒழுங்காக உடுத்திக் கொண்டு, தலைப்பாகையையும் கட்டிக் கொண்டார்கள். அதன் பின் கிப்லாவை முன்னோக்கிய வண்ணம் தம் கைகளை நீட்டி இறைவனிடம் முனாஜாத்துச் செய்தார்கள்.

''அவர்களின் ஊழியர் இப்ராஹீம் இப்னு ஃபதீக்கும், நானும், அப்பொழுது அவர்களுடன் இருந்தோம். அவர்கள் இறைவனை நோக்கி, ''நான் உன்னுடைய பேரருளில் அடைக்கலம் புகவும், உன்னுடைய பேரொளியில் தஞ்சம் புகவும் தயாராயுள்ளேன். உன்னுடைய விருப்பப்படி தீர்ப்பு வழங்கு. வானகத்திலும் நீயே அல்லாஹ்! வையகத் திலும் நீயே அல்லாஹ்!! கோளங்களை உண்டுபண்ணவும், உருவங்களை அமைக்கவும் வல்ல இறைவனே!

''இது எவ்வாறு நிகழப் போகிறது? என் உடல் கழுமரத்தில் ஏற்றப்படவும், பின்னர் அது பொசுக்கப்பட்டு, அதன் சாம்பல் காற்றிடமும், ஆற்றிடமும் ஒப்படைக்கப் படவுமான நிகழ்ச்சி எவ்வாறு நிகழப் போகிறது? ஆ, ஆ.....''

இவ்வாறு கூறி விட்டு அவர்கள் மீண்டும் மௌனமாக இருந்தார்கள்.

ஹிஜ்ரி 309 ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் 26ஆம் நாள் (கி.பி. 922 மார்ச் 28) செவ்வாய்க்கிழமை, இஸ்லாமிய வரலாற்றிலேயே ஒரு கறை படிந்த நாளாகும். அன்று பொழுது புலர்வதற்கு முன்பேயே நாட்டின் நாலாப்பக்கங்களிலிருந்தும், மக்கள் சராசாரியாக வந்து ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த சிறைக் கூடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். சிறைக்கூடத்திற்கு முன்னுள்ள பாபுல் அதாக் என்ற வெளி, மக்கள் வெள்ளத்தால் நிறைந்து வழிந்து கொண்டிருக்கிறது. ஏறத்தாழ ஓரிலட்சம் பேர்கள் இருப்பார்கள் போல் தோன்றுகிறது. மக்கள் அங்குமிங்கும் திரண்டு நின்று, தங்களுக்குள் ஏதோதோ பேசிக் கொண்டிருக்கிறார்கள். இம்மக்கள் திரளில் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மீது இரக்கம் கொண்டவர்கள் ஒரு சிலரே இருக்கின்றனர். ஏனையோ ரெல்லாம் அவர்கள் மீது பழி தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று வந்தவர்களும், வேடிக்கை பார்க்க வந்தவர்களுமே ஆவர். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைக் கழுவிலேற்றுவதைப் பார்ப்பது அவர்களுக்கு ஒரு வேடிக்கையாக இருக்கிறது.

அங்குக் குழுமியுள்ள அந்த அக்கிரமக் கூட்டத்தினரைச் சுட்டெரிப் பது போல் இதோ பொழுதும் உக்கிரமாகப் புலர்கிறது. இப்பொழுது சிறைக் கூடத்தின் கதவுகள் திறக்கப்படுகின்றன. ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் முப்பது சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு, இதோ வெளியே கொணரப்படுகிறார்கள். ஆஹா! அவர்களின் வதனத்தில் தான் எத்துணை அமைதி தவழ்கிறது! அவர்கள் தலை நிமிர்ந்து, எத்துணை கம்பீரமாக நடந்து வருகிறார்கள். அவர்களைக் கண்டதும் மக்கள் வெள்ளம் அலை வீசி ஆர்ப்பரிக்கிறது. ''ஏன் இத்துணைப் பெருமையுடன் நடந்து வருகிறீர்?'' என்று கூட்டத்திலிருந்த ஒருவன் வினவுகின்றான். ''கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லப்படுகின்றேனல்லவா? அதனால்'' என்று மிடுக்காகப் பதில் கூறுகிறார்கள் அவர்கள். அப் பொழுது அவர்களின் இதழக் கோடியில் ஒரு மகிழ்ச்சிப் புன்னகை மின்னி மறைகிறது. அது கண்ட ஒருவர், ''என்ன புன்முறுவல் பூக்கிறீர். இது புன்னகை பூக்கக்கூடிய நேரமா, என்ன?'' என்று வினவுகிறார். ''ஆம்; அதிலென்ன சந்தேகம். நான் என் இல்லம் திரும்பும் இப்பொழுது, மகிழ்வு பூக்காது வேறு எப்போழுது மகிழ்வு பூத்து முறுவலிப்பது?'' என்று கேள்வி கேட்டவரை அவர்கள் மடக்குகிறார்கள்.

என்ன! யாரோ பாடுவது போல் கேட்கிறதே. ஆம்; அவர்கள் தாம் பாடுகிறார்கள்.

**"என் உயிர்த்தோழன் எனக்கு அநீதி இழைத்தானென**
**நீவிர் அவனைக் குறைகூற வேண்டாம் தாராளத்தன்மை**
**மிகுந்த ஒருவர் தம் விருந்தினருக்குத்**
**தம்மிடமுள்ள மேலான பானத்தை வழங்கி உபசரிப்பது போன்று**
**அவன் அவனிடமுள்ள மேலான பானத்தை எனக்கு**
**வழங்கி அருந்தச் செய்தான்.**
**நான் அதனை முற்றிலும் அருந்தி முடித்ததும்**
**அவன் வாளையும் கஃபன் துணியையும் கொண்டுவரு**
**மாறு கட்டளையிட்டான்.**
**அளவுக்கு மீறி மது அருந்தியவர்களின் கதி அதுவே**
**யன்றி வேறென்ன?"**

என்றுஅவர்களே பாடுகிறார்கள்.

அவர்களின் இப்பாட்டு அங்கு கூடியிருக்கும் பலரின் காதுகளில் நாராசம் போல் விழுகிறது. அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸோ தம் பற்களை நெறுநெறுவெனக் கடிக்கிறார். அவரின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்து விடும் போல் இருக்கிறது. "கொல்லுங்கள்! அந்தக் காஃபிரைக் கொல்லுங்கள் கொல்லுங்கள்!!', என்று கூட்டத்திலிருந்து கூக்குரல் கிளம்புகிறது, "பொறுங்கள்! சற்றுப் பொறுங்கள்!" என்று கூறுவது போன்று அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் தம் கையை மேலே உயர்த்தி விரித்து அசைக்கிறார்.

இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், அவ்வொளியின் நடுவில் அமைக்கப்பட்டிருக்கும் தூக்கு மேடையை நோக்கி அழைத்து வரப்படு கிறார்கள். தூக்கு மேடையைக் கண்டதும், அவர்களுக்கு ஏற்பட்ட சிரிப்பிற்கு அளவில்லை. சிரித்தார்கள், சிரித்தார்கள், வயிறு குலுங்கச் சிரித்தார்கள். அவர்களின் கண்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் வழிந் தோடும் வண்ணம் சிரித்தார்கள். அதன்பின் 'ஹக்,ஹக்!! அனல் ஹக்' என்று முழங்கினார்கள்.

இப்பொழுது அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் முன் வந்து கலீபாவின் ஆணையைப் படிக்கிறார். "ஹல்லாஜைக் காவல்துறை நிலையத்திற்கு அழைத்துச் சென்று, ஆயிரம் கசையடிகள் கொடுக்கவும். அவற்றாலும் அவர் இறக்கவில்லை யாயின் அவருடைய கைகளையும், கால்களையும் தரிக்கவும். பின்னர் அவரைச் சிரச்சேதம் செய்து அவரின் தலையை ஒரு கழியில் குத்தி வைத்து, அவரின் உடலை எரித்துச் சாம்பலாக்கி விடவும். இது கலீபாவின் உத்தரவு."

இவ்வாறு கலீபாவின் உத்தரவை தம் விருப்பப்படி மாற்றியமைத்து, அதுவே கலீபாவின் உத்தரவு என்று கூறுகிறார் அமைச்சர். அது கேட்டு

மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கிறார்கள். ஆனால் ஆங்கு ஒரு பக்கத்தில் நிற்கும் சில நல்லோர்கள், கண்ணீர் வடித்துக் கதறுகிறார்கள். தங்களின் ஆற்றாமையை நினைத்து அலறுகிறார்கள்.

இதோ வெண்தாடிப் பெரியார் ஒருவர் தூக்குமேடையை நோக்கி வருகிறாரே. அவர் யார்? அபூபக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்களா? ஆம்; அவர்களே தாம். அவர்களும் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களும், ஜுனைத் (ரஹ்) அவர்களிடம் ஒருங்கமர்ந்து கல்வி பயின்றவர்கள்.

அவர்கள் இப்பொழுது தம் பள்ளித்தோழர் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை நோக்கி, "இறைஞான இரகசியங்களை மக்களிடம் வெளிப் படையாக எடுத்துரைக்க வேண்டாமென்று நான் எவ்வளவோ கூறியும் நீர் கேட்டீரில்லையே" என்று இடித்துரைக்கிறார்கள்.*

அது கேட்டு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூக்கிறார்கள். அதில் ஓர் ஏளனம் மின்னுகிறது.

மேலும் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் தொடருகிறார்கள்: "ஹுஸைன் இப்னு மன்சூர்! நீரும் ஒருவார்த்தை கூறினீர். நானும் ஒரு வார்த்தை கூறினேன். நீர் அனல் ஹக் என்றீர். நானோ 'அன கைருன்' (நானே மேலானவன்) என்றேன். உம்மீது இறையருள் இறங்கியது. என் மீது இறைமுனிவு இறங்கியது." என்று கூறுகிறார்கள்.

அதற்கு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், "நீர் 'அன கைருன்' என்று கூறியது, உம்முடைய 'நான்' என்ற அகங்காரத்தில் கூறியதாகும். நான் 'அனல் ஹக்' என்று கூறியது என்னை, என்னுடைய 'நான்' என்ற அகங்காரத்தை அழித்து விட்டுக் கூறியதாகும். இதுவே இரண்டிற்கும் இடையேயுள்ள வேற்றுமையாகும். 'நான்' என்ற அகங்காரத்தை நீக்குவதே மாண்புடையதாகும்" என்று கூறுகிறார்.

இப்பொழுது ஷிப்லீ (ரஹ்) அவர்கள் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களை நோக்கி, "தஸவ்வுஃப் (ஆத்ம ஞானம்) என்றால் என்ன? என்று வினவு கிறார்கள்.

---

* ஷிப்லீ (ரஹ்) அவர்கள் தாம் அங்கு செல்லாது பாத்திமா நீஷாப்பூரி என்ற பெண்ணை ஆங்கு அனுப்பி இக்கேள்வியை ஹல்லாஜ் (ரஹ்) அவர்களிடம் கேட்டுவரச் செய்தனர் என்றும், அதற்கு ஹல்லாஜ் (ரஹ்)அவர்கள், "நான் என்னவென்ன உடையவனாயிருக்கின்றேனோ, அவை அனைத்தும் நானாகவே இருக்கின்றேன். இறைவனை ஒரு கணமும் பிரியாது, அவனுடன் அமர்ந்து பேரின்பத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று பதில் கூறியதாகவும் மற்றொரு வரலாறு கூறுகிறது.

''அதிலுள்ள தாழ்ந்த நிலை, நீர் பார்க்கும் என்னுடைய இந்த நிலை தான்'' என்று ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் பதில் கூறினார்கள்.

'அவ்விதமாயின் அதிலுள்ள உயர்ந்த நிலையாது?' என்று வினவு கின்றனர் ஷிப்லீ (ரஹ்)

''அதைப்பற்றி உமக்கேன் கவலை? அதனை உம்மால் அடைய இயலாது'' என்று சட்டென மறுமொழி பகர்கிறார்கள் ஹல்லாஜ் (ரஹ்).

பின்னர் அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, ''அபூ பக்ரே! உம்மிடம் தொழுகை விரிப்பு இருக்கிறதா?'' என்று திடீரென வினவுகிறார்கள்.

அவர்கள் ''ஆம்'' என்று பதிலுரைத்ததும், ''அதனை நான் தொழுவ தற்காக விரியும்'' என்று கூறுகிறார்கள்.

அவ்விதமே அவர்கள் செய்ய, அதன்மீது அவர்கள் நின்று இரண்டு 'ரகஅத்' 'நஃபில்' தொழுகை தொழுகிறார்கள். முதல் ரக்அத்தில் சூரா ஃபாத்திஹா ஓதியபின், 3: 185 ஆவது திருவசனங்களாகிய ஒவ்வோர் ஆன்மாவும் இறப்பை நுகர வேண்டியதாகவே உள்ளது. (எனினும்) உங்களின் (செயல்களுக்கான) கூலியை நீங்கள் பூரணமாக அடைவ தெல்லாம் மறுமையில் தான். எனவே (அந்நாளில்) எவர் (நரக) நெருப்பி லிருந்து அப்புறப்படுத்தப்பட்டு சுவனம் புகுத்தப் பெறுகிறாரோ, அவர் நிச்சயமாக நற்பேற்றினை எய்தி விட்டார். இவ்வுலக வாழ்வு மயக்கக் கூடிய (அற்ப) இன்பத்தைத் தவிர வேறில்லை'' என்பதை ஓதுகிறார்கள்.

பின்னர் இரண்டாவது ரகஅத்தில் சூரா ஃபாத்திஹா ஓதியபின், 2:155-156 - ஆவது திருவசனங்களாகிய, ''விசுவாசிகளே! பயம், பசி, பொருள்களில் நஷ்டம், உயிர்களின் நஷ்டம், பலன்களின் நஷ்டம் ஆகிய வற்றைக் கொண்டு நிச்சயமாக நாம் உங்களைச் சோதிப்போம். (நபியே!) இச்சோதனைகளால் ஏற்படும் துன்பங்களைச் சகித்துக் கொண்டிருப் போருக்கு நீர் நன்மாராயம் கூறுவீராக! (சோதனைக்குள்ளாகும்) அவர்கள் தங்களுக்கு எத்தகைய துன்பம் நேர்ந்த போதினும், நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்காகவே இருக் கின்றோம். நிச்சயமாக நாம் அவனிடமே மீள்வோம்'' எனக் கூறுவார்கள்.

என்பதை ஓதித் தொழுது முடித்து, இரு கரம் ஏந்தி இறைவனிடம் பின்வருமாறு இறைஞ்சுகிறார்கள்:

''இறைவனே! குறிப்பிட்ட ஓரிடத்தில் தான் நீ உள்ளாய் என்று கூற இயலா வண்ணம், எங்கும் நிறைந்துள்ளவனே! உன்னுடைய பேரொளி மிகுந்த முகத்தின் மாண்பினை மற்றவர்களுக்குக் காட்டாது மறைத்து,

எனக்கு மட்டும் காட்டிய, அதற்காக நான் உனக்கு நன்றி செலுத்துகிறேன். உன்னில் மறைந்து கிடக்கும் இரகசியங்களை நான் மட்டும் பார்க்க அனுமதித்து மற்றவர்களைப் பார்க்க அனுமதியாது செய்து, என்மீது காட்டிய பேரன்பிற்கு நான் உனக்கும் பெரிதும் கடப்பாடுடையவனாக உள்ளேன். இங்குக் குழுமியிருக்கும் உன்னுடைய அடியார்கள், உன்னுடைய மார்க்கத்தின் மீதுள்ள உத்வேகத்தின் காரணமாகவும், உன்னுடைய அன்பைப் பெறுவதற்காகவும், என்னைக் கொன்றொழிக்க முனைந்து நிற்கிறார்கள். நீ அவர்களை மன்னிப்பாயாக! அவர்கள் மீது இரங்குவாயாக! நிச்சயமாக நீ எனக்குக் காட்டியதை, அவர்களுக்குக் காட்டி இருப்பின், அவர்கள் செய்ததைச் செய்திருக்கமாட்டார்கள். அவர்களுக்கு நீ மறைத்துக் கொண்டதை, நீ எனக்கும் மறைந்திருப்பின், நான் இத்தகைய துன்பத்திற்கெல்லாம் ஆளாகி இருக்கமாட்டேன். நீ என்ன நாடினாலும், நான் உன்னைப் புகழ்வேன். நீ என்ன செய்தாலும் உன்னைப் புகழ்ந்து கொண்டே இருப்பேன்''

இவ்வாறு அவர்கள் இறைஞ்சி முடித்துக் கையைக் கீழே போட்டது தான் தாமதம், அமைச்சர் ஹாமித் இப்னு அப்பாஸ் காவல்துறை அதிகாரியின் அருகே சென்று அவரின் காதோடு காதாக ஏதோ கூறுகிறார். அது நம்முடைய காதிலும் விழுகிறது. ''நீர் அவரைப் பிரம் பால் அடிக்கும் பொழுது, அவர் உம்மை ஏமாற்ற முயல்வார். புராத், திஜ்லா நதிகளைப் பொன்னும் மணியும் கரை புரண்டோடும் வண்ணம் மாற்றித் தருவதாகக் கூறுவார். நீர் அவற்றைக் கேட்டு அடிப்பதை நிறுத்தி விடக்கூடாது'' என்று கூறுகிறார். ''சரி; ஆணை ஏற்றேன்'' என்று பதில் கூறுகிறார் காவல்துறை அதிகாரி.

ஆ! இதோ அந்தப் பாவி, ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மீது பாய்ந்து, பிரம்பால் ஓங்கி, ஓங்கி அடிக்கின்றானே. அவனுடைய பிரம்பு காற்றை விர், விர் என்று பிளந்துகொண்டு, அவர்களின் பொன்னுடலில் சுளீர், சுளீர் என்று விழுகிறதே. ஆனால் அவற்றை ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் எத்துணைப் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டு, ஆடாது அசையாது நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்களின் வாயிலிருந்து ஒரு பெருமூச்சோ, முணக்கமோ வரவில்லையே.

இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் செவியில், ''மன்சூரின் மகனே! பயப்படாதே'' என்று அசரீரி ஒன்று ஒலிக்கிறது. அது அவர்களை அடித்துக் கொண்டிருக்கும், காவல்துறை அதிகாரியின் செவியிலும் விழுகிறது, எனினும் அவன் அதனைச் சிறிதேனும் பொருட்படுத்தாது அவர்களை அடித்துக் கொண்டே உள்ளான்.

அடிகள் ஒன்று, இரண்டு, மூன்று என்று நூறையும் கடந்து விட்டனவே. அவை இருநூறு, முந்நூறு, நானூறு, ஐந்நூறு என ஏறிக் கொண்டே சென்று, அறுநூற்றையும் எட்டி விட்டனவே.

இப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, ''இங்கே வா! உனக்குக் கான்ஸ்டாண்டி நோப்பின் வெற்றிக்கு நிகரான ஒன்றைத் தருகிறேன்'' என்று கூறுகிறார்கள். ''இதுவும் கூறுவீர். இதற்கு அதிகமாகவும் கூறுவீர், என்று எனக்குத் தெரியும். எனவே அடிப்பதை ஒரு கணமேனும் நிறுத்தி விட்டு, நான் உம்மிடம் வரமாட்டேன்'' என்று திமிருடன் பதில் கூறுகிறான் அவன்.

மறுபடியும் அவர்கள் மீது, சுளீர், சுளீர் என்று அடி விழுகிறது. அடிகள் எழு நூறையும், எண்ணூறையும், தொள்ளாயிரத்தையும் கடந்து, ஆயிரத்தையும் எட்டுகின்றன. என்ன வியப்பு! ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அனாயாசமாக நின்று கொண்டிருக்கிறார்களே! அவர்களை அடித்த வனல்லவோ களைப்புற்றுச் சாகிறவன் போல் காணப்படுகிறான்!!

ஆயிரம் அடிகளை வாங்கியும், அவர்கள் அனாயாசமாக நிற்பதைக் கண்டு, அவர்களின் எதிரிகளுக்குக் கோபம், கோபமாக வருகிறது. ''உடனே கழுவிலேற்றுங்கள்! கழுவிலேற்றுங்கள்'' என்று அவர்கள் தொண்டை கிழியக் கத்துகிறார்கள். 'ஏற்று கழுவில்' என்று அனற்பொறி தெரித்தாற்போல் ஆணையிடுகிறார் அமைச்சர்.

இதோ கழுவை நோக்கி ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். தூக்கு மேடையின் படிகளில் மெது மெதுவாக ஏறுகிறார்கள். ''இப்பொழுது எப்படி இருக்கிறது உமக்கு?'' என்று கூட்டத்திலுள்ள ஒரு விஷமி கிண்டலாக வினவுகிறான் ''ஆண்மகனுக்கு மிஃராஜ் (விண்ணேற்றம்) தூக்குமேடை தானே'' என்று அவர்கள் கணீரென்று பதிலளிக்கிறார்கள்.

படிகளின் மீது மெதுமெதுவாக ஏறி இப்பொழுது, அவர்கள் மேடை மீது வந்து நிற்கிறார்கள். இப்பொழுது நாம் அவர்களை நன்றாகப் பார்க்க இயலுகிறது. கீழே ஒரு துண்டும், மேலே ஒரு முண்டும் அவர்கள் அணிந்திருக்கிறார்கள். 'அனல் ஹக், அனல் ஹக்!' என்று அலறிக் கொண்டு, ஓடோடிச் சென்று, அவர்கள் தூக்கு மரத்தை முத்தமிடு கிறார்கள். பின்னர் அவர்கள் மக்காவின் பக்கல் திரும்புகிறார்கள். இருகரம் ஏந்தி இறைஞ்சுகிறார்கள்'' அவன் அறிந்ததை வேறு எவரும் அறியார்கள்'' என்று முழங்குகிறார்கள். அதன்பின் ''நான் இதுவரை விரும்பிக் கொண்டிருந்ததை நீ எனக்கு இப்பொழுது வழங்கியுள்ளாய்'' என்று கூறுகிறார்கள்.

இப்பொழுது ஒரு பக்கீர் தூக்கு மேடையை நெருங்குகிறார். "இறை காதல் என்றால் என்ன?" என்று வினவுகிறார்.

"இறை காதலா! அதனை நீர் இன்றும், நாளையும், நாளை நின்றும் காண்பீர். முதல் நாள் காதலன் தூக்கிலிடப்படுவான். இரண்டாவது நாள் எரிக்கப்படுவான். மூன்றாவது நாள் அவனுடைய சாம்பல் ஆற்றில் வீசி எறியப்படும்" என்று அவர்கள் கூறினார்கள்.

இதன்பின் அவர்களின் ஊழியர், இப்ராஹீம் இப்னு ஃபதீன் அழுத கண்களுடன் அவர்களை அணுகித் தமக்கு அறிவுரை நல்குமாறு வேண்டுகிறார்.

"இப்ராஹீம்! நீ எதன்மீதும் ஆசை வைக்காதே! ஆசைவைப்பின் நீ படுபாதாளத்தில் போய் வீழ்ந்து விடுவாய். தீய இச்சைகளின் வயப்படாது, ஒருவன் தன்னைக் காத்துக் கொள்வது ஓர் அரும்பெரும் சாதனையாகும்" என்று அவர்கள் அறிவுரை பகர்கின்றார்கள்.

இதோ அவர்களின் அருமந்த மைந்தர் ஹம்து சோகமே உருவாக அவர்களை நோக்கி நடந்து செல்கிறார். அவரைக் கண்டதும், "மகனே! கவலையுறாதே! மெய்ப் பொருளைப் பற்றிய நினைவேயன்றி, வேறொரு நினைவும் உன் இதயத்தில் இடம்பெறாது பார்த்துக்கொள்! அந்த மெய்ப் பொருளைப் பற்றி அறிவதில், உன் முழுக் கவனத்தையும் செலுத்து" என்று அவர்கள் கூறுகிறார்கள்.

இதன்பின் இதோ அவர்களின் சீடர்கள் ஒருவர்பின் ஒருவராக வருகிறார்கள். "எங்களுக்கு இறுதி அறிவுரை நல்குங்கள்! உங்கள் மீது கொலைக்குற்றம் சாட்டி, உங்களைக் கழுவிலேற்றப் போகும் அவர்களைப் பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள்.

"அவர்களுக்கு இரண்டு நன்மைகள் உண்டு, ஆனால் உங்களுக்கோ ஒரே ஒரு நன்மைதான் கிடைக்கும். நீங்கள் என்னை மட்டும் நம்புகிறீர்கள். ஆனால் அவர்களோ தௌஹீதையும் (ஏகத்துவத்தையும்) ஷரீஅத்தையும் (மார்க்க வரையறைகளையும்) நம்புகிறார்கள்" என்று பதிலிறுக்கிறார்கள் அவர்கள்.

அதுகேட்டு அவர்களின் மாணவர்களின் புருவங்கள் மேலேறுகின்றன.

இதன்பின் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள், ஆங்குக் குழுமியிருந்த மக்களை நோக்கி, "இளமையில் நான் ஒரு பெண்ணைக் கூர்ந்து கவனித்தேன். அதற்கான தண்டனையை நான் இப்பொழுது பெறப் போகிறேன்" என்று கூறுகிறார்கள்.

மேலும் அவர்கள் தொடர்கிறார்கள்: ''நான் அமைதி விரும்பிப் பல்வேறு நாடுகளிலும் சுற்றி அலைந்தேன். நான் என் ஆசைக்குக் கீழ்ப் படிந்தேன். எனவே நான் அதற்கு அடிமையானேன். இல்லையெனில் நான் சுதந்திரமுள்ளவனாயிருப்பேன்.''

இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மீது ஆங்குக் குழுமி இருக்கும் மக்கள் கல்லாலெறிகின்றார்கள். அவர்கள் மீது இப்பொழுது எறியப்படும் கற்கள் ஒன்றா இரண்டா? ஆயிரம், ஆயிரம். அந்த கல்லடிகளையும் பொறுத்துக் கொண்டு, அவர்கள் எவ்வளவு அமைதியாக நின்று கொண்டிருக்கிறார்கள்.

இதோ ஒரு பாவி எறிந்த கல் அவர்களின் நெற்றியைப் பதம் பார்த்து விட்டதே. அவர்களின் நெற்றியிலிருந்து இரத்தம் கசிகின்றதே? எனினும் அவர்கள் ஆடவில்லை. அசையவில்லை. 'ஆ'வென்று அலறவுமில்லை.

என்ன இது புதுமை! இந்தக் கல்மழையினூடே ஒரு புல், இல்லை, இல்லை- ஒரு பூ வந்து அவர்கள் மீது விழுகின்றதே. அதனை யார் எறிந்தது? ஷிப்லீ (ரஹ்) அவர்களா? ஆம்; ஷிப்லி (ரஹ்) அவர்கள் கூறியது தவறுதான் என்று சொல்வது போன்று, அவர்கள் பூவால் அவர் களை எறிந்தார்கள். ஆனால் அதுவோ, அவர்களுக்குக் கல்லடியை விடக் கடுமையாக இருக்கிறது. எனவே தம்மை அறியாமல் அவர்கள் 'ஆ' என்று அலறுகிறார்கள்.

''என்ன கல்லடி பட்டும் கதறாத நீங்கள் பூ அடிபட்டு இவ்வாறு அலறுகின்றீர்கள்?'' என்று ஆங்கு நின்று கொண்டிருக்கும் ஒருவர் அவர்களை வினவுகிறார்.

''ஆம்; பாமரர்கள் என்னை எவனென அறியாது, தாங்கள் யாது செய்கிறோம் என்பதை உணராது என் மீது கல்லால் எறிந்தார்கள். ஆனால் என்னை, என் நிலையை நன்கு அறிந்த ஷிப்லீ, என்மீது ஒரு துரும்பைக் கூட எடுத்துப் போடக் கூடாது என்பதை நன்கு உணர்ந்த ஷிப்லி, என்மீது பூவால் எறிந்தது, எனக்கு அளவற்ற மனவேதனையை நல்கியது. எனவே என்னை அறியாமல் நான் அலறிவிட்டேன்'' என்று அவர்கள் கூறு கிறார்கள்.

அவர்கள் இவ்வாறு கூறி வாய்மூடுமுன், அந்தக் காவல்துறை அதிகாரி அவர்கள் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அவர்களின் மூக்கை உடைத்து விட்டானே. அதிலிருந்து இரத்தம் வழிகிறதே. அது கண்டு ஷிப்லி (ரஹ்) அவர்கள் பெரும் சப்தமிட்டு, தம் உடைகளைக் கிழித்துக் கொண்டு இதோ மயங்கிக் கீழே விழுகிறார்களே.

ஆ, ஆ,இதுவென்ன மாபாதகம்! இதோ ஒரு படுபாவி ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் மீது பாய்ந்து, அவர்களின் கைகள் இரண்டையும் வெட்டி விட்டானே. கீழே விழுந்த அந்தக் கைகள் இரண்டும் துடிக்கின்றனவே. இரத்தம் எங்கணும் வழிந்தோடுகின்றதே! ஆனால் அவர்கள் என்ன சிரித்துக் கொண்டு நிற்கின்றார்கள்.

இப்பொழுது கூட்டத்தில் நின்று கொண்டிருந்த ஒருவன் அவர் களை நோக்கி, ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று வினவுகின்றான்.

''உங்களால் என்னுடைய வெளிரங்கமான கைகளைத் தாமே வெட்ட இயலும்? என்னுடைய அந்தரங்கமான கைகளை உங்களால் தொடக்கூட முடியாது, அவை என்னுடைய இறைவனின் பாதாரவிந்தங் களைப் பலமாகவல்லவோ பற்றிப்பிடித்து கொண்டுள்ளன''.

இவ்வாறு கூறிவிட்டு அவர்கள், ஓர் ஏளனச் சிரிப்பை உதிர்க் கிறார்கள்.

அவ்வளவுதான். அவர்களின் கால்கள்மீது வெட்டு விழுகிறது. கால்கள் சரிகின்றன. அவர்கள் என்ன மீண்டும் புன்முறுவல் பூக்கிறார்கள்?

''இந்தக் கால்களால் நான் உலகில் அங்குமிங்கும் சுற்றி அலைந் தேன். நான் ஈருலகிலும் சுற்றி அலைந்து திரிந்த என்னுடைய வேறு கால்கள் உள்ளனவே. அவற்றை உங்களால் இயலுமாயின் வெட்டுங் களேன், பார்க்கலாம்'' என்று அவர்கள் அறைகூவல் விடுக்கிறார்கள்.

''ஏன் இவ்வாறு செய்கிறீர்?'' என்று கூட்டத்திலிருந்து ஒரு குரல் ஒலிக்கிறது.

''என் உடலிலிருந்து அதிகமான இரத்தம் வழிந்தோடி விட்டது. அதன்காரணமாக என்னுடைய முகம் வெளுத்து விடும்போல் தோன்று கிறது. நான் பயந்து விட்டேன் என்றும், எனவே என்முகம் வெளுத்து விட்டது என்றும் நீங்கள் எண்ணிக் கொள்ளக் கூடாது என்பதற்காகவே நான் அவ்வாறு செய்தேன். வீரர்களின் நறுமணப்பொருள், அவர்களின் இரத்தம் தானே. எனவே தான் என்முகம் ரோஜா நிறத்துடன் இலங்குவதற் காக நான் என் முகத்தில் இரத்தத்தைத் தடவிக் கொண்டேன். இன்று என் முகத்தில் உயிர்த் தியாகியின் இரத்தமாவு தடவப்பட்டிருப்பதன் காரண மாக நான் பெரிதும் மகிழ்கிறேன்.

''அவ்விதமாயின் முகத்தில் இரத்தத்தைத் தடவிக் கொண்டது சரிதான். ஏன் அதனைத் தங்களின் புயங்களிலும் தடவிக் கொண்டீர்கள்?'' என்று வினவுகிறார் ஒருவர்.

"நான் இரத்தத்தைக் கொண்டு உளூவல்லவா செய்தேன்" என்று மிடுக்காக அவர்கள் பதிலுரைக்கின்றார்கள்.

"என்ன! உளூவா செய்தீர்கள்?" என்று அவர் வியப்புடன் வினவுகிறார்.

"ஆம், 'உளூ'த்தான் செய்தேன். ஒருவன் இறைகாதலில் ஈடுபட்டு இரண்டு 'ரகஅத்' தொழும் பொழுது இரத்தத்தால் செய்தாலொழிய அந்த 'உளூ' நிறைவுபெறாது" என்று அவர்கள் விடையிறுக்கிறார்கள்.

இதன்பின் அவர்களின் கண்கள் பிடுங்கப்படுகின்றனவே.

இப்பொழுது கூட்டத்தில் பெரும் கூச்சல் கிளம்புகிறது. சிலர் அழுகிறார்கள். சிலர் புலம்புகிறார்கள். சிலர் சிரிக்கின்றார்கள். சிலர் அவர்கள் மீது கற்களை வீசி எறிகிறார்கள். கூட்டம் அமளிதுமளிப்படுகிறது.

அந்தக்கொடும்பாவி அபுல் ஹாரித் தன்னுடைய கையிலுள்ள ஈட்டியால் அவர்களின் கண்கள் இரண்டையும் தோண்டி எடுத்து விட்டானே. அத்துடன் நில்லாது அவன் அவர்களின் நாவையும் அறுக்க வல்லவா ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறான்.

இப்பொழுது அவர்கள் அக்கொடும்பாவி அபுல் ஹாரிதை நோக்கி "சற்றுப் பொறும்!" என்று கூறிவிட்டுத் தம் முகத்தை விண்ணை நோக்கி உயர்த்திய வண்ணம், "இறைவனே! உனக்காக வேண்டி அவர்கள் என்னைத் துன்புறுத்துவதற்காக, அவர்களைப் புறக்கணிக்கவோ, அவர்கள் மீது உன்னுடைய பேரருளைச் சொரிவதை நிறுத்திக் கொள்ளவோ செய்யாதே! இறைவனே! எல்லாப் புகழும் உனக்கே தகும். நான் உன்னுடைய பாதையில் நடப்பதன் காரணமாக, அவர்கள் என்னுடைய கால்களை வெட்டிவிட்டார்கள். உன்னுடைய ஷரீ அத்திற்காகவே அவர்கள் என்னை இவ்வாறு துன்புறுத்துகிறார்கள். அத்துன்பங்களை யெல்லாம் இறுதிவரை அமைதி குலையாது தாங்கிக் கொள்ளும் ஆற்றலை எனக்குத் தந்தருளியதற்காக, நான் உனக்கு நன்றியுடையவனாக உள்ளேன். அதே ஆற்றலை நீ இங்கு குழுமி நின்று என்னைத் துன்புறுத்து பவர்களுக்கும் வழங்கியருள்வாயாக!" என்று இறைஞ்சினார்கள்.

இவ்வாறு அவர்கள் இறைஞ்சிய பின், அவர்களின் காதுகளும் மூக்கும் வெட்டப்படுகின்றன.

இப்பொழுது ஒரு கிழவி ஒரு தோண்டியை எடுத்துக் கொண்டு அங்கே வருகிறாளே, என்ன? அவள் அவர்கள் மீது இரக்கமுற்று வருகிறாளா, என்ன?

''நன்றாக வெட்டுங்கள்: இந்த அற்பப் பஞ்சு வெட்டிப் பயலுக்கு இறைவனைப் பற்றிப் பேச என்ன அருகதை உள்ளது?என்று கூறிச் செல்கிறாள் அந்தப் பொல்லாக்கிழவி.

அதனைச் சிறிதேனும் பொருட்படுத்தாது, ''இறைவனை நேசிப்பது அவனில் சேர்வதேயாகும். இறைக்காதல் உன்னை ஏனையவர்களை விட்டும் அசாதாரண மனிதனாக்கி விட்டது. பேரின்பப் பரவச நிலையை அடைந்தவர்களெல்லாம் இதனையே விரும்புவார்கள்...... இந்தத் தனிமையை, தனியாய் இருப்பவனுடன் தனித்திருக்கும் இத் தனிமையைத்தான் விரும்புவார்கள் என்று கூறுகிறார்கள். இதுவே அவர்களின் இறுதிப்பேச்சாக உள்ளது.

இதன்பின் அவர்களின் நாவெட்டப்படுகிறது. அது கீழே விழுந்து துடிப்பது 'அனல் ஹக், அனல் ஹக்' என்று சொல்வது போன்றல்லவா இருக்கிறது!

பின்னர் இதோ அவர்களின் தலை வெட்டப்படுகிறது. அதுகண்டு அவர்கள் சிரிக்கிறர்கள். சிரிப்புடனே அவர்களின் சிரம் மண்ணிலே புரள் கிறது. அவர்களின் ஆன்மா விண்ணகம் நோக்கி, இதோ பறந்து செல்கிறது. அவர்கள் இறைவனிடம் சென்று விட்டார்கள்.

கூட்டத்தில் பெரும் அழுகுரல் கேட்கிறது. 'அனல் ஹக், அனல்ஹக்' என்று எங்கணும் ஒலிகிளம்புகிறது. அவர்களின் உடலிலிருந்து இரத்தம் சொட்டுவதுகூட 'அனல் ஹக், அனல்ஹக்' என்றல்லவா மண்ணில் ஓவியம் வரைகிறது.

''அவர் உயிரோடிருந்ததை விட நிலைமை இப்பொழுது அதிக ஆபத்தை விளைவிக்கும் போலிருக்கிறதே'' என்று அங்கு குழுமி யிருக்கும் மக்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொள்கின்றனர்.

அடுத்தநாள் வெய்யோன் தன் உக்கிரமான கதிர்களை மண்ணகத்தில் வீசி எறிந்த வண்ணம் கிளம்புகின்றான். ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைக் கொன்றொழித்தவர்களை எரித்துச் சாம்பலாக்கி விடுவது போன்று அவனுடைய வெப்பம் கடுமையாக இருக்கிறது. ஆனால், அவர்களின் விரோதிகளோ அதனைச் சற்றேனும் பொருட்படுத்தாது அவர்களின் வெற்றுடலை எரித்துச் சாம்பலாக்கி, அச்சாம்பலை ஆற்றில் கரைத்து விட்டால் தான் 'சனியன்' தொலையும் என்று முடிவெடுக்கிறார்கள். அவ்வாறே அவர்களின் வெற்றுடல், எரித்துச் சாம்பலாக்கப்படுகிறது. அது எரியும் பொழுது 'அனல்ஹக், அனல் ஹக்' என்ற ஒலியே ரீங்காரம் செய்கிறது.

அதுகண்டு அவர்களின் எதிரிகளுக்கு ஏற்பட்ட திகிலுக்கு அளவில்லை. அந்தச் சாம்பலையெல்லாம் ஒருங்குசேர்த்து, மனாராவின் மீது நின்று திஜ்லா நதியிலே வீசி எறிகின்றார்கள். அது 'அனல்ஹக்', அனல்ஹக்' என்று முழங்கிய வண்ணம் திஜ்லா நதியிலே மிதந்து செல்கிறது.

என்ன இது! திஜ்லா நதி பொங்கி வருவது போன்று தோன்றுகிறதே. ஆம்; அது அபார ஒலி எழுப்பிய வண்ணம் பக்தாது மாநகரத்தையே விழுங்கி விடுவது போன்றல்லவோ ஆர்ப்பரித்து வருகிறது. என் செய்வதென்றே அறியாது அவர்களின் எதிரிகள் தயங்குகிறார்கள். அவர்களை விவரிக்க ஒண்ணாத் திடுக்கம் ஆட்கொள்கிறது, இப்பொழுது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் முன்பொருகால் கூறியது, அவர்களின் மாணவர் ஒருவருக்கு நினைவு வருகிறது. ''அவர்கள் என்னுடைய சாம்பலை திஜ்லா நதியிலே தூவின், அதன் அலைகள் கொந்தளித்துக் குமுறி பக்தாது மாநகரையே மூழ்கடிக்க முனைந்து நிற்கும். அப்பொழுது என்னுடைய மேலாடையை அதன்மீது போடுங்கள். அதன் குமுறல் தணிந்து விடும்' என்று அவர்கள் கூறியதை நினைவு கூர்கிறார் அவர். ஓடோடிச் சென்று அவர்களின் மேலாடையைத் திஜ்லா நதியிலே தூக்கி எறிகிறார். கொந்தளித்துக் குமுறி, பக்தாது மாநகரை மூழ்கடிக்க முனைந்து நின்ற அப்பெருவெள்ளம் அடங்கி ஒடுங்கி ஒடுகிறது.

மெதுமெதுவாக, அவர்களின் சாம்பலும் எலும்புகளும் கரையிலே ஒதுக்கப்படுகின்றன. அவற்றை அவர்களின் சீடர்கள் ஒருங்கு சேர்த்து ஓரிடத்தில் நல்லடக்கம்* செய்கிறார்கள்''.

எல்லாப் புத்தக விற்பனையாளர்களும் அழைக்கப்பட்டு ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் எழுதிய நூல்களை ஃவாங்கவோ, விற்கவோ கூடாதென்று கண்டிப்பான உத்தரவிடப்பட்டது.**

உண்மையில் கொல்லப்பட்டவர் தம் ஆசான் ஹல்லாஜ் (ரஹ்) அவர்களல்லவென்றும், அவர்களே போன்று உருவம் அமைந்த அவர்களின் எதிரிகளில் ஒருவனே என்றும், அவர்கள் நாற்பது நாட்களுக்குப் பின் மீண்டும் வருவர் என்றும், அவர்களின் சீடர்கள் கூறினர். மற்றும்

* அவர்களின் அடக்கவிடம் இன்றும் பக்தாதில் உள்ளது.

** அவர்கள் எழுதிய ஐம்பது நூல்களைத் தாம் பக்தாதிலும் குராஸானிலும், ஃபார்ஸிலும், கூஸிஸ்தானிலும் பார்த்ததாக ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் எழுதிய நூல் ஒன்றில் 'நூஹ் (அலை) அவர்களின் கூட்டத்தினரையும் ஆத், தமூத் கூட்டத்தினரையும் அழிந்தவன் நானே'' என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. அவர்கள் எழுதிய நூல்களில் தலையாயதான 'தவாஸின்' என்பது ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளி வந்துள்ளது.

சிலர் அவர்கள் தெருவில் தொலைவில் நடந்து சென்றதைப் பார்த்த தாகவும் கூறினர்.

மற்றும் சிலர் தாங்கள் அவர்களை நஹ்ர்வான் சாலையில் கழுதைமீது இவர்ந்து சென்றதைக் கண்டதாகவும், அப்பொழுது அவர்கள் தங்களை நோக்கி, ''நான் கசையாலடிக்கப்பட்டு சிரச்சேதம் செய்யப்பட்டதாக, முட்டாள் தனமாக நீங்களும் எண்ணிக் கொள்ளாதீர்கள்'' என்று கூறிச் சென்றதைத் தாங்கள் செவியுற்றதாகவும் எடுத்துரைத்தனர்.

இவ்வாறு ஒன்றல்ல, இரண்டல்ல, பற்பல கதைகள் கூறப்பட்டன.

பின்னர் ஒருநாள் அவர்களைப் பற்றி அபூ பக்ர் ஷிப்லீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடும்பொழுது, நானும் ஹல்லாஜு'ம் ஒரே படித்தரத்தில் இருந்தோம். என்னைப் பைத்தியக்காரனென எண்ணி, மக்கள் கொல்லாது விட்டுவிட்டார்கள். அவரை அறிவாளி எனக்கருதி, அவர்கள் கொன்று விட்டார்கள்'' என்று கூறினர்.

அவர்கள் தூக்கிலிடப்பட்ட இரவு அந்தத் தூக்கு மேடையின் அருகே ஒரு மகான் அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டிருந்த பொழுது, 'நாம் நம்முடைய இரகசியங்களில் ஒன்றை அவரிடம் ஒப்படைத்தோம். ஆனால் அவரோ, அதனைப் பரகசியமாக்கிவிட்டார். எனவே, நாம் அவரைத் தண்டித்தோம்.'' என்று அசரீரி முழங்கியதைச் செவியுற்றார் என்று கூறப்படுகிறது.

ஒரு தடவை ஷிப்லீ (ரஹ்) அவர்கள், ஹல்லாஜ் (ரஹ்) அவர்களைக் கனவில் கண்டு, ''இறைவனின் திருமுன் உம்நிலைமையாதாயிற்று?'' என்று வினவிய பொழுது, 'அவன் என்னை ஸித்தீக்குகளின் அணியில் அமர்த்திக் கௌரவித்தான்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். ''உம்மைச் சிலர் ஆதரிக்கவும், வேறு சிலர் எதிர்க்கவும் செய்தார்களே. அவர்களின் நிலை யாதாயிற்று?'' என்று அவர்கள் வினவியபொழுது, ''இருவர் மீதும் இறைவன் அருள் கூர்ந்தான். இருவரும் தர்ம சங்கடத்தில் இருந்தார்கள். என்னை அறிந்தவர்கள், நான் கூறியது சரியென உணர்ந்தார்கள். எனவே, என்னை ஆதரிப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லாமல் போய் விட்டது. என்னை எதிர்த்தவர்கள் ஷரீஅத்தின்படி தாங்கள் செய்வது சரி என உணர்ந்தார்கள். எனவே என்னை எதிர்ப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லாது போய்விட்டது'' என்று அவர்கள் கூறினர்.

அவர்களைப்பற்றி அன்று தொட்டு இன்று வரை, கடந்த ஞானி களிடையே கூடக் கருத்து வேற்றுமை உள்ளது. சிலர் அவர்களை வெறுக்கவும், வேறு சிலர் அவர்களை ஆதரிக்கவும் செய்கிறார்கள். அம்ரு இப்னு உதுமான் அல் மக்கீ, அபூ யஃகூப் நஹ்ரஜூரி, அபூயஃகூப் நக்தா,

அலீ இப்னு ஸஹ்ல் இஸ்ஃபஹானீ ஆகியோர் அவர்களை வெறுக்கின்றனர். இப்னு அதா, முஹம்மது இப்னு ஹஃபீஃப், அபுல் காசிம் நஸ்ராபாதீ ஆகியோர் அவர்களை ஆதரிக்கின்றனர். அவர்களைப் பற்றி இப்னு ஹஃபீஃப் (ரஹ்) அவர்கள் கூறும் பொழுது, அவர்கள் ஆலிமெ ரப்பானீ (தெய்வீக அறிவாளர்) என்று புகழ்ந்துரைத்தார்கள். ஜுனைத் (ரஹ்), ஹுஸ்ரீ (ரஹ்) ஆகியோர் அவர்கள் பற்றித் தம் கருத்தை வெளியிடாதிருந்தார்கள்.

அவர்களுக்குப் பின்னர் தோன்றிய ஷைகு அபூ ஸயீது அபில் கைர் (ரஹ்), ஷைகு அபுல் காசிம் குர்கானி (ரஹ்), ஷைகு அபுல் அப்பாஸ் ஷகானீ (ரஹ்) ஆகியோர் அவர்களை ஆதரிப்பதோடு, அவர்களை மா மனிதர் என்றும் புகழ்ந்துரைத்தார்கள்.

அவர்களைப் பற்றி மௌலானா ரூமி கூறும்பொழுது ''நானே இறைவன் என்று கூறிய ஃபிர்அவ்ன் இழிவெய்தினான். ஆனால் நானே மெய்ப்பொருள் என்று கூறிய ஹல்லாஜ் உயர்வடைந்தார். ஃபிர்அவ்னின் கூற்று பெருமையின்பாற்பட்டது. ஹல்லாஜின் கூற்று இறையருள் பெற்றதாகும். அவன் ஒரு சாதாரணக் கல். ஹல்லாஜோ ஒரு மாணிக்கம். அவன் அல்லாஹ்வின் விரோதி. ஆனால் ஹல்லாஜோ அல்லாஹ்வின் அருள்நேசர், மெய்க்காதலர்'' என்று போற்றிப் புகழ்கிறார்கள்.

அவர்களைப் பற்றிப் ஃபரீதுத்தின் அத்தார் குறிப்பிடும் பொழுது, ''தூர் ஸீனாய் மலையிலுள்ள ஒரு மரத்திலிருந்து, 'அனஅல்லாஹ் (நானே அல்லாஹ்) என்று சபதம் வந்த பொழுது, நாம் அதனை உண்மையென்று நம்புங்கால், மனிதனிலிருந்து 'அனல் ஹக் (நான்தான் அல்லாஹ்) என்று சப்தம் வந்தால், அதனை ஏன் நாம் நம்பக்கூடாது?'' என்று வினவுகின்றார்கள்.

'ஹுஜ்ஜத்துல் இஸ்லாம்' இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களோ, ''ஹல்லாஜ். 'அனல் ஹக், என்று கூறியதன் பொருள், சுவனத்தில் அல்லாஹ்வைத் தவிர்த்து வேறொருவனுமில்லை என்பதேயாகும். அளவுக்கு மீறிய இறை காதலால் உந்தப்பட்டு அவர் அவ்விதம் கூறினாரே யன்றி வேறில்லை. அவர் ஓர் இறைநேசச் செல்வர். உயிர்த்தியாகி (ஷஹீத்)'' என்று கூறுகின்றார்கள்.

அவர்களைப் பற்றி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடும் பொழுது, ''ஹல்லாஜ் சருகி விட்டார். நான் அப்பொழுது இருந்திருப்பின் அவரைச் சருகாது காப்பாற்றி இருப்பேன்'' என்று கூறியுள்ளார்கள்.

உந்துலுஸ் தந்த மாபெரும் இறைநேசச் செல்வர், முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள், தாம் தியானத்தில் மூழ்கியிருக்கும் பொழுது, கண்ட அற்புதக் காட்சியை இதோ தம்முடைய 'ஃபுத் ஹாத்துல் மக்கிய்யா' என்ற நூலில் குறிப்பிடுகிறார்கள். அதனை நாமும் படிப்போம்.

''நான் ஹிஜ்ரி 586- ஆம் ஆண்டில் குர்த்துபா என்ற நகரில் இருந்தேன். அப்பொழுது இறைவன் ஆதம் (அலை) முதல் முஹம்மது (ஸல்) அவர்கள் வரையுள்ள ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களையும், எனக்குக் காட்டி அருளினான். அவர்களில் ஹூது (அலை) அவர்கள் மட்டும், என்னுடன் உரையாடினார்கள். அவர்கள் அழகாகவும், திடகாத்திரமாகவும், இனிமையான பேச்சாளராகவும், முதிர்ந்த ஞானி (ஆரிஃப்) ஆகவும் இருந்தார்கள்.

''நான் அப்பொழுது ஹூது (அலை) அவர்களை நோக்கி, 'நீங்களெல்லாம் இங்குக் கூடியிருக்கிற காரணம் என்ன?'' என்று விசாரித்தேன். அதற்கு அவர்கள், 'நாங்கள் அனைவரும் ஹல்லாஜுக்காக, முஹம்மது (ஸல்) அவர்களிடம் பரிந்துரைப்பதற்காக வந்துள்ளோம்' என்று கூறினார்கள்.

இவ்வாறு கூறிவிட்டு, அவர்கள் மேலும் தொடர்ந்தார்கள்: முஹம்மது (ஸல்) அவர்கள்பால் ஹல்லாஜ் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டார். அவர் உயிரோடிருக்கும் பொழுது, முஹம்மது (ஸல்) அவர்களின் மாண்புக்கு நிகராக, அவர்களின் செயல் இருக்க வில்லை' என்று கூறினார். 'எவ்வாறு?' என்று அவரிடம் வினவப்பட்ட பொழுது, 'இறைவன் அவர்களை நோக்கி, 'வல ஸவ்ஃக யஃத்தீக்க ரப்புக ஃபத்தர்ளா' (உமது இறைவன் பின்னும் (பின்னும் பல உயர் பதவிகளை) உமக்கு அளிப்பான். (அவற்றைக் கொண்டு) நீர் திருப்தியடைவீர் (93: 5) என்று கூறியுள்ளான். எனவே மனிதர்கள் அனைவருக்கும், அவர் விசுவாசியா, இறை மறுப்பவரா என்று பாராது பரிந்துரை செய்யும் உரிமையை இதன் மூலம் இறைவன் அவர்களுக்கு வழங்கியிருக்க, 'அவர்களோ, மனித குலம் அனைத்திற்கும் இறைவனிடம் பரிந்துரை செய்ய முன் வராது,' என் பரிந்துரை, என்னைப் பின்பற்றியவர்களில் பெரும்பாவிகளாயுள்ளவர்களுக்கே' என்று கூறியிருக்கிறார்களே'' என்று பதில் மொழிந்தார்.

''அப்பொழுது முஹம்மது (ஸல்) அவர்கள் ஹல்லாஜிடம் வந்து, ''மன்சூரே! ஷஃபாஅத் (பரிவுரை) பற்றி நீர் என்னைக் குறை கூறினீரல்லவா?'' என்று வினவினர்.

''அதற்கு அவர், 'அல்லாஹ்வின் தூதர் அவர்களே! ஆம்' என்று மறு மொழி பகர்ந்தார்.

''அப்பொழுது முஹம்மது (ஸல்) அவர்கள் ஹல்லாஜை நோக்கி, 'நான் அல்லாஹ்வைப் பற்றி மொழிந்தது உமக்குத் தெரியாதா என்ன? தான் ஒருவனை உவப்பின், அவனுடைய கேள்வியாகவும், பார்வை யாகவும், நாவாகவும், கையாகவும் இருப்பேன்' என்று அவன் கூறியுள்ளான் என்பது உமக்கு விளங்காதா, என்ன?' என்று வினவினர்.

''அதற்கு அவர், 'அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நான் அதனை அறிவேன்' என்று கூறினார்.

''அது கேட்ட முஹம்மது (ஸல்) அவர்கள், 'நான் அல்லாஹ்வுடைய ஹபீப் (அருள் நேசர்) ஆக இருக்கும் பொழுது, அவன் என்னுடைய நாவால் பேசுகின்றானேயன்றி வேறில்லை. அவனிடம் மன்றாடு கிறவனும் அவன்தான். அவன்பால் மன்றாடப்படுபவனும் அவனே தான். நான் அவன்பால் என்னை அழித்துக் கொண்டிருக்கிறேன். உண்மை இவ்வாறிருக்க, நீர் எவ்வாறு என்னைக் குறை கூறுதல் தகும்?'' என்று கூறினார்கள்.

''உடனே ஹல்லாஜ் ' அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நான் செய்த தவற்றினுக்காக 'தௌபா (பாவ மன்னிப்பு) செய்கிறேன். அதற்காகத் தாங்கள் என்ன தண்டனை விதிப்பினும், நான் ஏற்றுக் கொள்ளத் தயாராயுள்ளேன்' என்று சொன்னார்.

''அப்பொழுது முஹம்மது (ஸல்) அவர்கள், அவரை நோக்கி, 'நீர் அதற்குப் பரிகாரமாக, உம்முடைய நஃப்ஸை அல்லாஹ்வின் பாதையில் குர்பானி (பலி) கொடும். உம்முடைய நஃப்ஸை என்னுடைய ஷரீஅத் என்னும் வாளைக் கொண்டு வதை செய்யும்' என்று கூறினார்கள்.

''அதன் பின் ஹல்லாஜுக்கு நடக்க வேண்டியது நடந்தது.'

''ஹல்லாஜ் உலகு நீத்ததிலிருந்து இதுவரை அவர், முஹம்மது (ஸல்) அவர்களைத் தரிசிப்பதை விட்டும் தடுக்கப்பட்டுள்ளார். அவருக்காக முஹம்மது (ஸல்) அவர்களிடம் மன்றாடுவதற்காக ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களும் இன்று ஒன்று கூடியுள்ளோம்.'' இவ்வாறு கூறிமுடித்தார்கள் ஹூத் ( அலை).

ஒரு மனிதருக்காக வேண்டி ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களும், ஒருங்கு திரண்டு பரிந்துரைக்க முன் வந்ததிலிருந்து, அவரின் மாண்பினை நன்கு உணர்ந்து கொள்ளலாம் என்று சிலர் கூறுவதும் சிந்திக்கற்பாலதாகவே உள்ளது.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் கொல்லப்பட்டபின், அவர்களுக்கு எதிராக சதி சூழ்ந்த அமைச்சரின் இல்லம் திடீரெனத் தீப்பற்றி எரிந்தது என்றும், அவரும் கொல்லப்பட்டார் என்றும், கலீபாவும் அதே நிலைக் குள்ளானார் என்றும் கூறப்படுகிறது.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் அன்றும் ஒரு புதிராக இருந்தார்கள், இன்றும் ஒரு புதிராக உள்ளார்கள். என்றும் ஒரு புதிராகவே இருப்பார்கள். ஆம்; அவர்கள் என்றென்றும் ஒரு புரியாப் புதிராகவே இருப்பார்கள்.

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் 'அனல் ஹக்' என்று கூறியதை மக்கள் மன்னித்த போதினும், மக்களால் அதனை மறக்க இயலவில்லை. 'அனல் ஹக்' என்பது அழியாச் சொல்லாகி விட்டது.

அவர்கள் போன்ற மனிதர், அவர்களுக்கு முன்னரும் பிறந்தது மில்லை. அவர்களுக்குப் பின்னரும் பிறக்கவுமில்லை. அவர்கள் இறைவனின் இரகசியம். அந்த இரகசியத்தை இறைவனையன்றி வேறு எவரும் அறிய மாட்டார்கள்.



## 15. அபூ உதுமான் அல் கைரி (ரஹ்)

ஓர் இளவலின் மனமானது அல்லும் பகலும் உண்மையைத் தேடுவதிலே ஈடுபட்டிருந்தது. வெறுமனே மார்க்கச் சடங்குகளைப் பின்பற்றிக் கொண்டிருப்பதில் அவருடைய மனம் நிறைவு பெறவில்லை. இந்த மார்க்கச் சடங்குகளுக்கும் அப்பாற்பட்டு மறைந்திருக்கும் ஆன்மீக இரகசியங்களை அறிய அது பெரிதும் அவாவுற்றுக் கொண்டிருந்தது.

ஒரு நாள் அவ் இளவல் கல்வி பயில்வதற்காகப் பள்ளி சென்று கொண்டிருந்தார். அவருடைய தலையை அழகிய தலைப்பாகை ஒன்று அணிசெய்து கொண்டிருந்தது. அவர் அணிந்திருந்த பட்டுச் சட்டை கதிரவன் ஒளியில் பளிச், பளிச்சென்று மின்னிக் கொண்டிருந்தது. அவருடைய கையிலே பொன்னாலான பேனாவும், மைக்கூடும் இருந்தன. அவரின் பின்னே அவரிட்ட குற்றேவல்களைச் செய்வதற்காக நான்கு அடிமைகள்; அவர்களில் ஒருவர் அபிசீனியர், மற்றொருவர் கிரேக்கர், வேறொருவர் கஷ்மீரி, பிறிதொருவர் துருக்கியர், கைகட்டி, வாய் பொத்திச் சென்று கொண்டிருந்தார்கள்.

வழியிலே ஒரு விடுதி தென்பட்டது. அதனை நெருங்கியதும், அதற்குள் உற்றுப் பார்த்தார் அவர். அங்கே ஒரு கழுதை நின்று கொண்டிருந்தது. அதன் முதுகிலே உள்ள ஒரு புண்ணை பருந்து ஒன்று தன் கூரிய அலகால் கொத்திக் கொத்தி உண்டு கொண்டிருந்தது. பருந்து கொத்தக் கொத்த அக்கழுதையின் ஒவ்வோர் அணுவும் அதிர்ந்து கொண்டிருந்தது. எனினும் என் செய்வது? அதனை விரட்டியடிக்க அக்கழுதைக்கு ஆற்றலில்லை. எனவே பொறுமையுடன் அதனைச் சகித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தது அக்கழுதை.

இதனைக் கண்ணுற்றதும் அவ் இளவலின் கண்களில் நீர் மல்கியது. தம் பின்னே வந்து கொண்டிருந்த அடிமைகளில் ஒருவனை நோக்கி, ''நீ ஏன் என் பின்னே வந்து கொண்டிருக்கிறாய்?'' என்று வினவினார். ''தாங்கள் இட்ட ஆணையை நிறைவேற்றுவதற்காக'' என்று மறுமொழி பகர்ந்தான் அவன்.

அடுத்த கணம் அவ் இளவல் தம் பட்டுச் சட்டையைக் கழற்றி அக்கழுதையைப் போர்த்தினார். அதன் பின் தம் தலைப்பாகையை அவிழ்த்து, அக்கழுதையின் முதுகிலிருந்த புண்ணில் கட்டினார். இவ்வாறு செய்து விட்டு அவர் வெற்றுடலுடன் இல்லம் திரும்பினார். ஆனால் அவர், இல்லம் திரும்புவதற்கு முன் அவருடைய உள்ளத்தை ஆன்மீகப் பேரொளி ஆக்கிரமித்துக் கொண்டது. தாம் பன்னாட்களாக எதை விரும்பித் தேடி வந்தாரோ, அது தானாகவே வந்து அவருடைய உள்ளத்தில் அரியாசனம் ஏறிவிட்டது.

இதன்பின் அவ் இளவல் அபூ உதுமான் சையித் இப்னு இஸ்மாயீல் அல் கைரி, நேரே யஹ்யா இப்னு முஆத் (ரஹ்) அவர்களின் திருமுன் சென்று, ஆன்மீகக் கல்வி பயிலலானார்கள். தம் பெற்றோரையும், உடன் பிறந்தாரையும், உற்றாரையும், உறவினரையும் துறந்து, அம்மேதகை பள்ளியையே தம் புகலிடமாகக் கொண்டு சிலகாலம் வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இக்காலை கர்மானிலிருந்து வந்த ஒரு குழுவினர் அங்கு வாழ்ந்து வந்த இறைநேசச் செல்வர், ஷா இப்னு ஷுஜாவின் அருமை பெருமை களைப் பற்றி இவர்களிடம் எடுத்துரைத்த பொழுது, அவர்களைக் காண வேண்டுமென்ற பேரவா அவர்களின் உள்ளத்திலே கொழுந்து விடலாயிற்று. தம் ஆசானிடம் தம் உள்ளக் கருத்தைக் கூற, அவர்களும் அதற்கு மகிழ்ச்சியுடன் அனுமதி வழங்கினர். அவ்வளவுதான், அடுத்த கணம் அவர்களின் கால்கள் ரை நகரிலிருந்து கர்மான் செல்லும் பாட்டை யிலே நடந்து கொண்டிருந்தன.

கர்மான் சென்ற அவர்கள், ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்களின் திருமுன் சென்று மரியாதையுடன் 'ஸலாம்' உரைத்துத் தாம் வந்த அலு வரை எடுத்தோதினர். அது கேட்ட ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்கள், அபூ உதுமான் (ரஹ்) அவர்களை நோக்கி, ''யஹ்யா இப்னு முஆத்(ரஹ்) அவர்களின் நிலையே நம்பிக்கையின் மீது ஏற்பட்டதாகும். அந்த நம்பிக் கையை அவர்கள் அநுபவத்தின் மூலம் பெற்றார்கள். ஆனால் நீர் கொண்டுள்ள நம்பிக்கையோ, அவர்களைக் குருட்டுத் தனமாகப் பின் பற்றுவதனால் ஏற்பட்டதாகும். அது சோம்பேறித்தனத்தையே வளர்க்குமேயன்றி, உண்மையான ஆத்மீக முன்னேற்றத்தை ஒருவனுக்கு நல்காது' என்று கூறி அவர்களைத் தம் ஆன்மீக மாணவராக ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டனர்.

எனினும் அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் விடவில்லை. தொடர்ந்து இருபது நாட்கள் அவர்களின் திருமுன் சென்று, தம்மை அவர்களின் மாணவராக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வெகு தாழ்மையுடன்

வேண்டிக் கொண்டார்கள். இறுதியாக அவர்களும் அதற்கு ஒருவாறு இசைந்து, அவர்களைத் தங்களின் ஆன்மீக மாணவராக ஏற்றுக் கொண்டு அறிவுரை நல்கி வந்தார்கள். இவ்வாறு சிலகாலம் ஓடி மறைந்தது.

இதன்பின் ஒரு நாள் ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்கள், அபூஹப்ஸ் (ரஹ்) அவர்களைக் கண்டு வருவதற்காக நீஷாப்பூர் புறப்பட்டனர். அவர்களுடன் சேர்ந்து அபூ உதுமான் (ரஹ்) அவர்களும் நீஷாப்பூர் புறப்பட்டார்கள். நீஷாப்பூருக்கு வெளியே, அபூஹப்ஸ் (ரஹ்) அவர்கள் வந்து, ஷா இப்னு ஷுஜா (ரஹ்) அவர்களை வரவேற்று, அவர்களை அளப்பரும் மரியாதையுடன் நகருக்கு அழைத்துச் சென்றது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.*

அபூஹப்ஸ் (ரஹ்) அவர்கள் ஆன்மீகத் துறையில் அடைந்திருக்கும் உச்சத்தைக் கண்டு, அபூ உதுமான் (ரஹ்) அவர்களுக்கு அளவற்ற வியப்பாக இருந்தது. அவர்களுடன் சில காலம் தங்கி ஆன்மீகப் பயிற்சி பெற விரும்பினர். ஆனால் அவ்விதம் செய்ய ஷா ஷுஜா (ரஹ்) அவர்கள் அனுமதிப்பார்களா, என்ன? இந்நிலையில் யாது செய்வதென அறியாத அபூ உதுமான் (ரஹ்) அவர்கள், இறைவனின் திருமுன் தம் சிரம் தாழ்த்தி, "இறைவனே! நீதான் ஷா ஷுஜா (ரஹ்) அவர்களின் மனம் நோகா வண்ணம் இதற்கோர் வழி வகுக்க வேண்டும்" என்று இறைஞ்சி நின்றனர்.

நாட்கள் பல கடந்தன. ஷா ஷுஜா (ரஹ்) அவர்கள், மீண்டும் கர்மானுக்குச் செல்ல ஆயத்தம் செய்தனர். அவர்களின் பிரயாணத்திற்கு வேண்டிய பொருள்களைத் தயார் செய்வதில் அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள்.

பிரயாண நாளும் புலர்ந்தது. அப்பொழுது அபூஹப்ஸ் (ரஹ்) அவர்கள், ஷா ஷுஜா (ரஹ்) அவர்களை நோக்கி, "இந்த இளவலை என்னுடன் விட்டுச் செல்லுங்கள். அவர் என்னுடன் இருக்கட்டும். அவர் என்னுடன் இருப்பதை நான் பெரிதும் விரும்புகின்றேன்" என்று கூறினர்.

அதுகேட்ட ஷா ஷுஜா (ரஹ்) அவர்கள், அபூ உதுமான் (ரஹ்) அவர்களை நோக்கி, 'ஷைகு கூறுகின்றபடிச் செய்யும்' என்று பணித்து விட்டு கர்மான் நோக்கிப் பிரயாணமாயினர்.

---

* அப்பொழுது ஷாஷுஜா (ரஹ்) அவர்கள் ஒரு மேலங்கியை அணிந்திருப்பதைக் கண்டு "நான் என் மேலாடையில் (அபாவில்) தேடியதை அவர்களின் மேலங்கியில் (கபாவில்) கண்டேன்" என்று அபூஹப்ஸ் (ரஹ்) அவர்கள் கூறினர்.

அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்களின் ஊழியத்திலே அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் இருக்கும் காலம் துவங்கியது. தம் இறைஞ்சுதலை இறைவன் ஏற்றுக் கொண்ட பெருமகிழ்ச்சியிலே திளைத்த வண்ணம், தம் ஆசானின் அருகமர்ந்து அவர்களுக்கு ஊழியம் செய்வதிலேயே தம்முடைய பெரும் பாலான பொழுதைக் கழித்து வந்தார்கள். திடீரென ஒரு நாள் அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள், அபூ உதுமான் (ரஹ்) அவர்களை நோக்கி, ''இன்றி லிருந்து நீர் என் முன் வரவேண்டாம்'' என்று பணித்தனர். அவர்களின் இச்சொல் அபூ உத்மான் (ரஹ்) அவர்களின் தலையில் பேரிடி விழுந்தது போன்றிருந்தது. என் செய்வது, யாது கூறுவது என அறியாதவர்களாய் மீக்கூற்று அவ்விடத்தை விட்டு அகன்ற அவர்கள், அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்களின் இல்லத்திற்கு எதிரே ஓர் இடம் அமைத்து, அதில் சிறு துளையும் இட்டு, அத்துளை வழியாகத் தம் ஆசான் அவர்களை வைத்த கண் வாங்காது பார்த்துக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்கள். தம் மாணவர் தம் மீது கொண்ட பற்றையும், அவர்களுடைய அப்போதைய அவல நிலையையும், கண்ட அபூஹஃப்ஸ் (ரஹ்) அவர்கள் அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் மீது இரங்கி, அவர்களை மீண்டும் தன் முன் வருமாறு பணித்து அரவணைத்தனர். இதன்பின் அவர்கள் தம் அன்புத் திருமகளை அவர்களுக்குக் கடிமணம் செய்து வைத்து மகிழ்ந்தார்கள்.

இவ்வாறு மூன்று பேராசிரியர்களிடம் ஆன்மீகக் கல்வி பயின்று, அளவற்ற அருள்ஞானம் வாய்க்கப் பெற்ற அபூஉதுமான் (ரஹ்) அவர்கள் பிற்காலத்தில், 'ஆன்மீக ஞானிகளில் உலகிலே மூன்று பேரே மாண்பு பெற்று விளங்குகின்றனர். நான்காமவர் கிடையாது. அபூ உதுமான், நீஷாப்பூரிலும், ஜுனைத் பக்தாதிலும், அபூ அப்துல்லா இலாஜ், சிரியாவிலும் உள்ளனர்'' என்று மக்கள் புகழ்ந்துரைக்கும் வண்ணம் சிறப்புற்று விளங்கினர். ஜுனைத் (ரஹ்) அவர்கள், யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் ஆகியோருடனும், அவர்கள் அன்புத் தொடர்பு கொண்டு வாழ்ந்து வந்தார்கள்.

இவர்களைப் பற்றி ஒரு பெரியார் கூறும் பொழுது, ''நான் ஜுனைத் (ரஹ்), யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்), ரதீம் (ரஹ்), முகம்மது பஸ்ல் (ரஹ்), அபூ அலிஜுர்ஜானி (ரஹ்) ஆகியோரைக் கண்டுள்ளேன். ஆனால், எவருமே அல்லாஹ்வை அறிவதில், அபூ உதுமானைவிடச் சிறந்தவர் களாய் இருக்க வில்லை. குராஸானில் அவர்களே, ஆன்மீக ஞானத்தை (தஸவ்வுபை) வெளிப்படுத்தினர்'' என்று எடுத்துரைத்தார்கள்.

அபூ உதுமான் (ரஹ்) அவர்கள், அல்லாஹ் தமக்குவிட்ட விதியை மிகவும் அமைதியுடன் ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தைப் பெற்றிருந்

தனர். இதைப் பற்றி அவர்கள் கூறும் பொழுது, ''நாற்பதாண்டுகளாக இறைவன் என்னை ஒரு போதேனும் நான் விரும்பாத நிலையில் வைக்கவோ, நான் வெறுத்த நிலைக்கு என்னை மாற்றவோ செய்யவில்லை'' என்று இயம்பினர்.அபூ உதுமான் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தைப் பற்றி ஐயுற்ற ஒருவர் ஒரு நாள், அவர்களைத் தம் இல்லத்திற்கு உணவருந்த வருமாறு அழைத்தார். அவரின் அழைப்பை ஏற்று அவர்களும் அவரின் இல்லத்திற்கு உணவருந்தச் சென்றார்கள். அவரின் வாயிலை அவர்கள் அடைந்தது தான் தாமதம், ''ஏ சாப்பாட்டு ராமனே! உனக்கு இங்கு யாதோர் உணவுமில்லை. திரும்பிப்போ'' என்று ஒரு சப்தம் கேட்டது. ஏறிட்டுப் பார்த்த அவர்களின் முன்னே, எவ்வித இரக்கமுமின்றி அவ்வீட்டுக்காரர் நின்று கொண்டிருந்தார். அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் யாதொரு மறுமொழியும் கூறவில்லை. திரும்பி விட்டார்கள்.

அவர்கள் சற்றுத் தொலைவுதான் சென்றிருப்பார்கள். அவ்வீட்டுக்காரர் மீண்டும் அவர்கள் நோக்கி ''ஷைகு அவர்களே! இங்கே வாருங்கள்'' என்று கூவி அழைத்தார்.

அழைப்பை ஏற்றுத் திரும்பி வந்த அவர்களை, அவ்வீட்டுக்காரர் நோக்கி, ''நீ உணவுண்ணப் பெரிதும் ஆவலாய் உள்ளாய். ஆனால் இங்கோ சிறிதளவு உணவுதான் உள்ளது. எனவே திரும்பிப்போ'' என்று கூறினார்.

அவ்வாறே அவர்களும் செய்தார்கள். சற்றுத் தொலைவு சென்றதும் மீண்டும் அவர்களை வருமாறு அழைத்தார் அவர். அவர்களும் திரும்பி வந்தார்கள். அப்பொழுது அவர், அவர்களை நோக்கி, ''கல்லைத்தின்னு அல்லது திரும்பிப்போ'' என்று கூறினார். அவர்கள் யாதொரு மறு மொழியும் கூறாது திரும்பிவிட்டார்கள்.

இவ்வாறு முப்பது தடவை நிகழ்ந்தன. இந்த முப்பது தடவை களிலும் அவர்களிடமிருந்து சிறு சினத்தின் மொழியும் வெளி வரவில்லை. அவர்களின் முகத்தில் சிறிதளவு சின அறிகுறியும் தென்படவில்லை. இதுகண்டு அவ்வீட்டுக்காரருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ''தங்களைப் பார்த்தால் மனிதனா அல்லது மகானா என்று எனக்கு விளங்க வில்லையே. முப்பது தடவை நான் தங்களை அழைத்து விரட்டி அடித்தும், அதற்காகத் தாங்கள் என்மீது சிறிதளவும் சினமுறவில்லையே'' என்று வாயார்ந்து கூறினார்.

அப்பொழுது அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''இது மிகவும் எளிய செயலாயிற்றே. சிறு நாய் கூட இதனைச் செய்கிறதே.

விரட்டியடித்தால் ஓடவும், அழைத்தால் எவ்விதத் தயக்கமுமின்றி வரவும் செய்கின்றதே. சிறு நாய் அதனைச் செய்யும் பொழுது, மனிதனால் அதனைச் செய்ய இயலாதா, என்ன? மனிதன் நாயைவிட எவ்வளவோ மேலானவனல்லவா?'' என்று கூறினர். அது கேட்ட அவர், அவர்களின் கால்களில் வீழ்ந்து கண்ணீரைக் காணிக்கையாக நல்கி, அவர்களின் ஆன்மீக மாணவர்களில் ஒருவராக மாறினார்.

ஒரு நாள் அவர்கள் தம் மாணவர் குழுவுடன் வீதிவழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, ஒரு வீட்டிலிருந்து கொட்டப்பட்ட சாம்பல் அவர்களின் தலை மீது விழுந்தது. அது கண்டு அவர்களின் மாணவர்களுக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. அப்பொழுது அபூ உதுமான் (ரஹ்) அவர்கள், அவர்களுக்கு ஆறுதல் மொழி கூறி, ''இதற்காக ஏன் சினமுறுகிறீர்கள்? நானோ ஒரு பாவி, நரக நெருப்பிற்கு இறையாகப் போகும் என் உடலின் மீது குளிர்ந்த சாம்பலைக் கொட்டியதற்காக நான் ஆயிரம் முறை நன்றியல்லவா கூற வேண்டும்'' என்று இயம்பினார்கள்.

மற்றொரு நாள் அவர்கள், ஒருதெரு வழியே சென்று கொண்டிருந்த பொழுது ஓர் இளவல் குடித்துவிட்டுப் புல்லாங்குழலும் கையுமாக அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருந்தான். அவர்களைக் கண்டதும், அதிகாரிகளிடம் தன்னைப் பற்றிப் புகார் கூறுவார் என்று அஞ்சிய அவன், அப்புல்லாங்குழலைத் தம் சட்டைக்குள் வைத்து மறைத்தான். அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி வருவதைக் கண்டதும், அவனுடைய அச்சம் பன்மடங்கு அதிகமாகியது. ஆனால் அவர்களோ, அவனை நோக்கி, 'பயப்படாதே. நாமெல்லாம் சகோதரர்கள்' என்று கூறினர். அவர்களின் இந்த அன்பு மொழி அவனின் இதயத்தை உருகச் செய்தது. அக்கணமே அவன் தான் செய்த தவற்றிற்கு வருந்தி, அவர்களின் கரம்பிடித்து ஆன்மீக மாணவனானான். இதன்பின் அவர்கள் அவ் இளவலை நோக்கி, குளித்துத் தூய்மையாக வருமாறு பணித்தனர். அவனும் அவ்வாறே செய்தான். அப்பொழுது அவர்கள் அவனுக்குச் சில ஆன்மீக இரகசியங்களை எடுத்துரைத்து, விண்ணை நோக்கிய வண்ணம் தம் இருகரம் ஏந்தி, ''இறைவனே! நான் என்னாலானதைச் செய்து விட்டேன். இனிமேல் ஆக வேண்டியதைச் செய்ய வேண்டியது உன்னுடைய பொறுப்பு'' என்று கூறி இறைஞ்சினார்கள். என்ன வியப்பு! அடுத்தகணம் அபூ உதுமான் (ரஹ்) அவர்களே வியப்புறும் வண்ணம் அவ் இளவலின் முகத்தில் ஆன்மீகப் பேரொளி இறங்கலாயிற்று.

அப்பேரொளி பலரை அவர் மீது பொறாமை கொள்ளுமாறு செய்தது. மாபெரும் இறைநேசச் செல்வரான, உதுமான் மஃரிபி (ரஹ்) அவர்களே, அவர் மீது பொறாமையுற்றார்கள். ''நான் இருபது ஆண்டு

களாகச் செய்த வணக்கத்தினால் எய்தப் பெறாத பலனை, அவ் இளவல் ஒரு நொடியில் இறையருளால் எய்தப் பெற்று விட்டாரே'' என்று அவர்கள் அபூ உதுமான் (ரஹ்) அவர்களிடமே கூறினார்கள். அதுகேட்ட அபூ உதுமான் (ரஹ்) அவர்கள் ''ஒருவர் தம் முயற்சியை, வணக்கத்தை மட்டும் பெரிது கண்டு இருக்கக் கூடாது. தூய உள்ளத்துடன் இறைவனின் பேரருளை வேண்டி நிற்க வேண்டும், அப்பொழுது தான் இறையருள் கிட்டும்'' என்று கூறினர். அதன் பின் அந்த இருவரும், அவ் இளவலை அணுகி அவரின் வாயை மோந்து பார்த்த பொழுது, அதில் அப் பொழுதும் சிறிது மது வாடை வீசியது. இத்துணை குறுகிய கால அளவில் அவ் இளவலைத் தம் நல்லடியாராக ஏற்றுக் கொண்ட இறைவனின் பேரருளை எண்ணி அவர்கள் வியந்தார்கள்.

இவ்வாறு அபூ உதுமான் (ரஹ்) அவர்ளால் நேர்வழி பெற்றோர் ஒருவர் இருவரல்ல, பலர்.

ஒருவர் அவர்களை அணுகி ''என் நா மட்டும் இறைவனைத் துதிக்கிறது. அப்பொழுது என் மனமோ எங்கோ திரிந்து கொண்டுள்ளது'' என்று கூறினார். அதற்கு அவர்கள், உம்முடைய ஓர் உறுப்பாவது இறைவனுக்கு வழிபட்டதற்காக அவனுக்கு நன்றி செலுத்தும் . நன்றி செலுத்தின் என்றாவது ஒரு நாள், உம் நாவோடு உம் மனமும் ஒத்துழைக்க இறைவன் அருள் செய்வான் என்ற நம்பிக்கை எனக்கு உள்ளது'' என்று கூறினர்.

பர்கானாவிலிருந்து ஹஜ்ஜு செய்ய வந்த ஒருவர், அவர்களைக் காண நீஷாப்பூர் வந்த பொழுது, அவர்களின் ஆன்மீகப் பேரொளியால் ஈர்க்கப்பட்டு, அவர்களின் ஊழியத்திலேயே ஆடுகளை மேய்த்துக் கொண்டு இருந்து விட்டார்.

அவர்கள் தம் ஆன்மீக மாணவர்கள் மீது கொண்டிருந்த அன்போ, அளப்பரியதாக இருந்தது. அபூ அமர் இப்னு நுஜைத் என்பார், இளமை யில் அவர்களின் தவமடம் வந்து தாம் செய்த பாவச் செயல்களுக்கு வருந்தி, இறைவனிடம் மன்னிப்புக் கோரி நெறிவாழ்வு வாழ்ந்தார். பின்னர் மீண்டும், பாவச் செயல்களில் ஈடுபட்ட அவர், அவர்களின் கண்களில் விழிக்க நாணி, அவர்களின் தவமடத்திலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட்டார். அதன்பின் அவர்களை அவர் தொலைவில் பார்த்த போதினும், அவர்களைச் சந்திக்க நாணமுற்று வெருண்டோடினார்.

ஒரு நாள் அவர், அவர்களை எதிர்பாராவகையில் சந்திக்க நேர்ந்த பொழுது, அவர்கள் அவரை அன்புடன் நோக்கி ''மகனே! நீ பாவமில்லா தவர் (மஃசூம்) ஆக இருந்தாலொழிய, நீ உன்னுடைய எதிரிகளுடன்

உறவாடாதே. அவர்கள் உன்னுடைய குற்றம் குறைகளைப் பார்த்து, மகிழ்ச்சியுறுவார்கள். நீ பாவம் செய்யின், எங்களிடம் வந்து சேர்வாயாக. நாங்கள் உன்னுடைய பாவங்களைப் பொறுத்துக் கொள்வோம்'' என்று இதமொழி பகர்ந்தனர்.

அவர்களின் இந்த இதமொழி, அவரின் வாழ்வையே மாற்றியமைத்து விட்டது. பாவச் செயல்கள் மீது அவருக்கு ஒருவித வெறுப்பு ஏற்பட்டு, இறைவனிடம் தம் பாவம் பொறுத்தருளுமாறு அழுது, கெஞ்சி, வருந்தி, நேர்வழி பெற்று மகானாக ஆனார்.

அவர்களுக்கு இறப்பு நெருங்கிய பொழுது, அவர்களின் மகன் தம் உடைகளைக் கிழித்துக் கொண்டு அழுதார். அப்பொழுது அவர்கள் தம் மகனை நோக்கி, '' மகனே! இது எம் பெருமானார் (ஸல்) அவர்களின் வழிமுறைக்கு மாற்றமாயிற்றே. நயவஞ்சகத்தின் அறிகுறியல்லவோ இது? 'பாத்திரத்திலுள்ளது தான் வெளியே கொட்டும்' என்ற நபி மொழிக்கு ஏற்ப அல்லவோ உம் செயல் உள்ளது'' என்று கூறினர். அடுத்தகணம் அவர்களின் உயிர், அவர்களின் உடலை விட்டுப் பிரிந்தது. இது நீஷாப்பூரில் ஹிஜ்ரி 298 ஆம் ஆண்டில் நிகழ்ந்தது.



# 16. யூசுப் இப்னு ஹுஸைன் (ரஹ்)

**கொ**திக்கும் பாலையைக் கடந்து சென்று கொண்டுள்ளது ஒரு பிரயாணக் குழு. அதிலே எழிலெல்லாம் திரண்டு உருக் கொண்டால் போன்று ஓர் இளவலும் சென்று கொண்டிருக்கிறார். அவரின் செந்நிற மேனியும், கருநிறக் குழலும், கண்டோர்களின் கண்களை யெல்லாம் அவர்பால் ஈர்த்து நிற்கின்றன. அவர் மண்ணகத்து மாந்தர் தாமோ அல்லது விண்ணகத்து வேந்தர் தாமோ என்று அவர்மீது வைத்த விழி வாங்காது கண்ட மக்களெல்லாம் வியந்து பாராட்டி நின்றார்கள். இறுதியாக அப்பிரயாணக் குழு ஓர் ஊரை அடைகிறது. அழகொழுகும் ஆணிளங் காளை ஒருவர் அவ்வூர் வந்துள்ளார் என்ற செய்தி, அவ்வூர் முழுவதும் காட்டுத் தீ போல் ஒரு நொடியில் பரவிவிட்டது. இளைஞர்களும், முதியவர்களும், மங்கையரும், நங்கையரும், அவரை காணச் சாரிசாரியாக வந்து கொண்டிருக்கிறார்கள். வந்து அவரின் பேரழகைத் தம் கண்களால் பருகி போதை மீக்குற்று, இல்லம் திரும்புகின்றார்கள். ''இவரைப் பெற்ற புண்ணியவதி எவரோ?'' என்று ஏங்கிச் சென்றனர் சில மூதாட்டியர். ''இவரைப் மணக்கப்போகும் பாக்கியவதி எவரோ?'' என்று ஏங்கிச் சென்றனர் மங்கையர் சிலர்.

பகலின் ஆட்சி முடிந்து, இரவின் ஆட்சி துவங்கியது. பகலெல்லாம் மக்களின் கண்கணைகளால் தைக்கப்பட்ட அவர், பிரயாணக் குழுவை விட்டு நீங்கிச் சற்றுத் தொலைவில் வெண்மணலைப் படுக்கையாகவும், நீல விதானத்தை முகடாகவும் கொண்டு படுத்திருந்தார். அப்பொழுது விண்மீன்கள் ''உம் அழகைப் பருகுவதில் நாங்கள் மண்ணகத்து மாந்தர்களுக்கு இளைத்தவர்களா, என்ன?'' என்று கூறுமாப் போன்று கண்களைச் சிமிட்டிச் சிமிட்டி, அவரின் பேரழகைப் பருகி ரசித்துக் கொண்டிருந்தன. உறக்க மங்கையும் அவரின் மேனி அழகை மட்டு மல்லாது, அவரின் கண் அழகையும் பார்த்து ரசித்துக் கொண்டு, அவரின் அருகே வராது எட்டி நின்று கொண்டிருந்தாள். அதன் பின் மெது மெதுவாக அவரை அணுகி, அவரின் கண்களில் புகுந்தாள். அவரும் உறக்க மங்கையைச் 'சிக்'கெனத் தம் கண் இமைக்குள் வைத்து மூடி இன்ப அமைதியில் திளைத்துக் கொண்டிருந்தார்.

சற்று நேரத்திற்கெல்லாம் எவரோ தம் பாதத்தைத் தொடுவது போன்றிருக்கவே திடுக்கிட்டு விழித்தெழுந்த அவரின் முன், முழுமதியும் வெட்கித்தலைகுனியும்படியான பேரழகி ஒருத்தி, அழகிய ஆடை ஆபரணங்கள் அணிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அது கண்ட அவர், ''அம்மணீ! தாங்கள் யார்? இந்த அகால வேளையில் இங்கே தன்னந்தனியாக வந்த காரணம் யாது?'' என்று வினவினார். அதற்கு அவர், ''ஐய! நான் இந்நாட்டு மன்னர் மகள். தங்களின் பேரழகைக் கண்டு மக்கள் வாயார்ந்து பேசிய, அப்பேச்சொலி இன்பத் தேனென என் செவிப் புகுந்து, என்னை இங்கே இழுத்து வந்து விட்டது. என்னை ஏற்றுத் தங்களின் உள்ளத்தில் கொலுவேற்ற வேண்டும்'' என்று வேண்டி நின்றாள். அவ்வளவுதான். அடுத்த கணம் அவர் சரேலெனப் பாய்ந் தெழுந்து அவளைத் தழுவ - இல்லை இல்லை - அவளின் தழுவலை விட்டும் தப்பித்து ஓடினார், ஓடினார். ''இறைவனே! என்னைக் காப்பாற்று. என்னைக் காப்பாற்று' என்று அலறிக் கொண்டு ஓடினார். இவ்வாறு அலறிக் கொண்டு வெகு தூரம் ஓடிவிட்டார்.

புலி வாயிலிருந்து தப்பிய மானென வெகுதொலைவு சென்ற அவர், இறுதியாக ஓர் இடத்தை அடைந்து, அலுத்துச் சலித்துப் படுத்துறங்கினார். அப்பொழுது அவர் ஒரு கனவு கண்டார். அவர் தாம் என்றுமே காணாத எழில் கொழிக்கும் இன்ப பூமியில் நின்று கொண்டிருக்கிறார். அவரின் முன் அரியணை ஒன்றில் அரசரேறென ஒருவர் வீற்றிருக்கின்றார். அவரைச் சூழப் பசும் பட்டாடைகள் அணிந்த பலர் நின்று கொண்டிருக் கிறார்கள். அவர் யார் என்பதை அறிய, முன்னே அடியெடுத்து வைத்து நடந்த அவருக்கு அவர்கள் அனைவரும் மரியாதையுடன் வழிவிட்டு நிற் கின்றார்கள். அப்பொழுது அவர், அவர்களில் ஒருவரை நோக்கி, ''தாங்கள் யார்?'' என்று வினவுகின்றார். 'நாங்கள் வானவர்கள்' என்று அவர்கள் பதிலிறுக்கிறார்கள். 'அதோ, அரியணையில் வீற்றிருப்பவர் யார்?'' என்று மறுவினா விடுக்கின்றார் அவ:ா. அவர்கள் யூஃசுப் (அலை) ஆவர். யூசுஃப் இப்னு ஹுஸைனைக் காண்பதற்காக வந்துள்ளார்கள்' என்று அவர்கள் மறுமொழி பகர்கின்றார்கள்.

இதன் பின் நிகழ்ந்தவற்றை அவரே, யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களே கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''அது கேட்டு எனக்கு அழுகை, அழுகையாக வந்தது. அல்லாஹ் வின் திருத்தூதர் அவர்கள், என்னைக் காணவரும் வண்ணம் நான் என்ன அத்துணைப் பெரியவனா?' என்று அழுது கொண்டே கூறினேன்.

''அப்பொழுது யூசுஃப் (அலை) அவர்கள் தாங்கள் ஒய்யாரமாக வீற்றிருந்த அரியணையை விட்டும் கீழே இறங்கி வந்து என்னை ஆரத்

தழுவி அழைத்துச் சென்று, தங்களின் அரியாசனத்தில் சரி ஆசனம் தந்து அமர்த்தி என்னைக் கௌரவித்தனர். அப்பொழுது நான் அவர்களை நோக்கி, ''அல்லாஹ்வின் திருநபி அவர்களே! தாங்கள் என் மீது இத்துணை அன்பு செலுத்துவதற்கு நான் என்ன தகுதியானவனா?'' என்று வினயமாக வினவினேன். அப்பொழுது யூசுஃப் (அலை) அவர்கள் என்னை நோக்கி, ''அந்த அரசிளங்குமரி உம்மைத் தழுவப் பாய்ந்த பொழுது, நீர் இறைக்காவல் வேண்டிய வண்ணம் வெருண்டோடிய காட்சியை இறைவன் எனக்கும் வானவர்களுக்கும் காட்டினான். அப்பொழுது அவன் என்னை நோக்கி, ''யூசுஃபே! ஜுலைகா உம்மைத் தழுவ முற்பட்ட பொழுது, நீர் சபல முற்றுவிட்டீரே. இதோ பாரும் இந்த யூசுஃபை! அரசிளங்குமரி அவரைத் தழுவ முற்பட்ட பொழுது, எனக்கு அஞ்சி, என் காவல் தேடி அவளை விட்டும் வெருண்டோடு வதை'' என்று கூறிப் பெருமைப்பட்டான். அதன் பின் என்னையும், இவ்வானவர்களையும் உம்மைக் கண்டு, 'நீர் அவனின் அன்பிற்குரிய நேசர்களில் ஒருவர்' என்று நன்மாராயம் கூறி வருமாறு பணித்தான்' என்று திருவாய் மலர்ந்தார்.

''அதன்பின் யூசுஃப் (அலை) அவர்கள் என்னை நோக்கி, என் பெயர் புனைந்த இளவலே! ஒவ்வொரு காலத்திற்கும் ஒரு குத்பு உண்டு. இக்காலத்தின் குத்பு, துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் ஆவார். அவர்களிடம் இஸ்முல் அஃலம் உள்ளது அவரிடம் நீர் செல்வீராக! என்று பணித்து விட்டு மறைந்தனர் இத்துடன் கனவு கலைந்தது. இதன்பின் யூசுஃப் இப்னு ஹுசைன் (ரஹ்) அவர்களின் மனம் ஒரு நிலைக் கொள்ளவில்லை. விரைவில் எகிப்து நாடு சென்று, துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களைக் காண வேண்டும், அவர்களிடமிருந்து ''இஸ்முல் அக்லத்தை அறிய வேணும் என்ற வேணவா அவர்களை பிடர் பிடித்து உந்தியது. அவர்களின் கால்கள் அவர்களை விறுவிறுவென எகிப்து நாடு நோக்கி இழுத்துச் சென்றன.

எகிப்து நாடு வந்தடைந்த அவர்கள் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர் களைப் பள்ளியில் கண்டு அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்தனர். அதற்கு பதிலுரைத்த துன்னூன் மிஸ்ரி(ரஹ்) அவர்கள், மேற்கொண்டும் அவர்களிடம் யாதொன்றும் பேசவில்லை. ஒவ்வொரு நாளும் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் அறிவுரை நல்கும் பள்ளிவாயலுக்கு வந்து, ஒரு மூலையில் அமர்ந்து, அவர்கள் கூறுவதை வாய் மூடிக் கேட்டுக் கொண்டிருப்பதைத் தங்களின் நீங்காத வழக்கமாகக் கொண்டிருந்தனர். இவ்வாறு ஓராண்டு உருண்டோடியது.

அதன் பின் ஒரு நாள் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களை நோக்கி '' அந்த இளவல் எந்த ஊர்?' என்று வினவினர். 'ரை' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் மேற்கொண்டும் அவர்களைப் பற்றி யாதொன்றும் வினவவில்லை.

இதன்பின் வழக்கம் போல் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களின் பள்ளி வந்து தாம் அமரும் மூலையில் அமர்ந்து அறிவுரை கேட்டுச் சென்று வந்தார்கள். இவ்வாறு இரண்டாண்டுகள் ஓடி மறைந்தன.

இரண்டாவது ஆண்டின் முடிவில், துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களை நோக்கி, ''அவர் இங்கு வந்துள்ள காரணம் யாது?'' என்று வினவினர். ''தங்களைத் தரிசிப்பதற்காகத்தான்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். மேற்கொண்டும் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் யாதொன்றும் வினவவில்லை. இதன்பின் மூன்றாவது ஆண்டும் உருண்டோடியது.

அதன்பின் அவர்கள், தம் மாணவர்களை நோக்கி, ''அவருக்கு என்னிடமிருந்து யாதேனும் தேவையோ'' என்று வினவினர். அப்பொழுது யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் முன்வந்து ''ஆம்;தங்களிடமிருந்து இஸ்முல் அஃலத்தை அறிந்து செல்வதற்காக வந்துள்ளேன்'' என்று வினயமாகப் பதிலிறுத்தார்கள். அது கேட்ட துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் யாதொன்றும் பதில் கூறவில்லை. மௌனத்தில் மற்றோர் ஆண்டும் கழிந்தது.

அதன்பின் ஒருநாள் அவர்கள் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களை அருகழைத்து, அவர்களிடம் மரத்தால் செய்யப்பட்ட ஒரு பேழையைக் கொடுத்து, ''இதனை எடுத்துச் சென்று, இன்ன இடத்திலுள்ள பெரியாரிடம் கொடுத்து, அவர்கள் என்ன கூறுகின்றார் களோ, அதனை நினைவில் வைத்துக் கொள்ளும்'' என்று கூறினார்கள்.

அவ்விதமே பேழையை வாங்கிக் கொண்டு, அப்பெரியாரைக் காண்பதற்காக யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் அவ்விடம் நோக்கி நடந்து சென்றார்கள். அப்பொழுது அப்பேழைக்குள் என்னவோ நடமாடுவது போல் தோன்றவே, அது என்னவாக இருக்கும் என்ற ஆவல் அவர்களுக்கு ஏற்பட்டது. ''அது என்னவாகவாவது இருந்துவிட்டுப் போகட்டும். அதைப்பற்றி நமக்கேன் கவலை?'' என்று அவர்களின் உள்மனம் இடித்துரைத்தது. எனினும் அவர்களின் வெளிமனம் ''அதனைத் திறந்து பார்த்தால் என்ன தவறு?'' என்று அவர்களின் உள்மனத்துடன் வாதாடியது. 'அவ்விதம் செய்யக் கூடாது' என்று

அவர்களின் உள்மனம் எவ்வளவோ எடுத்துரைத்தும், அவர்களின் வெளிமனம் கேட்கவில்லை. இறுதியாக, அவர்களின் வெளிமனம் வென்றது. யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் மெதுவாக அப்பேழையைத் திறந்தார்கள். என்ன வியப்பு! ஒரு சுண்டெலி அதிலிருந்தும் வெளியே பாய்ந்தோடி ஒரு பொந்தில் புகுந்து மறைந்து விட்டது.

தம் வெளி மனத்தின் சொல்லைக் கேட்டுத் தாம் செய்த மாபெரும் தவற்றினை யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் இப்பொழுது தான் உணர்ந்தார்கள். யாது செய்வதென அவர்களுக்கு விளங்கவில்லை. துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களிடம் திரும்பச் சென்று நடந்த செய்தியைக் கூறுவோமே?'' என்று அவர்கள் ஒரு கணம் எண்ணினார்கள். மறுகணம், நாம் வேண்டிய பெரியாரிடமே சென்று நடந்த செய்தியைக் கூறுவோம் என்று எண்ணினர். இவ்வாறு எண்ணிய அவர்கள் அப்பெரியார் வாழும் இடம் நோக்கி நடந்து சென்றார்கள்.

இறுதியாக, அவர்கள் அந்த காலி மரப் பேழையுடன் அப்பெரியாரை வந்தடைந்தார்கள். அவர்களைக் கண்டதும் அப்பெரியார் புன்முறுவல் பூத்தவர்களாய், ''நீர் அவரிடம் இஸ்முல் அஃலத்தைச் சொல்லித் தருமாறு வேண்டினீரல்லவா?'' என்று வினவினர். அதற்கு யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், ''ஆம்'' என்று பதில் கூறவே, ''உம்முடைய பொறுமையின்மையைக் கண்டே, துன்னூன் ஒரு சுண்டெலியைத் தந்தார். எல்லாப் புகழும் இறைவனுக்கேயாகும். ஒரு சுண்டெலியைப் பத்திரமாகப் பாதுகாக்கத் தெரியாத நீர், எவ்வாறு இஸ்முல் அஃலத்தைப் பத்திரமாகப் பாதுகாப்பீர்!'' என்று கூறினார்கள்.

அது கேட்டு நாணித் தலை குனிந்த யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் மீண்டும் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்களிடமே வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள், யூசுஃப் (ரஹ்) அவர்களை நோக்கி, ''உமக்கு இஸ்முல் அஃலத்தைக் கற்றுத் தருவது பற்றி நான் நேற்று ஏழு தடவை இறைவனிடம் மன்றாடினேன். அதற்கான காலம் இன்னும் வரவில்லை என்று கூறி, இறைவன் அதற்கு அனுமதி வழங்க மறுத்து விட்டான். அதன் பின் அவன் என்னை நோக்கி, 'ஒரு சுண்டெலியைக் கொண்டு அவரைச் சோதித்துப் பார்' என்று கூறினான். அவ்விதமே நான் செய்ய இவ்வாறு நிகழ்ந்துவிட்டது. நல்லது; நீர் இப்பொழுது உம் ஊர் திரும்பி, அதற்கான காலம் வரும்வரையில் பொறுமையோடிரும்'' என்று கூறினர்.

''நல்லது; அவ்விதமே செய்கிறேன். ஆனால் நான் செல்வதற்கு முன் எனக்கு இறுதி அறிவுரை நல்குங்கள்'' என்று யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் கூறினர்.

''சரி; நான் உமக்கு மூன்று அறிவுரைகளை நல்குகின்றேன். அவற்றில் ஒன்று பெரியது; இரண்டாவது நடுத்தரமானது; மூன்றாவது சிறியது'' என்று கூறிய அவர்கள், ''பெரிய அறிவுரை என்னவென்றால், ''நீர் பயின்றவை அனைத்தையும் மறந்து விட வேண்டும்; எழுதியவை அனைத்தையும் அழித்துவிட வேண்டும். அவ்விதம் செய்வீராயின் உம் அகப்பார்வையில் இடப்பட்டுள்ள திரை அகற்றப்பட்டு விடும்'' என்று இயம்பினர்.

அப்பொழுது யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் அவ்விதம் செய்ய என்னால் இயலாதே'' என்று பதில் கூறினர்.

''நல்லது; இரண்டாவது, நடுத்தர அறிவுரை என்னவென்றால், நீர் என்னை மறந்து விட வேண்டும். என் பெயரை எவரிடமும் எடுத்துரைக்கக் கூடாது. என்னுடைய ஆசான் இவ்வாறு என்னிடம் கூறினார் எனப் பிறரிடம் எடுத்துரைப்பதே ஒருவிதத் தற்புகழ்ச்சியாகும்'' என்று கூறினார்கள்.

அதற்கு யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் ''அவ்விதமும் என்னால் செய்ய இயலாதே'' என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

''நல்லது; மூன்றாவது சிறிய அறிவுரையை நல்குகின்றேன்'' என்று கூறிய துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள், ''யூசுஃபே! நீர் மக்களுக்கு அறிவுரை நல்குவீராக! அவர்களை இறைவன்பால் அழைப்பீராக!'' என்று கூறினர்.

அது கேட்ட யூசுஃப் (ரஹ்) அவர்கள் மகிழ்ச்சியுற்றவர்களாய், ''இதனை என்னால் செய்ய இயலும். இதனை நான் செய்கிறேன்'' என்று கூறினர். அப்பொழுது துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களை நோக்கி ''ஆனால் ஓர் எச்சரிக்கை! அறிவுரை ஆற்றும் பொழுது, உம் உள்ளத்தில் 'தான்' என்ற அகந்தை ஏற்பட்டு விடக் கூடாது அல்லாஹ்வுக்காகச் செய்வதாக எண்ணிக் கொள்ள வேண்டும்,'' என்று கூறினர். 'நல்லது' என்றார்கள் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள்.

இதன்பின் ஆசானிடம் விடைபெற்றுத் தாம் பிறந்த ஊராகிய ரை திரும்பினர் அவர்கள். அவர்களை வரவேற்க ரை நகரமே திரண்டு வந்தது. தம் குருநாதரிடம் தாம் செய்து வந்த உறுதிப் பிரமாணத்தை நிறைவேற்றத் துவங்கிய யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், மக்களை ஒருங்கு திரட்டி, அவர்களுக்கு ஆத்மீகக் கருத்துக்களை எடுத்தோதினர். மார்க்க சட்ட திட்டங்களின்படிச் செயலாற்றி வந்த ரை நகர மக்களுக்கு அவர் களின் ஆத்மீகக் கருத்துக்கள் வேம்பெனக் கசந்தன. எனவே அவர்களின்

பேச்சைக் கேட்க வரும் மக்களின் தொகை நாளுக்கு நாள் குறைந்து இறுதியாக ஒருவருமே வராத நிலை ஏற்பட்டது.

ஒரு நாள் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் தாம் வழக்கமாகச் சொற்பொழிவாற்றும் இடத்திற்குக் குறிப்பிட்ட நேரத்தில் வந்த பொழுது, அங்கு ஒருவரையும் காணவில்லை. எனவே மனச் சோர்வுடன் அவர்கள் இல்லம் திரும்ப நாடினர். அப்பொழுது ஒரு கிழவி அவர்களை நோக்கி, ''நீர், மக்கள் உம் பேச்சைக் கேட்க விரும்புகின்றார்களா, அல்லவா என்பதைக் கவனியாது, அல்லாஹ்வுக்காகப் பேசுவதாக துன்னூனிடம் உறுதிப் பிரமாணம் செய்து வந்தீரல்லவா? அவ்விதமிருக்க ஏன் யாதும் பேசாது வெறுமனே திரும்பிச் செல்கின்றீர்?'' என்று வினவினார். அது கேட்டுப் பெரிதும் வியப்புற்ற அவர்கள், அக்கணமே பேசத் துவங்கினார்கள். இவ்வாறு அவர்கள் ஐம்பது ஆண்டு காலம் பேசினார்கள். மக்கள் எவரும் தம் பேச்சைக் கேட்க வருகின்றனரா, அல்லவா என்பதைப் பொருட்படுத்தாது பேசினார்கள். தம் பேச்சை மண்ணவர்கள் கேளாவிட்டாலும், விண்ணவர்களாவது கேட்கட்டும் என்று எண்ணிக் கொண்டு பேசினார்கள். தாம் பேசுவதை, தாம் எக்காரணம் கொண்டு பேசுகின்றோம் என்பதை இறைவனாவது அறிவானல்லவா; அது போதும் என்று எண்ணிக் கொண்டு பேசினார்கள். நாளடைவில் மக்கள் கூட்டம் கூட்டமாக, வந்து அவர்களின் அறிவுரைகளைக் கேட்கத் துவங்கினார்கள்.

இவ்வாறு அவர்களின் அறிவுரைகளைக் கேட்க வந்து, அவர்களின் ஆன்மீக மாணவராக இருக்கும் பேறு பெற்றவர்களில் இப்ராஹீம் அல் கவ்வாஸ் (ரஹ்) அவர்களும் ஒருவர். அப்பேற்றின் காரணமாக அவர்கள், ஊணின்றியும், வாகனமின்றியும், பாலைவனத்தில் நெடுந்தொலைவு பயணம் செய்தார்கள் என்று கூறப்படுகிறது. அவர்கள் தம் ஆசிரியர் பற்றிய அநுபவம் ஒன்றைக் கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''ஓரிரவு நான் அயர்ந்து உறங்குங்கால். 'நீர் யூசுஃப் இப்னு ஹுஸைனிடம் சென்று, அவர் ஏற்றுக் கொள்ளப்படாதவரில் ஒருவர் என்று கூறும்' என அசரீரி முழங்குவதைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்தேன். இதனை என் ஆசான் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களிடம் போய்க் கூறுவதை விட, என்மீது மலையே சரிந்து விழினும், அதனை தாங்கிக் கொள்வது எளிதாக இருக்குமே என்று எண்ணி, நான் கண்ட அந்த அற்புதக் கனவைப் பற்றி வியப்பும் திடுக்கமும் கொண்டவனாக அன்று முழுவதும் யாதொன்றும் செய்யாது வெறுமனே வீற்றிருந்தேன்.

"அடுத்தநாள் இரவும் நான் அயர்ந்து உறங்கும் பொழுது, அதே அசரீரி முழங்கியதைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்து, 'உளூ'ச் செய்து இறைவனிடம் என் பவம் பொறுத்தருளுமாறு இறைஞ்சிக் கொண்டிருந்தேன். அன்று பகல் முழுவதும் தியானத்திலேயே கழிந்தது.

மூன்றாம் நாள் இரவு நான் அயர்ந்து உறங்குங்கால், மீண்டும் அவ் அசரீரி கடுமையான குரலில் பின்வருமாறு முழங்கியது: "நீர் அவரிடம் சென்று அவர் ஏற்றுக் கொள்ளப்படாதவரில் ஒருவர் என்று கூறும். கூறத் தவறுவீராயின், நீர் உம் படுக்கையிலிருந்து எழுந்திரா வண்ணம் உமக்குப் பலமான அடிகொடுக்கப்படும்".

அதுகேட்டுத் துணுக்குற்று விழித்தெழுந்த நான் மிகவும் மன வேதனையுடன் பள்ளிவாயிலை நோக்கி நடந்து சென்றேன். அப்பொழுது யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் மிஹ்ராபில் வீற்றிருந்தார்கள். என்னைக் கண்டதும் "இப்ராஹீம்! ஏதேனும் பாடல்உமக்குத் தெரியுமா?" என்று வினவினர். "ஆம்" என்று நான் பதிலிறுத்தேன். அப்பொழுது அவர்கள் என்னை நோக்கி, "நல்லது; அதனைப் பாடும்" என்று கூறினர். நான் பாடினேன். அது கேட்டுச் சொக்கி மகிழ்ந்த அவர்கள், எழுந்து நீண்ட நேரம் நின்றவர்களாய் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்கள். அது செந்நீர் போன்றிருந்தது.

அதன்பின் அவர்கள் என்னை நோக்கி, "இதுவரை பலர் என்முன் இறைவனின் திருமறையை ஓதிக்கொண்டுதான் இருந்தார்கள். எனினும், அதுகேட்ட என் கண்களிலிருந்து ஒரு துளி நீர் கூட வெளிவரவில்லை. ஆனால், நீர் ஒரு பாடலைப் பாடியது என் உள்ளத்தை உருக்கிக் கண்ணீரை வெள்ளமென வழிந்தோடச் செய்து விட்டது. இதைக் காணும் பொழுது, மக்கள் என்னைக் காஃபிர் என்று கூறுவது சரியென்றே தோன்றுகிறது. 'நான் இறைவனால் ஏற்றுக் கொள்ளப் படாதவன்' என்று அசரீரி முழங்கியதும் சரியெனவே தோன்றுகிறது. ஆம்; இறைவசனத்தைக் கேட்டு மனமுருகிக் கண்ணீர் வடிக்காது, மனிதர்களால் இயற்றப்பட்ட பாடலைக் கேட்டுக் கண்ணீரை ஆறாகப் பெருக்கெடுத்து ஓடச் செய்பவன் நிச்சயமாக காஃபிரே, காஃபிர் தான். அதில் என்ன ஐயம் உள்ளது?" என்று கூறினார்கள்.

அப்பொழுது என்ன சொல்வதென்றே எனக்கு விளங்கவில்லை. கண்டது கனவா, நடப்பது கனவா, எது கனவு என்பதை அறிய இயலாத வனாய், மயக்கமுற்ற நிலையில் அவ்விடத்தை விட்டுக் கிளம்பிப் பாலை நோக்கி நடந்து சென்றேன். என் ஆசானின் மகாத்மியத்தின் மீது நான் கொண்டிருந்த நம்பிக்கை தளர்வுற்றது.

'எங்கு செல்கின்றோம்' யாது செய்கின்றோம் என்பதை அறியாத வனாக கால் சென்றவழியே நான் சென்று கொண்டிருக்குங்கால், பாலையின் நடுவே கிள்ரு (அலை) அவர்களைக் காணும் பேறு பெற்றேன். அவர்கள் என்னை நோக்கி, ''யூசுஃப் இப்னு ஹுஸைனுக்கு அல்லாஹ்விடமிருந்து ஓர் அடிகிடைத்தது. எனினும், அவரின் இடம் விண்ணகத்தின் உச்சமுகட்டில் உள்ளது. இத்தகு காதலையே ஒருவன் மனத்தில் கொள்ள வேண்டும். இறைவனையே நோக்கிய அவருடைய கண்கள், இனி அற்பஉலகக் கருவூலங்களின் பக்கலா திரும்பப் போகிறது?

''ஒருவன் இறைவழியில் பிரயாசையுடன் இத்துணை தொலைவு பயணம் செய்யும்பொழுது, 'நான் உன்னை ஏற்றுக் கொள்ளமாட்டேன்' என்று இறைவன் அவனுடைய முகத்தில் அடித்த போதினும், விண்ணகத் தின் உச்சி முகட்டில் ஏறிய அவன், அந்த உச்சிமுகட்டில் தானே இருப் பான். அவனுக்கு அரசபதவி கொடுக்கப்படாத போதினும், அமைச்சர் பதவியாவது கொடுக்கத்தானேபடும்' என்று கூறினார்கள்.''

ஆனால் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தை மக்கள் சரியாக உணராது, அவர்களைக் 'காஃபிர்' என்று வாய் கூசாது கூறினார்கள். இக்காலை ஒரு சம்பவம் நிகழ்ந்தது. நீஷாப்பூர் வந்த வணிகர் ஒருவர், அவ்வூரில் ஆயிரம் தீனார் கொடுத்து, ஓர் அழகிய துருக்கிய அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கினார். அவர் தமக்கு வேண்டிய கடன் பாக்கியை வசூல் பண்ணுவதற்காக மற்றோர் ஊருக்கு அவசரமாகச் செல்ல வேண்டி இருந்ததால், தாம் வாங்கிய அடிமைப் பெண்ணைத் தகுந்த ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டுச் செல்ல விரும்பி, அபூ உதுமான் என்ற பெரியவரை அணுகித் தம் நிலையை எடுத்துரைத்து, தாம் வரும் வரை அப்பெண்ணை அவரிடம் ஒப்படைத்துத் விட்டுச் செல்வதாகவும், தம்முடைய அவ்வேண்டுகோளை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் வேண்டி நின்றார். துவக்கத்தில் அவரின் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ள மறுத்த அபூ உதுமான், இறுதியாக அதற்கு ஒருவாறு இணங்கினார். அந்த வணிகரும் அந்த அடிமைப் பெண்ணை அபூ உதுமானின் இல்லத்தில் விட்டு விட்டு, மனஅமைதி யுடன் வெளியூர் புறப்பட்டார்.

ஒருநாள் அபூஉதுமான் தம் இல்லத்தில் வீற்றிருக்குங்கால், அவ் அடிமைப் பெண்ணின் மீது அவரின் பார்வை பட்டது. அடுத்த கணம் காதல் போதை தலைக்கேறி, அவருடைய தலை கிறுகிறுத்தது. யாது செய்வதென அறியாது, அவர் தம் ஆசான் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களை அணுகி, நடந்த செய்தியை ஒளிவுமறைவுன்றி எடுத்துரைத்து அவர்களின் அறிவுரை வேண்டி நின்றார்.அதுகேட்ட அபூஹப்ஸ் (ரஹ்)

அவர்கள், உடனே ரை நகர் சென்று, அங்கு வாழ்ந்து வரும் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களிடம் அதுபற்றி ஆலோசனை கலக்குமாறு அவருக்கு அறிவுறுத்தினார்கள்.

இதன்பின் அபூ உதுமான் அங்கு ஒரு கணமும் தாமதிக்காது ரை நகருக்குப் புறப்பட்டார். ரை நகர் வந்தடைந்த அவர் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் இல்லம் எதுவென மக்களிடம் விசாரித்தார்.

''அந்தக் காஃபிரைப் போய் நீர் ஏன் பார்க்க விரும்புகிறீர்? உம்மைப் பார்த்தால் ஒரு மதபக்தி வாய்ந்தவர் போன்று தோன்றுகிறது. அவரின் கண்களில் விழித்தால் கூட நீர் கெட்டுப் போய்விடுவீரே'' என்று கூறி, அவர்களைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாக, என்னவென்னவோ கூறினார்கள் ரை நகர மக்கள்.

அவர்களின் அக்கூற்று அபூ உதுமானின் தலையைச் சக்கரவாகமாகச் சுழலச் செய்தது. ஷைகு எனக் கருதி ஷைத்தானிடமல்லவோ வந்து விட்டோம் என எண்ணி வருந்திக் கொண்டு வந்த வழியே மீண்டார் அவர்.

விரைவில் நீஷாப்பூர் வந்தடைந்த அவர், தம் ஆசான் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்து நின்றார். அவரைக் கண்டதும் ஆவலுடன் ''என்ன செய்தி? யூசுஃப் (ரஹ்) அவர்களைப் பார்த்தீரா?'' என்று வினவினர் அபூஹப்ஸ் ஹத்தாத் (ரஹ்).

''இல்லையே'' என்று பதிலிறுத்தார் அபூ உதுமான்.

''ஏன்'' என்று கேட்டார்கள் அபூஹப்ஸ்.

அவர் ஒரு காஃபிர் என்றும், அவரின் கண்களில் விழித்தால் கூட நான் கெட்டுவிடுவேன் என்றும், மேலும் இன்ன, இன்ன விதமாக வெல்லாம் அங்குள்ள மக்கள் அவரைப் பற்றிக் கூறினார்கள். எனவே அவரிடம் செல்லாது திரும்பிவிட்டேன்'' என்று மறுமொழி பகர்ந்தார் அபூ உதுமான்.

''அப்படியா! சரி; மீண்டும் ரை நகர் சென்று அவர்களைக் கண்டு வாரும்'' என்று பணித்தனர் அபூஹப்ஸ்.

அவ்விதமே ரை நகர் மீண்ட அவர் யூசுஃப் (ரஹ்) அவர்களின் இல்லத்தைத் தேடிக் கண்டுபிடித்தனர். அங்குச் செல்ல வேண்டாமென்று கூறி அங்குள்ள மக்கள் முன்னைவிட ஆயிரம் ஆயிரம் அவதூறுக் கணைகளை அவர்கள் மீது தொடுத்த போதினும், அபூ உதுமானின்

செவியில் அவையெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்குபோல் ஆயின.

இறுதியாக, அபூ உதுமான், யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் இல்லத்தில் நுழைந்த பொழுது, ஆங்கு ஒரு வயோதிகர் வீற்றிருப்பதைக் கண்டார். அப்பொழுது அவரின் முன் அழகிய இளவல் ஒருவன் கூஜா ஒன்றையும், கிண்ணம் ஒன்றையும் வைத்துக் கொண்டிருந்தான். அம்முதியவரின் முகத்தில் பேரொளி ஒன்று இலங்கிக் கொண்டிருந்தது.

இல்லத்தின் உள்ளே நுழைந்து அபூ உதுமான் ஆங்கு வீற்றிருந்த முதியவருக்கு 'ஸலாம்' உரைத்தார். அவரும் பதில் 'ஸலாம்' உரைத்து, அவரை அமரச் சொன்னார்கள். அதன்பின் பற்பல ஆன்மீகக் கருத்துக்களை அள்ளிச் சொரிந்தார்கள். அதுகேட்டு அபூ உதுமான் அளவற்ற வியப் பெய்தினார்.

அவர்கள் பேசி முடிந்ததும், அபூ உதுமான், யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களை நோக்கி, ''இத்துணை உயரிய, ஆழிய ஆன்மீகக் கருத்துக்களைக் கூறும் தாங்கள், தங்கள் முன் ஓர் இளவலையும், மதுவையும் வைத்துக் கொண்டிருப்பது எனக்குப் பெரிதும் விந்தையாக உள்ளது. இதுபற்றித் தாங்கள் இறைவனுக்காக வேண்டி எனக்கு விளக்கம் பகரவேண்டும்'' என்று கூறினார்.

அப்பொழுது யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள் புன்முறுவல் பூத்தவர்களாய், ''இந்த இளவல் என் அருமந்த மைந்தன். அவன் என் மைந்தன் என்பது ஒரு சிலருக்கே தெரியும். அவனுக்கு நான் திருக்குர்ஆனை ஓதிக் கொடுத்துக் கொண்டுள்ளேன். ஒரு நாள் நான் தெருவழியே செல்லும் பொழுது, கூஜா ஒன்று குப்பை மேட்டிலே கிடப்பதைக் கண்டேன். அதை எடுத்து வந்து கழுவிச் சுத்தம் செய்து, இங்கு வருவோரின் தாகம் தணிப்பதற்காகத் தண்ணீர் வைத்துள்ளேன். என்னிடம் குடம் இல்லாததனால் இவ்விதம் செய்துள்ளேன்'' என்று கூறினர்.

''நல்லது, நான் அல்லாஹ்வின் பெயரைச் சொல்லிக் கேட்கிறேன். மக்கள் இவற்றையெல்லாம் பார்த்துவிட்டுத் தங்களைப் பற்றித் தப்பும் தவறுமாக என்னவென்னவெல்லாமோ கூறும் வண்ணம் தாங்கள் ஏன் இவ்வாறெல்லாம் செய்கிறீர்கள்?'' என்று வினவினார் அபூ உதுமான்.

'அதைப் பற்றியா கேட்கின்றீர்?' என்று கூறிப் புன்முறுவல் பூத்த யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், ''இவ்வாறு நான்

வேண்டுமென்றே செய்கின்றேன். மக்கள் என்னைப் பெரிதாகக் கருதித் துருக்கிய அடிமைப் பெண்ணை என்னிடம் அமானிதமாக ஒப்படைத்து விட்டுச் செல்லக்கூடாதல்லவா?'' என்று இயம்பினர்.

அவ்வளவுதான். அபூ உதுமானின் தலை சுழன்றது. யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களின் மகாத்மியத்தை உணர்ந்து, அவர்களின் தாள்களில் வீழ்ந்து தம்மை மன்னித்து ஆட்கொண்டு, அறிவுரை பகர வேண்டுமென்று கண்ணீரும் கம்பலையுடனும் வேண்டி நின்றார். அப்பொழுது அவர்கள் அபூ உதுமானை நோக்கி, ''இறைவனை நேசிப்பவர்கள் உலகத்துடன் நட்புறவு கொண்டிருக்க மாட்டார்கள். இறைவனை நேசிப்பவர்களின் உள்ளத்திலிருந்து அவனுடைய படைப்பு களை நேசிக்கும் பான்மை அகற்றப்படுகிறது'' என்று இயம்பினர்.

உண்மையில் யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்கள், பொறுமையின் புகலிடமாக விளங்கினர். ''துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு, தம் வெறுப்பைக் காட்டுபவர் பொறுமையாளரல்ல. துன்பத்தை இன்பமாகக் கொள்பவரே பொறுமையாளர்'' என்று அவர்கள் கூறுவார்கள்.

ஒருதடவை அவர்கள் எகிப்திலுள்ள பேரீச்சஞ் சோலை வழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, ஆங்கு ஒரு நீக்ரோ சிறைப்பட்டி ருப்பதைக் கண்டார். அவர், அவர்களின் பெயரைக் கூறி 'ஸலாம்' உரைத்து, அவர்களைத் தம்பால் அழைத்தார். அதுகேட்டு வியப்புற்று அவர்கள் அவரை நெருங்கிய பொழுது, ''யூசுஃப் இப்னு ஹுஸைன் அவர்களே! தாங்கள் தங்களுக்கு அவகாசம் ஏற்படுங்கால் இந்தப் பைத்தியக்காரன் பற்றி இறைவனிடம் பரிந்துரையுங்கள். அவன்மீதுள்ள அன்பின் காரணமாக நான் மாடு, மனை, சுற்றம் ஆகிய அனைத்தையும் துறந்தேன். ஆனால் இந்தச் சிறையின் இழிவும் துன்பமும் என்னை விட்ட பாடில்லை. இறைவன் மீது ஆணையாக, வானத்தை அரிகண்டமாகவும் பூமியைக் கால் தளையாகவும் எனக்கு அணிவித்த போதினும், நான் அவனை விடப் போவதில்லை. அவனின் அன்பிலிருந்து நான் முகம் திருப்பப் போவதுமில்லை. அவன் மீதுள்ள அன்பு, என் உடலையும் உயிரையும் ஊடுருவிச் சென்றுவிட்டது என்று நான் சொன்னதாக அவனிடம் கூறுங்கள்'' என்று சொன்னார். அதுகேட்டு அவர்களின் வியப்பு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகியது.

இறுதியாக, யூசுஃப் இப்னு ஹுஸைன் (ரஹ்) அவர்களுக்கு முடிவு காலம் நெருங்கியது. அப்பொழுது அவர்கள் இறைவனை நோக்கி, ''இறைவனே! நான் மக்களுக்கு சொல்லால் அறிவுரை நல்கினேன்.

என்னுடைய நஃப்ஸிற்கு செயலால் அறிவுரை பகர்ந்தேன். எனினும் என்பாவங்கள், என் நஃப்ஸ் எனக்குச் செய்த துரோகத்தால் ஆனவையாகும். எனவே, நான் செய்த பாவங்களை, நான் மக்களுக்கு அறிவுரை நல்கியதன் பொருட்டாவது மன்னித்துவிடுவாயாக!'' என்று இறைஞ்சினர்.

அவர்கள் இறந்த பின் ஒருவர் அவர்களைக் கனவில் சந்தித்து, ''இறைவன் தங்களுடன் எவ்வாறு நடந்து கொண்டான்?'' என்று வினவிய பொழுது, ''இறைவன் என்பவம் பொறுத்தருளினான்'' என்று விடையிறுத்தனர். ''எதன் காரணமாக?'' என்று அவர் வினவிய பொழுது, ''நான் என்றுமே வீண்விளையாட்டுகளில் ஈடுபடாததன் காரணமாக'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.



## 17. அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்)

இளைஞர் ஒருவர் தாம் பிறந்த ஊராகிய பக்தாதிலிருந்த ஹஜ்ஜு செய்யப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன் தம் அன்னையிடம் விடை பெறச் சென்றார். ''நல்லது, மகனே! சென்று வா'' என்று கூறி வழி அனுப்பி வைத்தார் அன்னை. எனினும் அவருடைய உள்ளத்தில் தம் மகன், தம்முடைய இத்தள்ளாத வயதில் தம்மைவிட்டுப் பிரிகிறாரே என்ற ஏக்கம் நிறைந்திருந்தது. எனினும் ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றுவதைத் தடுப்பது சரியுமல்ல, நெறியுமல்ல எனக்கருதியே, ''நல்லது, மகனே! சென்று வா'' என்று அவரின் நா மொழிந்தது. எனினும் அவரின் உள்ளம் அவ்வாறு மொழியவில்லை.

இல்லம் விட்டுப் புறப்பட்ட மகன் பாலை நடுவே சென்று கொண்டிருக்கிறார். இரவு ஓரிடத்தில் படுத்துறங்குகிறார். குளிக்க வேண்டிய நிலை அவருக்கு எதிர்பாரா வண்ணம் ஏற்பட்டுவிடுகிறது. ''நான் நல்ல முறையில் இல்லம் விட்டுப் புறப்படவில்லை. எனவே தான் எனக்கு இந்நிலை ஏற்பட்டு விட்டது'' என்று தம் மனத்திற்குள் கூறிக்கொண்ட அவர், உடனே தம் இல்லம் நோக்கித் திரும்பி வருகிறார். இல்லம் வந்தடைந்த அவர், வாயிலில் தம் அன்னை, தம் வரவை எதிர்பார்த்த வண்ணம் வீற்றிருப்பதைக் கண்டதும் வியப்பு மேலிட்டவராய், ''அம்மா! தாங்கள் எனக்கு உளப்பூர்வமாக விடை நல்கவில்லையல்லவா?'' என்று வினவுகிறார். ''ஆம், மகனே! நல்கவில்லை. நீ இல்லாத வீட்டை என்னால் ஏறிட்டுப் பார்க்க இயலவில்லை. நீ புறப்பட்டதிலிருந்து நான் இவ்விடத்திலேயே வீற்றிருக்கிறேன் - நீ திரும்பி வரும் வரை இங்கிருந்து கிளம்புவதில்லை என்ற உள உறுதியுடன் வீற்றிருக்கிறேன்'' என்று கூறுகிறார். அதுகேட்ட அவரின் மைந்தர், தம் அன்னைக்கு அவரின் தள்ளாத வயதில் அவருடன் இருந்து தாம் ஆற்ற வேண்டிய கடமையை உணர்கிறார். அவ்வுணர்வு அவரை ஹஜ்ஜுக் கடமையைத் தள்ளிப் போடுமாறு செய்து, அவரின் இல்லத்திலேயே அவரைத் தங்குமாறு செய்துவிடுகிறது.

ஜுனைத் (ரஹ்) அவர்களின் மாணவர் குழுவில் ஒருவராக இருந்து, அம்மேதகையிடம் ஆன்மீகப் பயிற்சி பெற்ற அபூபக்ர் முகம்மது இப்னு அலீ இப்னு ஜஃபர் அல்கத்தானி (ரஹ்) அவர்கள் இதன்பின் அன்னை

இறக்கும் வரை அவருடன் இருந்து, அவருக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்து முடித்தபின் மக்கா புறப்பட்டார்கள். பாலையின் நடுவே அவர்கள் தனியாக நடந்து செல்லுங்கால், வழியிலே ஒருவர் இறந்து கிடப்பதையும், இறப்பிலும் கூட அவரின் முகத்தில் புன்முறுவல் பூத்துக் குலுங்குவதையும் கண்ணுற்றார்கள். அது கண்டு பெரிதும் வியப்புற்ற அவர்கள் அவரை நோக்கி, "என்ன, நீரோ இறந்துவிட்டீர். எனினும் உம் முகத்தில் புன்முறுவல் பூத்துக் குலுங்குகின்றதே'' என்று வினவினர். அதற்குப் பிணமாய்க் கிடந்த அம்மனிதர். "என்னுடைய இறைக்காதல் அத்தன்மையது'' என்று பதிலிறுத்தார். அதுகேட்டு அவருடைய வியப்பு பன்மடங்கு அதிகமாகியது.

இதன்பின் மக்கா சென்ற அவர்கள் ஸஃபா - மர்வாவுக் கிடையில் ஒரு வீடு அமர்த்தி அங்கேயே தம் இறுதி நாள்வரையிலும் தங்கி விட்டார்கள். ஸிராஜுல் ஹரம் (ஹரமின் ஒளிவிளக்கு) என்று மக்களால் அழைக்கப்பட்ட அவர்கள், தங்களின் பெரும்பாலான நேரத்தை வணக்கத்திலும், ஹரம் ஷரீஃபின் ஊழியத்திலும் கழித்தனர். ஒவ்வொரு நாளும் காலையிலிருந்து மாலைவரை குர்ஆன் முழுவதையும் ஓதித் தொழுது முடிப்பர். கஃபாவைச் சுற்றி வரும் பொழுது, பன்னிரண்டா யிரம் தடவை குர்ஆனை ஓதி முடித்துள்ளார்கள். முப்பதாண்டு காலம் கஃபாவின் முகட்டிலிருந்து தண்ணீர் வரும் குழாயின் (மீஸாபெரஹ் மத்தின்) கீழே அமர்ந்து வணக்கம் நிகழ்த்தி வந்தார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது "அலீயைத் தவிர உண்மையான வீரர் வேறொரு வருமில்லை'' என்று கூறியது, அபூபக்ர் அல்கத்தானி (ரஹ்) அவர்களுக்கு என்னவோ மாதிரியாக இருந்தது. வீணாக முஸ்லிம்களின் இரத்தத்தைச் சிந்துவதை விரும்பாது அலீ (ரலி) அவர்கள், முஆவியா (ரலி) அவர் களுடன் உடன்பாடு செய்து கொண்டது, அவர்களுக்குக் கோழைத் தனம் போன்று தோன்றியது. எனவே, அவர்களின் உள்ளின் உள்ளே அலீ (ரலி) அவர்கள் மீது ஒருவித இனம் தெரியாத வெறுப்பு இருந்து வந்தது. ஓரிரவு அவர்கள் தங்களின் இல்லத்தில் அயர்ந்து உறங்குங்கால், அற்புதமான கனவொன்று கண்டனர். அதில் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர் கள், தங்களின் அன்புத் தோழர்கள் புடைசூழ அவர்களின் முன்காட்சி நல்கி, அவர்களை ஆரத்தழுவி அருகே நின்று கொண்டிருந்த ஒருவரைச் சுட்டிக் காட்டி 'இவர் யார், தெரியுமா?' என்று வினவினர். "ஆம்; அவர்கள் அபூபக்ர் (ரலி) ஆவர்'' என்று பதிலிறுத்தனர் அவர்கள். அதன்பின் மற்றொருவரைச் சுட்டிக் காட்டி "இவர் யார் தெரியுமா?'' என்று வினவ, "ஆம், அவர்கள் உமர் (ரலி) ஆவர்'' என்று மறுமொழி

பகர்ந்தனர் அவர்கள். அவ்வாறே உதுமான் (ரலி) அவர்களையும் சுட்டிக்காட்டி வினவ அவர்கள் சரியான விடையிறுத்தார்கள். பின்னர் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள் அலீ (ரலி)அவர்களைச் சுட்டிக் காட்டி ''இவர் யார் தெரியுமா?'' என்று வினவ, அவர்கள் மீது அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் ஏற்கனவே கொண்டிருந்த வெறுப்பின் காரணமாக அவர்களை ஏறிட்டுக் கூடப் பார்க்க நாணமுற்று தலைகவிழ்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தனர்.

அப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், அவர்கள் இருவரையும் உடன் பிறவாச் சகோதரர்களாக்கி ஒன்று பிணைக்கவே, அவர்கள் இருவரும் ஒருவரை மற்றொருவர் கட்டித் தழுவிக் கொண்டார்கள். இதன் பின் எல்லோரும் அவ்விடம் விட்டு அகன்று விடவே, அலீ (ரலி) அவர்களும், அபூபக்ர் அல்கத்தானி (ரஹ்) அவர்களை நோக்கி, ''வாரும்; நாம் அபுல் குபைஸ் மலைக்குச் செல்வோம்'' என்று கூறினர். அவ்வாறே அவர்கள் இருவரும் அபுல் குபைஸ் மலைமீது ஏறி, அதன் உச்சியை அடைந்துவிட்டனர். அப் பொழுது கஃபா அவர்களின் கண்களில் தென்பட்டது. அத்துடன் கனவு கலைந்தது. விழித்தெழுந்த அவர்களின் உள்ளத்தில் அலீ (ரலி) அவர்களைப் பற்றி அவர்கள் கொண்டிருந்த வெறுப்பு அணுவளவும் இல்லாதொழிந்து விட்டது.

அவர்களுடன் நட்புறவாடி வந்த மற்றொருவர்மீதும், அவர்களுக்கு ஒருவித இனம் தெரியாத வெறுப்பு இருந்து வந்தது, அவர் தம்முடன் இருப்பதும், உரையாடுவதும், அவர்களுக்கு அலுப்பைத் தந்து வந்தன. தம்மீது நல்லன்பு கொண்டவர் மீது வெறுப்புக்கொள்வது தகாது என்று எண்ணிய அவர்கள், அவ்வெறுப்பை அன்பாக மாற்றும் நோக்கத்துடன், அவருக்கு ஓர் அன்பளிப்பு நல்கினர்.எனினும், அந்த வெறுப்பு அவர்களின் உள்ளத்திலிருந்தும் மாறவில்லை. எனவே அவர்கள், அவரைத் தங்களின் இல்லம் அழைத்துச் சென்று, தாம் கீழே படுத்துக் கொண்டு தம்முடைய முகத்தில் அவருடைய காலை வைக்குமாறு கூறினர். முதலில் அவர் மறுத்தபோதினும், பின்னர் அவர்கள் பெரிதும் வற்புறுத்தியதன் பேரில் அவ்வாறே செய்தார். அப்பொழுது தான் அவர்களின் உள்ளத்தில், அவர்மீது இருந்த வெறுப்பு சிறிது சிறிதாகக் குறைந்து, அன்பாக மாறியது. உடனே அவர்கள் உள்ளே ஓடிப்போய், தமக்கு அன்பளிப்பாக வந்திருந்த இருநூறு திர்ஹங்களையும் கொண்டு வந்து, அவரின் தொழுகை விரிப்பில் வைத்து, ''இவற்றை எடுத்துச் சென்று, நீர் விரும்பிய வண்ணம் செலவு செய்து கொள்ளும்'' என்று கூறினர்.

அதுகேட்ட அவர் "நான் இத்தகு சூழ்நிலையை எழுபதாயிரம் தீனார் பெறுமானமுள்ள என் சொத்துக்களை விற்று அறவழியில் செலவழித்துப் பெற்றுள்ளேன். தாங்கள் இப்பணத்தைத் தந்து என்னை ஏமாற்ற விரும்புகிறீர்களா என்ன?" என்று கூறிவிட்டுத் தம் தொழுகை விரிப்பைத் தம் தோளில் போட்ட வண்ணம் நடையைக் கட்டினார். கீழே உரண்டு ஓடிய திர்ஹங்களை அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் பொறுக்க வேண்டியதாயிற்று.

மற்றொரு நாள் அவர்களின் மாணவர் ஒருவர் இறப்புப் படுக்கையில் கிடந்தார். அவரின் அருகே அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் வீற்றிருந்தார்கள். அப்பொழுது அவர் தம் கண்களை அகல விரித்து, கஃபாவையே வெறிக்க, வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ஆங்கு வந்த ஒட்டகை ஒன்று, அவரின் முகத்தில் முட்டி, அவரின் கண்களை வெளியே தள்ளியது. அப்பொழுது "இறைவனிட மிருந்து அவருக்கு அறிவிப்புகள் வரும் இந்நேரத்தில், அவர் கஃபாவை வெறிக்க வெறிக்கப்பார்த்துக் கொண்டிருந்தார். அதன் காரணமாகத் தண்டிக்கப்பட்டார். இறைவனின் முன்னிலையில் வைத்து அவனை நோக்காது, அவனுடைய இல்லத்தை நோக்கிக் கொண்டிருப்பது ஒரு போதும் ஒழுக்க முறையாகாது" என்று அசரீரி முழங்குவதை அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் செவியுற்றார்கள்.

வேறொரு நாள் அவர்கள், பனூ ஷைபா வாசலின் அருகே தலை குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்த பொழுது, அவ்வாயில் வழியாக வந்த பெரியவர் ஒருவர், அவர்களை அணுகி, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து 'மகாமெ இப்ராஹீமு'க்கு நீர் வரவில்லையா? அங்கு ஒருவர் நபிமொழிகளை விளக்கம் செய்கிறாரே" என்று கூறினார்.

'எவர் எவர் வாயிலாக அவர் நபிமொழிகளை அறிந்து விளக்கம் செய்கிறார்?' என்று வினவினர் அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள்.

அதற்கு அப்பெரியவர், "அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா, ஸுஹ்ரி, அப்துல்லா இப்னு மஃமர் ஆகியோர் வழியாக வந்த நபிமொழிகளை அவர் விளக்கம் செய்கிறார்" என்று விடையிறுத்தார்.

"அப்படியா! அவர் சங்கிலித் தொடர் போன்று பலர் வாயிலாகக் கேட்டறிந்தவைகளை விளக்கம் செய்கிறார். ஆனால் நாமோ எவ்விதத் தொடர்பு மூலமாகவல்லாது நேரடியாகவல்லவோ கேட்டறிகிறோம்" என்று அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் கூறினர்.

"நீர் எவரிடமிருந்து கேட்டறிகிறீர்?" என்று அப்பெரியவர் மறு கேள்வி விடுத்தார்.

அதற்கு அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் "இறைவனிட மிருந்து நேரடியாக என் உளம்கேட்டு, எனக்குத் தெரிவிக்கிறது" என்று மறுமொழி பகர்ந்தார்கள்.

அது கேட்டு அப்பெரியவர் விடவில்லை.

"நீர் கூறுவது உண்மை என்பதற்கு ஆதாரம் என்ன?" என்று மடக்கினார்.

"ஆதாரமா? இப்பொழுது என் மனம், தாங்கள் கிள்ரு (அலை) என்று கூறுகிறது. இதுதான் அதற்கு ஆதாரம்" என்று கூறினர்.

அதுகேட்டு அப்பெரியவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இதைப் பற்றி கிள்ரு (அலை) அவர்கள், பின்னர் ஒருவரிடம் கூறும் பொழுது,"நான் அபூபக்ர் அல் கத்தானியைச் சந்திக்கும் வரையில், நான் அறியாத இறைநேசச் செல்வர் ஒருவருமில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தேன். நான் அவரை யார் என அறியாத பொழுது அவர் என்னை எவரென அறிந்திருந்தார். அதன் பின், தான் நான் அறியாத ஆனால் என்னை அறிந்த பல நண்பர்களை இறைவன் பெற்றுள்ளான் என்ற உண்மை எனக்குத் தெரிய வந்தது" என்று இயம்பினார்கள்.

ஓரிரவு அபூபக்ர் அல் கத்தானி (ரஹ்) அவர்கள் அயர்ந்து உறங்கும் பொழுது, கனவொன்று கண்டார்கள். அழகொழுகும் திருமுகத்து இளவல் ஒருவர், அவர்களின் முன் திருத்தோற்றம் வழங்கினார். அப் பொழுது அவர்கள் அவரை நோக்கி, "நீர் யார்? என்று வினவினர். "வணக்கம்" என்று மறுமொழி பகர்ந்தார் அவர். "நீர் எங்கே வசிக்கின்றீர்? என்று அவர்கள் வினவிய பொழுது, "துன்பம் தோய்ந்த உள்ளத்தில்" என்று மறுமொழி பகர்ந்தார்.

அதன்பின் அவர்களின் கனவில் பயங்கரமான பெண் ஒருத்தி காட்சி வழங்கினாள். அவளை நோக்கி "நீ யார்?" என்று அவர்கள் வினவிய பொழுது "சிரிப்பும் வேடிக்கையும்" என்று பதில் கூறினாள் அவள். "எங்கே வசிக்கின்றாய்?" என்று அவர்கள் வினவிய பொழுது, "பொடு போக்காக வாழ்ந்து, இன்பத்தில் திளைப்பவர்களின் உள்ளத்தில்" என்று பதில் கூறினாள் அவள். அது கேட்டுத் திடுக்குற்று விழித்தெழுந்த அவர்கள், இனிமேல் ஒரு போதும் சிரிப்பதில்லை என்று உறுதி மொழி பூண்டு, தம் இறுதி வரை அவ்வுறுதி காத்து வந்தார்கள்.

ஒருவர் அவர்களை அணுகி, "எவ்வாறு உலக ஆசையை உள்ளத்தி லிருந்து விரட்டியடிப்பது?" என்று வினவினார். நாளொன்றுக்கு நாற்பது தடவை "இறைவனே! உன்னைத் தவிர நித்தியனோ, நிலையானவனோ வேறு ஒருவனும் இல்லை. நீ என்னுடைய உள்ளத்தை, உன் பேரொளி

யால் நிரப்புவாயாக! என்று இறைஞ்சி வருவாயாக!'' என்று அவர்கள் அறிவுரை பகர்ந்தார்கள்.

''அடியான் இறைஞ்சும் பொழுது அல்லாஹ் தன் மன்னிப்பின் கதவை அவன் பக்கல் திறக்கிறான்.

''உன்னுடைய உடல் இவ்வுலகில் வாழ்ந்த போதினும், உன் இதயம் அவ் உலகில் வாழட்டும்.''

''வைகறையில் ஒரு மென் காற்று இறை கட்டளையின் மீது வீசுகிறது. அது இறைவனின் நல்லடியார் தம் பவம் நினைத்துச் சிந்திய கண்ணீரையும், துன்ப மூச்சுகளையும் சுமந்து கொண்டு சென்று, இறை முன்னிலையில் சமர்ப்பிக்கின்றது'' என்பவை அவர்களின் திருவாயிலிருந்து உதிர்ந்த முத்துக்களாகும்.

''துறவி எவனெனில், ஒன்றுமே பெற்றிராதவனும், அவ்விதம் ஒன்றுமே பெற்றிராததற்காக மகிழ்ச்சியுறுபவனும், இறை வணக்கத்தில் முயற்சியாற்றுகின்றவனும் தான்'' என்று அவர்கள் கூறினார்கள். கூறியதோடன்றி, அவ்விதமே தாங்களும் வாழ்ந்து, மற்றவர்களும் வாழ வேண்டுமென்று விரும்பினார்கள்.

அபுல் ஹஸன் மர்வி என்பவர் கூறுகின்றார்:''நான் எவ்வித உணவுப் பொருளுமின்றி வனாந்தரத்தில் சென்றேன். அங்கு நான் ஒரு குளத்தின் கரையில் அமர்ந்து, இறைவன் மீது ஆதரவு (தவக்குல்) வைத்து, யாதொரு பொருளும் கொண்டு வரவில்லையே' என்று எண்ணினேன். அப்பொழுது அக்குளத்தின் அண்மையிலிருந்து, 'நீர் உம்முடைய ஆன்மாவோடு வீண் பேச்சுப் பேசாதீர்' என்று சப்தம் வந்தது. ஏறிட்டுப் பார்த்தேன். அபூபக்ர் கத்தானி (ரஹ்) அவர்கள் நின்று கொண்டிருந் தார்கள். நான் இறைவனிடம் அக்கணமே பாவ மன்னிப்புக் கோரினேன்.''

இவ்வாறு மனிதர்களின் உள்ளங்களை அறியும் மாபெரும் மகாத்மா வாக, அல்லாஹ்வின் அருள் நேசராக வாழ்ந்து வந்த அவர்கள், இவ் உலகை விட்டுப் பிரியும் காலமும் அண்மியது. அப்பொழுது மக்கள் அவர்களைச் சூழ வீற்றிருந்து, ''தாங்கள் எந்த நற்செயலாற்றியதனால் இத்தகு தகுதியை எய்தப் பெற்றீர்கள்?'' என்று வினவிய பொழுது, ''என்னுடைய இறுதி நெருங்காதிருப்பின், நான் இதற்குப் பதில் சொல்ல மாட்டேன். நான் நாற்பதாண்டுகளாக, என் மனத்தைக் கண்காணிப்ப வனாக இருந்தேன். தற்பெருமையை என் மனத்திலிருந்து விரட்டியடித் தேன். அல்லாஹ்வைப் பற்றிய நினைவேயன்றி வேறொன்றையும் நான் அதில் புக அனுமதிக்கவில்லை'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

அவர்கள் ஹிஜ்ரி 322-ஆம் ஆண்டில், மக்கமா நகரில் இறப்பெய்தி, அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

# 18. இப்னு அஃபீஃ (ரஹ்)

ஹிஜ்ரி 270 ஆம் ஆண்டில் ஈரான் நாட்டு அரச குடும்பம் ஒன்றில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு, அதன் பெற்றோர்கள் முஹம்மது என்னும் அழகுசால் திருப்பெயரிட்டு, அருமை பெருமையுடன் வளர்த்து வந்தார்கள். வயதேற ஏற அரசுத் துறையிலல்லாது, ஆன்மீகத் துறையிலும் அதிக அக்கரை செலுத்திய அவர்கள், அது பற்றிய எல்லா நூல்களையும் கற்றுத் தேர்ந்தார்கள். பின்னர் பகுதாது சென்று ஹல்லாஜ், ஷிப்லீ முதலான ஞானிகளையெல்லாம் கண்டு, அவர்களுடன் அளவளாவி மகிழ்ந்தார்கள். பின்னர் ஹஜ்ஜு செய்ய மக்கமா நகரம் சென்ற அவர்கள், தம் வாணாளில் ஆறு 'ஹஜ்'ஜுகள் வரை செய்தார்கள். பின்னர் ஸூஃபியாகப் பல நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்தார்கள். இருபதாண்டுகளாக ஒரே கம்பளி ஆடையையே அணிந்திருந்தார்கள்.

அவர்களுடைய துறவு நிலையோ மகோன்னதமாக இருந்தது.* ஒவ்வொரு நாளும் நோன்பு நோற்றார்கள். ஆனால் நோன்பு திறந்தபின், அவர்கள் உண்ட உணவோ, ஏழே ஏழு 'கிஸ்மிஸ்' பழங்கள்தாம். அதற்கு அதிகமாகவும் இல்லை. குறைவாகவும் இல்லை. ஓரிரவு அவர்களின் ஊழியன் அவர்களின் முன் எட்டு 'கிஸ்மிஸ்' பழங்களை வைத்து விட்டான். அதனை அறியாது அவர்கள் உண்டு விட்டார்கள். அன்றிரவு அவர்களுக்கு அவர்களின் வணக்கத்தில் இன்பம் ஏற்படவில்லை. அதற்கான காரணம் என்னவென்று அவர்கள் தங்களின் மண்டையை உடைத்துக் கொண்டார்கள். எனினும் அவர்களுக்கு யாதொன்றும் புலப்படவில்லை. திடீரென்று அவர்களின் சிந்தனையில் யாதோ ஒன்று பளிச்சிட்டது. தங்களின் ஊழியனை அழைத்து, ''இரவு நான் உண்பதற்கு எத்தனை 'கிஸ்மிஸ்' பழங்களை வைத்தாய்?'' என்று வினவினர். ''எட்டு'' என்று அவன் மறு மொழி பகர்ந்தான். ''ஏன் எட்டு வைத்தாய்?'' என்று அதட்டினார்கள் அவர்கள். ''தங்களின் உடல் நாளுக்கு நாள் மெலிந்து

---

* அவர்கள் தம் வாணாளில் நாற்பது நாட்கள் தொடர்ந்து நோன்பு நோற்றார்கள். இவ்வாறு நாற்பது தடவை நோன்பு நோற்றுள்ளார்கள்.

கொண்டு வருவதைக் கண்டு என்னால் பொறுக்க முடியவில்லை. எனவே சிறிது தெம்பு ஏற்படட்டுமே என்று அவ்வாறு செய்தேன்'' என்று பதில் கூறினான் அவன். அப்பொழுது இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் அவனை நோக்கி, ''உண்மையில் நீ என்னுடைய நண்பனல்ல; விரோதி. நீ என்னுடைய நண்பனாய் இருந்திருப்பின், எனக்கு எட்டுப் பழங்களைத் தந்திருக்க மாட்டாய். ஆறு பழங்களையே தந்திருப்பாய்'' என்று கூறி, அவனை அக்கணத்திலேயே வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். அவர்கள் இவ்வாறு எளிய உணவை அருந்தி வந்ததனால், அவர்களுக்கு 'எளியவர்' என்று பொருள்படும் அஃபீஃப் என்ற பெயர் ஏற்பட்டது.

இதன்பின் மக்கமாக நகர் நோக்கிப் புறப்பட்ட அவர்கள், வழியில் பகுதாது மாநகரம் வந்து சேர்ந்தார்கள். அங்கு அக்காலை, ஆன்மீகச் செங்கோல் நடத்தி வந்த ஜுனைத் (ரஹ்) அவர்களைத் தவறான தன் மதிப்பின் காரணமாக அவர்கள் சென்று காணவில்லை.

சில நாட்கள் அந்நகரில் தங்கி இருந்துவிட்டு, அவர்கள் மக்கமா நகரம் நோக்கிப் பாலையில் நடந்து செல்லுங்கால், தாகவிடாய் அதிகரிக்கவே, எங்கேனும் தண்ணீர் கிடைக்கிறதா வென்று, வாளியையும் கயிற்றையும் எடுத்துக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து திரிந்தார்கள். இறுதியாக வெகு தொலைவில் ஒரு கிணற்றைக் கண்டு, அதை நோக்கி அவர்கள் நடந்து சென்றார்கள். அப்பொழுது அதன் விளிம்பின் மீது ஒரு மான் நின்று தண்ணீர் அருந்திச் செல்வதைக் கண்டனர். ஆனால் அவர்கள், அதன் விளிம்பை அண்மியதும், தண்ணீர் பாதாளத்திற்கு ஓடி விட்டதைக் கண்டார்கள். அது கண்டு அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், ஏமாற்றத்திற்கும் அளவில்லை. ''இறைவனே! உன்னுடைய இந்த அடியான், இந்த மானை விட இழிந்தவனாக ஆகிவிட்டானா, என்ன?' என்று அலறினார்கள். அப்பொழுது அசரீரியாக ''அந்த மான், வாளியும், கயிறும் கொண்டு வரவில்லையே. அது நம்மீதல்லவோ முழு நம்பிக்கை வைத்திருந்தது'' என்று ஓர் ஒலி முழங்கியது. அதனைச் செவியுற்றதும், இப்னு அஃபீஃப்(ரஹ்) அவர்கள், மகிழ்ச்சி மீக்குற்றவர்களாய் அந்த வாளியையும் கயிற்றையும் தூக்கி எறிந்து விட்டு, வந்த வழியே திரும்பிச் சென்று விட்டார்கள்.

அவர்கள் சில அடிகள் தாம் எடுத்து வைத்திருப்பர். 'அல்லாஹ்வின் நல்லடியாரே! நாம் உம்மைச் சோதித்துப் பார்த்தோம். நீர் துன்பத்தில் பொறுமையை மேற்கொண்டீர். எனவே நீர் திரும்பிச் சென்று, நீர் அருந்தும்'' என்று மீண்டும் அசரீரி முழங்குவதைச் செவியுற்றார்கள்.

இது அவர்களுக்கு முன்பை விடப் பன்மடங்கு மகிழ்ச்சியையும் வியப்பையும் நல்கியது. அவர்கள் கிணற்றை நோக்கி அடியெடுத்து

வைத்து நடந்தார்கள். என்ன வியப்பு! அவர்களுடன் போட்டியிட்டுக் கொண்டு தண்ணீரும், அக்கிணற்றின் விளிம்பு வரைப் பொங்கி வந்தது. அதன் மீது குமிழிகள் நீந்தி விளையாடி மின்னியது. அவை தம் முத்துப் பற்களைத் திறந்து முறுவலித்து, அவரை வரவேற்பது போன்றிருந்தது.

இதன்பின் அத்தண்ணீரை அள்ளி அள்ளி வயிறார உண்டு தாகம் தீர்ந்தபின், அதைக் கொண்டு அவர்கள் உளூவும் செய்து கொண்டார்கள். இதன்பின் அவர்கள் மதீனா வந்து சேரும் வரையில், அவர்களுக்குத் தாகவிடாயே ஏற்படவில்லை.

பின்னர் மக்கா சென்று ஹஜ்ஜுக் கடனை முடித்துவிட்டு மதீனா திரும்பும் வழியில் அவர்கள் மீண்டும் பக்தாது வந்து சேர்ந்தார்கள். அன்று வெள்ளிக்கிழமையாக இருந்தது. ஜும்ஆத் தொழுகை தொழுவதற்காகப் பள்ளிவாயில் சென்ற அவர்களை, ஜுனைத் (ரஹ்) அவர்களின் கண்கள் கண்டு கொண்டன. 'நீங்கள் உண்மையான பொறுமையாளராய் இருந் திருப்பின், தண்ணீர் உங்களின் காலடியிலே குமிழியிட்டுக் கொப் பளித்துக் கொண்டு வந்திருக்குமே'' என்று கூறினார்கள் அவர்கள். இப்பொழுதுதான் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களுக்கு, ஜுனைத் (ரஹ்) அவர்களின் மகாத்மியம் நன்கு விளங்கலாயிற்று.

அவர்களை இறைவன் தன்னுடைய மெய்யடியாராக ஏற்றுக் கொள்ளும் முன், அவர்களின் இளமையில் நடந்த நிகழ்ச்சி ஒன்று அவர் களின் வாழ்வில் நீங்காத முத்திரையைப் பதிப்பித்து விட்டது. ஒரு நாள் அவர்கள் பசியோடிருப்பதைக் கண்ட ஒரு தர்வேஷ், அவர்களை அணுகி, அவர்களைத் தம் இல்லம் வந்து உணவருந்துமாறு வேண்டிக் கொண்டார். அவர்களும் அவரின் அன்பான அழைப்பை ஏற்று, அவரின் இல்லம் சென்றனர். அப்பொழுது அடுப்பில் ஏதோ சமையல் நடந்து கொண்டி ருந்தது. அதன் மணம் அவர்களுக்கு அருவருப்பை உண்டு பண்ணவே, ''என்ன நாற்றம் இது!!'' என்று கூறிக்கொண்டு, அங்கு அவர்கள் யாதும் உண்ணாது, சொல்லாமல் கொள்ளாமல் அவ்விடத்தை விட்டும் அகன்று விட்டனர். அது கண்டு அந்த தர்வேஷுக்கு ஏற்பட்ட நாணத்திற்கும், வருத்தத்திற்கும் அளவில்லை.

இதன்பின் அவர்கள் ஒருநாள், தம் தோழர்களுடன் பாலை நடுவே நடந்து செல்லுங்கால், அவர்களுக்கு வழி தவறி விட்டது. கையிலிருந்த சொற்ப உணவும் காலியாகிவிடவே, அவர்கள் உணவின்றிப் பெரிதும் துன்புற்றார்கள். இறுதியாக உண்பதற்கு ஒரு நாய் தான் கிடைத்தது. அதனையும் அவர்கள் அதிகமான விலை கொடுத்து வாங்கி அறுத்துப் பொரித்தார்கள். அதில் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களின் பங்குக்கு ஒரு சிறு துண்டுதான் கிடைத்தது. அதனை அவர்கள் உண்ணத் துவங்கு

முன் தர்வேஷின் இல்லத்தில் தாம் நடந்து கொண்ட முறையும், அவரின் இல்லத்தில் சமைக்கப்பட்ட உணவைத் தாம் இழிவாகக் கருதி எழுந்து விட்ட கொடுமையும் அவர்களின் மனக்கண் முன் தோன்றி அவர்களைக் கொல்லாது கொன்றது. ''அன்று நீ அந்த தர்வேஷை அவமானப் படுத்தினாயல்லவா? அதற்கு இறைவன் அளிக்கும் தண்டனை இது. எனவே கண்ணை மூடிக் கொண்டு நாயை உண்ணு, உண்ணு'' என்று அவர்களின் உள்மனம் இடித்துரைத்தது. அவர்களும் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அதனைக் கண்ணை மூடிக் கொண்டு உண்டார்கள்.

அதன்பின் அவர்கள் ஊர் திரும்பியதும், அவர்கள் செய்த முதல் வேலை, அந்த தர்வேஷிடம் சென்று தாம் செய்த தவறுக்கு மன்னிப்புக் கோருவதாகவே இருந்தது. இதன்பின் அவர்கள் எவரையும் அல்லது எதனையும் கனவில் கூட இழிவாகக் கருதுவதில்லை என்று மன உறுதி பூண்டார்கள். உலகிலேயே மிகவும் இழிந்தவன் தாங்களே என்று அவர்கள் கருதினார்கள். அதன் காரணமாக, அவர்கள் ஆன்மீக உலகில் உயர உயரச் சென்று கொண்டிருந்தார்கள்.

இறை நேசச் செல்வர்களைச் சந்தித்து அளவளாவும் நோக்கத்துடன் அவர்கள் பல்வேறு நாடுகளில் சுற்றித் திரியும் பொழுது, ஈரானிலுள்ள இஸ்தஃபர் என்ற நகரை அடைந்தனர். அங்கு ஓரிடத்தில் ஒன்பது சூஃபிகள் ஒருங்கு சேர்ந்து வாழ்ந்து வருகிறார்கள் எனக் கேள்வியுற்று அங்கு சென்றனர். அங்கு அவர்களின் முன் உணவு வைக்கப்பட்டி ருந்தது. அவர்களுடன் ஹுஸைன் இப்னு அபூ ஸஅதுல் அபுல் அஸ்ஹர் இப்னு ஹையானும் இருந்தார். சற்றுநேரம் அவர்களைப் பார்த்துக் கொண்டு நின்ற அவர்கள், பின்னர் கையைக் கழுவி விட்டு அவர்களுடன் போய் அமர்ந்தனர். அவர்கள் இவர்களை வரவேற்று ''உண்ணுக, உண்ணுக'' என்று உபசரித்தனர்.

அவர்களுடன் சேர்ந்து உண்டபின், இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் அயர்ந்து உறங்கினர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இவர்களின் கனவில் திருத்தோற்றம் வழங்கி''இப்னு அஃபீஃபே! நீர் தேடிவந்த மனிதர்கள் இவர்கள் தாம்'' என்று நவின்று விட்டு மறைந்தார்கள்.

வைகறையில் துயிலெழுந்த அவர்கள் தாம் வந்த நோக்கத்தையும், தாம் கண்ட கனவையும் ஹுஸைன் இப்னு அபூ ஸஅத் (ரஹ்) அவர்களிடம் கூறலாமென்று எண்ணினர். எனினும் அவர்களைக் கண்டதும், அவர்களுக்கு ஒருவிதத் திடுக்கம் ஏற்பட்டதால், அவர்கள் அதனை அவர்களிடம் கூறவில்லை.

சில நாட்களுக்குப் பின் அபுல் ஹஸன் இப்னு அபீஸயீத் (ரஹ்) அவர்கள் அங்கு வந்தனர். அவர்கள் இவர்களை நோக்கி "அபூ அப்துல் லாஹ்வே! நீர் கண்ட கனவை அவர்களிடம் கூறாது ஏன் தயங்கிக் கொண்டுள்ளீர்? கூறும்" எனப் பணித்தனர்.

அவ்வாறே அவர்கள் தாம் கண்ட கனவை அவர்களிடம் கூறினர். இச்செய்தி நொடியில் எங்கணும் பரவியது. தாங்கள் இனிமேல் அங்கு தங்கி இருந்தால், தங்களுக்குப் பேரும் புகழும் பிரபல்யமும் ஏற்பட்டு விடும் என்று அஞ்சிய அந்த ஒன்பதின்மரும், அவ்விடத்தை விட்டும் நீங்கிப் பல்வேறு இடங்களுக்குச் சென்று விட்டார்கள்.

இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் கடல் கடந்து, முதல் மாமனிதர் ஆதம் (அலை) அவர்கள் மண்ணகம் இழிந்த புனித பூமியாகிய 'சரந்தீப்' என்ற இலங்கைக்கும் வந்துள்ளார்கள். இலங்கை வந்து இறங்கிய அவர்கள் தம்முடன் வந்த முப்பது தர்வேஷ்களுடன், ஆதம் மலையைத் தரிசிப்பதற்காகச் சென்றனர். வழியில் தர்வேஷ்களுக்கு அகோரப் பசி ஏற்பட்டது. உண்பதற்கோ அவர்களிடம் யாதோர் உணவும் இல்லை. என்ன செய்வதென்றறியாது விழித்த அவர்கள், அங்கு யானைக் குட்டிகள் பல மேய்ந்து கொண்டிருப்பதைக் கண்டு, அவற்றில் ஒன்றைப் பிடித்து அறுத்துக் கறி சமைத்து உண்டு தம்பசி தீர்த்துக் கொள்ள விரும்பினர். இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் அதில் அணுவத்தனையும் தொட வில்லை.

இரவில் அவர்கள் அனைவரும் ஒரு வெட்டவெளியில் படுத் துறங்கினர். அப்பொழுது யானைகள் கூட்டம் கூட்டமாக வந்து, அவர் களின் வாய்களை மோந்து பார்த்தன. அவர்களின் வாயிலிருந்து யானைக் கறியின் வாடை வந்ததைக் கண்டதும், அவர்கள் தாம் தம் குட்டியைக் கொன்றவர்கள் என்பதை உணர்ந்து அவர்கள் அனைவரையும் அடித்துக் கொன்றன. இறுதியாக அவை இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் வீற்றிருந்த இடத்தை அடைந்து, அவர்களின் வாயை மோந்து பார்த்த பொழுது, அதில் யாதொரு வாடையும் இல்லாததைக் கண்டு, அவர்களை உசுப்பின. அவர்கள் எழுந்து அமர்ந்ததும், யானைகளில் ஒன்று அவர்களைத் தம் துதிக்கையால் தன் முதுகின் மீது வைத்துக் கொண்டு, மக்கள் வாழக் கூடிய நகருக்குக் கொண்டு வந்தது. அதன் பின்னே மற்ற யானைகளும் வந்தன. இது கண்டு மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

அவர்களை நகர மத்தியில் கொண்டு வந்து இறக்கிவிட்ட யானைகள் அனைத்தும், கானகம் திரும்பிச் சென்றபின், மக்கள் அவர்களை அணுகி, அவர்களுக்குப் பெரிதும் மரியாதை செய்து, அவர்களின் வரலாற்றை

வினவினர். அவர்கள் நடந்த வரலாற்றை எடுத்துரைத்த பொழுது மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.*

இதன்பின் ஆதம் மலையைத் தரிசித்து விட்டுத் தாயகம் திரும்பிய அவர்கள், எகிப்து நாட்டில், ஒரு முதியவரும் ஓர் இளவலும் ஒருங்க மர்ந்து இடைவிடாது இறைத்தியானத்தில் மூழ்கி இருப்பதாகக் கேள்வி யுற்று, அவர்களைக் காண்பதற்காக எகிப்து நாடு நோக்கிச் சென்றார்கள். ஆங்கு அவ்விருவரும் 'கிப்லா'வை முன்னோக்கிய வண்ணம் வீற்றிருப் பதைக் கண்டு, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்தார்கள். யாதொரு பதிலும் இல்லை. மறுமுறை 'ஸலாம்' உரைத்தார்கள். மறுமுறையும் யாதொரு பதிலுமில்லை. மூன்றாவது முறை 'ஸலாம்' உரைத்தார்கள். மூன்றாவது முறையும் யாதொரு பதிலும் இல்லை. அப்பொழுது இவர்கள், அவர்களை நோக்கி,

''இறைவன் உங்களைக் காப்பாற்றுவானாக! நான் கூறிய ஸலாத்திற்கு பதில் கூறுங்கள்''என்று சொன்னார்கள். அப்பொழுது அந்த இளவல் இவர்களை ஏறிட்டுப் பார்த்து ''இப்னு அஃபீஃப்! இந்த உலகம் ஒரு சிறிய பொருள். அதில் ஒருசிறு அளவுதான் எஞ்சியுள்ளது. எஞ்சியுள்ள அந்தச் சிறிய பொருளிலும், நீர் பெரிய பங்கை எடுத்துக் கொள்வீராக: இப்னு அஃபீஃப்! உமக்கு 'ஸலாம்' உரைக்க எங்களுக்கு எங்கே நேரமுள்ளது?'' என்று கூறினார்.

இவ்வாறு கூறிவிட்டு, அவர் தம் தலையைத் தம் நெஞ்சிலே தொங்கப்போட்ட வண்ணம் தியானத்தில் ஆழ்ந்து விட்டார். அவரின் பதிலும், அவர்களின நிலையும் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களை மெய் மறக்கச் செய்தன. பசியையும் தாகத்தையும் மறந்து, அவர்கள் அங்கேயே வீற்றிருந்து, அவ்விருவரையும் வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதன் பின் அவர்களுடன் சேர்ந்து நண்பகல், சாயுங்காலத் தொழுகைகளைத் தொழுதனர். அதன்பின் அவர்களை நோக்கி, ''ஐயன்மீர்! எனக்கு ஏதேனும் அறிவுரை நல்குங்கள்'' என்று வேண்டி நின்றார்கள்.

அப்பொழுது அந்த இளவல் அவர்களை நோக்கி, ''இப்னு அஃபீஃப்! நாங்களோ துன்பத்தில் உழன்று கொண்டிருப்பவர்கள், அவ்விதமிருக்க, பிறருக்கு அறிவுரை நல்க எங்களுக்கு நாவேது?

✱ உலகம் சுற்றிய பயணி இப்னு பதூதா சரந்தீப் வந்த பொழுது, இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களின் துஆ பரக்கத்தினால் இக்காடுகளில் வாழும் யானைகள் மக்களுக்கு யாதொரு தீங்கும் செய்யவில்லை என்றும், அப்பகுதி வாழும் சிங்கள மக்களும், முஸ்லிம்களுக்குப் பெரிதும் மரியாதை செய்யலாயினர் என்றும் குறிப்பிடுகிறார்.

துன்புற்றோருக்கு அறிவுரை நல்க வேறு மனிதர்களல்லவா வேண்டும்?'' என்று கூறினார்.

ஊண், உறக்கம் மறந்து அவர்களுடன் மூன்று நாட்கள் வீற்றிருந்தனர் இப்னு அஃபீஃப். அப்பொழுது அவர்களின் உள்ளததில் இவர்களைத் தமக்கு அறிவுரை பகருமாறு செய்ய என்ன செய்வது? என்ற எண்ணம் உதித்தது. அப்பொழுது அந்த இளவல் தம் தலையை உயர்த்தி, ''இப்னு அஃபீஃப், எவரைக் காணின் உமக்கு இறைவனைப்பற்றிய எண்ணமும், இறைவனைப் பற்றிய அச்சமும் ஏற்படுகிறதோ, எவர் தம் சொற்களாலல் லாது, செயல்களால் அறிவுரை நல்குவாரோ அவரை நாடிச் செல்வீராக'' என்று கூறினார். இதன்பின் அவர்களிடமிருந்து விடைபெற்று, இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் அவ்விடத்தை விட்டும் அகன்றார்கள்.

இதன்பின் ஓராண்டு அவர்கள் துருக்கி நாட்டில் தங்கி இருந்தார்கள். அப்பொழுது ஒருநாள் அவர்கள் பாலைவனத்திற்குச் சென்றபொழுது, முள்ளும் தோலுமாக இருந்த ஒரு கிறிஸ்தவத் துறவியின் வெற்றுடலைச் சிலர் தூக்கி வந்து எரித்துச் சாம்பலாக்கி, அந்தச் சாம்பலைக் குருடர்களின் கண்களில் தூவினர். அடுத்த கணம் அவர்களின் குருட்டுக் கண்கள் வெளிச்சம் பெற்றன. நோயாளர்களுக்கு அதனை உண்ணக் கொடுத்த பொழுது, அடுத்த கணம் அவர்கள் உடல் நலன் பெற்றார்கள். இது கண்டு பெரிதும் வியப்புற்ற இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள், ''இஃதென்ன புதுமையாக உள்ளது. இறைவனின் திருத்தூதரை இறைவனென்றும், இறைவனுடைய மகனென்றும் பரிசுத்த ஆவியென்றும் தவறாகக் கூறும் இவர்களுக்கு இத்துணை மாண்பு எவ்வாறு கிடைக்கப் பெற்றது'' என்று எண்ணிய வண்ணம் சற்று நேரம் அங்கு நின்று கொண்டிருந்தார்கள். அவர் களுக்கு ஒன்றுமே புரியவில்லை. உலகமே அவர்களுக்குப் பெரும் புதி ராக இருந்தது.

இவ்வித மனக் குழப்பத்துடன் அவர்கள் படுத்துறங்குங்கால், அன்றிரவு அவர்களின் கனவில் அண்ணலெம் பெருமான் முஹம்ம தெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் திருத்தோற்றம் வழங்கி னார்கள். அவர்களைக் கண்டதும் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் ஓடோடிச் சென்று, 'அண்ணல் எம்பெருமானே! இஃதென்ன புதுமை!! இஃதென்ன புதுமை!!' என்று அலறினார்கள். அப்பொழுது அண்ணலெம பெருமானார் (ஸல்) அவர்கள் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களை நோக்கி, ''நான் இதனை உமக்குத் தெளிவுபடுத்துவதற்காகவே வந்தேன். தவறில் ஓர் ஒழுங்கையும், உளத்தூய்மையையும் பின்பற்றியதனால், ஏற்பட்ட பலன் அது. அதே ஒழுங்கையும் உளத்தூய்மையையும் உண்மையைக் கடைப்பிடிப்பதில் பின்பற்றி இருந்தால், எத்துணை

மாபெரும் பலன்கள் ஏற்படும் என்பதை நீரே சிந்தித்துக் கொள்ளும்'' என்று அருள்வாய் மலர்ந்துவிட்டு மறைந்தனர்.

மற்றொரு நாள் நடுச்சாமத்தில் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் படுக்கையிலிருந்து எழுந்து, தம் ஊழியரை அவசரம் அவசரமாக அழைத்தார்கள். அதுகேட்டு, உறங்கிக் கொண்டிருந்த ஊழியர் திடுக்கிட்டு விழித்தெழுந்து, கண்களைக் கசக்கிய வண்ணம் யாதுசெய்தி என்று வினவினார். 'எனக்கு ஒருபெண் தேவைப்படுகிறது. விரைவில் கொண்டு வா'' என்று அவர்கள் கூறினார்கள். அந்த ஊழியருக்கு உறக்கக் கலகத்தில் அவர்கள் என்ன கூறுகின்றார்கள் என்றே விளங்கவில்லை. அதன்பின் சற்றுச் சமாளித்துக் கொண்டு, ''என்ன கூறுகிறீர்கள்?'' என்று வினவினார் அவர். ''எனக்கு ஒரு பெண் தேவைப்படுகிறது. விரைவில் கொண்டுவா'' என்று மீண்டும் கூறினார்கள் அவர்கள். இப்பொழுது தான் அவர்கள் என்ன கூறுகிறார்கள் என்பது அந்த ஊழியருக்கு விளங்கியது. அவர்களோ ஒழுக்கசீலர். இறைநேசச் செல்வர். எனவே, அவர்கள் தீய எண்ணத்துடன் அவ்விதம் கூறார்கள் என்பதை நன்கு விளங்கிக் கொண்ட அவர், ''இந்த நள்ளிரவில் ஒருபெண்ணுக்கு நான் எங்கு செல்வேன்? ஆனால் ஒன்று சொல்கிறேன். எனக்கு மகள் ஒருத்தி இருக்கிறாள். அவளை வேண்டு மானால் அழைத்து வருகிறேன்'' என்று கூறினார் அவர். ''நல்லது! அவ்விதமே செய்யும்'' என்று பதிலிறுத்தார்கள் அவர்கள். அவரும் விரைவில் அவ்வாறே செய்தார். அந்த நள்ளிரவிலேயே சாட்சிகள் முன்னிலையில் அவர்களுக்கும், அப்பெண்ணுக்கும் திருமணம் நிகழ்ந்தது.

இதன்பின் ஏழு திங்கள் உருண்டோடின. அவர்களுக்கு அப்பெண் மணி மூலமாக ஒரு குழந்தை பிறந்தது. பிறந்த அடுத்த கணமே, அது இறந்துவிட்டது. அப்பொழுது இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் தம் ஊழியரை நோக்கி, ''என்னை மண விடுதலை செய்து விடுமாறு உம் மகளிடம் கூறும். அவள் விரும்பின் என்னுடன் வாழலாம்'' என்று கூறினர்.

அவர்கள் யாது கூறுகிறார்கள் என்பதை அறியாது அவ்வூழியர் விழித்தார். அப்பொழுது இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள், தம் ஊழி யரை நோக்கி, ''நான் உம்முடைய மகளை மணமுடித்த அவ்விரவு ஒரு கனவு கண்டேன். மறுமை நாள் வந்துவிட்டது போன்றும், மக்களெல்லாம் மெய்பதறி வெவ்துயிர்த்து நிற்பது போன்றும் கண்டேன். அப்பொழுது ஒரு சின்னஞ்சிறு குழவி ஓடோடி வந்து தம் பெற்றோர்களை இலக்குக் கண்டுபிடித்து, காற்றினும் கடிதாக அவர்களை ஸிராத்தல் முஸ்தகீம் பாலத்தின் மீது அழைத்துச் செல்வதைக் கண்டேன். அப்பொழுது எனக்கு ஒரு குழந்தை இருந்தால் நன்றாய் இருக்குமே என்று

எண்ணினேன். அதன் பின் உம்மை எழுப்பி, உம் மகளை அழைத்துவரச் செய்து, அவளுடன் இன்பம் துய்த்து ஒரு மகவை ஈன்றெடுத்தேன். அது உலகிற்கு வந்த அடுத்தகணம், உலகை விட்டும் புறப்பட்டு விட்டது: என்னுடைய குறிக்கோளும் நிறைவேறி விட்டது. எனவே தான் உம் மகள் என்னுடன் இருந்தால் இருக்கட்டும். அல்லது என்னை மணவிடுதலை செய்துவிட்டு வேறொருவரை மணந்து நல்வாழ்வு வாழட்டும் என்று கூறினேன்'' எனக் கூறினர். அவ்வூழியரின் கண்கள் பனித்தன.

இதன்பின் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் நானூறு பெண்கள் வரை மணமுடித்தனர். அவர்கள் அரச குலத்தில் பிறந்ததோடல்லாது ஆன்மீகச் செல்வராகவும் இருந்ததன் காரணமாக, ஏராளமான பெண்மணிகள் அவர்களை மணமுடிக்க முன் வந்தனர். எனினும், அவர்கள் ஒரே தடவையில் நான்கிற்கு மேற்பட்ட மனைவியை பெற்றிருக்க வில்லை.

ஒருதடவை சில பெண்கள் அவர்களின் மனைவியரை அணுகி, ''இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் எவ்வாறு தங்களுடன் இல்லற வாழ்க்கை வாழ்கின்றனர்'' என்று வினவிய பொழுது, ''அதுபற்றி எங்களுக்கு யாதொன்றும் தெரியாது, அதுபற்றி நீங்கள் அறிய விரும்பின் அவரின் மனைவியாகிய அமைச்சரின் மகளைக் கேட்டுப்பாருங்கள். அவர்கள் தாம் அவருடன் சேர்ந்து நாற்பதாண்டுகள் வாழ்ந்துள்ளார்'' என்று கூறினர்.

அவ்வாறே அவர்கள் அவரை அணுகி, அவரின் இல்லற வாழ்க்கை பற்றி வினவிய பொழுது , ''என் அறைக்கு ஷைகு அவர்கள் வரும் இரவில் நான் வகை வகையான உணவு வகைகளைத் தயாரித்து, என்னையும் அலங் கரித்துக் கொண்டு வீற்றிருப்பேன். அப்பொழுது ஷைகு அவர்கள் வரு வார்கள். என்னையும் நான் தயாரித்து வைத்திருக்கும் உணவுப் பொருள் களையும் சிலகணம் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அதன்பின் சென்று விடுவார்கள். இவ்வாறே நான் அவர்களுடன் வாழ்க்கைப்பட்ட நாற்பது ஆண்டுகளும் நடந்துள்ளன. ஆனால், ஓரிரவு ஷைகு அவர்கள் என்னுடைய அறைக்கு வந்தார்கள். என் கையைப் பிடித்து அவர்களின் நெஞ்சிலும் வயிற்றிலும் தேய்த்தார்கள். அதன்பின் அவர்கள் என்னை நோக்கி, ''பெண்ணே! என் நெஞ்சிலும் வயிற்றிலும் முடிச்சுகள் இருப்பதை உணர்கின்றாயல்லவா?'' என்று வினவினர். ''ஆம்; பதினைந்து முடிச்சுகள் இருப்பதை உணர்கிறேன்'' என்று நான் மறுமொழி பகர்ந்தேன். ''இந்த முடிச்சுகள் என்னவென்று தெரியுமா? என்று மறுகேள்வி விடுத்தார்கள். ''தெரியாது'' என்று பதில் கூறினேன். அப்பொழுது அவர்கள் என்னை நோக்கி, ''பெண்ணே! இவையே நான் உன்னுடைய பேரழகையும், நீ நல்கும் இன்சுவை உணவுகளையும் கண்டு,

நான் கொண்ட இச்சை அடக்கத்தின் காரணமாக ஏற்பட்ட நெருப்புக்கள். அவற்றைப் பிடித்து நான் முடிச்சுப் போட்டுவிட்டதனால், இந்த முடிச்சுக்கள் ஏற்பட்டுள்ளன'' என்று கூறிவிட்டுப் போய் விட்டார்கள். இதுதான் நான் அவர்களுடன் இதுகாறும் பேசிய வார்த்தைகள்'' என்று கூறினார். இத்துணை மன அடக்கத்துடன் அம்மனிதர், மனிதப் புனிதர் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களின் காலடியில் அமர்ந்து ஆன்மீகக் கல்வி பெறுவதற்காக நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்தும் மாணவர்கள் வந்து குழுமி இருந்தார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாக இருவர் இருந்தனர். அவர்கள் இருவரின் பெயரும் அஹ்மது என்பதாகவே இருந்ததனால், அவர்களில் மூத்தவரை மூத்த அஹ்மது என்றும், இளையவரை இளைய அஹ்மது என்றும் அவர்கள் அழைத்து வந்தார்கள். மூத்த அஹ்மது ஷைகு அவர்களின் அடிபணிந்து ஒழுகி, அவர்களுக்கு வேண்டிய ஊழியம் செய்துவந்த போதினும், ஷைகு அவர்கள் இளைய அஹ்மதின் மீது அதிக அன்பு செலுத்தி வந்தார்கள். இது மாணவர் குழாத்திடையே சிறிது சலசலப்பை உண்டுபண்ணியது. இது ஷைகு அவர்களின் செவியிலும் பட்டது.

ஒருநாள் ஷைகு அவர்கள் தங்களின் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது அவர்களின் வாயிலிருந்தும் ''மூத்த அஹ்மது! இங்கே வாரும்'' என்ற சொற்கள் கணீரென்று வெளிவந்தன.

''இதோ வந்து விட்டேன்'' என்று கூறிக் கொண்டு அவர்களின் முன்வந்து நின்றார் அவர்.

''அதோ நிற்கும் ஒட்டகையைப் பிடித்து, இந்தத் தவமடத்தின் முகட்டுக்குக் கொண்டு செல்லும்'' என்று பணித்தார்கள் ஷைகு.

ஷைகு அவர்களின் இந்த எதிர்பாராத ஆணையைக் கேட்டுப் பேந்தப் பேந்த விழித்தார் அவர். அதன்பின் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு ''ஷைகு அவர்களே! தவமடத்தின் முகட்டுக்கு எவ்வாறு ஒட்டகையைக் கொண்டு செல்வது?'' என்று வினவினார்.

உடனே இப்னு, அஃபீஃப் (ரஹ்) அவர்கள் முறுவலித்த வண்ணம் ''இளைய அஹ்மத்! இங்கே வாரும்'' என்று கூறினர்.

''இதோ வந்து விட்டேன்'' என்று கூறிய வண்ணம் ஓடோடி வந்தார் அவர்.

வந்த அவரிடம் ஆங்கு நின்று கொண்டிருந்த ஒட்டகையைப் பிடித்துத் தவமடத்தின் முகட்டிற்குக் கொண்டு செல்லுமாறு பணித்தார்கள் அவர்கள்.

ஷைகு அவர்களின் வாயிலிருந்தும் இச்சொற்கள் வெளி வந்தது தான் தாமதம். ஓடோடிச் சென்று கச்சையைக் கட்டிக் கொண்டு, அந்த ஒட்டகையைப் பிடித்துத் தவமடத்தின் உச்சிக்குக் கொண்டு செல்லத் தம் வலு அனைத்தையும் பயன் படுத்தி முயன்றார் அவர். என்னும் இயல வில்லை.

அது கண்ட இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்குக் அளவில்லை. 'சபாஷ்' 'சபாஷ்' என்று மகிழ்ச்சி மொழி கூறிய அவர்கள், ஆங்கிருந்தவர்களை நோக்கி, ''பார்த்தீர்களா! இளைய அஹ்மது, நான் இட்ட பணியை மறுவார்த்தை கூறாது செய்யமுற் பட்டார். அது முடியுமா, முடியாதா என்று கூட அவர் சிந்திக்கவில்லை. தம் கடமை, ஆசான் இட்ட பணியைச் செய்வதுதான் என்று அவர் கருதினார். ஆனால் மூத்த அஹ்மதோ, அது பற்றி என்னுடன் வாக்கு வாதம் செய்யத் துவங்கி விட்டார். ஒருவரின் செயலிலிருந்து அவருடைய எண்ணத்தை விளங்கிக் கொள்ளலாமல்லவா?'' என்று இயம்பினர். அதுகேட்டு ஆங்கிருந்தவர்களுக்கு யாது கூறுவதென்றே விளங்கவில்லை.

மற்றொரு நாள் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் தம் தவமடத்தில் வீற்றிருந்தார்கள். அப்பொழுது அவர்களைக் காண்பதற்கு, கறுப்பு உடை தரித்த ஒருவர் வந்தார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''சகோதரரே! ஏன் தாங்கள் கறுப்பு உடை அணிந்து கொண்டுள்ளீர்கள்? என்று வினவினார். அதற்கு அவர் ''என்னுடைய கடவுள்கள் இறந்து விட்டார்கள். அதனால்'' என்று பதில் கூறினார். அவர் இவ்வாறு கூறிய தன் மூலம், தாம் தம் மனோ இச்சைகளைக் கொன்றொழித்து விட்டதன் காரணமாகக் கறுப்பு உடைத் தரித்திருப்பதாகக் கூறாமல் கூறினார்.

அப்பொழுது இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள், தம் மாணவர்களை நோக்கி, 'இவரை விரட்டி அடியுங்கள்' என்று கூறினர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். அதன்பின் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''அவரை அழைத்து வாருங்கள்'' என்று கூறினர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். மீண்டும் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''அவரை விரட்டியடியுங்கள்'' என்று கூறினர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். அதன்பின் அவர்கள் தம் மாணவர்களைப் பார்த்து, ''அவரை அழைத்து வாருங்கள்'' என்று கூறினர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். இவ்வாறு அவரை விரட்டி அடிப்பதும் அழைத்து வருவதுமாக நாற்பது தடவை நிகழ்ந்தன. இவ்வளவுக்கும் அந்தக் கறுப்பு உடைக்காரர் ஒரு சிறு முணுமுணுப்புக் கூடச் செய்யவில்லை. அடித்து விரட்டப்படும் பொழுதும், அழைத்து வரப்படும் பொழுதும் அவருடைய முகம் ஒரே அமைதி, அமைதி மயமாக இலங்கியது.

இதுகண்டு இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை, நாற்பதாவது தடவை அவர் அழைத்து வரப்பட்டதும், அவர்கள் ஓடோடிச் சென்று அவருடைய நெற்றியில் முத்தமிட்டு தம்மை மன்னித்து அருள்பாலிக்குமாறு வேண்டி நின்றார்கள். அதன்பின் அவர்கள் அவரை நோக்கி, "கறுப்பு உடை அணியத் தங்களுக்கு முழுத்தகுதியும் உண்டு. நாற்பது தடவை விரட்டியடிக்கப்பட்டு, அழைத்து வரப்பட்ட போதினும், தாங்கள் அணுவளவேனும் நிலை குலையவில்லையே. தங்களின் மகாத்மியம் தான் என்னே!" என்று கூறி வாயார்ந்தார்கள்.

வேறொரு நாள் இரண்டு சூஃபிகள் அவர்களைக் காண்பதற்காக வெகு தொலைவிலிருந்து வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது அவர்கள் அவர்களின் தவமடத்தில் இல்லை. எங்கே அவர்கள் உள்ளனர் என்று அவர்கள் விசாரித்தார்கள். 'அஸதுத் தெளலாவின் அரண்மனையில்' என்று பதில் வந்தது. அப்பதிலைக் கேட்டுப் பெரிதும் வியப்பும் ஏமாற்றமும் அடைந்த அவர்கள், "ஷைகு அவர்களுக்கு அரண்மனையில் என்ன அலுவல் உள்ளது? நாம் அவர்களைப் பெரிதாகக் கருதியது தவறாகப் போய்விட்டது போன்றுள்ளதே" என்று தம் வாய்க்குள் முணு முணுத்த வண்ணம் நகரைச் சுற்றிப் பார்ப்பதற்காகச் சென்றார்கள்.

சென்ற அவர்கள் வழியில், ஒரு தையற்கடையைக் கண்டு, தம் மேலங்கியில் ஒரு தையல் போடுவதற்காக உள்ளே நுழைந்தார்கள். அவர்கள் அது பற்றித் தையற்காரனுடன் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, ஆங்கிருந்த கத்திரிக்கோலைக் காணோம். அவர்கள் தாம் அதனைத் திருடியதாகத் தையற்காரன் அவர்கள் மீது குற்றம் சாட்ட, தாங்கள் நிரபாரதி என்று அவர்கள் எவ்வளவோ எடுத்துரைத்தும், அவன் கேட்கவில்லை. இறுதியாக அவர்களை இழுத்துக்கொண்டு அரண்மனை வந்துசேர்ந்தான் அவன். வழக்கை விசாரித்த அஸதுத் தெளலா, அவர்களிருவரும் குற்றவாளிகளே எனத் தீர்மானித்து அவர்களைச் சிரசேதம் செய்யுமாறு தீர்ப்பளித்தார்.

அப்பொழுது ஆங்கு ஒரு குரல் கணீரென ஒலித்தது. அதுவேறு எவருடைய குரலுமல்ல. ஆங்கு வீற்றிருந்த இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களின் குரல் தான் அது. "மன்னர் மன்னரே! அவர்கள் இருவரும் நிரபாரதிகள். அவர்களை விடுதலை செய்து, நீதியை நிலை நாட்டுங்கள். வாழ்க நும் கொற்றம்!" என்று கூறி அரசரை ஏறிட்டுப் பார்த்தார்கள் அவர்கள்.

அவ்வளவுதான். அடுத்தகணம் "உங்கள் இருவரையும் விடுதலை செய்தோம். நீங்கள் நலமே செல்லலாம்" என்று அரச ஆணை பிறந்தது.

அதுகேட்டுப் பெரிதும் மகிழ்ந்த அவர்கள், இருவரும் திரும்பி இரண்டு அடிகள் தாம் எடுத்து வைத்திருப்பர். அப்பொழுது இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள், அவ்விருவரையும் நோக்கி ''சகோதரர்களே! சற்று நில்லுங்கள்'' என்று கூறினர். அதன்பின் அவர்களை நோக்கி, ''தாங்கள் என்னைப் பற்றி எண்ணியது முழுக்க முழுக்க நியாமானதேயாகும். ஒரு சூஃபி, அரசரைச் சந்திக்கச் செல்லவும் மாட்டார். அரசர் அவரைச் சந்திக்க விரும்பினும், அவருக்குப் பேட்டியும் அளிக்கமாட்டார். எனினும் என் செய்வது? தங்களைப் போன்ற நிரபாரதிகளுக்கு நியாயம் வழங்குவதற் காகவே, நான் இங்கு வந்து போக வேண்டியுள்ளது'' என்று கூறினர். சூஃபிகள் இருவரின் முகங்களும் நாணத்தால் வெளிறின. அக்கணமே அவர்கள் இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்களின திருக்கரம் பற்றி தங்களின் பிழை பொறுத்தருளுமாறு வேண்டி, அவர்களிடம் தீட்சை பெற்றார்கள்.

இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள் மாபெரும் இறைநேசச் செல்வராக இருந்ததோடல்லாது, இறைநேசச் செல்வர்களான ரதீம் ஜரீரி (ரஹ்), ஹல்லாஜ் (ரஹ்) அவர்களையும் சந்தித்து அளவளாவியுள்ளனர். நாற்பது நாட்களுக்கு ஒரு தடவை, மார்க்கம் பற்றி ஒரு நூல் எழுதிக் கொண்டிருந் தனர். அவர்களுக்கு மார்க்கத்தில் பற்றுதல் ஏற்பட்ட காலத்திலிருந்து, காலையிலிருந்து மாலை வரை ஆயிரம் ரகஅத்துகள் தொழுது வந்தார்கள். ஒவ்வோராண்டும் பல தடவை சில்லா இருப்பர். இறுதியாக அவர்கள் சில்லா இருக்கும் பொழுது தான் இறப்பெய்தினர்.

அவர்கள் இறக்கும்பொழுது தம் ஊழியரை நோக்கி, ''நான் ஓர் எசமானனிடமிருந்து ஓடிவிட்ட குற்றவாளியான ஓர் அடிமைபோன்று உள்ளேன். எனவே நான் இறந்ததும், என் கைகால்களைக் கட்டிவிட்டு என் முகத்தை கிப்லாவின் பக்கல் வைத்து விடின், அல்லாஹ் தன் பேரருளினால் என்னை மன்னிக்கப் போதுமானவன்'' என்று கூறினர். அவர்கள் இறந்தபொழுது அவ்விதமே செய்ய, அவரின் ஊழியர் முற்பட்ட பொழுது, ''முட்டாளே! நீ என் அன்பரை இழிவுபடுத்த விரும்புகின்றாயா?'' என்று அசரீரி முழங்கியதும், அவ்வூழியர் திடுக்கிட்டு அவ்வாறு செய்வதை விட்டொழித்து, அவர்களைக் கழுவிக் குளிப்பாட்டி நல்லடக்கம் செய்தார். அவர்களின் அடக்கவிடம் ஷீராஸில் உள்ளது.



# 19. கைருன் நஸ்ஸாஜ் (ரஹ்)

**சா**மர்ரா நகரத்தில் பிறந்த ஓர் ஏழை மனிதருக்கு நீண்ட நாட்களாகவே புனித ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டுமென்ற பேரவா இருந்து வந்தது. அதற்கான பொருளைச் சிறிது சிறிதாகச் சேர்த்த அவர் இறுதியாக ஹஜ்ஜு செய்யக் கிளம்பி விட்டார்.

கறுத்த உருவினர்; ஒட்டுப்போடப்பட்ட உடையணிந்தவராய் அவர் சாலை வழியாகவோ, பாலை வழியாகவோ நடந்து செல்வதை எவரும் காணின், அவரை ஓர் அப்பாவி என்றே கருதுவர். ஆம்; அவர் ஓர் அப்பாவி தான். பாவமேஅற்ற புண்ணியர். புண்ணியத்தைத் தம் பிறந்த ஊரிலே இருந்து தேடியது பற்றாதென்று, அவர் மக்கா சென்று புண்ணியம் தேடப் புறப்பட்டு விட்டார்.

கஃபாவின் வாயிலை அடைந்த அவர், அதற்குள்ளே பிரவேசித்தார். அப்பொழுது அவரையும், அவரின் தோற்றத்தையும் கண்ட ஒருவன், அவர் எத்தகையவர் என்பதை உய்த்துணர்ந்து கொண்டு, அவரை அழைத்துச் சென்று சில நாட்களுக்கு வயிற்றுச் சோற்றிற்கு வேலைவாங்க வேண்டு மென்று எண்ணியவனாய், அவரின் முன் திடீரென எதிர்ப்பட்டு, ''நீ ஓர் அடிமைதானே'' என்று வினவினான்.

கள்ளம் கபடமறியா வெள்ளை மனத்தினரான அப்புனிதர், தாம் இறைவனின் அடியான் தான் என்பதை மனத்திற் கொண்டு 'ஆம்' என்று பதில் கூறினார்.

இந்த 'ஆம்' என்ற சொல் அவரின் வாயிலிருந்து வெளி வந்ததும் தான் அவரை எடை போட்டது சரிதான் என்று எண்ணியவனாய் சிறிது உரத்தகுரலில் ''உன்னுடைய எசமானனிடமிருந்து ஓடி வந்து விட்டாயல்லவா?'' என்று வினவினான் அவன்.

இங்கு எசமானன் என்பதை இறைவனாகக் கருதிக் கொண்ட அவர் மீண்டும் 'ஆம்' என்று கூறித் தலையை அசைத்தார்.

''நல்லது; என்னுடன் வா. உன்னை உன்னுடைய எசமானனிடம் ஒப்படைக்கும் வரை, நான் உன்னை வைத்துப் பரிபாலிக்கிறேன்'' என்று கூறினான் அவன்.

அவன் கூறியதன் உட்பொருளை விளங்கிக் கொள்ளாத அப்பாவி மனிதர், ''அப்படியா? மிகவும் நல்லதாகி விட்டது. அதைத்தானே நான் இதுவரை எதிர்பார்த்தேன். எவராவது என்னைப் பிடித்து, என் எச மானரிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடமாட்டாரா என்று எண்ணித் தவங்கிடந்தேன். அத்தகு வாய்ப்பு இன்று தான் எனக்குக் கிடைத் துள்ளது'' என்று கூறினார்.

அதன்பின் அவரைத் தம் இல்லம் அழைத்துச்சென்ற அவன், அவருடைய பெயர் என்னவென்று கூடக் கேட்கவில்லை. அவருடைய தந்தை இஸ்மாயீல், அவரைப் பெற்றதும், அவரைத் தம் மடிமீது வைத்து உச்சிமோந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகுத் திருப்பெயராகிய முஹம்மது என்பதைச் சூட்டியபோதினும், அதைப் பற்றி அவன் சிறிதேனும் வினவாது, அவரின் நல்ல தன்மையை மட்டும் மனத்தில் கொண்டு ''இன்று முதல் உன் பெயர் கைர் என்பதாக இருக்கட்டும்'' என்றான். அதுகேட்ட அவரும் 'கைர்' (நல்லது) என்று பதில் கூறினார். இஃதென்ன வேடிக்கை!

அவனோ ஒரு நெசவுத் தொழிலாளி. அவன் நெய்தல் தொழிலை அவருக்குக் கற்றுக்கொடுத்தான். அவரும் அதனை விரைவில் கற்றுக் கொண்டார். அதன்பின் என்ன? அவரைத் தறிக்குழியில் இறக்கிவிட்டு, இரவு பகலாக வேலை வாங்கினான். அவரும் முனகவோ, முணு முணுக்கவோ செய்யாது வேலை செய்தார். ஒருநாளல்ல, ஒரு மாதமல்ல, ஓர் ஆண்டல்ல, பல ஆண்டுகள். 'கைர்!' என்று அவன் அவரை அழைக்க வேண்டியது தான். கையிலுள்ள வேலையை அப்படி, அப்படியே போட்டுவிட்டு, ''இதோ வந்து கொண்டிருக்கிறேன்'' என்று கூறிய வண்ணம் ஓடோடி வருவார் அவர். அத்தகு உண்மை ஊழியராகப் பணி யாற்றினார் அவர்.

அவருடைய நேர்மையையும், நற்பண்புகளையும் இறை பக்தியையும், வணக்கங்களையும் கண்ட அவனுக்கு, அவர் மீது ஒருவித இரக்கம் ஏற்பட்டது. அவர்மீது ஏற்பட்ட இரக்கம், தன்மீது சினமாக மாறியது. ''என்ன அநியாயம் செய்து விட்டேன். பழி பாவமறியாத நல்லார் ஒருவரை ஏமாற்றி அழைத்து வந்து வயிற்றுச் சோற்றுக்கு வேலை வாங்கி அநீதி இழைத்துவிட்டேனே. இந்தப் பாவத்தை எங்கு போய்த் தொலைப்பது?'' என்று எண்ணி வருந்திய அவன், இதற்குப் பிராயச் சித்தம், அவரை இத்துடன் அனுப்பி விடுவதுதான் என்று எண்ணினான்.

ஒருநாள் கைர் தறிக்குழியில் நின்று கொண்டிருந்தார். அப்பொழுது அவன் 'கைர்' என்று அவரை அழைத்தது காற்றிலே மிதந்து வந்து, அவரின் காதுகளை அடைந்தது. ''இதோ வந்து விட்டேன்'' என்று கூறிய வண்ணம் ஓடோடி வந்தார் அவர்.

அவர் வந்து அவனின் முன்பு கைகட்டி நின்றதும். ''கைர்! நீ இங்கு வந்து எவ்வளவு நாட்களாகின்றன?'' என்று வினவினான் அவன்.

''பல்லாண்டுகளாகி விட்டன'' என்று பதில் கூறினார் அவர்.

'சரி; இக்கணமே நீ வந்த வழியே போகலாம்' என்று திடுதிப்பெனக் கூறினான்.

அதுகேட்டதும் கைருக்குப் பெரிதும் அதிர்ச்சியாய் இருந்தது. ''ஏன்? ஏன்? நான் ஏதேனும் தவறு செய்து விட்டேனோ?'' என்று ஏக்கத்துடன் வினவினார் அவர்.

''இல்லை, கைர்! நான்தான் தவறு செய்துவிட்டேன். என்னுடைய அடிமை என்று நான் உன்னைத் தவறாகக் கருதி, அழைத்து வந்து விட்டேன். இப்பொழுது நீ போகலாம்'' என்று கூறினான்.

அப்பொழுது இருவரின் கண்களும் பனித்தன.

கூஃபாவை விட்டு நீங்கி, மக்கா நோக்கி அடியெடுத்து வைத்த அவர், கொதிக்கும் பாலையில் பல நாட்கள் நடந்து, இறுதியாக மக்கா வந்து சேர்ந்தார். மக்காவில் அவர் அயரா வணக்கத்தில் ஈடுபட்டார். நாளுக்கு நாள் அவருடைய தகுதி மெருகு ஏறிக் கொண்டு வந்தது.

ஹஜ்ஜுக் கடமைகளையெல்லாம் செவ்வனே செய்து முடித்து விட்டு, பக்தாது வந்து சேர்ந்த அவர் ஸர்ரி அஸ்ஸகதியின் தாளடியில் அமர்ந்து ஆன்மீகக் கல்வி பயின்றார். அவர்கள் நிர்யாணம் அடைந்தபின், அவர்களின் மருகரும், மாணவருமான ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களின் குழுவில் சேர்ந்து ஆன்மீகப் பரிபக்குவம் எய்தினார். அவரைப் பற்றி ஜுனைத் (ரஹ்) அவர்கள் கூறுங்கால் 'கைர், கைருனா' (கைர் நம் அனைவரிலும் மேலானவர்) என்று புகழ்ந்துரைத்தார்கள்.

இப்பொழுது அவரின் இயற்பெயர் மறைந்துபோய், பட்டப்பெயரே எல்லாருக்கும் தெரிந்தது. அவரும் அதையே விரும்பினார். தாம் ஒருவரிடம் அடிமையாக வேலை செய்த பொழுது, தம் எசமான் தம்முடைய நல்ல இயல்பைக் கண்டு சூட்டிய பட்டமல்லவா? ''ஒரு முஸ்லிம் எனக்குத் தந்த பட்டத்தை மாற்றுவது நல்லதல்ல. எனவே என்னை அப்பெயரைக் கொண்டே அழையுங்கள்'' என்று அவர் தம்

நண்பர்களிடமும் கூறினார். எனவே அனைவரும் கைர் என்றே அழைத் தார்கள். பக்தாது வந்த பின்னரும், அவர் பிழைப்பின் நிமித்தம் நெசவுத் தொழிலை மேற்கொண்டதால், சிலர் நெசவாளர் என்று பொருள்படும் நஸ்ஸாஜ் என்ற சொல்லையும் அப்பெயருடன் சேர்த்துக் கொண்டு, 'கைருன் நஸ்ஸாஜ்' என்று அவரை அழைத்தார்கள்.

கைர் தறிக்குழியில் இறங்கி இறைவனின் திருப்பெயரை உரைத்த வண்ணம் நெய்து கொண்டிருப்பார். நெய்து முடிந்ததும், திஜ்லா நதியின் கரையோரங்களில் உலாவிக் கொண்டிருப்பார். அவரைக் கண்டதும், ஆற்றிலே அங்குமிங்கும் ஓடி விளையாடிக் கொண்டிருக்கும் மீன்கள் தம் வாயில் ஏதோதோ பொருள்களைக் கல்விக்கொண்டு வந்து, கரை யோரத்தில் அவரின் காலடியில் வைத்துவிட்டுச் செல்லும்.

ஒருநாள் ஒரு கிழவி அவரிடம் வந்து தமக்கு ''ஒரு மஸ்லின் துணிநெய்து தர வேண்டும்'' என்று கூறினாள்.

''நல்லது நெய்து தருகிறேன்'' என்று கூறினார் அவர்.

''அதன் கிரயம் என்ன?'' இது கிழவியின் அடுத்த கேள்வி.

''நீயோ கிழவி. ஏழை. உன்னிடம் அதன் கிரயமாக என்ன கேட்பது என்றே எனக்குப் புரியவில்லையே. சரி; நூல் கிரயம் ஒரு திர்ஹம் வரும். அதைக் கொண்டு வந்து கொடுத்தால் போதும். அதைக்கொண்டு நூல் கற்றை வாங்கி இலவசமாக உனக்குத் துணி நெய்து தந்துவிடுகிறேன்'' என்றார் அவர்.

''சரி, அப்பா! அவ்விதமே செய்கிறேன்'' என்று கூறிச் சென்ற அக்கிழவி, சற்றுத்தொலை சென்றதும் மீண்டும் வந்து, ''நாளை இங்கு நான் வரும்பொழுது, நீ இங்கு இல்லாவிட்டால் எவரிடம் பணத்தைக் கொடுப்பது?'' என்று வினவினாள்.

''நான் இங்கு இல்லாவிட்டால், எதிரிலுள்ள ஆற்றில் அதனை எறிந்து விட்டுச் செல்'' என்றார் அவர்.

''அடுத்தநாள் அக்கிழவி அங்கு வந்தபொழுது, கைரை அங்குக் காண வில்லை. எனவே அவர் கூறிய வண்ணம் திஜ்லா நதிக்குச் சென்று, அதனை அந்நதியில் வீசி எறிந்து விட்டுச் சென்றாள். அது ஆற்றில் விழுந்ததும், அதனைத் தம் வாயில் கௌவியது ஒரு மீன்.

சற்று நேரம் கழித்து கைர் திஜ்லா நதியின் கரையோரம் வந்து உலாவிக் கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் அந்த மீன், கிழவி வீசிய அந்த திர்ஹத்தைக் கொண்டு வந்து, அவரின் காலடியில் வைத்துவிட்டுச் சென்றது.

அடுத்தநாள் கிழவி தன் தறிக்குழி வந்ததும், அவளுக்காகத் தான் தயாரித்து வைத்திருந்த துணியை எடுத்து அவளிடம் கொடுத்தார் அவர். அதனைப் பெற்றதும், தம் பொக்கை வாயில் புன்னகை மின்ன, "நூல் வாங்க என்ன செய்தாய் அப்பா! நீ கூறிய வண்ணம் ஒரு திர்ஹத்தை முன்பின் யோசியாது ஆற்றிலல்லவோ வீசி எறிந்துவிட்டேன்" என்று கூறினாள் அவள்.

"அதைப்பற்றிக் கவலைப்படாதே, அம்மா! பணம் கிடைத்துவிட்டது. அதைக் கொண்டுதான் நூல் கற்றை வாங்கி நெய்தேன்" என்றார் அவர்.

"எவ்வாறு?" என்று வியப்புடன் வினவினாள் அவள்.

"அல்லாஹ் தந்தான்" என்று சுருக்கமாகப் பதில் கூறினார் அவர்.

அவருக்கு 120 வயதானது. ஒருநாள் மாலை கைர் தம் படுக்கையில் படுத்துக்கிடந்தார். அஸருத் தொழுகைக்கான நேரமும் வந்தது. தொழுவ தற்காக எழ எண்ணித் தலையைத் தலையணையிலிருந்து சிறிது உயர்த்தினார். அப்பொழுது உயிர் வாங்கும் வானவர் இஸ்ராயீலின் நிழல் அவர் மீது விழுந்தது.

தம் இறுதி அண்மி விட்டது என்பதை உணர்ந்த அவர், "இஸ்ராயீலே! சற்றுப் பொறும். நீரும் நானும் இறைவனின் அடிமைகள். நீரும் இறைவனுடைய ஆணையை நிறைவேற்றுவதற்காக வந்துள்ளீர். நானும் இறைவனுடைய ஆணையை நிறைவேற்றுவதற்காக எழுந்துள்ளேன். தொழுகை நேரம் வந்துவிட்டால், அதனை உடனே நிறைவேற்றுமாறு இறைவன் எனக்குப் பணித்துள்ளான். அந்த நேரம் எனக்கு இப்பொழுது வந்துள்ளது. நான் இப்பொழுது என் கடமையை நிறை வேற்றத் தவறின் பின்னர் எப்பொழுதுமே அக்கடமையாகிய இந்நேரத் தொழுகையை நிறைவேற்ற இயலாமல் போய் விடும். உமக்கோ அப்படியல்ல. உம்முடைய கடமையை நிறைவேற்ற உமக்கு ஏராளமான நேரம் இருக்கிறது. ஆதலின் நான் தொழுது முடியும் வரையில் சற்றுப் பொறும். நான் தொழுது முடிந்ததும் நீர் தாராளமாக என் உயிரை வாங்கிச் செல்லலாம்" என்று கூறினார்.

அதன் பின் உளூச் செய்து தொழுதார் அவர். தொழுது, வலப்புறம் 'ஸலாம்' கொடுத்தபின் இடப்புறம் 'ஸலாம்' கொடுத்தார். அவர் இடப்புறம் திரும்பி ஸலாம் கொடுத்ததும், ஒரு நொடியும் தாமதிக்காது அவரின் உயிரை வாங்கத் தயாராக அங்கு நின்று கொண்டிருந்த இஸ்ராயீல் (அலை) அவருடைய ஸலாத்தைத் தம்மை வர வேற்பதற்கான ஸலாமாகக் கருதிக் கொண்டு, வ அலைக்கு முஸ்ஸலாம் வரஹ்மத் துல்லாஹ் என்று பதில் ஸலாம் கூறிய வண்ணம், அவருடைய உயிரை வாங்கினார்.

அடுத்த கணம் கைருன் நஸ்ஸாஜின் ஆன்மா இறைவனின் திருமுன் வீற்றிருந்தது. இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 322- ஆம் ஆண்டிலாகும்.

அவர் இறந்து நல்லடக்கம் செய்யப்பட்ட இரவு, ஒருவர் அவரைக் கனவில் கண்டு ''அல்லாஹ் தங்களை எவ்வாறு நடத்தினான்?'' என்று வினவியபொழுது ''அதைப்பற்றிக் கேளாதே. நான் உங்களுடைய உலகை விட்டும் விடுதலையாகி விட்டேன்'' என்று அவர் பதில் கூறிய தாகக் கூறப்படுகிறது.



## 20. நத்ஹர் வலி (ரஹ்)

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அருமைத் திருப்பெயரர் ஹுஸைன் (ரலி) அவர்களின் கொடியில் மலர்ந்த நறுமலராகிய இத்தியார் (ரஹ்) அவர்கள், மதீன மாநகர் விட்டு தம் மாணவர் புடைசூழ உதுமானியப் பேரரசின் தலைமைப் பீடமாம் இஸ்தம்பூலை அடைந்த பொழுது, சுல்தான் அப்துல் மஜீதுகானும், அமைச்சர் பெரு மக்களும் அவர்களுக்குப் பெரிதும் மரியாதை செய்து கௌரவித்தனர். அவர்களின் கரம் பிடித்துத் தீட்சை பெற்றவர்களோ எண்ணிலடங்காதவர்கள்.

அவர்களின் ஆற்றலையும் மாண்பினையும் கண்டு வியந்த சுல்தான், சில காலம் கழித்து, அவர்களுக்கு பஹனஸா என்னும் நகரையும் அதன் சூழலையும் மானியமாக வழங்கிக் கௌரவித்தார். அங்கு சென்று அவர்கள், அரச பாரம் ஏற்றுச் செங்கோல் செலுத்தி வருங்கால், அவர்களுக்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது. அதற்கு அஹ்மத் கபீர் என்னும் அழகுசால் திருப்பெயரிட்டுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர்.

தந்தைக்குப் பின் பஹனஸாவின் அரியணை ஏறிய அஹ்மது கபீர் (ரஹ்) அவர்களுக்கு நாற்பதைந்து வயதான பொழுதும், மகப்பேறு இல்லாதிருந்தது, அவர்களுக்குப் பெரிதும் கவலையளித்தது. மகப்பேறு வேண்டி உண்ணாத மருந்து ஒன்றுகூட இல்லை. செய்யாத அறம் பாக்கி இல்லை. எல்லாப் பேற்றினையும் அவர்களுக்கு அளித்த இறைவன், மகப்பேற்றினை மட்டும் அவர்களுக்கு அளிக்க மறுத்தது ஏனோ என்று அவர்கள் மயங்கினார்கள், தியங்கினார்கள்.

இறுதியாக அவர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. "இறைவன் என் அருமைப்பாட்டனாராம் முஹம்மது (ஸல்) அவர்களை நோக்கி, 'லவ்லாக லமா கலக்துல் அஃப்லாக் ('நீர் இல்லையெனில், நான் அண்ட கோளங்களையும் படைத்திரேன்') என்று அருள்மொழி பகர்ந்துள்ளானே. என் பாட்டனார் அவர்களும் "அனமின் நூருல்லாஹி வகுல்லு ஷைஇன் மின்நூரி" (நான் இறைவனின் பேரொளியிலிருந்து ஆனேன். அண்ட

கோளங்களும் என் பேரொளியிலிருந்து ஆனவை) என்று திருவாய் மலர்ந்துள்ளார்களே. அவ்வாறிருக்க நான் ஏன் மதீன மாநகர் சென்று என் பாட்டனாரின் அடக்கவிடத்தை அடைந்து, அவர்களிடமே என் குறை யிரந்து அழுது கெஞ்சி மன்றாடக் கூடாது?'' என்று தம்மையே தாம் வினவிக் கொண்டனர். அடுத்தகணம் அவர்கள் மதீனாப் பயணத்திற்கான ஆயத்தங்கள் செய்யத் துவங்கி விட்டனர்.

விரைவில் மதீன மாநகர் வந்தடைந்த அவர்கள், புனித ரௌலா ஷரீஃபின் முன் நின்று துக்கம் தொண்டையை அடைக்க, மௌன மொழி களால் தம் மனக்குறையை எடுத்துரைத்து, கண்ணீரைத் தம் பாட்டனாரின் பாதாரவிந்தங்களில் காணிக்கையாக வைத்தார்கள்.

அன்றிரவு வெள்ளிக்கிழமை இரவாக இருந்தது. அன்பர்க்கு அருள்பாலிக்கும் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், தம் அருமைப் பெயரரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, ''அஹ்மது கபீர்! ஒன்றிற்கும் கவலற்க! இதனை உண்ணும். இறையருளால் உமக்கு ஓர் ஆண் மகவு பிறக்கும். அது இறைநேசச் செல்வர்களின் உயர் பதவியாகிய 'குத்பு' பதவியைப் பெற்று வாழும். அதில் எத்துணைச் சுளைகள் உள்ளனவோ அத்தனை சீடர்களை அவர் பெற்றிருப்பார். அவர்களும் 'விலாயத்' உடை யவர்களாக விளங்குவர்'' என்று திருவாய் மலர்ந்து, ஒரு மாதுளம் பழத்தை அவர்களிடம் கொடுத்தனர்.

அதனைப் பெற்ற அடுத்த கணமே மகப்பேறு எய்தப் பெற வேண்டு மென்ற ஆவலால் உந்தப் பெற்ற அவர்கள், அதனை உடைத்து அதிலிருந்து மாணிக்கம் நிகர் சுளைகளை எடுத்து நாவினிக்க, வயிறு இனிக்க, உளம் இனிக்க உண்டார்கள். ஆஹா! அதுபோன்ற ஒரு தீஞ்சுவைக் கனியை அவர்கள் தம் வாணாளில் உண்டதே இல்லை!!

ஹுஸைன் (ரலி) அவர்களின் வேறொரு கிளையில் தோன்றிய ஸைபித் அலீ என்பவரின் அருமைத் திருமகளும், அஹ்மத் கபீர் (ரஹ்) அவர்களின் ஆருயிர்த் துணைவியுமாகிய ஃபத்ஹுன்னிஸா அம்மையார் சின்னாட்களில் கருவுற்றனர். அப்பொழுது அவர்களின் கனவில் அவர் களின் பாட்டனார் அலீ (ரலி) அவர்கள் தோன்றி, வலிமார்களின் கிரீடாதி பதியாக ஒரு குத்பு அவர்களின் மணி வயிற்றில் கருவுற்றிருக்கும் நற் செய்தியை நவின்று, ''ஃபத்ஹுன்னிஸாவே! உன் பாக்கியமே பாக்கியம்! உன் நற்பேறே நற்பேறு!!'' என்று நன்மாராயம் மொழிந்துவிட்டு மறைந் தனர்.

இதன்பின் பத்துமாதங்கள் பறந்தோடின. ஹிஜ்ரி 347 ஆம் ஆண்டு துல்ஹஜ் திங்கள் இரண்டாம் நாள் (14. 2.952) சனிக்கிழமை, ஃபத்ஹுன்

னிஸா அம்மையார் ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தனர். அரசருக்கு ஆண் மகவு பிறந்த செய்தி அறிந்து பஹனஸா நகரமே மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தது. அஹ்மது கபீர் (ரஹ்)அவர்களோ, இரண்டு 'ரக்அத்' நஃபில் தொழுகை தொழுது, இறை துதி பாடி இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள்.

குழந்தை பிறந்து ஏழாம் நாள், பெற்றோர்கள் அவருக்கு முதஹ்ஹருத்தீன் என்னும் அழகுசால் திருப்பெயரிட்டு, அருமை பெருமையுடன் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார்கள்.

முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களுக்கு ஏழு வயதான பொழுது, தந்தை அஹ்மது கபீர் (ரஹ்) அவர்கள் இறப்பெய்தவே, பஹனஸா நகர மக்கள் ஒருங்குகூடி, இளவலுக்குப்பட்டம் கட்டி அவர்களுக்கு உறுதுணையாக ஸைபித் அலீ என்பவரை நியமித்தனர்.

இதற்குப் பத்தாண்டுகளுக்குப்பின் ஸைபித் அலீயும் உலகு நீக்கவே, முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களே, அரசாங்கத்தின் முழுப் பொறுப்பையும் ஏற்று, ஸைபித் அலீயின் இரு ஆண்மக்களான ஷம்சுத்தீன் என்பவரையும், ஷம்சுல்லாஹ் என்பவரையும் தம் அமைச்சர் களாகக் கொண்டு, செவ்வனே அரசு செலுத்தலாயினர். இவ்வாறு நான்கு ஆண்டுகள் உருண்டோடின.*

முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களுக்கு இருபத்தொரு வயதான பொழுது, அவர்கள் கனவொன்று கண்டார்கள். அதில் ஒருவர் நரகத்தில் உழன்று கொண்டிருக்கிறார். எரி தணலில் அவருடைய உடல் வெந்து உருகி ஓடிக் கொண்டுள்ளது. வேதனை தாங்காது அவர் அலறிக் கொண்டுள்ளார். அது கண்டு அவர்மீது இரங்கிய இவர்கள், அவரை அணுகி, ''நீ யார்?உனக்கு ஏன் இத்துணைத் துன்பம் தரப்படுகிறது? நீ யாது பிழை செய்தனை?'' என்று பரிவுடன் வினவுகிறார்.

அதற்கு அவர், ''அதை ஏன் நீர் கேட்கிறீர்? நான் உலகில் இழைத்த அநீதங்களுக்கும், நுகர்ந்த அதீதமான இன்பங்களுக்கும் நான் இங்குப் பட்டுத் தொலைக்கிறேன்'' என்று கூறினார்.

''அப்படியா! அப்படி நீ என்ன அநீதம் இழைத்தாய்? அதீதமான இன்பம் நுகர்ந்தாய்?'' என்று வினவுகிறார்கள் அவர்கள்.

அதற்கு அவர், ''நான் உலகில் இழைத்த அநீதங்கள், ஆற்றிய அநியாயங்கள் ஒன்றா, இரண்டா? எதனைக் கூறுவது? எதனை மறைப்பது? நான் சாமான்யனல்லன். மணிக்கால் அமளி அமர்ந்து

---

* ஃபதாரீகுல் ஔலியா என்ற நூலில் அவர்கள் ரூம் நாட்டிற்கே அரசராயிருந்தனர் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மாமாநிலம் புரந்தவன். செங்கோல் செலுத்துவதற்குப் பதிலாக கொடுங்கோல் தாங்கிய கொடியவன். அதன் பலனை நான் இன்று நுகர்ந்து கொண்டிருக்கிறேன்'' என்று கண்ணீர் சிந்தக் கூறுகிறார்.

இதன்பின் மற்றொரு காட்சி துவங்குகிறது. அவர்களின் முன் ஒய்யாரப் பூங்கா ஒன்று தோன்றுகிறது. அதில், வண்ண வண்ண மலர்கள் பூத்துச் சொரிந்து கிடக்கின்றன. அதனூடே வீசும் மென்காற்று நறு மணத்தை நாலா திசைகளிலும் அள்ளித் தெளித்துக் கொண்டுள்ளது.

அப்பூங்காவின் நடுவே நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட மணி மண்டபம் ஒன்று காட்சி வழங்குகிறது. அதனுள்ளே நுழைகிறார்கள் அவர்கள். அங்கே அருளே உருவெடுத்தாற் போன்ற பெரியார் ஒருவர் அமர்ந்து, இறைவனைத் துதித்துக் கொண்டிருக்கிறார். அவரின் அருகே போய் அவர்கள் நின்றதும், அவரின் தியானம் கலைகிறது. திரும்பிப் பார்க்கிறார் வந்தவரை.

''பெரியீர்! தாங்கள் யார்? தாங்கள் எதன் காரணமாக இத்துணைப் பேரின்ப நிலையை எய்தப் பெற்றுள்ளீர்கள்? தாங்கள் உலகில் வாழ் வாங்கு வாழ்ந்த வகை தான் யாது?'' என்று அவர்கள் அவரைப் பணி வோடும், பண்போடும் வினவுகிறார்கள்.

அதற்கு அவர், 'நான் ஒரு பக்கீர். பஞ்சைப் பராரியாகப் பாரிலே வாழ்ந்தேன். என் உணவுக்காக உழைக்கும் நேரம்போக, எஞ்சிய நேரத்தை இறைத் தியானத்திலும், நற்செயல்கள் ஆற்றுவதிலும் கழிந்தேன். அதன் காரணமாக இறைவன் எனக்கு இத்தகு பேரின்பப் பெரு வாழ்வை வழங்கினான்'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறுகிறார். இத்துடன் கனவு கலைகிறது.

இக்கனவைக் கண்டதிலிருந்து முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களின் மனம் ஒரு நிலைக் கொள்ளவில்லை. எப்பொழுது பார்த்தாலும், அவர் களுக்கு அக்கனவு பற்றிய நினைவாகவே இருந்தது. அரச வாழ்க்கையே கசந்துவிட்டது அவர்களுக்கு. நாளுக்கு நாள் அந்தக் கசப்புணர்வு அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. அதனைத் தம் இதயத்தில் மூடிவைக்க, வைக்க, அதன் உந்துதல் தாங்க இயலாது, இதயமே வெடித்து விடும்போல் இருந்தது.

எனவே ஒரு நாள் அவர்கள் தம் இளவலையும், அமைச்சர் இரு வரையும் ஒருங்கழைத்து, தாம் கண்ட கனவை விண்டு ''இவ்வுலகமும், அதிலுள்ள பொருள்களும், இன்பங்களும் அழியக் கூடியவையேயாகும். இந்த உலக இன்பங்களைத் தேடுபவன் நாயென்றும், மறு உலக இன்பங் களையே வேட்கை கொள்பவன் பெண் என்றும், இறைவனைத்

தேடுபவனே ஆண்பிள்ளை சிங்கம் என்றும் ஆன்றோர்கள் கூறியுள்ளனர். எனவே நான், அரசு துறந்து, இறைவழியில் என்னை அழைத்துச் செல்லும் ஒரு காமிலான ஷைகைத் தேடிப் புறப்படத் தீர்மானித்து விட்டேன். எனக்குப்பின், என் இளவல் இந்நாட்டின் அரியணை ஏறி அரசு செய்வார்'' என்று கூறினர்.

அதுகேட்டு மூவரும் அதிர்ச்சியுற்றார்கள். இளவல் மகிழ்ச்சியுறுவதற்கு மாறாகத் தேம்பித்தேம்பி அழலானார். அவருடைய கன்னங்களில் கண்ணீர் வாய்க்கால் வகுத்து வழிந்தோடியது.

''தம்பி! அழாதே! நாம் இருவரும் நம் தந்தை விட்டுச் சென்ற இப்பேரரசுக்கு சமபங்காளிகள் ஆவோம். நான் உனக்கு முன் பிறந்ததன் காரணமாக, சரிநிகர் சமானமான பங்காளர்களில் முதல்வனாக உள்ளேனேயன்றி வேறில்லை. நான் நம் தந்தைக்கு மூத்தோன் என்ற முறையில், இப்பேரரசைப் பதினைந்து ஆண்டுகள் ஆட்சி செய்தேன். இளையோனாகிய நீயும் எனக்குப்பின் இதனைச் சில ஆண்டுகள் ஆட்சி செய்வதே முறைமை'' என்று அவர்கள் தம் தம்பிக்கு ஆறுதல் கூறினார்கள். எனினும், அவர் ஆறுதல் அடைந்தாரில்லை.

இதன்பின் அவர்கள் தம் அன்னையை அணுகி, ''அம்மா! என் உயிரினும் இனிய தாயே!! தாங்கள் என்னைத் தங்களின் மணி வயிற்றில் பத்துமாதங்கள் சுமந்து பெற்று, அதன்பின் தங்களின் மார்பகத்தில் சுரந்த தங்களின் இரத்தத்தின் திரிபாகிய பாலை எனக்கு ஊட்டி வளர்த்தீர்கள். அந்தப் பாலுக்கான கடமையைப் பாவியேன், இன்னும் சரிவர ஆற்றவில்லை. அதற்குள் எனக்கு இவ்வுலக வாழ்வே கசந்து விட்டது. எனவே, தாங்கள் எனக்கு அளித்த அந்தப் பாலை எனக்கு அறம் செய்து விட்டதாகக் கூறி என்னை ஆசீர்வதித்து, அல்லாஹ்வின் பாதையில் அனுப்பி வையுங்கள்'' என்று பணிவுடன் கூறுகின்றனர்.

அவர்களின் இப்பணிவான சொல். அன்னையின் ஈரலைக் கருகச் செய்தது. ஏங்கித் திகைத்து விம்மினார். வெய்துயிர்த்து அழுதார். ''என் மகனே! என் ஆருயிர் மகனே! உன்னை நான் என்ன தவம் செய்து பெற்றேனடா. என்னுடைய தள்ளாத வயதில் என்னைவிட்டுப் பிரிய உன் மனம் எவ்வாறு ஒப்பியதடா. உன் வாய்ச் சொல் என் உள்ளத்தில் 'சூரீ' எனத்தைத்து இரத்தத்தைப் பீறிட்டு வெளி வரச்செய்து விட்டதே. என் கண்ணின், மணிக்குள் மணியாக வைத்து உன்னைக் காத்தேனே! என் உள்ளத்தின் உள்ளே வைத்து உன்னைப் பாதுகாத்தேனே. என் கண்ணாகிய கண்ணின் மணியாகிய, என் உயிராகிய, என் உயிருக்கு உயிராகிய உன்னைப் பிரிந்து நான் எவ்வாறு இவ்வுலகில் வாழ்வேனடா''என்று கூறி அரற்றினார் அவர்.

அதன்பின் சற்று ஆறுதல் பெற்ற அவர், "நீ அல்லாஹ்வின் பாதையில் செல்ல நாடியிருப்பதால், அதனைத் தடுப்பது முறைமையன்று. நீ பாலுண்ட கடமையை இன்னும் சரிவர ஆற்றவில்லையே என்று கவலைப்பட வேண்டாம். அதனை நான் உனக்கு அறம் செய்து விட்டேன்" என்று மட்டும் கூறினார். அதற்குமேல் 'சென்று வா' என்று கூற அவரின் நாவிற்கு சக்தியில்லை.

அன்னையின் ஆன்மீக அனுமதி பெற்றபின், அரசு மாற்றத்திற்கான அலுவல்கள் மடமடவென்று செய்யப்பட்டன. முடிசூட்டு விழா நாளும் நெருங்கியது. ஆனால், மக்களிடையே தான் மகிழ்ச்சி காணவில்லை. அது எங்கோ போய் ஒளிந்து கொண்டது.

அத்தாணி மன்றம், சுல்தான் சையிது முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் தம் கொலு மீது வீற்றிருந்து பின்வரும் உரையை நிகழ்த்தி னார்கள்:

"அமைச்சர் பெருமக்களே! அருமை மக்களே!! நான் தங்களுக்குத் தலைமை தாங்கிப் பணியாற்றும் பேற்றினைப் பதினைந்து ஆண்டுகளாகப் பெற்றிருந்தேன். எனக்கு அப்பணியில் உறுதுணையாக என் இரு அமைச்சர்களும், என் இளவலும் இருந்து வந்தார்கள் என்பதை நீங்கள் எல்லோரும் நன்கு அறிவீர்கள். நான் இப்பொழுது முடி துறந்து என் பின்னவருக்கு முடி சூட்டுகிறேன். அவர் பிறப்பால் எனக்குப் பின்னவரேயானாலும், அறிவால் எனக்குப் பின்னவரல்லர். அவர் வயதால் எனக்கு இளையவராயினும், ஆற்றலால் எனக்கு இளைத்தவரல்லர். எனவே நீங்கள் எவ்வாறு என்மீது விசுவாசமாயிருந்தீர்களோ, அதே போன்று அவர் மீதும் விசுவாசம் செலுத்தி, அவர் இடும் கட்டளைகளுக்குக் கீழ்ப் படிந்து ஒழுகுமாறு உங்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன்."

இவ்வாறு உரையாற்றி முடிந்தபின், தம் இளவலை அழைத்து வந்து கொலுவில் இருத்தி, அவரின் இளம் தலைமீது முடிசூட்டினார்கள் அவர்கள். அப்பொழுது மக்களின் முகத்தில் ஈயாடவில்லை.

முடிசூட்டுவிழா முடிவுற்ற பின்னர், துறவிகளின் கம்பளி ஆடை தரித்து அரண்மனையிலிருந்து வெளியேறினார்கள் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள். தம் அன்பிற்கும், மரியாதைக்கும் உரிய மாமன்னர் பக்கீர் கோலம்பூண்டு, பஞ்சைப் பராரி போன்று காடேகுவதைக் கண்டு மக்களின் கண்கள் குளமாயின. துன்பத்தைத் தாள இயலாது, அவர்கள் சிறு குழந்தைகள் போன்று விக்கி விக்கி அழுதார்கள். அவர்களின் கால்களில் வீழ்ந்து தம் கண்ணீரைக் காணிக்கையாக்கி, அவர்களைப்

போகவிடாது தடுத்தார்கள். எனினும் அவர்கள் கேட்கவில்லை. ''என்முடிவு முடிவானது. அன்பு கூர்ந்து நான் செல்ல அனுமதியுங்கள். இறைவன் நாடினால் நான் மீண்டும் வந்து உங்களைச் சந்திக்கிறேன்'' என்று ஆறுதல் கூறினார்கள் அவர்கள். அவர்களின் இந்த ஆறுதல் மொழி மக்களின் அவலத்தைச் சிறிது ஆற்றியது.

எனினும், பலர் அதுகேட்டு ஆறுதல் பெறவில்லை. ''தங்களுக்குப் பின் எங்களுக்கு இங்கு ஒரு வாழ்வா? நாங்களும் தங்களுடன் வருகிறோம். தாங்கள் எங்குச் செல்லினும், நாங்கள் தங்களை நிழல் போன்று தொடர்ந்து வருவோம்'' என்று கூறிக் கொண்டு தொள்ளாயிரம் பேர் அவர்களுடன் சேர்ந்து நடை போட்டார்கள், அவர்களில், அவர்களின் இரு அமைச்சர்களான ஷம்சுத்தீன் என்ற ஷம்ஸ் கோயானும், ஷம்சுல்லாஹ் என்ற ஷம்ஸ் பர்ரானும் இருந்தனர்.

காடும் மலையும் வனமும் வனாந்தரங்களும் கடந்து, கல்லிலும் முள்ளிலும் அவர்கள் நடந்து சென்றார்கள். கால் கடுக்க, கால் நோவ அவர்கள் நடந்துசென்றார்கள். எங்குச் செல்கின்றோம், எதற்காகச் செல் கின்றோம் என்று அறியா நிலையில், அவர்கள் கால் போன திசையில் நடந்து சென்றார்கள். கல் உராய்ந்தும், முள் பாய்ந்தும் அவர்களின் கால்கள் குருதி சிந்தின. ஆனால் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களின், கால்கள் மட்டும் குருதி சிந்தவில்லை; அவர்களின் உள்ளமும் காமிலான ஷைகை எங்கு காண்போம் என்று ஏங்கித்தவித்து, குருதி சிந்திக் கொண்டிருந்தது.

இக்காலை அவர்கள் கானகத்தின் நடுவே ஓரிடத்தில் அயர்ந்து படுத்துறங்கும் பொழுது, அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், அவர்களின் கனவில் திருக்காட்சி வழங்கி, ''கவலற்க! நாளை நாம் கிள்ரை உம்மிடம் அனுப்பி வைப்போம். அவர் உமக்குக் காமிலான ஷைகைக் காட்டியருள்வார்'' என்று அமுதவாய் விண்டு மறைந்தனர்.

அவ்விதமே பொழுது விடிந்தது. பசுமை ஆடை உடுத்திய அழகுத் திருமுகத்தார் ஒருவர், அவர்களின் முன்வந்து அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து நின்றார். அதற்குப் பதில் கூறிய அவர்கள், ''தாங்கள் யார்? வந்த அலுவல் யாதோ?'' என்று வினவினர்.

அதற்கு அவர், ''நான் கிள்ர் ஆவேன். அண்ணல் நபி (ஸல்) அவர் களின் ஆணையின்படி, நான் உம்மை ஒரு காமிலான ஷைகிடம் அழைத்துச் செல்வதற்காக வந்துள்ளேன். அவர் பெயர் ஷைகு அலீ என்பதாகும். அவர் ஹுஸைன் (ரலி) அவர்களின் வழி வந்தவர். அவர் இக்காலத்து 'குத்பு' ஆக விளங்குகிறார். அவர் ஹுர்முஸ் நகரில் வாழ்கிறார்'' என்று கூறினர்.

இதன்பின் அவர்களை அழைத்துக் கொண்டு, ஹுர்முஸ் நகர் நோக்கிச் சென்றார்கள் கிள்ர் (அலை). இறுதியாக அவர்கள், ஹுர்முஸ் நகர்வந்து சேர்ந்தனர். வீதிகளெல்லாம் கடந்து ஷைகு அலீ (ரலி) அவர்களின் தவமடத்தின் தலைவாசலில் வந்து நின்ற கிள்ரு (அலை), முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களை நோக்கி, ''இதுவே உம்முடைய குருநாதரின் தவமடம் ஆகும். இதுவரை உம்மை அழைத்துச் சென்று விடுமாறே அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், எனக்கு அருட் கட்டளையிட்டுள்ளார்கள். ஆதலின் நீர் உள்ளே செல்லும். நான் சென்று வருகிறேன்'' என்று கூறி விடை பெற்றுச் சென்றனர்.

இப்பொழுது அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்கள், ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் கனவிலும் திருத்தோற்றம் வழங்கி, ''உம்மிடம் நம் திருப்பேரர் முதஹ்ஹருத்தீனை அனுப்பி வைத்துள்ளோம். அவர் உம் தலை வாசலில் வந்து நின்று கொண்டிருக்கிறார். அவரை உள்ளே அழைத்து வந்து தீட்சை நல்கும்'' என்று அமுதவாய் விண்டு மறைந்தனர்.

திடுக்குற்று விழித்தெழுந்த ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் ஓடோடிச் சென்று தம் தவமடத்தின் கதவைத்திறந்த பொழுது, அருளே உருவாய் அமைந்த இளவல் ஒருவர் நின்று கொண்டிருப்பதைக் கண்டு, அவர்களே அண்ணலெம் பெருமான் (ஸல்)அவர்கள் குறிப்பிட்ட நல்லார் என அறிந்து, அவர்களை ஆரத்தழுவி ''முதஹ்ஹருத்தீன்! உம் வரவு நல் வரவாகுக! உம் மனத்திடத்தை நான் பெரிதும் பாராட்டுகிறேன். நீர் இங்கு வந்த நோக்கத்தையும் நான் அறிவேன். உம்மீது இறையருள் பொழியுமாக!'' என்று வாழ்த்துரை வழங்கினார்கள்.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் தவமடத்தில், ஒரு கொப்பரையில் தண்ணீர் ஊற்றப்பட்டு வெந்தழல் அடுப்பின் மீது வைக்கப்பட்டுக் கொதித்துக் கொண்டிருக்கும். அதில் ஒரு துளி உடலில் பட்டால் கூட உடல் கொப்பளித்து விடும். அத்தகு முற்ற முடிவுறக் காய்ந்த நீராக அது இருந்தது.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களிடம் தீட்சை பெற நாடி ''எவர் வரினும் அவர்கள் முதலில் கூறுவது, போய் அந்தக் கொதி நீர்க் கொப்பரையில் குதித்து மூழ்கிக் குளித்து உடல் தூய்மை பெற்றுவாரும். பின்னர் அகத்தூய்மை, ஆன்மீகத் தூய்மை பெற்றுக் கொள்ளலாம்'' என்பதாகவே இருந்தது.

அகத்தூய்மை, ஆன்மீகத்தூய்மை பெறுவது ஒருபுறம் இருக்கட்டும். அந்தக்கொதி நீரில் குளித்து, உடல் தூய்மை பெறும்முன் உயிர் போய்விடுமே என்று அஞ்சி சொல்லாமல் கொல்லாமல் சென்று விடுபவர் பலர். துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, அந்தக் கொதிநீர்

கொப்பரையை நோக்கிச் செல்லும், சிலர் அதனை நெருங்கியதும், அவர்களின் துணிச்சல் அவர்களின் காலை வாரிவிட்டு ஓடிவிட்டதன் காரணமாகப் பலரின் நகைப்புக்கிலக்காகி முகமிழந்து, திரும்பிச் சென்று வந்தார்கள். என்னதான் நேரிடினும் சரியே, செத்தாலும், பிழைத்தாலும் சரியே, என்று எண்ணி, அந்தக்கொதி நீர்க் கொப்பரையில் குதித்துக் குளித்து உடல் தூய்மை பெற்று வந்தவர்களுக்கு, ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் தம் அன்புக் கரம் நீட்டி தீட்சையளித்து வந்தார்கள். அல்லாஹ்வின் நல்லடியார் களுக்கே அன்றி வேறு எவருக்கும் இத்தகு நற்பேறு கிடைக்காதிருந்தது.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஆசியுடன் தம்மிடம் தீட்சை பெறுவதற்காக வந்திருக்கும் இளவல் முதஹ்ஹருத்தீன் (ரஹ்) இத்தகு சோதனையென்ன, இதைவிட ஆயிரம் மடங்கு கடினமான வேறு எத்தகு சோதனையாயினும், அதில் நிச்சயம் வெற்றிபெறுவார்கள் என்பதை நன்குணர்த்த ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் அடுத்த நாள் வியாழக்கிழமை முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்கள் வைகறையில் தொழுதுவிட்டுத் தம் முன் வந்தமர்ந்ததும் அவர்களை நோக்கி, 'அதோ கொதித்துக் கொண்டிருக்கும் கொப்பரையில் மூழ்கிக் குளித்து உடல் தூய்மை பெற்று வாரும்; அதன்பின் அகத்தூய்மை, ஆன்மீகத் தூய்மை பெறுவதற்கான வழி வகைகள் செய்வோம்'' என்று கூறினர்.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் திருவாயிலிருந்து இச்சொற்கள் வெளி வந்ததுதான் தாமதம். அடுத்த கணம் ''யா அலீ!'' என்று கூறியவண்ணம் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அந்தக் கொப்பரையில் போய்க் குதித்தார்கள் அவர்கள். எவ்வாறு நம்ரூதினின் நெருப்புக்குண்டம், இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு மிதமான குளிர்ச்சியுள்ள பூங்காவாக மாறியதோ, அதே போன்று அவர்கள், அக்கொதி நீரில் குதித்ததும், அது அவர்களுக்கு மிதமான குளிர்நீராக மாறியது. அதில் மூழ்கிக் குளித்து, உடல் தூய்மை பெற்று வெளி வந்தார்கள் அவர்கள்.

சாதனையை வென்று புடம்போட்ட பொன்னே போன்று, தம்முன் வந்தமர்ந்த முதஹ்ஹருத்தீன் (ரஹ்) அவர்களைப் புன்முறுவல் பூத்த முகத்தினராய் வரவேற்ற ஷைகு அலீ (ரஹ்) அவர்கள், அன்னாரின் கரம் பிடித்துத் தீட்சை நல்கி, அவர்களைத் தம் ஞானப் பாட்டையில் இணைத்து, அவர்களுக்கு 'நத்ஹர்' என்ற பெயரையும் சூட்டினார்கள். இதிலிருந்து அவர்களின் பெயர் 'நத்ஹர் ' 'நத்ஹர்' என்று எங்கணும் முழங்கலாயிற்று.

வேறு எந்த ஷைகும் செய்யாத நூதனமான சோதனையைத் தம்மிடம் தீட்சை வேண்டி வருபவர்கள் மீது ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் சுமத்து

வதும், அதில் வாகைசூடி வெளிவருபவர்களுக்கு மட்டும் அவர்கள் தீட்சை வழங்குவதும், ஆங்கிருந்த பலருக்கு வியப்பையளித்து. அச்சோதனையில் நத்ஹர் (ரஹ்) அவர்களால் எவ்வாறு வெற்றி பெற இயன்றது என்பதும் அவர்களுக்கு விளங்காத புதிராக இருந்தது. இதுபற்றி அவர்கள் ஷைகு அலீ (ரஹ்) அவர்களிடம் வினயமாக வினவி விளக்கம் வேண்டினர்.

அப்பொழுது ஷைகு அலீ (ரஹ்) அவர்கள் தம் தாளடியில் வீற்றிருந்த நத்ஹர் (ரஹ்) அவர்களை நோக்கி, அதற்கான விளக்கத்தை எடுத்துரைக்கு மாறு கூறினர். உடனே அவர்கள், ''இறைவனின் நல்லடியார்களின் உள்ளத்தில் இறைகாதல் என்ற வெந்தழல் எப்பொழுதும் தகித்துக் கொண்டுள்ளது. அதன் உக்கிரத்தைக் கண்டு நரகம் கூட நடுங்கும். அத்தகு காதல் நெருப்பை தன்னுடைய அமானிதமாக ஏற்றுக் கொள்ளுமாறு வானம், பூமி, சுவனம், நரகம், ஜின், வானவர் ஆகிய அடங்கலிடமும் இறைவன் கூறினான். ஆனால் அந்த அமானிதத்தின் சுமையைத் தங்களால் தாங்க இயலாது என்று அனைத்தும் ஒருமித்துக் கூறிவிட்டன. மனிதனே அந்த அமானிதத்தை ஏற்றுக்கொள்ள முன் வந்தான். 'இஷ்கெ இலாஹி' என்ற இறைக் காதல் தீ, எவனுடைய உள்ளத்தில் தகித்துக் கொண்டிருக் கின்றதோ, அவன் அந்தக் கொதிக்கும் நீரிலென்ன, தீக்குழம்பில் குதித்து மூழ்கினாலும், அத்தீக் குழம்பு அதனை எதிர்த்து நிற்க இயலாது குளிர்ந்து விடும்'' என்று கூறி முடித்தனர். அதுகேட்டு ஆங்கு வீற்றிருந்தவர்களின் வியப்பு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகியது.

ஷைகு அலீ (ரஹ்) அவர்களின் தாளடியில் சில காலம் வீற்றிருந்து, பல்வேறு ஞான இரகசியங்களையெல்லாம் கற்றுத் தேர்ந்து, மெய்ஞ்ஞான சொரூபராய் விளங்கிய நத்ஹர் (ரஹ்) அவர்கள், பின்னர் தம் ஆசானின் அனுமதியைப் பெற்றுத் தம் சீடர்களான தொள்ளாயிரம் கலந்தர்களுடன், மக்கா சென்று 'ஹஜ்'ஜு செய்து பின்னர் மதீனா சென்று அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்தனர். அங்கேயே ஓராண்டு காலம் தங்கியிருந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலாவத்தையும் ஸலாமையும் அல்லும் பகலும் சொரிந்து கொண்டிருந்தார்கள்.

இக்காலை நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை அவர்களின் சீடர் ஐயூப் கலந்தர் இதோ கூறுகின்றார். நாமும் கேட்போம்:

''ஒரு நள்ளிரவில் நானும், நத்ஹர் (ரஹ்) அவர்களும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் புனித ரௌலா ஷரீஃபின் முன் நின்று அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறிக் கொண்டிருந்தோம். அப்பொழுது திடீரென நத்ஹர் (ரஹ்) அவர்களைக் காணவில்லை. அப்பொழுது எனக்கேற்பட்ட திகைப்பிற்கும் திடுக்கத்திற்கும் அளவில்லை. பின்னர்

சற்று நேரம் கழித்துத் திடீரென அவர்கள் என் அருகே முன்புபோல் நின்று ஸலவாத்தும் ஸலாமும் கூறிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது நான் அவர்களை வியப்புக் கண்களுடன் நோக்கி, ''தாங்கள் இதுவரை எங்கு சென்றிருந்தீர்கள்?'' என்று வினவினேன். அதற்கு அவர்கள், ''நான் இங்கு நின்று 'அலம் நஷ்ரஹ்' சூராவை ஓதிக் கொண்டிருந்தேன். அப்பொழுது அதில் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பற்றிய குறிப்பு வரவே, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்முன் திருத்தோற்றம் வழங்கி, என்னை ஆரத்தழுவித் தங்களின் ரௌலா ஷரீஃபுக்குள் அழைத்துச் சென்று, தங்களின் உமிழ் நீரை என் வாயில் சொரிந்து, 'இன்று முதல் நீர் குத்புகளுக்கெல்லாம் குத்பாவீர். உம்முடைய உமிழ்நீர் எவர் வாயில் படுகின்றதோ அவர் 'வலீ' ஆவார். நீர் எவரைப் பார்த்து 'வலீ' என்று கூறுகிறீரோ அவர் 'விலாயத்' எய்தப் பெறுவார்'' என்று நன்மாரயம் மொழிந்தார்கள் என்று இயம்பினர்.''

இந்நிகழ்ச்சிக்குப் பின் நத்ஹர் (ரஹ்)அவர்களின் தகுதி நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. ஒரு வெள்ளிக்கிழமை ஜுமுஆ தொழுது முடிந்ததும், நத்ஹர் (ரஹ்) அவர்கள் மேடை மீதேறி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அத்திருச் சபையில் அஸீஸுல்லாஹ் (ரஹ்), ஜைனுத்தீன் மிஸ்ரீ (ரஹ்), அப்துல் மஜீத்(ரஹ்) யூனுஸ் (ரஹ்), மஹ்மூத் கர்க்கி (ரஹ்) ஆகிய வலிமார்களும், இன்னும் சிரியா நாட்டைச் சேர்ந்த மற்றொரு வலியும் வீற்றிருந்தனர்.

அப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள் திடீரென உணர்ச்சி மீக்குற்றவர்களாய், ''என் தகுதி மிகவும் மாண்புடைத்ததாகும். நான் இக்காலத்து குத்பு மார்களுக்கெல்லாம் கிரீடாதிபதியாக உள்ளேன். எத்தனையோ 'வலி' மார்கள் என்னுடைய ஆன்மீக ஆட்சியின் கீழ் உள்ளனர்'' என்று கூறினர்.

அக்காலை ஆங்கு வீற்றிருந்த ஆறு வலிமார்களும் ஒருங்கு சேர்ந்து ''நத்ஹரே! நிறுத்தும் உம் பேச்சை. நாங்களும் எங்களுடைய தகுதியை உணர்வோம். உம்முடைய தகுதிக்கு எங்களுடைய தகுதி எவ்வகையிலும் இளைத்ததல்ல. வேண்டுமாயின் சோதித்துப் பார்த்துக் கொள்ளலாம்'' என்று அறைகூவல் விடுத்தனர்.

உடனே நத்ஹர் (ரஹ்) அவர்கள், தங்களின் கம்பளிப் போர்வையைத் தம்மீதும் அவர்கள் மீதும் போர்த்த, அவர்கள் அனைவரும் தன்னுணர்வற்றார்கள். அவர்களின் கண்களுக்கு ஆலமெ நாஸூத், ஆலமே மலக்கூத், ஆலமே ஜபரூத், ஆலமெ லாஹூத் ஆகியவை தென்பட்டன. இப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள், அவர்களை நோக்கி, ''நீங்கள் இப்பொழுது உங்களுடைய படித்தரங்களைக் காட்டுங்கள், பார்ப்போம்'' என்று கூறினர்.

இவ்வாறு அவர்கள் கூறியதும், அந்த வலிமார்கள், தங்களின் ‘விலாயத்’தைக் கொண்டு பறந்தார்கள். ஜைனுத்தீன் மிஸ்ரீ (ரஹ்) அவர்களும் மஹ்மூத் கர்க்கி (ரஹ்) அவர்களும், முந்திய மகாமாகிய ஆலமெநாசூத்தை எய்தினர். அதற்கு மேல் அவர்களால் பறக்க இயலவில்லை. அஸீஸுல்லாஹ் (ரஹ்) அவர்களும் யூனுஸ் (ரஹ்) அவர்களும் அதற்கு அடுத்த மகாமாகிய ஆலமெ மலக்கூத்தை அடைந்தனர். அதற்கப்பால் ஓர் அங்குலம் கூட அவர்களால் நகர இயலவில்லை. நத்ஹர் (ரலி) அவர்களின் ஆன்மீக மாணவராகிய ஜஹீருத்தீன் கலந்தர் (ரஹ்), அவர்கள் அதற்கு அடுத்த மகாமாகிய ஆலமெ ஜபரூத்தை அடைந்தார்கள். அதற்கப்பால் செல்ல அவர்களால் இயலவில்லை. ஆனால் நத்ஹர் (ரஹ்) அவர்களோ, இவற்றிக்கெல்லாம் மிகமிகத் தொலைவிலுள்ள ஆலமெ லாஹூத்தை அடைந்து, அதற்கப்பால் உள்ள இறையண்மையை எய்தி நின்றனர்.

சற்று நேரம் கழித்து நத்ஹர் (ரஹ்) அவர்கள், அவர்கள் அனைவர் மீதிருந்தும் தம் போர்வையை எடுத்தனர். அடுத்த கணம் அவர்கள் அனைவரும் தன்னிலை எய்தப் பெற்றார்கள். ஆனால் நத்ஹர் (ரஹ்) அவர்கள் மட்டும், இறைக்காதலில் மூழ்கித் தன்னுணர்வற்றிருந்தார்கள். அவர்களின் முகம் பேரொளி மயமாய் இலங்கியது. அவர்களின் நாவிலிருந்து ‘அனல் ஹக்’ என்ற சொற்கள் எழுபத்திரண்டு தடவைவெளி வந்தன. இதன்பின் மூன்று நாட்கள் கழித்தே அவர்கள் தன்னுணர்வு எய்தப் பெற்றார்கள்.

இதன் பின்னரே, அந்த ஆறு வலிமார்களும் அவர்களின் மாண்பினை உணர்ந்து, தங்களின் தவற்றை மன்னித்தருளுமாறு அவர்களின் தாள் பிடித்து வேண்டினர். நத்ஹர் (ரஹ்) அவர்களும் பெரு மனத்துடன் அவ்விதமே செய்தார்கள்.

இக்காலை ஸமீலான் நாட்டினரான அப்துர் ரஹ்மான் என்பவர் தமக்கு ஒரு ஞான குருவைக் காட்டியருளுமாறு இறைஞ்சிவிட்டுத் துயிலுற, “மதீனா சென்று அங்கு, வந்து தங்கியிருக்கும் நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் தீட்சை பெறுமாறு கனவின் மூலம் அறிவிக்கப்பட்டது. அவ்விதமே அவர் மதீனா வந்து நத்ஹர் (ரஹ்) அவர்களைச் சந்தித்துத் தாம் கண்ட கனவைக் கூற, அவர்கள் அவருக்குத் தீட்சை வழங்கித் தம்முடன் வந்திருக்கும் பக்கீர்களுக்குப் பணிவிடை செய்து வருமாறு பணித்தார்கள்.

மதீனா வந்து ஓராண்டாகியும், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து யாதோர் உத்தரவும் வராதது கண்டு, மனம் சோர்ந்து நத்ஹர் (ரஹ்) அவர்கள் ஓரிரவு படுத்துறங்குங்கால், அவர்களின் கனவில் அண்ணல் நபி

(ஸல்) அவர்கள் திருத்தோற்றம் வழங்கி, ''சையித் நத் ஹரே! நீர் உம்முடன் வந்திருக்கும் பக்கீர்களுடன், ஹிந்துஸ்தான் சென்று இஸ்லாமியப் பிரச்சாரம் செய்யும். உம்மால் பல்லோர் நேர்வழி பெறுவர். உம்மிடம் கிள்ரு அடிக்கடி வந்து கொண்டிருப்பார்' என்று அருள்வாய் மலர்ந்து விட்டு மறைந்தனர்.

திடுக்கிட்டு விழித்தெழுந்த நத்ஹர் (ரஹ்) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அருள் ஆணையைத் தம் சீடர்களிடம் கூற, அவர் களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு மட்டில்லை.

விரைவில் பயணம் துவங்கியது. மலைகளையும், பாலைகளையும் கடந்து, அவர்கள் ஜித்தா துறைமுகம் வந்து சேர்ந்தார்கள். துறைமுகத்தில் ஏராளமான கப்பல்கள் கிடந்த போதினும், அவற்றிற்குக் கூலி கொடுத்து அவற்றில் ஏற அவர்களின் கையில் காசில்லை. எனவே என் செய்வதென அறியாது அவர்கள் திகைத்து நின்றார்கள். அப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள் தம் சீடர்களை நோக்கி, 'ஒன்றிற்கும் கவலற்க! எவர் நம்மை இங்கு அனுப்பி வைத்தார்களோ, அவர்களே நம்மை ஏற்றிச் செல்லக் கப்பலையும் அனுப்பி வைப்பார்கள்'' என்று கூறினர்.

அவர்கள் இவ்வாறு கூறிச் சில நிமிடங்களே ஆயின. ஒரு கப்பல் கரை நோக்கி ஓடி வந்தது. அது கரையை அடைந்ததும், அதன் மீகாமன் கரையில் 'குழுமி நின்ற பக்கீர்களை நோக்கி, ''ஏறிக் கொள்ளுங்கள்'' என்று கூறினர். கப்பல் தென் திசை நோக்கி ஓடியது. நாற்பது நாள் பயணத் திற்குப் பின் அது ஒரு கரையை அடைந்து நங்கூரமிட்டது. கப்பலில் இருந்தோர் நலமே கரை இறங்கினர்.

பின்னர் அங்கிருந்து கிளம்பி நத்ஹர் (ரஹ்) அவர்களும், தொள்ளா யிரம் பக்கீர்களும் தரை மார்க்கமாக நடந்து வரும் பொழுது, அவர்களைப் பூத கணங்கள் எதிர்த்து நின்றன. அவற்றை அவர்கள் தம் தவ வலிமை யால் வென்று வாகை சூடித் திரிசிரபுரம் வந்து, அங்கிருந்த மலை மீதேறி இளைப்பாறினர். அங்கு அவர்கள் தங்கியிருந்த சில நாட்களில், ஆற்றாது ஓடிய பூத கணங்கள் திரும்பி வந்து, ஆற்றிய விஷமச் செயல்கள் சிறிதல்ல. எனினும் அவற்றையெல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொண்டு, அங்கேயே அவர்கள் வாழ்ந்து வந்தனர்.

ஒரு வைகறையில் நத்ஹர் (ரஹ்) அவர்கள் தொழுது விட்டுத் தனித்து ஓரிடத்தில் அமர்ந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின்னே பெரும் கற்பாறை ஒன்று சாய்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தது. அவர்களைக் கொன்றொழிப்பதற்கு இதுதான் ஏற்ற தருணம் என்று கருதிய பூத கணங்கள், அதனை அவர்கள் மீது சாய்த்து

விட்டன. இதனை உள்ளுணர்வால் உணர்ந்த அவர்கள் அக்கணமே எழுந்து நின்று தம் கையால் அதனை வீழாது தாங்கினர்.*

பூத கணங்களின் இந்த அடாச் செயலைக் கண்டு அடங்காச் சினமுற்ற அவர்கள் அவற்றை ஏறிட்டுப் பார்க்க, அவை அனைத்தும் அவ்விடத்திலேயே எரிந்து சாம்பலாயின.

ஒரு நாள் காவேரியில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு நகரையே மூழ்கடித்து விடுமோ என்று ஐயுறும் வண்ணம் நிமிடத்திற்கு நிமிடம் அதிகப்பட்டுக் கொண்டு வந்தது. மக்கள் கதிகலங்கி மலை மீதிருந்த நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் வந்து, தங்களின் அவலம் எடுத்துரைத்து அபயம் தேடினார்கள். அப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள், தம்மைச் சந்திக்க வந்த கிள்ரு (அலை) அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

உடனே அவர்கள் தம் கையிலிருந்த கழியால் மலை மீது ஓங்கி ஓர் அடி அடித்தனர். அது நகரமெங்கணும் பேரொலியாக எதிரொலி செய்தது. அடுத்த கணம் சீறிப்பாய்ந்து வந்த காவேரிப் பெருவெள்ளம், அஞ்சி நடுங்கி வடியலாயிற்று. மக்கள் உயிர் பிழைத்தார்கள். அவர்களின் உடைமைகள் வெள்ளத்திற்கு இரையாகா வண்ணம் காப்பாற்றப் பட்டன. இது கண்டு பெரிதும் மகிழ்வுற்ற கிள்ரு (அலை) அவர்கள், நத்ஹர் (ரஹ்) அவர்களுக்கு 'தப்லெ ஆலம்' (அகில உலகப் பறை) என்று புகழ்ப்பெயர் சூட்டி ''இன்று முதல் தங்களின் பெயர் 'தப்லெ ஆலம்' என்று உலகமெங்கணும் முழங்குமாக!'' என்று வாழ்த்தியருளினார்கள்.**

''இப்பெயருக்கு நான் எவ்வாறு உரியவனாவேன்'' என்று நத்ஹர் அவர்கள் தாழ்மையுடன் கிள்ரு (அலை) அவர்களிடம் வினவ, ''தாங்கள் கழியால் மலையை ஓங்கியடித்ததும், ஒரு பேரொலி முழங்கியதல்லவா? அப்பேரொலி கேட்டு காவேரி நதி அஞ்சி ஒடுங்கிப் பின்வாங்கி வெருண்டோடியது. அதன் காரணமாக மக்களும் மாக்களும் தப்பினர் அல்லவா?'' என்று பதில் மொழிந்தனர் கிள்ரு (அலை)

திரிசிரபுரம் வந்து ஐந்தாண்டுகள் உருண்டோடி விட்டன. முஸ்லிம்கள் மலைமீது வந்து தங்கி பாங்கு சொல்வதும், இறைவனைத்

* அப்பாறை இன்றளவும் அதே நிலையில் நின்று கொண்டுள்ளது. அவர்கள் அப்பாறையைத் தாங்கும் பொழுது, அவர்களின் பாதங்கள் அழுத்தமாகப் பதிந்த தடம் இன்றும் அம்மலை மீது காணப்படுகிறது. அவர்களின் கை, பாறையைத் தாங்கும் பொழுது, அதில் பதிந்த அடையாளத்தையும் இன்றும் காணலாம்.

** இப்பெயர் அவர்கள் இலங்கை சென்றிருந்த பொழுது, ஆதம் (அலை) அவர்களால் அவர்களுக்குச் சூட்டப்பட்டது என்று மற்றொரு வரலாறு கூறுகிறது.

தொழுது இறைஞ்சுவதும், மாடுகளை அறுத்துச் சமைத்து உண்பதும், அதைச் சுற்றி வாழ்ந்து வந்த மக்களுக்கு எரிச்சலை உண்டுபண்ணின. எனவே ஒருநாள் அவர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் வந்து "நாங்கள் இவ்வூரில் பன்னூறு ஆண்டுகளாக ஒரு தொழு உருவத்தை வைத்து வணங்கி வருகிறோம். அது இருக்கும் இடத்திற்கு, ஒரு காதத் தொலைவரை நாங்கள் எவரையும் மாடு அறுக்க அனுமதியோம். தாங்கள் இங்கு வீற்றிருந்து, எங்களின் கோட்பாட்டிற்கு மாற்றமாக நடந்து கொள்வதால், தாங்கள் இவ்விடத்தை விட்டும் பெயர்ந்து வேறு எங்காவது சென்று விடவேண்டும்" என்று கூறினர்.

"நாங்களோ வேற்று நாட்டினர். நீங்கள் எங்களுக்கு ஓரிடத்தைக் காட்டுங்கள். நாங்கள் அங்கு போய் வாழ்கிறோம்" என்று அமைதியுடன் பதில் கூறினர் நத்ஹர் (ரஹ்) அவர்கள்.

அப்பொழுது குழுத்தலைவன் அவர்களை நோக்கி, தாங்கள் தங்களின் கையிலுள்ள சக்கரத்தைக் கழற்றி வீசி எறியுங்கள். அது எங்கு போய் விழுகின்றதோ அவ்விடத்தை நாங்கள் உங்களுக்குத் தந்து விடு கின்றோம்" என்று கூறினான்.

"நல்லது; எந்தப் பக்கத்தில் அதனை எறியச் சொல்கிறீர்கள்?" என்று வினவினர் நத்ஹர் (ரஹ்) அவர்கள்.

அதற்கு அவன், "தென் பக்கல் நாங்கள் வழிபாடு நிகழ்த்தும் தெய்வம் கோயில் கொண்ட புனித இடம் உள்ளது. ஆதலின் தாங்கள் தங்களின் சக்கரத்தை வட பக்கல் வீசி எறியுங்கள்" என்று கூறினான்.

அவர்களும் அவ்வாறே செய்தார்கள். ஆனால் வடபக்கல் சென்ற அதுவோ, திடீரெனத் தென் பக்கல் திரும்பி, அவ்வூர் மக்கள் வழிபாடு நிகழ்த்தும் தெய்வத்தின் தலையிலே போய் விழுந்து அதனைத் தலை வேறு முண்டம் வேறாக ஆக்கிவிட்டது.

மறுவார்த்தை பேச வழியின்றி அவ்வூர் மக்கள் அக்கோயிலைக் காலி செய்து கொடுத்தார்கள். நத்ஹர் (ரஹ்) அவர்களும், அவர்களின் பக்கீர் குழுவினரும் மலையிலிருந்து கீழே இறங்கி வந்து அவ்விடத்தைத் துப்புரவு செய்து அதனைத் தங்களின் இருப்பிடமாக ஆக்கிக் கொண் டார்கள்.

இக்காலை ஹஜ்ஜு செய்யத் தம் குடும்பத்தினருடன் மக்கா வந்த அவர்களின் இளவலும், ஆங்கு வந்த பக்கீர் ஒருவரிடம் தம் தமையனாரின் இருப்பிடத்தைக் கேட்டறிந்து, திரிசிரபுரம் வந்த சேர்ந்தார். பல்லாண்டுகளுக்குப் பின் உடன் பிறந்தார்கள் இருவரும் சந்தித்துக்

கொண்டது, பாலொடு பழம் சேர்ந்தாற் போன்று இனிமை நிரம்பியதாக இருந்தது.

சின்னாட்கள் தமயனாருடன் தங்கி இருந்தபின், ஒருநாள் தமயனாரைத் தனியே அணுகி, மீண்டும் பஹனஸா திரும்பிச் செங்கோலை கையிலே தாங்குமாறு பெரிதும் வேண்டிக் கொண்டார் இளவல்.

அதற்கு அவர்கள் ''கமண்டலம் ஏந்திய கைக்குச் செங்கோல் எதற்கு? நீயே அதனைக் கையிலே தாங்கிச் சீரிய முறையில் ஆட்சி செய்து வா, நான் இங்கு அகிலத்திற்கோர் அருட்கொடையாக வந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அருட் கட்டளையின் மீது வந்தேனேயன்றி, வேறில்லை. எனவே நான் மீண்டும் அங்கு வருவேன் என்று நீ கனவிலும் கருத வேண்டாம். எனினும் எனக்கு ஒரு விருப்பம் உள்ளது. அதனை நீ நிறைவேற்றித் தந்தால், நான் பெரிதும் மகிழ்ச்சியுறுவேன்'' என்று கூறினர்.

அது கேட்ட இளவல் பதற்றத்துடன், ''என்ன அண்ணே இவ்வாறு கூறுகின்றீர்கள்? தங்களின் விருப்பமே என்னுடைய விருப்பமாகும். ஆணையிடுங்கள். அடுத்த கணம் அதனை ஆற்றி முடிக்கிறேன்'' என்று கூறினார்..

அப்பொழுது அவர்கள், 'தம்பி! உன் அருமைத் திருமகள் சுல்தான் பீவியை என் ஆன்மீக மாணவர் அப்துர் ரஹ்மான் சித்தீகிக்குத் திருமணம் முடித்து மகிழ விரும்புகிறேன். அவரின் அன்னை அபூபக்ர் (ரலி) அவர் களின் வழி வந்தவர். தந்தையோ ஹுஸைன் (ரலி) அவர்களின் வழித் தோன்றல்'' என்றனர்.

இச்செய்தி இளவலுக்குப் பெரும் மகிழ்வை அளித்தது. உடனே திருமணத்திற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. திருமணமும் எளிய, இனிய முறையில் நிறைவுற்றது.

நத்ஹர் (ரஹ்) அவர்களின் புகழ் நாளுக்கு நாள் நாடெங்கணும் பரவி வந்தது. அது அரசரின் செவிக்கும் எட்டியது. அவனோ அறுபது வயதை எய்தியும் மகப்பேறின்றி, பெரிதும் வருந்திக் கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் அரசியுடன், நத்ஹர் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்து, தம் மனக்குறையை அவர்களிடம் எடுத்துரைத்தான். அவர்கள் அவனுக்காக வேண்டி இறைவனிடம் இருகரம் ஏந்தி இறைஞ்சினார்கள்.

இதன் பின் அரசி கருவுற்றாள். பத்து மாதம் சென்ற பின், அவள் ஒரே சூலில் இரண்டு மக்களை ஈன்றெடுத்தாள். ஒன்று அழகே உருவாய் அமைந்தாற் போன்ற ஆண், மற்றொன்று தசைக் கட்டியென்று கூறத்தக்க பெண். அதற்குக் கைகளும் இல்லை; கால்களும் இல்லை.

தனக்குப் பின் அரியணை ஏற ஆண் மகவு பிறந்தது அறிந்த அரசன், அதற்குப் பின் ஒரு மாமிச பிண்டமே பிறந்த பொழுது, அதை வைத்துக் கொண்டு யாது செய்வதென அறியாது தவித்தான். அது பற்றி அவன் தன் அமைச்சர் பெரு மக்களுடன் ஆலோசனை கலந்தபொழுது, எவர்கள் தங்களுக்கு மகப்பேறுண்டாகக் காரணமாக இருந்தார்களோ, அவர்களிடமே அதனை ஒப்படைத்து விடுங்கள்'' என்று கூறினர்.

அவ்விதமே அந்தத் தசைக்கட்டியை எடுத்துக் கொண்டு வந்து, நத்ஹர் (ரஹ்) அவர்களின் திருமுன் வைத்ததும், அவர்கள் தண்ணீரில் யாதோ ஓதி அதன் மீது தெளித்தார்கள். உடனே வித்திலிருந்து முளைகள் கிளம்புவது போன்று எல்லா உறுப்புகளும், அதற்கு உண்டாகி, அது ஓர் அழகிய பெண் குழந்தையாக உருப்பெற்றது.

அதைக் கண்ட அரசன் பெரிதும் வியப்பும் மகிழ்ச்சியும் எய்தி, நத்ஹர் (ரஹ்) அவர்களை நோக்கி, ''அது தசைக்கட்டியாய் இருந்தமையின், அதனைத் தங்களிடமே திருப்பிக் கொணர்ந்தேன். அது இப்போது எழிலாரும் பெண் மகவாக ஆனது கண்டு, அதனை வளர்க்க எனக்கு ஆசையாக உள்ளது. நான் அதனை அரண்மனை எடுத்துச் செல்லவா?'' என்று வினவினான்.

''உம் விருப்பம் போல் செய்க!'' என்று கூறினார்கள் அவர்கள்.

அரண்மனை மீண்டதும், இதுகாறும் தம் பிஞ்சு இதழ் விரித்துச் சிரித்து விளையாடிக் கொண்டிருந்த அப் பெண் மகவு மீண்டும் மாமிச பிண்டமாகியது. அது கண்டு பெரிதும் கவலையும், ஏமாற்றமும் அடைந்த அரசன் அந்த மாமிசப் பிண்டத்தைத் தூக்கிக் கொண்டு, மீண்டும் நத்ஹர் (ரஹ்) அவர்களிடம் வர, அவர்கள் அதன் மீது தண்ணீர் ஓதித் தெளிக்க அது மீண்டும் பெண் உருவாகியது. அதனை எடுத்துக் கொண்டு, அரசன் அரண்மனை மீண்டதும் மீண்டும் அது மாமிசப் பிண்டமாகியது. இவ்வாறு பல தடவைகள் நிகழ்ந்தன.

அது கண்டு அலுத்துச் சலித்துப் போன அவன், அந்தத் தசைக் கட்டியை நத்ஹர் (ரஹ்) அவர்களிடமே ஒப்படைத்து விட, அவர்கள் அதனை அழகிய பெண் உருவாக்கி, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வளர்ப்புத் தாய் ஹலீமாவின் திருப்பெயரை அதற்குச் சூட்டி, அன்புடன் அதனை வளர்த்து வந்தார்கள். சில பொழுது அவர்கள் அதனை ரஹீமா என்றும் அழைத்து வந்தார்கள்

ஓர் இரவு மின்மினிப் பூச்சி ஒன்று அக்குழந்தையைச் சுற்றி வட்டமிட, அதன் அழகில் வயப்பட்ட அக்குழந்தை அதனைப் பிடிக்க முயன்றது. இயலவில்லை. குழந்தை அழுதது.

அப்பொழுது நத்ஹர் (ரஹ்) அவர்கள் அக்குழந்தையை நோக்கி, ''ஹலீமா! ஏன் அழுகிறாய்?'' என்று வினவினர்.

'மின்மினிப் பூச்சியைப் பிடிக்க முயன்றேன். அது மின்னென்ன மறைந்து விட்டது' என்று கூறியது குழந்தை.

உடனே ஒரு மின்மினிப் பூச்சியைப் பிடித்து அதனை ஹலீமாவிடம் கொடுத்தனர் அவர்கள்.

'ஒன்று பற்றாது இன்னும் வேண்டும்' என்றது குழந்தை.

மற்றொன்றையும் பிடித்துக் கொடுத்தார்கள் அவர்கள்.

''இன்னும் வேண்டும்'' என்று குழந்தை அடம் பிடித்து அழ, அவர்கள் மின்மினிப் பூச்சியின் கூட்டத்தையே வரவழைத்து குழந்தையைச் சுற்றி வருமாறு செய்தார்கள். குழந்தை மகிழ்ந்தது. இவ்வாறு ஒவ்வோர் இரவும் நிகழ்ந்தது. இதன் காரணமாக அக்குழந்தையை ''மாமா ஜிக்னி'' என்று செல்லப் பெயர் கொண்டு அழைத்தார்கள் மக்கள். ஜிக்னி என்றால் பார்ஸி மொழியில் மின் மினிப்பூச்சி என்று பொருளாகும்.

இதன்பின் பதினெட்டு ஆண்டுகள் உருண்டோடின. அரசன் இறக்க, அவனின் மகன் அரியணை ஏறினான். அரியணை ஏறு முன், நத்ஹர் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்து, அவர்களின் வாழ்த்தைப் பெற்றான். பின்னர் தம் உடன் பிறந்தாளைத் தம் முடிசூட்டு விழாவில் கலந்து கொள்ள அனுமதிக்க வேண்டினான். அவ்வாறே அவர்கள் அனுமதி வழங்கினார்கள்.

மாமா ஜிக்னி தன் உடன் பிறந்தானின் முடி சூட்டு விழாவில் கலந்து கொண்டு, தவமடம் திரும்ப விரும்பிய பொழுது, அவளின் உடன் பிறந்தான் அவளுக்குப் பொன்னையும் மணியையும் வாரி வழங்கினான். ஆனால் அவளோ, ''நான் ஒரு துறவி. எனக்குப் பொன்னும் மண்ணும் ஒன்றேயாகும்'' என்று கூறி அவற்றை ஏற்றுக் கொள்ள மறுத்தாள்.

எனினும் உடன் பிறந்தான் பெரிதும் வற்புறுத்தியதன் பேரில், ''நீ விரும்பின், நீ வளர்த்து வரும் பஞ்சவர்ணக் கிளியைத் தா. எடுத்துச் செல்கிறேன்'' என்று அவன் கூற, அவன் ஓடோடிச் சென்று கூண்டோடு அதனை எடுத்து வந்து அவளிடம் கொடுத்தான்.

அதனை எடுத்துக் கொண்டு தவமடம் மீண்டாள் மாமா ஜிக்னி. நத்ஹர் (ரஹ்) அவர்கள், அந்தக் கிளி மீது பெரிதும் அன்பு செலுத்தினார்கள். அதற்கு திருக்குர் ஆனின் திருவசனங்களைக் கற்றுக்

கொடுக்கவும் செய்தார்கள். அது அவற்றைத் திரும்பக் கூறியது அனைவர் செவியிலும் தேனென இனித்தது.

இதன்பின் சில காலம் சென்று, சீஸ்தான் நாட்டு அரசர் பாபா பக்ருத்தீன் துறவு பூண்டு திருச்சி வந்தார். அவரை நத்ஹர் (ரஹ்) அவர்கள் தம் ஆன்மீகக் குழுவில் இணைத்து ஆசீர்வதித்தார்கள்.

தங்களின் முடிவு நெருங்கி விட்டது என்பதை உணர்ந்த நத்ஹர் (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 417 ரமலான் பிறை ஒன்பதாம் இரவு தராவீஹ் தொழுத பின் தங்களின் சீடர்களை ஒருங்கழைத்து, "என் முடிவு நெருங்கி விட்டது. ரமலான் பிறை 14-ல் வெள்ளிக்கிழமை நான் இவ்வுலகு நீக்கப் போகிறேன். அது கண்டு நீங்கள் துக்கப்படவோ, துயரப்படவோ கூடாது. மன்னரேயாயினும், பக்கீரேயாயினும், நபியேயாயினும், வலியே யாயினும், மனிதரேயாயினும், ஜின்னேயாயினும், அனைவரும் இறப்பு என்னும் பானத்தை அருந்தியே தீர வேண்டும். ஆதலின் நீங்கள் உலக மாயையில் மூழ்காது, இறைக்காதலில் மூழ்கித் திளையுங்கள். அதுவே உங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நற்பேறு நல்க வல்லதாகும். நீங்கள் தொழவும், நோன்பு நோற்கவும், இறைவனைத் தியானிக்கவும் தவற வேண்டாம். இரவில் விழித்திருந்து இறைத் தியானத்தில் ஈடுபடுங்கள். அதுவே உங்களை இறைவனளவில் கொண்டு போய்ச் சேர்க்கும் பாலமாகும்." என்று கூறினர்.

பின்னர் அவர்கள் தம் கலீபாக்களை நோக்கி, "நான் உங்களுக்கு ஓர் இரகசியத்தைத் தெரியப்படுத்த விரும்புகிறேன். ஓரிரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், 'ஹிரா' மலையில் படுத்துறங்கும் பொழுது, வானவர் கோன் ஜிப்ரீல் தோன்றி 'ஓதுக!' என்று கூற 'எனக்கு ஓதத் தெரியாதே" என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். அவர்களை ஜிப்ரீல் கட்டித் தழுவி, மீண்டும் ஓதுக என்று கூற, "நான் ஓதினவனல்லனே" என்று விடையிறுத் தார்கள் அண்ணல். மீண்டும் 'ஓதுக!' என்று கூற, "நான் எதை ஓதுவது?' என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள். மீண்டும் அவர் அவர்களை இறுக அணைத்து, "அல்லாஹ்வின் திருப்பெயரால் ஓதுக! அவனே உதிரக்கட்டியால் மனிதனை உற்பத்தி செய்தான்" என்று தொடங்கும் சூராவை ஓதினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உள்ளத்தில் அது பதிந்து, அவர்கள் அதனைத் திரும்பவும் ஓதினர். இவ்வாறு நெஞ்சோடு நெஞ்சு அணைத்து உணர்த்தப்பட்ட ஞானம், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அலீ (ரலி) அவர்கள் வழியாக, குத்புமார்கள், வலி மார்கள் ஆகியோர்களுக்கு வந்து, வாழையடி வாழையாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

''ஞான வழித் தொடரை தஹபிய்யா (பொன் வழித்தொடர்) என்றும், பில்லியா (வெள்ளி வழித்தொடர்) என்றும் இருவகையாகப் பிரிப்பர். நம்முடைய ஞான வழித்தொடர் தஹபிய்யாவாகும். இது அலீ (ரலி) அவர்களிடமிருந்து ஹுஸைன் (ரலி) அவர்கள் வழியாக வருவதால், இதனை ஹுஸைனிய்யா என்றும் கூறுவர். பில்லியா என்பது அலீ (ரலி) அவர்களிடமிருந்து ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் வழியாக வருவ தாகும். ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வழித்தோன்றல் அல்லாததால், அது பில்லியா (வெள்ளி வழித்தொடர்) என்று கூறப்படும்.

''எனக்குப் பின் உங்களின் தலைவராக அப்துர் ரஹ்மான் சித்தீகியை ஆக்கிக் கொள்ளுங்கள். அவரின் தந்தை வழி என்னுடைய தந்தை வழி யோடு சேருகிறது. நாங்கள் இருவரும் ஹுஸைன் (ரலி) அவர்களின் வழித்தோன்றலாவோம். மேலும் அவர் என் இளவலின் மகளை மண முடித்த மருகராவார். எனவே, எனக்குப்பின் நீங்கள் அவரை என்னிடத்தில் அமர்த்தி, சங்கை செய்யுங்கள்'' என்று கூறி, இன்னும் எத்தனை, எத்தனையோ செய்திகளையெல்லாம் அவர்கள் எடுத்தோதினர்.

இதற்குள் ஸஹர் நேரம்வந்து விடவே, அவர்கள் நோன்பு நோற்க, ரொட்டியும், தண்ணீரும் கொண்டு வருமாறு கூறினார்கள். அவர்களால் எழுந்திருக்கக் கூட இயலவில்லை. அத்துணைப் பலவீனமாக அவர்கள் இருந்தனர். அது கண்ட அவர்களின் சீடர்கள், நோன்பு நோற்க வேண்டா மென்றும், அதற்குப் பரிகாரம் செய்து விடலாம் அல்லது உடல் நலம் ஏற்பட்ட பின் விட்ட நோன்புகளைக் 'களா' வாகப் பின்னர் நோற்றுக் கொள்ளலாம்'' என்றும் கூறினர்.

அதற்கு அவர்கள் '' என் வாணாளில் நான் ஒரு நோன்பு கூட நோற்கத் தவறியதில்லை. அவ்விதமிருக்க இறைவனுக்கு நான் ஆற்ற வேண்டிய கடமையை, என்னுடைய வாழ்நாளில் ஐந்தே ஐந்து நாட்களே மீதமுள்ள போது எவ்வாறு தவறவிடுவேன். நோன்பு நோற்ற நிலையிலேயே என் உயிர், என் உடலை விட்டுப் பிரிந்தால், நான் பெரிதும் மகிழ்வுறுவேன்'' என்று, கூறி ஓர் எலுமிச்சம் பழ அளவு உணவுண்டு, நோன்பு நோற்றனர். அதே அளவு உணவு உண்டே அவர்கள் நோன்பு திறக்கவும் செய்தார்கள்.

ஐந்து நாட்கள் ஓடின. ரமலான் மாதம் பதினான்காம் நாள், வெள்ளி இரவு (28 அக்டோர் 1026) இஷாத் தொழுகை நேரம், அவர்கள் தம் சீடர்களை நோக்கி, ''என்னுடைய பயணத்திற்கான நேரம் வந்து விட்டது. நான் என்னுடைய எசமானனைச் சந்திக்கச் செல்கிறேன். என் வாணாள் முடிவுற்றது'' என்று கூறித் தம் தொழுகை விரிப்பைக் கொண்டு வருமாறு கூறி, தக்பீர் கட்டி 'கியாம் ' நிலையில் நின்று பின்னர் 'ருகூஉ' செய்து

அதன்பின் தங்களின் நெற்றியை சுஜூதில் கொண்டு போய்த் தரையில் வைத்தார்கள். அக்கணமே அவர்களின் உயிர், அவர்களின் உடலை விட்டும் பிரிந்தது. (இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஊன்.)

பிற்காலத்தில் அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசிக்க வந்த ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகம், அவர்களின் அடக்க அறைக்குள் புகுந்து, மூன்று நாட்கள் தங்கியிருந்து, அவர்களின் அனுமதிபெற்றுத் தென்னாட்டில் தீன் சுடர்கொளுத்தி நாகூரில் தரிபட்டனர்.

அவர்களின் அடக்கவிடத்திற்கு வந்து பன்னிரண்டு ஆண்டுகள் காத்திருந்த காஜா அஹ்மதுல்லாஹ் ஷாஹ் (ரஹ்) அவர்கள், பின்னர் அவர் களின் ஆணையின் படி நகருக்கு வெளியில் உள்ள மலைக்குச் சென்று, அதனைத் தம்முடைய தவ இடமாக, தங்குமிடமாக ஆக்கிக் கொண்டனர். அதிலிருந்து அம்மலைக்கு அவர்களின் பெயரால் காஜா மலை எனப்பெயர் ஏற்பட்டது. அப்பெரியாரின் அடக்கவிடமும் அங்கேயே உள்ளது.

நத்ஹர் (ரஹ்) அவர்களின் கலீபா அப்துர் ரஹ்மான் சித்தீகி (ரஹ்) அவர்களும், வளர்ப்பு மகள் ஹலீமா என்ற மாமா ஜிக்னியும், நத்ஹர் (ரஹ்) அவர்களின் கால்மாட்டிலும், அவர்களின் அமைச்சர்களில் ஒருவரான ஷம்ஸ் கோயான், அவர்களின் பக்கத்தில் கீழ்ப்புறத்திலும், மற்றொரு அமைச்சரான ஷம்ஸ் பீரான் இப்பொழுது ஷம்ஸ் பீரான் தெரு என்று அழைக்கப்படும் தெருவிலுள்ள பள்ளிவாயலின் பக்கத்திலும், அடங்கப் பெற்றுள்ளார்கள்.

நத்ஹர் (ரஹ்) அவர்களின் கலீபாவும், மருகருமான அப்துர் ரஹ்மான் சித்தீகி (ரஹ்) அவர்களின் வழித்தோன்றல்களே ஏறத்தாழ ஆயிரம் ஆண்டு களாக நத்ஹர் (ரஹ்) அவர்களின், தர்காவின் நிர்வாகிகளாகவும், ஊழியர்களாகவும் இருந்து பணியாற்றி வருகின்றனர்.



## 21. பாபா பக்ருத்தீன் (ரஹ்)

**சீ**ஸ்தான் நாட்டு சுல்தானின் அரச மாளிகை. அந்நாட்டை இதுகாறும் சீரும் சிறப்புடன் ஆண்டு வந்த சுல்தான் சையிது ஹுஸைன் காலமானதும், அவரின் முதல் மாமகன் சையிது பக்ருத்தீன் இன்று அரியணை ஏறுகின்றார். அவரின் முடிசூட்டுவிழா இன்று கோலகலமாக நடை பெறுகிறது. முடிசூட்டு விழா துவங்க இன்னும் சிறிது நேரம் தான் இருக்கிறது. அரசர்களும், சிற்றரசர்களும், நிலக்கிழார்களும், பிரபுக்களும், அணியணியாக வந்து தங்களுக்கென நிர்ணயிக்கப்பட்ட ஆசனங்களில் ஒய்யாராமாக அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். அதோ வருபவர் ரூம்நாட்டு சுல்தான். அவருக்குப் பின்னால் பட்டாடை பளிச்,பளிச் சென்று மின்ன கம்பீர மாக நடந்து வருபவர் ஷாமின் அதிபதி. அதோ அவருக்குப் பின்னால் வருகின்றாரே, அவர்தாம் ஈரானிய ஷா. இப்பொழுது எல்லாரும் வந்து அமர்ந்துவிட்டார்கள். அதோ ஓர் ஆசனம் மட்டும் காலியாக இருக்கிறதே. அது எவருக்குரியது? அதன்முன் 'தூரான் நாட்டு மன்னர்' என்று கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்ட பெயர்ப் பலகை வைக்கப்பட்டுள்ளது. ஆம்; அது தூரான் நாட்டு மன்னருக்கென ஒதுக் கப்பட்ட ஆசனம் தான். தமக்கு உடல் நலம் சரி இல்லாமையால் இவ்விழாவில் கலந்த கொள்ள இயலவில்லை என அவர் தீட்டிய மடல் சற்று நேரத்திற்குமுன் தான் கிடைத்தது.

இதோ மன்னர் பக்ருத்தீன், பிரபுக்கள் புடைசூழ வருகிறார். அமைச்சர்களும் பிரதானிகளும் அவரைக் கைலாகு கொடுத்து வரவேற்று, அரியாசனத்தில் அமர்த்துகின்றார்கள். அவரின் தலையில் இதோ பொன் முடிசூட்டப் பெறுகிறது. ஆஹா! அதில் பதிக்கப்பட்ட வைர, வைடூரியங்கள் 'டால்' வீசிக் கண்களைப் பறிக்கின்றனவே. முடிசூட்டப் பெற்ற மன்னரின் முக அழகைப் பார்ப்பதற்கு ஆயிரம், ஆயிரம் கண்கள் வேண்டும் போலல்லவோ தோன்றுகிறது. ''வாழ்க, ஷா பக்ருத்தீன்! வாழ்க மாமன்னர் பக்ருத்தீன்!!'' என்ற வாழ்த்தொலிகள் விண்ணைப் பிளக்கின்றன.

சில திங்கள் உருண்டோடின. சீஸ்தான் நாட்டு எல்லைக்காப்பாளரிடமிருந்து ஷா பக்ருத்தீனுக்கு ஒருகடிதம் வருகிறது. அதைப் பிரித்துப் பார்த்தார் மன்னர். ''தூரான் நாட்டு மன்னர் தம் நாட்டின் மீது படையெடுக்க ஆயத்தமாகிக் கொண்டிருப்பதாக உளவாளிகள் வந்து கூறுகின்றனர். எல்லையோரத்திலும், தூரான் நாட்டுப் படைகளின் நடமாட்டம் சில நாட்களாகக் காணப்படுகிறது. தாக்குதல் எக்கணத்திலும் நிகழலாம்'' என்று அதில் பொறிக்கப்பட்டிருந்தது.

உடனே ஷா பக்ருத்தீன், தம் இளவல் சையித் அலீயின் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பி வைத்தார். எல்லைக் காவலுக்காக அனுப்பி வைக்கப்பட்ட படையைக் கண்ட தூரான் நாட்டு மன்னன், அவர்கள் தம்மைத் தாக்குவதற்காகத்தான் வந்துள்ளார்கள் என்று எண்ணிக் கொண்டு, ''வீணே என் படையினருடன் மோதி உயிர் துறக்க வேண்டாம். மரியாதையுடன் திரும்பிச் சென்று விடுங்கள்'' என்று மமதையுடன் செய்தி அனுப்பினான்.

அதற்கு சையிது அலீ, ''நாங்கள் உன்மீது தாக்குதல் நடத்த வரவில்லை. நீ எங்கள் நாட்டின்மீது படையெடுக்க ஆயத்தமாகிக் கொண்டிருப்பதை அறிந்தே, அந்தச் சவாலை ஏற்பதற்காக வந்துள்ளோமேயன்றி வேறில்லை. நீ உன்னுடைய படைகளை எங்களின் எல்லையிலிருந்து விலக்கிக்கொளின் நானும் என்னுடைய படைகளை திருப்பி அழைத்து செல்லத் தயாராயுள்ளேன்'' என்று அமைதியாகப் பதில் கூறினார்கள்.

பலன் : அமைதி, அமைதியின்மையைத் தோற்றுவித்தது இரு படைகளுக்கும் இடையே கடும்போர் நிகழ்ந்தது. தூரான் நாட்டு மன்னன் தோற்று உயிர் தப்பி ஓடினான்.அவனுடைய மாளிகையில் இஸ்லாமியப் பசுங்கொடி பட்டொளி வீசிப் பறந்தது. அதன் ஆளுநராகத் தம் தம்பி சையிது அலீயையே நியமித்து மகிழ்ந்தார் தமயர்.

சில்லாண்டுகள் கழிந்தன. ஷா பக்ருத்தீனுக்கு அரச பாரமே கசந்து விட்டது. அவரின் உடலிலுள்ள ஒவ்வோர் அணுவும் துறவறத்தையே நாடியது. ஒருநாள் அவர் தம் தம்பி சையிது முர்த்தஜாவை அருகழைத்து, 'தம்பி! நான் முடிதுறக்க முடிவு செய்துவிட்டேன். இனிமேல் நீ தான் இந் நாட்டு மன்னன்' என்று கூறினார். அதுகேட்டு சையிது முர்த்தஜா மகிழ்ச்சியுறுவதற்குப் பதிலாக அதிர்ச்சியுற்றார். அவருக்கு ஆறுதல் பலகூறி அரசை அவரிடம் ஒப்படைத்து விட்டுக் கானகம் புறப்பட்டார் தமயர். பொன்னாடை மின்னிய அவரின் பொன்னுடலை இப்பொழுது கம்பளி ஆடை மறைத்தது. செங்கோல் ஏந்திய அவரின் செங்கரத்தில், இப்பொழுது கமண்டலம் தவழ்ந்தது.

இத்தகு கோலத்துடன் அவர் சில தோழர்கள் பின்தொடர காடு, மலை, வனாந்தரம் ஆகியவற்றையெல்லாம் கடந்து, கைபர் கணவாய் வழியாக இந்தியாவில் நுழைந்தார். வடமேற்கு எல்லைப்புறம், பஞ்சாப், காஷ்மீர் ஆகிய நாடுகளிலெல்லாம் திரிந்து, இஸ்லாமியப் பிரசாரம் செய்து, பலரை இஸ்லாத்தில் இணைத்தபின் சோமநாதபுரத்தை வந்தடைந்தார் அவர்.

அங்கு அப்பொழுது மழையில்லாது மக்கள் பெரிதும் அவதிப் பட்டனர். பஞ்சம் தலைவிரித்தாடியது. எவரோ பக்கீர் குழுவினர் வந்திருப்பதாகக் கேள்வியுற்ற அரசன், அவர்களை அண்மி செழுமழை பொழிய இறைஞ்சுமாறு வேண்டி நின்றான். அதற்கிணங்கி பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களும், இறைவனிடம் கையேந்தி இறைஞ்ச, அடுத்த கணமே நாடு செழிக்கும் நன்மழை பெய்தது. அது கண்டு பெரிதும் மகிழ்ந்த அரசன் பற்பல காணிக்கைகளை அவர்களின் பாதார விந்தங்களில் கொண்டுவந்துகுவிக்க அவற்றையெல்லாம் ஏற்றுக் கொள்ள மறுத்த அவர்கள், அரசன் பெரிதும் வேண்டிக் கொண்டதன் பேரில், முஸ்லிம்கள் தொழுவதற்கான ஒரு பள்ளி வாயிலை அங்கு நிர்மாணித்துக் கொடுக்குமாறு பணித்தார்கள். அவ்விதமே அவன் செய்தான்.

தம் தோழர்களை அங்கேயே விட்டு விட்டுத் தனியாக காடு மலை களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள் அவர்கள். அப்பொழுது கிள்ரு (அலை) எதிர்ப்பட்டு, அவர்களுக்கு ஓர் ஊன்றுகோலை அன்பளிப்பாக வழங்கிவிட்டுச் சென்றனர்.

இதன்பின் கானகத்திலேயே மூன்றாண்டுகள் தங்கி, ஒரே காலில் நின்று கடுந்தவம் செய்தார்கள். பறவைகள் அவர்களை மரமென எண்ணி அவர்களின் தலையிலும், தோள்களிலும் போய் அமர்ந்தன.

தாம் இதுகாறும் ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றாதிருந்தது அவர்களின் நெஞ்சை உறுத்திக் கொண்டே இருந்தது.எனவே அவர்கள் தம் தவத்தைக் கலைத்து, மக்கா சென்று ஹஜ்ஜுக் கடனை நிறை வேற்றினர். பின்னர் மதீனா சென்று அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்து, அவர்களுக்கு லட்சோப லட்சம் ஸலவாத்தும் ஸலாமும் கூறிய வண்ணம் அங்கேயே வீற்றிருந்தார்கள்.

அக்காலை தாம் தீட்சை பெற, தக்கதோர் குருவைக் காட்டியருளு மாறு அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு விடுத்த விண்ணப்பங் களோ ஒன்றல்ல, இரண்டல்ல, பல.

ஓரிரவு அவர்கள் அயர்ந்து உறங்குங்கால் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அவர்களின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, "நீர் தென்னாடு

செல்லும். அங்கு ஒருவர் உம்மைப் பெயர் கூறி அழைப்பார். அவருடன் செல்லும். அவர் உம்மை உம் குருவிடம் கொண்டு போய்ச் சேர்ப்பார்'' என்று அமுதவாய் விண்டு மறைந்தனர்.

கனவுகண்டு விழித்ததும், தென்னாடு செல்ல ஆயத்தமானார்கள் அவர்கள். அப்பொழுது தூரன் நாட்டு ஆளுநராக இருந்த அவர்களின் இளவல் சையிது அலீயும், துறவுபூண்டு அவர்களை வந்து சந்தித்தார். பல்லாண்டுகளுக்குப் பின் இரு உடன் பிறந்தார்களுக்கிடையே நிகழ்ந்த இந்த எதிர்பாராத சந்திப்பு நெஞ்சை உருக்கவல்லதாக இருந்தது. இருவரும் ஒருவரையொருவர் நெஞ்சோடு நெஞ்சணைத்துக் கண்ணீர் மழையைச் சொரிந்தது கண்கொள்ளக் காட்சியாக இருந்தது.

இருவரும் ஒருவர் நிலையை மற்றவர் கேட்டறிந்தபின், இருவரும் ஒன்றாகத் தென்னாடு நோக்கிப் பயணமாயினர். காடு, மலை, வனாந்தரங் களையெல்லாம் கடந்து அவர்கள் தங்கள் கால் செல்லும் வழியில் நடந்து சென்றார்கள். பல்வேறு நாடு நகரங்களையெல்லாம் கடந்து அவர்கள் தமிழகம் வந்து சேர்ந்தார்கள். இதன்பின் அவர்களின் கண்கள் தங்களின் குருநாதரைத் தாங்கள் செல்லுமிடமெல்லாம் தேடித்துளாவிக் கொண்டி ருந்தன. எவரும் தங்களைப் பெயர்சொல்லி அழைக்க மாட்டார்களா என்று ஏங்கிய வண்ணம், அவர்கள் அங்குமிங்கும் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு நடந்து சென்றார்கள். இறுதியாக அவர்கள் தம் குருநாதர் வாழ்ந்து வந்த திருநகரையும் நெருங்கி விட்டார்கள்.

அன்றிரவு அண்ணல் எம்பெருமான் (ஸல்) அவர்கள் நத்ஹர் வலி அவர்களின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, ''இன்னார் வருகிறார். அவரை அழைத்துவரச் செய்து தீட்சை வழங்கும்'' என்று அருண்மொழி பகர்ந்துவிட்டு மறைந்தனர்.

அவ்வாறே நத்ஹர் வலி அவர்கள் தம் வளர்ப்பு மகள் மாமாஜிக்னியையும், சில கலந்தர்களையும் அழைத்து ''இன்ன உருவினர், இன்ன பெயரினர் என்னை நாடி வருகிறார். அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்று பணித்தார்கள்.

அவ்விதமே அவர்கள் நகருக்கு வெளியே சென்று, அங்கு வரு வோர்கள் அனைவரையும் உற்று நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இறுதியாக தம் குருநாதர் விவரித்த உருவினர் நகர்நோக்கி வருவதைக் கண்டதும், அவர் தாம் அவர் என்பதை உள்ளுணர்வால் உணர்ந்த மாமாஜிக்னி ''பக்ருத்தீன் இப்னு சையித் ஹுஸைன்! நீர் ஒரு ஷைகை நாடி இங்கு வந்திருந்தால், என்னுடன் வாரும்'' என்று உரத்துக் கூறினார்.

குரல் வந்த திசையை நோக்கி சகோதரர்கள் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். ஒரு பெண் நின்று கொண்டிருந்தார். ''இஃதென்ன பெரிய விபரீதமாக உள்ளது! ஒரு பெண்ணல்லவோ அழைக்கிறார். அவருடன் எவ்வாறு செல்வது?'' என்று அவர்கள் திகைத்து நின்றபொழுது, அங்கு மிங்கும் நின்று கொண்டிருந்த பக்கீர்கள் சிலரும், அப்பெண்மணியின் அருகே வந்து சேர்ந்தார்கள்.

அப்பொழுது பாபா பக்ருத்தீன்(ரஹ்) அவர்கள் அப்பெண்மணியை நோக்கி, ''நான் ஒரு ஷைகை நாடியே இங்கு வந்துள்ளேன். உம்முடைய ஷைகு யார்?''என்று வினவினார்கள்.

''நத்ஹர் வலி'' என்று பதில் கூறினார் நங்கை.

''அவர்கள் தாம் உம்மைத் தம்மிடம் அழைத்துவருமாறு என்னையும் இந்தக் கலந்தர் பக்கீர்களையும் அனுப்பி வைத்தார்கள்'' என்று பதில் கூறினார் மாமாஜிக்னி. அப்பொழுது பாபா பக்ருத்தீனுக்கும் அவர்களின் இளவலுக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சி அளவில்லை.

திருச்சியில் வள்ளுவர் தெருவிலுள்ள ஒரு மண்டபம். அதிலே நத்ஹர் வலி அவர்கள் தம் சீடர்களுடன் வீற்றிருந்தார்கள். தம் வளர்ப்பு மகள் மாமாஜிக்னி மகிழ்ச்சி வதனத்துடன் முன்னே வர, அவரின் பின்னே பாபா பக்ருத்தீனும், அவர்களின் இளவலும் வருவதைக் கண்டதும், நத்ஹர் வலி அவர்களின் செங்கமலக்கண்கள் மகிழ்ச்சிமிகுதியால் விரிந்தன. தம்முன் வந்து பணிவுடன் ஸலாம் உரைத்து நின்ற அவ்விரு சகோதரர்களையும் அமருமாறு பணித்த நத்ஹர் வலி அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அன்பு ஆணையின்படி, அவர்களுக்கு தீட்சை வழங்கினர். அதன்பின் ஒரு கோப்பையில் பால் கொணரச் செய்து, அதில் ஓதி ஊதி அதனை அவர்களுக்கு ஊட்டினார்கள். ஞானப்பால் அருந் தியதும், பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சிக்கும், மகிழ்ச்சிக்கும் அளவில்லை. ஆனந்தக் கூத்தாடினார்கள் அவர்கள். அப்பொழுது அவர்கள் நின்று களிநடனம் புரிந்த கற்பாறை இளகி அவர்களின் திருப்பாதங்கள் அதன்மீது பதிந்தன. அவர்களின் சுவடு பதிந்த தடங்களை இன்றும் நாம் அங்குக் காணலாம்.

இதன்பின் நத்ஹர் வலி அவர்கள் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களை நோக்கி, ''நீர் இலங்கை சென்று, அங்குள்ள மெய்ஞ்ஞானிகளின் கிணற்றில் குளித்துவிட்டு வாரும்'' என்று கூறி மாமா ஜிக்னியிடம், அவர் களின் இடுப்பில் ஒரு வாரை இறுக்கமாகக் கட்டுமாறு பணித்தார்கள். அவ்விதமே அவர் செய்த பொழுது, நத்ஹர் வலி அவர்கள், பாபா பக்ருத்தீன் அவர்களை நோக்கி, அந்த வாரை எக்காரணத்தை முன்னிட்டும்

மீண்டும் அவர்கள் அங்கு வந்துசேரும் வரை அவிழ்க்கக் கூடாதன்று கண்டிப்பாக உத்தரவிட்டனர்.

குருநாதரின் ஆணையைச் சிரமேற்றாங்கி இலங்கை நோக்கிப் பயணமானார்கள் பாபா பக்ருத்தீன். வழியில் எத்தனையோ இடையூறுகள் எல்லாம் எதிர்ப்பட்டன. ஓர் அரக்கன் அவர்களைத் தடுத்து நிறுத்த அவனைத் தமக்கு கிள்ரு (அலை) அவர்கள், தந்த தடியால் ஒரே அடியாக அடித்துக் கொன்றார்கள் அவர்கள். பின்னர் கடலை இலாகவமாகக் கடந்து, இலங்கைக் கரையை அடைந்த அவர்கள், காடுகளையும், மலைகளையும் தாண்டிச் சென்று, இறுதியாகத் தம் குருநாதர் கூறிய மெய்ஞ்ஞானிகளின் கிணற்றை அடைந்தனர்.

கிணற்றை அடைந்த அவர்கள், அதைச் சூழ இருந்த பயங்கரங் களையெல்லாம் சிறிதேனும் பொருட்படுத்தாது அதற்குள் குதித்து அந்நீரில் மூழ்கி, மூழ்கிக் குளித்தார்கள். அப்பொழுது அவர்களின் உள்ளமும் உடலும் ஒருங்குசேர்ந்து தூய்மை பெற்றன. ஓர் இனம் தெரியாத உணர்வால் ஆட்கொள்ளப்பட்ட அவர்கள், அக்கிணற்றை விட்டும் மகிழ்ச்சியுடன் வெளியேறினர். அப்பொழுது அவர்களின் உடலில் சிப்பிகள் ஒட்டிக் கொண்டிருப்பதைக் கண்டதும், அவற்றில் ஒன்றை எடுத்துத் திறந்து பார்த்தார்கள். நன்முத்து ஒன்று அதில் இருந்து ‘‘என்னை எடுத்துக்கொள்ளுங்கள்’’ என்று கூறுமாப்போன்று பளிச் சிட்டது. ‘சீ’ எனக்கூறி அதனைத் தூக்கி எறிந்த அவர்கள் தம் உடலில் ஒட்டிக் கொண்டிருந்த ஏனைய சிப்பிகளையும் ஒன்றின்பின் ஒன்றாக அகற்றினர். இதன்பின் ஆதம் மலை சென்று ஆதம் (அலை) அவர்கள் திருப்பாதம் பதிந்த கல்லைத் தரிசித்து, அங்கு நின்று பாத்திஹா ஓதியபின், திருசிரபுரம் நோக்கித் தம் திருவடிகளைப் பெயர்த்து நடந்து வந்தார்கள்.

இறுதியாக அவர்கள் நத்ஹர் வலி அவர்கள் தங்கியிருந்த தவ மடத்தை அடைந்து, அவர்களுக்கு ‘ஸலாம்’ உரைத்து நின்றனர். பல்லாண்டுகளுக்குப் பின் தம்முன் வந்து ஸலாம் உரைத்து நின்ற தம் மாணவரைக் கண்டதும், அளவற்ற மகிழ்ச்சியுற்ற நத்ஹர் வலி, அவர்களை ஆரத்தழுவி மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்து, தம் அருகே அமர்த்தி, அவர்கள் தம் பயணத்தில் நுகர்ந்த துன்பங்களுக்காக அவர்களைப் பெரிதும் பாராட்டினார்கள். அதன்பின் நத்ஹர் வலி அவர்கள் தம் மாணவரை நோக்கி, ‘‘இன்னும் உலகப்பற்று உம்மைவிட வில்லையா?’’ என்று வினவினர். அவர்களின் இவ்வினா எறி ஈட்டியென அவர்களின் இதயத்தில் பாய்ந்தது. யாது கூறுவதென அறியாது அவர்கள் திணறினார்கள். யாது பிழை செய்தோம் என்று அவர்கள் ஏங்கித்

தவித்தார்கள். அவர்களின் மூச்சே நின்று விடும்போன்ற நிலை அவர்களுக்கு ஏற்பட்டது. 'ஹஸரத் அவர்களே! நானோ தங்களைப் போன்று அரச பாரத்தையே உதறித் தள்ளி ஆண்டியாக வெளிப் போந்தவன். இந்நிலையில் தாங்கள் கூறுவது எனக்கு ஒன்றும் புரிய வில்லையே'' என்று அழாக்குறையாகக் கூறினார்கள்.

அப்பொழுது நத்ஹர் வலி அவர்கள் தம் வளர்ப்பு மகள் மாமாஜிக்னியை நோக்கி, ''மாமாஜிக்னி! அவரின் இடுப்பு வாரை அவிழ். அதனை அவரின் இடுப்பில் கட்டியவர் நீர்தாமே. அதனை அவிழ்ப்ப வரும் நீராகவே இருக்க வேண்டும்'' என்று கூறினர்.

அவ்வாறே அவர்செய்ய, அந்த வாரில் செருகி, இது காறும் மறைந்திருந்த சிப்பி ஒன்று 'தொப்' பென்று கீழே விழுந்து இரண்டாகப் பிளந்து அதன் இருபிளவுகளிலும் இரு நன்முத்துக்கள் பளிச்சிட்டன. அதைக்கண்டதும், பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களுக்கு அவை தம்மைப் பார்த்துப் பல்லிளித்து நகையாடுவது போன்றிருந்தது. தாம் அறியாமல் நிகழ்ந்த தவற்றிற்குத் தம்மை மன்னித்தருளுமாறு தம் ஆசானை அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். நத்ஹர் வலி அவர்களும், அவ்விதமே செய்து, அவர்களுக்கு ஆறுதல் மொழி பகர்ந்தார்கள். அதன்பின் அந்த இரு நன் முத்துக்களையும் அவர்கள், அந்நகர மன்னனிடம் அனுப்பிவைக்க, அவன் அவற்றின் விலையை மதிப்பிட பல முத்து வணிகர்களிடம் அவற்றை அனுப்பி வைத்தபோதினும், அவர்களால் அவற்றின் விலையை மதிப்பிட இயலவில்லை. அத்துணை விலை மதிப்புடைய வையாக அவை இருந்தன!

ஒருநாள் நத்ஹர் வலி அவர்கள், பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களை அருகழைத்து, அவர்களுக்குக் கிலாஃபத் நல்கி, தங்களின் பல்துலக்கும் குன்னிமரக்குச்சியையும் அவர்களிடம் கொடுத்து ''இதனை எடுத்துக் கொண்டு பயணம் புறப்படும். இராத் தங்குமிடத்தில் இதனை மண்ணில் ஊன்றி வையும். வைகறையில் இது எந்த இடத்தில் முளைத்திருக்கிறதோ அதனையே உம்முடைய தங்குமிடமாக ஆக்கி, தீன் சுடர்கொளுத்தி வாரும்'' என்று கூறினர். அவ்விதமே அவர்கள் புறப்பட, அவர்களுடன் இருநூறு பக்கீர்களும் சேர்ந்து கொண்டார்கள்.

ஊர், ஊராக அவர்கள் தங்கிக் கொண்டே சென்றார்கள். தங்குமிட மெல்லாம் அக்குச்சியை ஊன்றி வைத்தார்கள். ஒன்றிலேனும் அது தளிர்க்கவில்லை. அவர்கள் கோலாரை அடைந்து, அங்கு அடங்கப் பெற்றிருக்கும் முன்னாள் சீஸ்தான் மன்னர் ஹைதர் அலி (வலி) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்து, மீண்டும் தம் பயணத்தைத் துவங்கினார்கள்.

ஓரிரவு அவர்கள் ஒரூரை அடைந்து, அங்கு இராத் தங்கினர். வழக்கம் போல் தம்குருநாதர் தந்த குன்னிமரப் பல்குச்சியை அவ்விடத்தில் நட்டிவிட்டுத் துயில் கொண்டனர். வைகறைத் தொழுகைக்கு எழுந்த அவர்களின் பார்வை, அந்தப் பற்குச்சியின் மீது எதிர்பாரா வண்ணம் பட அது தளிர்த்திருந்தது அவர்களுக்குத் தெரிய வந்தது. உடனே அவர்கள் தம்முடன் வந்திருந்த பக்கீர்களை அழைத்து அந்த அற்புதத்தைக் காட்டினர். அவர்களும் தங்களின் கண்களைத் துடைத்துக் கொண்டு அதனை உற்று உற்றுப் பார்த்து, ''ஆம், ஆம்'' என்று கூறியவண்ணம் மகிழ்ச்சித் கூத்தாடினார்கள். இதுவே தங்களின் தங்குமிடம் என்பதை உணர்ந்து கொண்ட அவர்கள், 'இவ்வூரின் பெயர் என்ன? இவ்வூரின் பெயர் என்ன?'' என்று ஒருவர் மற்றொருவரைக் கேட்டுக் கொண்டார்கள். ஒருவருக்குமே அவ்வூரின் பெயர் என்னவென்று தெரியவில்லை. அப்பொழுது அவ்வழியே சில வழிப்போக்கர்கள் செல்ல, அவர்களிடம் அந்த ஊரின் பெயர் யாது என்று வினவினர். 'பில்குண்டா' என்று பதி லுரைத்து விட்டுச் சென்றார்கள் அவர்கள். அப்பொழுது பக்கீர்களுடைய வாய்களும் பில்குண்டா, பில்குண்டா என்று முணுமுணுத்தன. இப்பொழுது ஆந்திர மாநிலத்தில் அனந்தப்பூர் மாவட்டத்தில் பெனு கொண்டா என்று வழங்கப் பெறும் ஊரே அது.

அடுத்த நாள் இரவு அவர்கள் அங்குள்ள கோயிலின் முற்றத்தில் தங்கித் துயில் புரிந்தனர். இது அரசனுக்குத் தெரியவரவே அவன் ஆட் களை அனுப்பி அவ்விடத்தை விட்டும் அகலுமாறு அவர்களுக்கு ஆணையிட்டான். அன்றிரவு மட்டும் அங்குத் தங்கிவிட்டுச் செல்வதாக அவர்கள் கூறினர். இந்த நியாயமான கோரிக்கை அவனுக்கு அவமதிப்பு போன்று தோன்றியது. அவர்களைப் பட்டினி போட்டுத் தண்டிக்க எண்ணிய அவன் தம் படையினரை அனுப்பி, அக்கோயிலைச் சூழ்ந்து கொள்ளுமாறும், எவரையும் வெளியே செல்ல அனுமதிக்க வேண்டா மென்றும் கண்டிப்பாக உத்திரவிட்டான், அவ்வாறே அவர்கள் செய்தார்கள்.

கோயில் முற்றத்தில் தங்கியிருந்த பக்கீர்கள் விடிந்தெழுந்ததும், தொழுது விட்டு அவ்விடத்தை விட்டும் நீங்க முற்பட்ட பொழுது அவர்கள் இராணுவ வீரர்களால் தடுத்து நிறுத்தப்பட்டார்கள். காரணம் வினவப்பட்ட பொழுது, அவர்கள் 'அரச ஆணை' என்று மட்டும் பதில் கூறினார்கள். பக்கீர்களுக்கோ இந்த அரச ஆணை புரியாத புதிராக இருந்தது.

முற்றுகை பல நாட்கள் நீடித்தது. பக்கீர்கள் கொண்டு வந்திருந்த உணவுப் பொருள்களெல்லாம் முடிந்துவிட்டன. இனி யாது செய்வதென

அறியாது அவர்கள் கலங்கினார்கள். பசி அவர்களின் வயிற்றைக் கிள்ளியது. அப்பொழுது கொழுத்த கோயில் காளை ஒன்று அவர்களின் முன் எதிர்ப்பட அதனைப்பிடித்து அறுத்துக் கறி சமைத்துத் தாமும் உண்டு' தம் குருநாதர் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் முன்பும் அக்கறியைக் கொண்டு போய் வைத்து 'உண்ணுக' என்று வேண்டி நின்றனர்.

''கறி ஏது?'' என்று வினவிய அவர்களிடம், விவரத்தைக் கூறினார்கள் பக்கீர்கள். அது கேட்டு மகிழ்ந்து பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களும் அதனை உண்டு பசி தீர்ந்து அமர்ந்திருந்தனர்.

கோயில் காளையைப் பக்கீர் கூட்டத்தினர் அறுத்துச் சமைத்து உண்ட செய்தி அரசனின் செவிப்பட்டதும் அவனுக்கு ஏற்பட்ட சினத்திற்கு அள வில்லை. உணர்ச்சி மீக்குற்ற அவன் தானே சென்று அவர்களைத் தண்டித்து வரக்கிளம்பினான்.

நேரே பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்த அவன், தன்வாய் அம்புகளை அவர்களின் முன் வீசி எறிந்தான். அவற்றால் சிறிதேனும் அமைதி குலையாது அவன் கூறுவது அனைத்தையும் புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டிருந்த அவர்கள், ''நல்லது; உமக்குக் காளை தானே வேண்டும்?'' என்றார்கள். ''ஆம்; காளைதான் வேண்டும். அதே காளை தான் வேண்டும்'' என்று, 'அதே' என்ற சொல்லை அழுத்த மாகக் கூறினான் அவன்.

உடனே பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் தாம் உண்ட பின், அங்கு சிதறிக் கிடந்த அந்தக் காளையின் எலும்புகளைத் தம் திருக்கரத்தால் ஒருங்கு கூட்டி, 'காளையே எழுந்திரு' என்று பணித்தார்கள். என்ன வியப்பு! அடுத்த கணம் அந்தக் பொலிகாளை பொலிவுடன் எழுந்து நின்றது. அதைக் கண்டதும் அரசனுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், அச்சத் திற்கும் அளவில்லை. தாம் சாதாரண பக்கீர் என்று எண்ணிய அவர், மா பெரும் மகானாக இருப்பதைக் கண்டதும், அவனை ஒருவித நடுக்கம் ஆட்கொண்டது. உள்ளமும் உடலும் சேர்ந்து உதற, அவர்களின் தாள்களில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினான் அவன். பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் அவனைப் பெருமனத்துடன் மன்னித்தார்கள்.

அரண்மனை திரும்பிய அரசனின் உள்ளத்தில் என்னவென்னவோ தீய எண்ணங்களெல்லாம் ஒன்றின் பின் ஒன்றாகப் படையெடுத்தன. அவர்களைக் கொன்றொழித்தால் தான், தாம் சுதந்திர மன்னனாக வாழ இயலுமென்றும், இல்லையேல் என்றென்றும் அவர்களின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலையே தமக்கு ஏற்படும் என்றும் கருதிய அவன், அவர்களைக் கொன்றொழிக்க சதி சூழ்ந்தான்.

நஞ்சிட்ட தின்பண்டங்களைத் தயார் செய்து அவர்களுக்குக் காணிக்கை யாக அனுப்பி வைத்தான்.

அவனின் உள்ளத்தின் ஒவ்வோர் அசைவையும் தம் உள்ளுணர்வால் விளங்கி வந்த பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள், தம்முன் அரசனின் காணிக்கையான தின்பண்டக் கூடை வந்து இறங்கியதும், புன்முறுவல் பூத்தார்கள். பின்னர் அதில் தம் திருக்கரத்தை இட்டு ஐந்து பண்ணியங் களை எடுத்துத் தம் முன் வீற்றிருந்த ஐந்து பக்கீர்களுக்கு ஆளுக்கு ஒன்று வீதம் கொடுத்தார்கள். அவர்கள் அவற்றைப் பெற்றுச் சுவைத்துச் உண்டார்கள். அந்நஞ்சால் அவர்களுக்கு யாதொன்றும் செய்ய இயல வில்லை. ஆனால், அவர்கள் அவற்றைச் சுவைத்துத்தின்னத் தின்ன அந்நஞ்சு அரசனின் வயிற்றிற்குள் இறங்கினாற் போன்று அவனுக்குத் தாங்கவொண்ணா வலியை உண்டு பண்ணியது. அவர்களின் தாடை அசைய, அசைய அவனின் வயிற்றை வலி கௌவிப்பிடித்துப் பிசைய லாயிற்று. வலிதாங்க இயலாது அலறினான் அவன். அரண்மனை மருத்துவர்கள் ஓடோடி வந்து மருந்து கொடுத்தும், அதனால் யாதொரு பயனுமில்லை. மந்திரவாதிகள் வந்து மந்திரித்தும் வலி தீரவில்லை.

தன் வினை தன்னைச் சுட்டது என்பதை விளங்கிக் கொண்ட அரசன், தம் மனைவியை பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களிடம் அனுப்பித் தம் தவற்றை மன்னிக்குமாறும், தன் வயிற்று வலி நீங்க இறைஞ்சுமாறும், வேண்டிக் கொண்டான். அரசி அவ்வாறே செய்ய அவர்கள்அரசன் அனுப்பிய பண்ணியங்களில் ஒன்றை எடுத்து, அரசியின் கையில் கொடுத்து அதனைத் தன் கணவனுக்குக் கொடுக்குமாறும், அதனை அவர் உண்டதும் வயிற்று நோய் நீங்கப் பெறுவார் என்றும் நன்மாராயம் மொழிந்தனர்.

தான் அனுப்பிய பண்ணியங்களில் ஒன்றே தன் பிணிதீர்க்கும் அரு மருந்தாக அனுப்பி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும், அரசனின் உள்ளத்தில் ஆயிரம், ஆயிரம் ஐயங்கள் தோன்றி மறைந்தன. எனினும் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் கூற்றில் நம்பிக்கை வைத்து அதனை உண்டான். உண்ட சில நிமிடங்களில், அவனைப் பீடித்திருந்த வயிற்று நோய் பஞ்சாய்ப் பறந்து விட்டது.

இதன்பின் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள் மீது அரசனுக்கு அளவற்ற பக்தி ஏற்பட்டது. தான் இதுகாறும் வணங்கி வந்த தெய்வங்க ளெல்லாம் பொய்மையுடைத்து என்பதை உணர்ந்த அவன், தான் சென்று வணங்கி வந்த அரசாங்கப் பெருங்கோயிலின் கதவுகளை இழுத்துப் பூட்டுமாறு ஆணையிட்டான். அதுகேட்டு ஜங்கம் என்ற தலைமைப் பூசாரிக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை.

விரைவில் அரண்மனை அடைந்த அவர், ''அரசே! நீர் என்னைத் தாழ்வாக நினைத்து எங்கிருந்தோ, வந்த பக்கீரை மேலாகக் கருதிவிட்டீர். எங்களில் எவர் மேலானவர் என்பதை, வேண்டுமாயின் நீரே சோதித்துப் பார்த்துக் கொள்ளும்''என்று ஆவேசத்துடன் கூறினார்.

''எவ்வாறு?'' என்று அமைதியாக வினவினான் அரசன்.

''எங்கள் இருவரையும் தனித்தனியே சுண்ணாம்புப் பையில் கட்டி, நதியில் தூக்கி எறியும். எவர் உயிரோடு கரை மீள்கிறாரோ, அவரையே மாண்பாளர் என்று மதிப்பிடும்'' என்று கூறினார் அவர்.

இச்செய்தி பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களுக்குத் தெரிய வந்ததும், அவர்களும் இச்சோதனைக்கு உட்பட ஒப்புதல் வழங்கினார்கள்.

அவ்வாறே இருவரும் தனித்தனி சுண்ணாம்புப் பையில் வைத்துக் கட்டப்பட்டு, ஆற்றில் தள்ளப்பட்டார்கள். தள்ளிய அடுத்த கணமே ஒரு மூட்டை ஆற்றில் அங்குமிங்கும் மிதந்து சென்றது. அது எவருடைய மூட்டை? அது எவருடைய மூட்டை? என்று மக்கள் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டார்கள். ''எங்கள் தலைமைப் பூசாரியார் ஜங்கமுடைய மூட்டைதான் அது. அவர் என்ன சாமான்ய மனிதரா? பெரிய மகாத்மா வல்லவா?'' என்று கூறினர் அவரின் சீடர்கள். பக்கீர்களோ ஆற்றங் கரையிலே அமைதியாக வீற்றிருந்து, இறைவனின் திருமறையை ஓதிக் கொண்டிருந்தார்கள்.

நகரமோ அல்லோல கல்லோலப்பட்டது. நகரின் எல்லாப் பாதைகளும் ஆற்றங்கரைக்கே சென்றன. நகரமே காலியாகக் கிடந்தது.

மூன்றாம் நாள் புலர்ந்தது. ஆற்றிலே அங்குமிங்கும் சென்று கொண்டிருந்த மூட்டை, இறுதியாகக் கரையில் ஒதுங்கியது. அரசன் முதலான அனைவரும் ஓடோடிச் சென்று, அதனை அவிழ்த்தனர். புன் முறுவல் பூத்த வண்ணம் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள், அதிலிருந்தும் வெளியே வந்தார்கள். அவர்களின் திருமுகப் பிரகாசத்தின் முன் அப்பொழுது புலர்ந்து கொண்டிருந்த சூரியனின் ஒளியும் மங்கியது.

தம் குரு நாதரைக் கண்ட பக்கீர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அள வில்லை. 'அல்லாஹு அக்பர்' என்று தக்பீர் முழங்கினார்கள். அம்முழக்கம் அந்நகரின் நாலா பக்கங்களிலும் எதிரொலி செய்து, 'அல்லாஹ் பெரியவன்' என்பதை மக்களின் உள்ளத்தில் உணர்த்தியது. அன்றையத்தினமே ஏராளமானோர் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவினர்.

இதன்பின் பாபா பக்ருத்தீன் (ரஹ்) அவர்கள், அவ்விடத்திலேயே தங்கி ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வந்தார்கள். ஆண்டுதோறும் திருச்சி சென்று தம் குருநாதரைத் தரிசித்து வருவதைத் தங்களின் நீங்கா வழக்கமாகக் கொண்டிருந்தனர். அவர்களின் அடக்கவிடம் பெனுகொண்டாவில் இருக்கிறது. அங்கு அவர்களின் குருநாதரின் பற்குச்சி முளைத்துப் பெருமரமாக நிற்பதை இன்றும் காணலாம். பஞ்சுத் தொழிலாளர்கள் அவர்களைத் தங்களின் மகானாகக் கருதி, ஆண்டுதோறும் அவர்கள் நிர்யாணமடைந்த நாளாகிய ஜமாதில் ஆகிர் 11 ஆம் நாள் விழாவெடுத்து மகிழ்கின்றார்கள்.



## 22. அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்)

அவர்களுக்கும் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களுக்கும் வயதில் முப்பத்தொன்பது ஆண்டுகள் ஏற்றத்தாழ்வு இருந்தது. இருவரும் ஒருவர் மற்றொருவர் பார்த்தறியார்கள். ஆனால், அவர்கள் இருவரும், ஒருவர் மற்றொருவருக்கு அளித்து வந்த மரியாதையோ, அளவிட முடியாததாக இருந்தது. இருவரும் ஒருவர், மற்றவரின் மாண்பினை நன்கு உணர்ந் தவர்கள். எனவே ஒருவர், மற்றவருக்கு மரியாதை செலுத்தினார்கள்.

பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள், வஹிஸ்தானுக்குச் செல்லுங் கால் ஹர்கான் என்ற ஊர் வழியாகவே செல்வர். அவ்வூரின் எல்லையை அவர்கள் அடைந்ததும் அவர்கள் தங்களின் மூச்சை நன்கு இழுத்து விடு வார்கள். அதற்கான காரணம் வினவப்பட்ட பொழுது, ''திருடர்கள் நிரம்பிய இவ்வூரில், ஒரே ஒரு மனிதரின் வாடையையே நான் நுகர்கிறேன். அவரின் பெயர் அலி என்பதாகும். ஆனால், அவர் என்னைவிட மூன்று படித்தரங்கள் மேலானவர். அவர் உழுதுண்டு வாழ்வார்'' என்று கூறினார்கள்.

ஆனால் ஹர்கானில் பிறந்த அபுல் ஹஸன் (ரஹ்) அவர்களோ பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தைத்தரிசித்து விட்டு, வெளியே வருங்கால், பின்னங்கால்களில் நடந்தே வெளியே வருவார்கள். வாயிலை அடைந்ததும், அங்குச் சற்று நேரம் நின்று, ''இறைவனே! பாயஸீதுக்கு நீ வழங்கிய அந்த ஆற்றலில் ஒரு பகுதியை அபுல் ஹஸனுக்கும் வழங்குவாயாக!'' என்று இறைஞ்சிவிட்டே, அவ் விடத்தை விட்டும் அகல்வர். அப்பொழுது அவர்கள், ''இவ்வுலகில் ஒரு மனிதர் உயிரோடிருக்கிறார் என்றால், அவர் பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் தாம்'' என்று கூறுவர். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டு காலம் செய்து வந்தார்கள்.

ஒருதடவை அவர்கள் பாயஸீத் (ரஹ்) அவர்களின் அடக்க இடத்தின் முன் மரியாதையுடன் கைகட்டி நின்ற பொழுது, ''அபுல் ஹஸன்! நேரம் வந்துவிட்டது. அமருங்கள்'' என்று அடக்க இடத்திலிருந்து சப்தம்

வந்தது. அது கேட்ட அவர்கள், ''பாயஸீத் (ரஹ்) அவர்களே! எனக்கு உதவி வழங்குகள். ஷரீ அத்தின் இரகசியங்களை நான் விளங்கிக் கொள்ள வில்லை. அவற்றை விளங்கிக் கொள்ள எனக்கு அருள் கூறுங்கள்'' என்று கூறினர். அப்பொழுது அவ் அடக்க இடத்திலிருந்து ''நான் அடையப் பெற்ற இப்பதவி, தங்களின் பொருட்டால் எனக்குக் கிடைத்தது''என்று பதில் வந்தது.

அதுகேட்டுப் பெரிதும் வியப்புற்ற அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள், ''தாங்களோ எனக்கு முப்பத்தொன்பது வயதுக்கு மூத்தவர் களாயிற்றே, அது எவ்வாறு சாலும்?' என்று வினவினர். அப்பொழுது அவ் அடக்க இடத்திலிருந்து மீண்டும் பின்வருமாறு சப்தம் வந்தது:

''அபுல் ஹஸன்! நான் உயிரோடிருக்குங்கால், தங்களின் ஊர் வழியாகச் செல்லும் பொழுதெல்லாம், ஒரு பேரொளியைக் காண்பேன். அது விண்முகட்டை அளாவி நிற்கும். நான் மூன்றாண்டுகளாக இறை வனிடம் ஒன்றை வேண்டிக்கொண்டிருந்தேன். அப்பொழுது எனக்கு உள்ளுணர்வு மூலம், 'அந்தப் பேரொளியின் பொருட்டால் உம்முடைய விருப்பத்தை நிறைவேற்றித் தருமாறு இறைவனிடம் இறைஞ்சும்' என்று கூறப்பட்டது. அவ்வாறே நான், அந்தப் பேரொளியைக் கண்டதும் இறைவனிடம் இறைஞ்சினேன். அதன் பின் நான் ஹர்கானுக்குள் நுழைந்த பொழுது, திருக்குர் ஆன் முழுவதும் எனக்கு மனனமாகி விட்டது. என் துன்பமும் தீர்ந்தது. எனவே தான் அவ்வாறு கூறினேன்.''

பின்னர் ஒரு தடவை அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள், தம்முடைய முக்கிய சீடர் ஒருவரிடம் கூறும்பொழுது, ''உலக மக்களுக்கு பாயஸீத் (ரஹ்) அவர்கள் இறந்து விட்டார்கள் தாம். ஆனால் எனக்கோ, அவர்கள் உயிரோடு தான் உள்ளார்கள். என் அனைத்துச் செயல்களையும் கவனித்து கொண்டுள்ளார்கள்'' என்று இயம்பினர்.

அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள், தம்மைப் பற்றிக் கூறுங்கால் ''நான் ஒரு முர்ஷிதாக இருக்க விரும்பவில்லை. எனக்கு முரீதும் தேவையில்லை, இறைவன் ஒருவனே எனக்குப் போது மானவன்'' என்று கூறியபோதினும், அவர்களிடம் தீட்சை பெறுவதற்காக மக்கள் சாரி சாரியாக வந்த வண்ணம் இருந்தனர். எனினும் அவர்கள் தகுதி வாய்ந்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்குத் தீட்சை வழங்கவில்லை.

ஒருநாள் ஒருவன் அவர்களிடம் வந்து, தமக்குத் தீட்சை வழங்கி கிர்கா அணிவிக்குமாறு வேண்டினான். அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, ''முதலில் நான் கேட்பதற்கு பதில் சொல்'' என்று கூறினர். அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, ''ஓர் ஆண், பெண்ணின்

உடையை அணிந்து கொண்டால் அவன் பெண்ணாகி விடுவானா?'' என்று வினவினர். அதற்கு அவன் 'ஆகமாட்டான்' என்று மறுமொழி பகர்ந்தான். மீண்டும் அவர்கள் அவனை நோக்கி ''ஒரு பெண், ஆணின் உடையை அணிந்து கொண்டால் அவள் ஆணாகி விடுவாளா?''என்று வினவினர். 'ஆவும் முடியாது' என்று அவன் பதிலுரைத்தான். அதுகேட்ட அவர்கள், ''நீ ஆணாக இல்லாதபொழுது, என்னுடைய கிர்காவை அணிந்து கொண்டால், நீ ஆணாகி விடுவாயா?'' என்று வினவினர். அதற்கு அவன் யாதொரு மறுமொழியும் கூற இயலாது வாயடைந்து வெறுமனே திரும்பி விட்டான்.

ஒருதடவை அவர்கள் பக்கீர்களுடன் வீற்றிருந்தனர். ஏழு நாட்கள் வரை அவர்கள் அனைவரும் யாதொன்றும் உண்ணவில்லை. அப்பொழுது ஒரு மனிதர் திடீரென அவர்களின் முன், ஒரு மூட்டை மாவையும், ஓர் ஆட்டையும் கொணர்ந்து, 'நான் இவற்றை ஸூஃபிகளுக்காக அன்பளிப்பு வழங்குகிறேன்' என்று கூறினார். அப்பொழுது அபுல் ஹஸன் (ரஹ்) அவர்கள், அந்த பக்கீர்களை நோக்கி, ''உங்களில் எவரேனும் ஸூஃபிகள் இருப்பின், அந்த அன்பளிப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். எனக்கு அவற்றை ஏற்றுக் கொள்ளத் தகுதி இல்லை'' என்று கூறினர். அப்பொழுது ஆங்கிருந்த ஒருவரும் அதனை ஏற்றுக் கொள்ள முன் வரவில்லை. எனவே அதனைக் கொண்டு வந்தவரே எடுத்துச் சென்றுவிட்டார்.

அவர்கள் தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டு காலமாக இஷா (இரவு) தொழுகையை, இமாம் ஜமாஅத்துடன் தொழுது வந்தார்கள். நாற்பதாண்டுகளாக இரவுத் தொழுகைக்குச் செய்த 'உளூ'வுடன் வைகறைத் தொழுகையைத் தொழுது வந்தார்கள்.

''கடந்த நாற்பது ஆண்டுகளாக என் உள்ளம், குளிர்ந்த நீர் அருந்த விரும்பிக் கொண்டுள்ளது. எனினும் நான் அதனை மறுத்துக் கொண்டுள்ளேன'' என்று அவர்கள் ஒருதடவை கூறினர்.

நாற்பதாண்டுகளாக அவர்கள் தலையணை வைத்தும் படுத்துறங்கியதே இல்லை. ஓரிரவு அவர்கள் திடீரெனத் தம் மாணவர் ஒருவரை நோக்கித் தமக்குத் தலையணை ஒன்று கொண்டுவருமாறு கூறியபொழுது, அவர் வியப்பு மேலிட்டவராய், ''என்ன செய்தி'' என்று வினவினார். அதற்கு அவர்கள், ''இன்றிரவு நான் அல்லாஹ்வுடைய தரிசனத்தைப் பெறும் நற்பேறு பெற்றேன். நாற்பதாண்டுகளாக என்னுடைய உள்ளத்தில் அல்லாஹ்வுடைய நினைவேயன்றி வேறொன்றும் இருந்ததில்லை'' என்று கூறினார்கள்.

ஒருநாள் அவர்கள் தம் இல்லத்தில் ஒரு குழியைத் தோண்டினர். வெள்ளி நாணயங்களாக வெளியே வந்தன. எனவே அவர்கள் தாம் தோண்டிய அக்குழியை மூடிவிட்டு, மற்றோர் இடத்தில் தோண்டினர். பொன், புதையல், புதையலாக வெளிவந்துது. எனவே அதனையும் மண்ணைப் போட்டு மூடிவிட்டு, மற்றோர் இடத்தில் தோண்டினர். அங்கிருந்து வைரங்களும் வைடூரியங்களும் வெளிவந்தன. உடனே அவற்றை அக்குழியிலேயே போட்டு மூடிவிட்டு, வேறோர் இடத்தை அவர்கள் தோண்டினார்கள். பொன்னாபரணங்கள் வெளிப்போந்தன. அப்பொழுது அவர்கள் இறைவனை நோக்கி, ''இறைவ எம்பெருமு! நீ எனக்கு இவ்வுலகத்துடையவும், அவ்வுலகத்துடையவும் அனைத்துச் செல்வங்களையும் அன்பளிப்பாகத் தந்தபோதினும், நான் வேண்டேன். எனக்கு வேண்டியதெல்லாம் உன்னுடைய 'லிகா' என்னும் தரிசனம் தான்'' என்று கண்ணீரும் கம்பலையுடனும் கூறினார்கள்.

ஒருநாள் அவர்களின் சீடர் ஒருவர், அவர்களை அணுகி, ஹர்க்கானில் தமக்கு ஹதீதுக் கலையைப் போதிக்க வல்ல ஆசான் கிடைக்காததால், தாம் இராக் செல்ல விரும்புவதாக எடுத்துரைத்தார். அதற்கு அவர்கள், ''நீர் இங்கேயே இரும். நான் உமக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்களிட மிருந்து, நான் கேட்டறிந்த ஹதீதுகளைப் போதிக்கின்றேன்'' என்று கூறினர். அதுகேட்டு அந்தச் சீடருக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் ஐயத்திற்கும் அளவில்லை.

அன்றிரவு அவர் படுத்துறங்கும்பொழுது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, ''நீர் அபுல் ஹஸன் கூறியதைப் பற்றி ஐயுறவேண்டாம். அவர் கூறியது முழுக்க முழுக்க உண்மையாகும்'' என்று அருள்வாய் மலர்ந்துவிட்டு மறைந்தனர்.

திடுக்குற்று விழித்தெழுந்த அவருக்கு முன்னைவிட அதிக வியப் பேற்பட்டது. எனினும் தம் வியப்பை எவரிடமும் காட்டிக்கொள்ளாது, வைகறைத் தொழுகை தொழுது முடிந்த பின் ஹதீது நூலுடன் தம் ஆசான் முன் சென்று தாள் மடித்து அமர்ந்து ஹதீதுக்கலை பயிலலானார் அவர். ஒவ்வொரு நாளும் ஹதீதுகளை ஒவ்வொன்றாகக் கூறி விளக்கம் பகர்ந்து வந்த அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள், ஒருநாள் ஒரு ஹதீதுக்கு வந்ததும், அது தவறானது என்று இயம்பினர்.

''எவ்வாறு அது தவறானது எனத் தாங்கள் அறிய வந்தீர்கள்?'' என்று அவர் அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களை வினவிய பொழுது, ''நான் உமக்கு ஹதீதுக்களைப் போதிக்கும் போதெல்லாம், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்முன்னே வீற்றிருந்து, நான் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைப்

பற்றி ஒரு தவறான ஹதீது வரும் பொழுது அவர்களின் முகத்தில் ஒருவித அதிருப்தியை நான் காண்கிறேன். அதிலிருந்து அது தவறானது என்பதை நான் விளங்கிக் கொள்கிறேன்'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

ஒருதடவை அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களும், மற்றொரு பிரபலமான ஸூஃபியும் சந்தித்துக் கொண்டார்கள். அப்பொழுது அவர் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் முன் இருந்த தண்ணீர்க் குவளையிலிருந்து திடீரென ஒருமீனைத் துள்ளிக் குதிக்கச் செய்தார். அப்பொழுது ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் தம் அருகே இருந்த அடுப்பில் கையை விட்டு ஓர் உயிருள்ள மீனை வெளியே எடுத்தனர்.

தாம் தோற்றுவிட்டதை உணர்ந்த அவர், ''சரி; வாருங்கள். நாம் இரு வரும் நெருப்புக் குண்டத்தில் குதிப்போம். எவர் உயிருடன் வெளி வருகிறார் என்று பார்ப்போம்'' என்று கூறினர்.

அதற்கு ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் அமைதியாக, ''இந்த அற்புதங்களையெல்லாம் வீணே நாம் ஏன் செய்ய வேண்டும்? நாம் ஃபனா என்ற கடலில் மூழ்கி, 'பகா' என்ற கரையில் ஏறுவோமே, அதுவல்லவோ போற்றத் தகுந்த செயலாகும்'' என்று பதிலுறுத்தனர். அந்த ஸூஃபி மறுவார்த்தை பேசவில்லை.

நீஷாப்பூரிலிருந்து அபூஸயீது (ரஹ்) அவர்கள், அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களைக் காண்பதற்காக ஹர்க்கான் வந்தபொழுது, அவர்களை ஆரத்தழுவி வரவேற்றார்கள். அந்தத் தழுவல் அவர்களின் உள்ளின் உள்ளே பாய்ந்து வேலை செய்யத் துவங்கியதன் காரணமாக உறக்கமே வரவில்லை. மெய்மறந்த நிலையில் உரத்துச் சப்தமிட்டுக் கொண்டு முழங்கால்களைக் கட்டியவண்ணம் அமர்ந்திருந்தார்கள்.

வைகறையானதும் அவர்கள், ஹர்க்கானி (ரஹ்) அவர்களை அணுகி, அவர்களின் தழுவலால் தம் உள்ளில் பாய்ந்த ஆன்மீக ஒளியைத் தம்மால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்றும் அதனை ஏற்றுக் கொள்ளும் தகுதி தமக்கு இன்னும் ஏற்படவில்லை என்றும் கூறினர். அதுகேட்ட ஹர்க்கானி (ரஹ்) அவர்கள், மீண்டும் அபூ ஸயீது (ரஹ்) அவர்களை ஆரத்தழுவினர். அதன்பின் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் தன்னிலை எய்தப் பெற்றார்கள்.

அவர்கள் மாபெரும் இறைநேசச் செல்வராக இருந்த போதினும், உலகமெலாம் அவர்களை மதித்து மரியாதை செய்தபோதினும், அவர் களின் மனைவி அவர்களை அவமதித்தாள். ஒருநாள் அவர்கள் தம் சீடர் களை நோக்கி, ''இன்றிரவு இந்தப் பாலைவனத்தில், இத்தனை பேர்கள் கொள்ளைக் கூட்டத்தினரால் கொல்லப்பட்டனர்'' என்று கூறினர். பின்னர் விசாரித்ததில், அவர்கள் கூறியது உண்மை எனத் தெரிய வந்தது.

அன்றிரவு அவர்களின் ஒரே திருமகன், அஹம்மது கொல்லப் பட்டார். அவருடைய தலை அவர்களின் வீட்டு வாயலில் வைக்கப் பட்டது. வைகறைத் தொழுகைக்குப் பள்ளிக்குப் புறப்பட்ட அவர்கள் அத்தலைமீது இடறிக் கீழே விழுந்து விட்டார்கள். பின்னர் தான் அது தன் மகனின் தலையென அவர்களுக்குத் தெரிய வந்தது.

அப்பொழுது அவர்களின் மனைவி ஏனையோரை நோக்கி, "வெகு தொலைவில் நடந்த செய்திகளைக் கூறும், இவருக்குத் தம் மகன் கொல்லப்பட்டு, அவரின் வீட்டு வாசலில் வைக்கப்பட்டது தெரியாமல் போன விந்தையைப் பாருங்கள்" என்று இழித்துரைத்தாள்.

மனைவியின் இந்தத் தீச்சொல், அவர்களின் செவிப்பட்டதும் "ஆம்; பாலையில் அந்தப் படுகொலை நிகழும்பொழுது, திரை சற்று விலகியது. நான் அதனைப் பார்த்தேன். ஆனால் என் மகன் கொல்லப்பட்ட பொழுது, மீண்டும் திரை விழுந்து விட்டது. என்னால் அதனை எவ்வாறு பார்க்க இயலும்?" என்று கூறித் தம் ஆற்றாமையையும், இறைவனின் சர்வ வல்லமையையும் எடுத்துரைத்தார்கள்.

அறிவியல் விற்பன்னர் அபூ அலீ சீனா, அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்று, ஹர்க்கான் வந்து அவர்களின் இல்லத்தின் கதவைத் தட்டினார். கதவைத்திறந்த அவர்களின் மனைவி 'அந்தக் காஃபிரைக் காணவா வந்துள்ளீர்! நன்று!! நன்று!!! இனிமேல் அவரைக் காண்பதற்காக இங்கு வரவேண்டாம். அவர் விறகு சேகரிப்பதற்காகக் கானகம் சென்றுள்ளார்" என்று கூறிக் கதவைப் 'படார்' என்று சாத்தி உள்ளே சென்றாள்.

அதன்பின் அவர்களைத் தேடிக் கானகம் சென்றார் அபூ அலீ சீனா. ஹர்க்கானி (ரஹ்) அவர்களோ, தாம் சேகரித்த விறகுகளை ஒரு சிங்கத்தின் முதுகில் ஏற்றிக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள், இதைக் கண்டதும் அபூ அலீ சீனாவுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

அபூ அலீ சீனா, தம்மை எவரென ஹர்க்கானி (ரஹ்) அவர்களுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டார். இருவரும் பற்பல விஷயங்கள் பற்றி உரையாடிக் கொண்டு நடந்து வந்தார்கள். அப்பொழுது தாம் அவர்களின் இல்லம் சென்று அவர்களைப் பற்றி விசாரித்தத்தையும், அவர்களின் மனைவி கூறிய பதிலையும், அவர் எடுத்துரைத்தார். அதுகேட்ட அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் சிரித்துக் கொண்டு "அந்தப் போக்கிரி ஆட்டுடன் நான் பொறுமையாக வாழ்க்கை நடத்தாவிட்டால், இந்தப் பொல்லாத சிங்கம் நான் இட்ட ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்காது" என்று கூறினார்கள்.

இரவு முழுவதும் அவர்கள் இருவரும் ஆன்மீகம் பற்றி உரையாடிக் கொண்டிருந்தார்கள். வைகறையில் தொழுது விட்டு, அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் தம் வீட்டு மதிலின் மீது ஏறி, அதனைப் பழுது பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களின் கையிலிருந்த கரண்டி கீழே விழுந்ததும், ஆங்கு வீற்றிருந்த அபூ அலீ சீனா அதனை எடுத்து அவர்களின் கையில் கொடுப்பதற்காக எழுந்தார். ஆனால் அவர் எழுவதற்கு முன் அந்தக் கரண்டி, தானாகவே அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் கையை அடைந்தது. அதுகண்டு அபூ அலீ சீனாவின் கண்கள் வியப்பால் விரிந்தன. அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் மாண்பினைப்பற்றி அவர் கொண்டிருந்து ஐயம், கதிரவன் கண்ட பனிபோன்று அடுத்த கணம் மறைந்தது.

ஒருநாள் மதபோதகர் ஒருவர் அவர்களை அணுகித் தமக்கு அறிவுரை பகருமாறு வேண்டினார். அதற்கு அவர்கள் ''நீர் மக்களை இறைவன் பால் அழைப்பீராக! ஒருபோதும் உம்பால் அவர்களை அழைக்க வேண்டாம்'' என்று கூறினர். அப்பொழுது அவரின் புருவங்கள் வியப்பால் மேலேறின. தமக்கு அதனைத் தெளிவாக எடுத்துரைக்குமாறு அவர் வேண்டினார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''ஒரு மதபோதகர், தம் போன்று மக்களை இறைவன்பால் அழைத்துக் கொண்டிருக்கும் மற்றொரு மதபோதகரைப் பார்த்துப் பொறாமையுறுவாராயின், அவர் மக்களை இறைவன்பால் அழைக்கவில்லை; தம்பால் அழைக்கிறார் என்று தான் பொருள்படும். இல்லையெனில் அவர் பொறாமையுறுவதற்குத் தான் காரணம் என்ன?'' என்று கூறினர். இவ்வாறு கூறி, எச்செயலைச் செய்யினும், அதனை இறைவனுக்காகச் செய்ய வேண்டுமேயன்றிச் சுயநலத்திற்காகச் செய்யக் கூடாதென்று கூறாமல் கூறினர்.

ஒருதடவை ஒரு சீடரின் இல்லத்தில் நடந்த பேரின்ப இசைநிகழ்ச்சி ஒன்றில் அவர்கள் கலந்து கொண்ட பொழுது, தன்னுணர்வற்று அவர்கள் தம் காலை பூமியின்மீது மும்முறை ஓங்கி, ஓங்கி அடித்தார்கள். அதன் காரணமாக அந்தவீட்டின் சுவர்களெல்லாம் அதிர்ந்தன. பூமியோடு சேர்ந்து அவர்களும் நடனமாடுவது போன்று தோன்றியது. நிகழ்ச்சி முடிவுற்று அவர்கள் தன்னுணர்வு, பெற்ற பொழுது, அவர்களின் சீடர்கள் அவர்களை அணுகி அதுபற்றி வினவிய பொழுது 'ஸமா' என்ற பேரின்ப இசைநிகழ்ச்சியானது, ஆன்மீகத்தில் உயரிய படித்தரத்திற்குச் செல்லக் கூடியவர்களுக்கே அன்றி வேறொருவருக்கில்லை. அப்பொழுது அவர்களுக்கு எல்லாத் திரைகளும் அகற்றப்படுகின்றன. விண்ணகத்தில் நடக்கும் நடவடிக்கைகளையும், அவர்கள் தம் கண்களால் காண்கிறார்கள்'' என்று பதிலிறுத்தார்கள்.

அவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்ற சுல்தான் மஹ்மூது கஜ்னவி, அவர்களைச் சந்திக்க விரும்பி, அவர்களைத் தம் தலை நகராம் கஜ்னிக்கு வருமாறு பல தடவை வேண்டினார். எனினும், அவர்கள் இணங்கவில்லை. எனவே அவர்களைச் சந்திப்பதற்காக அவரே, ஹர்கானுக்குப் புறப்பட்டார். அவ்வூரின் வெளிப்புறத்தை அடைந்ததும் ஆங்கு முகாமிட்ட அவர், தாம் அவர்களைக் காண வந்திருப்பதை அவர்களிடம் எடுத்துரைத்து, அவர்களைத் தம்முன் அழைத்து வருமாறும் அவர்கள் மறுத்தால், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மேலும், அக்காலத்திலுள்ள அரசருக்கும் வழிப்படுமாறும் உள்ள திருவசனத்தை ஓதுமாறும் சொல்லி, ஒரு தூதுக்குழுவை அனுப்பி வைத்தார். அவ்விதமே அத்தூதுக்குழு அடிகளாரின் முன் சென்று, அரசரின் அழைப்பைக் கூற, அதனை அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தனர். பின்னர் அத்தூதுக் குழுவினர் மேலே கூறப்பட்ட இறைவசனத்தை ஓதி, அரச ஆணைக்கு அடிபணிவது அவர்களின் இன்றியமையாத கடமைகளில் ஒன்று என்பதைக் கூறாமல் கூற, "நான் அல்லாஹ்வுக்கு வழிப்படுவதே இன்னும் முடியவில்லை. இனிமேல் நான் அவனின் திருத்தூதருக்கு வழிப்படுவது வேறு பாக்கியுள்ளது. இவற்றையெல்லாம் ஆற்றி முடித்த பின், அதற்கு மேல் அரசருக்கு வழிப்படுவது என் வாணாளில் முடியுமோ, முடியாதோ என்று எனக்கு ஐயமாக உள்ளது. அல்லாஹ்வுக்கு வழிப்படவே எனக்கு நேரம் பற்றாதபொழுது நான் அரசருக்கு எவ்வாறு வழிப்படுவது?" என்று கூறினர். இச்செய்தி சுல்தான் மஹ்மூது கஜ்னவியின் செவிப்பட்டதும், "நமக்குப் பதில் கூற வாயில்லாது செய்துவிட்டார்கள். எனவே நாமே அங்கு செல்வோம்" என்று கூறினார்.

இதன்பின் அவர்களைச் சோதித்தறிவதற்காகத் தம் அன்பிற்குரிய அடிமை ஆயாஸுக்கு அரச உடை அணிவித்து தாம் ஆயாஸின் உடையணிந்து கொண்டு, சில அடிமைப் பெண்களுக்கு, ஆண்களின் உடையை அணிவித்து, அவர்களுடன் அடிகளாரைக் கண்டு வருவதற்காகப் புறப்பட்டார் அரசர். எல்லோருக்கும் முன்பாக ஆயாஸ் அரச உடை தரித்துக் கம்பீரமாகச் சென்ற போதினும், அடிகளாரின் கண்கள் பின்னால் நின்று கொண்டிருந்த அரசரையே நோக்கின. அதன் பின் அவர்கள் அரசரை நோக்கி, "இந்தப் பெண்களை வெளியே போகச் சொல்லுங்கள்" என்று பணித்தனர். அதுகேட்டு அரசருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. மறுவார்த்தை கூறாது அவரும் அவ்விதமே செய்தார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "பெரிய சூழ்ச்சி செய்தீரே" என்று கூறினர். அதற்கு அரசர், "எம்போன்றோரின் சூழ்ச்சியெல்லாம் தங்களைப் போன்றோரிடம் பலிக்குமா?" என்று அடக்கமாகப் பதிலுரைத்தார்.

அதன்பின் அரசர், அடிகளாரை நோக்கித் தமக்கு 'தப்ருக்' வழங்குமாறு வேண்ட, அவ்வாறே அவர்கள் அவருக்கு ஒரு ரொட்டித் துண்டை வழங்கினர். அதனைப் பயபக்தியுடன் பெற்றுக் கொண்ட மன்னர், அடிகளாரின் முன் பொற்காசுப் பையொன்றை வைத்து, அதனைத் தம் அன்புக் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டி நின்றார். அதன் பின் அடிகளார் தமக்கு அன்பு கூர்ந்து வழங்கிய ரொட்டித் துண்டைப் பிய்த்து உண்டார். அது அவரின் தொண்டையில் மாட்டிக் கொண்டு அவருக்கு இருமல் வந்தது. அப்பொழுது அடிகளார் அவரை நோக்கி, ''நபிமார்களின் இந்த உணவு தங்களின் தொண்டையில் ஒட்டிக் கொண்டு உள்ளே இறங்க மாட்டேன் என்கிறது. அவ்விதமாயின் ஃபிர் அவ்ன் காலத்திலிருந்து பிதுரார்ஜிதமாக வந்த இந்தப் பொற்காசு எவ்வாறு பக்கீர்களின் தொண்டையில் இறங்கும்'' என்று கூறி, அவர் தந்த காணிக்கையினை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். அவர் எவ்வளவோ வேண்டியும் அவர்கள் கேட்டார்களில்லை. இதன்பின் அவர் தமக்குத் தீட்சை வழங்கித் தம்மை ஆட்கொள்ளுமாறு வேண்ட, அவர்கள் அதற்கு இணங்கி அவருக்குத் தீட்சை வழங்கி, 'கிர்கா'வும் அணிவித்தார்கள்.

இதன்பின் அவர்களிருவரும் உரையாடிக் கொண்டிருந்த பொழுது, அபூயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களைப் பற்றிப் பேச்சு எழுந்தது. அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களை ஒரு தடவை கண்ணால் கண்டவர் நேர்வழி பெற்றுவிடுவார்?'' என்று அபுல்ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் கூற, 'அது எவ்வாறு சாலும்? அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கூடக் கண்ணால் கண்ட அபூ ஜஹ்ல், நேர்வழி பெறவில்லையே'' என்று இடைமறித்துக் கூறினார் மஹ்மூத் கஜ்னவி. அப்பொழுது அடிகளார், அரசரை நோக்கி, ''அபூ ஜஹ்ல் முஹம்மதுர் ரசூலுல்லாவைத் தன் கண்களால் காணவில்லை. கண்டிருந்தால் அவன் நேர்வழி பெற்றிருப்பான். அவர் முஹம்மது இப்னு அப்துல்லாஹ் வைத்தான் கண்ணால் கண்டான். எனவேதான் அவன் நேர்வழி பெறவில்லை'' என்று கூறி, ''நீங்கள் அவற்றை நேரிய வழியில் அழைத்த போதினும், அவ்வழைப்பை அவை செவியுறா. (நபியே!) அவை உம்மைப் பார்ப்பது போல், உமக்குத் தோன்றுகிறது. உண்மையில் அவை உம்மைப் பார்ப்பதே இல்லை'' என்ற (7: 198) ஆவது திரு வசனத்தை ஓதினர். அதுகேட்ட அரசர் புன்முறுவல் பூத்தார்.

பின்னர் தமக்கு அறிவுரை வழங்குமாறு அரசர் வேண்ட (1)திருக்குர்ஆனுக்கு மாற்றமாக அணுவத்தனை செயலையும் ஆற்ற வேண்டாமென்றும், (2) ஒழுங்காகக் கூட்டுத் தொழுகையில் சேர்ந்து தொழுது வருமாறும், (3) தான, தர்மங்கள் செய்து வருமாறும், (4) மக்கள் மீது கருணையுடன் நடந்து கொள்ளுமாறும் அவர்கள் பணித்தார்கள்.

புறப்படுமுன் அபுல்ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் சிறுகுடிலைத் தம் கண்களைச் சுழற்றிப் பார்த்த மஹ்மூது கஜ்னவி, "அடிகளாரே! தங்களின் சிறுகுடில் மிகவும் அழகாக உள்ளதே" என்று கூறிய பொழுது "உமக்கு இறைவன் மாபெரும் அரசாங்கத்தைத் தந்திருக்க, நீர் என் சிறு குடில் மீது வேட்கையுறுகின்றீரே" என்றார்கள் அவர்கள். அது கேட்டு நாணமுற்றார் அவர்.

இதன் பின் அவர் அடிகளாரிடமிருந்து விடை பெற்ற பொழுது எழுந்து நின்று அவரை அனுப்பி வைத்தார்கள் அவர்கள். "நான் வந்த பொழுது, எனக்கு இத்துணை மரியாதை செலுத்தவில்லையே" என்று அரசர் வியப்புடன் வினவ, "ஆம்; அப்பொழுது நீர் அரசர் என்ற மமதையுடனும், என்னைச் சோதித்தறியும் நோக்குடனும் வந்தீர். எனவே நான் உமக்கு அப்பொழுது மரியாதை வழங்கவில்லை. இப்பொழுது ஒரு தர்வேஷ் போன்று தாழ்மையுடன் செல்கிறீர். அது உம்முகத்தில் இலங்கிக் கொண்டுள்ளது. எனவே எழுந்து நின்று மரியாதை செய்தேன்" என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

இதன்பின் சுல்தான் மஹ்மூது கஜ்னவி இந்தியாவின் மீது படையெடுத்து வந்து சோமாபுரத்தைத் தாக்கிய பொழுது, அங்குக் கடும்போர் நிகழ்ந்தது. போரில் மாபெரும் நெருக்கடி ஏற்பட்ட நேரத்தில், யாது செய்வதென அறியாது திகைத்தார் மஹ்மூது கஜ்னவி. உடனே அவருக்குத் திடீரென ஒரு யோசனை ஏற்பட்டது. தம் ஆசான் வழங்கிய அந்த 'கிர்கா' வைக் கையிலேந்தித் தமக்கு வெற்றி வழங்குமாறு இறைவனிடம் கண்ணீரும் கம்பலையுடனும் இறைஞ்சினார். சற்று நேரத்தில் வெற்றி அவரைக் கைலாகு கொடுத்து வரவேற்றது. அதுகண்டு மன்னரின் முகம் மலர்ந்தது.

அன்றிரவு மன்னர் அயர்ந்து உறங்குங்கால், அவரின் ஆசான் அவரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, "என் 'கிர்கா'வை என்ன செய்தீர்?" என்று வினவினர். அதற்கு அரசர், "அடிகளாரே! அதனை விற்று சோமநாத புரத்தை வாங்கினேன்" என்று மறுமொழி பகர்ந்தார். அதுகேட்ட அவர்கள், "அதனை மலிவான விலைக்கு விற்றுவிட்டீரே. இந்தக் கிர்காவை வைத்து உலகிலுள்ள உருவத்தொழும்பர் அனைவரும் இஸ்லாத்தைத் தழுவுமாறு இறைஞ்சி இருப்பின் எவ்வளவோ மேலாய் இருந்திருக்கும். உலகம் முழுவதும் இஸ்லாம் மயமாகி இருக்குமே. உலகில் உருவ வழிபாடு இல்லாதொழிந்திருக்குமே அதன் காரணமாக உம் தகுதியும் எவ்வளவோ உயர்ந்திருக்குமே" என்று அவர்கள் திருவாய் மலர்ந்துவிட்டு மறைந்தார்கள்.

உண்மையில் அபுல் ஹஸன் ஹர்கானி (ரஹ்) அவர்கள் அடைந்த ஆன்மீக உச்சமோ அளவிட முடியாததாக இருந்தது. ஒரு நாள் முகமூடி அணிந்த ஒருவர், அவர்களின் முன் வந்து, "நான் இக்காலத்து பாயஸீத் போன்று உள்ளேன்" என்று கூறினார். உடனே இவர்கள் தன்னிலை மறந்தவர்களாய் எழுந்து நின்று, தம் பாதத்தைப் பூமியில் உதைத்து, "நான் இக்காலத்து அல்லாஹ்வாகவும், ரசூலாகவும் உள்ளேன்" என்று கூறினார்கள்.*

ஓர் இரவு அவர்கள் தொழுது முடித்ததும், "அபுல் ஹஸன்! உம்மைப் பற்றி எமக்கு என்ன தெரியுமோ, அதனை மக்களிடம் தெரிவித்து விடவா? நாம் அதனை மக்களிடம் தெரிவித்து விடின், மக்கள் உம்மைக் கல்லால் அடித்துக் கொன்று விடுவார்கள்" என்று அசரீரி முழங்கியது.

அப்பொழுது அவர்கள், "இறைவனே? உன்னுடைய பேரருளையும், மகத்துவத்தையும் பற்றி நான் எவ்வளவு அறிவேனோ, அதனை நான் மக்களுக்கு அறிவித்து விடவா? நான் அவற்றை மக்களுக்கு அறிவித்து விடின், உன்னை ஒருவரும் வணங்கவே மாட்டார்கள்" என்று பதில் கூறினார்கள்.

அப்பொழுது மீண்டும் அசரீரி பின்வருமாறு முழங்கியது: "நீர் வேண்டுமானால், என்னுடைய பேரருளையும், மகத்துவத்தையும் பற்றி, நீர் அறிந்ததை மக்களிடம் எடுத்துரையும். ஆனால் நான் ஒருபோதும் உம்முடைய இரகசியத்தை மக்களிடம் எடுத்துரைக்க மாட்டேன்"

பின்னர் ஒரு தடவை அவர்கள் இறைவனை நோக்கி, "இறைவ என் பெரும! இஸ்ராயீலை (உயிர் வாங்கும் வானவரை) என்னிடம் அனுப்பி வைக்காதே. ஏனெனில், என் உயிரை நான் இஸ்ராயீலின் கையில் கொடுக்க மாட்டேன். ஏனெனில், நான் என் உயிரை அவரின் கையிலிருந்து பெறவில்லை. உன்னிடமிருந்தே பெற்றேன். எனவே நான் அதனை உன்னிடமே திருப்பித் தருவேன்" என்று கூறினார்கள்.

மற்றொரு தடவை அவர்கள் தங்களைப் பற்றிக் கூறும் பொழுது, "மனிதனின் அடையாளம் அடிமைத் தனமாகும். அந்த அடிமைத் தனத்தையே இறைவன் மனிதர்களிடமிருந்து எதிர்பார்க்கிறான். ஆனால், என்னிடமிருந்தோ, அவன் எசமானத்துவத்தை எதிர்பார்த்தான். நான் அர்ஷின் மீது சென்றேன். வானவர்கள் அணியணியாக வந்து என்னை வரவேற்று அழைத்துச் சென்றார்கள். அவர்கள் அனைவரும் என்னைக் கண்டு வெட்கித் தலை குனிந்தனர்" என்று எடுத்துரைத்தார்கள்.

* இது ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் "அனல் ஹக்" என்று கூறியது போன்ற நிலை என ஃபரீதுத்தீன் அத்தார் விளக்கம் கூறுகிறார்கள்.

மேலும் அவர்கள் கூறினார்கள். "அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் ஆன்மீக உச்சத்தின் கடைசி எல்லை எதுவென எனக்கு விளங்கவில்லை. நான் அன்றாடம் நன்மை, தீமை ஆகியவற்றின் கணக்கு களைப் பாராத வரையில் இரவில் தூங்குவதில்லை. சில பொழுது விண்ணைக் கீழே இழுத்து, மண்ணில் வைத்து விடவும், மண்ணைத் துளைத்துக் கொண்டு பாதாளத்திற்குச் சென்று விடவுமான ஆற்றல் என்னிடம் உள்ளது. இறைவனிடத்தில் எனக்குள்ள தகுதியை எடுத் துரைப்பின், மக்கள் அதனை விளங்கிக் கொள்ள மாட்டார்களே என்றுதான் எனக்கு அச்சமாக உள்ளது.

"எல்லாப் பொருள்களிலும் நான் இறைவனையே காண்கிறேன். இரவு பகலாக அவ் அலுவலிலேயே ஈடுபட்டுள்ளேன். இறை வனுடைய மகத்துவத்தை நான் வெளிப்படுத்துவேனாயின், மக்கள் என்னைப் பைத்தியக்காரன் என்று கூறுவார்கள். நான் எழுபத்து மூன்று ஆண்டு காலமாக மார்க்கத்திற்கு விரோதமான அணுவத்தனை செயலையும், செய்யவில்லை, என்னுடை நஃப்ஸிற்கு மகிழ்ச்சி வழங்கும் எச்செயலையும் ஆற்றவுமில்லை.

"தனித்திருப்பதில் இன்பமும், வாய்மூடி இருப்பதில் அமைதியும், எனக்குக் கிடைத்தன. எப்பொழுது நான் என்னுடைய நாவை இறைவனைப் புகழ்வதில் ஈடுபடுத்தினேனோ, அப்பொழுது விண்ணும் மண்ணும் என்னைச் சுற்றிச் சுழல்வதைக் கண்டேன். நான், 'நான்' என்ற அகங்காரத்தை விட்டதிலிருந்து, சுவனம் என்னைத் தேடவும், நரகம் என்னைக் கண்டு அஞ்சவும் செய்தது" என்று கூறினர்.

மேலும் அவர்கள் கூறும்பொழுது, "இறைவனைத் தேடி அலை பவர்களே! நீங்கள் அற்புதங்கள் ஆற்ற விரும்பின், முதலில் மூன்று நாட்களுக்கு ஒரு தடவை வீதம் நோன்பு நோற்று வருவீராக! அதன் பின் தொடர்ந்து நாற்பது நாட்களுக்கு நோன்பு நோற்பீராக! அதன்பின் நான்கு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்பீராக! இறுதியாக ஓராண்டு காலம் உணவருந்தாதிருப்பீராக! இதற்குப் பின் நீங்கள் ஒரு நிலையை அடை வீர்கள். அப்பொழுது ஓர் உருவம் தன் வாயில் பாம்பு போன்ற ஒரு பொருளைக் கௌவிக் கொண்டு, உங்களின் முன் வந்து நிற்கும். அந்தப் பொருளை எடுத்து நீங்கள் உண்பின், அதன்பின் உங்களுக்குப் பசி யென்பதே ஏற்படாது.

"நான் இவ்வாறு நோன்பு நோற்ற பொழுது, என்முன் ஓர் உருவம் தோன்றி, பாம்புபோன்ற ஒன்றை என்முன் நீட்டியது. என் மீது பொழியப் பட்டுக் கொண்டிருக்கும், இறையருளினூடே அது குறுக்கிட்டதால் நான் அதனை ஏற்றுக் கொள்ள மறுத்தேன். பின்னர் இறைவனை நோக்கி,

''இறைவ எம் பெரும! நீ எனக்கு எதனை அளிக்க விரும்புகின்றாயோ, அதனை நீயே எனக்கு நேரிடையாக அளிப்பாயாக! நம்மிடையே தரகர் வேண்டாம்'' என்று இறைஞ்சினேன். என்னுடைய இறைஞ்சுதலை இறைவன் ஏற்று ''இனிமேல் நீர் உணவில்லாமலேயே, உணவளிக்கப் படுவீர். நீர் உண்ணாமலேயே, பசி தீர்க்கப்படுவீர். நீர் அருந்தாமலேயே, தாகம் தீர்க்கப் பெறுவீர்'' என்று அருண்மொழி பகர்ந்தான். அதன்பின் தேன்போன்று இனிமையும், கஸ்தூரி போன்று நறுமணமும் உள்ள ஒன்றால், என் வயிற்றிற்குள்ளேயே நான் உணவளிக்கப்பட்டேன். அவ்வுணவை எங்கிருந்து பெற்று வருகிறேன் என்பது உலகத்தினருக்குத் தெரியாது.

''இறைவனைத் தவிர வேறொன்றின் உதவியை நான் நாடி நின்ற பொழுது, நான் என் வணக்கத்தில் வெற்றி பெறவில்லை. ஆனால் நான், படைப்பினங்களின் தொடர்பை விட்டொழித்து இறைவன் மீது மட்டும் என் கவனத்தைச் செலுத்திய பொழுது, என் ஆன்மீகப் பாதையில் உள்ள அத்தனை தடங்கல்களும், இறையருளால் நீங்கப்பெற்றதை உணர்ந்தேன். எவ்வித முயற்சியுமின்றி நான் பெரும் பலனை எய்தப் பெற்றேன்.

''மனிதனை இறைவன்பால் அழைத்துச் செல்லும் வழிகளோ பல. உலகில் எத்தனை மக்கள் இருக்கின்றனரோ, அத்தனை வழிகள் உள்ளன. ஒவ்வொருவரும் தம் தம் திறமைக்குத் தக்கவண்ணம் தமக்கேற்ற வழியைத் தேர்ந்தெடுத்து, அதில் அடியெடுத்து வைத்து நடந்து செல் கின்றார்கள். நான் அந்த வழிகளில் ஒவ்வொன்றிலும் நுழைந்து பார்த்தேன். ஒவ்வொன்றிலும் எவரோ ஒருவர் சென்று கொண்டிருந்தார். எந்த வழியும் காலியாக இருக்கவில்லை.

''அப்பொழுது நான் இறைவனை நோக்கி, இறைவ எம் பெரும! எவருமே நுழையாத, எவருமே நுழையத் துணியாத, என்னையும் உன்னையும் தவிர வேறொருவரும் இருக்காத ஒரு வழியை எனக்குக் காட்டியருள்வாயாக! என்று இறைஞ்சினேன். அவன் தன் தனிப்பெரும் கருணையினால், எனக்கு ஆன்மீக ஏக்கத்தின் வழியைக் காட்டி யருளினான்.

''அவ்வழியில் செல்ல விரும்பும் எவரும், வழியில் எதிர்ப்படும் துன்பங்களையும், துயரங்களையும், வேதனைகளையும் பொருட் படுத்தாது, முன்னேறிச் செல்ல வேண்டும். எவ்வித முணுமுணுப்பு மின்றி, இறைவனின் கட்டளைகளைச் சிரமேற்றாங்கிச் செயலாற்ற வேண்டும். அவன் தன்மீது சொரிந்து கொண்டிருக்கும் பேரருளை எப் பொழுதும் நினைவு கூர்ந்து அவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டிருக்க வேண்டும்.

''ஒருநாள் இறைவன் என்னை நோக்கி, 'அபுல் ஹஸனே! என் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பாயாக! நான் என்றென்றும் உயிரோடுள்ளவன். நீ எனக்குக் கீழ்ப்படிந்து நடப்பாயாயின், நான் உனக்கு நித்தியத்துவத்தை நல்குவேன். நான் தடுத்துள்ளவற்றை நீ நெருங்கவும் செய்யாதே'' என்று கூறினான்.

''இறைவன் தன் பேரொளியினால் பாயஸீத் (ரஹ்) அவர்களுக்கு அளித்த ஆன்மீகப் படித்தரத்தை விட, மேலான படித்தரத்தை எனக்கு வழங்கினான். பாயஸீத் (ரஹ்) அவர்களோ, 'நான் நிலைப்படுத்தப்படவுமில்லை, ஒரு பயணியாகவும் இல்லை'' என்று கூறினர். ஆனால் நானோ, இறைவனளவில் நிலைப்படுத்தப்பட்டுள்ளேன். இறைவனளவில் புனிதப் பயணத்தை மேற்கொண்டுள்ள பயணியாகவும் உள்ளேன்.

''இறைவன் என்னுடைய 'நான்' என்பதை அழித்து விட்டதனால், எனக்கு நரக பயமும் இல்லை, சுவன ஆசையும் இல்லை. இறைவன் எனக்கு அளித்த படித்தரத்தில், சுவன, நரக வாசிகள் அனைவரும் புகுவார்களாயின் அவர்கள் நாஸ்தி (ஃபனா) ஆகி விடுவார்கள்.

''நான் இறைவனை நோக்கி, ''இறைவ எம்பெருமா! நான் உனக்கு வழங்கும் காணிக்கையோ நிலையற்றது. ஆனால் நீ எனக்கு வழங்கும் அன்பளிப்போ, என்றென்றும் நிலைத்து நிற்பதாகும். நீ எனக்கு வழங்கும் அன்பளிப்போ 'நான்' என்பதாகும். நான் உனக்கு அளிக்கும் காணிக்கையோ 'நீ' என்பதாகும். நானோ அழியக் கூடியவன். நீயோ என்றென்றும் உள்ளவனல்லவா?

''இறைவ எம் பெருமா! 'நான்' என்பது அழிந்து, உன்னில் தரிபாடாகும் நிலையையே நான் எனக்கு விரும்புகிறேன்.

''உலகம், தன்னைத் தேடித் திரிபவனை விட்டும், வெருண்டோடுகிறது. நீயோ பேரருளாளன். உன்னை நோக்கி ஒருவன் தட்டுத் தடுமாறிக் கொண்டு வந்த போதினும், நீயோ அவனை நோக்கி விரைந்தோடி வருகிறாய்.

''இறைவ எம் பெருமா! நானோ உனக்கு எப்பொழுது பார்த்தாலும், வேதனையளித்துக் கொண்டுள்ளேன். ஆனால், நீயோ எனக்கு எப்பொழுது பார்த்தாலும், புதுப்புது அன்பளிப்புகளையும், ஆறுதல்களையும், வழங்கி வருகிறாய். என் பாவப்பட்டியலோ நீளமாக உள்ளது. என் வணக்கப் பட்டியலோ குறுகியதாக உள்ளது.

''சிலர் துறவறத்திலும், வேறு சிலர் புனிதப் பயணங்களிலும், மற்றும் சிலர் வணக்கத்திலும் மகிழ்ச்சியுறுகிறார்கள். ஆனால், நானோ

இவற்றிலெல்லாம் மகிழ்ச்சியுறவில்லை. உன்னில்தான், உன்னில் மட்டும்தான் மகிழ்ச்சியுறுகிறேன்.

''இறைவ! எம் பெரும! நானோ, உன்னுடைய தாழ்மையான படைப் பினங்களில் ஒன்றாவேன். என்னுடைய வணக்கமும், தியானமும், உன் கண் முன்னர் அற்பத்திலும் அற்பமானதாகும். ஆதரவற்ற ஒரு பலவீனமான படைப்பாகிய என்னை ஏற்று, எனக்கு அடைக்கலம் நல்குவாயாக!' என்று இறைஞ்சினேன்.

''அப்பொழுது இறைவன் என்னை நோக்கி, 'அபுல் ஹஸனே! 'அருட்கொடைகள் அனைத்தையும் நாம் உமக்கு அருளினோம்' என்று கூறினான். அது கேட்ட நான் ''இறைவனே! உனக்கும் எனக்கும் இடையில், கொடுத்தல், மறுத்தல் என்ற இறுதித் திரை இருப்பதையும், அகற்றி விடு. உனக்கும், உன்னைத் தன்னுடையவனாகக் கருதும் எனக்கும் இடையே திரை இருக்கக் கூடாது. உனக்கும் எனக்கும் இடையே ஒரு பிரிவினை குறுக்கிடக் கூடாது'' என்று இறைஞ்சினேன்' என இயம்பினார்கள்.

''மற்றொரு தடவை இறைவன் என்னை நோக்கி, ''அபுல் ஹஸனே! நீர் நம்முடையவராகி விட்டீர். நாம் உம்முடையவனாகி விட்டோம்' என்று கூறினான். அதற்கு நான் 'இறைவனே! அப்படியல்ல. நீயே எல்லாம் வல்ல எசமான். நானோ உன்னுடைய தாழ்மையான அடிமை' என்று கூறினேன். உண்மையில் ஒருவனுக்கு இறைவனின் அடிமை என்ற பட்டத்தைத் தவிர மேலான பட்டம் ஒன்று உண்டா?

''வேறொரு தடவை இறைவன் என்னை நோக்கி, ''உம் பங்குக்கு இம்மையிலும் மறுமையிலும் யாதொன்றும் இல்லை. நானே உம் பங்குக்கு ஆவேன்'' என்று கூறினான்.

''நான் உலகைத் துறந்ததிலிருந்து, நான் அதனை ஏறிட்டும் பார்க்கவில்லை. நான் இறைவனுடன் உரையாடியதிலிருந்து, மனிதர் களுடன் உரையாடுவதை நிறுத்தி விட்டேன். ஆனால் நான் பேசும் பேச்சை எல்லாம், மக்கள் நான் அவர்களிடம் பேசும் பேச்சாகவே கருதிக் கொண்டுள்ளார்கள். ஆனால் உண்மையில், அது நான் இறைவனிடம் பேசிய பேச்சேயாகும். நான் முப்பதாண்டுகளாக இரவில் உறங்கவே இல்லை.

''இறைவன் என்மீது ஒரு துளி ஏக்கத்தைச் சொரிந்தான். அதில் ஒரு துளி, இவ்வுலகின் மீது விழுந்திருப்பின், நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் ஏற்பட்ட பிரளயத்தை விடப் பெரும் பிரளயத்தை ஏற்படுத்தி இருக்கும்.

''இறைவனை மறந்து சுவன மரத்தின் கீழ் வசதியோடிருப்பதை விட, மண்ணகத்தில் ஒரு பட்ட மரத்தின் கீழ் இறை நினைவில் திளைத்துக் கொண்டிருப்பதைப் பற்றி நான் மகிழ்ச்சியுறுகிறேன்.

''இறைவனின் பேரருள் என்மீது சொரியப்பட்டதன் காரணமாக, நான் ஒவ்வொரு படைப்பினத் துடையவும் சென்ற கால, நிகழ்கால, வருங்கால நிகழ்ச்சிகள் அனைத்தையும் அறிவேன். இத்தகைய அறிவு வாய்க்கப் பெற்றிராதவன், ஒரு ஞானாசிரியனாக இருக்க இயலாது. உலகில் எந்த மூலையிலுள்ள ஒருவனின் காலில் முள் குத்தினால் கூட, அதனை நான் உணர்கிறேன். நுகர்கிறேன். அவன் யார் என்பதையும் எடுத்துரைப்பேன்.

''நான் நரகை நினைத்து அஞ்சவில்லை. சுவனத்தை எண்ணி ஆசை யுறவுமில்லை. நான் விரும்புவதெல்லாம் இறை தரிசனமாகிய 'லிகா' வைத்தான். அதுவே மேலான கஃபாவாகும்.

'இறைவன் நியாயத் தீர்ப்பு நாளின் போது, படைப்பினங்கள் செய்த அனைத்துப் பாவங்களைப் பற்றியும் என்னை விசாரித்து, அவற்றிற்கான தண்டனை அனைத்தையும் எனக்குத் தந்த போதினும், அவற்றை ஏற்றுக் கொள்ளத் தயாராயுள்ளேன். என் குறிக்கோளெல்லாம், அவை தண்டனை யிலிருந்து மீட்சிபெற வேண்டுமென்பதுதான்.

''உடலோ, நாவோ, இதயமோ என்னிடம் இல்லை. என்னிடம் இறைவன் மாத்திரமே உள்ளான்'' என்று கூறினர்.

மேலும் அவர்கள் தம் சீடர்களை நோக்கிப் பின்வருமாறு அறிவுரை பகர்ந்தார்கள்.

''இறைவன் ஒருவனுடன் நட்புறவாடுவதை மட்டும் விரும்புங்கள். படைப்பினங்களின் நட்பை விரும்ப வேண்டாம். அது 'கிள்ரு' ஆக இருந்தாலும் சரிதான். படைப்பினங்களின் நட்பை ஆசைப்படும் வண்ணம், இறை நட்பு தெவிட்டி விடுமா? என்ன? எல்லா நட்பையும் விட்டொழியுங்கள். அவனுடைய நட்பை மட்டுமே ஆசைப்படுங்கள்.

''இறைவனின் நட்புறவிலேயே வாழுங்கள். உலகின் நட்புறவை உதறித்தள்ளுங்கள். ஏனெனில், ஒருவன் தன் நண்பனோடு தான் உறவு கொண்டிருக்க வேண்டும். இறைவனைத் தவிர மேலான நண்பன் ஒருவனுமில்லை.

உலகைத் தேடுகின்றவர்கள் உலகிற்கு அடிமையாகி விடுகிறார்கள். உலகைத் துறப்பவர்களுக்கோ உலகம் அடிமையாகி விடுகிறது.

இறைக் காதலால் ஏங்கித் தவிக்கும் இதயமே, மேலான இதயமாகும்.

''எவர்களின் இதயம் இறை காதலால் எரிந்து சாம்பலாகி விடுகிறதோ அவர்களை இறைவன் தன் அருள் நேசத்தால் ஆட்கொள்கிறான்.

''எவர்கள் இறை காதலால் எரிந்து கொண்டிருக்கிறார்களோ, இறை ஏக்கத்தில் எவர்கள் மூழ்கிக் கொண்டருக்கிறார்களோ, அவர்களைத் தேடி அலைந்து கண்டு பிடித்து, அவர்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

''ஒருவனுக்கு இறைநேசர்களின் தொடர்பு கிடைப்பது, அவனுக்கு இறைவன் அளிக்கும் மிகப்பெரும் அருட்கொடையாகும்.

''இறைவனுக்கும் நபிமார்களுக்கும் இடையில் நடக்கும் பேச்சு வார்த்தைகளில், ஒரு சிறு துளி உலகிற்குத் தெரிய வந்த போதினும், அனைத்துப் படைப்புகளும் எரிந்து சாம்பலாகி விடும். ஆனால் நபிமார்கள், அப்பொழுது இறைவனின் அண்மையில் இருப்பதால், அவர்களால் அவற்றைத் தாங்கிக் கொள்ள இயல்கிறது. இறைவன் அப் பொழுது அவர்களின் அண்மையில் இருக்காவிட்டால் அந்த நபிமார் களின் உடலுறுப்புகள் அனைத்தும் பஞ்சு பஞ்சாகப் பறக்கடிக்கப்பட்டு விடும்.

''இறைவனின் அன்பிற்குகந்த நல்லடியார்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் இறைவனின் திருப்பெயரைச் சொல்லி, அவனை அழைக்கும் பொழுது, பறவைகளும், விலங்கினங்களும், அப்படி அப்படியே அமைதியாக நின்று விடுகின்றன. விண்ணிலே உள்ள அமரர்கள் நடுங்குகிறார்கள். விண்ணகம் முழுவதும் ஒளிமயமாகத் திகழ்கிறது. உலகம் நடு நடுங்குகிறது.

''இறைவனின் பாதையில், இறைவனின் உதவியின்றி ஓரடி கூட எடுத்து வைக்க இயலாது. ஒருவன் இறை உதவியின்றி, தன் முயற்சி யாலும், ஆற்றலாலும் ஒரு போதும் வெற்றியடைய இயலாது. இறைவன் வழிகாட்டும் பொழுது பாதை சுருங்கி விடுகிறது.

''இறைக்காதலால் ஏங்கிக் கொண்டிருக்கும் இதயமே மேலான தாகும். எவனுடைய இதயத்தில் இறைக் காதலன்றி வேறொன்று இடம் பெற்றுள்ளதோ, அவன் எவ்வளவுதான், தன்னடக்கத்துடன் இருந்து இறைவனை வணங்கிக் கொண்டிருந்த போதினும், அவன் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டான். அவனின் இதயம் இறந்த தன்மை யுடையதே ஆகும்.

''ஒரு தர்வேஷ், இவ்வுலகத்தின் மீதோ, மறு உலகத்தின் மீதோ, தன் பார்வையை செலுத்த மாட்டான். அவன் சுவனத்தின் மீதும், தன் கவனத்தைச் செலுத்த மாட்டான். அவன் அவ்விதம் செலுத்தின் இறையருள் அவன் மீது பொழியப் படுவது நிறுத்தப்படும்.

''ஒருவனில் 'நான்' என்பது அழிந்த பின்னரே, அவனுக்கு இறை சந்திப்பு கிடைக்கிறது.

''உலகைத் தவிர்ந்து கொள்வதற்காக, நீங்கள் உலகை விட்டும் வெருண்டோடின், அதுவே மேலான வணக்கமாகும்.

''இறைவனுடன் ஒரு நிமிடம் கழிப்பது, உலகிற்குவாணாள் முழுவதும் ஊழியம் புரிவதை விட மேலானதாகும்.

''இறைவனுக்கு நீங்கள், உங்களின் ஒன்றுமிலாத் தன்மையை, அதாவது ஆற்றாமையை வெளிப்படுத்தின், அவன் உங்களுக்குத் தன்னுடைய அனைத்தையும் வழங்குவான்.

''நீங்கள் ஒவ்வொரு நாளும் ஆயிரம் தடவை செத்துச் செத்துப் பிழைப்பீர்களானால், நீங்கள் இறப்பில்லா பெரு வாழ்வை எய்தப் பெறுவீர்கள்.

'அற்புதங்கள் ஆற்றுவது, இறை வழியில் உள்ள ஆயிரம் படித்தரங் களில் முதல் படித்தரமாகும்.

''தனக்கு ஆன்மீக வெளிச்சம் கிடைத்து விட்டது என்று பறையடித்துக் கொண்டிருப்பவன், உண்மையில் ஆன்மீக வெளிச்சம் எய்தப்பெறாது தனக்கே தான் திரையிட்டுக் கொண்டான்.

''நீங்கள் உங்களின் வாணாளில் எப்பொழுதேனும் ஒரு தடவை இறைவனை வருத்தமுறச் செய்திருப்பின், அதற்காக உங்களின் வாணாள் முழுவதும் வருந்தி, அவனிடம் பாவ மன்னிப்புக் கோரிக் கொண்டிருக்க வேண்டும். அவன் தன் பேரருளினால் உங்களை மன்னித்த போதினும், அவனுடைய கட்டளைகளை ஒழுங்காகப் பின்பற்றாது, அவனை வருத்த முறச் செய்ததற்காக, நீங்கள் வருத்தமுறுவதை நிறுத்திவிடக் கூடாது.

''நீங்கள் இறப்பெய்துமுன் மூன்று விஷயங்களை எய்தப் பெற முயல வேண்டும்.

1) இறைக் காதலில் மூழ்கி, அதிகமதிகமாக அழுங்கள். உங்களின் கண்களிலிருந்து இரத்தம் வரும் வரை அழுங்கள்.

2) உங்களுடைய சிறுநீர் இரத்தமாக வரும் வரை, உங்களுடைய இதயத்தை இறையச்சம் ஆட்கொள்ளட்டும்.

3) உங்களுடைய உடல் இளைத்துப் பலவீனமாகும் வரை, இரவெல்லாம் விழித்து இறைவனை வணங்குங்கள்.

இவ்வாறு அறபோதம் நல்கிய அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''எல்லாவற்றிலும் மேலான பொருள் என்ன? ' என்று வினவினர். அதற்கு அவர்கள் ''தெரியாது'' என்று கூற, அவர்கள், ''அல்லாஹ்வுக்கு அஞ்சி, இறப்பெய்துவதும், பாவம் செய்யாத நாளும் தான்'' என்று எடுத் துரைத்தார்கள்''

''தாங்கள் இறப்பிற்கு அஞ்சுகின்றீர்களா?'' என்று மக்கள் அவர்களிடம் வினவியபொழுது, ''இறந்தவனுக்கு இறப்புப் பற்றி என்ன பயமுள்ளது?'' என்று அவர்கள் பதிலிறுத்தார்கள்.

மேலும் அவர்கள் ''நான் இறைவனை நோக்கி, 'இறைவ எம்பெரும! நான் கடந்த அறுபது ஆண்டுகளாக உன்னை நேசித்துக் கொண்டும் உன்னைச் சந்திக்க அவாவுற்ற வண்ணமும் உள்ளேன்'' என்று கூறினேன்.

அதற்கு இறைவன், ''அபுல் ஹஸனே! நான் படைப்புகளைப் படைக்கத் துவங்கிய நாள் தொடுத்து இதுவரை உம்மை நேசித்துக் கொண்டும் உம் வரவை எதிர்பார்த்துக் கொண்டுமல்லவோ உள்ளேன்' என்று மறுமொழி பகர்ந்தான்'' எனக் கூறி இந்நிலையில் தாம் இறப்பிற்கு ஏன் அஞ்ச வேண்டும் என்று வினவாமல் வினவினார்கள்.

இதன்பின் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, ''நான் இறப்பின், என்னை முப்பது அடி ஆழமாகத் தோண்டி அடக்கம் செய்யுங்கள். ஏனெனில் இவ்வூர், பிஸ்தாம் என்ற ஊருக்கு உயரமாக உள்ள மேட்டுப் பாங்கான நிலத்தில் அமைந்தள்ளது. எனவே என்னை மேலேயே அடக்கம் செய்துவிட்டால், பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களுக்கு மரியாதைக் குறைவு செய்ததாகிவிடும்'' என்று கூறினர். அவர்கள் இறப்பெய்தியதும், அவர்கள் அவ்வாறே அடக்கம் செய்யப்பட்டார்கள்.

அவர்கள் உயிரோடிருக்குங்கால், தம்மாணவர் முஹம்மது இப்னு ஹஸனிடம், தாம் அவரின் இறப்பு வேளையில், அவரின் அருகில் இருப்பதாகக் கூறி இருந்தார்கள். ஆனால் அவர்களோ, முஹம்மது இப்னு ஹஸன் இறப்பதற்கு முன் இறந்து விட்டார்கள். இது முஹம்மது இப்னு ஹஸனுக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது. ஆனால் அவரின் இறப்பு, வேளையில், தம் ஆசான் தம் அருகே வந்தமர்ந்து, தமக்கு ஆறுதல் கூறியதைக் கண்டதும், 'இதோ என் ஆசான் வந்துவிட்டார்கள். இதோ எனக்கு ஆறுதல் கூறிக் கொண்டுள்ளார்கள்'' என்று மகிழ்ச்சி மொழி கூறிக் கலிமாவுடன் உயிர் நீத்தார் அவர் என்று கூறப்படுகிறது.

## 23. அபூ ஸயீது (ரஹ்)

'சனிக்கிழமை புலர்ந்ததும், ஷைகு அவர்களும், அவர்களின் சீடர்களும், நீஷாப்பூரின் கடைவீதியில் தூக்கலிடப்பட வேண்டும்' என்று தீர்ப்பு வெளிவந்ததும், நீஷாப்பூர் நகரமே அல்லோகல்லோலப்பட்டது. ஷைகு அவர்களின் சீடர்களோ யாது செய்வதென அறியாது கல்லாய்ச் சமைந்து, கான்காஹ்வில் வீற்றிருந்தார்கள். எதிரிகளோ மகிழ்ச்சி ஒலி முழக்கி, வீதிகளில் வலம் வந்து கொண்டிருந்தார்கள். ஷைகு அவர்களுக்கு இத்தகு தண்டனை விதிக்கப்படக் காரணம் என்ன? அவர்கள் அத்தகு தண்டனை விதிக்கப்படும் வண்ணம், ஏதேனும் தவறிழைத்தார்களா, என்றால் இல்லை.

மைஹானாவிலிருந்து நீஷாப்பூர் வந்து சேர்ந்த ஷைகு அவர்களுக்கு, அங்கு வாழ்ந்து வந்த சூஃபிகளும், தர்வேஷ்களும் மகத்தான வரவேற்பு நல்கினர். அங்கு வாழ்ந்து வந்த காஜா மஹ்மூது முரீத் என்ற செல்வர், ஷைகு அவர்களையும், அவர்களின் குழுவினரையும், அகமலர, முகமலர வரவேற்று, அங்கு ஜமுக்காளம் நெய்பவர் வாழ் வீதியிலிருந்த, அபூ அலீ தராசூசி (ரஹ்) அவர்களின் தவமடத்தில் தங்கவைத்தார். அங்கேயே அவர்கள் நீஷாப்பூரில் வாழ்ந்து வந்த காலம் முழுவதும் தங்கித் தவ வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

அங்கு அவர்கள் ஆற்றிய பேருரைகளும், பிறரின் உள்ளத்திலுள்ளதை அனுவத்தனையும் பிசகின்றி எடுத்துரைத்த பாங்கும், மக்களை வெள்ளம் போன்று திரண்டு வந்து, அவர்களின் பாதங்களில் பொன்னையும், மணியையும் குவிக்குமாறு செய்தன. இது அவர்கள் மீது சிலருக்குப் பொறாமையையும், வேறு சிலருக்கு ஐயத்தையும் உண்டு பண்ணியது.*

---

* இதைப்பற்றி அவர்கள் கூறும் பொழுது "ஒரு பகுதியைச் சேர்ந்த நாய், மற்றொரு பகுதிக்குச் செல்லின், அங்குள்ள நாய்கள் அதனை சும்மா விடுமா? அது போன்றே இதுவும்" என்று அவர்கள் கூறினர்.

நீஷாப்பூரிலே ஹஸன் முஅத்திப் என்ற ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு சூஃபிகளைக் கண்டாலே பிடிக்காது. ரைஹானாவிலிருந்து ஒரு சூஃபி வந்து, ஜமக்காளம் நெய்பவர்களின் வீதியில் மார்க்கச் சொற்பொழிவு நிகழ்த்துகின்றார் என்றும், மற்றவர்களின் உள்ளங்களை, உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துரைக்கின்றார் என்றும் கேள்வி யுற்றதும், ''சூஃபிகளுக்கு மார்க்கம் பற்றிப் பேச என்ன தெரியும்? மறை வான விஷயங்களைப் பற்றிக் கூற இவருக்கு எங்கிருந்து 'வஹீ' வந்ததோ, தெரியவில்லையே'' என்று இழிவாக எண்ணினார்.

எனினும் அவர்களை நேரில் சோதித்து அறிய வேண்டுமென்ற எண்ணத்துடன், கம்பீரமான உடையும், அழகிய தபரீ தலைப்பாகையும் அணிந்து, அவர்களைச் சந்திக்கச் சென்றார். அப்பொழுது ஷைகு அவர்கள் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார்கள்.

சொற்பொழிவாற்றி முடிந்ததும், ஷைகு அவர்கள், குழுமியிருந்த மக்களை நோக்கி, ''தர்வேஷ்களுக்கு ஏதேனும் துணிமணிகள் தர விரும்புவோர் தரலாம்'' என்று கூறினர். அப்பொழுது ஆங்கிருந்த சிலர், தங்களிடமிருந்த துணிமணிகளைக் கொடுத்தனர். அவற்றைப் பெற்றுக் கொண்ட ஷைகு அவர்கள், ''எவரேனும் தலைப்பாகை தந்தால் நலமா யிருக்கும்'' என்று கூறினர்.

ஹஸன் முஅத்திபுக்குத் தாம் அணிந்திருந்த தபரீ தலைப்பாகையைக் கழற்றிக் கொடுக்கலாமா என்ற எண்ணம் ஏற்பட்டது. அடுத்த கணம் 'வேண்டாம்; அது அமுல் நகரிலிருந்து ஒரு நண்பரால் வாங்கி வந்து அன்பளிப்புச் செய்யப்பட்டதாயிற்றே. அதன் விலை பத்து தீனார் ஆயிற்றே' என்ற எண்ணம் மிகைக்கவே வெறுமனே இருந்துவிட்டார்.

மீண்டும் ஷைகு அவர்கள், அதே வேண்டுகோளைவிடுக்க, மீண்டும் அதனைக் கழற்றிக் கொடுக்க எண்ணினார். மீண்டும் முன்புபோல் எண்ணிக் கொண்டு வெறுமனே இருந்து விட்டார்.

இப்பொழுது ஹஸன் முஅத்திபின் அருகில் வீற்றிருந்த ஒரு வயோதிகர், ''ஷைகு அவர்களே! இறைவன் தன்னுடைய படைப்பு களிடம், எதையும் விரும்பி வாதாடுவானா? வேண்டுகோள் விடுப் பானா?'' என்று வினவினார்.

''ஆம்; வாதாடுவான் தான். ஆனால் ஒரு தபரீ தலைப்பாகைக்காக வேண்டி, இரண்டு தடவைகளுக்குமேல் வாதாட மாட்டான். தங்களின் அருகே வீற்றிருக்கும் மனிதரிடம், அவருடைய தலைப்பாகையைக் கழற்றி தர்வேஷ்களுக்கு தானம் வழங்குமாறு இரண்டு முறை பரிந்துரைத்தான். ஆனால், அதுவோ அமுல் நகரிலிருந்து ஒரு நண்பரால்

வாங்கி வரப்பெற்றுத் தமக்கு அன்பளிப்புச் செய்யப்பட்டதென்றும், அதன் விலை பத்து தீனார் என்றும் கூறி, அதனைத் தானம் செய்ய அவர் மறுத்துவிட்டார்'' என்று கூறினர்.

அதுகேட்டதும் ஹஸன் முஅத்திபுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு அளவில்லை. அவருடைய உள்ளமும் உடலும் ஒருங்கு சேர்ந்து அதிர்ந்தன. நடுக்கத்துடன் ஷைகு அவர்களை அணுகி, அவர்களின் பாதார விந்தங்களைத் தொட்டு முத்தமிட்டு தம்முடைய தலைப்பாகையை மட்டுமின்றி, தாம் அணிந்திருந்த விலையுயர்ந்த உடைகளையும் கழற்றி அவர்களின் தாளடியில் வைத்தார். இம்மட்டோடு நில்லாது, தம் இல்லம் சென்று, தம் சொத்துக்கள் அனைத்தையும் கொண்டு வந்து ஷைகு அவர்களின் பாதங்களில் குவித்து, அவர்களின் சீடர்களில், ஊழியர்களில் ஒருவராக ஆகிவிட்டார்.

இவ்வாறு அவர்களைப் பற்றி ஐயமுற்றோர், அவர்களை வந்து பார்த்ததும், மனமாறுதல் பெற்று, அவர்களின் தாசானுதாசர்களாயினர். ஆனால் பொறாமைப்பட்டவர்களோ, அவர்களின் பேரையும், புகழையும் பற்றிக் கேள்வியுற்றுப் புழுங்கி அவர்களை ஒழித்துக்கட்ட வெளியிலிருந்து சதி செய்து கொண்டிருந்தார்கள். அவர்களின் அணிக்குத் தலைமை தாங்கியவர்கள், அங்கு வாழ்ந்து வந்த கர்ரமிகளின் தலைவர், உஸ்தாது அபூபக்ர் இஸ்ஹாக் கர்ரமியும், ஷாஃபிகளின் தலைவர் காஜி ஸயீது என்பவரும் ஆவர். அவர்கள் இருவரும் ஒருங்கு சேர்ந்து, கஸ்னாவிலிருந்த சுல்தானுக்குப் பின்வருமாறு மடல் தீட்டினர்:

''மைஹானாவிலிருந்து இங்கு வந்த ஒருவர், தம்மை ஸூஃபி எனக் கூறிக் கொண்டு மக்களை வழிகெடுக்கிறார். அவர் சொற்பொழிவாற்றுகின்றார். ஆனால் அந்தச் சொற்பொழிவுகளில், கவிதைகளை அள்ளிச் சொரிகிறாரேயொழிய அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஹதீதுகளிருந்து, ஒரு ஹதீதையேனும் மேற்கோளாகக் காட்டுகின்றாரில்லை. ஆடம்பரமான விருந்துகள் நடத்துகிறார். அவற்றில், அவரின் ஆணையின் மீது இசை பொழியப்படுகிறது. அந்த இசையில் சொக்கி இளைஞர்கள் ஆடுகிறார்கள். இனிய திண்பண்டங்களையும், பொறித்த கோழிகளையும், வகை வகையான பழங்களையும், கனிவர்க்கங்களையும் வயிறார உண்டு, மகிழ்ச்சியில் மூழ்கித் திளைக்கிறார்கள். அவர் தம்மை ஒரு துறவி என்று கூறிக் கொள்கிறார். ஆனால், அவரைப் பார்த்தாலோ ஒரு துறவியாகவும் தெரியவில்லை. ஒரு ஸூஃபியாகவும் தெரியவில்லை. மக்கள் அவரின் பேச்சுக்களாலும், விருந்துகளாலும் ஈர்க்கப்பட்டு தேனை, ஈ மொய்ப்பது போன்று அவரை மொய்த்து நிற்கின்றனர். இந்நிலை உடனடியாக நிறுத்தப்பட வேண்டும். இல்லையெனில் இது மாபெரும் விபரீதத்தில் கொண்டு போய்விடும் என்று நாங்கள் அஞ்சுகின்றோம்.''

இந்த விண்ணப்பத்தின் மீது சுல்தான் இட்ட ஆணை ''ஷாஃபி மத்ஹபுடையவும், ஹனஃபி மத்ஹபுடையவும் தலைவர்கள் ஒருங்கு கூடி, இதுபற்றி விசாரித்து, மார்க்கப்படி என்ன தீர்ப்பு வழங்கப் பெற வேண்டுமோ, அந்தத் தீர்ப்பினை வழங்கவும்.''

இந்த ஆணை அவர்களுக்கு வியாழன் அன்று கிடைத்தது. மறுகணமே அவர்கள் இருவரும், கூட்டத்தைக் கூட்டி ஷைகு அவர் களையும், அவர்களின் சீடர்களையும் சனியன்று தூக்கிலிட வேண்டு மென்று தீர்ப்பு வழங்கினார்கள்.

இச்செய்தியை ஷைகு அவர்களின் சீடர்களோ, நண்பர்களோ, ஷைகு அவர்களிடம் தெரிவிக்கவில்லை. ஏனெனில், வெளி நடப்புகளைத் தம்மிடம் வந்து எவரும் தெரிவிப்பதை அவர்கள் விரும்புவதில்லை. அனைத்தையும் அவர்கள் தம் உள்ளுணர்வால் விளங்கி வந்தார்கள்.

அன்று சாயுங்காலம் அஸர் தொழுகை தொழுது முடிந்ததும், அவர் கள் தம் பிரதம சீடர் ஹஸன் முஅத்திபை அருகழைத்து ''கான்காஹ்வில் எத்தனை பேர் இருக்கின்றனர்?'' என்று வினவினர். ''இங்கே தங்கி இருப்பவர் நாற்பதின்மர். பயணி (முஸாஃபிர்)கள் ஒரு நூற்று இருபத் தெட்டுப் பேர். ஆக மொத்தம் ஒரு நூற்று அறுபத்தெட்டுப் பேர் உள்ளனர்' என்று பதில் கூறினர் ஹஸன். ''சரி; நாளைக்கு ஜும்ஆவுடைய நாளல்லவா? அவர்களுக்கு என்ன உணவளிக்க நாடியுள்ளீர்?'' என்று வின வினர் ஷைகு. ''ஷைகு அவர்கள் பணிக்கும் வண்ணம் செய்கிறேன்'' என்று வினயமாக விடையிறுத்தார் ஹஸன்.

''நல்லது; நான் கூறுகின்றபடி செய்யும். புகைபோட அகிற்கட்டை களும், தெளித்துக் கொள்ள நயம்பன்னீரும், விரிப்பதற்குத் தூய வெண்ணிற விரிப்புகளும் வாங்கிவையும். ஒவ்வொருவருக்கும் உணவுடன் ஒரு பொறித்த ஆட்டுத்தலையும், அதிலுள்ள மூளை மீது தூவிக் கொள்ள, கற்கண்டின் பொடியும் வைப்பீராக! அத்துடன் ஒவ்வொருவருக்கும் ஓர் இராத்தல் கிலாஃபத்தி மிட்டாய்களும் வைக்கவும். இவற்றையெல்லாம் நாளை ஜும்ஆ தொழுவதற்குமுன் உண்பதற்கு ஏற்ற வண்ணம் முற்கூட்டியே செய்து ஜாமிஆ மஸ்ஜிதின் முன்பாகப் பரத்திவையும். என்னைக் காணாவிடத்து என்னைக் குறை கூறித்திரிபவர்கள் இறைவன் தன் நல்லடியார்களுக்கு மறைவான இடத்திலிருந்து அளிக்கும் இரணத்தைப் பார்க்கட்டும்' என்று கூறினர் ஷைகு.

''சரி'' என்றார் ஹஸன். ஆனால் அவருடைய கையிலோ அரைக்காசு மில்லை. கான்காஹ்விலும் ஒரு தானிய மணிகூட இல்லை. மார்க்க விற்பன்னர்களின் தீர்ப்பைக் கேட்டு ஷைகு அவர்கள் மீது, மக்கள்

கொண்டிருந்த நம்பிக்கை கலகலத்துப் போயிருந்தது. இந்நிலையில் என்ன செய்வதென்றே விளங்கவில்லை அவருக்கு. திக்பிரமை பிடித்தவர்களாய் கான்காஹ்விலிருந்து வெளியே வந்து, அவர் நடுத்தெருவில் நின்று கொண்டிருந்தார்.

இப்பொழுது பொழுதும்பட்டது. வணிகர்கள் தங்களின் வணிக நிலையங்களை மூடிவிட்டு இல்லம் சென்று கொண்டிருந்தார்கள். இக்காலை தம் இல்லத்திற்கு விரைந்து சென்று கொண்டிருந்த ஓர் இளவல், நடுத்தெருவில் ஏக்கத்துடன் ஹஸன் நின்று கொண்டிருப்பதைக் கண்டதும், ''ஹஸன்! ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறீர்?'' என்று வினவினார்.

ஹஸன் நிலைமையை அவரிடம் எடுத்துரைத்ததும் ''இதற்காக ஏன் கவலைப்படுகிறீர்? என் சட்டைப் பைக்குள் கையை விட்டு உமக்கு வேண்டியதை எடுத்து ஆவன செய்யும்'' என்று கூறினார். அவ்விதமே அவரின் சட்டைப்பைக்குள் தம் கையை விட்டுக் கைநிறையப் பொற்காசுகளை எடுத்தார் ஹஸன். அவருடைய முகம் மலர்ந்தது. ''நல்லது; அவற்றைக் கொண்டு ஷைகு இட்ட பணியைச் செய்யும்'' என்று கூறிவிட்டு, விறுவிறுவென இல்லம் சென்றார் அவ் இளவல். அவரின் சட்டைப் பையிலிருந்து ஹஸன் எடுத்த பொற்காசுகள், ஷைகு கூறிய பொருள்களை வாங்குவதற்குச் சரியாக இருந்தது. ஒரு காசு மிச்சமாகவோ, ஒரு காசு பற்றாமலோ இருக்கவில்லை.

அடுத்த நாள் ஜும்ஆ தொழுகைக்கு ஷைகு அவர்கள் தம் மாணவர் புடை சூழப் பள்ளிவாயிலுக்கு வந்தனர்.

தொழுமுன் பள்ளிவாயிலின் முன்னால் விரிக்கப்பட்டிருந்த விரிப்பில் அமர்ந்து, தம் மாணவர்களுடன் விருந்துண்டனர். பொது மக்களுக்கு இது பெரும் வேடிக்கையாக இருந்தது.

இச்செய்தி காஜி ஸயீதின் செவிப்பட்டதும் ''அப்படியா! அவர்கள் இன்று பொறித்த ஆட்டுத்தலை தின்னுகிறார்களா? தின்னட்டும்; தின்னட்டும். வயிறு புடைக்கத் தின்னட்டும். நாளை அவர்களின் தலைகளைக் காட்டான்களும், கழுகுகளும் தின்னத்தான் போகின்றன. நாமும் பார்க்கத்தான் போகின்றோம்'' என்று ஏளனத்துடன் கூறினார். அபூபக்ர் கர்ரமிய்யோ, ''இன்று அவர்கள் தம் வயிறு கொழுக்கத் தின்னட்டும். நாளை அவர்களின் உடல்கள் தூக்கு மரங்களைக் கொழுக்க வைக்கப் போவதைப் பார்க்கத் தான் போகிறோம்'' என்று வெஞ்சத்துடன் கூறினார். இதனையறிந்ததும் ஷைகு அவர்களின் சீடர்களுக்கு, ஏற்பட்ட திடுக்கத்திற்கும், திகிலுக்கும் அளவில்லை.

ஆனால் ஷைகு அவர்களோ இவற்றை ஒன்றும் அறியாதவர் போல் ஹஸனை நோக்கி, ''இன்று நாம் காஜி ஸயீதுக்குப் பின்னால் நின்று தொழுவோம். எனவே நம் தொழுகை விரிப்புகளை எடுத்துச் சென்று முன் வரிசைகளில் விரித்து வையும்'' என்றனர். அவ்வாறே அவர் இருபது தொழுகை விரிப்புகளை எடுத்துச் சென்று, முதல் இரண்டு வரிசைகளில் விரித்து வைத்தார். வேறு விரிப்புகளை விரிக்க அங்கு இடமில்லை.

அன்று காஜி ஸயீத் குத்பாப் பேருரை நிகழ்த்தினார். அதிலே விரோதமும் குரோதமும் தொனித்தன. பின்னர் தொழ வைத்தார். அவரின் பின்னே நின்று தொழுத ஷைகு அவர்கள், அவர் 'ஸலாம்' கொடுத்ததும் 'சுன்னத்' தொழுகை கூடத் தொழாது, வெளியே செல்கிறாரே என்று எண்ணியவராய், ஷைகு அவர்களை ஏறிட்டுப் பார்த்தார்கள். ஆனால் காஜி ஸயீதால் அப்பார்வையைத் தாங்கிக்கொள்ள இயல வில்லை. அவருடைய தலை அவரே அறியாமல் கீழே குனிந்தது.

தம் தவமடத்தை அடைந்த ஷைகு அவர்கள், தம் தலை மாணவர் ஹஸன் முஅத்திபை நோக்கி, ''ஹஸன்! நீர் இப்பொழுது கிர்மானி கடைத் தெரு செல்லும். அங்கு ஒருவன் வெள்ளை எள்ளும், பிஸ்தாப் பருப்பும் சேர்த்து செய்யப்பட்ட பண்ணியம் விற்றுக் கொண்டுள்ளான். அதில் பத்து இராத்தல் வாங்கிக் கொள்ளும். அடுத்து ஒருவன் உயர்ந்த கொடி முந்திரிப் பழங்கள் விற்றுக் கொண்டுள்ளான். அவற்றில் பத்து இராத்தல் வாங்கி அப்பழங்களைச் சுத்தம் செய்து கொள்ளும். பின்னர் அவற்றைத் தனித்தனியே இரண்டு வெள்ளைத் துணிகளில் கட்டித் தலைமீது சுமந்து உஸ்தாது அபூபக்ர் இஸ்ஹாக் கர்ரமியின் இல்லம் சென்று அவரிடம் கொடுத்து, அவற்றைக் கொண்டு அவர் இன்று நோன்பு திறக்க வேண்டும் என்று நான் வேண்டிக் கொண்டதாகக் கூறிவிட்டு வாரும்'' என்று சொன்னார்கள், அவ்விதமே செய்தார் ஹஸன். அப்பொழுது உஸ்தாது அபூ பக்ர் இஸ்ஹாக் கர்ரமிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

சற்று நேரம் வாயடைத்து நின்றிருந்த உஸ்தாது, ஹஸனை அமரச் சொல்லிவிட்டு, தம் ஊழியர் அபுல் காசிமை அழைத்தார். அபுல் காசிம் வந்ததும், 'அபுல் காசிம்! நீ காஜி ஸயீதின் இல்லம் சென்று, அந்த ஷைகையும் அவரின் சீடர்களையும் நாளைத் தூக்கிலிடுவதற்கு நான் ஆதரவு தர இயலாது என்பதை அவரிடம் தெளிவாகக் கூறிவிட்டு வாரும். காரணம் வினவின் நான் இன்று நோன்பு நோற்றது எனக்கும் என்னைப் படைத்த இறைவனுக்குமே தவிர வேறு எவருக்கும் தெரியாது. இன்று நான் ஜும்ஆத் தொழப் பள்ளி வாயிலுக்குச் செல்லும் பொழுது, கிர்மானி கடைத்தெருவில் அருமை அருமையான பண்ணியங்கள் அழகழகாக அடுக்கி வைக்கப்பட்டிருப்பதைக் கண்ணுற்றேன். இரண்டையும் வாங்கி

வரச்செய்து நோன்பு திறந்தபின் ஒன்று சேர்ந்து உண்டால் மிகவும் ருசிகரமாக இருக்கும் என்று எண்ணினேன். ஆனால், பின்னர் அதனை மறந்து விட்டேன். ஆனால் அந்த ஷைகோ நான் எண்ணியதையும், நான் நோன்பு நோற்றிருப்பதையும், தம் உள்ளுணர்வால் உணர்ந்து, அவற்றை எனக்காக வாங்கி, நான் நோன்பு திறந்தபின் உண்ண வேண்டுமென்று கூறி அனுப்பியுள்ளார். இத்தகு மாண்பாளரைத் தூக்கிலிடுவதென்பது, எண்ணிப்பார்க்கக் கூட இயலாத மாபெரும் குற்றம். இதற்கு உடந்தையாக நான் ஒருபோதும் இருக்க மாட்டேன் என்று அவரிடம் நான் சொன்னதாக ஒளிவு மறைவின்றிக் கூறிவிட்டு வா'' என்று பணித்தார்.

அபுல்காசிம், காஜி சாஹிபை அணுகித் தம் எசமானர் கூறிய செய்தியை எடுத்துரைத்ததும், ''நானே இச்செய்தியை அவருக்குச் சொல்லியனுப்பலாமென்று எண்ணியிருந்தேன். நல்ல வேளையாக நீரே வந்து விட்டீர். இன்று அந்த ஷைகு, என் பின்னே நின்று தொழுது விட்டு, 'சுன்னத்' தொழுகை தொழாது விருட்டென எழுந்து செல்வதைப் பார்த்ததும், 'இதுதான் ஸூஃபிகளின் அழகோ?' என்று அவரை இழித்துரைக்கலாமென்று அவரை ஏறிட்டுப் பார்த்தேன். அவரும் என்னை ஏறிட்டுப் பார்த்தார். ஆனால், அவரின் பார்வையை என்னால் தாங்க இயலவில்லை. ஒரு விதத் திடுக்கம் என்னை ஆட்கொண்டது. வல்லூறு முன் எதிர்ப்பட்ட வானம்பாடியின் நிலை போன்று என் நிலை ஆனது. நான் பேச முயன்றேன். ஆனால் ஒரு வார்த்தை கூட என்னால் பேச இயலவில்லை. இன்று தான் நான் அவரின் மாண்பினையும், ஆற்றலையும் உணர்ந்தேன். எனக்கும் அவருக்கும் இடையில் எத்தகைய தகராறும் கிடையாது. சுல்தான் அவரை விசாரித்துத் தண்டனையளிக்குமாறு ஆணையிட்டா ரென்றால், அதற்கு முழு முதற் பொறுப்பாளர் உம்முடைய எசமானரே யாவார். நான் அவருக்கு ஆதரவாக நின்றேனேயன்றி வேறில்லை. இதனை உன் எசமானரிடம் தெளிவாகக் கூறிவிடும்'' என்று கூறினார்.

இச்செய்தியை அபுல் காசிம் வந்து தம் எசமானரிடம் கூறியதும் அவர் ஹஸனை நோக்கி, ''உம்முடைய ஷைகு வென்று விட்டார். அவர் அனுப்பி வைத்த பத்து இராத்தல் பண்ணியங்களும், பத்து இராத்தல் உலர்ந்த கொடி முந்திரிப் பழங்களும், அபூபக்ர் இஸ்ஹாக் கர்ரமியின் இருபதாயிரம் சீடர்களையும், காஜி ஸயீதின் முப்பதாயிரம் சீடர் களையும், சுல்தானின் ஓரிலட்சம் படைவீரர்களையும், எழுநூற்றைம்பது யானைகளையும், முறியடித்து சின்னா பின்னப்படுத்திச் சிதறியோடச் செய்து விட்டன என்று நான் கூறியதாக அவரிடம் போய்க் கூறும். எனவே நாங்கள் எங்களின் வழியைப் பின்பற்றிச் செல்வது போன்று, அவரும் அவருடைய வழியைப் பின்பற்றிச் செல்ல அவருக்கு அனைத்து உரிமையும் உண்டு என்று கூறிவிடும்'' என்று சொல்லி அனுப்பினார்.

இச்செய்தியை ஹஸன் வந்து தம் ஷைகிடம் கூறியதும் அவர்கள் தம் சீடர்களின் பக்கல் திரும்பி, ''தூக்கு மரம் உங்களின் குருதியால் சிவப்பு நிறமாக்கப்படும் என்று நேற்றிலிருந்து நடுங்கிக் கொண்டிருந்தீர்கள். ஆனால், அத்தகு பேறு மேலை நாடு, கீழை நாடு ஆகியவற்றின் மாபெரும் ஆத்ம ஞானியாகிய ஹுஸைன் மன்சூர் ஹல்லாஜுக்குரியதாகும். வீரர்களின் செந்நீரைத் தூக்கு மரம் சொட்டிக் கொண்டிருக்குமேயன்றி, கோழைகளின் குருதியை அல்ல'' என்று நவின்றனர்.

பின்னர் இசைவாணரை நோக்கிப் பின்வரும் பாடலை இசை மீட்டிப் பாடுமாறு பணித்தார்கள்:

''கேடயத்தோடும், அம்பராத் தூணியோடும், எதிரியை எதிர்த்து நிற்பாயாக! உன்னையே நீ புகழ்ந்து கொள்ளாதே. மாறாக, என் துதி பாடுவாயாக! விதியானது தண்ணீர் போன்று குளிர்ச்சியாக இருந்த போதினும், தீ போன்று சூடாக இருந்த போதினும், நீ மகிழ்ச்சியுடன் வாழ்வாயாக!''

இந்தப் பாடலை இசை வாணர் இனிய குரலெடுத்துப் பாடியதும், பரவசமுற்ற சீடர்கள் பெரும் சப்தமிட்டுத் தங்களின் அங்கிகளைத் தாங்களே அறியாமல் உதறித்தள்ளினர்.

இதைக் கேட்டு உங்களுடைய புருவங்கள் மேலேறுகின்றன. இத்தகு ஷைகு யார் என்று வியப்பு மேலீட்டால் வினவுகின்றீர்கள். இவர்கள் தாம் ஃபார்ஸி சூஃபி இலக்கியத்தின் தந்தை என்று கொண்டாடப்படும் மாபெரும் இறைநேசச் செல்வர் அபூ ஸயீது இப்னு அபில் கைர் (ரஹ்) அவர்கள் ஆவர்.

அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் குராஸான் மாநிலத்திலுள்ள மைஹானா என்ற ஊரில் ஹிஜ்ரி 357 ஆம் ஆண்டு முஹர்ரம் முதல் நாள் (கி.பி.967 டிசம்பர் 7) அன்று பிறந்தனர். தந்தை அபுல் கைரோ, அவ்வூரில் மருந்து வாணிபம் செய்து வந்தார். மார்க்க ஞானமும் ஆன்மீக ஞானமும், ஓரளவு வாய்க்கப் பெற்றிருந்த அவரை, அவ்வூர் மக்கள் பாபு அபுல் கைர் என்று அன்புடன் அழைத்து வந்தார்கள். அவர் அடிக்கடி ஆத்மீக ஞானிகள் நடத்தும் பேரின்ப இசை விழாக்களுக்குச் சென்று வந்தார்.

ஒரு நாள் அவர் அவ்விழாவிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, அவரின் மனைவி அவரை அணுகி, ''பிள்ளை அபூஸயீதையும் அங்கு அழைத்துச் செல்லுங்களேன். அந்த தர்வேஷின் கடைக்கண் பார்வைபட்டால் கூட பிள்ளைக்கு நல்லதுதானே'' என்று கூறினர். அவ்வாறே தம் இளம் மகன் அபூஸயீதையும் தம்முடன் அவ்விழாவிற்கு அழைத்துச் சென்றார் அவர்.

பேரின்ப இசை விழாவில் இசைவாணர் பின்வரும் கருத்தமைந்த பாடலொன்றைப் பாடினார்:

''இறைவன் தர்வேஷ்களுக்குக் காதல்உணர்வை நல்குகின்றான். அந்தக் காதல் உணர்வோ, துன்பம் தருவதாக உள்ளது. அவனுடைய அண்மையையும், அன்பையும் எய்தப் பெறுவதன் காரணமாக அவர்கள் வளர்கிறார்கள். தாராளத் தன்மையுள்ள இளவல் தன் இன்னுயிரை எவ்விதத் தயக்கமுமின்றி தியாகம் செய்கிறான். இறைவனின் நல்லடி யார்கள், உலகப் பகட்டுகளை ஒரு துரும்பாகக் கூடக் கருத மாட்டார்கள்.''

இதை கேட்டதும் அங்குக் குழுமி இருந்தோர் தம்மை மறந்து உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தனர். அது சிறுவர் அபூ ஸயீதுக்கு விநோதமாகத் தென்பட்டது.

விழா முடிந்து இல்லம் திரும்பும்பொழுது, தனயர் தந்தையை நோக்கி, ''அப்பா! இசைவாணர் ஒரு பாடலைப் பாட, அது கேட்டு மக்கள் தம்மை மறந்து அசையவும், ஆடவும் செய்தார்களோ அப்படி அவர் என்ன பாடினார் அப்பா! எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே. அதன் பொருள் என்ன அப்பா?'' என்று வினவினார். அதற்குத் தந்தை, ''அது உனக்குப் புரியாது, சும்மா இரு'' என்று கூறினர்.

இளமையில் தம் ஊரிலிருந்த அபூ முஹம்மது ஐயாரி என்பவரிடம், திருக்குர்ஆனையும் அபூ ஸயீது ஐயாரி என்பவரிடம் இலக்கணத்தையும், அபுல் காசிம் பிஷ்ர் யாசீன் என்பவரிடம் இஸ்லாமியத் தத்துவங் களையும் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் கற்றுத் தேர்ந்தனர். இதன்பின் அரபி இலக்கியத்தைக் கற்கப்போந்த அவர்கள், 'ஐயாமுல் ஜாஹிலிய்யாத்' தில் இயற்றப்பட்ட கவிதைகளையெல்லாம் பயின்றனர். அவற்றில் முப்ப தாயிரம் கவிதைகளை மனனமும் செய்தார்கள்.

ஒருநாள் அவர்களின் ஆசான் அபுல் காசிம் பிஷ்ர் யாசீன், அவர்களை நோக்கி, ''அபூ ஸயீதே! நீர் எவ்விதச் சுயநல ஆசையுமின்றி, இக்லாஸோடு இறைவழிபாட்டில் ஈடு படவேண்டும். சுயநல ஆசையோடு செய்யப் படும் வழிபாடுகளெல்லாம், கூலிக்கு வேலை செய்வது போன்றதே யாகும். இக்லாஸோடு (மனத்தூய்மையோடு) செய்யப்படும் வழி பாடுகள் தாம் இறைவனுக்காகச் செய்யப்படும் உண்மையான வழிபாடு களாகும்'' என்று கூறிவிட்டுப் பின்வரும் ஹதீதையும் எடுத்துரைத்தனர்:

''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். 'விண்ணேற்றத்தின் போது, இறைவன் என்னை நோக்கி, எவரும் என்னை அணுக விரும்பின் அதற்கான மேலான வழி நான் விதித்துள்ள கடமைகளை நிகழ்த்துவதே யாகும். என் அடியான் அதிகப்படியானவைகளை நிகழ்த்த என் அன்பைப்

பெற இடைவிடாது முயன்று கொண்டிருக்கிறான். நான் அவனை நேசிக்கும் வரையில், இவ்வாறே செய்து கொண்டுள்ளான். நான் அவனை நேசித்துவிட்டால், நானே அவனுக்குக் காதாகவும், கண்ணாகவும், கையாகவும், உதவியாளனாகவும், ஆகிவிடுகிறேன். என்மூலமாகவே அவன் கேட்கவும், பார்க்கவும், எடுக்கவும் செய்கிறான்.''

இந்த ஹதீதைக் கூறிய பிஷ்ர், ''தனக்கென எதனையும் விரும்பாத ஒரு காதலனிடமிருந்தே உண்மையான காதல் வெளிப்படுகிறது.''

**கூலிக்காக ஒன்றை விரும்புவதில் என்ன இன்பம் உள்ளது?**
**அளிக்கப்படும் அன்பளிப்பைவிட அன்பளிப்புச் செய்**
**பவன் மேலானவனல்லவா?**
**செம்பைப் பொன்னாக்கும் ரஸவாதம் உன் கைவசம்**
**இருக்கும்பொழுது,**
**அன்பளிப்பாகப் பிறர் தரும் பொன்னை நீ விரும்புவாயா என்ன?''**

என்ற கருத்தமைந்த பாடல் ஒன்றைப் பாடினர்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர் அபூ ஸயீது, (ரஹ்) அவர்களை நோக்கி, ''நீர் இறைவனுடன் உரையாட விரும்புகின்றீரா?'' என்று வினவினர். ''ஆம்'' என்று அவர்கள் பதில் கூறியதும் ''நல்லது; நான் கூறும் வண்ணம் தனிமையில் அமர்ந்து செய்துவாரும். உமக்கு நற்பலன்கள் விளையும்'' என்று கூறிப் பின்வரும் கவிதையை எப்பொழுதும் பாடிக் கொண்டிருக்குமாறு பணித்தார்கள்:

**''அன்பே! நீ இன்றி நான் எவ்வாறு அமைதியுறுவேன்?**
**நீ எனக்குச் செய்திருக்கும் நன்மைகளை என்னால்**
**எண்ணிக் கணக்கிடவும் முடியுமோ?**
**என் உடலிலுள்ள ஒவ்வொரு மயிர்க்காம்பும் நாவாக மாறினும்**
**உனக்கு நான் கூற வேண்டிய நன்றி மொழியில்**
**ஆயிரத்தில் ஒன்றையேனும் என்னால் கூற இயலுமா?''**

இதனைத் தனிமையிலிருந்து அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் பாடினார்கள்; பாடினார்கள், நாவினிக்கப் பாடினார்கள்; உடல் இனிக்கப் பாடினார்கள்; உளம் இனிக்கப்பாடினார்கள். பாடப் பாட அவர்களுக்குப் பேரின்ப ஞானத்தின் வாசல் திறந்தது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. இந்த நன்றியை அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், தம் வாணாளில் ஒரு போதும் மறக்கவில்லை. பிற்காலத்தில் அவர்கள் தம் ஊரின் அடக்கவிடத்திற்குச் செல்லும் தோறெல்லாம், தமக்கு முதன் முதலில் ஞான வழிகாட்டியாக அமைந்த அபுல் காசிம் பிஷ்ர் யாசீன் அவர்களின் அடக்கவிடத்தையே முதலாவதாகத் தரிசித்து அவர்களின் ஆன்ம நலனிற்காக இறைஞ்சுவதையே தங்களின் நீங்காத வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

இதன்பின் மெர்வ் நகர் சென்று அங்கு பல ஆசிரியர்களிடமும் பத்தாண்டுகள் கல்வி பயின்றபின், சரக்ஸ் நகர் சென்று, அங்கு வாழ்ந்து வந்த அபூ அலீ ஸாஹிர் என்பவரிடம் மாணவராய் அமர்ந்து, குர்ஆன் விளக்கங்களையும் மார்க்க சட்டதிட்டங்களையும் பயின்றனர். அப்பொழுது அவர்கள் வயது, இருபத்தைந்துக்கும் இருபத்தெட்டுக்கும் நடுவில் இருக்கும். இக்காலை அவர்கள் மூன்று நாள் பாடத்தை ஒரே நாளில் படித்துவிட்டு ஏனைய இரண்டு நாட்களை வணக்கத்தில் கழித்து வந்தனர்.

அபூ அலீ ஸாஹிர் அவர்களிடம் அவர்கள் பயின்று கொண்டிருக்கும் பொழுது, ஒரு நாள் அவர்கள் தனியாக ஆற்றோரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஆங்கு வாழ்ந்து வந்த ஆத்மஞானி ஷைகு அபுல் ஃபஸல் ஹஸன் (ரஹ்) அவர்கள், அவர்களை நோக்கி, எதிர்ப்புறமாக வந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அவர்கள், அபூ ஸயீது (ரஹ்) அவர்களைக் கடைக் கண்ணால் பார்த்தனர். அக்கடைக் ez bÙÈÖ * அவர்களின் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து, அவர்கள் எத்தகையவர்கள் என்பதைப் படம் பிடித்துக்காட்டியது. எனவே அவர்கள், அபூ ஸயீது (ரஹ்) அவர்களை நோக்கி, ''நீர் சென்று கொண்டிருப்பது, உமக்கான பாதையல்லவே. உமக்கான பாதையிலல்லவோ நீர் நடந்து செல்ல வேண்டும்?'' என்று கூறினர்.

இக்காலை மெர்வ் நகரில் லுக்மான் என்று ஒருவர் இருந்தார். அவரோ இறைக் காதலில் மூளை கலங்கப் பெற்ற மஜ்தூப்களில் ஒருவராக இருந்தார். துவக்கத்தில் அவர் சிறந்த கல்விமானாகவும், வணக்கவாளராகவும் இருந்தார்.

அதிகமதிமாக வணக்கத்தில் ஈடுபட்ட அவர் ஒருநாள், இறைவனை நோக்கி, ''இறைவ எம்பெரும!் மன்னர்கள், தம் அடிமைகள் முதுமை எய்திவிட்டால், அவர்களுக்கு உரிமை வழங்கி விடுகிறார்கள். நீயோ மன்னர் மன்னன். மாபெரும் மன்னன். நானோ உன்னுடைய ஊழியத்திலேயே வாணாளெல்லாம் இருந்து, இப்பொழுது பழுத்து நரைத்து விட்டேன். எனவே உன்னுடைய அடிமையாகிய எனக்கும் உரிமை வழங்குவாயாக!'' என்று இறைஞ்சினர். அடுத்தகணம், ''லுக்மான்! நாம் உமக்கு உரிமை வழங்கிவிட்டோம்'' என்று அசரீரி முழங்கியது. அதிலிருந்து அவருடைய மூளை கலங்கப் பெற்றது. அதன் காரணமாக

---

✱ பிற்காலத்தில் ஒருவர் அவர்களை நோக்கி, ''தாங்கள் இத்தகு உயரிய படித்தரத்தை எவ்வாறு எய்தப் பெற்றீர்கள்?'' என்று அபூஸயீது(ரஹ்) அவர்களிடம் வினவிய பொழுது, ''ஆற்றோரத்தில் வைத்து அபுல்ஃபஸல் ஹஸன் (ரஹ்) அவர்களின் கடைக்கண் பார்வை பட்டதனாலேயாகும்'' என்று கூறினர் அவர்கள்.

அவர் இறைக் கடமைகளை நிறைவேற்றத் தேவை இல்லாது விடுதலை நல்கப்பட்டார்.

ஒருநாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் நகருக்குள் சென்று கொண்டிருக்கும் பொழுது, வழியிலுள்ள ஒரு குப்பை மேட்டில் லுக்மான் அமர்ந்திருப்பதைக் கண்டதும் அவரை நோக்கிச் சென்று, அவரருகே நின்றனர். அவரோ தம் மேலங்கியிலிருந்த ஒரு பீற்றலைத்தைத்துக் கொண்டிருந்தார். அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் நிழல் அவரின் கையிலிருந்த மேலங்கியில் விழுந்தது. தைத்து முடிந்ததும் அவர், அவர்களை ஏறிட்டுப் பார்த்து, ''அபூ ஸயீதே! நான் உன்னையும் அந்தப் பீற்றலோடு சேர்த்து அந்த மேலங்கியில் வைத்துத் தைத்துவிட்டேன்'' என்று கூறினார்.

அத்துடன் நில்லாது, அவர் எழுந்து அவர்களின் கையைப் பிடித்து ஆங்கிருந்த சூஃபிகளின் தவமடம் ஒன்றிற்கு அழைத்துச் சென்று, வெளியே நின்ற வண்ணமே, 'அபுல் ஃபஸல், அபுல் ஃபஸல்' என்று எவரையோ அழைத்தார்.

ஒரு பெரியார் வெளியே வந்ததும், அவரின் கையில் அவர்களை ஒப்படைத்து, ''அபுல் ஃபஸல்! இந்த இளவலை நன்கு கவனித்துக் கொள்ளும். இவர் உங்களைச் சேர்ந்தவராவார்'' என்று கூறிவிட்டுச் சென்று விட்டார்.

இதன்பின் ஷைகு அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்கள், அவர்களை உள்ளே அழைத்துச் சென்று அமரச் செய்துவிட்டு ஒரு நூலை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தனர். அது என்ன என்பதை அறிய அபூஸயீது (ரஹ்) அவர்களுக்கு ஆவல் ஏற்பட்டது. இதனை விளங்கிக் கொண்ட அவர்கள், அபூஸயீது (ரஹ்) அவர்களை நோக்கி, ''உலகில் தோன்றிய ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களும், ஒரே ஒரு சொல்லை மக்களுக்கு உணர்த்துவதற்காகவே உலகிற்கு அனுப்பிவைக்கப்பட்டார்கள். அந்த ஒரு சொல், தனிப்பெரும் அந்த ஒரு சொல் என்னவெனில் ''அல்லாஹ்'' என்பதேயாகும். அச் சொல்லைச் செவியால் ஏந்தியவர்கள் அதனை மற்றொரு செவி வழியாகச் செல்லவிட்டு வெறுமனே இருந்தனர். ஆன்மாவால் ஏந்தியவர்கள், அதனைத் தம் ஆன்மாவில் பதித்துக் கொண்டனர். அதன் காரணமாக அவர்களின் ஆகமெங்கும் அச் சொல் மயமாகவே ஆகியது. அச் சொல்லிலுள்ள எழுத்துக்களையும், அதன் தொனியையும் விட்டும் அப்பாற்பட்டுச் சென்ற அவர்கள், அதன் ஆன்மீகப் பொருளை விளங்கி அதிலேயே இலயித்துத் தம்மையே மறந்துவிட்டார்கள்'' என்று கூறினர்.

அவர்களின் இப்பேச்சு, அபூ ஸையீது (ரஹ்) அவர்கள் உள்ளத்தைப் பெரிதும் ஆட்கொண்டது. எனவே அன்றிரவு முழுதும் அவர்களுக்கு உறக்கமே வரவில்லை.

விடிந்தெழுந்ததும் தொழுது விட்டு, ஷைகு அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்களிடம் விடைபெற்று, குர்ஆன் பாடம் ஓத ஷைகு அபூ அலீ ஸாஹிரின் பள்ளிக்கு வந்தனர்; ஷைகு அபூ அலீ ஸாஹிரோ, அப்பொழு தான், "அல்லாஹ்தான் (இந்த வேதத்தை) இறக்கி வைத்தான்" என்று "கூறி அவர்களை(த்தங்களின்) வீண் தர்க்கத்திலேயே விளையாடிக் கொண்டிருக்குமாறு விட்டுவிடுவீராக!" என்ற 6: 91- ஆவது திருவசனத்தை ஓதித் தம் சொற்பொழிவைத் தொடங்கினார்.

இத்திருவசனத்திலுள்ள 'அல்லாஹ்' என்ற சொல்லைக் கேட்டதும், அபூ ஸயீது (ரஹ்) அவர்களுக்குத் தம் உள்ளத்தில் ஒரு வாசல் திறந்தது போல் இருந்தது. தம்மையே மறந்த நிலையில் அவர்கள் ஆனார்கள்.

இதனைக் கவனித்த ஷைகு அபூ அலீ ஸாஹிர், அபூ ஸயீது (ரஹ்) அவர்களை நோக்கி, "சென்ற இரவு நீர் எங்குச் சென்றிருந்தீர்?" என்று வினவினர். "அபுல் ஃபஸல் ஹஸன் அவர்களின் தவமடம் சென்றிருந் தேன்" என்று அவர்கள் கூறியதும் "ஞானக் கல்வியிலிருந்து இந்தக் கல்வி கற்க வருவது தவறாகும். எனவே அங்கேயே சென்று விடும்" என்று கூறி அவர்களைத் தம் பள்ளியிலிருந்தும் அனுப்பி வைத்து விட்டார்கள்.

தம்மை மறந்து, அலங்கோல நிலையில் தம்முன் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் வந்து நிற்பதைக் கண்ட அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்கள், "இளைஞரே! உமக்குப் போதைத் தலைக்கேறி விட்டது. எனவே தலை கால் தெரியாதுள்ளீர்" என்று கூறினர்.

"ஷைகு அவர்களே! தாங்கள் என்ன பணிக்கிறீர்களோ, அதனைச் செய்யத் தயாராயுள்ளேன்" என்று அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் கூற, "உள்ளே சென்று அந்த ஒரு சொல்லை உச்சரித்த வண்ணம் இரும்! அச் சொல் உம் பற்றிய வரையில் மகத்தான வேலை செய்வதைக் காண்பீர்" என்று கூறினர். அவ்வாறே அவர்கள் செய்தனர். பலன், விரைவில் அவர் களின் ஒவ்வொரு மூச்சும் "அல்லாஹ்" என்பதாக ஆகிவிட்டது.

இதைக் கவனித்த ஷைகு அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்கள் ஒரு நாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்களைத் தனியே அழைத்து, "அபூ ஸயீதே! 'அல்லாஹ்' என்ற சொல்லிலுள்ள, அத்தனை எழுத்துக்களின் கதவுகளும் உமக்குத் திறக்கப்பட்டு விட்டன. ஆன்மீக அருள் உம் நெஞ்சத்தில் பொழியப் போகிறது. அதனை நீர் விரைவில் உணர்வீர். உமக்கு ஆன்மீகப் போதை தலைக்கேறி விட்டது. ஆதலின் நீர் இல்லம் சென்று, உம்மை

உதறித் தள்ளியது போன்று; மனிதர்களின் தொடர்பையும் உதறித் தள்ளித் தனித்திருந்து தியானம் செய்யும். நீர் காணாத காட்சிகளையெல்லாம் காண்பீர்'' என்று கூறினர்.

அவ்வாறே மைஹானா திரும்பிய அவர்கள், தம் இல்லத்திலுள்ள ஓர் அறையில் ஏழு ஆண்டுகள் அமர்ந்து, தம் கண்களைத் தம் கொப்பூழி யில் புதைத்த வண்ணம், 'அல்லாஹ்', 'அல்லாஹ்' என்று அல்லும் பகலும் அனவரதமும் கூறிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அயர்வின் காரணமாகச் சிறிது கவனக்குறைவு ஏற்படும் போதெல்லாம், ஒரு கரிய உருவம் அவர்களின் முன் கத்தியுடன் தோன்றி, ''அல்லாஹ் என்று கூறு!'' என்று அதட்டி வந்தது. அதனுடைய பயங்கர உருவமும், அதட்டலும், அவர்களின் உள்ளத்தையும், உடலையும் பல நாட்கள் நடுங்கச் செய்தன. எனவே, அவர்களின் கண்களிலிருந்து உறக்கமும், உடலிலிருந்து அயர்வும் எங்கேயோ ஓடி மறைந்தன. இதன்பின் அவர்கள் தம் குருநாதர் ஷைகு அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்களை அணுகிய பொழுது, அவர்கள் அபூ ஸயீது (ரஹ்) அவர்களை அன்புடன் வரவேற்று, ஆரத்தழுவி, அவர் களுக்கு தீட்சையும் (பைஅத்தும்) வழங்கிச் சில காலம், தம் தவமடத்தி லேயே வைத்துச் சில ஆன்மீகப் பயிற்சிகளை அளித்தனர்.

பின்னர் அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்களின் ஆணையின் மீது, மைஹானா மீண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் மிகவும் பக்தி வைராக் கியத்துடன் தம் அறையில் அமர்ந்து, தவ வாழ்க்கையை மேற்கொண் டார்கள். எவருடனும் தேவையின்றிப் பேசாது, பகலெல்லாம் நோன்பு நோற்று, பொழுதுபட்டதும் ஒரு ரொட்டித் துண்டைக் கொண்டு நோன்பு திறந்து வந்தார்கள். ஒரே ஒரு சட்டையை அணிந்து வந்த அவர்கள், அதில் கிழிசல் ஏற்பட ஏற்பட அதனைத் தைத்து அணிந்து வந்தார்கள். அதன் காரணமாக அது நாளடைவில் இருபது இராத்தல் கனமுடையதாகி விட்டது. தம் அறையில் ஒரு குழி தோண்டி அதில் அமர்ந்து, வெளிச் சத்தம் தம் செவியை அடையா வண்ணம், தம் செவிகளைப் பஞ்சால் அடைத்து, அல்லும் பகலும் மோனத் தியானத்தில் ஈடுபட்டு வந்தார்கள். 'அல்லாஹ்', 'அல்லாஹ்' என்றே அனவரதமும் அவர்களின் இதயம் துடித்துக் கொண்டிருந்தது.

சிலபொழுது அவர்கள் இரவில் வெளியே சென்று விட்டு, வைகறையில் இல்லம் திரும்பி வந்தனர். அவர்கள் தம் இராப்பொழுதை, எங்கு, எவ்வாறு கழிக்கிறார்கள் என்பதைக் காண அவர்களின் தந்தை, அவர்களின் பின்னே, அவர்களை அறியாமல் சென்ற பொழுது, அவர்கள் ஒரு பாழடைந்த தவமடத்திற்குச் சென்று, தலை கீழாகத் தொங்கிக் கொண்டு, திருக்குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்ததைக் கண்டு பெரும் வியப்பெய்தினார்.

இதன்பின் அவர்கள் இல்லம் நீத்துக் காடுகளிலும், பாலைவனங் களிலும் சுற்றித் திரிந்தார்கள். வழிப்போக்கர்கள், விறகு வெட்டுவோர் ஆகியோரிடம், அவர்களின் தந்தை அவர்களைப் பற்றி விசாரித்தறிந்து, அங்குப் போய் அவர்களை இல்லம் அழைத்து வருவார். அதன்பின் என்ன? அவர்கள் மீண்டும் கானகம் திரும்பி விடுவார்கள், அங்கே அவர்கள் தூய வெண்ணாடை அணிந்த ஒரு முதியவருடன் சுற்றித் திரிவ தாக வழிப்போக்கர் வாயிலாகத் தந்தை அறிய வந்தபொழுது, அவர் எவராக இருக்குமென்று வியப்புற்றார். மக்களும் அவ்வாறே வியப் புற்றார்கள். ஆனால் பிற்காலத்தில் அவர்களிடம் இதுபற்றி வினவப்பட்ட பொழுது, அவர்கள் ஒரே சொல்லில் கூறிய பதில்: கிள்ரு.

இதன்பின் ஆன்ம பரிபக்குவம் பெறுவதற்காக, 'தான்' என்ற அகந்தையை அடக்கி, தம்மையே தாம் தாழ்மைப் படுத்தி, மேன்மையுறச் செய்வதற்காகத் துறவிகளுக்குப் பணிவிடை செய்யும் பணியில் அவர்கள் தங்களை ஈடுபடுத்தலானார்கள். துறவிகள் தங்குமிடங்களையும், அவர்கள் பயன்படுத்தும் கழிப்பிடங்களையும், அவர்களே கழுவித் தூய்மைப்படுத்தினார்கள். அவர்களுக்காகப் பிறரிடம் இரந்து உணவும் தயாரித்துக் கொடுத்தார்கள். துவக்கத்தில் அவர்கள் பிறருக்காகக் கையேந் துவதைக் கண்ட மக்கள், பொற்காசுகளை அள்ளிக் கொடுத்தார்கள். பின்னர் வெள்ளிக் காசு, செம்புக்காசு என ஆகி நாளடைவில் ஓர் உலர்ந்த கொடி முந்திரிப்பழம், ஒரு பாதாங்கொட்டையாக மாறி, இறுதியாக அவையும் இல்லாது ஒழிந்தது. கையை நீட்டிய அவர்களைக் கண்டு, மக்கள் தம் கைகளை மடக்கிக் கொண்டார்கள். எனவே அவர்கள், தம் தலைப்பாகைகளையும், காலணிகளையும் விற்று, உணவு வாங்கித் துறவிகளுக்கு உண்ணக் கொடுத்து வந்தார்கள்.

பின்னர் ஸரக்ஸ் சென்ற அவர்களை அவர்களின் குருநாதர் தம்முடனே ஓராண்டு காலம் தங்கவைத்துப் பற்பல ஆன்மீகப் பயிற்சி களை அளித்தபின், நீஷாப்பூர் சென்று அங்கு வாழ்ந்து வந்த அப்துர் ரஹ்மான் அல் ஸுலமி (ரஹ்) அவர்களைத் தரிசிக்குமாறு பணித்தனர். அங்கு அவர்கள் சென்ற பொழுது, அப்பெரியார் அவர்களுக்கு 'கிர்க்கா' அணிவித்துத் தங்களின் ஆன்மீகக் குழுவில் அவர்களை இணைத்தனர்.

இதிலிருந்து அபூஸயீது (ரஹ்) அவர்களின் வாழ்வில் மாபெரும் திருப்பங்கள் ஏற்பட்டன. அவர்கள் பதினெட்டு விதமான செயல் முறைகளை வகுத்துச் செயலாற்றத் துவக்கினார்கள். தொடர்ந்து நோன்பு நோற்ற வண்ணம் பள்ளி வாயிலிலேயே 'கிப்லா'வை முன்னோக்கி வீற் றிருந்து, நாள்தோறும் ஒரு தடவை குர்ஆன் முழுவதையும் ஓதி முடித் தார்கள். ஓராண்டு வரை அவர்கள் எவருடனும் பேசாது மௌன விரதம்

காத்தார்கள். அவர்களைப் பார்த்தோர், பைத்தியம் என்று கூறும் வண்ணம், அவர்களின் நிலை இருந்தது. பைத்தியம், பைத்தியம் என்று மக்கள் தம்மை இழித்துரைப்பதைக் கண்டு, அவர்களின் உள்ளம் பூரித்தது. 'ஒருவனை மக்கள் பைத்தியம் என்று' கூறும் வரை, அவனின் ஈமான் நிறைவு பெறுவதில்லை' என்ற நபிமொழி அவர்களின் மனக்கண் முன் பளிச்சிட்டு அவர்களுக்கு ஆறுதல் வழங்கியது.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய வழி முறைகளை அவர்கள் அணுவத்தனையும் விடாது பின்பற்றத் தொடங்கினார்கள். உஹதுப் போர்களத்தில் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் குதிக்காலில் காயம்பட்டதின் காரணமாக, அவர்கள் கால்களை ஒழுங்காக ஊன்ற இயலாது விரல்களை மட்டும் தரையில் ஊன்றிய வண்ணம் தொழு தார்கள் என்பதைப் படித்த அடுத்த கணமே, அவர்களும் அவ்விதமே தொழத் தொடங்கி, அதே நிலையில் நின்ற வண்ணம், நானூறு 'ரக்அத்' வரை தொழுது முடித்தார்கள்.

வானவர்களில் சிலர் தலை கீழாக நின்று இறைவனை வணங்கு கிறார்கள் என்பதை அவர்கள் அறிய வந்ததும், தாமும் தலைகீழாக, நின்று தம் கால்களைக் கட்டி முகட்டிலுள்ள கொக்கியில் மாட்டுமாறு தம் துணைவியாரிடம் கூறி மாட்டச் செய்தார்கள். பின்னர் தம் துணைவி யாரைப் போகச் சொல்லி விட்டுத் தனியே தம் அறையில் நின்று, "இறைவனே! நான் என்னை விரும்பவில்லை, என்னை விட்டும் நான் தப்பவே விரும்புகிறேன்" என்று இறைஞ்சினார்கள். இந்நிலையிலேயே அவர்கள் திருக்குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்தார்கள். அதில் "அவர் களுக்கு விரோதமாக, 'அல்லாஹ்' உங்களுக்குப் போதுமானவன். அவன் அனைத்தையும் கேட்பவன், அறிபவன்" என்று ஓதும் பொழுது, அவர்களின் கண்களிலிருந்து கண்ணீரல்ல, செந்நீர் வடிந்தது. அவர்கள் தன்னிலை மறந்து தொங்கிக் கொண்டு கிடந்தார்கள்.

நாளுக்கு நாள் ஆன்மீகத் துறையில் அவர்களின் படித்தரம் உயர்ந்து கொண்டே சென்றது. அதன் காரணமாக மக்கள் அவர்களைச் சிறிது சிறிதாக மதிக்கத் தொடங்கினார்கள். பைத்தியம், பைத்தியம் என்று அவர் களை இழித்துரைத்தவர்கள், அவர்களை மகான், மகான் எனப்போற்றத் தொடங்கினர். அவர்களுக்குச் சீடர்கள் பலர் தோன்றினர். அவர்கள் தின்று எறிந்த தர்பீஸ் பழத்தின் தோலை, மக்கள் போட்டியிட்டுக் கொண்டு இருபது பொற்காசுகளுக்கு வாங்கினர். ஒருநாள் அவர்கள் இவர்ந்து சென்ற குதிரை நடுத்தெருவில் சாணமிட்டது. அதைக் கண்டு மக்கள் முண்டியடித்துப் பாய்ந்து, அந்தச் சாணத்தைத் தம் கையால் ஏந்தித் தம் முகத்திலும் உடம்பிலும் தேய்ந்துக் கொண்டனர்.

இவற்றையெல்லாம் கண்டு அவர்களின் மனம் துளும்பவில்லை. இறைக்காதல் ஒன்றிலேயே அது திளைத்து மகிழ்ந்து கொண்டிருந்தது.

"இறைவனே! நீ என் இதயத்தில் அரியாசனம் வகிக்கின்றாய். இல்லையெனில் என் இரத்தத்தால், நான் அதனை நனைத்திருப்பேன்; என் கண்ணின் மணியாய் நீ ஒளிர்கிறாய். இல்லையெனில் என் கண்ணீரால் நான் அதனை அணைத்திருப்பேன். உன்னோடு ஒன்றித்து விடவே என் ஆன்மா ஆசையுறுகிறது. இல்லையெனில் நான் என் உடலிலிருந்து, அதனை எவ்வாற்றானும் பிய்த்தெறிந்திருப்பேன்" என்று அவர்கள் பாடிக் கொண்டிருந்தார்கள்.

மீண்டும் மக்களின் மனோ நிலை, அவர்களைப் பற்றி மாறத் தொடங்கியது. போற்றியவர்கள் இப்பொழுது அவர்களைத் தூற்றலா னார்கள். பைத்தியம் என்று முன்னர் அவர்களை இழித்துரைத்தவர்கள் இப்பொழுது அவர்களைக் 'காஃபிர்' என்று கூறலானார்கள். அவர்களின் கால்பட்ட இடத்தில் புல்லும் முளைக்காது என்றும், பயிர் பச்சைகள் செத்து மடிந்து விடும் என்றும், கூறலானார்கள். தெருக்களில் அவர்கள் நடந்து செல்லுங்கால், பெண்கள் சாரளங்களிலிருந்து மலர்களையல்ல, குப்பைகளை அவர்கள் மீது கொட்டினார்கள். பெண்கள் தாம் இவ்வா றென்றால், ஆண்களோ "அந்தக் காஃபிர் இந்தப் பள்ளியில் இருக்கும் வரையில், நாங்கள் இந்தப் பள்ளிக்கே தொழ வரமாட்டோம்" என்று அவர்கள் இருந்த பள்ளிக்கு வருவதையே புறக்கணித்தார்கள்.

இதைக்கண்ட அவர்கள், "நான் சிம்மமாக இருந்த பொழுது பயங்கர மான புலிகளும், என்னைக் கண்டு பயந்து ஒதுங்கின. ஆனால் இப்பொழுது, நான் உன் அன்பை என் இதயத்தில் இறுக அணைத்துக் கொள்ளும் பொழுது, நொண்டி நரிகளும் என்னை என் குகையை விட்டும் விரட்டுகின்றனவே" என்னும் பொருள் பொதிந்த கவிதையைப் பாடியவண்ணம், திருக்குர்ஆனைத் திறந்தனர். அப்பொழுது "நாம் உன்னைச் சோதிப்பதற்காகவே நன்மையையும், தீமையையும் உனக்கு வழங்குவோம். நம்மிடமே நீ மீளவேண்டும்" என்ற 21: 36 ஆவது திருவசனம் அவர்களின் கண்முன் பளிச்சிட்டது. எல்லாம் இறைவன் செயல் என்று எண்ணி அவர்கள் அமைதியுற்றார்கள்.

இதன்பின் அவர்களை ஈன்றோர், ஒருவர்பின் ஒருவராக இவ்வுலகு நீக்கவே, அவர்கள் கானகம் புகுந்து, ஏழு ஆண்டுகள் கடுந்தவர் புரிந் தார்கள். பின்னர் அவர்கள் மைஹானா திரும்பியபொழுது, அவர்களின் குருநாதர் அபுல் ஃபஸல் (ரஹ்) அவர்கள் மறுமை எய்தி விட்டனர்.

இப்பொழுது அமுல் என்ற ஊரில் ஷைகு அபுல் அப்பாஸ் கஸ்ஸாலி என்ற இறைச்சி வணிகர், ஆன்மீக உச்சத்தை எய்தி நிற்கின்றனர் என்றும், அவர்களைத் தரிசிப்பதற்காக ஸூஃபிகள் நாலா பக்கங்களிலிருந்தும் அமுல் வந்து குழுமிக் கொண்டிருக்கிறார்கள் என்றும், அவர்கள் கேள்வியுற்றனர். எனவே அவர்களைத் தரிசித்து வருவதற்காகத் தம் நண்பர்கள் இருவருடன், அவ்வூரை நோக்கி அடியெடுத்து வைத்து நடந்தார்கள். வழியில் அவர்கள் நஸா என்ற ஊரைக் கடந்து சென்றார்கள். அங்கு நானூறுக்கு மேற்பட்ட இறைநேசச் செல்வர்கள் அடங்கப் பெற்றிருந்தனர். அதன் காரணமாக அது பல துன்பங்களிலிருந்தும் அழிவிலிருந்தும், காப்பாற்றப்பட்டு வந்தது.

அங்கு அபூ அலீ தஹ்ஹாக் (ரஹ்) அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட ஒரு தவமடமும் இருந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அப்பெரியாரின் கனவில் தோன்றி, ஓரிடத்தில் கோடு கிழித்து, அங்குத் தவமடம் நிர்மாணிக்குமாறு பணித்துவிட்டுச் சென்றனர் என்றும், விடிந்தெழுந்ததும் அங்கு அப்பெரியார் சென்று பார்த்தபொழுது, கனவில் கிழிக்கப்பட்ட கோடு அப்படியே இருந்ததென்றும், அதன்மீது தவமடம் நிர்மாணிக்கப் பட்டதென்றும் கூறுவர்.

இக்காலை அத்தவமடத்தின் அதிபராக இருந்த ஷைகு அஹ்மது நஸ்ரு (ரஹ்) அவர்கள், அவ்வழியே செல்பவர் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் என்பதை உள்ளுணர்வால் உணர்ந்து, தம் மாணவர்களை நோக்கி, ''ஆன்மீகப் பாதையின் இராஜாளி (ஷாபாஸே தரீக்கா) இதோ இவ் வழியே நடந்து செல்கிறது. காண விரும்புவோர் அண்மையிலுள்ள எய்ஸமா சென்று காணலாம்'' என்று கூறினர். அதுகேட்டு அவர்களின் மாணவர்கள் விழுந்தடித்துக் கொண்டு ஓடி, அங்கு அடங்கப் பெற்றிருக்கும் அஹ்மது அலீ நஸவீயின் அடக்கவிடத்தைத் தரிசித்து விட்டு சற்று நேரம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த அபூ ஸயீது (ரஹ்) அவர்களைக்கண்டு அளவளாவினர்.

எய்ஸமாவில் அவர்களைச் சந்தித்தவர்களில், கம்பளி உடை அணிந்த இறைச்சி வணிகர் ஒருவரும் இருந்தார். அவர், அவர்களின் முன் உணவுப் பொருள்களைக் கொண்டு வந்து வைத்து, ''உண்ணீர், உண்ணீர்'' என்று வேண்டி நின்றார். அதன்பின் அவர் அபூ ஸயீது (ரஹ்) அவர்களை நோக்கி, ''ஓர் அடிமையின் கடமை யாது? ஒரு கூலிக் காரனுடைய கடமை யாது?'' என்று வினவினார். அதற்கு அவர்கள் மார்க்க சட்டப்படி பதிலிறுத்தார்கள். ''அவ்வளவு தானா? மேற் கொண்டும் இல்லையா?'' என்று அவர் வினவினார். அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் யாதும் கூறாது வெறுமனே வீற்றிருந்தார்கள்.

அப்பொழுது அவர், அவர்களை நோக்கி, "நீங்கள் மணவிடுதலை செய்து விட்ட பெண்ணுடன் வாழ்க்கை நடத்தாதீர்கள்" என்று கூறியபின், "நீங்கள் அடிமையாகும் வரை விடுதலை பெறமாட்டீர்கள். உண்மையான ஊழியனாகும் வரை என்றென்றும் நிலைத்திருக்கக் கூடிய நற்பேற்றினை எய்தப் பெறமாட்டீர்கள்" என்று கூறிவிட்டுச் சென்று விட்டார்.

வெளிப்படையான கல்வியை ஒதுக்கித் தள்ளிய தாம், அதன்படி இப்பொழுது பதில் கூறியதைக் கண்டு, அதனுடன் மீண்டும் தொடர்பு கொள்ளாது ஆன்மீகத்தில், ஆன்மீக இரகசியங்களில், அதிகமாக மூழ்கித் திளைக்குமாறு அவர் தமக்கு அறிவுரை பகர்ந்து விட்டுச் சென்றுள்ளார் என்பதை அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் உய்த்துணர்ந்து கொண்டார்கள்.

ஏற்கனவேயே அவர்களுக்கு நூல்களினால் எத்தகு அமைதியும் கிட்டவில்லை. எனவே அவர்கள் இருகரம் ஏந்தி, "இறைவ எம்பெரும! இந்நூல்களால் என் மனம் சாந்தியடையவில்லை. உன்னை இழந்து விடவே எனக்கு இவை உதவி புரிகின்றன. எனவே உன்னை அடைய எனக்குப் பேரருள் பாலிப்பாயாக!" என்று இறைஞ்சிவிட்டு, தாம் படித்த மார்க்க நூல்களையும், எழுதிக் குவித்த குறிப்பேடுகளையும் ஒரு குழித்தோண்டிப் புதைத்து, அதன் மீது ஒரு கம்பை ஊன்றி வைத்தார்கள். அவற்றை மார்க்கக் கல்வி பயிலும் மாணவர்களுக்குக் கொடுத்திருக்கலாமே" என்று ஒருவர் அவர்களிடம் கூறியபொழுது, "அவற்றை மாணவர்களுக்கு அன்பளிப்புச் செய்துவிட்ட அகந்தை கூட என் மனத்தில் துளிர்த்தல் கூடாது என்பதற்காகவே அவ்விதம் செய்தேன்" என்று கூறினார்கள். ஆனால் அவர்கள் நட்ட கம்போ தளிர்த்துப் பிற்காலத்தில் பெருமரமாக வளர்ந்து நின்றது.

ஒருவன் தன் குறிக்கோளை அடைய, துவக்கத்தில் நூல்கள் வழி காட்டியாக இருந்த போதினும், குறிக்கோளை அடைந்தபின் அவனுக்கு அவை தேவையில்லை என்றும், ஆன்மீகத் துறையில் அடியெடுத்து வைப்பவன், முதலில் செய்ய வேண்டிய அலுவல், தான் படித்த நூல்களைக் கிழித்தெறிவதும், தான் பயன்படுத்திய எழுதுகோல்களையும் மைப்புட்டிகளையும் உடைத்தெறிவதுமேயாகும், என்று அவர்கள் ஒரு தடவை கூறியுள்ளார்கள்.

இதன்பின் ஒருதடவை அவர்கள் ஒரு மாணவரிடமிருந்து, ஒரு நூலை வாங்கிப் படித்தபொழுது, அதற்குத் தண்டனையாக அவர்களுக்குப் பல்வலி ஏற்பட்டு ஓரிரவு முழுவதும் துன்புற்றுக் கொண்டிருந்தார்கள்.

இறுதியாக அமுல் நகரை அடைந்த அவர்கள், ஷைகு அபுல் அப்பாஸ் கஸ்ஸாப் (ரஹ்) அவர்களைச் சந்தித்து அவர்களின் ஊழியத்தில் ஓராண்டு காலம் இருந்தார்கள். இரவில் தம் சீடர்களில் எவரும் அதிகமான நேரம் விழித்திருந்து உபரியான வணக்கங்களில் ஈடுபட்டிருப்பதை ஷைகு அவர்கள் காணின் ''மகனே! போதும் வணக்கம் நிகழ்த்தியது. தூங்கச் செல். நான் உனக்காக வேண்டித்தானே இறைவனிடம் இறைஞ்சிக் கொண்டுள்ளேன்'' என்று கனிவோடு கூறுவது வழக்கம். ஆனால் அபூ ஸயீது (ரஹ்) அவர்களிடம் மட்டும் அவ்விதம் கூறுவதில்லை. அவர்கள் இரவெல்லாம் கண்விழித்து, வணங்குவதையும் பகலெல்லாம் நோன்பு நோற்பதையும், ஷைகு அவர்கள் அறிந்தும், அறியாதவர்கள் போல் இருந்து வந்தார்கள்.

ஒரு தடவை ஷைகு அவர்களின் புயத்தில் காயம் ஏற்பட்டு இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அதன் காரணமாக அவர்களின் அங்கியில் இரத்தம் படிந்தது. அதைக் கண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், ஷைகு அவர்களின் அங்கியைக் கழற்றிவிட்டுக் காயத்தை மருந்திட்டுக் கட்டியபின், தம் அங்கியைக் கழற்றி அவர்களுக்கு அணிவித்தார்கள். பின்னர் இரத்தம்பட்ட ஷைகு அவர்களின் அங்கியைத் துவைத்துக் காய வைத்து, மடித்து ஷைகு அவர்களிடம் கொடுத்தபொழுது, அதனை நீர் அணிந்து கொள்ளும். அதனை நான் உமக்குத் தந்துவிட்டேன்' என்று கூறினர் ஷைகு. அது கேட்டுப் பெரிதும் மகிழ்வுற்ற அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் ''அவ்விதமாயின் அதனைத் தாங்களே தங்களின் திருக்கரங் களால் எனக்கு அணிவியுங்கள்'' என்று கூறினர். அவ்விதமே செய்தார்கள் ஷைகு. இஃது அவர்களுக்கு அணிவிக்கப்பட்ட இரண்டாவது கிர்க்கா வாகும்.

இதன்பின் அவர்கள் தம் ஷைகின் ஆணையின்படி, மைஹானா திரும்பி, அங்குச் சிலகாலம் வாழ்ந்துவிட்டு, நீஷாப்பூர் வந்து தங்கியிருந்த பொழுது தான், நாம் துவக்கத்தில் கூறிய சம்பவம் நிகழ்ந்தது.

இறைவனுடன் அல்லும் பகலும் அனவரதமும் ஒரு கணம் கூட விட்டு விடாமல் தொடர்பு கொண்டிருந்த அவர்களுக்குக் கடமைத் தொழுகைகளைத் தவிர, வேறு வணக்கங்கள் தேவையில்லாது போய் விட்டது. அவர்கள் நடத்தும் விருந்துகளையும், பேரின்ப இசை நிகழ்ச்சி களையும், அவர்கள் உயர்தரமான உடுப்பணிந்து சோபாவில் சாய்ந்து கொண்டிருப்பதையும், அப்பொழுது தர்வேஷ் ஒருவர் அவர்களின் பாதங்களை வருடிக் கொண்டிருப்பதையும் கண்ட மக்கள், அவர்களின் புறக்கோலத்தை மட்டும் கவனித்து, அவர்களைத் தூற்றித் திரியலாயினர். இதனை அவர்கள் ஒரு தடவை கூறும்பொழுது, ''முன்னர் என்னைக்

கண்டவர்கள் சித்தீக்கு (உண்மையாளர்) களாயினர். பின்னர் என்னைக் கண்டவர்கள் சிந்தீக்கு (மார்க்கத்திற்கு முரணான பொய்யர்)களாகி விட்டார்கள்'' என்று எடுத்துரைத்தனர். எனவே தான், அவர்களை இறுதியில் பார்த்தவர்கள், அவர்களைப் பற்றி இல்லாததையும், பொல்லாததையும் கூறி, அவர்களுக்குத் தூக்குத் தண்டனை பெற்றுத் தந்தார்கள். ஆனால் அபூ ஸயீது (ரஹ்) அவர்களோ, அந்த மாபெரும் சோதனையில் வென்று, புடம்போட்ட தங்கம் போன்று வெளியே வந்த பொழுது, அவர்களின் மதிப்பு பன்மடங்கு அதிகமாக ஒளிரலாயிற்று.

அவர்கள் ஆற்றிய அற்புதங்களோ, ஒன்றல்ல இரண்டல்ல, பல. வாழும் ஒருநாள் அவர்கள் தம் சீடர்களுடன் நிஷாப்பூரில் கிறிஸ்தவர்கள் வாழும் தெரு வழியே சென்று கொண்டிருந்த பொழுது, ஆங்கு விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களில் ஒருவரை அவர்கள், தம் சீடர்களிடம் சுட்டிக்காட்டி, ''இந்நாட்டின் முதல் அமைச்சரைப் பார்க்க விரும்பின், இவரைப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினர். அவர்கள் முன்னறிவிப்புச் செய்த வண்ணமே, பிற்காலத்தில் அச்சிறுவர் செல்ஜூக் மன்னர்களின் புகழ்பெற்ற முதல் அமைச்சராக ஆனார். அவரே நிஷாப்பூரிலும் பக்தாதிலும் தம் பெயரால் கல்லூரிகள் நிறுவி ய நிஜாமுல் முல்க் தூஸி ஆவார்.

மற்றொரு நாள் அவர்கள், தர்வேஷ் ஒருவருடன் ஒரு மலைச்சாரலில் நடந்து கொண்டிருந்தபொழுது, கடுமையான குளிரின் காரணமாக அவர் களின் பாதங்கள் விரைத்துப் போயின. இதைக் கண்ட அந்த தர்வேஷ், தம் மேலங்கியைக் கிழித்து, அவர்களின் பாதங்களுக்கு உறைபோன்று மாட்டலாமென்று எண்ணினார். ஆனால் அதுவோ உயர்தரமானதாக இருந்ததால் அதனைக் கிழிக்க அவருக்கு மனம் வரவில்லை.

பின்னர் அவர்கள் தூஸ் வந்தபொழுது, மக்களுக்குச் சொற்பொழி வாற்றினர். கூட்டத்தின் முன் வரிசையில் அமர்ந்திருந்த அந்தத் தர்வேஷ் ''இல்ஹாமுக்கும் (இறைவன் அளிக்கும் உள்ளுணர்வுக்கும்), வஸ் வஸாவுக்கும் (ஷைத்தானின் ஊசலாட்டத்திற்கும்) வேற்றுமை என்ன?'' என்று வினவினர்.

உடனே அவர்கள் 'உம்முடைய மேலங்கியைக் கிழித்து என் பாதங் களுக்கு உறை போன்று மாட்டலாமென்று உம் உள்ளத்தில் முதலில் உதித்தது இல்ஹாம் ஆகும். அவ்விதம் செய்ய வேண்டாமென்று உம் உள்ளத்தில் இரண்டாவதாகத் தோன்றியது வஸ் வஸா ஆகும்' என்று பதிலுரைத்தார்கள். அதுகேட்டு, அந்த தர்வேஷுக்கு ஏற்பட்ட திடுக்கத் திற்கும், வியப்பிற்கும் அளவில்லை.

மற்றொரு நாள் அவர்கள் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த பொழுது, மேடைமீதிருந்த குழந்தை ஒன்று கீழே தவறி விழுந்துவிட்டது. அதைக்கண்ட அவர்கள் பதறி ''அதைக் காப்பாற்று'' என்று அலறினார்கள். அடுத்தகணம் ஒருகரம் தோன்றி, அக்குழந்தையைத் தாங்கித் தரையிலே நலமாக விட்டுவிட்டு மறைந்தது. இதனைப் பார்த்த ஒருவர் ''நான் இதனை என் கண்களால் பார்த்தேன். நான் பொய்யுரைப் பின் என் கண்கள் அழிந்தொழிக!'' என்று ஆணையிட்டுக் கூறினார்.

ஒருநாள் அவர்களின் மகாத்மியத்தைச் சோதித்துப் பார்க்க விரும்பிய இரு தொழிலாள இளைஞர்கள், பெரும் மார்க்க விற்பன்னர்கள் போன்று உடையணிந்து, அவர்களின் சொற்பொழிவுக் கூட்டத்தில் வந்து அமர்ந்தனர் அவர்களின் பார்வை அவ்விருவர் மீதுபட்டதும், 'இங்கே இருகைவினைஞர்கள் வந்து அமர்ந்துள்ளனர். அவர்களில் ஒருவர் தையல்காரர், மற்றொருவர் நெசவாளர்'' என்று அவர்கள் கூறியதும், அவ்விரு இளைஞர்களுக்கும் ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. அத்துடன் அவர்கள் நில்லாது, அங்கு வீற்றிருந்த அந்தத் தையல் தொழிலாளரைச் சுட்டிக்காட்டி, இவர் அரசருக்கான ஆடம்பர உடைகளைத் தயாரித்துக் கொடுப்பவர்'' என்று கூறியதுடன், அந்த நெசவாளியைச் சுட்டிக்காட்டி, ''இவர் கறுப்புக் கம்பளிகளை மட்டும் நெய்பவர்'' என்று கூறியதும், அவ் இளவல்கள் இருவரும் நாணிக்குறுக அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்.

ஒருதடவை அவர்களின் தவ மடத்திற்கு வந்த சூஃபி ஒருவர் அங்கு நடக்கும் விருந்துகளையும், பேரின்ப இசை நிகழ்ச்சிகளையும் கண்டு , இவர்களைத் தவறாக மதிப்பிட்டு, தம்முடன் நாற்பது நாட்கள் நோன்பு நோற்றுச் சில்லா இருக்க வேண்டுமென்று, அவர்களுக்கு அறைகூவல் விடுத்தார். அந்த அறைகூவலை அவர்கள் புன்முறுவலுடன் ஏற்றுக் கொண்டார்கள். இருவரும் அருகருகே அமர்ந்து சில்லா இருந்தனர். நாளுக்கு நாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், புதுப்பொலிவுடன் திகழ்ந்து வந்தார்கள். சூஃபியோ பலவீனப்பட்டு தேய்ந்து கொண்டே வந்தார். நாளாக, ஆக அவரால் கடமைத் தொழுகைகளைத் தொழக்கூட எழ இயலாது போய்விட்டது. ஒருவாறு நாற்பது நாட்களும் ஓடி மறைந்தன.

இதன்பின் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், அந்த சூஃபியை நோக்கி, ''நாம் இருவரும் நாற்பது நாட்கள் நோன்பு நோற்றுச் சில்லா இருந்து வெற்றிகரமாக முடித்தோம். இக்காலை நாம் கழியலறைக்குச் சென்றும் வந்தோம். அடுத்து நாம் இதே இடத்தில் நாற்பது நாட்கள் அமர்ந்து, உணவு உண்டு கொண்டிருக்க வேண்டும். ஆனால் ஒரு நிபந்தனை. கழியலறைக்கு ஒரு தடவையேனும் போகக் கூடாது'' என்று கூறினர்.

அதுகேட்ட அந்த சூஃபி யாது கூறுவதென அறியாது விழித்தார். எனினும் என் செய்வது? ஏற்றுக் கொண்டார். முடிவு: ஓரிரு நாட்களில் கழியறைக்கு ஓடியவர் தாம். பின்னர் அந்தத் தவமடத்தையே திரும்பிப் பார்க்காது, தோல்வியைச் சுமந்துகொண்டு, ஓட்டமெடுத்து விட்டார். பாவம் சூஃபி!

விரைவில் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் புகழ் மக்காவுக்கும் எட்டியது. அவர்கள் நடத்தும் பேரின்ப நிகழச்சிகளையும், விருந்து களையும், மக்களின் உள்ளத்தில் உள்ளதை, உள்ளுணர்வால் உணர்ந்து அறிவிக்கும் புதுமையையும் பற்றிக் கேள்வியுற்று அவர்களைப் பற்றி நேரடியாக அறிந்து வர, மக்காவில் முப்பதாண்டுகளாக வாழ்ந்து வந்த பக்ஷ்வான் வாசியான அபூ அம்ரு என்பவரை அனுப்பி வைத்தனர் மக்கா வாசிகள். அவ்வாறே அவர் நீஷாப்பூர் வந்து அபூ ஸயீது (ரஹ்) அவர் களைச் சந்தித்து, மூன்று நாட்கள் அவர்களின் தவமடத்தில் தங்கி அறிவுரை, ஆன்மீக உரை பல பெற்றார். அதன்பின் அவர் மக்கா திரும்ப நாடிய பொழுது, அவர்கள் அவரை நோக்கி, ''நீர் பக்ஷ்வான் திரும்பிச் செல்லும். அங்கு என் பிரதிநிதியாக இருந்து பணியாற்றும். உம்புகழ் மணம், நாலாம் வானத்திலும் மணக்கும்'' என்று கூறினர்.

அதற்கு இணங்கி, அவர் பக்ஷ்வான் புறப்பட்ட பொழுது, அவர்கள் தங்களின் திருக்கரத்தால் நறுக்கிய மூன்று பல்துலக்கும் குச்சிகளை அவருக்கு அன்பளிப்புச் செய்து, ''அவற்றில் ஒன்றைப் பத்து தீனாருக்கோ, இருபது தீனாருக்கோ விற்று விட வேண்டாம். முப்பது தீனார் தருவ தென்றால்''... என்று கூறித் தம்பேச்சை முற்றுப் பெறாமலேயே முடித்து விட்டார்கள்.

பக்ஷ்வான் திரும்பிய அவரை மக்கள் பெரிய மகானெனக் கருதிக் கௌரவித்தார்கள். ஒவ்வொரு வியாழன் அன்றும், அவர் திருக்குர் ஆனைத் தம் சீடர்களுடன் ஓதி முடித்து, அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் தமக்கு அளித்த பல்துலக்கும் குச்சி ஒன்றை ஒரு கோப்பைத் தண்ணீரில் முக்கி, அத்தண்ணீரை நோயாளிகளுக்குக் கொடுத்து வந்தார். நோயாளர்கள் அதனை அருந்தி நலன் பெற்று வந்தார்கள். அவ்விதம் நலன் பெற்றவர்களில் தீராத குன்மநோயால் அவதியுற்று வந்த அவ்வூர்த் தலைவனும் ஒருவன்.

ஒருநாள் அவன் அபூ அம்ரை அணுகி, தமக்கு அக்குச்சிகளில் ஒன்றை விலைக்குத் தருமாறு வேண்டினான். ''என்ன விலை தருகிறீர் அதற்கு?'' என்று வினவினர் அபூ அம்ரு. ''பத்துப் பொற்காசு (தீனார்) தருகிறேன்'' என்றான் அவன். ''இல்லை'' என்றார் அபூ அம்ரு. ''சரி; இருபது தீனார் தருகிறேன்'' என்றான் அவன். மீண்டும் அதே இல்லை

என்ற சொல்தான் அபூ அம்ரின் வாயிலிருந்து வெளிவந்தது. ''நல்லது; முப்பது தீனார் தருகிறேன், தாருங்கள்'' என்று கூறி முப்பது தீனார்களை எண்ணி அவரின் முன் வைத்தான் அவன். ''என் குருநாதர் அவர்களும், முப்பது தீனாருடன் தான் நிறுத்தினார்கள்'' என்று கூறித் தம்மிடமிருந்த பற்குச்சி ஒன்றை அவனிடம் கொடுத்து, அவன் தந்த அந்த முப்பது தீனார்களைக் கொண்டு ஒரு தவமடம் நிறுவினார் அபூ அம்ரு.

மைஹானாவைச் சேர்ந்த அபூ நஸ்ர் ஷெர்வானி என்ற செல்வர் ஒருவர், தம் செல்வங்கள் அனைத்தையும் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் காலடியில் கொண்டுவந்து கொட்டி, அவர்களின் ஊழியத்தில் சில காலம் இருந்தார். பின்னர் அவர் மைஹானா திரும்ப விரும்பிய பொழுது, அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், தம்முடைய பச்சைக் கம்பளிப் போர்வையை அவரிடம் கொடுத்து ''இதனை எடுத்துக் கொண்டு ஊர் செல்லும். அங்கு இது என் கொடியாகத் துலங்கட்டும்'' என்று கூறி வாழ்த்தி அனுப்பினர்.

அவ்வாறே தம் ஊர் சென்ற அவர், அங்கு ஒரு தவமடத்தை நிறுவினர். அதில் அந்தப் போர்வை இன்றளவும் பத்திரமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. இந்த இருதவமடங்கள் மட்டுமல்லாது, நானூறுக்கு மேற்பட்ட தவமடங்கள் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் பெயரால் அப் பகுதியில் உள்ளன.

நீஷாப்பூரிலிருந்த அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் தவமடத்தில், நாள் தோறும் முந்நூறு சூஃபிகளுக்கு உணவளிக்கப் பட்டு வந்தது. அதற்கான பொருள் அவர்களுக்குக் கிடைத்து வந்த விதமோ, வியப்பிற்குரியதாகும். வணிகர்களும், செல்வர்களும் அதன் நிர்வாகத்திற்கான பொருளை வாரி, வாரி வழங்கி வந்தார்கள். அவர்களின் சீடர்களான சிலர், தங்களின் சொத்து முழுவதையும் அவர்களின் தவமடத்திற்கான அறப்பணிகளுக்கு எழுதி வைத்தார்கள். சிலபொழுது பணமுடை ஏற்படின், வணிகர்கள் கடனுக்குப் பொருள்களைக் கொடுத்துதவியும் வந்தார்கள்.

ஹாஜிப் முஹம்மது என்பவர் ஒரு சிறு வணிகராக இருந்தார். அவர் அபூ ஸயீது (ரஹ்) அவர்களைக் காணும் நாட்களிலெல்லாம், பெரும் விற்பனையையும், ஆதாயத்தையும் கண்டார். அதன் காரணமாக அவர் விரைவில் பெரும் செல்வராகி விட்டார். ஓரிரவு அபூ ஸயீது (ரஹ்) அவர்களுக்குக் காணிக்கையாக ஓர் ஆயிரம் வெள்ளிக்காசுகளை அவர் அளிக்க விரும்பி, அவற்றை எடுத்து ஒரு பையில் கட்டினார். ஆனால் விடிவதற்குள், அவருடைய மனம் மாறிவிட்டது. ஓராயிரம் வெள்ளிக் காசுகளை ஏன் கொடுக்க வேண்டும்? ஐந்நூறு வெள்ளிக்காசுகளைக் கொடுத்தால் போதுமே என்று அவர் எண்ணினார். விடிந்தெழுந்ததும், அப்பையிலிருந்து ஐந்நூறு வெள்ளிக் காசுகளை எடுத்துத் தம் படுக்கையின் கீழே

வைத்து விட்டு, மீதியுள்ள ஐந்நூறு வெள்ளிக் காசுகளை எடுத்துக் கொண்டு சென்று, அபூ ஸயீது (ரஹ்) அவர்களை தரிசித்தார். அதன்பின் அவர்களின் ஊழியர் ஹஸனைத் தனியாக, அழைத்து அவரிடம் தாம் கொண்டு வந்த பணப்பையைக் கொடுத்தார்.

பணப்பையைப் பெற்றதும், ஹஸன், அபூ ஸயீது (ரஹ்) அவர்களிடம் சென்று பணிவுடன் செய்தியை எடுத்துரைத்து, "அதனை ஏற்றுக் கொள்ளவா?" என்று வினவிய பொழுது, "அவர் முழுத் தொகையையும் கொண்டு வரவில்லையே. பாதித் தொகையையல்லவோ கொண்டு வந்துள்ளார். முழுத்தொகையையும் கொண்டு வந்தாலல்லவோ கடன் காரர்களுக்குக் கொடுக்க வசதியாயிருக்கும்" என்று கூறினர்.

இதனை ஹஸன், ஹாஜிப் முஹம்மதிடம் வந்து கூறிய பொழுது, அவருக்கு ஏற்பட்ட வியப்பற்கும் அச்சத்திற்கும் அளவில்லை. அங்கிருந்த ஒருவரைத் தம் இல்லம் அனுப்பித் தம் படுக்கையின் கீழே வைக்கப்பட்ட ஐந்நூறு வெள்ளிக்காசுகளையும் எடுத்துவரச் சொல்லி, ஹஸனிடம் ஒப்படைத்துவிட்டு, அபூ ஸயீத் (ரஹ்) அவர்களை அணுகித் தம் பிழை பொறுத்து, ஆசீர்வதிக்குமாறு வேண்டி நின்றார். அவர்களும் அவ்விதமே செய்தார்கள்.

மற்றொரு தடவை தவமடத்திற்குக் கடனுக்குப் பொருள் கொடுத்த வணிகர்களெல்லாம் திரண்டு வந்து, அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் முன் மரியாதையாக வீற்றிருந்தார்கள். அவர்கள் எதற்காக வந்திருக்கின்றார்கள் என்பதை உய்த்துணர்ந்து கொண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், அவர்களுடன் யாதொன்றும் பேசாது வெறுமனே வீற்றிருந்தார்கள். அப்பொழுது தெருவில் ஒரு சிறுவன் பண்ணியங்களை ஒரு தட்டில் வைத்துக் கூவிக் கொண்டு செல்வதைக்கண்ட அவர்கள், தம் ஊழியர் ஹஸனை நோக்கி, அவனை அழைத்து வருமாறு கூறினர். அவ்வாறே செய்ததும் அவனிடமிருந்த பண்ணியங்களையெல்லாம் அங்கு வீற்றிருந்த கடன்காரர்களுக்குப் பங்கு வைத்துக் கொடுக்குமாறு பணித்தார்கள் அவர்கள். அவ்விதமே செய்தார் அவர்.

சிறுவன் பண்ணியத்திற்கான காசை அபூ ஸயீது (ரஹ்) அவர்களிடம் கேட்ட பொழுது "இரு; வரும்; தருகிறேன்" என்றார்கள் அவர்கள். அவனும் அவர்களின் சொல்லை நம்பி, இருந்து, இருந்து பார்த்தான். ஒருமணி, இரண்டு மணி நேரமாயிற்று. காசு வந்தபாடில்லை. அவன் அழத் துவங்கி விட்டான். "என் முதலாளி என்னை அடிப்பாரே. என் செய்வேன்?" என கூறிக் கதறினான்.

அப்பொழுது திடீரென ஒருவர் வந்து, பணப்பை ஒன்றை அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் முன் வைத்து, ''இன்னார் இதனைத் தங்களுக்குக் காணிக்கையாக வழங்கி விட்டு வரச் சொன்னார். அவருக்காக இறைஞ்சுமாறு தங்களை வேண்டிக் கொண்டதாகக் கூறச் சொன்னார்'' என்று இயம்பி விட்டுச் சென்றார்.

உடனே அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், தம் ஊழியர் ஹஸனை நோக்கி, 'அதிலுள்ள பணத்தை எடுத்துக் கடன்காரர்களுக்கும், பண்ணியச் சிறுவனுக்கும், அவரவர்களுக்குச் சேரவேண்டியதைக் கொடுக்குமாறு பணித்தார்கள். அப்பையிலிருந்த பணம் அக்கடன் தொகைக்குச் சரியாகவே இருந்தது. ஒரு காசு கூடவும் இல்லை; குறையவும் இல்லை. அப்பொழுது அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் வாயிலிருந்து, ''பண்ணியச் சிறுவன் அழுததால் பணம் வந்தது'' என்ற சொற்கள் வெளிவந்தன.

அபூ அம்ரு என்ற வணிகர் தவமடத்திற்குத் தாராளமாகக் கடன் உதவி செய்து வந்தார். தவமட ஊழியர் ஹஸன் அடிக்கடி பணத்திற்காகவும், சரக்குகளை வாங்குவதற்காகவும், வருவதைக் கண்ட அவர், ஹஸனை நோக்கி, ''நான் தவமடத்தின் மீது பணயமாக ஆயிரம் தீனார் தருகிறேன். அதனை வைத்துக் கொண்டு, சிறு சிறு செலவுகளைச் செய்து கொள்ளும். பெரிய செலவுகளுக்கு என்னிடம் வாரும். ஏன் அடிக்கடி வந்து வீணே சிரமப்படுகிறீர்?'' என்று கூறினார். அதுகேட்ட ஹஸனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை.

அவரின் கடையிலிருந்து பன்னீர், அகிற்கட்டை, கற்பூரம் ஆகிய வற்றை வாங்கிக் கொண்டு, சிரித்துக் கொண்டே தவமடம் வந்த அவரை, அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் வெறுப்புக் கண்களுடன் நோக்கி, ''ஹஸன்! நீர் உம் உலக ஆசாபாசங்களை விட்டொழிக்கும் வரை, சூஃபிகளுடன் வாழத் தகுதியற்றவர் . எனவே அவற்றை விட்டொழித்துவிட்டு வாரும்'' என்று கூறினர். அதுகேட்டு ஹஸனின் உள்ளம் சுக்கு நூறாகியது. கண்கள் குளமாயின. தவமடத்திற்கு வெளியில் வந்து அழுது கொண்டிருந்தார். அவருடன் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் பின்னர் யாதொன்றும் பேசவில்லை.

அடுத்தநாள் தவமடம் வந்த அபூ அம்ருடனும், அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் யாதொரு வார்த்தையும் பேசவில்லை. அதுகண்டு பெரிதும் வியப்புற்ற அவர், ஹஸனிடம் ஓடோடிச் சென்று நிலைமையை எடுத்துரைத்துக் காரணம் வினவ, ஹஸன் நடந்ததைக் கூறினார். அது கேட்ட அபூ அம்ரு, குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்ட கதையாகி விட்டதே என்று எண்ணி வருந்தினார். பின்னர் துணிச்சலை வர வழைத்துக் கொண்டு, அபூ ஸயீது (ரஹ்) அவர்களை அணுகித் தம்மை

மன்னித்தருளுமாறு அவர்கள் வீற்றிருந்த நாற்காலியை முத்தமிட்டுக் கண்ணீர் சொரிந்த வண்ணம் வேண்டினார்.

அவர்மீது இரங்கிய அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் "அபூ அம்ரே! விண்ணிலிருந்து என்னை ஆயிரம் தீனாருக்காக, மண்ணில் இழுத்துப் புழுதியில் புரட்ட எண்ணி விட்டீரே, என்னுடைய அன்பை நீர் மீண்டும் பெற விரும்பின், அந்த ஆயிரம் தீனார்களையும் கொண்டு வாரும். அது என்னுடைய கண்களில் எத்துணை அற்பமானது என்பதைக் காட்டு கிறேன்" என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினர்.

அவ்வாறே அவர் ஐந்நூறு, ஐந்நூறு பொற்காசுகள் நிரம்பிய இரண்டு பைகளை அவர்களின் பாதார விந்தங்களில் கொண்டு வந்து காணிக்கை வைத்தார். உடனே அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், தம் சீடர் ஹஸனை அழைத்து, "ஆடுகளும், மாடுகளும் வாங்கி, அவற்றின் இறைச்சியை தனித்தனியே சமைத்தும், பொறித்தும் உயரிய உணவு தயார் செய்து, நீஷாப்பூர் மக்களின் உல்லாச ஓய்வு இடமான புஷாங்கான் கிராமத்தில் பரத்திவையும். அகிற் கட்டைகளும், பன்னீரும் வாங்கிவையும். பகல் நேரமாயினும், ஆயிரம் மெழுகு திரிகள் எரியட்டும். விருந்தில் எவர் வேண்டுமாயினும் கலந்து கொள்ளலாமென்றும், அங்கு உண்ணும் உணவிற்கு இம்மையில் அவர்கள் எவருக்கும் கடமைப்பட்டிருக்க மாட்டார்கள் என்றும், மறுமையிலும் அவர்களுக்குக் கேள்வி கணக்குக் கேட்கப்பட மாட்டாது என்றும், மக்களுக்கு பகிரங்கமாக அறிவித்து விடும்" என்று பணித்தனர்.

விருந்தில் இரண்டாயிரம் பேர் கலந்து கொண்டார்கள். அபூ ஸயீது (ரஹ்) அவர்களும், தங்களின் சீடர்களும் அங்கு வந்து, வந்திருந்த விருந் தினர்களை வரவேற்று உபசரித்ததுடன், விருந்துண்டு முடிந்ததும், தங்களின் திருக்கரத்தால் அனைவர் மீதும் பன்னீர் தெளித்தார்கள்.

சிலபொழுது தவமடச் செலவிற்குப் பணம் தேவைப்படும் பொழுது, அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், தாம் சொற்பொழிவாற்றும் கூட்டங்களில் வைத்து, ஏதேனும் ஒரு பொருளை ஏலத்திற்கும் விடுவர். மக்கள் போட்டியிட்டுக் கொண்டு அதனை அதிக விலை கொடுத்து ஏலத்தில் எடுப்பர். ஒரு தடவை அவர்கள் தம் அரைக் கச்சை ஒன்றை ஏலம் கூறியபொழுது, ஒரு பெண்மணி அதனை முன்னூறு பொற்காசு களுக்கு ஏலத்தில் எடுத்துத் தம் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

ஒருசமயம் தவமடத்தின் காரணமாக ஏற்பட்ட கடனைத் தீர்க்க ஐந்நூறு பொற்காசுகள் அவர்களுக்குத் தேவைப்பட்டன. அவர்கள் தம் சீடர்களுடன் அண்மையில் வாழ்ந்து வந்த அபுல் ஃபஸல் புராதி என்ற

செல்வரின் இல்லம் சென்றனர். அவர்களை இருகரம் கொண்டு வர வேற்று, மூன்று நாட்கள் வரைத் தம் இல்லத்திலேயே வைத்து உபசரித்து, அவர்களுக்குத் தேவைப்பட்ட ஐந்நூறு பொற்காசுகளுடன், பயணச் செல விற்காக ஒரு நூறு பொற்காசுகளையும், பாத காணிக்கையாக மற்றுமொரு நூறு பொற்காசுகளையும், அவர்களின் காலடியில் வைத்து, 'அடிகளாரே ஏற்றருள்வீர்' என்று வேண்டி நின்றார் அவர்.

அவற்றை அன்புடன் ஏற்றுக் கொண்ட அவர்கள், ''இறைவன் உம்மிடமிருந்து இம்மையின் பாக்கியங்களை அகற்றி யருள்வானாக!'' என்று இறைஞ்சினார்கள். அதுகேட்டுத் திடுக்குற்ற அவர் ''ஐயகோ! இம்மையின் பாக்கியம் என்னிடம் இல்லாதிருப்பின், தாங்கள் என் இல்லம் எழுந்தருளியிருக்கவும் மாட்டீர்களே, நான் தங்களுக்குக் காணிக்கை நல்கும் பேற்றினையும் பெற்றிருக்க மாட்டேனே, மேலும் தங்களின் தவமடம் வந்து ஆன்மீக நலனும் அமைதியும் பெற வாய்ப்பில்லாது போயிருக்குமே'' என்று அலறினார்.

புன்முறுவல் தவழ அவர்கள் மீண்டும் தம் இருகரம் ஏந்தி, ''இறைவ எம் பெரும! இவரை இம்மையின் மாய்கையை விட்டும் காத்தருள் புரிவாயாக! உலகச் செல்வம் இவரின் ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாகவல்ல, துணையாக இருக்க அருள்பாலிப்பாயாக!'' என்று இறைஞ்சினர். அவர்களின் இவ்விறைஞ்சுதல் காரணமாக, அபுல் ஃபஸ்லின் வழித்தோன்றல்கள், அருளும் பொருளும், ஒருங்கே வாய்க்கப் பெற்ற நல்லோர்களாக வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களின் வாழ்த்தும் இறைஞ்சுதலும் பெற்று வாழ்ந்தவர் பலர். அவர்களின் முனிவைப் பெற்று, அழிந்தவர்களும் சிலர். ஒரு தடவை தவமடத்தின் கடனை தீர்ப்பதற்காக அபூ மஸ்ஊது என்ற அமீரிடம் அவர்கள் பணம் கேட்டுவிட்ட பொழுது, அவர் மறுத்து விட்டதோடு திட்டியும் அனுப்பினார். அதனை அறிந்த அவர்கள்.

'உறுதிமொழி காப்பாயாக! இல்லையெனில் உன் உயிர் காக்க, உன் திறனாலும் இயலாது; உன் வலுவாலும் முடியாது'.

என்ற அடியை எழுதித் தம் ஊழியர் மூலம் அவருக்கு அனுப்பி வைத்தார்கள்.

அதுகண்ட அவர் கொந்தளித்துக் குமுறி, ஊழியரை வாயில் வந்தபடி ஏசி அனுப்பினார். இதனை ஊழியர், அபூ ஸயீது (ரஹ்) அவர் களிடம் வந்து கூறியபொழுது, அவர்கள் யாதொன்றும் கூறவில்லை.

ஆனால் அன்றிரவு அமீர் அபூ மஸ்ஊது மாறுவேடத்தில் தம் இராணுவ முகாமைப் பார்வையிட்டு வந்த பொழுது, அங்குப் பாது

காப்புக்காக வளர்க்கப்பட்டு வந்த நாய்கள் அவர்மீது பாய்ந்து அவரைக் கிறிக் கிழித்துக் கொன்று விட்டன. குணமென்னும் குன்றேறி நின்றாரின் வெகுளியை அவரால் கணமேனும் காக்க இயலாது போய்விட்டது!

ஒருதடவை அவர்களைக் காணவந்த ஒரு செல்வர், ஆயிரம் தீனார்கள் அடங்கிய ஒரு பொன்முடிப்பையும், ஏராளமான அகிற்கட்டை களையும் அவர்களுக்குக் காணிக்கை வழங்கிவிட்டுச் சென்றார். அகிற்கட்டைகள் அனைத்தையும் எரிக்குமாறும், அவற்றின் நறுமணம் சூழவுள்ள வீடுகளிலும் பரிமளிக்கட்டும் என்றும், அவர்கள் கூறினர். அவ்வாறே செய்த அவரின் ஊழியர், பொழுது படுவதற்குச் சற்றுமுன் நூற்றுக் கணக்கான மெழுகு திரிகளையும் ஏற்றி வைத்தார். தவமடம் புது சோபையுடன் விளங்கியது.

அப்பொழுது ஆங்கு வந்த அரசாங்கக் காவல் உயர் அதிகாரி ஒருவர், ''இஃதென்ன ஊதாரித்தனமாக உள்ளது. அகிற் கட்டைகளை வீணே எரிக் கிறீர்கள். பகற்பொழுதில் மெழுகு திரியை ஏற்றியுள்ளீர்களே. இவை யெல்லாம் சட்ட விரோதமானதாகும்'' என்று கர்ச்சித்தார்.

''அப்படியா! அவையெல்லாம் சட்ட விரோதமானவை என்று எனக்குத் தெரியாது. தெரிந்தால் செய்திருக்கமாட்டேன். நல்லது; இப் பொழுது தாங்களே தயை கூர்ந்து அவற்றை அணைத்துவிட்டுச் செல்லுங்கள்'' என்று கூறினர்.

அவரும் தம் வாயால் ஊதி, அந்த மெழுகு திரிகளை அணைக்க முற்பட்ட பொழுது, அவை அணையாததோடு, அவற்றிலிருந்து கிளம்பிய தீப்பொறிகள் அவரின் முகத்திலும், உடலிலும், உடையிலும், தலை முடியிலும் தெறித்து அவற்றைச் சுட்டெரித்தன. தம் தவற்றை உணர்ந்த அவர், அபூ ஸயீது (ரஹ்) அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அகன்றார். சிங்கமென வந்த அவர் சிறு நரிபோன்று திரும்பிச் சென்றது பார்ப்பதற்குப் பரிதாபகராமக இருந்தது.

அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் நீஷாப்பூருக்கு வந்த புதிதில், அங்கு வாழ்ந்து வந்த அபுல் காசிம் குஷைரீ என்ற மார்க்க விற்பன்னர், அவர் களின் நடவடிக்கைகளை ஐயக்கண் கொண்டு நோக்கினார். அவரின் சீடர்களில் எழுபது பேர் அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டுவர அடிக்கடி சென்று வருவதைக் கண்ட அவர், ஒரு நாள் அவர்களின் சொற்பொழிவைக் கேட்க அவர்களுடன் சென்றார்.

அவர்களின் சொற்பொழிவை அவர் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது, 'கல்வியில் அவர் என்னை விடத் தாழ்ந்தவராகத் தான் உள்ளார். ஆனால் வணக்கத்தில் இருவரும் சமமாகவே உள்ளோம். அப்படி

இருக்க, இவருக்கு எங்கிருந்து பிறரின் உள்ளத்தை அறிந்து கூறும் ஆற்றல் ஏற்பட்டது?'' என்று எண்ணினார்.

இதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், அவர் பக்கல் தம் முகத்தைத் திருப்பி, முந்திய நாள் அவர் ஒரு மதக்கடமையை ஒழுங்கீனமாகச் செய்ததைப் பேச்சோடு பேச்சாக எடுத் துரைத்தார்கள். அது தம்மையே குறிக்கிறது என்பதை விளங்கிக்கொண்ட குஷைரிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

சொற்பொழிவாற்றி முடிந்ததும், அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் நேரே அவரிடம் சென்று, அவரை ஆரத்தழுவி விடை பெற்றார்கள். எனினும் அவருக்கு அவர்கள் மீதிருந்த ஐயம் மட்டும், அவரை விட்டும் முற்றிலும் விடை பெறவில்லை.

ஒருநாள் அவர், அவர்களின் தவமடத்தின் வழியே சென்ற பொழுது, அங்கு 'ஸமா' என்ற பேரின்ப நிகழ்ச்சி நடைபெறுவதையும் அதில், அபூ ஸயீது (ரஹ்) அவர்களும், அவர்களின் சீடர்களும் கலந்துகொண்டு, ஆடவும் பாடவும் செய்வதைக் கண்டு, ''இத்தகையோரின் சாட்சியம் மார்க்கப்படி ஏற்றுக்கொள்ளப்படுமா?''என்று தம் மனத்திற்குள் எண்ணினார்.

அடுத்த நாள் அவர்களிருவரும் ஒரு விருந்தில் கலந்து கொண்டனர். இருவரும் ஒருவருக்கொருவர் 'ஸலாம்' கூறிக்கொண்ட பின், அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் குஷைரியை நோக்கி, ''தாங்கள் எப்பொழுதாவது என்னைச் சாட்சியம் கூறக் காத்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக் கிறீர்களா?'' என்று வினவினர். தாம் முந்திய நாள் எண்ணியதற்கு, அவர்கள் அளிக்கும் பதில் இது என்பதை விளங்கிக்கொண்ட அவர், அதற்கு யாதொரு மறுமொழியும் கூறவில்லை.

மற்றொரு நாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்களும், அவர்களின் சீடர் களும், குஷைரியும் ஒரு வழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, அங்கு ஏராளமான காரட்டுகளும், பீட்ரூட்களும் குவித்து வைக்கப்பட்டி ருப்பதைக் கண்ட அவர்களின் சீடர் ஒருவருக்கு நாவில் நீர் ஊறியது. இதனை உணர்ந்து கொண்ட அவர்கள், தம் ஊழியர் ஹஸனை நோக்கி அங்குள்ள அனைத்து காரட்டுகளையும், பீட்ரூட்களையும் வாங்கி வரு மாறு கூறினார்கள். அவர்கள் வழியில் எதிர்ப்பட்ட பள்ளியில் போய்த் தங்கியபொழுது ஹஸன் அவற்றை வாங்கிக் கொண்டு வந்து அவர்களின் முன்னே பரத்தினார். அபூ ஸயீது (ரஹ்) அவர்களும், அவர்களின் சீடர் களும், அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து மென்று தின்றார்கள். ஆனால், அபுல் காசிம் குஷைரி மட்டும் அவற்றை எடுத்து உண்ணவில்லை.

''பள்ளி, கடைத்தெருவின் நடுவில் உள்ளது. தெருவில் போவோர் வருவோர் எல்லாம் பார்த்துச் செல்லும் நிலையில், இவர்கள் அவற்றை எடுத்து உண்ணுகிறார்களே'' என்று அவர் தம் மனத்திற்குள் எண்ணினார்.

சில நாட்கள் கழித்தன. அபூ ஸயீது (ரஹ்) அவர்களும் அவர்களின் சீடர்களும் ஒரு விருந்தில் கலந்து கொண்டார்கள். அவ்விருந்திற்கு குஷைரியும் வந்திருந்தார். விருந்தில் பல்வேறு விதமான உணவு வகைகள் பரத்திவைக்கப்பட்டன. சற்றுத் தொலைவிலிருந்த ஒருவித ருசிகரமான உணவை உண்ண குஷைரி அவாவுற்றார். அவரால் அதனை எட்டி எடுக்கவும் இயலவில்லை. பிறரிடம் அதனை எடுத்துக் கேட்கவும் அவருக்கு நாணமாக இருந்தது. இந்நிலையில் என் செய்வதென்றறியாது விழித்துக் கொண்டிருந்தார் அவர். இதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் குஷைரியின் பக்கல் திரும்பி, ''ஷைகு அவர்களே! அன்று உணவு தங்களுக்கு வழங்கப்பட்ட பொழுது, அதனை உண்ண மறுத்தீர்கள். இன்று வழங்கப்படாத பொழுது, அதனை உண்ண அவாவுறுகின்றீர்களே!''என்று கூறினர். குஷைரியோ, அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் காதோடு காதாகத் தம்மை மன்னித்தருளுமாறு வேண்டினார்.

இதன்பின் அவர் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களுக்குப் பெரிதும் மரியாதை செலுத்தினார். ஷரீ அத்தும், தஸவ்வுஃபும் ஒன்றிணைந்ததேயன்றி, ஒன்றுக்கொன்று முரண்பட்ட தல்ல என்பதை விளக்கி, 'அல்ரிஸாலத்துல் குஷைரிய்யா ஃபீ இல்மில் தஸவ்வுஃப்' என்ற பெயருடன் நூல் ஒன்றும் எழுதியதோடு, பின்னர் ஆன்மீகப் பாதையில் அடியெடுத்து வைத்துப் பெரும் மகானாக விளங்கினர்.

அபுல் காசிம் குஷைரி போன்று அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் நடவடிக்கைகளை ஐயக் கண் கொண்டு நோக்கியவர் ஈஷி நீலி என்ற பெண்மணியாவார். துறவு பூண்டு தம் இல்லத்தை விட்டும் நாற்பதாண்டு களாக வெளியே காலெடுத்தும் வைக்காது, வாழ்ந்து வந்த அப்பெண்மணி யின் அருள்வேண்டி ஏராளமான மக்கள் அவரின் இல்லம் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அபூ ஸயீது என்ற கதிரவன் நீஷாப்பூர் வானில் தோற்றம் வழங்கியதிலிருந்து, தம் புகழ் மங்கிக் கொண்டு வருவதைக் கண்ட அவர், ஒருநாள் தம் ஊழியப் பெண்ணை அழைத்து, அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் பேசும் கூட்டத்திற்குச் சென்று, அவர் கூறுவதை ஒன்று விடாது கேட்டு வந்து தம்மிடம் ஒப்புவிக்குமாறு பணித்தார்.

ஆனால் அவளோ, அவர்கள் கூறிய முக்கிமான செய்திகளை எல்லாம் மறந்துவிட்டு, அவர்கள் பாடிய காதல் கவிதைகளை மட்டும் மனனம் செய்துவந்து ஈஷி நீலியிடம் ஒப்புவித்தாள்.

அப்பொழுது ஈஷீ நீலி, அவளை நோக்கி, ''போய் வாயைக் கழுவி விட்டுவா. இந்த வார்த்தைகளைத் துறவிகளும், மகான்களும் வாயெடுத்து உச்சரிப்பார்களா, என்ன?'' என்று கத்தினார்.

ஈஷி நீலி கண் மருத்துவமும் செய்து வந்தார். அவரிடம் மருந்து பெற்றுச் சென்று நலம் பெற்றவர் எத்தனையோ பேர்.

அன்றிரவு அவர் பயங்கரமான கனவொன்று கண்டு திடுக்குற்று விழித்தெழுந்தார். விழித்தெழுந்ததிலிருந்து, அவருடைய கண் நோவத் துவங்கியது. தம்மிடமிருந்த மருந்தைத் தம் கண்களில் தடவினார். வேதனை அதிகப்பட்டதே அன்றிக் குறையவில்லை. இருபது இரவு, பகலாக நோயால் துன்பப்பட்டது சிறிதல்ல.

ஓரிரவு அவர் உறங்கும் பொழுது, மீண்டும் ஒரு கனவு கண்டார். அதில் உம் கண் நலன் பெற வேண்டுமானால், மைஹானாவிலிருந்து இங்கு வந்துள்ள மகானைத் திருப்திப்படுத்தி, அவரின் ஆசியைப் பெற்றாலன்றி, வேறு எவ்வகையாலும் இயலாது என்று அறிவிக்கப் பட்டது.

அடுத்தநாள் அவர் தம் பணிப் பெண்ணிடம் ஆயிரம் திர்ஹங்களைக் கொடுத்து, அவற்றை அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் பேசும் கூட்டத்திற்குச் சென்று, அவர்கள் பேசி முடித்ததும், அவர்களின் காலடியில் காணிக்கை யாக வைக்குமாறு கூறினார்.

அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் பேசி முடித்ததும் அவர்களுக்கு உண்பதற்குச் சில ரொட்டிகளும், பல்குத்த குச்சி ஒன்றும் வந்து வைக்கப் படும். அன்று அவர்கள் அந்த ரொட்டிகளை உண்டு, பல்லைக் குத்திக் கொண்டிருக்கும் பொழுது, அவர்களின் காலடியில், தம் எசமானி தந்த பணமுடிப்பை வைத்து விட்டு, யாதொரு பதிலையும் எதிர்பார்க்காது சென்று கொண்டிருந்தாள் பணிப்பெண்.

அப்பொழுது அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், அவளை அழைத்து, 'இந்தப் பற்குச்சியைக் கொண்டு போய், உன் எசமானியிடம் கொடுத்து, அதனைத் தண்ணீரில் முக்கி, அத்தண்ணீரைக் கொண்டு அவரின் கண்களைக் கழுவுமாறு கூறு. அதன் காரணமாக, அவரின் முகக் கண் நலன் பெறும். ஆனால் அவரின், அகக்கண் நலன் பெற வேண்டுமானால், அவர் சூஃபிகள் மீது கொண்டுள்ள ஐயத்தையும், விரோதத்தையும் அகற்றிவிட வேண்டுமென்று நான் கூறியதாகச் சொல்'' என்று சொல்லி அனுப்பினார்கள்.

பணிப்பெண் கொண்டு வந்து தந்த பற்குச்சியைத் தண்ணீரில் முக்கி, அத் தண்ணீரைக் கொண்டு ஈஷி நீலி தம் கண்கனளக் கழுவ, அடுத்த

கணம் அவரின் கண்கள் நலன் பெற்றன. அது கண்டு பெரிதும் வியப்புற்ற அவர், தம் நகைகள், உடைகள், உடைமைகள் ஆகிய அனைத்தையும் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் காலடியில் கொண்டு வந்து வைத்துத் தம்மை மன்னித்து, ஆட்கொள்ளுமாறு வேண்ட அவர்களும் அவ்விதமே செய்து, அவரைத் தம் துணைவியாரிடம் அனுப்பி, அவருக்குக் 'கிர்க்கா' அணிவிக்குமாறு பணித்தார்கள். இதன் பின் ஈஷி நீலி ஆன்மீகத்தில் பெரிதும் உயர்ந்து, விரைவில் மாபெரும் இறைநேசச் செல்வியாக ஆனார்.

அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் சீடர்களில் ஒருவர், மற்றவர்களுடன் எப்பொழுது பார்த்தாலும், முரட்டுத் தனமாக நடந்துகொள்ளும் இயல்பினராக இருந்தார். குமிழ் ஆணி வைத்து அறையப்பட்ட காலணிகளை அணிந்து கொண்டு, அவர் டக்,டக் என்று ஒலி எழுப்பிய வண்ணம் தவமடத்தில் நடந்து செல்வதும், அதன் சுவரில் தம் காலணிகளால் ஓங்கி மிதிப்பதும், பலருக்கு எரிச்சலை உண்டு பண்ணின.

ஒரு நாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் அவரை அழைத்து, ''நீர் இன்ன இடத்துக்குப் போக வேண்டும், அங்குள்ள நீரோடையில் 'உளூ'ச் செய்து, இரண்டு 'ரகஅத்' தொழுது வீற்றிருப்பின், என் நண்பர் ஒருவர் வருவார். அவர் என் அன்பிற்குரியவர். என்னோடு அவர் ஏழாண்டு காலம் இருந்தார். அவருக்கு என் ஸலாத்தை எடுத்துரைத்து, நான் கூறும் செய்தியையும் தெரிவித்துவிட்டு வரவேண்டும்'' என்று கூறினர்.

'சரி' என்று கூறிப் புறப்பட்டார் அவர். மாபெரும் இறைநேசச் செல்வர் ஒருவரைச் சந்திக்கப் போகும் மகிழ்வில், அவர் விரைந்து நடந்தார். அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும், அவர்கள் கூறிய வண்ணம் ஆங்கிருந்த ஓடையில் 'உளூ'ச் செய்து இரண்டு 'ரகஅத்' தொழுது முடித்து வீற்றிருந்தார்.

அப்பொழுது பயங்கரச் சப்தம் ஒன்று கேட்டது. அவ்வொலி தாளாது மலையே நடுங்கியது. கண்களை அகல விரித்துப் பார்த்தார் அவர். கருநிறமான பூதம் ஒன்று, அங்கு நின்று கொண்டிருந்தது. அது கண்டு மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்தார்.

சற்றுநேரம் கழித்து மூர்ச்சை தெளிந்து, அவர் கண்களைத் திறந்து பார்த்த பொழுது, அந்தப் பூதம் தம் தலையை ஒரு பாறையின் மீது வைத்துக் கொண்டு மரியாதையுடன் நின்று கொண்டிருந்தது. அப்பொழுது அவர் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு ''ஷைகு அவர்கள் உனக்கு ஸலாம் கூறினர்'' என்று சொன்னார். அதுகேட்டு ஷைகு அவர்களுக்கு மரியாதை செய்யும் முறையில், அது தன் முகத்தைப் புழுதியில் தேய்த்தது. அப்பொழுது அதன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியது.

இதிலிருந்து பூதம் தமக்குத் தீங்கு விளைக்காது என்பதை விளங்கிக் கொண்ட அவர், ஷைகு அவர்கள் கூறிய செய்தியை அதனிடம் எடுத்தோதினார். அதனை வெகு தாழ்மையுடன் செவி தாழ்த்திக் கேட்ட அது மீண்டும் தன் முகத்தைப் புழுதியில் தேய்த்து அழுதது. அதன் காரணமாக, அது தன் தலையை வைத்திருந்த பாறையே நனைந்துவிட்டது. அதன்பின் மெதுவாக அவ்விடத்தை விட்டும் அகன்றது.

மீண்டும் மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்த அவர், பின்னர் நெடுநேரம் சென்று மூர்ச்சை தெளிந்து, மெதுவாக அடியெடுத்து வைத்து நீஷாப்பூரை நோக்கி நடந்து சென்றார். வழியில் ஒரு கல்லை எடுத்துத் தம் காலணியில் இருந்த குமிழ் ஆணிகளையெல்லாம், அடித்து உள்ளே செல்லும் வண்ணம் செய்துவிட்டு மெதுவாக நடந்து தவமடத்தை அடைந்து, அங்கிருந்தவர்களுக்கு ஈனக்குரலில் 'ஸலாம்' உரைத்து அமைதியாக உள்ளே நுழைந்தார்.

அவரிடம் ஏற்பட்டுள்ள அபார மாறுதலைக் கண்டு, ''என்ன செய்தி? என்ன செய்தி?'' என்று ஆவலுடன் விசாரித்தனர் தவமடத்திலுள்ளோர். அவர் நடந்த வரலாற்றைக் கூறியபொழுது, அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

பின்னர் ஆங்கிருந்த முதிய ஸூஃபிகளில் சிலர் அபூஸயீது (ரஹ்) அவர்களை அணுகி, அந்தப் பூதத்தைப் பற்றி விசாரித்த பொழுது, ''அது என்னோடு ஏழாண்டுகள் இருந்தது. நாங்கள் இருவரும் ஆன்மீக நட்புப் பூண்டு மகிழ்வோடிருந்தோம்'' என்று அவர்கள் கூறினர்.

இதன்பின் அந்த தர்வேஷ், எவருடனும் முரட்டுத்தனமாக உரையாடவோ, உரத்துப் பேசவோ செய்யவில்லை. அடக்கமும் அமைதியும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற அருங்குணசீலராக மாறி விட்டார் அவர்.

இவ்வாறு அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் மூலம், இறைவன் வெளியாக்கிய அற்புதங்கள் ஒன்றிரண்டல்ல; பற்பல. அவர்கள் அவற்றை விரும்பாத போதினும், மக்களின் கண்களுக்கு அவர்களை உயர்வு படுத்துவதற்காக, இறைவன் அவற்றை அவர்கள் மூலம் வெளிப் படுத்தினான்.

ஒருநாள் ஒருவர் அவர்களிடம் வந்து தமக்கு அற்புதம் ஒன்றைச் செய்து காட்டுமாறு வேண்டிய பொழுது, ''கரீமுக்கு (வள்ளலான இறைவனுக்கு) முற்றிலும் அடிபணிந்தவர்களாகி விட்ட ஒருவரின் அணுவத்தனை செயலும் கராமத் (அற்புதம்) தானே'' என்று அவர்கள் அடக்கமாகப் பதிலுரைத்தார்கள்.

அவர்கள் தம் மூலம் வெளியாக்கப்பட்ட 'கராமத்'துகளை எழுதுவதையோ, எழுதிப் பகிரங்கப்படுத்தப்படுவதையோ விரும்ப வில்லை. அவர்களின் ஊழியர் காஜா அப்துல் கரீம் என்பவர் அவர்கள் ஆற்றிய அற்புதங்களையெல்லாம் தொகுத்து எழுதிக் கொண்டிருப்பதைக் கண்ட அவர்கள், அவருக்குக் கூறிய அறிவுரை, அவர் மட்டுமல்லாது ஏனையோரும் தம் உள்ளத்தில் ஆழமாகப் பதித்துச் செயலாற்றத் தகுந்த அற்புதமான அறிவுரையாக உள்ளது. அது என்னவென்றால், ''நீ அரிய செயல்களை எழுதுபவனாக இருக்காதே. நீயே அரியசெயல்களை ஆற்று பவனாக ஆகிவிடு'' என்பதேயாகும்.

உண்மையில் பிறரால் உணரப்படாது மறைந்திருக்கும் இறைநேசச் செல்வர்களே, பிறரால் உணரப்பட்டும், மதிக்கப்பட்டும் வாழ்கின்ற இறைநேசச் செல்வர்களை விட, மாண்பாளர்கள் என்றும், முன்னவர்கள் இறைவனால் நேசிக்கப்படுகிறார்கள் என்றும், பின்னவர்கள் இறைவனை நேசிக்கின்றார்கள் என்றும் அவர்கள் கூறினார்கள்.

அவர்களுக்கும் அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களுக்கும், இடையே நிலவிய ஆன்மீக நட்போ அளப்பரியதாகும். இருவரும் ஒத்த இயல்புடையவர்களாயிருந்ததே அதற்கான காரணமாகும்.

ஒருநாள் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் தம் சீடர்களை நோக்கி, ''நாம் ஹர்க்கான் போக வேண்டும். தயாராகுங்கள்' என்று திடுதிப்பெனக் கூறினார்கள். சீடர்களுக்கோ யாது காரணம் என்றே விளங்கவில்லை. வழியில் அவர்கள், ''பாவம்! நாம் இப்பொழுது சென்று, அந்த மகானைச் சந்திக்காவிட்டால், அவரால் தம் துயரத்தைத் தாங்கிக் கொள்ள இயலாது போய் விடும்'' என்று தமக்கே தாம் கூறிக்கொண்டதும், அவர்களின் சீடர் களின் செவியில் விழுந்தது. யார் அவர்? என்ன துயரம் அது? என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

அவர்கள் ஹர்க்கானை அடைந்த பொழுது, அங்கு வாழ்ந்து வந்த இறைநேசப் பெருஞ்செல்வர் அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களின் ஒரே திருமகன் அஹ்மதை அரசாங்க அலுவலர்கள் அவரின் திருமணத்திற்கு முந்திய இரவு சிறை செய்து தூக்கிலிட்டு அவரின் தலையை அவரின் வீட்டு வாசற் படியில் கொண்டு வந்து வைத்துவிட்டுச் சென்றிருந்தனர். வைகறைத் தொழுகைக்காள அழைப்பொலி கேட்டுப் பள்ளி செல்ல வெளியே வந்த அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள், தம் மகனின் வெட்டுண்ட தலைமீது இடறிக் கீழே விழுந்தனர். தம்மை இடறியது எதுவென அவர்கள் உற்று நோக்கிய பொழுது, அது தம் அருமந்த மைந்தன் அஹ்மதுவின் தலையாக இருப்பதைக் கண்டதும் அவர்களுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு அளவில்லை.

இக்காலை அபூ ஸயீது (ரஹ்) அவர்கள் தம் தவமடம் வந்து, தம் வணக்க அறைக்குள் நுழைந்ததைக் கண்டதும், அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள், தம் துயர் மறந்து ஓடோடிச் சென்று அவர்களை ஆரத்தழுவி வரவேற்று, அவர்களைத் தம் இருப்பிடத்திற்கு அழைத்து வந்து, அதில் அமரச் சொன்னார்கள். ஆனால் அபூ ஸயீது (ரஹ்) அவர் களோ அதில் அமர மறுத்தனர். எவ்வளவோ வேண்டியும் கேட்காது கீழே அமர்ந்தனர். அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களும் அவர் களுடன் சேர்ந்து கீழே அமர்ந்தார்கள். அப்பொழுது இருவர் கண்களி லிருந்தும் நீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

அப்பொழுது அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள் அபூஸயீது (ரஹ்) அவர்களை நோக்கி, ''ஏதோவது அறிவுரை கூறுங்கள் எனக்கு' என்று சொன்னார்கள். அதற்கு அவர்கள் ''தாங்கள் தாம் கூறவேண்டும்'' என்று பதில் மொழிந்தார்கள்.

இதன்பின் ஹர்க்கானி (ரஹ்) அவர்கள், தம் தவமடத்திலிருந்த 'காரீ'களை அழைத்து, குர்ஆனை ஓதுமாறு கூறினர். அவர்களும் அவ்விதமே செய்தனர். அது கேட்டு ஸூஃபிகள் கண்ணீர் விட்டு அழுதனர். ஹர்க்கானீ (ரஹ்) அவர்கள் தம்முடைய 'கிர்க்கா'வை அவர்கள் மீது வீசி எறிந்தனர்.

பின்னர் அஹ்மதுவின் சடலம் குளிப்பாட்டிக் கஃபனிட்டுக் கொண்டு வரப்பட்ட பொழுது, அவர்கள் அனைவரும் ஜனாஸாத் தொழுகை தொழுது அவரை நல்லடக்கம் செய்தனர்.

ஸூஃபிகள் தம் அறைக்குச் சென்ற பொழுது, அபுல் ஹஸன் ஹர்க்கானீ (ரஹ்) அவர்கள் வீசி எறிந்த 'கிர்க்கா' எவருக்கு உரியது என்பது பற்றி ஸூஃபிகளுக்கும், 'காரீ'களுக்கும் இடையே சச்சரவு ஏற்பட்டது. இதனை அறிந்த ஹர்க்கானீ (ரஹ்) அவர்கள், மற்றொரு கிர்க்காவை 'காரீகளுக்கு அனுப்பி வைக்க, அவர்கள் அதனைத் துண்டு துண்டாகக் கிழித்துத் தங்களிடையே பங்கிட்டுக் கொண்டார்கள்.

அபூஸயீது (ரஹ்) அவர்கள் தங்குவதற்கென ஓர் அறை ஒதுக்கப் பட்டது. அதில் அவர்கள் மூன்று நாட்கள் தங்கியிருந்தார்கள். ஏதேனும் பேசுமாறு ஹர்க்கானீ (ரஹ்) அவர்கள், அபூ ஸயீத (ரஹ்) அவர்களை எவ்வளவோ வேண்டியும் அவர்கள் பேசாது, ''நான் இங்கு தாங்கள் பேசுவதைக் கேட்கவே வந்துள்ளேனேயன்றி வேறில்லை'' என்று கூறிவிட்டார்கள்.

இதன்பின் அபுல் ஹஸன் ஹர்க்கானீ (ரஹ்) அவர்களே பெரும் பாலும் பேசினார்கள். ''நானோ வயோதிகனாகவும், உடல்தளர்வுற்ற

வனாகவும் ஆகிவிட்டேன். எனவே, நான் அறிந்த ஆன்மீக இரகசியங்களை எடுத்துரைக்க உன்னுடைய அருள்நேசர் ஒருவரை என்னிடம் அனுப்பி வை என்று இறைவனிடம் இறைஞ்சினேன். அவன் தங்களை அனுப்பி வைத்தான்'' என்று கூறிப் பற்பல ஆன்மீக இரகசியங்களை அபூ ஸயீத் (ரஹ்) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

மூன்று நாட்களும், அவர்கள் இருவரும் சந்தித்து ஏதேதோ ஆன்மீக இரகசியங்களையெல்லாம் மெல்லிய குரலில் பேசினார்கள். பின்னர் இருவரும் கண்ணீர்விட்டு அழுதார்கள். இந்த மூன்று நாள் சந்திப்பின் போதும், அதிகமாகப் பேசியவர்கள் அபுல் ஹஸன் ஹர்க்கானி (ரஹ்) அவர்களேயாவர். அவர்கள் கேட்பதற்கு மட்டும் அபூ ஸயீத் (ரஹ்) அவர்கள் பதிலுரைத்தார்கள். இது பற்றிப் பின்னர் அபூ ஸயீது (ரஹ்) அவர்களிடம், அவர்களின் ஊழியர் ஹஸன் முஅத்திப் வினவிய பொழுது ''ஒரு விஷயத்தை விளக்க ஒருவர் போதுமல்லவா?'' என்று பதிலுரைத் தார்கள் அவர்கள்.

மூன்று நாட்கள் ஹர்க்கானில் தங்கியிருந்து பல்வேறு ஆன்மீக இரகசியங்களைப் பற்றி உரையாடிவிட்டு, பிஸ்தாம் சென்று பாயஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அடக்க விடத்தைத் தரிசித்து விட்டு, நீஷாப்பூர் வந்து தம் தவமடத்தில் அமர்ந்து, ஆன்மீகச் செங்கோல் செலுத்திக் கொண்டிருந்தனர் அபூ ஸயீது (ரஹ்) அவர்கள். அவர்களைத் தரிசிப்பதற்காகவும், அவர்களின் ஆசியைப் பெறுவதற்காகவும் மக்கள் சாரி சாரியாக அங்கு வந்து கொண்டிருப்பது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

பருத்த உடலும், உயரிய தோற்றமும், 'களை' மிகுந்த முகமும் வாய்க்கப் பெற்ற அவர்கள், எப்பொழுதும் ஒட்டுப் போடப்பட்ட முரட்டுக் கம்பளி உடையையே அணிந்திருந்தார்கள். பிரயாணத்தின் போது தொழுகை விரிப்பு அவர்களின் தோளின் மீது கிடக்கும். கையில் ஒரு தடியும், தண்ணீர்க் கேத்தலும் இருக்கும். அவர்களின் கம்பளி உடையில் நூல்கள் சிலிர்த்துக் கொண்டிருப்பதைக் காணின், அதனை அவர்கள் தம் விரல்களால் பியத்தெறிவர். இதன் காரணமாக அவர்களின் தியானம் சில பொழுது கலைந்து வந்தது. எனவே அவர்களின் சீடர் அபூ ஸாலிஹ், அந்த உடைகளில் சிலிர்த்துக் கொண்டிருக்கும் நூல்களைத் தம் கத்தரியினால் கத்தரித்து ஒழுங்கு பண்ணி வைப்பார்.

அவரே அவர்களின் தாடி, மீசை ஆகியவற்றை ஒழுங்காக வெட்டி விடும் நாவிதராகவும் விளங்கினார். ஒருவர் அவரை அணுகி, அதனைத் தமக்குக் கற்றுத் தருமாறு வேண்டிய பொழுது ''அது எளிய செயலல்லவே. ஒரு தர்வேஷின் தாடி, மீசைகளைக் கத்தரித்து ஒழுங்கு

பண்ணும் கலையை எழுபது பேர்களிடமல்லவோ கற்க வேண்டும்'' என்று அவர் பதில் கூறினார்.

முதுமையில் அபூ ஸயீது (ரஹ்) அவர்களுக்கு ஒரே ஒரு பல்லைத் தவிர அனைத்துப் பற்களும் விழுந்து விட்டன. அப்பொழுது கூட அவர்கள் உணவுண்ட பின், பற்குச்சியை (மிஸ்வாக்கை) பயன்படுத்தி வந்தனர். இதைக் கண்ட அவர்களின் சீடர் ஒருவர், 'பல் இல்லாத பொழுதும் இவர்கள் பற்குச்சியைப் பயன்படுத்துகிறார்களே, இஃதென்ன விநோதமாக உள்ளது'' என்று தம் மனத்திற்குள் எண்ணினார். இதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அபூ ஸயீது (ரஹ்) அவர்கள், ''இதில் என்ன விநோதம் உள்ளது? நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய முன்மாதிரியைப் பின் பற்றி, அதன் காரணமாக இறையருளைப் பெறுவதற்காக இவ்வாறு செய்கின்றேனேயன்றி வேறில்லை. 'உளூச் செய்யும் பொழுதும், உணவுண்ட பின்பும், பற்குச்சி கொண்டு பற்களைத் துலக்கும் கூட்டத்தினர் மீது இறைவன் பேரருள் பாலிப்பனாக!'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறிச் சென்றுள்ளார்களல்லவா?'' என்று இயம்பினர்.

அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வழிமுறையைப் பின் பற்றி, இரண்டு பெண்களை மணமுடித்து வாழ்ந்தனர். முதல் மனைவிக்கு அபூ தாஹிர் என்ற மகனும், இரண்டாவதுமனைவிக்கு காஜா முஸஃப்பர் என்ற மகனும் பிறந்தனர்.

தீமைகளிலெல்லாம் தீமையானது 'நான்' என்ற அகங்காரம் தான் என்பது அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் கருத்தாகும். எனவே அவர்கள் தம்மைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, 'நான்' என்ற சொல்லையே பயன்படுத்தாது, 'இது' என்ற சொல்லையே பயன்படுத்தினார்கள். 'இது சொன்னது, 'இது சென்றது' என்று தம்மைப் பற்றிக் கூறும் பொழுது அவர்கள் குறிப்பிட்டார்கள்.

மேலும் அவர்கள் மென்மையின் திருவுருவாக விளங்கினார்கள். தேவையுள்ளவர்களுக்கு உதவுவதற்காக அவர்களின் பணப்பை எப் பொழுதும் திறந்தே கிடந்தது. அவர்கள் எவருடனும் கடுமொழி பகர்வதே இல்லை. அவர்களைச் சபித்த ஒருவனைச் சபிக்குமாறு அவர்களின் சீடர்கள் அவர்களை வேண்டிக் கொண்ட பொழுது, 'அதை விட்டும் இறைவன் என்னைக் காத்தருள் புரிவானாக! அவன் என்னைச் சபிக்கவில்லையே. என்னுடைய கொள்கை தவறானதென்றும் தன்னுடைய கொள்கை சரியானதென்றும், கருதிக் கொண்டு, இறைவனுக்காக வேண்டி, தவறான கொள்கையைத்தானே அவன் சபித்தான். அதில் என்ன தவறுள்ளது? தவறு சபிக்கத் தகுந்தது தானே'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

அவர்கள் இத்துணை மென்மையுள்ளம் படைத்திருந்ததன் காரண மாக அவர்கள்தம் சீடர்களுக்கு, நரகத்தின் வேதனையைப் பற்றி எடுத் துரைப்பதில்லை. அவர்கள் முதுமை எய்திய பொழுது திருக்குர் ஆனை ஓதிவரும் பொழுது, நரக வேதனை பற்றிய திருவசனங்கள் வருந்தோ றெல்லாம் அவற்றை ஓதாது. "இறைவ எம்பெரும! உன் பார்வையில், மனிதர்களும் கற்களும் ஒன்றேயாகும். எனவே நரக நெருப்புக்குத் தீனியாகக் கற்களைப் போடு. இந்த இழிந்த மனிதர்களைப் போட்டு வதைக்காதே!" என்று கண்ணீரும் கம்பலையுடன் கூறி இறைஞ்சுவார்கள்.

ஆதி கற்பனை என்ற இறைவனின் நாட்டம் (இராதா) ஒவ்வொரு வரைப் பற்றியும் நன்மையாக இருக்க வேண்டுமென்று அவர்கள் கருதி னார்கள். ஒருவன் பாவம் செய்வது, இறை கட்டளைக்குக் கீழ்ப்படியாத செயலேயாயினும் அதுவும் இறைவனின் நாட்டப்படி நடப்பதேயாகும். அவன் பற்றிய வரையில், இறைவனின் நாட்டம் அவ்வாறு அமைந்து விட்டது என்று கூறி இப்லீஸைத் தம் கூற்றுக்கு ஆதாரம் காட்டினார்கள் அவர்கள். இப்லீஸூம் இறைவனின் படைப்புகளில் ஒருவனேயாயினும், அவன் வழி கேடனாகவும், வழி கெடுப்பவனாகவும் இருக்க வேண்டு மென்று இறைவனின் நாட்டத்தில் அமைந்துவிட்டது என்று அவர்கள் கூறினார்கள்.

நியாயத் தீர்ப்பு நாளின் போது இறைவன் இப்லீஸை நோக்கி, "இப்பொழுதாவது நீ ஆதத்திற்கு வணக்கம் செலுத்து. நான் உன்னை மன்னித்து ஆட்கொள்கிறேன்' என்று கூறுவான். அது கேட்ட இப்லீஸின் சீடர்களெல்லாம் அவ்விதமே செய்யுமாறு, இப்லீஸூக்கு ஆலோசனை கூறுவார்கள். அப்பொழுது இப்லீஸ் அழுது கொண்டே, 'அது என் நாட்டத்தைப் பொறுத்ததல்லவே. அவ்விதம் அது இருந்திருப்பின் நான் துவக்கத்திலேயே இறை ஆணைக்கு மாறு செய்யாது, ஆதத்திற்கு வணக்கம் செலுத்தி இருப்பேனே. ஆதத்திற்குச் சிரவணக்கம் செய்யுமாறு இறைவன் என்னிடம் கூறுகின்றானேயன்றி, அவன் அவ்விதம் தம் உள்ளத்தில் நாடவில்லையே. நாடி இருப்பின் நான் என்றோ ஆதத்திற்குச் சிரவணக்கம் செய்திருப்பேனே' என்று அவன் கூறியதாக அவர்கள் எடுத்தியம்பினார்கள்.

உண்மையான சூஃபிகளின் இலக்கணம் பற்றி அவர்கள் கூறும் பொழுது, "உண்மையான சூஃபி எவரெனில் மக்களோடு உண்டு, உறங்கி, உறவாடி, வாணிபம் செய்து, மணமுடித்து வாழ்ந்த போதினும், ஒரு கண மேனும் இறைவனை மறக்காதிருக்கிறாரே, அவரேதாம்" என்று மொழிந்தார்கள்.

"சகோதர முஸ்லிமின் உள்ளத்திற்கு மகிழ்ச்சியை நல்குவதைப் போன்று, இறையண்மையைப் பெற்றுத் தருவது வேறொன்றுமில்லை"

என்று கூறிய அவர்கள், தம் கூற்றுக்கு ஆதரவாக ஒருவர் ஒரு தர்வேஷுக்கு ஓர் அன்பு உதவி செய்வது நூறு 'ரகஅத்' தொழுவதை விட மாண்புடைத் தாகும். அவருக்கு ஒரு கவளம் உணவளிப்பது, இரவு முழுவதும் நின்று வணங்குவதை விட மாட்சி மிகுந்ததாகும்' என்று அபுல் அப்பாஸ் பஷ்ஷார் (ரஹ்) அவர்கள் கூறிய பொன்மொழியையும் எடுத்துரைத்தார்கள்.

இவ்வாறு அருமை, அருமையான கருத்துக்களை உதிர்த்துக் கொண்டிருந்த அவர்களின் சொற்பொழிவைச் செவிமடுத்த மார்க்க அறிஞர் ஒருவர், ''இவர்கள் கூறுவது புதினமாக உள்ளதே. இது திருக்குர் ஆனில் ஏழில் ஏழில் (எழுவகை விளக்க நூல்களில்) கூடக் காணப்பட வில்லையே'' என்று எண்ணினார். அவர் தம் உள்ளத்தில் எண்ணியதைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அவர்கள், அந்த மார்க்க அறிஞரை நோக்கி, ''மௌலவி சாஹிப் அவர்களே! நான் கூறும் விஷயங்கள், திருக்குர் ஆனில் ஏழில் எட்டாவது பகுதியில் உள்ளவை யாகும்'' என்று கூறினர்.

அது கேட்ட அந்த மார்க்க அறிஞர் பெரிதும் வியப்புற்றவராய், ''அது என்ன?'' என்று வினவினார். அதற்கு அவர், ஏழில் ஏழாவது, 'நபியே! நாம் உம்மீது இறக்கி வைத்த செய்தியை மக்களுக்கு எடுத்துரைப்பீராக! (5:71) என்பதாகும். ஏழில் எட்டாவது அவன் தன் அடியாருக்கு அவன் வெளியாக்கியதை வெளியாக்கினான். (53:10) என்பதாகும் இறைவன் தன் அடியார்களுக்குத் தனிப்பட்ட முறையில் எத்தி வைக்கும் விளக்கங் களுக்கு எண்ணிக்கையே இல்லை'' என்று கூறித் தம் கூற்றுக்கு ஆதர வாக, ''உண்மையான விசுவாசிகளின் ஆத்மீகப் பார்வை பற்றி எச்சரிக்கை! அவர்கள் இறைவனின் பேரொளியால் பார்க்கின்றார்கள்'' என்ற நபிமொழியையும் எடுத்துரைத்தார்கள்.

அத்துடன் நில்லாது, ''அனைத்து விதிகளும் எழுதப்பட்டுள்ள 'லௌஹுல் மஃபூல்' என்னும் பலகையின் நீளம் வேகமான புரவி நான்கு நாட்கள் விடாது ஓடிக் கடக்கும் தொலையாகும். அதில் மயிரிழை போன்ற எழுத்துக்களால் எழுதப்பட்டிருக்கும் வாசகங்களில் ஒரே வரியிலுள்ள வாசகங்கள் மட்டுமே இறைவனின் படைப்பினங்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. ஏனைய அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே தெரியும்'' என்ற அண்ணல் நபி(ஸல்) அவர்களின் மற்றோர் அருள்மொழி யையும் எடுத்துரைத்து, ''இறைவன் தன் நல்லடியார்களுக்கு தனிப்பட்ட முறையில் எத்திவைத்த அறிவும், அவனுடைய அளப்பரும் அறிவில் அணுவினும் அணுவேயாகும்''என்று கூறாமல் கூறினர்.

முதுமையில் அவர்களால் பிறர் உதவியின்றி எழவோ, படுக்கவோ இயலாது போனபோது, அவர்கள் நீஷாப்பூரை விட்டு நீங்கி, மைஹானா வந்து சேர்ந்தனர். தம் தவமடத்திற்கு, அவர்கள் யாதொரு சொத்தையும் விட்டு வரவில்லை. அது செவ்வனே நடக்க அல்லாஹ் பேரருள் புரிவான் என்று கூறிவிட்டு வந்தார்கள். அவ்விதமே நிகழ்ந்தது.

பிறந்தகம் வந்து சிலகாலம் வாழ்ந்து வந்த அவர்கள், ஹிஜ்ரி 440 ஆம் ஆண்டு ஷஃபான் நான்காம் நாள் (கி.பி.1049 ஜனவரி 12 ஆம் நாள்) இவ்வுலகில் ஆயிரம் பிறை கண்டு வாழ்ந்த பின், தங்களின் 84ஆவது வயதில் மறுமை எய்தினர். அவர்களின் இல்லத்தின் எதிரிலிருந்த பள்ளி வாசலின் அருகில், அவர்களின் பூதல் உடல் நல்லடக்கம் செய்யப் பட்டது. அவர்களின் அடக்கவிடத்தின்மீது அவர்களே அதற்கென எழுதி வைத்த,

''இவர் இறைக்காதலின் அடிமையாய் இருந்தார்''
என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது!

பிற்காலத்தில் ஹுஜ்வீரி (ரஹ்) அவர்கள், அவர்களின் அடக்க விடத்தைத் தரிசித்து, ஆங்குத் தனிமையில் வீற்றிருக்கும் பொழுது, ஒரு பெண் புறா அவர்களின் அடக்கவிடத்தை மூடி இருந்த போர்வைக்குள் புகுந்ததைப் பார்த்தனர். அது மீண்டும் வெளி வராததைக் கண்ட அவர்கள், அப்போர்வையை நீக்கிப் பார்த்த பொழுது, அங்கு அதனைக் காண வில்லை. அவர்கள் இவ்வாறே அடுத்த நாளும், அதற்கு அடுத்த நாளும் நிகழ்ந்ததைக் கண்ணுற்றனர்.

இதன் பொருள் யாதென விளங்காது திணறிய அவர்கள், ஓரிரவு அபூ ஸயீது (ரஹ்) அவர்களைக் கனவில் கண்டு, இதுபற்றி வின வினார்கள். அதற்கு அவர்கள் 'அந்த வெண்புறா என்னுடைய நல்லியல்பு களாகும். அது ஒவ்வொரு நாளும் என்னுடன் விருந்துண்ண என் அடக்கவிடத்திற்கு வருகிறது' என்று பதிலிறுத்தார்கள்.



## 24. ஹாஜ்வீரி (ரஹ்)

கர்பலா போருக்கு முன் தினம் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அருமைத் திருப்பேரர் ஹுஸைன் (ரலி) அவர்கள், தம் குடும்பப் பெண்கள் அறுவரை இந்தியாவுக்குப் புறப்படுமாறு ஆணையிட்டார்கள். அவ்விதமே அவர்கள் இந்தியாவுக்குப் புறப்பட்டனர். அவர்கள் (1) அலீ (ரலி) அவர்களின் மகளார் ருகையா என்ற பெயருள்ள பீபி ஹாஜ், அலீ (ரலி) அவர்களின் சகோதரர் அகீலின் பெண் மக்களான (2)பீபி ஹூர், (3) பீபி நூர், (4) பீபி கௌஹர், (5) பீபி தாஜ். (6) பீபி ஷபாஸ் ஆகியோர் ஆவர். அவர்களுடன், அவர்களின் சமையல் பெண் (பீபி தன்னூரும்) சேர்ந்து கொண்டார். மலைகளையும் காடுகளையும் கடந்து அவர்கள் இறுதியாக லாகூர் வந்து சேர்ந்தார்கள்.

அவர்களின் வரவைப் பற்றி அறிந்த லாகூரை ஆட்சி செய்து வந்த இந்து மன்னர் அவர்களைத் தம் அரண்மனை அழைத்து வருமாறு தம் மகனை அனுப்பி வைத்தார். அவ்வாறே அரசிளங்குமரன் வந்து, அவர் களை அரண்மனைக்கு அழைக்க, அவர்கள் மறுத்தனர். அவர்களை அவன் பெரிதும் வற்புறுத்தவே, பீபி தாஜ் அவர்கள் அவனை வெஞ்சினத் துடன் பார்த்தனர். அடுத்த கணம் அவன் மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்தான். சற்று நேரம் கழித்து மூர்ச்சை தெளிந்து எழுந்ததும், அவன் அவர்களின் மாண்பினை உணர்ந்து அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

அந்த இளவரசனின் ஆதரவில் அவர்கள், அங்குச் சில காலம் அமைதியாக இருந்தார்கள். எனினும் நாளுக்கு நாள் தீயோர்கள் அவர் களுக்கு அதிகமதிகமாகக் கொடுமைகள் இழைக்கவே, அவர்கள் தங்களைக் காத்தருளுமாறு இறைவனிடம் இறைஞ்சினர். உடனே பூமி பிளந்து அவர்களைத் தன்னுள் ஆட்கொண்டது. இதைக்கண்டு பெரிதும் வியப்புற்ற, அவ்விளவரசன் அக்கணமே இஸ்லாத்தைத் தழுவியதுடன், அவ்விடத்தில் அவர்களின் நினைவாக ஏழு அடக்கவிடங்களை நிர்மாணித்தான்.

அப்துல்லாஹ் என்னும் பெயருடன் அந்த அடக்கவிடங்களின் பரிபாலராக அங்கேயே வாழ்ந்து வந்த அந்த இளவரசரை, மக்கள் பாபா காக்கி என்று அழைத்தனர். கி.பி. 719 ஆம் ஆண்டில், அவர் இறப்பெய்திய பொழுது, அவரையும் அங்கே அவர்கள் நல்லடக்கம் செய்தார்கள். அவரின் வழித்தோன்றல்களே, அன்றுதொட்டு இன்று வரை, அந்த அடக்க விடங்களின் பரிபாலராக இருந்து வருகிறார்கள்.

மஹ்மூது கஸ்னவி லாகூரின் மீது படையெடுத்து வந்த பொழுது, அங்கு அடங்கப் பெற்றிருப்பவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்று, அவ்வடக்க இடங்களைச் சூழச் சுற்று மதில் எழுப்பினார். பிற்காலத்தில் முகலாயப் பேரரசர் அக்பர், அங்கு கட்டடம் எழுப்பினார். அது லாகூரில் சக்கரவர்த்தினி சாலையின் அண்மையில், பீபி பாக்தாமன் மக்பரா (பரிசுத்த பெண்மணிகளின் அடக்கவிடம்) என்ற பெயருடன் இன்றும் பொலிவுடன் விளங்கி வருகிறது.

புகாராவைச் சேர்ந்த ஷா இஸ்மாயீல் என்ற இறைநேசச் செல்வர் லாகூர் வந்து வாழ்ந்து அங்கேயே கி.பி.1048-ஆம் ஆண்டில் இறப்பெய்தினார். அவரின் அடக்கவிடம் லாகூரில் ஹால்சாலையில் உள்ளது.

ஷா ஹுஸைன் ஸஞ்சனி என்று மற்றொரு இறைநேசச் செல்வர் லாகூர் வந்து வாழ்ந்து, கி.பி.1034 ஆம் ஆண்டில் இறப்பெய்தினார். அவரின் அடக்கவிடம் லாகூரைச் சேர்ந்த ஷாமீரான் என்ற பகுதியில் உள்ளது.

கி.பி. 1035 ஆம் ஆண்டில் லாகூர் வந்து வாழ்ந்து, அங்கேயே கி.பி.1092 ஆம் ஆண்டில் இறப்பெய்திய தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்களின் அடக்கவிடம் ஸர்க்குலர் சாலையில் உள்ளது. இந்தியாவில் அடங்கப் பட்டுள்ள அனைத்து இறைநேசச் செல்வர்களுக்கும், இவர்களே தலைவர் என்று கூறப்படுகிறது. இந்தியாவின் மீது படையெடுத்து வந்த அரசர்களும் சரி, இந்தியாவில் தீன்சுடர் கொளுத்தி வந்த தர்வேஷ்களும் சரி இவர்களின் அடக்கவிடத்தைத் தரிசிப்பதைத் தங்களின் தலையாய கடமையாகக் கொண்டனர். இவர்களின் அனுமதி பெறாத எந்த தர்வேஷும் இந்தியாவுக்குள் காலடி எடுத்து வைக்கவும் அஞ்சினார்கள்.

*பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் காஜா முயீனுத்தீன் சிஷ்தி(ரஹ்) அவர்கள் முதன் முதலாக இந்தியாவுக்கு வந்த பொழுது, லாகூரில் அடக்கப் பெற்றிருக்கும் அவர்களின் அடக்கவிடத்தில் நாற்பது நாட்கள் 'சில்லா இருந்து அவர்களின், அனுமதி பெற்ற பின்னரே,

* காஜா முயீனுத்தீன் (ரஹ்) அவர்கள் சில்லா இருந்த அறை, சலவைக் கற்களால் தளமிடப்பட்டு இன்றும் மரியாதையுடன் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

இந்தியாவுக்குள் நுழைந்தனர். அப்பொழுது அவர் பரவசமுற்ற நிலையில் தாதா அவர்களின் கால்மாட்டில் நின்று,

**"தாங்கள் தாம் ஈருலகிலும் கருவூலங்களை அள்ளி**
**வழங்குகின்ற தாதா கஞ்செ பக்ஷ் ஆவீர்கள்.**
**தாங்கள் தாம் இறை கீர்த்தியின் பிரதிபலிப்பாவீர்கள்.**
**தாங்கள் தாம் சம்பூரணமானவர்களுக்கு**
**ஒழுங்கான வழிகாட்டியாவீர்கள்.**
**தாங்கள் தாம் வழிதவறிச் செல்பவர்களுக்கு வழிகாட்டியாவீர்கள்'**

என்று போற்றிப் புகழ்ந்து பாடினர்.

பிற்காலத்தில் அல்லாமா இக்பால், தாதா கஞ்செ பக்ஷ் அவர்களின் அடக்கவிடத்திற்கு, ஒவ்வொரு நாள் வைகறைத் தொழுகைக்கும் வரும் வழக்கமுடையவராயிருந்தார். ஒரு தடவை அவர் வைகறையில், அவர்களின் அடக்கவிடத்தில் தியானத்தில் வீற்றிருக்கும் பொழுது தான் இந்தியப் பிரச்சினை தீர ஒரே வழி பிரிவினைதான் என்ற எண்ணம் அவரின் உள்ளத்தில் முதன் முதலாக உதித்தது என்று, அவரே கூறியுள்ளார். இத்துணை மாண்பார்ந்த இறைநேசச் செல்வர் தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்கள் யார்?

கர்பலாப் போர்க்களத்திற்குப் பின் ஹஸன் (ரலி) அவர்களின் வழித் தோன்றல்களில் சிலர் ஈரானில் அடைக்கலம் புகுந்தார்கள். ஒன்பதாவது நூற்றாண்டின் இறுதியில், ஹஸனீகள் தபரிஸ்தானில் இருந்த அப்பாஸிய ஆளுநரை விரட்டி விட்டு அதனைக் கைப்பற்றித் தங்களின் ஆட்சியை நிறுவினர். எனினும் பத்தாவது நூற்றாண்டின் துவக்கத்தில், செமானிகள் ஹஸனீகளை வென்று, தபரிஸ்தானைத் தங்களின் ஆட்சியில் ஆக்கினர். பின்னர் அலப்தகின் ஸாமானிய அரசாங்கத்திற்கு எதிராகப் புரட்சி செய்து, கஸ்னியில் சுதந்திர அரசராக ஆனபொழுது, ஹஸனீகளைத் தம் நாட்டிற்கு வருமாறு வேண்டுகோள் விடுத்தார். அவர்களும் அவ்விதமே செய்தனர்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்களின் மகன் ஸைத் ஆவார். அவரின் மகன் ஹுஸைன் அஸ்கர். அவரின் மகன் அபுல் ஹஸன் அலீ. இவர் தபரிஸ்தானில் ஹஸனீகள் ஆட்சியை நிறுவியபொழுது, அரசாங்கத்தில் முக்கிய பதவி வகித்தார் என்று தெரியவருகிறது. அவரின் மகன் ஷா ஷுஜா ஆவார். அவரின் மகன் அப்துர் ரஹ்மான். அவரின் மகன் அபுல் ஹஸன். இவரும் அரசாங்கத்தில் பெரும்பதவி வகித்தார் என்று தெரிய வருகிறது. அவரின் மகன் முஹம்மது உதுமான் ஆவார். அவர் அரசாங்கக் காவல் படையில் பணி புரிந்தார். அவரின் அருமந்தத் திருமகனாக கி.பி.1002 ஆம் ஆண்டில் கஸ்னியில் தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு, அவர்களின் தந்தையின் பெயராகிய அபுல்

ஹஸன் என்பதையே சூட்டி, சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார் அவர். அவர்களின் குடும்பம் கஸ்னியின் புறப்பகுதியான ஹுஜ்வீர் என்பதிலும், ஜல்லாப் என்பதிலும் வாழ்ந்து வந்ததனால், அவர்கள் அலீ இப்னு உதுமான் இப்னு அலீ ஹுஜ்வீரி அல்ஜல்லாபீ என்று அழைக்கப்பட்டனர். பிற்காலத்தில் அவர்களின் வள்ளன்மையின் காரணமாகவும், தாராளத் தன்மையின் காரணமாகவும் அவர்களுக்கு தாதா கஞ்செ பக்ஷ் (கருவூலங் களை அள்ளி வழங்குபவர்) என்னும் சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

இப்பொழுது ஆப்கானிஸ்தானில் ஒரு சிற்றூராக இருக்கும் கஸ்னி, முற்காலத்தில் கஸ்னவீ அரசாங்கத்தின் தலைநகராகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது. கஸ்னவீ அரசாங்கமோ வடக்கே ஆக்ஸஸ் நதி தீரத்திலிருந்து, தெற்கே கங்கை நதி தீரம் வரை பரந்து விரிந்த கிடந்தது. கஸ்னீ, இப்ராஹீம் (அலை) அவர்களைப் பின்தொடர்ந்தோர், நம்ரூதீன் கொடுங்கோலுக்கு அஞ்சி, அவர்கள் 'உர்' என்ற ஊரிலிருந்து வலசை கிளம்பி வந்த பொழுது நிர்மாணிக்கப்பட்டதென்றும், அக்காலத்திலேயே அவர்கள் லாகூர் மாவட்டத்தில் குடியேறினர் என்றும், அதன் காரணமாகவே அதற்கு லா- உர் ( உர் என்ற ஊரின் மாதிரி) என்று பெயர் வழங்கலாயிற்றென்றும், வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

கஸ்னீயில் தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்களின் குடும்பம் பொருளதாரத்தில் நடுத்தர குடும்பத்துக்கு மேற்பட்ட குடும்பமாக இருந்தது. அக்குடும்பத்தினர் ஹஸன் (ரலி) அவர்களின் வழித்தோன்றல் களாக இருந்ததனால், மார்க்க பக்தி மிகுந்தவர்களாக இருந்தனர். அவர்களின் ஆசிவேண்டி மக்கள் நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும் அங்கு வந்து குழுமிக் கொண்டிருந்தார்கள்.

ஹஸனீகள் அரபிகளாக இருந்த போதினும், அவர்கள் ஈரானில் முந் நூறு ஆண்டு காலம் வாழ்ந்து, ஈரானியப் பெண்மணிகளை மணமுடித்து வாழ்ந்து வந்ததனால், அவர்கள் வீட்டில் பேசும் மொழி பார்ஸியாகவே இருந்தது. எனவே தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்களின் அன்னை ஒரு ஃபார்ஸி பெண்ணாகவும், அவர்களின் தாய்மொழி பார்ஸியாகவும் இருந்ததில் எவ்வித வியப்புமில்லை.

அவர்களின் பெற்றோர்களைப் பற்றி யாதொன்றும் தெரியவில்லை. தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்கள் சிறு வயதினராக இருக்கும் பொழுதே, அவர்களின் தந்தை இறந்து விட்டார் என்று தெரிய வருகிறது. எனினும், தந்தையோடு கல்வி போம் என்றில்லாமல், அவர்கள் பார்ஸி, அரபி மொழிகளைக் கற்றதோடு, அவற்றிலுள்ள இஸ்லாமிய மார்க்க நூல்களையும் இளம் வயதிலேயே ஐயமறக் கற்றுத் தேர்ந்தார்கள்.

இதன்பின் அவர்களின் கவனம் ஆன்மீகம் பற்றித் திரும்பியது. 'ஆன்மீகக் கல்வியைத் தேடு. வெளிப்படை கல்வியை வெறுத்துத் தள்ளு' என்பதே அவர்களின் வழி காட்டும் ஒளி வசனமாக இருந்தது. எனவே அவர்கள், இளமையிலேயே ஆன்மீகக் கல்வியைத் தேடிப் பல நாடுகளிலும் அலைந்து திரிந்தார்கள். பொருள் தேடுவதற்காக அவர்கள் யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. உணவிற்கு அவர்கள் இறைவனையே நம்பி இருந்தார்கள்.

இளமையில் அவர்கள், மாணவர்களுக்குப் பாடம் போதித்து வந்தார்கள். பின்னர் கஸ்னீயில் சுல்தான் மஹ்மூது கஸ்னவீயால் நிர் மாணிக்கப்பட்ட பல்கலைக் கழகத்தில், அவர்கள் பேராசிரியர் பதவி வகித்தார்களென்றும், இக்காலத்தில் அவர்கள் சுல்தானின் திருமுன் வைத்தே இந்தியத் தத்துவஞானி ஒருவருடன் வாதப் போர் செய்து வாகை சூடினார்கள் என்றும் தெரிய வருகிறது.

'கல்வி என்ற ரசவாதத்தினால், சாமான்யன் கூட அறிஞனாக மாற்றிய மைக்கப்படுகிறான்' என்பதை நன்கு உணர்ந்த அவர்கள், சாதாரணக் கல்வியை அல்லாது, இறைஞானக் கல்வியைத் தேடுவதில் அல்லும் பகலும் ஈடுபட்டார்கள். "இறைவனே! பயனளிக்காத கல்வியை விட்டும் நான் உன்னிடம் காவல் தேடுகிறேன்" என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறைஞ்சிய இறைஞ்சுதலை அவர்கள் தலைமேற்கொண்டு செயலாற்றினார்கள்.

'கல்வியை பணத்தையோ பதவியையோ அடையப் பயன் படுத்தக் கூடாதென்றும், தன்னை அறியவும், இறைவனை அறியவுமே அது பயன்படுத்தப்பட 'வேண்டும்' என்றும் அவர்கள் கருதினார்கள்.

'சிறிதளவு கற்றதும் தமக்கு எல்லாம் விளங்கிவிட்டதாக எவரும் தருக்கி நிற்கக்க கூடாதென்றும், "உனக்குத் தெரியாது என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும்" என்றும், அவர்கள் இளைஞர்களுக்கு அறிவுரை பகர்ந்தார்கள் . இவ்வாறு அவர்கள் கூறி கல்விக்கு எல்லையில்லை என்றும், ஒருவன் அதில் சிறிதளவை அறிந்ததும், நாம் இன்னும் அறிய வேண்டியவை எவ்வளவோ உள்ளன என்பதை அறியவேண்டும் என்றும் அஃதே உண்மையான அறிவிற்கு அடையாளமாகும் என்றும் அவர்கள் கூறாமல் கூறினார்கள்.

அவர்கள் கல்வியைத் தேடும் முயற்சியில் கடுமையாக ஈடுபட் டிருக்கும் பொழுது, அவர்களுக்குச் சில பொழுது, அருமை அருமை யான கனவுகளும் தோற்றமளித்து வந்தன. ஒரு தடவை அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஒரு வயோதிகரை சிறு குழந்தைகளை

அணைப்பது போன்று தம் நெஞ்சோடு அணைத்துக் கொண்டு, பனூ ஷைபா வாயில் வழியாக வந்து கொண்டிருப்பது போன்று கனவில் கண்டு, ஓடோடிச் சென்று, அவர்களின் பாதங்களை முத்தமிட்டு, அந்த வயோதிகர் யாரென வியப்புடன் நோக்கினர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், தாதா அவர்களின் எண்ணத்தை விளங்கிக் கொண்டு, "இவர் உம்முடைய இமாம். உம் நாட்டு மக்களின் இமாம்" என்று கூறினார்கள்.

இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களை, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தூக்கிக் கொண்டு வந்ததிலிருந்து, அபூ ஹனீஃபா(ரஹ்) அவர் களின் 'மத்ஹப்' அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஆசியையும் ஆதரவையும் பெற்றது என்பதை நன்கு உணர்ந்து, தாதா அவர்கள் அதனை நன் முறையில் பின்பற்றி வரலாயினர்.

மற்றொரு தடவை அவர்கள் சிரியாவில் பிலால் (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தில் படுத்துறங்கும் பொழுது, அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டனர். அப்பொழுது அவர்கள் தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்களை நோக்கி, "உம்முடைய நாவையும் புலன் களையும் சிறைப்படுத்துவீராக!" என்று அருளுரை பகர்ந்து மறைந்தனர்.

அவர்கள் பிஸ்தாமுக்கு அடிக்கடி சென்று, ஆங்கு அடங்கப் பெற்றுள்ள ஆன்மீக மேதை அபூ யஸீது பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்து வந்தார்கள். ஒரு தடவை அவர்கள் அங்கு, தொடர்ந்து மூன்று மாதங்கள் தங்கியிருந்தார்கள். அவர்கள் மைஹானா சென்று ஸூஃபி மகான் அபூ ஸயீது (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தையும் தரிசித்தார்கள். அவர்கள் கிர்மான் சென்று, ஆங்கு அடங்கப் பெற்றுள்ள ஷாஷுஜா கிர்மானி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தையும், மெர்வில் அடங்கப் பெற்றுள்ள அபூபக்ர் முஹம்மது இப்னு மூஸா அல் வாஸ்தி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தையும் அபுல் அப்பாஸ் காஸிம் இப்னு அல்மஹ்தி அல்ல லய்யாதி (ரஹ்) அவர்களின் அடக்கவிடத்தையும் தரிசித்தார்கள். ஸய்யாதி (ரஹ்) அவர்களோ, துவக்கத்தில் பெரும் செல்வத்திற்குச் சொந்தக்காரராயிருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இரண்டு திருமுடிகளை வாங்குவதற்காகத் தம் அனைத்துச் செல்வங்களையும் செலவிட்ட அப்பெரியார், தம் இறப்புப் படுக்கையில் கிடக்கும் பொழுது, தம் அருகே இருந்தவர்களிடம் அந்த இரண்டு திரு முடிகளையும் கொடுத்து, அவற்றைத் தாம் இறந்ததும், தம் வாயிலிட்டு நல்லடக்கம் செய்யுமாறு பணித்துவிட்டு உயிர் நீத்தார்கள்.

தாதா அவர்கள் தம் வாணாளில் பல இறைநேசச் செல்வர்களையும் சந்தித்துள்ளனர். காமந்த் என்ற ஊரில் அதீப் என்ற பெரியார் இருப்பதாகக்

கேள்வியுற்று, அவர்களைக் காண்பதற்காக அவர்கள் அங்கு சென்றனர். அப்பெரியாரோ, இருபது ஆண்டுகளாகத் தொழுகையில், அத்தஹிய்யாத்தில் இருக்கும் இருப்பைத் தவிர்த்து, வேறு எப்பொழுதும் கீழே வீற்றிருந்ததில்லை. இதற்கான காரணத்தை அவர்கள் அப்பெரியாரிடம் வினவிய பொழுது, வீற்றிருப்பது இறைவனைத் தியானிக்கும் படித்தரத்தைத் தாம் இன்னும் அடையவில்லை என்று அப்பெரியார் சுருக்கமாகப் பதிலளித்ததைக் கண்டு, அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

மெர்விலும், பின்னர் புகாராவிலும் வாழ்ந்து வந்த ஷைகு அஹ்மது நஜ்ஜார் ஸமர்க்கந்தி (ரஹ்) அவர்களையும், தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்கள் சென்று தரிசித்தார்கள். ஸமர்க்கந்தி (ரஹ்) அவர்களோ, நாற்பது ஆண்டுகளாக இரவில் உறங்குவதில்லை. பகலில் மட்டும் சிறிது நேரம் உறங்கி வந்தார்கள்.

தாதா கஞ்செ பக்ஷ் (ரஹ்) அவர்கள், புகாராவில் ஷைகு அஹ்மது புகாரி (ரஹ்) அவர்களையும்தரிசித்தார்கள். ஒரு தடவை அவர்களைத் தரிசிக்க தாதா அவர்கள் அவர்களின் இல்லம் சென்ற பொழுது அவர்கள் தம்முன் வைக்கப்பட்ட தட்டிலிருந்து 'ஹல்வா'வைப் பிய்த்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். தாதா அவர்களைக் கண்டதும், அவர்களையும் அதனைப் பிய்த்து உண்ணுமாறு கூறினார்கள். அப்பொழுது தாதா அவர்கள், தாம் நோன்பு நோற்றிருப்பதாகக் கூறிய பொழுது, ''என்ன நோன்பு நோற்றிருக்கிறீர்?'' என்று வினவினார்கள் அவர்கள்.

''இன்ன ஷைகின் வழக்கப்படி நானும் இன்று நோன்பு நோற்றுள்ளேன்'' என்றனர் தாதா.

''அப்படியா! மனிதர்களின் வழக்கங்களை, மனிதர்கள் பின்பற்றுவது சரியல்லவே'' என்று அவர்கள் கூறினார்கள்.

இறைவனின் கட்டளையைத் தான் மனிதன் சிறிதளவும் தவறாது பின்பற்ற வேண்டுமேயன்றி, ஒரு மனிதர் தம் இயல்புக்கு ஏற்ற வண்ணம் மேற் கொள்ளும் பழக்கவழக்கங்களை, வேறு இயல்பைப் பெற்றுள்ள மற்றொரு மனிதர் அப்படியே பின்பற்றுவது அத்துணை நல்லதல்ல என்று கருத்துப் படவே அவர்கள் இவ்வாறு கூறினார்கள்.

உடனே தாதா அவர்கள் நோன்பைத் திறக்க முற்பட்ட பொழுது, அவர்கள் தாதா அவர்களை நோக்கி, ''நானும் ஒரு மனிதன் தான். எனவே நான் சொல்வதன்படியும் நீர் செயலாற்ற வேண்டாம்.'' என்று கூறி அவர்களைத் தடுத்து விட்டார்கள்.

ஃபர்க்ஹானாவிலுள்ள அஷ்லத்தாக் என்ற சிற்றூரில் வாழ்ந்து வந்த பாபு உமர் என்ற.. இறைநேசச் செல்வரையும் தாதா அவர்கள் தரிசித்துள் ளார்கள். இவர்களைக் கண்டதும் ''ஏன் இங்கு வந்தீர்?'' என்று வினவினார் பாபு உமர்.

''ஷைகு அவர்களை நேரில் தரிசிப்பதற்காகவும் அவர்களின், அருட் பார்வை என்மீது விழவேண்டும் என்பதற்காகவும் நான் இங்கு வந்தேன்'' என்று பணிவுடன் பதிலிறுத்தனர் தாதா.

அதுகேட்ட பாபுஉமர் (ரஹ்) அவர்கள், ''நான் இன்ன நாளிலிருந்து உம்மைப் பார்த்துக்கொண்டு தானே உள்ளேன்'' என்று கூறினர்.

தாதா அவர்கள் அந்நாளைக் கணக்கிட்டுப் பார்த்த பொழுது, அது தமக்கு ஆன்மீகத் திருப்பம் ஏற்பட்ட அதே நாளாக - ஒருநாள் கூடவோ, குறையவோ இல்லாமல்- இருந்தது.

அப்பொழுது தாதா அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அள வில்லை, வைத்த கண் வாங்காது அவர்கள், அப்பெரியாரை நோக்கிக் கொண்டிருந்த பொழுது, அப்பெரியார் அவர்களை நோக்கி, ''தொலைவு களைக் கடந்து பயணம் செய்வது, சிறுபிள்ளை விளையாட்டல்லவோ? எனவே நீர் மானசீக முறையில், என்னை வந்து சந்திப்பீராக! எவரையும் நேரில் உடலோடு சென்று சந்திப்பதில் பயனில்லை'' என்று கூறினர்.

இதன்பின் அப்பெரியார் தம் துணைவியாரை அழைத்து, வந்த விருந்தினருக்கு ஏதேனும் உணவு கொண்டு வருமாறு பணித்தனர். அவர் புத்தம் புதிய திராட்சைப் பழங்களையும், பேரீத்தம் பழங்களையும் கொண்டு வந்து வைத்த பொழுது, தாதா அவர்களின் வியப்பு முன்னை விடப் பன்மடங்கு அதிகமாகியது. அதற்குக் காரணம், அது திராட்சை பழுக்கும் காலமாக இல்லாதிருந்ததும், அக்காலை ஃபர்க்ஹானா முழுவதும் பேரீத்தம் பழம் கிடைக்காமலிருந்ததுமேயாம்.

சிரியாவிலுள்ள ரம்லா என்ற ஊருக்கு அண்மையிலுள்ள மஅர்ரி என்ற ஊரில் வாழ்ந்து வந்த அபுல் அலா அல்ம அர்ரி (ரஹ்) அவர்களையும் தரிசித்து, அவர்கள் இரண்டு தர்வேஷ்களுடன் திமிஷ்கிலிருந்து புறப் பட்டார்கள். அவர்கள் குருடராகவும், பெரும் செல்வராகவும், ஏழை களுக்கு வாரி, வாரி வழங்கும் வள்ளலாகவும் இருந்தனர். ''ஏன் இவ்வாறு தாங்கள் இறைவன் தங்களுக்கு வழங்கிய செல்வத்தை நுகராது பிறருக்கு வாரி, வாரி வழங்குகிறீர்கள்?'' என்று ஒருவர் அவர்களிடம் வினவிய பொழுது, ''நான் உண்பதற்கான உணவைத் தவிர்த்து வேறு என்ன எனக்குத் தேவையாக உள்ளது?'' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

தாதாவும் அவர்களின் கூட்டாளர்களான இரண்டு தர்வேஷ்களும், அவர்களைச் சோதிப்பதற்கு ஓர் உபாயம் செய்தனர். தாதா அவர்களுக்கு அபுல் அலா மஅர்ரி (ரஹ்) அவர்கள், அவர் கேட்கமாலேயே ஹல்லாஜ் (ரஹ்) அவர்களின் பாடல் அடங்கிய நூலை அன்பளிப்புச் செய்ய வேண்டுமென்றும், மற்றொருவர் அவர் கேட்கமாலேயே அவர்கள் தம் நோய் நீங்க இறைவனிடம் இறைஞ்ச வேண்டுமென்றும், வேறொரு வருக்கு அவரைக் கண்டதும், அவர்கள் அவருக்குப் பல்வண்ணத்துத் தின் பண்டங்களை உண்ண வழங்க வேண்டுமென்றும் அவர்கள் தங்களுக்குள் பேசி முடிவு செய்து கொண்டு, அபுல் அலா மஅர்ரி (ரஹ்) அவர்களைக் காணச் சென்றனர்.

அவர்கள் மூவரும் அபுல் அலா மஅர்ரி (ரஹ்) அவர்களின் தவமடம் சென்றதும், உடனே அவர்கள் தாதா அவர்களுக்கு ஹல்லாஜ் (ரஹ்) அவர் களின் பாடல்கள் அடங்கிய நூல் ஒன்றை உள்ளே சென்று எடுத்து வந்து கொடுக்குமாறு தம் பணியாளர் ஒருவருக்கு ஆணையிட்டார்கள். மற்றொருவரின் வயிற்றைத் தடவிவிட்டு அவருக்காக இறைஞ்சினார்கள். உடனே அவர் நலம் பெற்றார். அவர்கள் மூன்றாமவரை நோக்கி, 'பல வண்ணத்துப் பண்ணியங்களைப் போர்வீரர்களல்லவோ விரும்பி உண்ணுவார்கள். நீர் சூஃபிகளின் உடையை அணிந்து கொண்டு அவற்றை உண்ண விரும்புகிறீரே. இரண்டில் ஒன்றை நீர் தேர்ந் தெடுப்பீராக!'' என்று கூறினர்.

மாபெரும் இறைநேசச் செல்வரான அபூ அப்துல்லாஹ் முஹம்மது இப்னு அலீ அல் தஸ்தானீ (ரஹ்) அவர்களின் கலீபா, ஷைகு ஷஹ்லகீ (ரஹ்) அவர்களையும் தாதா அவர்கள் சந்தித்துள்ளனர். அவர்கள் தம் முடைய ஷைகைப்பற்றிக் கூறும் பொழுது, ''ஒரு தடவை பிஸ்தாம் மீது வெட்டுக்கிளிகள் படையெடுத்து வந்தன. வயல்களிலும், மரங்களிலும் வெட்டுக்கிளி மயமாகவே இருந்தது. அதனுடைய படையெடுப்பை எதிர்த்து நிற்க இயலாது, மக்கள் அபயக்குரல் எழுப்பினர். மக்கள் ஷைகு அல் தஸ்தானீ (ரஹ்) அவர்களிடம் ஓடோடி வந்து, தங்களின் உடைமை களைக் காத்தருள் புரியுமாறு வேண்டினர். உடனே ஷைகு அவர்கள் எழுந்து, தம் தவமடத்தின் முகட்டில் ஏறி வானத்தை அண்ணாந்து பார்த் தார்கள். அடுத்த கணம் வெட்டுக்கிளிகள் திக்கொன்று திசையொன்றாகப் பறந்து சென்றன. அவற்றால் ஒரு புல்லுக்கு, ஒரு தளிருக்குக் கூடச்சேதம் ஏற்படவில்லை'' என்று தாதா அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

நீஷாப்பூரில் வாழ்ந்து வந்த இறைநேசச் செல்வர் ஷைகு அல் தக்காக் (ரஹ்) அவர்கள் சிறுவராக இருக்கும் பொழுதே இறந்துவிட்டனர். எனவே அவர்களைச் சந்திக்கும் வாய்ப்பை தாதா அவர்கள் பெறவில்லை.

எனினும் அவர்களின் மாண்பினைப் பற்றிப் பின்வரும் செய்தியை ஒரு கிழவர் மூலமாக அவர்கள் கேள்வியுற்றனர்:

ஒருநாள் அவர் ஷைகு அல் தக்காக் (ரஹ்) அவர்கள் பேசிய கூட்டததிற்குச் சென்றிருந்தார். அவரின் மனம் அவர்களிடம் 'தவக்குல்' பற்றி வினவ வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தது. அப்பொழுது ஷைகு அவர்கள் தபரிஸ்தானில் நெய்யப்பட்ட உயரிய துணியாலான தலைப்பாகை ஒன்றை அணிந்திருந்தனர். அதன் மீது அவரின் பார்வை பட்டதும், அதனைப் பெற ஆசை கொண்டார் அவர்.

சற்று நேரத்திற்குப்பின் அவர் ஷைகு அவர்களை நோக்கி, ''இறைவன் மீது தவக்குல் வைப்பது என்றால் என்ன?'' என்று வினவினார்.

உடனே ஷைகு அவர்கள், ''பிறரின் தலைப்பாகை மீது ஆசை வைக்காதிருப்பதாகும்'' என்று கூறித் தாம் அணிந்திருந்த தலைப் பாகையைக் கழற்றி அவரின் முன் வீசி எறிந்தார்கள்.

ஃபார்ஸில் தலைசிறந்து விளங்கிய அபூ முஸ்லிம் காலிபுல் ஃபாரிஸி (ரஹ்) அவர்களையும் அவர்கள் சந்தித்து உரையாடியுள்ளார்கள். ஒரு தடவை, அபூ முஸ்லிம் (ரஹ்) அவர்கள், தர்வேஷ்கள் அடங்கிய ஒரு குழுவுடன் சேர்ந்து ஹஜ்ஜு செய்ய மக்கா சென்றபொழுது, வழியில் உள்வான் என்ற இடத்தில் குர்து இனத்தினர் அந்தக் குழுவினரைத் தாக்கி, அவர்கள் அணிந்திருந்த மேலங்கியைக் களைந்து கொண்டனர். அக் குழுவினரில் ஒருவரைத் தவிர வேறு எவரும் யாதொரு எதிர்ப்பும் காட்ட வில்லை. எதிர்ப்புக் காட்டிய அந்த ஒருவரைக் குர்து ஒருவன் தன் வாளை உருவிவெட்டிக் கொன்று விட்டான். அப்பொழுது ஷைகு அபூ முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அவனை அணுகி, ''ஏனப்பா அவரைக் கொன்றொழித் தாய்?'' என்று வினவியபொழுது, 'அவன் சூஃபியா என்ன? சூஃபிகளின் குழுவில் சேர்ந்த வேடதாரியல்லவோ அவன்? அவன் சூஃபியாயிருந் திருப்பின், அவனுடைய துகிலை நான் உரிய முனையும்பொழுது அவன் எதிர்ப்புக் காட்டியிருப்பானா, என்ன? தஸவ்வுஃபின் முதல்படி தாராளத்தன்மையல்லவா? தன்னுடைய ஒட்டுப்போடப்பட்ட துணியின் மீது இத்துணை வேட்கையுள்ளவன் எவ்வாறு ஒரு சூஃபியாக இருக்க இயலும்? அவன் இருப்பதைவிட இல்லாதொழிந்ததே மேல்'' என்று பதிலிறுத்தான் அவன்.

இதனை அவர்கள் தாதா அவர்களிடம் எடுத்துரைத்து, சூஃபிப் பாட்டையில் அடியெடுத்துவைக்கும் ஒருவன், எவ்வாறு பற்றற்ற தன்மையை மேற்கொண்டிருக்க வேண்டுமென்பதையும் விளக்கினார்.

ஒருதடவை 'ஸமா' என்ற பேரின்ப நிகழ்ச்சியின் போது ஒருவர், பெரிதும் உணர்ச்சி வயப்பட்டு ஆடினார் என்றும், ஆங்கிருந்த ஒருவர் அவரின் தலைமீது கையை வைத்து, அவரை அமரச் செய்தபொழுது, அவர் அக்கணமே உயிர் நீத்தார் என்றும் அவர்கள் தாதா அவர்களிடம் எடுத்துரைத்தார்கள்.

மெர்வில் அபூ ஹாமித் தஸ்தான் என்ற 'மஜ்தூப்' ஒருவர் இருப்ப தாகக் கேள்வியுற்று, அவரைக் காண்பதற்காக அவர்கள் மெர்வ் சென் றார்கள். அவருக்கு அவரின் சீடர்கள் ஆடை அணிவிப்பர். அவர் தனியே இருக்கும்பொழுது எவரேனும் வந்து அதனைக் களைந்து எடுத்துச் சென்று விடுவர். தமக்கு ஆடை அணிவிப்பவர்களிடம், ''ஏன் எனக்கு ஆடை அணிவிக்கிறீர்கள்?'' என்று அவர் கேட்பதுமில்லை. அதனைக் களைந்து எடுத்துச் செல்பவர்களிடம் ''ஏன் அதனைக் களைந்து எடுத்துச் செல்கின்றீர்கள்?'' என்று அவர் வினவுவதுமில்லை.

மெர்வுல்ரூதில் மற்றொரு மஜ்தூபைப் பற்றி அவர்கள் கேள்வி யுற்றனர். அவரின் தொழுகை விரிப்பிலும், தொப்பியிலும் பல ஒட்டுக்கள் போடப்பட்டிருந்தனவென்றும், அவற்றில் தேள்களும், நட்டுவாக்காலிகளும் குடியும் குடித்தனமுமாக வசித்தன என்றும் கூறப்படுகிறது.

தாதா அவர்கள் மெர்வில் இருக்கும் பொழுது, ஓர் இளைஞர் அவர் களை அணுகித் தமக்கு ஏராளமான விரோதிகள் இருப்பதாகவும், அவர் களின் தொல்லைகளிலிருந்து தப்ப தமக்கு ஒரு வழி கூறுமாறும் வேண்டினார். அப்பொழுது அவர்கள், ''நீ, விரோதிகள் பற்றிய எண்ணத்தையே உன் உள்ளத்திலிருது அகற்றிவிடு. உன் உள்ளத்தில் உறங்கிக் கிடக்கும் உன் தன்மையை (ஹுதியை) எழுப்பிவிடு'' என்று அவர்கள் அறிவுரை பகர்ந்தார்கள்.

ட்ரான் சாக்ஸோனியாவில் அவர்கள் ஒரு வயோதிக மஜ்தூபைக் கண்டனர். அவர் சமைக்கப்பட்ட எந்த உணவையும் உண்பதில்லை. அவரைப் பைத்தியம் எனக் கருதி மக்கள் அவர் மீது வீசி எறியும் அழுகிப் போன காய்கறிகளையும், 'கேரட்' கிழங்குகளையுமே எடுத்துக் கழுவி உண்டு அவர் உயிர் வாழ்ந்து வந்தார். குப்பை மேடுகளில் கிடக்கும் கந்தல் துணிகளைப் பொறுக்கிக் கசக்கி ஒன்று சேர்ந்து அங்கி தைத்து அவர் அணிந்து வந்தார்.

அங்கு அவர்களுக்கு தானிஷ் மந்த் அபூ முஹம்மது பங்காரி (ரஹ்) அவர்களின் இறப்பு வேளையில் உடனிருக்கும் நற்பேறும் கிடைத்தது. அவர்கள் தம் இளமைப்பருவத்திலிருந்து இறக்கும் வரை ஒருவேளை 'ஜமா அத்' தொழுகையைக் கூடத் தவறவிட்டதில்லை.

ஆஸர்பைஜானில் அவர்கள் ஒரு மஜ்தூபைக் கண்டனர். அவர் தன்னுணர்வற்றுப் பாட்டுப் பாடிய வண்ணம் மலைகளின் மீது அலைந்து திரிந்து கொண்டிருந்தார். அப்பொழுது,அவரின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடிக் கொண்டிருந்தது. திடீரென அவரின் முகம் மாறுதல டைந்தது. அவர் கீழே அமர்ந்தார். அருகிலிருந்த பாறை மீது சாய்ந்தார். அத்துடன் அவரின் உயிரும் அவரின் உடலை விட்டும் பிரிந்தது.

இராக்கில் அவர்கள் ஒரு வயோதிக ஸூஃபியைக் கண்டனர். அவரோ பாலையில் வழி தவறி அலைந்து திரிந்துவிட்டு, இறுதியாக கஃபா வந்து சேர்ந்தார். அவரின் கையில் ஒரு சிட்டுக் குருவி அமர்ந்திருந்தது. அவர் மக்களைப் பார்த்து, ''இந்தச் சிட்டுக்குருவிக்காக வேண்டி ஏதேனும் கொடுங்கள்'' என்று கூறினார். அது கேட்ட மக்கள், ''ஏன் இவ்வாறு கூறுகிறீர்? என்று வினவினர். அதற்கு அவர், ''இறைவனுக்காக ஏதேனும் கொடுங்கள் என்று என்னால் கூற இயலாது. எனவே தான் இவ்வாறு கூறுகிறேன்'' என்று அவர் பதிலுரைத்தார்.

அவர்கள் தம் சுற்றுப் பயணத்தின் போது மற்றொரு தர்வேஷையும் சந்தித்தனர். அவருக்கு சுல்தான் பல நூறு பொற்காசுகள் நிரம்பிய பொற் கிழி ஒன்றைப் பரிசாக வழங்கினார். அவர் அதனை எடுத்துக் கொண்டு, ஒரு குளியலறைக்குச் சென்றார். உரிய கட்டணத்தைச் செலுத்தி நன்றாகக் குளித்தார். அதன்பின் அங்கு குளிக்க வந்த அனைவருக்கும் அந்தப் பொற்காசுகளை அள்ளி அள்ளி விநியோகித்துவிட்டுத் தம் வழியே சென்று கொண்டிருந்தார் அவர்.

இதன் நடுவே தாதா அவர்கள் சிலகாலம் இராக்கில் பொருள் ஈட்டுவதில் அயராது ஈடுபட்டார்கள்: கிடைத்த பொருள்களையெல்லாம் அவர்கள் ஊதாரித்தனமாகச் செலவிட்டதன் காரணமாக, அவர்கள் கடன்வாய்ப்பட வேண்டியதாயிற்று. பற்றாக்குறைக்கு பணத்தேவை யுள்ளவர்களெல்லாம் அவர்களிடம் உதவிவேண்டி வந்து நச்சரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கோ என்ன செய்வதென்றே விளங்க வில்லை. இது பற்றி அவர்கள் தமக்குத் தெரிந்த ஷைகு ஒருவருக்கு எழுதி அவரின் ஆலோசனையைக் கேட்டனர். அவர் பின்வருமாறு பதில் எழுதினார்:

''பெருமையில் மூழ்கியிருக்கும் மனிதர்களின் தேவைகளை நிறைவு செய்வதில் நீர் கவனம் செலுத்துவதன் காரணமாக, உம் மனம் இறை தியானத்தை விட்டும் வேறு பக்கம் திரும்பி விடலாம். ஆதலின் எச்சரிக்கையாய் இரும். உம்மைவிட மேலான மனிதர்கள் பற்றிய வரையில் அவர்களுக்கு அமைதி. ஆறுதல் நல்குவதற்காக நீர் உம் மனத்தை அவர்கள் பால் திருப்பலாம். அப்படியில்லையெனில், நீர் உம்

கவனத்தை, திருப்ப வேண்டியதில்லை. தன் அடியார்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்கு அல்லாஹ் போதுமானவன்.''

இக்கடிதம் தாதா அவர்களுக்குப் பெரிதும் ஆறுதல் நல்கியது. தம் வணக்கத்திற்கு இடையூறு ஏற்படா அளவு தான் தாம் பிறருக்கு உதவுவதில் அக்கறை செலுத்த வேண்டும். அதற்குமேல் அக்கறை செலுத்துவது தமக்கே தாம் தீங்கிழைத்துக் கொள்வதாகவே முடியும் என்பதை அவர்கள் விளங்கிக் கொண்டு அமைதியுற்றார்கள்.

இதன்பின் ஆன்மீகக் கல்வி பெறுவதற்காக ஆசான்களைத் தேடி அலைந்த அவர்கள், சிறிது காலம் ஷைகு அஹ்மது அல் முஸஃப்பர் இப்னு அஹ்மது இப்னு ஹம்தான் (ரஹ்) அவர்களின் தாளடியில் அமர்ந்து, ஆன்மீகக் கல்வி பயின்றனர். ஒரு நாள் தாதா அவர்கள் பயணிகளின் உடை அணிந்து, தலைமயிர் அலங்கோலமான நிலையில் ஷைகு அஹ்மது ஹமதான் (ரஹ்) அவர்களின் திருமுன் வந்து நின்ற பொழுது, ''ஏன் இவ்வாறுள்ளீர்? நீர் எதைத்தான் விரும்புகிறீர், கூறும்'' என்று வினவினார்கள் அவர்கள். அதற்கு தாதா அவர்கள், தாம் சற்றுநேரம் இன்னிசையை மாந்தி மகிழ விரும்புவதாகக் கூறினர். உடனே ஓர் இசைவாணரை அழைத்து வரச் செய்து, பாடுமாறு பணித்தார்கள் ஷைகு. அவர் அளித்த இசை விருந்தில் தம்மை மறந்த நிலையில் சொக்கி மகிழ்ந்தார்கள் தாதா.

சற்று நேரம் கழித்து ஷைகு அவர்கள் தாதா அவர்களை நோக்கி, ''இன்னிசையை எவ்வாறு நுகர்ந்தீர்?'' என்று வினவினர்.

''ஆகா! அதை ஏன் கேட்கிறீர்கள்? வெகு அருமை! நான் என்னையே மறந்த நிலையில் அதில் மூழ்கித் திளைத்தேன்'' என்று பதில் கூறினார்கள் தாதா.

அப்பொழுது ஷைகு அவர்கள், தாதா அவர்களை நோக்கி, ''ஒரு காலம் வரும், அப்பொழுது இசையொலியானது உமக்கு அண்டங்காக் கையின் குரல் போன்று ஒலிக்கும். தியானம் குறைவாக உள்ள உள்ளத்தைத் தான் இசையால் கௌவிப்பிடிக்க இயலும். ஒருவனின் உள்ளத்தில் தியானம் மிகைத்துவிடின், இசை தன் ஆற்றலை இழந்து விடும். ஆதலின் இசைக்கு அதிக மதிப்புக் கொடுத்து, அதில் மயங்கி விடாதீர். அவ்விதம் செய்வீராயின் உம்மால் பெரும் குறிக்கோளை எய்தப் பெற இயலாது போய்விடும்'' என்று கூறினர்.

பின்னர் அவர்கள் ஷைகு அபுல் காசிம் இப்னு அலீ இப்னு அப்துல்லாஹ் அல்குர்கானி (ரஹ்) அவர்களின் தவமடம் சென்று, அவர்களிடம் ஆன்மீகக் கல்வி பயின்றனர். ஒரு நாள் தாதா அவர்கள் தம்

வாணாளில், தாம் கண்ட ஆன்மீகக் காட்சிகளை ஷைகு அவர்களிடம் வினயமாக எடுத்துரைத்த பொழுது, ஷைகு அவர்கள் அவற்றை மிகவும் மரியாதையுடனும், தாழ்மையுடனும் செவி சாய்த்துக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அது கண்டு அத்தகு காட்சிகள் தமக்கு மட்டும் தான் தோன்றியுள்ளன. எனவே தான் ஷைகு அவர்கள் அவற்றைச் செவி சாய்த்து பயபக்தியுடன் கேட்கிறார்கள் என்ற எண்ணம் அவர்களின் உள்ளத்தில் உதித்தது.

இதனை உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஷைகு அவர்கள், தாதா அவர்களை நோக்கி, ''நான் அவற்றைத் தாழ்மையுடன் செவி சாய்த்துக் கேட்டதற்குக் காரணம், அவை உமக்கு மட்டும் தனிப்பட்ட முறையில் அருளப்பட்டன என்பதற்காகவல்ல. அவற்றை உமக்கு அருளிய அல்லாஹ்வுக்கு மரியாதை செலுத்துவதற்காகவே அவ்விதம் செய்தேனேயன்றி வேறில்லை'' என்று கூறினர். அதுகேட்டு தாதா அவர்களுக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கும் வியப்பிற்கும் அளவில்லை.

அப்பொழுது ஷைகு அவர்கள், தாதா அவர்களை நோக்கி, ''இறை வன் பற்றிய வரையில் ஒருவன் அவனுடைய வாசலில் எப்பொழுதும் அடிமை போன்று நின்று கொண்டிருக்க வேண்டுமேயன்றி அவனுடன் உறவு கொண்டதாகக் கருதிக் கொள்ளக் கூடாது'' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

ஒரு நாள் ஷைகு அவர்கள், தாதா அவர்களுடன் மனிதனின் உள்ளத் தில் தோன்றும் தீய இச்சைகளைப் பற்றி உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, 'தீய இச்சைகளைப் பாம்புக்கு நிகராகக் கூறலாம். எவ்வாறு ஒரு பாம்பே ஆதம் (அலை) அவர்களைச் சுவனத்திலிருந்து நீக்கக் காரண மாக இருந்ததோ அது போன்று மனிதர்களின் தீய உணர்வுகளும் இச்சை களும் மனித இனத்தின் துன்பங்களுக்கே மூலகாரணமாய் இருக்கின்றன' என்று எடுத்துரைத்தனர்.

தர்வேஷ்களின் நெறிபற்றி அவர்கள் கூறும் பொழுது, ''முதலாவ தாக அவர்கள் எவ்வாறு ஒரு பீற்றலை ஒழுங்காகத் தைக்க வேண்டும் என்பதையும், இரண்டாவதாக சொல்லப்படுவதை எவ்வாறு செவி சாய்த்து ஒழுங்காகக் கேட்பது என்பதையும், மூன்றாவதாக எவ்வாறு பூமி யில் அடியெடுத்து வைத்து ஒழுங்காக நடப்பது என்பதையும் அறிந் திருக்க வேண்டும்'' என்று அவர்கள் தாதா அவர்களிடம் இயம்பினர்.

ஒரு நாள் தாதா அவர்கள் நட்பு பற்றி விளக்குமாறு தம்முடைய ஷைகிடம் கேட்ட பொழுது, ''நட்பில் சுயநலம் புகக் கூடாது. புகின், நட்பு தொலைந்து விடும். சுயநலக்காரன் தனிமையில் இருப்பதுதான்

மேலானது. ஏனெனில் அவன் நட்புக் கொள்வதற்குத் தகுதியற்ற வனாவான். தன்னலத்தை மறுத்து தன் நண்பனின் நலத்தைப் பேணுவதே நட்பின் இலக்கணமாகும்'' என்று அவர்கள் மொழிந்தார்கள்.

''பிறரின் உள்ள உணர்வை அறிவது ஷைகு குர்கானி அவர்களுக்கு இறைவன் அளித்த அருட்பேறாக இருந்தது. ஒரு நாள் தாதா அவர்களுக்கு ஒரு துன்பம் ஏற்பட்ட பொழுது, அதனைத் தம் ஆசானிடம் எடுத்துரைத்துப் பரிகாரம் காணும் எண்ணத்துடன் அவர்கள் தம் ஆசானை அணுகிய பொழுது, அவர்கள் பள்ளிவாசல் தூணை நோக்கி தாதா அவர்களுக்கு ஏற்பட்ட துன்பத்திற்கான பரிகாரத்தை எடுத்துரைப்பதைக் கேட்டதும், தாதா அவர்கள் பெரும் வியப்பெய்தினார்கள்.

இதன்பின் அவர்களுக்கு ஆன்மீகத் துறையில் மிகப் பெரும் துன்பம் ஏற்பட்டது. அதனைப் போக்கும் நோக்குடன் அவர்கள் அபூ வஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அடக்க இடம் சென்று அங்கு மூன்று மாதம் தங்கி இருந்தனர். இக்காலை அவர்கள் ஒவ்வொரு நாளும் மூன்று தடவை குளித்து, முப்பது தடவை 'உளூச்' செய்து தொழுது வணங்கிய போதினும், அவர்களின் துன்பம் தீர்வதற்கான பரிகாரம் தென்பட வில்லை. எனவே தன் துயர் போக்கும் ஆன்மீக ஆசான்களைத் தேடி அவர்கள் பல ஊர் களுக்கும் சென்றனர். குராஸானிலுள்ள ஒரு சிற்றூரில் தவமடம் இருக்கிறதென்றும், அங்குச் சில தர்வேஷ்கள் வாழ்ந்து வருகிறார்கள் என்றும் கேள்வியுற்று அவர்களைக் காண்பதற்காக தாதா அவர்கள் அங்கு சென்றனர். அப்பொழுது அவர்கள் ஒரு நீல நிறச் சட்டை அணிந்திருந்தார்கள். அவர்களின் கையில் ஒரு கழியும் தோலாலான ஒரு தண்ணீர்ப் பையும் இருந்தன.

தாதா அவர்களை இழிவுக் கண்களுடன் நோக்கிய அந்த தர்வேஷ் கள், ''இவன் நம்மைச் சேர்ந்தவனல்ல'' என்று தங்களுக்குள்ளே பேசிக் கொண்டார்கள். தாங்கள் வசதியான அறைகளில் படுத்துக் கொண்டு, தாதா அவர்களை கீழே உள்ள ஓரிடத்தில் படுக்கச் சொன்னார்கள். நல்ல உணவுகளைத் தாங்கள் அருந்திவிட்டு பாசி பூத்த ரொட்டியையே அவர்கள் தாதா அவர்களுக்கு அளித்தனர். உணவு அருந்தி முடிந்ததும் 'முலாம்' பழங்களை வெட்டி உண்ட அவர்கள், அவற்றின் தோல்களை தாதா அவர்களின் முன் வீசி எறிந்தார்கள். அப்பொழுது தாதா அவர்கள், ''இறைவனே! அவர்கள் உன் நேசர்களின் உடையை மட்டும் அணியா திருந்திருப்பின், அவர்கள் எனக்கு இழைக்கும் அவமானங்களை யெல்லாம் என்னால் பொறுத்துக் கொண்டிருக்க இயலாது போயிருக்கும்'' என்று தம் உள்ளுக்குள் கூறிக்கொண்டார்கள்.

அத்துடன் அந்தத் தர்வேஷ்கள் நின்றார்களில்லை. தாதா அவர்களைக் கேலி செய்யவும், கிண்டல் பண்ணவும் தொடங்கி விட்டார்கள். அவர்கள் அதிகமதிகமாகக் கேலி செய்யச் செய்ய தாதா அவர்கள் அதனைப் பொறுமையுடன் ஏற்று மகிழ்ச்சிக்கு மேல் மகிழ்ச்சியுற்றுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தாதா அவர்களுக்கு திடீரென 'கஷ்ஃப்' ஏற்படலாயிற்று. இத்துணை காலமாக அவர்களால் தீர்வு காண முடியாதிருந்த ஆன்மீகப் பிரச்சினைகளெல்லாம் அவர்களுக்கு ஒருநொடியில் தெளிவாயின. பொறுமையும், தாழ்மையுமே இறைவனின் திருமுன் அழைத்துச் செல்லும் ஏணிப்படிகள் என்பதை அவர்கள் உணரலானார்கள்.

இதன்பின் தாதா அவர்கள் மேற்கொண்டும் தம் ஆன்மீகப் பயணத்தை மேற்கொண்டு, ஸிரியாவிலுள்ள லுக்மான் மலையை அடைந்தார்கள். அங்குள்ள ஒரு குகையில் ஒரு பெரியார் தனியே வீற்றிருந்து, இறைவனை வணங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யார்? ஷைகு அபுல் ஃபஸல் முஹம்மது இப்னு அல் ஹஸன் அல் கத்தாலி (ரஹ்) அவர்களாவார்கள். அவர்கள் ஷிப்லீ (ரஹ்) அவர்களின் ஆன்மீக மாணவர் ஷைகு அல் ஹுஸ்ரீ (ரஹ்) அவர்களின் கரம்பிடித்து தீட்சை பெற்றவர்களாவர்.

அப்பொழுது ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள், அப்பொதும் பிற்கு வந்து அறுபது ஆண்டுகள் உருண்டோடி இருந்தன. ஐம்பத்தொரு ஆண்டுகளாக அவர்கள் ஒரே உடையையே அணிந்திருந்தார்கள். அது கிழியக்கிழிய, அதில் ஒட்டுப்போட்டுக் கொள்வார்கள். அதன் காரணமாக அந்த உடை ஒரே ஒட்டுக்கள் மயமாக இருந்தது. அவர்கள் தர்வேஷ்களின் ஒட்டுப்போடப்பட்ட கம்பளி உடையை அணியவில்லை. ஒருவர் உள்ளில் 'தர்வேஷ்' தன்மை இல்லாது, வெளியில் மட்டும் 'தர்வேஷ்' கோலம் பூண்டு திரிவதை அவர்கள் பெரிதும் கண்டித்தனர்.

முதன்முதலாக தாதா அவர்கள், ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்களின் திருமுகத்தைக் கண்டதும், அவர்கள் தாம், தம் ஆன்மீக வழிகாட்டி என்பதைத் தம் உள்ளுணர்வால் உணர்ந்து, அவர்களின் காலடியில் அமர்ந்து ஆன்மீகக் கல்வி பயிலலாயினர்.

இறைவனின் ஜலாலியத்தைவிட, ஜமாலியத்தின் மீதே அதிக நம்பிக்கை கொண்ட ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள், இறைவனின் அன்பைப் பெற்று, அவனின் அண்மையை எய்தப்பெறுவது மனிதனால் இயன்ற செயலே என்று கூறினார்கள். ஒருநாள் அவர்கள் தாதா அவர்களை நோக்கி, "இறைவன் திருமறையில் மனிதர்களைத் தம் அடிமைகள் என்று திரும்பத் திரும்பக் கூறி, 'என்னுடைய அடியார்களே! இன்று உங்களுக்கு யாதொரு பயமுமில்லை. நீங்கள் துன்புறவும்

மாட்டீர்கள்' (5:24) என்று தெளிவாக இயம்பி இருக்கும் பொழுது, மனிதன் இறைவனின் அன்பைப் பெற்று, அவனுடைய அண்மையைப் பெறுவது இயலாது என்று சிலர் கூறுவது எனக்கு வியப்பையே அளிக்கிறது. ஓர் அடியான் இறைவன் தன்மீது பொழியும் அருட்கொடைகளைக் கண்டும், அவன்மீது அன்பு செலுத்தாமல் இருக்க இயலாது. அப்படி அவன் இறைவன் மீது அன்பு செலுத்தும் பொழுது, அவன் இறைவனை நெருங்குகின்றான். அச்சம் ஒருவனைத் தொலைவிலாக்கும் பொழுது, அன்பு ஒருவனை அண்மையிலாக்குகிறது. தனக்கு நன்மை செய்பவர்களிடம் நெருக்கமாக இருப்பது மனித இயல்பாகும்'' என்று கூறினார்கள்.

ஒருநாள் தம் ஷைகு அவர்கள் 'உளூச்' செய்வதற்கு தாதா அவர்கள் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருக்கும் பொழுது, அவர்களின் உள்ளத்தில், 'எல்லாம் இறைவன் விதித்த விதிப்படி நடக்கும்பொழுது, சுதந்திரமுள்ள ஒருவன் ஏன் ஒரு ஷைகிடம் அடிமை போன்று ஊழியம் புரிய வேண்டும்?'' என்ற எண்ணம் உதித்தது.

இதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள், ''மகனே! நீ நினைப்பதை நான் அறிவேன். இறை நியதி ஒவ்வொன்றிற்கும் காரணம் இல்லாமல் இல்லை. ஒருவனுக்கு இறைவன் ஒரு மணி மகுடத்தையோ, ஓர் அரசாங்கத்தையோ அளிக்க விரும்பும் பொழுது அவனைத் தன் பவம் நினைத்துப் பச்சா தாபப்படக்கூடியவனாக ஆக்கித் தன் அருள்நேசர்களில் ஒருவருக்கு ஊழியம் செய்பவனாக ஆக்குகின்றான். அவன் செய்யும் அந்த ஊழியமே அவனை ஆன்மீக உச்சத்திற்கு அழைத்துச் செல்கின்றது'' என்று கூறினர்.

ஒருநாள் தாதா அவர்களும், ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்களும், ஆஸர் பைஜானில் ஒரு வழியே சென்று கொண்டிருக்கும் பொழுது, சில தர்வேஷ்கள் தங்களின் சட்டை விளிம்பை ஏந்திப்பிடித்த வண்ணம், ஒரு தானியக் களஞ்சியத்தின் முன் நின்று கொண்டிருப்பதைக் கண்டனர். அப்பொழுது ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள், தாதா அவர்களை நோக்கி, ''பார்த்தீரா இவர்களை! இவர்கள் தவறை விலைக்கு வாங்குபவர்களாவர். இவர்களின் வாணிபம் நன்மை பயக்காது''என்று கூறினர்.

'அவர்கள் எவ்வாறு இத்தகு இழி நிலைக்கு ஆளானார்கள்?' என்று தாதா அவர்கள் வினவிய பொழுது, அவர்களின் ஷைகுமார்கள், சீடர்களைப் பெறப் பேராசையுடையவர்களாய் இருக்கிறார்கள். அவர்களின் சீடர்களோ, உலகப் பொருள்களைப் பெறுவதற்காகப் பேராசை பிடித்து அலைகிறார்கள்'' என்று கூறினர்.

ஒருநாள் தாதா அவர்களும் ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்களும், பைத்துல் ஜின்னிலிருந்து திமிஷ்கிற்கு புறப்பட்டுச் சென்ற பொழுது, கடுமையான மழை பெய்து, வழியெங்கணும் சேறும் சகதியுமாகி விட்டது. அதில் தாதா அவர்கள் சிரமத்தோடு நடந்து சென்றார்கள். ஆனால் ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்களின் காலணிகளோ, துணிமணிகளோ அணுவத்தனையும் நனையவோ, அசுத்தமாகவோ இல்லை. இதுபற்றி தாதா அவர்கள் தம் வியப்பைத் தெரிவித்த பொழுது, "ஆம், நான் இறைவன் மீது தவக்குல் வைத்து என்னுடைய உள்ளத்தைப் பேரரசையை விட்டும் பாதுகாத்ததன் காரணமாக, இறைவன் சேறு சகதியிலிருந்து என் துணிமணிகளைக் காப்பாற்றினான்" என்று ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இதன்பின் பைத்துல் ஜின்னுக்கு மீண்ட ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்களுக்கு, அவர்களின் இறுதி அண்மியது. அவர்கள் இறப்புப் படுக்கையில் கிடக்கும்பொழுது, அவர்களின் தலை தாதா அவர்களின் மடிமீது இருந்தது. அப்பொழுது தாதா அவர்களின் உள்ளத்தில் நின்றும் கெட்ட முறையில் நடந்துகொண்ட ஒரு நண்பனைப்பற்றிய எண்ணம் தோன்றி வருத்திக் கொண்டிருந்தது. அதனைத் தம் உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட ஷைகு அல் கத்தாலி (ரஹ்) அவர்கள், தாதா அவர்களை நோக்கி, "மகனே! நான் உம்மிடம் ஒன்றைக் கூறுகிறேன், அதனை நீர் வன்மையாகப் பற்றிப்பிடித்துக்கொள்ளின், உமக்கு எத்தகு துன்பமோ, துயரமோ எற்படாமல் போய்விடும். அது என்னவெனில் உமக்கு இறைவன் நன்மையையோ, தீமையையோ செய்தபோதினும், அதற்காக நீர் வருத்தமுறவோ, அவனுடைய செயலில் குறை காணவோ, செய்யாதீர்" என்று கூறினர்.

இதன்பின் அவர்கள் தாதா அவர்களை நோக்கித் "தாம் இறந்தபின் தம்மை நல்லடக்கம் செய்துவிட்டு லாகூருக்குச் செல்லுமாறு" பணித்தனர். "அங்கு தங்களின் ஆன்மீக மாணவர் ஷைகு ஸஞ்சனி இருக்கிறார்களே, என்னை வேறு அங்கே ஏன் செல்லுமாறு பணிக்கிறீர்கள்?" என்று தாதா அவர்கள் வினயமாக வினவியபொழுது, "ஏன் எதற்கு என்றெல்லாம் கேட்காது நான் கூறுகின்றபடிச் செய்யும்" எறு கூறித் தம் பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தார்கள் அவர்கள். அத்துடன் அவர்களின் மூச்சும் நின்றது.

தம் ஷைகின் இறுதி ஆணைப்படி, அவர்களை நல்லடக்கம் செய்து விட்டு, லாகூர் புறப்பட்டார்கள் தாதா. அவர்கள் லாகூரின் அண்மையை அடைந்து அதன் எல்லைக்குள் காலெடுத்து வைத்த பொழுது, ஒரு ஜனாஸா (வெற்றுடல்) அடக்கம் செய்யப் பெறுவதற்காக மக்களின்

தோள்கள்மீது தவழ்ந்து வந்துகொண்டிருந்தது. மக்கள் போட்டிபோட்டுக் கொண்டு நான் முந்தி, நீ முந்தி என அந்த ஜனாஸாவைத் தம் தோள் கொடுத்துத் தாங்கிக் கொண்டு வந்தனர். அது வேறு எவருடைய ஜனாஸாவும் அல்ல, ஷைகு ஸஞ்சனி (ரஹ்) அவர்களின் ஜனாஸாவே யாகும்.

அதன்பின் மக்கள் அனைவரும் ஒருமித்து வேண்டிக் கொண்டதன் பேரில், தாதா அவர்களே ஷைகு ஸஞ்சனி (ரஹ்) அவர்களின் ஜனாஸாத் தொழுகையைத் தொழ வைத்தனர். அப்பொழுது தான், தம்மை லாகூருக்குப் புறப்பட்டுச் செல்லுமாறு, தம் ஷைகு கூறியதன் உட்பொருள் தாதா அவர்களுக்கு விளங்கலாயிற்று.

லாகூர் வந்த தாதா அவர்கள், ரவி நதியின் கரையில் ஒருசிறு குடில் அமைத்து, அங்கேயே தங்கி தீன் பயிர் வளர்த்து வந்தார்கள். அவர்களின் மாண்பினை அறிந்து, அவர்களைத் தரிசிப்பதற்காக ஏராளமான முஸ்லிம் களும், இந்துக்களும் அங்கு வந்து சென்றார்கள். அப்படி அங்கு வந்து சென்றவர்களில், லாகூரின் நாயிப் ஹகீம் ஆகப் பணிபுரிந்த ராய் ராஜூ என்பவரும் ஒருவர். விரைவில் அவர் இஸ்லாத்தின் மாண்பினை உணர்ந்து, தாதா அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவினார். அவருக்கு ஷைகு ஹிந்தி என்ற பெயர் சூட்டியும் மகிழ்ந்தனர் தாதா.

இதன்பின் ஷைகு ஹிந்தியின் தூண்டுதலின் பேரில் ஏராளமான பேர் இஸ்லாத்தைத் தழுவினர். பாட்டிவாயில் என்ற பகுதியில் வாழ்ந்து வந்த இந்துக்களில், பெரும்பாலோர் இஸ்லாத்தைத் தழுவி, தங்களின் பகுதிக்கு தாதா அவர்களின் நினைவாக 'ஹுஜ்வீரி வாயில்' என்று பெயரிட்டனர். அதனை ஏற்றுக் கொள்ளாது, ஆங்கு வாழ்ந்து வந்த இந்துக்களில் சிலர் தங்களின் தலைவரின் பெயரால் 'ஜெய் சிங் வாயில்' என அதற்குப் பெயர் சூட்டினர்.

நாளுக்கு நாள் ஏராளமான பேர் தாதா அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவியது கண்டு, ஆங்கு வாழ்ந்து வந்த இந்துக்களுக்கு ஏற்பட்ட கலக்கத்திற்கு அளவில்லை. எனவே கி.பி. 1037 ஆம் ஆண்டில் சுல்தான் மஸ்வூத், லாகூருக்கு வருகை தந்தபொழுது, இந்துக்களின் தூதுக் குழு ஒன்று ஜெய் சிங்கின் தலைமையில் அவரைக் கண்டு, ஏராளமான பேர் இஸ்லாத்தைத் தழுவுவதையும், 'பாட்டிவாயில்' என்றிருந்ததை 'ஹுஜ்வீரி வாயில்' என்று மாற்றியமைத்திருப்பதையும் பற்றிக் குறை கூறினர். அவர்களின் குறைகளை அநுதாபத்துடன் செவி தாழ்த்திக் கேட்ட சுல்தான் அத்தூதுக் குழுவினரை நோக்கி, 'நீங்கள் தாதா அவர்களிடம் சென்று, மக்கள் வற்புறுத்தி இஸ்லாத்தில் சேர்க்கப்

பட்டார்களா என்பதைத் தீர விசாரித்தறிந்து வந்து என்னிடம் கூறுங்கள். நான் ஆவன செய்கிறேன்'' என்று கூறினார்.

அவ்விதமே அத்தூதுக்குழு, அதுபற்றி விசாரித்தறிய தாதா அவர் களிடம் சென்றபொழுது, தாதா அவர்கள் இஸ்லாத்தைப்பற்றியும், அதன் எளிய, இனிய இயல்புகளைப் பற்றியும் அவர்களுக்கு எடுத்தோதினர். அடுத்தகணம் வந்த தூதுக்குழுவினர் அனைவரும் தாதா அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவியதோடு, பாட்டி வாயிலுக்கு, ''ஹுஜ்வீரி வாயில்'' என்று பெயர் சூட்டப்படுவதைத் தாங்கள் ஏற்றுக் கொள்வ தாகவும் கூறினர்.

ஆனால் தாதா அவர்களோ, அவர்கள் கூறியதை ஏற்றுக் கொள்ளாது ''அது ஹுஜ்வீரி வாயில் என்றோ, ஜெய்சிங் வாயில் என்றோ அழைக்கப் பெற வேண்டாம். அது என்றும் போல் 'பாட்டிவாயில்' என்றே அழைக்கப்படட்டும்'' என்று தீர்ப்பு வழங்கினர்.

சிறிதுகாலம் சென்று, மீண்டும் ஒரு பிரச்சினை கிளம்பியது. துவக்கத் தில் லாகூர் மாவட்டத்தில் இருந்த அந்த ஊர் மன்துகூர் என்று அழைக்கப் பட்டு வந்தது. சுல்தான் மஹ்மூது அதனைத் தம் பெயரால் 'மஹ்மூதுப்பூர்' என்று அழைத்தார். ஆனால் இந்துக்களோ, அதனை விரும்பாது அதனை முன்புபோல் மன்துகூர் என்று அழைத்தார்கள். முஸ்லிம்களோ அதனை மஹ்மூதுப்பூர் என்றும் அழைத்தார்கள். இப்பொழுது அப்பிரச்சினை தாதா அவர்களின் தீர்ப்புக்கு வந்தது. தாதா அவர்களோ, ''அதனை இனிமேல் மன்துகூர் என்றோ மஹ்மூதுப்பூர் என்றோ அழைக்க வேண்டாம். இந்த மாவட்டத்தின் பெயராகிய 'லாகூர்' என்பதாகவே அழைத்துவாருங்கள்' என்று கூறினர். அதிலிருந்து அது லாகூர் என அழைக்கப் பெறலாயிற்று.

சுல்தான் மௌதூதின் ஆட்சியின் போது, இந்து அரசர்கள் ஒன்று சேர்ந்து, லாகூரின் மீது படையெடுத்தபோது மக்களை ஜிஹாதுக்கு (மார்க்கப் போருக்கு) கிளர்ந்தெழுமாறு ஊக்குவித்தனர் தாதா. அவர்களின் ஊக்குதலால் உந்தப் பெற்று, முஸ்லிம்கள் வீராவேசத்துடன் போர் செய்தனர். இப்பொழுது லாகூரின் உள்ளே உள்ள 'கஞ்செ ஷஹீதான்' என்ற இடத்தில், ஆயிரக்கணக்கான முஸ்லிம்கள் வீரமரணம் எய்தினர். அதன் காரணமாக, அதற்கு அப்பெயர் ஏற்பட்டது. இறுதியாக முஸ்லிம்கள் வெற்றி பெற்றார்கள்.

தாம் வந்து குடியேறி வாழ்ந்து வந்த அந்த இடத்திலேயே தாதா அவர்கள், ஒரு தவமடத்தையும், ஒரு பள்ளிவாயிலையும் நிர்மாணித் தனர். ஒரு தடவை சிலர் பள்ளிவாயிலில் கிப்லா சரியாக மேற்குத் திக்கை

நோக்கி அமையவில்லை என்றும் சற்று வடக்குப் பக்கம் நோக்கி அமையப் பெற்றிருக்கிறதென்றும் குறை கூறினர். இது தாதா அவர்களின் செவியிலும் விழுந்தது.

''சரி. வாருங்கள் தொழுவோம், தொழுதபின் ஆவனசெய்வோம்'' என்று கூறி தாதா அவர்கள் தொழ வந்தார்கள். குறை கூறியவர்களும் அவர்களின் பின்னே நின்று தொழுதனர்.

தொழுது முடிந்த பின் தாதா அவர்கள், குறை கூறியவர்களை நோக்கி, ''என்னவோ கூறினீர்களே, இப்பொழுது சரியாகப் பாருங்கள் கிப்லா கோணலாகவா இருக்கிறது?'' என்று வினவினார்கள்.

குறை கூறியவர்களும் தங்களின் கண்களை அகலவிரித்துப் பார்த்தார்கள். நிமிர்ந்து நின்று பார்த்தார்கள். தலையைச் சாயவைத்துக் கொண்டு பார்த்தார்கள், கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தார்கள். அவர்கள் எப்படிப் பார்த்தபோதிலும், 'கிப்லா' சரியாகவே இருந்தது. அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், நாணத்திற்கும் அளவில்லை.

லாகூரில் தாதா அமைத்த தவமடம், நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் வரும் தர்வேஷ்களுக்குத் தங்குமிடமாக இருந்து வந்தது. தம் தவமடம் வரும் தர்வேஷ்களை அகம் மலர, முகம் மலர வரவேற்று உணவளித்துக் கௌரவித்தார்கள் தாதா. அவர்களிடம் 'நீங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள் என்றோ எங்குச் செல்கின்றீர்கள் என்றோ, உங்களின் பெயர் என்னவென்றோ அவர்கள் ஒரு போதும் வினவியதில்லை. அதற்குக்காரணம், அவர்கள் இறைவனிடமிருந்து வந்தார்கள். இறைவனளவில் சென்று கொண்டிருக்கிறார்கள். அவர்களின் பெயர் அப்துல்லாஹ் அதாவது அல்லாஹ்வின் அடிமை என்பதாகும் என்று அவர்கள் கருத்துக் கொண்டதேயாகும்.

இரவில் அவர்கள் தம் விருந்தினர்களை நோக்கி, ''பொது மன்றத்தில் படுத்துறங்க விரும்புகின்றீர்களா? தனிஅறையில் படுத்துறங்க விரும்புகின்றீர்களா?'' என்று வினவுவர். தனி அறையில் படுத்துறங்க விரும்புகின்றவர்களைத் தனிஅறைக்கு அனுப்பி விட்டு, ஏனையோரைத் தம்முடன் பொது மன்றத்தில் படுத்துறங்கச் செய்வார்கள் அவர்கள்.

விருந்தினர்கள் படுக்கைக்குச் செல்லுமுன், அவர்களின் பாதங்களைக் கழுவி விடுவதாக தாதா அவர்கள் கூறுவார்கள். வைகறையில் அவர்கள் துயிலெழுந்ததும், அவர்களைக் குளியல் அறைக்கு அழைத்துச் சென்று, அவர்களைக் குளிக்கச் செய்வார்கள். அதன்பின் அவர்களுக்கு புத்தாடை அணிவித்து தாதா அவர்கள் மகிழ்வார்கள்.

முதியோர்களிடம் மரியாதையாகவும், சமவயதுடையவர்களுடன் நெறியோடும், இளைஞர்களுடன் அன்போடும் அவர்கள் பழகுவார்கள்.

தேவைப்பட்டாலொழிய அவர்கள் வீணே பேசமாட்டார்கள், பேசினாலும் இறைவனுக்காக வேண்டியே பேசுவார்கள். இறைவனைப் பற்றியே பேசுவார்கள். ''ஒரு தர்வேஷானவர் வாய்மூடி இருக்கும் பொழுது பொய்யின் மீது வாய்மூடி இருக்கக் கூடாது. பேசினால் உண்மையையன்றி வேறொன்றும் பேசக் கூடாது. கலிமாவை உச்சரித்த நாவிலிருந்து பொய்யோ, புறமோ, பிறர் மனத்தைப் புண்படுத்தும் சொற்களோ, ஒரு போதும் வெளி வரக்கூடாது'' என்று அவர்கள் கூறுவார்கள். நடந்து செல்லும்பொழுது வேகமாகச் செல்ல மாட்டார்கள். அது பேராசையின் அறிகுறி என்று அவர்கள் கருதினார்கள். அதற்காக அவர்கள் மிகவும் மெதுவாகவும் நடந்து செல்லமாட்டார்கள். அது பெருமையின் அடையாளம் என்று அவர்கள் கருத்துக் கொண்டிருந்தார்கள். பொதுவாக அவர்களுடைய நடைநடுத்தரமானதாக இருந்தது. எவரும் அவர்களைப் பார்த்து, ''எங்கே செல்கின்றீர்கள்?'' என்று வினவின், ''இறைவனை நோக்கிச் செல்லுகின்றேன்'' என்று அவர்கள் பதில் கூறும் வண்ணம் அது அமைந்திருந்தது.

பிறருடன் நடந்து செல்லும்பொழுது, எல்லோருக்கும் முன்பாகவும் அவர்கள் செல்லமாட்டார்கள். அது பெருமையின் பாற்படும் என்று அவர்கள் கருதினார்கள். அதற்காக அவர்கள் எல்லாருக்கும் பின்னாலும் வரமாட்டார்கள்; அது அளவுக்கு மீறிய தாழ்மையைக் குறிக்கும் என்றும், தான் பிறரைவிடத் தாழ்மையுடன் நடந்து கொள்வதாக ஒருவன் எண்ணும் எண்ணம் ஒருவகைப் பெருமையின் பாற்பட்டதேயாகும்'' என்றும் அவர்கள் கருத்துக் கொண்டிருந்தார்க்ள.

தர்வேஷ்கள் எவரும் அவர்களை உணவுவுண்ண அழைப்பின், அதனை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்வார்கள். செல்வர்களின் விருந்தழைப்பை அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. செல்வர்களின் வீட்டு வாசலில் அவர்கள் கால் மிதித்ததும் கிடையாது.

இரவில் உறங்கச் செல்லும் முன் 'உளூச்' செய்து, இறைவனிடம் பாவமன்னிப்புக் கேட்டபின், முகம் 'கிப்லா'வை முன்னோக்கிய வண்ணம் வலதுபக்கம் ஒருக்கணித்துப் படுப்பார்கள். அப்பொழுது, அவர்கள் தாம் விழித்தெழின், தாம் பாபச் செயலில் மீண்டும் ஈடுபடுவதில்லை என்று இறைவனிடம் உறுதிப் பிரமாணம் செய்வார்கள். உறக்கத்திலிருந்து விழித்தெழுவதை அவர்கள், மறுமையில் உயிர்த்தெழுவதன் முன் மாதிரி என்றே கருதினர்.

அவர்கள் தம் தோழர் அபூ ஸயீது ஹுஜ்வீரி (ரஹ்) தம்மிடம் கேட்ட பல்வேறு கேள்விகளுக்குப் பதில் கூறும் முறையில், 'கஷ்புல் மஹ்ஜூப்' (இரகசியங்களை வெளியாக்குதல்) என்னும் பெயருடன் ஒரு நூல் எழுதினர். இதற்கு முன் அவர்கள் ஒரு கவிதை நூலும் எழுதினர். அதன் பிரதியை அவர்கள் ஒருவரிடம் கொடுக்க, அவர் அதன் முகப்பில் இருந்த அவர்களின் பெயரை அழித்து விட்டு அதனை மக்களிடம் நடமாட விட்டார். அதன் மறுபிரதி அவர்களின் கையில் இல்லாததால், அதுபற்றி யாதோர் உரிமையும் அவர்களால் கோர இயலாது போய்விட்டது. மற்றொருவர் அவர்கள் எழுதிய 'மின்ஹாஜுத்தீன்' என்ற நூலில் இருந்த அவர்களின் பெயரை அழித்துவிட்டு, அதற்கு பதிலாகத் தம்பெயரைப் பொறித்து, மக்களிடம் அந்நூலை நடமாடவிட்டார். அது கண்டு மக்கள் அவரை இழித்துரைத்து, அவரின் பித்தாலட்டச் செயலை ஊரறியப் பகிரங்கப் படுத்தினார்கள். எனவே, தாதா அவர்கள் இந்நூலில் எச்சரிக்கை யுடன் தம் பெயரைத் துவக்கத்திலும் இடையிலும் இறுதியிலும் குறிப்பிட்டுள்ளார்கள்.

'கஷ்ஃபுல் மஹ்ஜூ'பே தாதா அவர்கள் எழுதிய நூல்களில் தலை சிறந்ததாக விளங்குகிறது. அதில் அவர்கள் பல்வேறு செய்திகளை எடுத்துரைக்கின்றார்கள். கல்வியின் அவசியத்தைப்பற்றியும், கற்றதன் படிச் செயலாற்ற வேண்டியதன் அவசியத்தைப்பற்றியும் அவர்கள் கூறும் பொழுது, 'பக்தியில்லா வணக்கவாளன் செக்கிழுக்கும் கழுதைக்கு நிகராவான்' என்ற நபிமொழியைக் குறிப்பிட்டு அவன் அந்தச் செக்கைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பானேயன்றி யாதொரு முன்னேற்றமும் அடையமாட்டான் என்று எடுத்துரைக்கிறார்கள்.

''நான் முப்பது ஆண்டுகளாக ஆன்மீகப் போராட்டத்தில் ஈடு பட்டேன். இந்த முப்பதாண்டு காலத்தில் எனக்கு அறிவு தேடுவதிலும், அதன்படிச் செயலாற்றுவதிலும் ஏற்பட்ட துன்பம் போன்று வேறு எத்துன்பமும் கடினமாக இருக்கவில்லை'' என்று அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் கூறியிருப்பதை மேற்கோள் காட்டி, கற்றதன்படிச் செயலாற்றுவதை விட, நெருப்பின் மேல் நடப்பதை எளிதாகக் கருதுவது மனித இயல்பு என்றும் முட்டாள்கள் ஒரு சிறு அறிவுத் துணுக்கைக் கற்றுக்கொள்வதைவிட, ஆயிரம் தடவை ஒரு பாலத்தின் மீது நடந்து சென்று வருவதை விருப்பத்துடன் செய்வர் என்றும், கொடியவர்கள், தாம் கற்ற ஓர் அறிவைச் செயலாற்றுவதைவிட, நரகத்தில் கூடாரம் அடித்துத் தங்குவதை விருப்பத்துடன் செய்வர் என்றும் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ஏழ்மை நியாயத் தீர்ப்பு நாளின்போது இறைவன், வானவர்களை நோக்கி, என் அன்பிற்குரியவர்களை, என் அருகே அழைத்து வாருங்கள்'' என்று கூறுவான். ''எவர் உன் அன்பிற்குரியவர்கள்?'' என்று வானவர்கள் வினவுவார்கள். ''ஏழை, எளியோர்கள்'' என்று இறைவன் பதிலுரைப்பான்.

ஒருவன் அதிகமான ஏழ்மையில் இருக்கும்பொழுது தான், அவன் ஆன்மீகத்தில் அதிக மகிழ்ச்சியைக் காண்பான். ஒரு தர்வேஷ் சொத்துக்களைப் பெற்றிருப்பது, அவனின் துர்அதிர்ஷ்டமே ஆகும். அவன் உலகப் பொருள்களைத் தனக்காக வேண்டிச் சிறை செய்வானாயின், அவன் தன்னையே தான் சிறைபடுத்திக் கொள்கின்றான்.'

''ஏழ்மை, தகுதி வாய்ந்தவர்களிடம் மாண்பு பெற்று விளங்குகிறது'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

அத்தகு தகுதி வாய்ந்த ஒரு தர்வேஷை நோக்கி, ''உமக்கு ஏதேனும் பொருள் வேண்டியிருப்பின் கேளும்! தருகிறேன்'' என்று ஓர் அரசன் கூறினான்: அதற்கு அந்த தர்வேஷ் ''நான் என்னுடைய அடிமைகளிடமிருந்து யாதோர் உதவியையும் எதிர்பார்ப்பதில்லை'' என்று பதில் கூறினார்.

அவரின் இப்பதில் அரசனைத் தூக்கி வாரிப்போட்டது. ''என்ன, நான் உம் அடிமை என்று கூறுகின்றீரா?'' என்று அலறினான்.

அதுகேட்ட தர்வேஷ் அமைதியுடன் ''நீர் என்னுடைய அடிமையல்ல, என்னுடைய அடிமைகளின் அடிமை'' என்று கூறினார்.

''என்ன, நீர் என்னுடன் விளையாடுகிறீரா?'' என்று வெகுண்டெழுந்தான் அரசன். அவனுடைய கை, தன் பக்கத்திலிருந்து குறுவாளை நோக்கிச் சென்றது.

அப்பொழுதும் தர்வேஷ் சிறிதேனும் அமைதி இழக்காதவராய், ''எனக்கு இரண்டு அடிமைகள் உள்ளனர். ஒன்றின் பெயர் பேராசை; மற்றொன்றின் பெயர், பிறர் உதவியை எதிர்பார்த்தல். அவை இரண்டையும் அடக்கி ஒடுக்கி, என் அடிமைகளாக ஆக்கிவிட்டேன். ஆனால், அவை இரண்டும் உம்மீது எசமானத்துவம் பண்ணுகின்றன. நீர் அவற்றின் அடிமையாக இருக்கின்றீர்'' என்று கூறினார். அரசன் மறுவார்த்தை பேசவில்லை.

இவ்வாறு அருமை அருமையான செய்திகளை, அள்ளிச் சொரிந்து தீன் சுடர் கொளுத்தி நின்ற தாதா அவர்கள், உலகு நீத்து இன்று ஏறத்தாழத் தொள்ளாயிரம் ஆண்டுகளாயினும், அவர்களின் கீர்த்திக் கதிரவன் அன்றுபோல் இன்றும் சுடர் வீசிக்கொண்டுள்ளது. அது என்றென்றும் சுடர் வீசிக்கொண்டிருக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.



## 25. காஜா ஹுபைரா பஸரீ (ரஹ்)

பஸராவில் பிறந்த ஓர் இளைஞர் பதினேழு வயதிலேயே மார்க்கக் கல்வி பயின்று சிறந்த மேதையாக விளங்கினார். அதன்பின் குர்ஆனை மனனம் செய்யத் தொடங்கி, அதனையும் விரைவில் மனனம் செய்து முடித்தார். அத்துடன் நில்லாது அதனை நாள்தோறும் இரண்டு தடவை ஓதி முடிக்கும் வழக்கத்தை மேற்கொண்டார். முப்பதாண்டுகளாக அவர் அல்லும் பகலும் இறை வணக்கத்திலேயே ஈடுபட்டார். இவ்விதம் செய்தும், அவர் மனம் நிறைவுறவில்லை. இறைவனின் மாண்பினுக் கேற்ப, அவனுக்குத் தம்மால் காணிக்கை நல்க இயலவில்லையே என்று அவர் வருந்தினார். ஒருநாள் அவர் தொழுது முடிந்தபின் இறைவனை நோக்கி, ''இறைவ எம்பெரும! இந்த எளியவனாகிய ஹுபைராவால் இந்த அளவே உன்னை வணங்க முடிகிறது. எனவே அவனை மன்னித்தருள்வாயாக! நீ அவனை மன்னிக்காவிட்டால், அவன் அழிந்தே போய் விடுவான்'' என்று கல்லும் கரைந்துருகும் வண்ணம் இறைஞ் சினார். அப்பொழுது அவருடைய கண்களிலிருந்து நீர் ஆறெனப் பெருக்கெடுத் தோடியது. ''ஹுபைரா! நாம் உம்மை மன்னித்தோம். விலாயத்தின் உயர்ந்த படித்தரத்தை நீர் எய்தப்பெறுவீர். காஜா மர்வஸீயை அணுகுவீராக!'' என்று திடீரென அசரீரி முழங்கியது. அதனைச் செவியுற்றதும், அவருடைய முகம் மலர்ந்தது. அதற்குமேல் அவரால் தம் தாயகமான பஸராவில் ஒரு நிமிடமும் தங்கி இருக்க இயலவில்லை. அவருடைய கால்கள் அவரை அறியாமல், அவரை சுல்தான் இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்களின் ஆன்மீக மாணவர் ஹஸீபா மர்வஸீ (ரஹ்) அவர்கள் வாழ்ந்து வந்த நகரை நோக்கி இழுத்துச் சென்றது.

ஹுபைரா (ரஹ்) அவர்களின் வரவைப்பற்றி ஏற்கனவே, உள்ளுணர் வால் உணரப்பெற்ற ஹஸீபா மர்வஸீ (ரஹ்) அவர்கள், தம்முன் வந்து நின்று, தமக்கு ஸலாம் உரைத்த அந்த நடுத்தர வயதினரை அகம்மலர, முகம்மலர வரவேற்று, ஆலிங்கனம் செய்து அமரச் செய்து, ஆன்மீக ஞானத்தை ஊட்டினர். ஓராண்டு தம் காலடியில் அமர்ந்து ஆன்மீகப்

பயிற்சிபெற்ற ஹுபைரா (ரஹ்) அவர்களுக்குப் பின்னர் 'கிர்க்கா'வும் அணிவித்துக் கௌரவித்தார்கள், அப்பொழுது தமக்கு ஏற்பட்ட அனுபவத்தை ஹுபைரா (ரஹ்) அவர்களே கூறுகின்றார்கள். நாமும் கேட்போம்.

''என்னுடைய குருநாதர் அவர்கள் எனக்கு கிர்க்கா அணிவித்த பொழுது, 'ஹுபைரா! நம்முடைய சந்நிதானத்தில் நீர் இப்பொழுது அங்கீகரிக்கப்பட்டுவிட்டீர்' என்று அசரீரி முழங்கியதை நான் செவியுற்றேன். அதை, தொடர்ந்தாற்போல் அண்ணல் நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் புடைசூழ வந்து எனக்காக 'துஆ' இரந்ததையும் நான் கண்ணால் கண்டேன்''.

இதன்பின் இவர்களின் வாழ்விலே பெரும் மாறுதல் ஏற்பட்டது. உப்பையும், சர்க்கரையையும் இவர்கள் பயன்படுத்தவில்லை. தொடர்ந்து நோன்பு நோற்ற இவர்கள், தண்ணீரால் மட்டுமே நோன்பைத் திறந்தனர். ஐந்து அல்லது ஆறு நாட்களுக்கு ஒருமுறையே உணவுண்டு வந்தார்கள். இதுகண்ட மக்கள், ''ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்? நோன்பு திறந்தபின், உண்ணவும், பருகவும், இறைவன் அனுமதியளித்திருக்கும்பொழுது, ஏன் உங்களையே நீங்கள் வீணே துன்புறுத்திக் கொள்கிறீர்கள்?'' என்று வினவிய பொழுது, அவர்கள் கூறிய இரத்தினச் சுருக்கமான பதில் இதுவாக இருந்தது:

''நாம் நோன்பு திறப்பது பற்றியும், இறைவனுக்குக் கணக்குக் கொடுக்க வேண்டியுள்ளது. அதனை நான் குறைத்துக் கொள்ள விரும்புகிறேன்''.

அவர்கள் தம் வாணாளை ஒரே அறையில் கழித்து, இரவு பகலாக வணக்கத்தில் ஈடுபட்டிருந்தாலும், மக்கள் பணியே இறைவன் பணி என்று, அவர்கள் கருதினார்கள். அறிவையும் ஞானத்தையும் தேடித் தம்மிடம் வருபவர்களுக்கு அவற்றை அளித்து அவர்களையும் இறைநேசச் செல்வர்களாக ஆக்கினர். அவர்களின் கடைக்கண் பார்வைபட்டு எத்தனையோ பேர் இறைநேசச் செல்வர்களாயினர். அரசர்களையோ, செல்வர்களையோ நாடிச் செல்லாது, தம் தவமடத்திலேயே ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வாழ்ந்து வந்த அவர்கள், 'செல்வர் வீட்டு உணவு உயிர் கொல்லும் நஞ்சு' என்றும் கூறினர்.

தம் மாணவர் மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்களைத் தம்முடைய கலீபாவாக நியமித்தபின் ஹிஜ்ரி 287 ஷவ்வால் பிறை 7 அன்று தம்முடைய 120 ஆவது வயதில் பஸராவில் காலமாகி, அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்கள், ஹுபைரா (ரஹ்) அவர்களை அணுகிப் 'பைஅத்' பெற்று, அவர்களின் கலீபாவாக ஆனதே ஒரு விநோதமான நிகழ்ச்சியாகும். அவர்களின் இயற்பெயர் கரீமுத்தீன் என்பதாகும். இராக்கைச் சேர்ந்த செல்வரான அவர்கள், சீரும் சிறப்புடன் வாழ்ந்து வந்தார்கள். ஒருநாள் திடீரென ஒருவித மனமாற்றம் அவர்களுக்கு ஏற்பட்டது. இவ்வுலக வாழ்வே ஒரு மாபெரும் மாயை என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். தம் உடைமைகள் அனைத்தையும் அல்லாஹ்வின் வழியில் அவர்கள் அறம் செய்துவிட்டு, தம் இருகரம் ஏந்தி, ''இறைவ எம்பெருமஅ! எனக்கு உன்னை தவிர யாதொன்றும் தேவையில்லை. எனவே நான் பெற்றிருந்த அனைத்தையும் நான் உன் வழியில் அறம் செய்துவிட்டேன். எனக்கும், என் மனைவி மக்களுக்கும், இனி நீயே போதுமானவன். என் மனைவி மக்களை உன் பாதுகாப்பில் ஒப்படைத்து விட்டேன்'' என்று கல்லும் கரைந்துருகும் வண்ணம் இறைஞ்சிவிட்டு, மக்காவை நோக்கி அடியெடுத்து வைத்து நடந்தார்கள்.

மக்கா சென்றடைந்த அவர்கள் கஃபாவின் அண்மையில் அமர்ந்து, அல்லும் பகலும் வணக்கத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அப்பொழுது ஒருவர் தலையில் சுமையுடன் அவர்கள் முன்வந்து, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து நின்றார். தலையை நிமிர்த்தி அவருக்குப் பதில் கூறிவிட்டு, ''தாங்கள் யார்?'' என்று வினவினார்கள் அவர்கள்.

''நான் நிஜாலும் கைபைச் சேர்ந்தவன்'' என்று பதில் கூறினார் வந்தவர்.

''அப்படியா! தாங்கள் வந்த அலுவல் யாதோ?'' என்று அடுத்து வியப்புடன் வினவினார்கள் அவர்கள்.

''இறைவன் தங்களுக்கு ஒரு செய்தியை எத்தி வைக்குமாறு பணித்தான். தாங்கள் தங்களின் வணக்கத்தில் யாதொரு குறையும் வைக்க வேண்டாமென்றும், தங்களின் மனைவி மக்களைக் காப்பாற்றும் பொறுப்பைத் தான் ஏற்றுக் கொண்டதாகவும், அவன் தங்களிடம் கூறச் சொன்னான்''.

''மகிழ்ச்சி; தங்களின் தலையில் உள்ள சுமை யாதோ?''

''அவை தங்களின் மனைவி மக்களுக்கு இறைவன் அளித்த செல்வங்கள், அவற்றை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு வருமாறு இறைவன் பணித்துள்ளான்.''

அதுகேட்டு நன்றிப் பெருக்கால் மூழ்கடிக்கப் பெற்று, தரையிலே தலையைத் தாழ்த்தி நீண்டநேரம் கிடந்த அவர்கள், பின்னர் தலையை

நிமிர்த்தி இறைவணக்கத்தில் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாக ஈடுபடலானார்கள். பகலில் சிறிது நேரமே ஓய்வு கொண்டு, இரவும் பகலும் குர்ஆனை ஓதி வந்தார்கள். இக்காலை கிள்ரு (அலை) அவர்களின் தொடர்பு அவர்களுக்குக் கிடைக்கப் பெற்றது.

ஒருநாள் அவர்கள் கிள்ரு (அலை) அவர்களை நோக்கி, 'நான் இரவு பகலாக இறைவணக்கத்தில் ஈடுபட்டுள்ளேனே, இதற்காக எனக்குக் கிடைக்கும் பலன் யாது?'' என்று வினவினர்.

அதற்கு கிள்ரு (அலை) அவர்கள், ''அல்லாஹ் எவரைத் தன்னுடைய நேசராகத் தேர்ந்தெடுத்தானோ, அவருடைய உள்ளத்தில் தன்னுடைய அச்சத்தை நிலைநாட்டி விடுகிறான். அத்தகு இறைநேசரின் பட்டியலில் தங்களின் பெயரும் இடம் பெற்றுள்ளது. தாங்கள் இப்பொழுது ஒரு பக்குவமடைந்த ஞானாசிரியரை அண்மி, அவரிடம் பைஅத் (தீட்சை) பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்.

அதுகேட்ட அவர்கள், ''அத்தகைய ஞானாசிரியரை அடைந்து அவரின் கரம் பிடித்துத் தீட்சை பெறுவதை நான் ஒரு பெரும் பேறாகக் கருதுவேன். அதற்குத் தாங்களே எனக்கு வழிகாட்ட வேண்டும்'' என்று வினயமாகக் கூறினர்.

கிள்ரு (அலை) அவர்களின் முகத்தில் ஒரு புன்னகை மலர்ந்தது. ''தாங்கள் ஹுபைரா பஸரீயிடம் செல்லுங்கள், அவரின் பார்வைபட்ட மாத்திரத்திலேயே தாங்கள் ஒரு 'காமிலான வலி'யாக ஆகி விடுவீர்கள்'' என்று அருள்வாய் மலர்ந்து விட்டு அவர்கள் மறைந்தனர்.

அவ்வாறே ஹுபைரா பஸரீ (ரஹ்) அவர்களைச் சந்தித்து, அவர் களிடம் தீட்சை பெறுவதற்காக பஸரா சென்ற அவர்கள், ஹுபைரா (ரஹ்) அவர்களின் தவமடத்தை அடைந்தார்கள். தவமடத்தின் வாயிலில் அவர்கள் கால் வைத்ததுமே, அவர்களை எவரென விளங்கிக் கொண்ட ஹுபைரா (ரஹ்) அவர்கள், மிம்ஷாத் தைனூரி (ரஹ்) அவர்களை வருக, வருக என இருகரம் நீட்டி வரவேற்று, ''நீர் உயரிய படித்தரத்தில் உள்ளீர். எனக்குப் பின் என் இடத்தில் அமர்ந்து ஆன்மீகப் பணியை ஆற்ற ஒருவரை அனுப்பி வைக்குமாறு, இறைவனிடம் இறைஞ்சிக் கொண்டிருந்தேன். அவன் உம்மைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்தான்'' என்று மகிழ்ச்சி மொழி பகர்ந்தார்கள்.

இதன்பின் இறைஞான போதத்தை அள்ளி, அள்ளி அவர்களுக்கு வழங்கினார்கள். அவர்களும் அதனை தெவிட்டா இன்பத்துடன் மாந்தி, மாந்தி மகிழ்ந்தனர். இவ்வாறு சிலகாலம் சென்றபின் ஒருநாள், ஹுபைரா (ரஹ்) அவர்கள், தம் ஆன்மீக மாணவர் மிம்ஷாத் தைனூரி (ரஹ்)

அவர்களை நோக்கி, 'நீர் ஞானப்பாட்டையில் முழுமைத் தன்மையை எய்தி விட்டீர்' என்று அறிவித்து, அவர்களை உளூச் செய்துவிட்டு வருமாறு கூறினர். அவ்வாறே அவர்கள் உளூச் செய்துவிட்டு வந்ததும், அவர்களின் கையைப் பிடித்துக் கொண்டு, ''இறைவ எம்பெருமா! இவருக்கு நான் இறைஞானத்தை போதித்துவிட்டேன். இனி இவருக்குத் துறவிகளின் தகுதியை அருள்வாயாக!'' என்று உணர்ச்சி மீக்குற்று இறைஞ்சினார்கள். அடுத்தகணம் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தனர். மயக்கம் தெளித்து எழுந்ததும், மீண்டும் அவரின் கையைப்பிடித்துக் கொண்டு, அவ்வாறே இறைஞ்சினார்கள். மீண்டும் மயக்கமுற்றுக் கீழே விழுந்தனர். இவ்வாறு நாற்பது தடவை நிகழ்ந்தது. அதன்பின் அவர்கள் தம் திருவாயில் சுரந்த உமிழ்நீரை மிம்ஷாத் தைனூரி(ரஹ்) அவர்களின் வாயில் துப்பியதும், அவர்களைப் பிடித்த மயக்கம் நீங்கி, அவர்கள் தன்னுணர்வு பெற்றார்கள். அப்பொழுது அவர்களின் திருவாயிலிருந்தும், ''நீர் நாடியதைப் பெற்றுக் கொண்டீர்'' என்ற அருள்மொழி வெளிவந்தது.

அப்பொழுது மிம்ஷாத் தைனூரி (ரஹ்) அவர்கள் தம் ஆசானை நோக்கி, ''ஷைகு அவர்களே! நான் முப்பதாண்டுகள் வணக்கத்தில் ஈடு பட்டிருந்த பொழுது பெறாத பேற்றினைத் தங்களின் ஞானப் பார்வை யினால் இன்று பெற்றேன்'' என்று மகிழ்ச்சி மொழி பகர்ந்தார்கள். அது கேட்டு ஆசானின் முகம் மலர்ந்தது. இதன்பின் தம் திருக்கரத்தால் 'கிர்க்கா' அணிவித்து, அவர்களை அழைத்துச் சென்று தம் ஆசனத்தில் அமர்த்தினார்கள் ஹுபைரா (ரஹ்) அவர்கள்.



# 26 . காஜா மிம்ஷாத் அலீதைனூரி (ரஹ்)

ஹுபைரா (ரஹ்) அவர்களுக்குப் பின் அவர்களின் ஞானபீடத்தில் அமர்ந்து ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வந்தார்கள் மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்). இக்காலை ஒரு தர்வேஷ் அவர்களை அணுகித் தமக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறு வேண்டி நின்றார். ''இறைவனின் திருச் சந்நிதானத்தை அணுகி, ''அவனிடம் உமக்கு வேண்டியதை நீரே கேளும், தருவான். உமக்கும் இறைவனுக்கும் இடையே தரகர் தேவையில்லை'' என்று அவர்கள் கூறினார்கள். அதுகேட்ட அந்த தர்வேஷ், ''இறைவனின் திருச்சந்நிதானம் எங்கே உள்ளது?' என்று வினவினார். ''நீ'' எங்கு இல்லையோ, அங்கு தான் இறைவனின் சந்நிதானம் உள்ளது'' என்று விடையிறுத்தனர் மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்கள்.

இதன்பின் அந்த தர்வேஷ் தனிமையில் ஓரிடத்தில் அமர்ந்து, அல்லும் பகலும் இறைவனை வழுத்திக் கொண்டிருந்தார். இறைவன் அவர் மீது இரங்கி, அவருக்குப் பேரருள் பாலித்தான். ஒரு நாள் பெரு வெள்ளம் ஏற்பட்டு மக்கள் யாது செய்வதென அறியாது தலைவிரிகோல மாகத் தம் உடைமைகளை எடுத்துக் கொண்டு ஓடிய பொழுது, அந்த தர்வேஷ் உல்லாசமாக ஒரு பாய் மீதமர்ந்து, அந்த வெள்ளத்தில் மிதந்து சென்று கொண்டிருந்தார். காட்டுப் பெருவெள்ளம் அவரை ஊஞ்சலாட்டி, அவருடன் கொஞ்சி விளையாடிக் கொண்டு சென்றது.

இதைக் கண்ட மிம்ஷாத் அலி தைனூர் (ரஹ்) அவர்கள், அந்த தர் வேஷை நோக்கி, ''தர்வேஷ்! நீர் இத்தகு உயர் பதவியை எவ்விதம் எய்தப் பெற்றீர்?'' என்று வினவினர்.

அதற்கு அந்த தர்வேஷ், ''இறைவனை வழுத்தி, அவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்ததனால் இத்தகு பேற்றினை அடையப் பெற்றேன். எவருடைய பரிவுரையும் இன்றி, நேரடியாகத் தன்னுடன் உரையாடுமாறும், நான் வேண்டுவதைத் தந்தருள்வதாகவும் இறைவன் கூறினான்'' என்று எடுத்துரைத்தார்.

இதிலிருந்து சிறந்த அறிவு பெற்ற மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்கள், இதன்பின் தாம், தம் நாவைப் பேணி, எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டுமென்றும் எவரிடமும் கடுமையாக நடந்து கொள்ளக் கூடாதென்றும் உறுதி பூண்டார்.

ஒருநாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, "நான் ஒரு மகானைச் சந்திக்கச் செல்லின், என்னுடைய வணக்கம், கல்வி ஆகியவை பற்றிய பெருமைகளையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டே செல்கிறேன். அதன் காரணமாக, அவர்களின் தொடர்பால் நான் பயன் பெறுகிறேன். கடுகளவு பெருமையோடு கூட நீங்கள் ஒரு மகானை அணுகுவீர்களாயின், உங்களுக்கு அவர்களால் யாதொரு பயனும் ஏற்படாமல் போய்விடும். ஆன்மீகத் துறையில் விரைவில் முன்னேற்றம் கண்டு விட இயலாது. பல்வேறு துன்பங்களையும் நுகர்ந்து கொண்டு அணுஅணுவாக, அங்குலம் அங்குலமாகத்தான் முன்னேற வேண்டும்" என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி, "வணக்க வாளர்களில் பல்வேறு வகையினர் இருக்கின்றார்கள். சிலர் தங்களையே தாம் வணங்கிக் கொண்டிருக்கிறார்கள். வேறு சிலர் தம் செல்வத்தின் தாசர்களாக இருக்கின்றார்கள். மற்றும் சிலர் தம் மனைவியின் அடிவருடிகளாக இருக்கிறார். பிறிதும் சிலர் தம் மக்களைப் புகழ்ந்தேத்துபவர்களாகவும், அவர்களுக்குக் குற்றேவல் புரிபவர்களாகவும் இருக்கிறார்கள். வேறு சிலர் தம் தொழிலையே தொழுது கொண்டிருக்கிறார்கள். மற்றும் சிலர் தொழுகை, நோன்பு ஆகியவற்றை நிகழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். இவ்வாறு மனிதர் ஏதாவது ஒன்றை வணங்கிக் கொண்டிருந்தார்கள். இதுவே நியதியாகவும் உள்ளது. இவர்கள் எல்லாம் தம் நஃப்ஸையே வணங்கி, அது இட்ட கட்டளைகளைச் சிரமேற்றாங்கிச் செயலாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையான வணக்கம் எதுவெனில் ஒருவன் தன் நஃப்ஸுக்குக் கீழ்ப்படியாது, அதனை அடக்கித் தனக்குக் கீழ்ப் படியுமாறு செய்வதேயாகும்" என்று எடுத்துரைத்தார்கள்.

மேலும் அவர்கள் தம் மாணவர்களை நோக்கி தம் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைப் பின்வருமாறு கூறினார்கள்:

"நான் என் பயணத்தில் ஒரு பெரியாரைச் சந்தித்து, எனக்கு அறிவுரை பகருமாறு வேண்டி நின்றேன். அவர் என்னை ஏறிட்டுப் பார்த்து, "நீ துணிச்சலுடன் செயலாற்று. அதனை நீ எக்காரணத்தை முன்னிட்டும் இழந்துவிட வேண்டாம். நீ துணிச்சலை உன் கேடயமாக ஆக்கிக் கொண்டு செயலாற்றுவாயாயின் உன்னுடைய எல்லா அலுவல்களும் இலகுவாக முடிந்து விடும்".

இவ்வாறு அவர்கள் தம் தவமடத்தில் அமர்ந்து அறிவுரை பகர்ந்து வரும்பொழுது, சிரியா நாட்டைச் சேர்ந்த அபூ இஸ்ஹாக் ஷர்ஃபுத்தீன் என்ற இளவல், தமக்கு ஒரு ஞானாசிரியரைக் காட்டியருளுமாறு நாற்பது நாட்கள் இஸ்திகாரா தொழுகை தொழுது, இறைவனிடம் மன்றாடி வந்தார். அப்பொழுது ஒரு நாள் காஜா மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்களிடம் சென்று, தீட்சை பெற்றுக் கொள்ளுமாறு இறைவன் அசரீரி மூலம் அவருக்குச் செய்தி அறிவித்தான். செய்தி கிடைத்த அடுத்த கணமே அவர் தம் ஞானாசிரியரைச் சந்திப்பதற்காக பஸரா புறப்பட்டு விட்டார்.

தம் தவமடத்தில் ஓர் இளவல் தம் முன் வந்து நிற்பதைக் கண்டு, மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்கள் அவரை நோக்கி, ''நீர் யார்? எந்த ஊர்?'' என்று வினவினர். அவர் தம் பெயர் அபூ இஸ்ஹாக் ஷாமி என்று எடுத்துரைத்ததும், அவர்களின் ஞானக் கண்முன் அவரைப் பற்றிய முழு வரலாறும் ஒரு கணத்தில் பளிச்சிட்டு மறைந்தது. அடுத்த கணம் அவர்கள் அவரை நோக்கி, ''உம் வரவு நல் வரவாகுக! நீர் ஒரு தரீக்கா விற்குத் தலைவராவீர். அத்தரீக்காவின் பெயர் சிஷ்தி என்பதாக இருக்கும். பேரருளாளனாகிய அல்லாஹ் உம்மையும் உம்முடைய மக்களையும் 'வலி'களாக்குவான். இன்று முதல் உம் பெயர் அபூ இஸ்ஹாக் சிஷ்தி என்று இருக்கட்டும்'' என்று வரவேற்பும் நன்மாராயமும் நல்கி அவருக்கு தீட்சை வழங்கினர்.

இதன் பின் தம் ஞானாசிரியரின் தாளடியில் அமர்ந்து, ஆன்மீகப் பயிற்சி பெற்றார் அவர். இக்காலை அவர் நாள் தவறாது நோன்பு நோற்று வந்தார். ஒவ்வொரு நாளும் நோன்பு திறந்து, சிறிது தண்ணீரை மட்டுமே அருந்தி வந்த அவர், இருபத்தியொரு நாட்களுக்கு ஒரு தடவையே, சிறிதளவு உணவுண்டு வந்தார். இவ்வாறு ஏழு ஆண்டுகள் கழிந்தன.

ஒரு நாள் மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்களுக்கு, இறைவன் உள்ளுணர்வு (இல்ஹாம்) மூலம் ''உம் மாணவர் அபூ இஸ்ஹாக்கின் ஆன்மீகப் பயிற்சி முழுமை பெற்று விட்டது. நீர் அவருக்குக் கிலாஃபத் கொடுத்து, கிர்க்கா அணிவித்து அனுப்பிவிட்டு, நீர் நம்முடைய சந்நிதானத்திற்குத் திரும்புவீராக!'' என்ற செய்தி அறிவித்தான். அவ்விதமே அபூ இஸ்ஹாக்குக்குக் கிலாபத்தை வழங்கினார்கள். அப்பொழுது , ''அபூ இஸ்ஹாக்கே! நாம் உம்மை ஏற்றுக் கொண்டோம்'' என்று அசரீரி முழங்கியது.

இதன் பின்னர் மிம்ஷாத் அலீ தைனூரி (ரஹ்) அவர்கள், தம் மாணவரை நோக்கி, 'சிஷ்த் என்ற சிற்றூர் சென்று தங்கி, ஆன்மீகச் செங்கோல் செலுத்தி வருமாறு பணித்து, ''இன்று முதல் உலக முடிவு நாள் வரை, உம் ஞான வழி சிஷ்திய்யா என்று அழைக்கப் பெறுக!'' என்று

வாழ்த்தி விட்டு, ஹிஜ்ரி 298 ஆம் ஆண்டு முஹர்ரம் 14 ஆம் நாள், பொய்மை உலகம் நீங்கிப் பொய்யா உலகம் புகத் தயாராயினர்.

இக்காலை அவர்களின் அருகே வீற்றிருந்த ஒருவர், "இறைவனே! இவர்களுக்கு சுவனப் பெரு வாழ்வை ஈந்தருள்' என்று இறைஞ்சினார். அது அவர்களின் செவிப்பட்டதும், 'முப்பதாண்டுகளாகச் சுவனம் தன்னை அலங்கரித்துக் கொண்டு, என் முன் வந்து நின்றது. எனினும் நான் அதனை ஏறிட்டும் பார்க்கவில்லை. நான் விரும்புவதெல்லாம் சுவனத்தின் எசமானனையே அன்றி வேறில்லை" என்று கூறினர். அத்துடன் அவர்களின் உயிரும் பிரிந்தது.



## 27. காஜா அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்)

தம் ஆசானைத் தைனூரில் நல்லடக்கம் செய்து விட்டு, அவர்களின் ஆணைப்படி 'சிஷ்த்' என்ற ஊரில் வந்து தங்கியதிலிருந்து, அபூ இஸ்ஹாக் (ரஹ்) அவர்களின் புகழ் விண்மீன் நாளுக்கு நாள் உயர்ந்து வந்தது. மக்கள் அவர்களைக் 'காஜா சிஷ்த்', 'காஜா சிஷ்த்' என்று அழைத்துத் தேனை ஈ மொய்ப்பது போன்று மொய்த்து நின்று, அவர்களின் கரம் பற்றித் தீட்சை பெற்றனர். அவர்களின் ஆசான் முன்னறிவிப்பும், நன்மாராயமும் மொழிந்த வண்ணம், அவர்களிலிருந்து சிஷ்திய்யா தரீக்கா உலகில் அருகென வேரூன்றி ஆலெனப் படரலாயிற்று. அவர்களின் கடைக்கண் பார்வை பட்ட மாத்திரத்தில் பாவிகள் பாவம் நீங்கிப் பரிசுத்தராயினர். நோயாளர் நோய் நீங்கி நலம் பெற்றனர்.

பேரின்ப இசையில் சொக்கி மகிழ்ந்த அவர்கள், அடிக்கடி 'ஸமா' நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தனர். அந்நிகழ்ச்சிக்குப் பல நாட்களுக்கு முன்பிருந்தே தாமும் நோன்பு நோற்பதோடு தம் மாணவர்களையும் நோன்பு நோற்கச் செய்வர். வணக்கமும் நேர்மையும் ஒருங்கே வாய்க்கப் பட்ட இசைவாணர்களையே அதில் பாடுமாறு பணிப்பர். அந்த இசை வாணர்கள் 'ஸமா' நிகழ்ச்சியைத் துவங்குமுன், இறைவனிடம் பாவ மன்னிப்பு (தௌபா) செய்து விட்டே துவங்க வேண்டுமென்பது அபூ இஸ்ஹாக் (ரஹ்) அவர்களின் கண்டிப்பான கட்டளையாக இருந்தது. உண்மையில் அவர்கள் நடத்திய 'ஸமா' ஓர் ஆத்மீகப் பயிற்சிக் கூட மாகவே இருந்தது. எனவே அதில் உலகாயத வாதிகள் எவரும் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. அதில் கலந்து கொண்டவர்கள் மீண்டும் பாவத்தின் பக்கல் திரும்பாத அளவுக்கு ஆத்மீகப் பயிற்சி பெற்று வந்தார்கள்.

மாபெரும் இறைநேசச் செல்வரான அவர்கள், உலகாயதவாதி களுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளாது, ஒதுங்கியே வாழ்ந்து வந்தார்கள். உலகாயத வாதிகள் அவர்களின் திருச்சபைக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பதையும், அவர்கள் விரும்பவில்லை. ஒரு தடவை மழையின்றி நாடு முழுவதும் பஞ்சத்தால் நலிய, சுல்தான் அவர்களிடம்

மழை பெய்ய இறைஞ்சுமாறு வேண்ட, அவர்களும் அவ்விதமே செய்ய, மழை பெய்தது. இதிலிருந்து சுல்தானும் அவர்களின் திருச்சபைக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தார். அதையும் அவர்கள் விரும்ப வில்லை. ஒரு நாள் சுல்தான், அவர்களை வந்து கண்டு விட்டுச் சென்ற பொழுது, ''நான் செய்த என்ன பாபத்திற்காகவோ, சுல்தான் என்னை அடிக்கடி வந்து கண்டு கொண்டிருக்கிறாரோ, அறியேனே. நான் இதற்கு அல்லாஹ்விடம் என்ன பதில் கூறுவேன்?'' என்று கூறி அழுதவண்ணம் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தனர். மயக்கம் தெளிந்ததும் அவர்கள் இருகரம் ஏந்தி, ''இறைவனே! நீ என்னை ஏழையாகவே வாழவைத்து ஏழை யாகவே எழுப்புவாயாக!'' என்று இறைஞ்சினார்கள். 'பசித்திருப்பதில் கிடைக்கும் இன்பம் வேறு எதிலும் இல்லை. பசி என்பது ஏழைகளின் மிஃராஜ் (விண்ணேற்றம்) ஆகும்'' என்பது அவர்களின் அமுதவாய் விண்ட பொன்மொழியாகும் . எனவே அவர்கள் ஏழு நாட்களுக்கு ஒரு தடவை உணவுண்டு, நோன்பு திறக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந் தார்கள்.

துவக்கத்தில் அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்) அவர்கள் சிஷ்தில் வந்து தங்கிய பொழுது, ஃபர்ஸனாபா என்பவர் அவர்களின் அபிமானிகளில் ஒருவராக ஆனார். ஒரு நாள் அவர்கள் அவரை நோக்கி, ''உமக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கும். அவர் ஓர் 'அப்தால்' ஆக விளங்குவார்'' என்று முன்னறிவிப்புச் செய்தனர் . அவ்வாறே ஹிஜ்ரி 260 ஆம் ஆண்டு ரமலான் திங்கள் 7 -ஆம் நாள் தமக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்ததும், அதனைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார் ஃபர்ஸனாபா. வயதேறப் பெற்றதும், தம் மைந்தரை அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்) அவர்களின் தவமடம் அழைத்துச் சென்று, அவர்களிடம் கல்வி பயில ஏற்பாடு செய்தார் அவர் பதினாறு வயதை எய்துவதற்கு முன் மார்க்கக் கல்விகளைக் கற்றுத் தேர்ந்த தனயர், அதன்பின் ஆன்மீக உலகில் புகுந்து அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்) அவர்களின் திருக்கரம் பற்றி தீட்சையும் பெற்றார்.

ஒரு நாள் தந்தையும் தனயரும் வேட்டையாடக் கானகம் சென்றனர். அப்பொழுது தனயர் திடீரென மறைந்து விட்டார். அது கண்டு தந்தைக்கு ஏற்பட்ட திடுக்கத்திற்கும், வருத்தத்திற்கும் அளவில்லை. அங்கு தேடினார், இங்கு தேடினார். எங்கு தேடியும் தனயரைக் காணவில்லை. அவ்விதமாயின் தனயர் எங்கே?

தந்தையும் தனயரும் கானகம் சென்றார்களல்லவா? அப்பொழுது தனயரின் கண்முன் நாற்பது 'ரிஜாலுல் கைப்' என்ற மறைவான 'வலி' மார்களின் திருக்கூட்டம், தம்மை எதிர்நோக்கி வந்து கொண்டிருப்பது

தென்பட்டது. அவர்களுடன் சேர்ந்து தம் ஆசான் அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்) அவர்களும் வந்து கொண்டிருந்தார்கள். ஆசானைக் கண்ட மாணவர், உடனே அவர்களுக்கு மரியாதை செய்யும், முகத்தான் வாகனத்திலிருந்து இறங்கி, அக்கூட்டத்தினருடன் சேர்ந்து சென்று விட்டார். இந்நிகழ்ச்சி தந்தையின் ஊனக் கண்களுக்குத் தென்படவே இல்லை.

இல்லம் திரும்பியதிலிருந்து தனயரின் நினைவாகவே இருந்தார் தந்தை. வருவோர் போவோரிடமெல்லாம் தம் மைந்தரைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் சிஷ்த் வந்த வழிப்போக்கர் ஒருவர், 'இன்ன அடையாளமுள்ள ஒருவர், இன்ன மலையடிவாரத்தில் வீற்றிருப்பதைக் கண்டேன்' என்று கூறியதும், அவர் தம் மகன் தான் என்பதை உணர்ந்து கொண்ட தந்தை, அவரை அழைத்து வர ஓர் ஆளை அனுப்பினார். தாம் துறவறத்தை மேற்கொண்டு விட்டதாகவும், எனவே இல்லம் திரும்ப விரும்பவில்லை என்றும் கூறிவிட்டார் அவர்.

இதன்பின் அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்)அவர்களின் தவமடத்திற்கு வந்து, அவர்களின் பாதார விந்தங்களில் எட்டு ஆண்டுகள் அமர்ந்து ஆன்மீகப் பயிற்சி பெற்றனர் அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள். ஒரு நாள் அபூ இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கிப்லாவின் பக்கல் தம் முகத்தைத் திருப்பி, அவ்வாறே தம் மாணவர் அபூ அஹ்மது (ரஹ்) அவர்களையும் அமரச் செய்துதம், மாணவருக்காக இறைவனிடம் இருகரம் ஏந்தி இறைஞ்சினர். அப்பொழுது, "அபூ அஹ்மதை நம்முடைய நேசராக்கிக் கொண்டோம். அவரை அணுகுபவரையும் நாம் அணைத்துக் கொள்வோம்" என்று அசரீரி முழங்கியது.

அன்றிரவு அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள், தஹஜ்ஜுத் தொழுதபின், தம்மை அணுகும் மக்களுக்காக இறைவனிடம் இறைஞ்சினர். அப் பொழுது, "நாம் உம்மையும் மன்னித்தோம். உம்மை அணுகும் ஆயிரம் பேர்களுடைய பாவங்களையும் மன்னித்தோம்" என்று அசரீரி மீண்டும் முழங்கியதைச் செவியுற்றார்கள். இதனை அவர்கள் தம் ஆசானிடம் கூறிய பொழுது, ஆசானின் செங்கமல முகம் மகிழ்ச்சி மிகுதியால் மலர்ந்தது.

தம் பணி முடிவுற்று விட்டது என்பதை உணர்ந்த அபூ இஸ்ஹாக் ஷாமி (ரஹ்) அவர்கள், தமக்குப் பின் தம் பீடத்தில் அமர்ந்து சிஷ்திய்யா தரீக்காவின் செங்கோல் செலுத்துமாறு தம் மாணவர் அபூ அஹ்மது அப்தால் சிஷ்தி (ரஹ்) அவர்களைத் தம் கலீபாவாக நியமித்துப் பணித்து விட்டு ஹிஜ்ரி 329 ஆம் ஆண்டு ரபீஉல் ஆகிர் பிறை 14 அன்று காலமாயினர். அவர்களின் பொன்னுடல் சிரியாவிலுள்ள அஸ்கா என்ற சிற்றூரில் மண்ணறையில் சேர்க்கப்பட்டது.

# 28. காஜா அபூ அஹ்மது அப்தால் (ரஹ்)

இதன்பின் காஜா அபூ அஹ்மது அப்தால் சிஷ்தி (ரஹ்) அவர்களின் ஆன்மீக ஆட்சி துவங்கியது. பல ஊர்களிலும் சுற்றித் திரிந்து ஆன்மீகச் சுடர் கொளுத்தி வந்த அவர்கள், ஓர் ஊரை வந்தடைந்தார்கள். அவர்கள் அவ்வூரின் எல்லையில் கால் மிதித்ததுதான் தாமதம். அவர்கள் ஒரு முஸ்லிம் என்பதை உணர்ந்து கொண்ட அவ்வூர் மக்கள் நாலா பக்கங்களிலிருந்தும் தடதடவென்று ஓடிவந்து அவர்களைப் பிடித்துக் கொண்டு, "இனி நாங்கள் உம்மை உயிரோடு போகவிட மாட்டோம், எரித்துச் சாம்பலாக்கி விடுவோம்" என்றார்கள்.

"அப்படியா! நீங்கள் என்னை அவ்வாறு செய்ய நான் என்ன குற்றம் செய்தேன்?" என்று அமைதியாக வினவினார் அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள்.

"குற்றமா? நீர் ஒரு முஸ்லிமாயிருப்பதே குற்றம். நீர் உம்முடைய தூய்மையற்ற காலால் எங்களின் புனித மண்ணில் மிதித்து, அசுத்தப் படுத்தி விட்டீர். எங்களின் புனித மண்ணில் கால் வைத்த எந்த முஸ்லிமையும் நாங்கள் கொளுத்திச் சாம்பலாக்காது விடுவதில்லை" என்று வீறாப்புடன் பேசினார்கள் அவ்வூர் வாழ் உருவத் தொழும்பர்கள்.

"நல்லது; உங்களின் விருப்பப்படி செய்யுங்கள்; உளப்பூர்வமாகக் கலீமாச் சொன்ன எந்த முஸ்லிமையும், நீங்கள் மூட்டும் நெருப்பு என்ன, நரக நெருப்பே தீண்டாது. இது சத்தியம்" என்றார்கள் அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள்.

"அதையும் தான் பார்த்து விடுவோமே " என்று கூறி நெருப்புக் குண்டத்தை வளர்த்தனர் அவர்கள். அவர்கள் மூட்டிய நெருப்பு, நரக நெருப்போ என்று ஐயுறும் வண்ணம் நாக்கு நீட்டி எரிந்தது.

ஆனால், அதைக் கண்டு சிறிதேனும் திடுக்குறவோ, துணுக்குறவோ செய்யாது, புன்முறுவலுடன் அந்த நெருப்புக் குண்டத்தில் இறங்கி, அதன் நடுவே சென்று தம் தொழுகை விரிப்பை விரித்துத் தொழுதார்கள்

அவர்கள். அதனை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்த உருவத் தொழும்பர்களில், பதினாயிரவர் அக்கணமே அவர்களின் காலடியில் வீழ்ந்து, மன்னிப்புக் கோரி, அவர்களின் கரம் பற்றி இஸ்லாத்தைத் தழுவினர். அவர்களில் நூறு பேர் அவர்களுடனேயே இருந்து ஆன்மீகப் பயிற்சி பெற்று 'விலாயத்' எய்தப் பெற்றனர்.

தம் ஆசான் போன்று அபூ அஹ்மது அப்தால் சிஷ்தி (ரஹ்) அவர்களும், 'ஸமா' என்னும் பேரின்ப இசை நிகழ்ச்சியில் பெரிதும் இன்பம் துய்த்தனர். அவர்கள் நடத்திய 'ஸமா' நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட நோயாளர்கள் பலர் நலம் பெற்றனர். உருவத் தொழும்பர்கள் பலர் இஸ்லாத்தைத் தழுவினர். அக்காலை அவர்களின் அருட்கண் பார்வை பட்ட பலர் வலிமார்களாயினர்.

அவர்கள் 'ஸமா' நடத்துவதும், அதில் ஏராளமானோர் கலந்து கொள்வதும் உலமாக்களுக்குப் பெரும் வயிற்றெரிச்சலை உண்டு பண்ணியது. மார்க்கத்திற்கு விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபட்டு, மக்களை வழி கெடுக்கிறார் என்று அவர்கள், குராஸான் நாட்டு மன்னர் அமீர் ஹாக்கியிடம் முறையிட்டார்கள். உடனே அரண்மனைக்கு வருமாறு அரசரிடமிருந்து அபூ அஹ்மது அப்தால் (ரஹ்) அவர்களுக்கு ஆணை பிறந்தது.

அரச ஆணையை ஏற்று, அவர்கள் தம் ஊழியர் முஹம்மது ஹுதா வுடன் அரண்மனை சென்ற பொழுது, அங்கு எழுபது உலமாக்கள் வீற்றிருந்தனர். அவர்கள் அரண்மனையில் அடி வைத்ததும், அரண்மனை முழுவதும் ஒருவித மின் ஆற்றல் ஊடுருவிப் பாய்ந்தது போன்றிருந்தது. உலமாக்களின் ஆலோசனைக்கு மாறாக, அரசர் தம்மை அறியாமல் எழுந்து தாமே முன்சென்று அவர்களைக் கைலாகு கொடுத்து வரவேற்றதைக் கண்டதும், உலமாக்களும் அவர்களுக்கு மரியாதை செய்யுமுகத்தான் எழுந்து நின்றார்கள்.

இதன்பின் உலமாக்கள் அபூ அஹம்மது (ரஹ்) அவர்களை நோக்கி அவர்கள் நடத்திவரும் 'ஸமா' நிகழ்ச்சி பற்றி, எண்பது விதமான கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். அப்பொழுது அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள் உலமாப் பெருமக்களை நோக்கி, 'அவ்வளவுதானா?' என்று வினவினர். 'ஆம்'அவ்வளவுதான் என்றனர் உலமாப் பெருமக்கள்.

இப்பொழுது அபூ அஹ்மது (ரஹ்) அவர்களின் அருட்கண் பார்வை தம் ஊழியர் முஹம்மது ஹுதா மீது விழுந்தது. அவரோ கல்வியறிவற்றவர். திருக்குர்ஆனில் சூரா பாத்திஹாவையும், சூரா இக்லாஸையும் தவிர்த்து அவருக்கு வேறொன்றும் தெரியாது. அவர்களின் அருட்கண்

பார்வை பட்டமாத்திரத்தில், அவர் 'விலாயத்' எய்தப் பெற்றவராகி விட்டார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "முஹம்மது ஹுதா! நான் இங்கு வரும் பொழுது மார்க்க விற்பன்னர்கள் கடினமான கேள்வி களைக் கேட்டார்கள். அதற்குப் பதில் உரைப்பது கடினமாக இருக்கும் என்று நான் எண்ணினேன். ஆனால், அவர்களின் கேள்விகளைப் பார்த் தாலோ, அவற்றிற்கு நீரே பதில் கூறலாம் போன்றிருக்கிறது. 'உம்' பதில் கூறும்" என்று பணித்தார்கள்.

அவர்களின் 'உம்' என்ற உந்துதல் அவரைப் பிடர் பிடித்து உந்தி உல மாக்கள் கேட்ட கேள்வி அனைத்திற்கும் சரியான பதில் கூறுமாறு செய்தது. மார்க்க விற்பன்னர்கள் வாயடைத்து வீற்றிருந்தார்கள். அப் பொழுது அரசர் அவர்களை நோக்கி, "மேற்கொண்டும் ஏதேனும் கேட்க வேண்டி இருந்தால் கேளுங்கள்" என்று கூறினார். அவர்களோ மௌனம் சாதித்தார்கள். பின்னர் அபூ அஹ்மது (ரஹ்) அவர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்.

இதன் பின் அபூ அஹ்மது (ரஹ்) அவர்களின் புகழ் நாலா பக்கங் களிலும் பரவியது. கஸ்னியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்த சுல்தான் மஹ்மூது கஸ்னவீ, அபூ அஹ்மது (ரஹ்) அவர்களின் மாண் பினைப் பற்றிக் கேள்வியுற்று, அவர்களை வந்து தரிசித்ததோடு மட்டு மல்லாது, தம்முடைய இந்தியப் படையெடுப்பின் போது தம்முடன் வர வேண்டுமென்றும், பெரிதும் வேண்டிக் கொண்டார். அவ்விதமே செய் தார்கள் அவர்கள். அவர்கள் அப்படையெடுப்பில் கலந்து கொண்ட நற் பேற்றின் காரணமாக, அவரின் முதல் படையெடுப்பு பெரும் வெற்றியை ஈட்டித் தந்தது. அவர் இரண்டாவது முறை இந்தியாவின் மீது படை யெடுத்துச் சென்ற பொழுது, அவர் அவர்களைத் தம்முடன் வந்து தமக்குத் துணை நிற்குமாறு வேண்டிக் கொண்ட பொழுது, "என்னுடைய 'துஆ' உமக்கு எப்பொழுதும் உள்ளது. இப்படையெடுப்பின் போது நான் என்னுடைய பிரதிநிதியாக அபூ ஷக்கூர் ஸலாமியை அனுப்பி வைக்கிறேன். சென்று வருவீர், வென்று வருவீர்" என்று கூறி வாழ்த்தி னார்கள் அவர்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகிய வழிமுறையைப் பின்பற்றி, மணமுடித்து வாழ்ந்த அவர்களுக்கு ஹிஜ்ரி 331 ஆம் ஆண்டு முஹர்ரம் மாதம் 10 நாள் இரவு ஓர் ஆண் மகவு பிறந்தது. பிறவியிலேயே 'விலாயத்' பெற்ற அக்குழந்தை, அன்று நோன்புடைய நாளாக இருந் தமையின், அன்று பகல் முழுவதும் பால் குடிக்கவில்லை.

குழந்தை வளர்ந்து வயதேறப் பெற்றதும், தந்தை அவரை ஒரு பள்ளியில் சேர்ந்து குர்ஆன் ஓத ஏற்பாடு செய்தனர். முதன் முதலாகப்

பலகையில் 'ரப்பீ' யஸ்ஸிர் வலா துஅஸ்ஸிர் வ ரப்பீஸித்னீ இல்மன் வக்ஃபஹ்மன் வ தம்மிம் பில் கைர்' என்று எழுதி ஓதிக் கொடுக்கப் பட்டது.

குர் ஆனை ஓதி முடித்து அவ்விளவல் மார்க்கக் கல்வி பயின்று கொண்டிருக்கும் பொழுது, கிள்ரு (அலை) அவர்கள் வந்து, அவருக்கு ஆன்மீகக் கல்வியையும் புகட்டி வந்தார்கள். ஏழு வயதிலிருந்து கூட்டுத் தொழுகையில் சேர்ந்து தொழும் பழக்கத்தை மேற்கொண்டிருந்த அவரின் திருவாயிலிருந்து வெளி வந்த சொற்கள், அப்படி அப்படியே பலித்து வந்தன. கூறிய முன்னறிவிப்புகள் அப்படி அப்படியே நிறைவேறி வந்தன. அவரின் மாண்பினைக் கண்டு பலர் அவரின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவினர்.

தனயர் அபூ முஹம்மது (ரஹ்) அவர்கள், பதினேழு வயதை எய்திய பொழுது, தந்தை அபூ அஹ்மது (ரஹ்) அவர்கள் தனயருக்குக் கிலாஃபத் நல்கி இறைவன்பால் ஏகினர்.



# 29. காஜா அபூ முஹம்மது அப்தால் (ரஹ்)

**த**ந்தைக்குப் பின் அவர்களின் ஆசனத்தமர்ந்து ஆன்மீகச்செங்கோல் செலுத்தத் துவங்கிய அபூ முஹம்மது (ரஹ்) அவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான வணக்கங்களில் ஈடுபட்டபின், ஷைகு குத்புத்தீன் ஹைதர் ஸாவியா (ரஹ்) அவர்களை அணுகி, அவர்களிடமும் தீட்சை பெற்றார்கள்.

ஏழ்மையிலேயே இனிமை கண்ட அவர்கள், ஒருநாள் கட லோரத்தில் அமர்ந்து தம் கிழிந்த துணிகளைத் தைத்துக் கொண்டிருந் தார்கள். அப்பொழுது அவ்வழியே சென்ற ஈரான் நாட்டு அமைச்சர், அவர்களின் எளிய நிலையைக் கண்டு வருந்தி, அவர்களிடம் ஆயிரம் பொற்காசுகள் நிரம்பிய பை ஒன்றைக் கொடுக்க, அதனை அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தனர். அவர், அவர்களை மீண்டும் மீண்டும் ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தவே அவர்கள் கடலின் பக்கல் தம் கடைக்கண் பார்வையைச் செலுத்தினார். அடுத்த கணம் ஆயிரக் கணக்கான மீன்கள் பொற் காசுகளைத் தம் வாயிலே ஏந்திய வண்ணம் கரையை நோக்கி வந்தன. அப்பொழுது அவர்கள் அமைச்சரை நோக்கி, ஆயிரம் பொற் காசுகள் நிரம்பிய பை ஒன்றைக் கொடுக்க, 'மறைவான கருவூலங்களின் திறவுகோல் எவன் கைவசம் உள்ளதோ அவனுக்கு இது தேவையா?'' என்று வினவினர். அமைச்சர் மறுவார்த்தை பேசவில்லை.

இறைநேசச் செல்வர்களின் மாண்பினை உணர்ந்து, அவர்களை மதித்து, அவர்களின் நல்லாசியைப் பெறுவதில் பெரிதும் அக்கறை காட்டிய சுல்தான் மஹ்மூது கஸ்னவீ, தம்முடைய இந்தியப் படை யெடுப்பு ஒன்றின் போது அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்களையும் தம்முடன் வருமாறு அழைக்க அவர்களும் அதற்கிசைந்து அவருடன் சென்று போர் செய்தனர். அதன் காரணமாக அவரை வெற்றி முகமன் கூறி வரவேற்றது.

மற்றொரு படையெடுப்பின் போது முஸ்லிம் படையினருக்கு தோல்வி தோற்றமளித்து, அவர்கள் சிறிது சிறிதாகப் பின் வாங்க நேர்ந்த

பொழுது நிலைமையை உணர்ந்த அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள், முஹம்மது தாகூ என்று போர்க்களமே அதிரும் வண்ணம் பெரும் கூச்சல் போட்டார்கள். அக்கணமே அது சிஷ்திலிருந்த அவர் களின் கலீபாவும், மாபெரும் வீரருமான முஹம்மது தாகூவின் செவிப் புகுந்தது. அதன்பின் என்ன? மறுகணமே முஹம்மது தாகூ (ரஹ்) அவர்கள் போர்க்களத்திலே தோற்றமளித்து வீரப்போர் செய்து தோல்வியை வெற்றியாக மாற்றியமைத்தார்கள்.

அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்களின் சகோதரியும், பெரிய வணக்கவாளராயிருந்தனர். நாற்பது வயதாகியும் அவர்களுக்குத் திரு மணம் ஆகாதிருந்தது. ஒரு நாள் தந்தை அபூ அஹ்மது சுல்தான் (ரஹ்) அவர்கள், தம் தனயரின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, 'அருகிலுள்ள இன்ன ஊரில் முஹம்மது ஸம் ஆன் என்னும் பெயருள்ள ஒருவர் வாழ்ந்து வருகிறார். அவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பேரர் ஹுஸைன் (ரலி) அவர்களின் வழி வந்தவர். அவருக்கு உன் தங்கையை மணமுடித்து வை'' என்று கூறி மறைந்தனர். அத்துடன் நில்லாது இச்செய்தியைத் தம் அருமை மகளிடமும் நவின்றுவிட்டுச் சென்றார்கள்.

விடிந்தெழுந்ததும் அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள் அவ் வூருக்குத் தம் ஊழியர் ஒருவரை அனுப்பி, முஹம்மது ஸமஆன் என்பவரைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வருமாறு செய்தனர். அவர் வந்ததும், தாம் கண்ட கனவை விண்டு அவரின் ஒப்புதல் வேண்டினர். அவரும் அதற்கு ஒப்பவே, அவர்கள் தம் அருமைத் தங்கையை அவருக்கு எளிய முறையில் மணமுடித்து வைத்து, அதன்பின் தம் தங்கையை நோக்கி, ''உன் வயிற்றில் ஓர் ஆண்குழந்தை பிறக்கும். அதனுடைய 'விலாயத்'தின் பேரொளியால், இக்குடும்பத்தின் பெயர் துலங்கும்' என்று நன்மாராயம் மொழிந்தனர். அவ்விதம் அவரின் வயிற்றில் பிறந்த பெரு மகனே நாஸிருத்தீன் என்னும் இயற்பெயர் பெற்ற காஜா அபூயூசுஃப் சிஷ்தி முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்களாவர்.

தமக்குப் பின் தம் ஆசனத்திலமர்ந்து ஆன்மீகச் செங்கோல் செலுத்த இருப்பவர் தம் மருகர் அபூயூசுஃபே என்பதை உள்ளுணர்வால் விளங்கிக் கொண்ட அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள் தம் மருகருக்கு இளமையிலேயே மார்க்கக் கல்வியும், ஆன்மீகக் கல்வியும் போதித்துப் பின்னர் தீட்சையும் நல்கினர். அப்பொழுது அவர்கள் தம் மருகரை நோக்கி, 'இந்த மெய்ஞ்ஞானம், எவருக்கு இறைவன் அருள்பாலிக்கிறானோ அவருக்குத்தான் கிடைக்கும். நீ என் பெயரை ஏழு தடவை உச்சரித்து விண்ணை நோக்கி உன் முகத்தைத் திருப்பு' என்று கூறினர். அவ்வாறே மருகர் செய்ய, அவர்கள் கண்களின் முன்னே, விண்ணகத்தின் அனைத்துக்

காட்சிகளும், அலுவல்களும், தெற்றெனத் தோற்றம் வழங்கின. அதன்பின் அவர்கள் தம் மருகரை நோக்கி, ''ஏழு தடவை என் பெயரை உச்சரித்து, பூமியைப் பார்'' என்று கூற, அவ்விதமே மருகர் செய்ய, தஹ்தஸ்ஸரா வரையுள்ள அனைத்தும் அவர்களின் கண்களின் முன் காட்சி வழங்கியது. அதன்பின் அவர்களுக்கு இஸ்முல் அஃலத்தைப் போதித்து, கிர்க்காவும் வழங்கினர் அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள்.

ஹிஜ்ரி 411ஆம் ஆண்டும் பிறந்தது. அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்களுக்கு எழுபது வயதாகியது. தம் முடிவு நெருங்கி விட்டது என்பதை உணர்ந்த அவர்கள், தம் மருகர் காஜா அபூ யூசுஃப் (ரஹ்) அவர் களை அருகழைத்து, அவர்களுக்குக் கிலாஃபத் நல்கி, அவர்களைத் தம் ஆசனத்தில் அமர்த்திப் பின்வருமாறு அறிவுரை பகர்ந்தார்கள் :

''பெரும்பாலும் பட்டினியாக இரும். ஏழைகளுடன் நெருங்கி இரும். நான்கு ஆண்டுகள் எவரையும் சந்திக்காது, தனிமையில் அமர்ந்து, இறை வணக்கத்தில் ஈடுபடும். மூன்று நாட்களுக்கு ஒரு தடவை, மூன்று கவளங் களுக்கு மேற்படாமல் உணவுண்டு கொள்ளும்.''

இவ்வாறு தம் இறுதி அறிவுரையை நல்கிவிட்டு, அவ்வாண்டு ரபீஉல் ஆகிர் பிறை14 அன்று மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலக பாதையை மேற்கொண்டார்கள் அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள்.



## 30. காஜா அபூ யூசுஃப் (ரஹ்)

இதன்பின் சிஷ்தி தரீக்காவின் தலைமைப் பதவி தாங்கி செங்கோல் செலுத்தத் தொடங்கிய காஜா அபூ யூசுஃப் (ரஹ்) அவர்களின் காலடியில், ஏராளமான காணிக்கைகள் வந்து குவிந்தன. அவற்றையெல்லாம் ஏழை எளியவர்களுக்கு வாரி வழங்கி இன்பம் துய்த்தார்கள் அவர்கள்.

இப்பொழுது திருக்குர்ஆன் முழுவதையும் மனனம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டது. இளமையிலேயே அதை மனனம் செய்யவில்லையே என்று அவர்கள் வருந்தினார்கள். எனினும், அதனை எவ்வாறாயினும் மனனம் செய்தே தீர்வது என்னும் உறுதியுடன், அவர்கள் அம்முயற்சியில் ஈடுபட்டார்கள். எனினும் அவர்கள் எவ்வளவுதான் உறுதியுடன் அதனை மனனம் செய்ய முயன்ற போதினும், அவர்களால் இயலவில்லை. மனனம் செய்து கொண்டு மேலே செல்லச் செல்ல மனனம் செய்தவை பின்னால் நழுவிக் கொண்டே சென்றன. எனவே என் செய்வதென அறியாது, ஆற்றொணாத் துக்கத்துடன் அவர்கள் அயர்ந்து உறங்குங்கால், அவர்களின் அருமை மாதுலர் அபூ முஹம்மது அப்தால் (ரஹ்) அவர்கள், அவர்களின் கனவில் திருத்தோற்றம் வழங்கி, சூரா பாத்திஹாவை நூறுதடவை ஓதிவிட்டு, திருக்குர் ஆனை மனனம் செய்யத் தொடங்குமாறும், விரைவில் அது அவருக்கு மனனமாகி விடுமென்றும் கூறி மறைந்தார். விழித்தெழுந் ததும், அவர்கள் அவ்வாறே செய்ய விரைவில், அவர்களுக்குக் குர்ஆன் முழுவதும் மனனமாகி விட்டது.

ஒரு தடவை அவர்கள் ஹராத் நகருக்குச் சென்றுவிட்டு, சிஷ்த் திரும்பிய பொழுது வழியில் இருட்டிவிட்டது. எனவே கங் என்ற இடத் திலுள்ள ஓர் ஏழையின் வீட்டில் அவர்கள் இராத் தங்கினர். அன்றிரவு அந்த ஏழையின் மகள் கனவு ஒன்று கண்டார். பூரண மதியம் தம் மடிமீது அமர்ந்து கொஞ்சி விளையாடுவது போன்றும், தம்மை நோக்கி, 'நான் உன்னை என் இல்லத்தரசியாக, இன்பத் துணைவியாக ஏற்றுக் கொண் டேன்,' என்று கூறுவது போன்றும் கனவு கண்டார். விடிந்தெழுந்ததும் அதனை எவரிடமும் வில்லவும் இயலாமல், விளம்பவும் இயலாமல்,

மௌனமாக இருந்தார். நாணம் அவருடைய நாவுக்குத் தாளிட்டு விட்டது.

வைகறையில் இறைவனைத் தொழுதுவிட்டு, அந்த ஏழையின் வீட்டுத் திண்ணையில் வீற்றிருந்த அபூ யூசுஃப் (ரஹ்) அவர்களை, அந்த ஏழை வந்து கண்டு, 'ஸலாம்' உரைத்த பொழுது, அவருக்கு பதில் ஸலாம் உரைத்த ஆண்டகை அவர்கள், அதன்பின் அவரைப் புன்முறுவலுடன் நோக்கி, "இரவு உம் அருமைத் திருமகள் கனவொன்று கண்டுள்ளார். முழு நிலா அவரின் மடிமீது அமர்ந்து, அவரைத் தம் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டதாகக் கூறியுள்ளது. அந்த முழுநிலா வேறு எவருமில்லை. நானே ஆவேன்" என்று கூறினார்கள்.

அதுகேட்டு அந்த ஏழைக்கு யாது கூறுவதென்றே விளங்கவில்லை. நடப்பது நனவா, கனவா என்று சற்று ஐயுற்றார். அதன்பின் தெளிவு பெற்று "அடிகளாரே! நானோ ஏழை. தாங்களோ அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அருமைத் திருப்பேரர். தங்களுடன் திருமணத் தொடர்பு கொள்ள எவ்வாறு சாலும்?" என்று வினயமாக வினவினார்.

அது பேட்ட அபூ யூசுஃப் (ரஹ்) அவர்கள், அந்த ஏழையை நோக்கி, "இது இறைவனின் திருக்கட்டளை. அவன் எழுதிய விதியை அழித்தெழுத எவராலும் இயலாது. உம் மகளின் மணி வயிற்றில் வலிமார்களும் அப்தால்களும் தோன்றுவர் என்று அவனுடைய எழுதுகோல் எப்பொழுதோ எழுதி முடித்து விட்டது" என்று இயம்பினர்.

மட்டற்ற மகிழ்ச்சியுடன் தம் இல்லத்துள் நுழைந்த அவர், தம் மகளை நோக்கி, "மகளே! நீ இரவு ஏதேனும் கனவு கண்டாயோ?" என்று திடுதிப்பென வினவினார்.

அது கேட்ட மகளின் அழகு வதனம் நாணத்தால் வெளுத்தது. "ஆம். அப்பா" என்று மெல்லிய குரலில் கூறினார் மகள்.

"என்ன கனவு கண்டாய்?"

"முழு நிலா என் மடிமீது வந்து அமர்ந்து என்னை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டதாகக் கூறியது" என்று நாணத்துடன் கூறினார் நங்கை.

அது கேட்ட தந்தைக்கு ஏற்பட்ட உவகைக்கோர் அளவில்லை. அபூ யூசுஃப் (ரஹ்) அவர்கள் கூறியதும், தம் மகள் உரைத்ததும் ஒன்றாக இருப்பதைக் கண்டு இறைவனுக்கு நன்றி செலுத்திய அவர், தம் அருமை மகளை நோக்கி, "மகளே! அந்த முழு நிலா நம் வீட்டிற்கு வந்து விட்டது. நம் இல்லம் வந்துள்ள அதிதியே அந்த முழு நிலா" என்று கூறினார்.

அதன்பின் தம் அருமை மகளை அபூ யூசுஃப் (ரஹ்) அவர்களுக்கு எளிய முறையில்திருமணம் முடித்து வைத்தார் அந்தப் பெரியவர். அத்திருமணத்தின் மூலம் பிறந்தவர்களே காஜா மௌதூத் சிஷ்தி (ரஹ்) அவர்களும், காஜா அபுல் ஃபதஹ் சிஷ்தி (ரஹ்) அவர்களும் ஆவர்.

அபூ யூசுஃப் (ரஹ்) அவர்களுக்கு ஐம்பது வயதான பொழுது, ஹாஜி மக்கி (ரஹ்) அவர்களின் அடக்கவிடம் சென்று, அங்கு தமக்கோர் இடத்தை ஏற்படுத்திக் கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் அங்கேயே தங்கி தவஞான நிட்டையில் இருந்தனர்.

ஒருதடவை அவர்களுக்கு வணக்கத்தில் சோம்பல் ஏற்பட்ட பொழுது, அதற்குத் தண்டனையாக அவர்கள் பல்லாண்டுகள் தண்ணீர் குடிக்காமலேயே இருந்தனர்.

தம் முதல் மகன் குத்புத்தீன் என்னும் மௌதூத் சிஷ்திக்கு தாமே திருக்குர்ஆனை ஓதித் கொடுத்து ஏழு வயதிலேயே அவர்களை ஒரு ஹாஃபிள் ஆகச் செய்ததுடன், பல உலமாக்களிடம் அவர்களை அனுப்பி மார்க்கக் கல்வி பயின்று வரச் செய்தனர். பின்னர் அவர்கள் தாமே தம் மைந்தருக்கு ஆன்மீகக் கல்வியைப் போதித்தனர். இறப்புப் படுக்கை யிலான அவர்கள், அப்பொழுது 26 வயதை எட்டிப்பிடித்திருந்த தம் மகன் மௌதூத் சிஷ்தி (ரஹ்) அவர்களை அருகழைத்து, அவர்களுக்கு இஸ்முல் அஃலத்தைப் போதித்து, அவர்களைத் தம் கலீபாவாக நியமித்துக் கண்களை மூடிக் கொண்டார்கள். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 459 -ஆம் ஆண்டு ரஜப் திங்கள் மூன்றாம்நாள் ஆகும். அவர்களின் அடக்கவிடம் சிஷ்தியில் உள்ளது.



## 31. காஜா மௌதூத் சிஷ்தி (ரஹ்)

அபூ யூசுப் (ரஹ்) அவர்களின் அடக்கச் சடங்கில் பல ஆன்றோர்களும், சான்றோர்களும் கலந்து கொண்டார்கள். அதில் கலந்து கொண்ட ஷைகு அஹ்மது ஜான் (ரஹ்) அவர்கள், ஆங்கு நீர் மல்கும் கண்களுடன் நின்று கொண்டிருந்த மௌதூத் சிஷ்தி (ரஹ்) அவர்களை அருகழைத்து, அவர்களுக்காக 'துஆ'ச் செய்ததுடன், அவர்களைத் தனியே அழைத்துச் சென்று, பற்பல இறைஞான இரகசியங்களையும் எடுத்துரைத்தார்கள்.

தந்தை இறந்தபின் பல்க், புகாரா ஆகிய இடங்களுக்குச் சென்று கல்வி பயின்ற அவர்கள், ஷைகு நஜ்முத்தீன் உமர் (ரஹ்) அவர்களையும் அணுகி, அவர்களிடம் ஃபிக்ஹ் கலை பயின்றனர்.

எளிய வாழ்க்கையே மேற்கொண்டு இறை வணக்கத்தில் ஈடுபட்டிருந்த அவர்கள் புத்தாடை புனைவதையே புறக்கணித்து, எப்பொழுதும் பழைய துணிகளையே அணிந்து வந்தார்கள். அந்தக் கோலத்திலேயே அவர்கள் புகாராவிலிருந்து பைத்துல் முகத்தஸ்வரைப் பயணம் செய்து, ஏராளமான பேர்களை நேர் வழிப்படுத்தினர். அவர்களின் கலீபாக்கள் மட்டும் பதினாயிரவர் இருந்தனர். அவர்களின் தவமடத்தில் கால்வைத்த அத்தனை பேர்களும் 'விலாயத்' எய்தப் பெற்றனர்.

அடக்கமும் பணிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற அவர்கள், எவருக்கும் தாமே முதலில் 'ஸலாம்' சொல்வார்கள். எவரைக் கண்டதும் தாமே எழுந்து நின்று மரியாதை செய்வார்கள்.

அவர்கள் ஆற்றிய அற்புதங்களோ அனந்தம். ஒருநாள் அவர்கள் தவமடத்தில் வீற்றிருந்த பொழுது, ஒரு கிழவி அவர்களிடம் கண்ணீரும் கம்பலையுமாக ஓடிவந்து, "அடிகளாரே! என் அருமை மகனை அரசாங்க அலுவலர்கள் அநியாயமாகத் தூக்கிலிடப் போகிறார்கள். இறைவன் மீது ஆணையாகக் கூறுகிறேன். அவனோ நிரபராதி, அப்பாவி. தாங்கள் தாம் வந்து அவனைக் காப்பாற்ற வேண்டும்" என்று கல்லும் கரைந்துருகும் வண்ணம் கதறி அழுதாள். அது கண்டு உளம் வருந்திய அவர்கள் தம் தடியை எடுத்துக் கொண்டு, தூக்கு மேடையை நோக்கிச் சென்றார்கள்.

ஆனால் என்ன பரிதாபம்! அவர்கள் தூக்கு மேடையை அடைவதற்கு முன் அவன் தூக்கிலிடப்பட்டு தொங்கிக் கொண்டு கிடந்தான். அதைக் கண்டதும் அவர்களுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. எனினும் தாம் வந்தது வீண் போகக் கூடாது என்ற எண்ணத்துடன், தொங்கிக் கொண்டிருந்த அவனுடைய வெற்றுடலைக் கீழே இறக்கித் தரையில் கிடத்தித் தம் தடியால் அவனுடைய முகத்தைத் தடவி, ''இறைவனே! இவன் அநியாயமாகத் தூக்கிலிடப்பட்டிருப்பின் இவனுக்கு உயிர்ப்பிச்சை அளிப்பாயாக!'' என்று உளம் உருகி இறைஞ்சினார்கள். அடுத்தகணம் அவன் தூங்கி விழிப்பது போன்று விழித்தெழுந்தான்.

வேறொரு நாள் அரசத் திருமகன் அவர்களின் தவமடம் வந்து, நற்பேற்றினுக்காகத் தாம் வைத்துக் கொள்ளும் வண்ணம், தமக்கு ஏதேனும் தரவேண்டுமென்று வேண்டி நின்றான். அவர்கள் யாதும் தர மறுத்துவிட்டார்கள். பின்னர் தமக்காகப் பரிந்துரைக்கப் பலரை அழைத்து வந்தான். அவர்களின் பரிவுரையின் பேரில் அவர்கள் அவனுக்கு ஒரு தொப்பியைக் கொடுத்து, ''இதனை நீ நன் முறையில் பாதுகாத்துவரின், நலன் பெறுவாய், மாறு செய்யின் தீது விளையும்'' என்று அருள் எச்சரிக்கையும் செய்தார்கள்.

ஆனால் அவனோ அதைப் பெறும் வரையில் தான் பக்தி சிரத்தை காட்டினானேயொழிய, பின்னர் வீண் விளையாட்டுக்களில் மூழ்கித் திளைத்தான்.

இதனை அறிந்த அவர்கள், ''என் தொப்பி தன் பணியை ஆற்ற வில்லையா?'' என்று கூறினார்கள்.

சின்னாட்களில் அவன் ஒரு குற்றத்திற்காகச் சிறை செய்யப்பட்டு கண்களை இழக்க வேண்டியதாயிற்று.

மற்றொரு நாள் அவர்கள் தவமடத்தில் வீற்றிருந்த பொழுது, புகராவின் ஒரு வட்டமாகிய சிந்தனாவில் பிறந்த முனீருத்தீன் ஷரீஃப் என்பவர் அவர்களை அணுகி, அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்து நின்றார். பதில் ஸலாம் உரைத்த அவர்கள், அவரை நோக்கி, ''உமக்கு இறைவன் விட்ட விதி நல்ல விதியாகும். அதனாலேயே நீர் என்னை அணுகியுள்ளீர். எனக்குப் பின் நீரே என் இடத்தில் அமர்ந்து என்னுடைய கலீபாவாக இருக்க வேண்டுமென்று இறைவனிடம் இறைஞ்சி வந்தேன். என்னுடைய இறைஞ்சுதலை இறைவன் ஏற்று, உம்மை என்னிடம் அனுப்பி வைத்துள்ளான். எனவே நீர் என் இடத்தில் அமர்ந்து இந்த ஸில்ஸிலாவைத் தொடர்ந்து நடத்தி வாரும்'' என்று கூறினர். அது கேட்டு, வந்தவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் மகிழ்ச்சிக்கும் அளவில்லை.

இதன்பின் காஜா மௌலூத் சிஷ்தி (ரஹ்) அவர்கள், ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களை உள்ளே அழைத்துச் சென்று, அவர்களுக்கு பைஅத் நல்கி, இஸ்முல் அஃலத்தை போதித்தனர். இஸ்முல் அஃலத்தை அறிந்து கொண்டதும் ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களுக்கு ஒருபுது உலகமே காட்சி வழங்கியது போன்றிருந்தது. மறைவான விஷயங்கள் அனைத்தும் அவர்களுக்குத் தெற்றெனத் தெரிய வந்தன.

பின்னர் அவர்களுக்குக் கிர்க்கா அணிவித்துத் தம் இருகரம் ஏந்தி, ''இறைவ என் பெரும! ஷரீஃப் சிந்தனீ எப்பொழுதும் உன் நினைவாகவே இருப்பவர் என்பதை நீ நன்கு அறிவாய். எனவே, அவரை நீ உன் அருளுக்கும் அன்புக்கும் உரியவராக ஆக்கிக் கொள்வாயாக!'' என்று இறைஞ்சினர்.

அப்பொழுது அசரீரி பின்வருமாறு முழங்கியது : ''நிச்சயமாக அவர் என் அருளுக்கும் அன்புக்கும் உரியவர் தாம். அவரை நான் பொருந்திக் கொண்டேன்.''

இதன்பின் தம் உலக அலுவல் முடிந்து விட்டது என்பதை உணர்ந்த காஜா மௌலூத் சிஷ்தி (ரஹ்) அவர்கள், தம் மறுமைப் பயணத்திற்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினார்கள். ஒருநாள் அவர்கள் தம் தவமடத்தில் அமர்ந்து எவரையோ எதிர்பார்ப்பது போன்று வாசலையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது முன்பின் தெரியாத ஒருவர் வந்து அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்துப் பட்டுத் துணி ஒன்றை, அவர்களின் முகத்திற்கெதிரே காட்டினார். அதனை வாங்கித் தம் கண்களில் ஒற்றினார்கள் அவர்கள். அத்துடன் அவர்களின் உயிரும் உடலைவிட்டுப் பிரிந்தது. இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 567 ஆம் ஆண்டு ரஜப்பிறை 21-ஆம் நாள் சிஷ்த் என்ற ஊரிலாகும். அவ்வூரிலே அவர்கள் நல்லடக்கம் செய்யப் பட்டனர்.



# 32. காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்)

காஜா மௌதூத் சிஷ்தி (ரஹ்) அவர்களின் நிர்யாணத்திற்குப் பின், சிஷ்திய்யா தரீக்காவின் ஞானபீடம் அமர்ந்து ஆன்மீக அரசு செலுத்தத் தொடங்கிய ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களின் வாழ்வோ அற்புதமான தாகும். பதினான்கு வயதிலிருந்தே, எப்பொழுதும் உளூவுடன் இருந்த அவர்கள், ஏழையோடு ஏழையாகவே வாழ்ந்து வந்தார்கள். "நான் ஏழை களின் ஊழியனாகவே உள்ளேன். அவர்கள் என்னை விற்றுத்தின்று விட்டாலும் அதற்காக நான் வருத்தப்படப் போவதில்லை" என்று அவர் கள் அடிக்கடி கூறுவர். அரசர், செல்வர் ஆகியோரின் பெயரைக் கூட, அவர்கள் தம் நாவினால் உச்சரிப்பதில்லை. ஏழ்மையையே பெரிதும் விரும்பி வந்த அவர்கள், 'ஏழ்மை நபிமார்களுடையவும் வலிமார் களுடையவும் சுன்னத் (வழிமுறை)' என்று கூறுவர்.

நாற்பது ஆண்டுகள் அவர்கள் காட்டில் தங்கி, இலை, சருகு, பழம் ஆகியவற்றை உண்டு, கடும் தவம் செய்து வந்தார்கள். அவர்கள் தின்ற அந்த மரத்தின் இலைகளையோ, பழங்களையோ தின்றவர்கள் 'விலாயத்' எய்தப்பெற்ற 'மஜ்தூப்' களாகி விட்டனர் என்றும் கூறப்படுகிறது.

அவர்கள் மூச்சை அடக்கி தியான நிலையில் இருந்த போதினும், ஷரீஅத்தைப் பின்பற்றித் தொழுகையைப் பேணிவந்தனர். 'மனிதனையும் ஜின்னையும் என்னை வணங்குவதற்காகவேயன்றி, நான் படைக்க வில்லை' என்ற இறைமொழியை, அவர்கள் அரைக்கணமும் மறக்க வில்லை. இறைவன் தன்னை வணங்குவதற்காக என்னைப் படைத்திருக்க, நான் ஸைதோடும் அம்ரோடும் பேசிப்பேசி என் நேரத்தை வீணாக்கு கின்றேனே' என்று கூறி அவர்கள் அழுவார்கள். இதன் காரணமாக இரவு பகலாக இறை வணக்கத்தில் ஈடுபட்ட அவர்கள் தொழும் பொழுது தம்மையும், தம் சூழ்நிலையும் மறந்த நிலையில் தொழுவார்கள்.

இறைவணக்கத்தில் அவர்கள் தீவிரமாக ஈடுபட்டிருந்ததன் காரண மாக, அவர்களின் திருவதனத்தில் 'ஜலாலியத்' தின் பேரொளி எப்

பொழுதும், இலங்கிக்கொண்டிருந்தது. எனவே அவர்களின் முகத்தை ஏறிட்டுப்பார்க்கக் கூட மக்கள் அஞ்சினர்..

அவர்கள் கால்நடையாக நடந்து சென்று செய்த 'ஹஜ்'ஜுகளோ பல.

மக்கள் பணியே ஆண்டவன் பணி எனக்கொண்டு, அவர்கள் மக்களுக்குச் சேவை செய்து வந்தார்கள். ஒருநாள் அவர்களிடம் ஓர் ஏழை வந்து, அவர்களுக்கு ஸலாம் உரைத்துத் தம் அவல நிலையை எடுத்துரைத்தார். தமக்கு ஏழு பருவமடைந்த பெண் மக்கள் இருப்பதாகவும், அவர்களில் ஒருவருக்கேனும் தம்மால் மணமுடித்து வைக்க இயலாதிருப்பதாகவும், அவர் அழாக்குறையாகக் கூற, அதுகேட்டு உள்ளம் வருந்திய அவர்கள், ''நாளைவா, இறைவனருளால் அதற்கொரு வழி பிறக்கும்'' என்ற கூறினர்.

அதுகேட்டு சற்று மனஅமைதியுடன் இல்லம் சென்ற அவர், அடுத்த நாள் அவர்களைச் சந்திக்க வந்தபொழுது, அவருக்கு அறிமுகமான, தீ வணங்கும் ஒருவன் அவரை நோக்கி, ''எங்கே போகிறீர்?'' என்று வின வினான்.

''காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களிடம்'' என்றார் அவர்.

''என்ன அலுவல்?'' என்று அவன் வினவிய பொழுது, சென்ற தினம் நடந்ததை அவனிடம் எடுத்துரைத்தார் அந்த எளியவர்.

அதுகேட்டு அவன் ஓர் ஏளனச் சிரிப்பை வீசி எறிந்து, ''அவரிடம் என்ன காசு உள்ளது, உமக்கு உதவி செய்ய?'' என்று இழித்துரைத்து, ''வேண்டுமானால் அவரை என்னிடம் ஏழு ஆண்டுகள் ஊழியம் பண்ணச் சொல்லும். அதற்குக் கூலியாக, நான் ஏழாயிரம் பொற்காசுகள் தருகிறேன். அவற்றைக் கொண்டு நீர் உம் பெண் மக்களின் திருமணத்தை நிறைவேற்றும்'' என்று கூறினான் அவன்.

இதனை அந்த எளியவர் வந்து, ஆண்டகை அவர்களிடம் கூறியதும், ''அப்படியா கூறினார், உண்மையாகவா கூறினார்'' என்று வினவினார்கள் அவர்கள்.

''ஆம்'' என்று அவர் கூறியதும், ''அப்படியானால் மிகவும் நன்மையாயிற்று. வா அவரிடம் போவோம்!'' என்று கூறி அவரையும் அழைத்துக் கொண்டு, அந்தத் தீ வணங்குபவனிடம் சென்றனர். அதுகண்டு அந்த எளியவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இதன்பின் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் தாம் கனவு உலகில் வாழ்கின்றோமா, நனவுலகில் வாழ்கின்றோமா என்ற ஐயத்தை அவருக்கு ஏற்படுத்தின.

தீ வணங்குபவரிடம் சென்று, அவர் எழுதிய ஒப்பந்தப் பத்திரத்தில் கைச்சாத்திட்டு, அவரின் ஊழியத்தில் அமர்ந்து அதற்குப் பகரமாக அவர் தந்த ஏழாயிரம் பொற்காசுகளையும், அந்த ஏழையிடம் கொடுத்து, "நீ சென்று உன் பெண் மக்களின் திருமணத்தை இனிதே நடத்திவை" என்று திருவாய் மலர்ந்தனர் ஆண்டகையார். அந்த எளியவருக்கோ, தம் கண்களையே தம்மால் நம்ப இயலவில்லை. கொள்ளை மகிழ்ச்சியில் இல்லம் திரும்பினார்.

இச்செய்தி ஒரு நொடியில் நகர் முழுவதும் பரவி, நகரே அமளி துமளிப்பட்டது. இது அரசரின் செவிப்பட்டதும், அவருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கும், வியப்பிற்கும் அளவில்லை. உடனே தம் அமைச்சர் வசம் இரு பணப்பைகளைக் கொடுத்து அவற்றை ஆண்டகை அவர்களிடம் சேர்த்து, அவற்றில் ஒன்றிலுள்ள ஏழாயிரம் பொற்காசுகளைக் கொண்டு அவர்கள் தம்மை அந்தத் தீ வணங்குபவனின் ஊழியத்திலிருந்து விடு வித்துக் கொண்டு, மற்றொருன்றிலுள்ள ஏழாயிரம் பொற்காசுகளைத் தம்முடைய செலவிற்கு வைத்துக் கொள்ளுமாறு தாம் கூறியதாகச் சொல்லி வருமாறு பணித்தார்.

ஆனால் காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களோ, அவ்விரு பணப் பைகளைப் பெற்றதும், அவற்றை ஒன்றின்பின் ஒன்றாக அவிழ்த்து அவற்றிலிருந்த பதினாலாயிரம் பொற்காசுகளையும், அடுத்த கணமே ஆங்குக் குழுமி நின்ற ஏழை எளியவர்களுக்கு அறம் செய்து விட்டார்கள். இதனை இமைகொட்டாது பார்த்துக் கொண்டிருந்த அமைச்சரிடம், அவர்கள் குறுஞ்சிரிப்புடன் கூறிய சொல்: "என் ஒப்பந்தம் ஊழியம் செய்வதற்கேயன்றி, பணத்தைக் கொடுத்து விடுதலை பெறுவதற்காக அல்ல."

இச்செய்தி அத்தீ வணங்குபவருக்குத் தெரியவந்ததும், அவர் அவர் களை அணுகி, "அரசர் தாம் தங்களுக்குப் பொற்காசுகளை அனுப்பி வைத்தாரே. அவற்றைத் தாங்கள் ஏன் என்னிடம் தந்து, தங்களை என் ஊழியத்தில் நின்றும் விடுவித்துக் கொள்ளக் கூடாது?" என்று வின வினார்.

அதற்கு அவர்கள் அமைதியாக, "உழைப்பின் அருமை உமக்குத் தெரியாது. அதில் சிரமம் இருந்தாலும் அதனால் கிடைக்கும் நற்பேறோ அளவிட முடியாததாகும். அல்லாஹ் தன் அடியார்களிடமிருந்து உழைப்பைத் தான் விரும்புகின்றான். அவனுடைய திருப்பொருத்தத்தைப் பெற்றுத் தரும் உழைப்பு விடுதலையை விட எவ்வளவோ மாண்புடைய தாகும்."

அதுகேட்டு அந்தத் தீ வணங்குபவரின் உளம் நெகிழ்ந்தது. இத்தகு மாண்பாளரைத் தம் ஊழியத்தில் வைத்திருப்பது மன்னிக்கக் கூடா மாபெரும் குற்றம் என்று எண்ணிய அவர், அவர்களை நோக்கி, "பெரியீர்! இக்கணத்திலிருந்து நான் தங்களை என் ஊழியத்திலிருந்தும் விடுதலை செய்கிறேன்!" என்று கூறினார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "நீர் எவ்வாறு என்னை உம் ஊழியத்திலிருந்து விடுதலை செய்தீரோ அதே போன்று அல்லாஹ் உம்மை நரகத்திலிருந்து விடுதலை செய்வானாக!" என்று நன்றி மொழி நவின்றனர்.

அதுகேட்டு உணர்ச்சி மீக்குற்ற அவர், அக்கணமே அவர்களின் கரம் பிடித்து இஸ்லாத்தைத் தழுவி, அவர்களின் காலடியிலே வீற்றிருந்து, ஆன்மீக ஞானம் பெற்றுப் பிற்காலத்தில் பெரிய இறைநேசச் செல்வராகி விட்டார்.

ஒருநாள் ஒருவர் அவர்களின் முன் ஒரு பணப்பையைக் கொண்டு வந்து வைத்து, அதனை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வேண்டி நின்றார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "உனக்கு என் மீது என்ன கோபம் அப்பா! உனக்கு நான் என்ன தீங்கிழைத்தேன்? அல்லாஹ் வின் விரோதியை, அல்லாஹ்வின் அடியார் முன் கொண்டு வந்து வைக்கிறாயே" என்று கூறினர்.

"அடிகளாரே! என் அன்புக் காணிக்கையைத் தாங்கள் மறுக்காது ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று அவர் மீண்டும் வேண்டினார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "பின் பக்கம் உள்ள காட்டைத் திரும்பிப்பார்" என்று கூறினர். அவ்வாறே அவர் திரும்பிப் பார்த்தார். அங்கு பொன்னாறு ஒன்று அலை வீசி ஓடிக் கொண்டிருப் பதைக் கண்டதும், நாணத்தால் அவருடைய தலை கவிழ்ந்தது.

அதன்பின் அவர்கள், "இத்துணைப் பெரும் செல்வம் உள்ள ஒருவனுக்கு, நீ தரும் பணப்பையைப் பெற்றுக் கொள்ள வேண்டிய தேவைதான் என்ன? எனவே தான் நீ பல தடவை வேண்டியும், நீ தந்த பணமுடிப்பை ஏற்றுக் கொள்ள மறுத்தேன். அதற்காக வருந்தாதே. நலமே சென்று வா" என்று கூறி அவரை வாழ்த்தி அனுப்பினார்கள்.

அவர்கள் 'ஸமா'வில் இன்பம் துய்த்து வந்தனர். மார்க்க வரம்பிற்குட் பட்டு நடத்தப்பட்ட அந்த ஸமாவில், மார்க்க விற்பன்னர்களும், ஆன்றோர் களும், சான்றோர்களும் கலந்து கொண்டார்கள்.

மற்றொருநாள், அவர்கள் திமிஷ்கின் பள்ளிவாயிலில் அமர்ந்திருந்த பொழுது, அங்கு எதிர்பாரா வண்ணம் வந்த சுல்தான் சஞ்சர், அவர்களைக் கண்டதும் அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்துப் பெரிதும் மரியாதை செய்தார். பின்னர் சில காலம் சென்று, அவர் இறந்தபொழுது அவரை ஒருவர் கனவில் கண்டு, அவரின் நிலைபற்றி வினவியபொழுது, ''நான் நரகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். அப்பொழுது இவர் என் அடியார் காஜா ஷரீஃப் சிந்தனீக்குப் பெரிதும் மரியாதை செய்ததன் காரண மாக இவரின் பாவம் பொறுத்தேன்'' என்று அசரீரி முழங்கியது. அடுத்த கணம் நான் திசை திருப்பப் பெற்று சுவனம் அழைத்துச் செல்லப் பட்டேன்'' என்று பதிலுரைத்தார் அவர்.

தம் இறுதிக் காலத்தை மதீனாவில் கழித்த காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்கள், ஹிஜ்ரி 584 ஆம் ஆண்டு, ரஜபுத் திங்கள் பதின்மூன்றாம் நாள் வியாழக்கிழமை, ளுஹருக்குப் பின் தம்முடைய 120 ஆவது வயதில் அங்கேயே காலமாகி, அங்குள்ள 'ஜன்னத்துல் பகீ' யில் நல்லடக்கம் செய்யப்பட்டனர். அவர்கள் தம் பிறந்த ஊரிலேயே இறந்ததாகவும், மக்காவில் இறந்ததாகவும் சில வரலாறுகள் கூறுகின்றன.

காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களைப் பற்றி நாகப்பட்டினம் அபுல் கைர் அஹ்மது இப்ராஹீம் ஆலிம் சாகிபு அவர்கள், அரபியில் ஒரு புகழ்ப்பா இயற்றியுள்ளனர். அதில் ஒவ்வோர் அடியும் 'ஹுவ ஷைகுனா ஹாஜி ஷரீஃப் சிந்தானீ' என்று முடிகிறது.

காஜா ஷரீஃப் சிந்தனீ (ரஹ்) அவர்களின் கலீபாக்களில், தலை யாயவர் காஜா உதுமான் ஹாரூனி (ரஹ்) அவர்களாவர். காஜா உதுமான் ஹாரூனி (ரஹ்) அவர்களே, குத்புல் ஹிந்த் காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்களின் ஆன்மீகக் குரு ஆவர்.



